ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

ஶாஸ்த்ரஜந்யஜ்ஞாந யோகஜந்யஜ்ஞாநங்களைவிட

அதிரம்மடங்கதிஶயித்த

பகவத்ப்ரஸாதஜந்ய தத்வயாதாத்ம்யஜ்ஞாநவித்தமராய்

ப்ரபந்நஜநகூடஸ்த்தராய் எழுந்தருளியிருக்கும்

மஹாப்ரபாவரான

# நம்மாழ்வாருடைய

பகவதநுபவ பரீவாஹரூபமான, த்ராவிடவேதஸாகரஸாரமாகிய

# திருவாய்மொழி

ஆறும்பத்து.

மூலமும் அதின்வ்யாக்யாநாதிகளும்.

இவை,

ஸ்ரீமத்-உபய-ஸ்ரீமாந்-ஆழ்வார்திருநகரி வடபத்ரஶாயி

**அரையர்ஸ்வாமி அவர்களாலும்**

ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீபாததூளியாகிய,

**கா. ராமஸ்வாமிநாயுடு அவர்களாலும்**

அநேகப்ரதிகளைக்கொண்டு பரிஶோதிக்கப்பட்டு

சென்னை. ராமாநுஜஸித்தாந்தஸபாத்யக்ஷராகிய

ஸ்ரீமாந்,

முதலியாண்டான்முன்னிலையில்

கண்ணபாளயம்-ஐயாபிள்ளை அவர்கள்குமாரர்

**ஸ்ரீரங்கப்பிள்ளை**

புலியனூர்-இரங்கசாமிமுதலியார் அவர்கள்குமாரர்

கிருஷ்ணஸ்வாமிமுதலியார் இவர்களால்

சென்னை:

ஆதிகலாநிதி அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டன.

ஆழ்வார் திருவவதாராதிவர்ஷம்-சகூஅச-சித்ரபாநுவர்ஷம்.

February 1883.

ஸ்ரீ







ஆழ்வார் திருவடிகளே சரணம்.

எம்பெருமானார்திருவடிகளேசரணம்.

# திருவாய்மொழி.

## ஆறாம்பத்து.

## முதற்றிருவாய்மொழி.

### வைகல் - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(வைகல்பூங்கழிவாய்) எம்பெருமானோடே கலந்து பிரிந்தா ளொருபிராட்டி ;.................................................*

### பன்னீராயிரப்படி.

ஆறாம்பத்தில், கீழ் பத்திலே - ஈஶ்வரனுடைய வுபாயபாவத்தை ஸப்ரகாரமாக நிரூபித்து, அநந்தரம், இவ்வுபாயஸ்வரூபத்தினுடைய ஸ்வீகாரப்ரகாரத்தை யருளிச்செய்வதாக ; உபாயஸ்வீகாரம் கடகரான ஆசார்யர்கள் முகமாக ஸித்திக்கும் ப்ரகாரத்தையும், ஸ்வீகர்த்தாவான வதிகாரியினுடைய பகவதாபிமுக்யம்ஸ்வீகாரத்துக் கபேக்ஷிதமென்னு மிடத்தையும், அகடிதகடநாசமர்த்தனான வீஶ்வர விஷயத்தில் பலப்ரதத்வசக்தியில் ஸம்ஶயமில்லையென்னுமிடத்தையும், ஆகர்ஷகசேஷ்டிதனாகையாலே ஆஶ்ரயணம் சுகரமென்னுமிடத்தையும், ததாஸக்தியை யாசைப்பட்டார்க்கு அந்யபரார்பக்கல் வைராக்ய மபேக்ஷிதமென்னுமிடத்தையும், ஆத்மாத்மீயபதார்த்தமெல்லா மவனிட்டவழக்காம்படியான ஸ்வஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தியையும், தாரகாதிகளெல்லாம் தானேயான ப்ராப்யவிஷயத்தில் த்வராயோகத்தையும், த்வரிதனுடைய பராஸக்தியில் கடகரானார் விஷயத்திலத்யந்தாதரத்தையு

ம், பரிபூர்ணமான ப்ராப்ய ப்ராவண்ய மதிகாரிக்கு விசேஷணமென்னு மிடத்தை
யும், சர்வரக்ஷகனான சரண்யன் பக்கல் சப்ரகார சரணாகதியையு மருளிச்செய்
து, ஸ்வதஸ்ஸித்தமான வுபாயவிஷயத்தில் ஸ்வீகாரத்தை ஸ்வாநுஷ்டாந பர்ய
ந்தமாக வருளிச்செய்கிறார்.

இதில் முதற்றிருவாய்மொழியில், ஆஶ்ரயண மாசார்யோபஜ்ஞ மாகையா
லே; ஆஶ்ரயணீயனானவன் கையுந்திருவாழியுமான வடிவழகைக் காட்டி யடிமை
கொள்ளும் நிருபாதிக சேஷித்வசம்பந்தத்தையும், அந்த சம்பந்தமடியான வாபத்
ஸகத்வத்தையும், ரக்ஷகத்வபோக்யத்வவிசிஷ்டமான ஆதிக்யவிசேஷத்தையும், அநு
பாவ்யாகார யுக்தமான வாஶ்ரிதபவ்யதையினுடைய வதிசயத்தையும், போக்யத்வ
சேஷித்வத்தால் வந்த பூர்த்திவிசேஷத்தையும், தத்கார்யமான சூரிநிர்வாஹகத்வ
த்தையும், அநுபாவ்யா சாதாரணமான லக்ஷணங்களையும், விலக்ஷண லக்ஷணங்க
ளாலே ப்ரகாசிதமான விசேஷாதிக்யத்தையும், ஆஶ்ரிதபவ்யதைக்கடியான அத்ய
ந்தவ்யாமோஹத்தையும், வ்யாமோஹகார்யமான விரோதி நிரசந சாமர்த்யத்தை
யுமநுசந்தித்து, ஏவம்ப்ரகாரவிசிஷ்டனான சர்வேஶ்வரனுடையவாஶ்ரயணம் கட
கத்வாரமாகவேணுமென்றறுதியிட்டு, கடகத்வாநுரூபமான ஸ்வபாவ விசேஷங்க
ளையுடைய வ்யக்திவிசேஷமுகத்தாலே ஸ்வதசையை யறிவித்தப்ரகாரத்தை, விஶி
ஷ்டநாயகி நாயகனைநோக்கித் தூதுவிடுகிற பாசுரத்தாலேயருளிச்செய்கிறார்...*

ஈடு.

கீழ் * நோற்றநோன்புதொடங்கி நாலுப்ரயோகம் சரணம்புக்க
விடத்திலும் தம்மபேக்ஷிதம்பெற்றிலர். பலத்தோ டவ்யபிசாரியாயவில
ம்ப்ய பலப்ரதமான வுபாயத்தை ஸ்வீகரிக்கச்செய்தேயு மபேக்ஷிதங்கிட்
டாதொழிவானென்னென்னில்; ஆழ்வாருடைய ஹிதத்தோபாதி ஜகத்
தினுடைய ஹிதத்துக்கும் கடவனாகையாலே ஈஶ்வரபுத்த்யா தலைக்கட்
டிற்றில்லை.

உகந்தருளின நிலங்கள்தோறும்புக்குத்தட்டித்திரிந்தார், அங்கு
த்தாம்நினைத்தபடி பரிமாறப்பெற்றிலர், நினைத்தபடி பரிமாறலான அவ
தாரத்தேறப்போனார், அது காலாந்தரமாகையாலே கிட்டப் பெற்றிலர்;
அதுதானே தளர்த்திக்குடலாயிற்று. இனி நித்யசந்நிதியுமுண்டாய், மு
கப்பழக்கத்தாலும் குறையற்று, சக்திவைகல்யமுமின்றிக்கேயிருக்கிற வி
வ்விடமே யமையுமென்று மீண்டார்; அவ்வநுசந்தாநந்தான்கால்நடை
தந்து போகாதபடி யீடுபடுத்திற்று, கால்நடைதருவார் காலிலே விழுந்
து தூதுவிடுகிறார். தாம் கீழநுசந்தித்தவவதாரம் தூதர்க்குச்சென் றறி
விக்கவொண்ணாதபடியா யிருந்தது; "இனியறிவிக்கலாம்படி கிட்டநின்
றானுகில் திருவண்வண்டூரிலேயறிவிப்போம்" என்றங்கேஆள்விடுகிறார்.
இவர்க்குப்பிறந்தது ஜ்ஞாநகர்மாநுக்ருஹீத பக்தியன்றே!, ஒருவன் ப்ர
சாதமடியாகவந்ததிறே. தந்தலையிலேயுமொன்றுண்டாய் "அதுநிரம்பி
ப்பெறவேணும்" என்றிருக்கிலிறே விளம்பம் பொறுக்கலாவது, அங்ங
னம் சொல்லலாவதொன்றின்றிக்கேயிருந்தது. இவர்தாம் பரிக்ரஹித்த
சாதநந்தான் விளம்பசஹமுமன்றே!, உபாயாந்தரங்களிற்காட்டில்கால்

வாசி யேற்றமுண்டே!, இங்ஙனே யடிப்பட்டவுபாயத்தை ஸ்வீகரித்தவ
ர் ஆறியிருக்க மாட்டாரிறே; ஆகையாலே ஆற்ருமை கணபுரண்டாளி
ட்டறிவிக்கிருர். "சரணம்புக்கோமாகில் அத்தலையாலே பேறுமளவுமா
றியிருப்போம்" என்று தரித்திருக்கவல்ல ப்ரக்ருதியன்றே. ப்ரஹ்மாஸ்
த்ரம் வாய்மடியச்செய்தேயும் இவர் தூதுவிடுகிறவிது ஜ்ஞாநகார்யமோ
சாபலகார்யமோ தெரிகிறதில்லை, ப்ரக்ருதிகளுங்கூட "யதோவாசோநி
வர்த்தந்தே" (யதோவாசோநிவர்த்தந்தே) என்று - பேச்சுக்கு நிலம
ன்றென்று மீண்ட விஷயத்தை மறுபாடுருவப் பாசுரமிட்டுச் சொல்ல
வல்லவிவர்க்கு "அறிவில்லை" என்னவொண்ணுது; பக்ஷிகளின் காலி
லேவிழுகிற விவர்க்கு "அறிவுண்டு" என்னவுமொண்ணுது. ஆனால் எ
ன்னுவதென்னில்; ஜ்ஞாநகார்யமான சாபலமிறேயிவரது. இதரவிஷய
ங்களில் விரக்தியிறே ஜ்ஞாநத்துக்கு ப்ரயோஜநமாகச் சொல்லுகிறது,
அந்த ஜ்ஞாநபலமாயிறே யிவ்விஷயத்தில் சாபல மிருப்பது. *ஜ்ஞாந
வைராக்யராஶியேயிறே. இனித்தூதுவிடப் பார்த்தால் ஒரு ஐந்த்ரவ்யா
கரணபண்டிதனைத் தூதுவிடுகிறதுமன்றே. இத்தால் சொல்லுகிறது-
பிராட்டியிலுண்டான வேற்றமோவென்னில்; அதுவுமுண்டிறே - அவ
ளொருவனையுமநுபவிக்கையால் வந்ததிறே யவளுக்குள்ளது, இருவரை
யுங்கூட வநுபவிக்கக் கோலுகிற வேற்றமுண்டிறேயிவளுக்கு. விஷயாநு
குணமாயிறே கலக்கமிருப்பது. இனித்தானத்தலையில் நின்றும்வந்தார்க்
கே வார்த்தைசொல்லிவிடவேணுமென்னும் நிர்ப்பந்தமில்லையே யிவளு
க்கு, ராவணசங்கையில்லாமையாலே; ஆகையாலே கண்ணுற் கண்டா
ரை யடங்கலும் போகவிடுகிருள்.

பிரிந்தாரிரங்குவது நெய்தல் நிலத்திலேயிறே; திருவல்லவாழ்,
திருவண்வண்டூரென்கிறவை யெல்லாமந்நிலங்களிறே. தூதுவிடுவார்,நா
யகன்பக்கலிலே சிலகுணங்கள்கண்டிறேவிடுவது; அவையாவன - இத்
தலையிலார்த்தியறியுந்தனை யறிவையுமுடையனுய், அறிந்தால் வருகைக்
கீடான நீர்மையுடையனுய், வருகைக் கீடான சக்தியுமுடையனு யிருக்
கையிறே; அவையெல்லா மிவள் தூதுவிடுகிறவிஷயத்திற் குறையில்லை,
அறிவில்வந்தால் [ஜ்ஞாநஸம்பந்ந:] [ஜ்ஞாநஸம்பந்ந:] என்கிறபடியே-
அறிவுகொடுத்த வசிஷ்டாதிகளுக்கு முபகரிக்கவல்லனும்படி யிருப்பா
னொருவன், நீர்மையில்வந்தால் "ஶிவேணாகவிவத்ஸல" (ஶிரணம
பிவத்ஸலம்) என்றுல் "ஸஞ்ஜாதபாஷ்ப:" (ஸஞ்ஜாதபாஷ்பஃ) என்
னும்படியிறேயதிருப்பது, சக்தியில் வந்தால் "ரஞ்ஜநீயஸ்யவிக்ரமை:"
(ரஞ்ஜநீயஸ்யவிக்ரமைஃ) என்று - எதிரிகள்பக்கலிலேசேட்குமத்தனை.
இனித்தான், நாயகனுவான் அறிவு நிறைவு ஓர்ப்பு கடைப்பிடி யுடைய
வனிறே. "இப்படிப்பட்டகுணங்களை யுடையவனு யிருக்கிறவன் வாரா
தொழிகைக்குஹேது - அவ்விடங்களிலே யார்த்தர் பலருண்டாகையா

லே அவர்கள் ரக்ஷணத்திலே யொருப்பட் டித்தலையை மறந்தானித்த
னே; ரக்ஷணத்திலே யந்வயித்தால் 'ஃஸ்தமிதாந்யபாவம்' (அஸ்தமிதா
ந்யபாவம்) என்னும்படியிறே யிருப்பது, ஆனபின்பு ஆர்த்தியை யறிவி
க்கவரும்" என்றுபார்த்தாள். இனியறிவித்தாலார்த்திக் கித்தலையில்மே
ற்பட்டாரின்றிக்கே யிருக்குமிறே. அறிவிக்குமிடத்தில் தான் கால்நடை
தந்துபோகமாட்டாள், தன் பந்துவர்க்கம் தனக்குமுன்னே நோவுபாட
ரிறே; இனிக்கால்நடைதந்துபோக வல்லார்வேணுமே; தன்பரிசரத்தி
ல் வர்த்திக்கிற பக்ஷிகளை "ஏகதேசவாஸித்வத்தால் வந்த சம்பந்தமே
நங்கார்யம்செய்து தலைக்கட்டுகைக் குறுப்பு" என்றுபார்த்து, அவற்றி
ன்காலிலேவிழுந்து போகவிடுகிறாள்.

உருத்தோறும், இத்திருவாய்மொழி யருளிச்செய்யப் புக்கவா
றே ஜீயரருளிச்செய்யும்வார்த்தை - "பாண்டவர்கள்கார்யத்துக்காகத்த
ன்னையோக்கி அவர்கள் கழுத்தைக் கட்டிக்கொண்டு கூடத் திரியச்செய்
தேயு மவர்கள்பட்ட வ்யஸநமெல்லாம் படுகிறார்காணு மிவரும்; அவர்
கள்தாம் ஒருதர்மாபாஸமுண்டு என்றிருக்கையாலே வ்யஸநப்படுகிறார்
கள், இவர்க்கதுவுமின்றிக்கேயிருக்க என்செய்யப்படுகிறார்" என்றருளி
ச்செய்வர். "ஸாஹம்கேஶக்ரஹம்ப்ராப்தா-த்வயிஜீவத்யபிப்ரபோ"
(ஸாஹம்கேஶக்ரஹம்ப்ராப்தா-த்வயிஜீவத்யபிப்ரபோ) என்றவள் நிலை
யிறே யிவளது. [மஹத்யாபதிஸம்ப்ராப்தே ஸ்மர்தவ்யோ பகவாந்ஹ
ரிঃ] [மஹத்யாபதிஸம்ப்ராப்தேஸ்மர்த்தவ்யோபகவாந்ஹரிঃ] ஆபாஸ
ரக்ஷகரான பர்த்தாக்களாலும் தன்னாலும் நோக்கிக்கொள்ள வொண்ணா
தபடி யவ்வருகுபட்டவாபத்திறே. [பகவாந்] பூர்ணரன்றோ அபூர்ணர்
கார்யம்செய்யவல்லாரொன்றுகாணு மவன் நினைவு. [ஹரிঃ] ஆஶ்ரிதரு
டைய விரோதிநிரஸநமே ஸ்வபாவமாகவுடையவனைப் பற்றினாள். ஜ்ஞா
நாதிகுணங்களால் சொன்ன பூர்த்தியிலே சக்தியுமுண்டாயிருக்கச்செய்
தே "ஹரிঃ" என்று விசேஷிக்கவேண்டிற்று - அல்லாதார்க்குமிக்குண
ங்களோரொருகாலுண்டாகையாலே; இவனுக்கங்ஙனன்று, இதுஸ்வபா
வம் என்கைக்காக வெடுத்தது ...................................*

## ஜீயர் அரும்பதம்.

வைகல்பூங்கழிவாய்ப்ரவேஶே, உக்தத்தை வர்த்திஷ்யமாணத்தோடே சங்
கதமாக்குகைக்காக வ்ருத்தத்தையருளிச்செய்கிறார் (கீழ்நோற்றநோன்பித்யாதி)
அபேக்ஷிதாலாபத்தைசங்கித்து பரிஹரிக்கிறார் (பலத்தோடித்யாதி) பலத்தோடவ்
யபிசாரியாவது - ப்ரபத்தியை ப்ரயோகித்தால் பலமமோஹமாயிருக்கை. இதுபக்
திக்குமுண்டாகையாலே யத்தை வ்யாவர்த்திக்கைக்காக (அவிளம்ப்யபலப்ரதம்)
என்கிறார். அதாவது-பக்தியு மமோகமாயிருக்கச்செய்தேயும், ப்ராரப்த கர்மாவஸா
நத்திலே பலமாகையாலே விளம்ப்யகார்யகரம்; இது ஶீக்ரபலப்ரதமென்றபடி. ஈ
ஶ்வரபுத்தியாவது - இவருடைய ப்ரபந்தத்தைக்கொண்டு ஜகத்தைத்திருத்தவேணு

மென்கிறதினைவு-கீழ்-ப்ராசங்கிக சங்காபரிஹாரம்பண்ணி, "நோற்றநோன்புதொடங்கி" இத்யாதிவாக்யத்தை விவரியாநின்றுகொண்டு இத்திருவாய்மொழிக்குசங்கதி (உகந்தருளினவித்யாதி) (தட்டித்திரிந்தார்) "இஶ்ஶரீரத்தோடே யிருக்கச்செய்தே, குளிரநோக்குதல் அணைத்தல் வினவுதல்செய்யவேணும்" என்றுதிருப்பதிகள்தோறும் தடுமாறித்திரிந்தாரென்றபடி. அர்ச்சாவதாரத்திலே மீளுகைக்கு ஹேதுத்ரயம் (இனி நித்யஸந்நிதியுமித்யாதி) ஆனால், தாம்போகாதே தூதுவிடுவானென்னென்ன (அவ்வநுசந்தாநமித்யாதி) அவ்வநுசந்தாநமாவது - (நித்யஸந்நிதியுமுண்டாய்) என்றுசொன்ன திருவண்வண்டூரி லெம்பெருமானுடைய குணாநுசந்தாநம். கால்நடைதருவார்-கால்நடையுடையார். அவதாரத்திலே தூதுவிடாதே, அர்ச்சாவதார்ரத்திலே தூதுவிடுவானென்னென்ன (தாம்கீழநுசந்தித்தவித்யாதி)

நினைத்தபரிமாற்றம்கிடையாவிட்டால் தூது விடவேணுமோ, "சேஷியானவன் செய்தபோது கண்டிருக்கிறோம்" என்றாறியிருக்கவொண்ணாதோவென்ன (இவர்க்கித்யாதி) ஜ்ஞாநகர்மாநுக்ருஹீதபக்தியாலு லாறியிருக்கைக்கும், பகவத்ப்ரசாதலப்தையாலு லாறியிருக்கவொண்ணாமைக்கும் ஹேதுவையருளிச்செய்கிறார் (தந்தலையிலே யித்யாதிவாக்யத்வயத்தாலே) உபாயாந்தரங்களிற்காட்டில் ப்ரபத்தியினுடைய சித்தத்வாவிளம்ப்யபலப்ரதத்வாதியான வேற்றத்தை யருளிச்செய்யாநின்றுகொண்டு, இப்படிப்பட்டவுபாயத்தை ஸ்வீகரித்தவராகையாலு மாறியிருக்கமாட்டாரென்கிறார் (இவர்தாமித்யாதி வாக்யத்ரயத்தாலே) கால்வாஶியென்றதுக்கு - "சரணௌ" என்றதிலேநோக்கு. ஆகையாலேயென்றது - பக்திபரவசராய் சித்தோபாயத்தை ஸ்வீகரித்தவருமாகையாலேயென்றபடி. தம்ப்ரக்ருதியாலுமாறியிருக்கமாட்டாரென்று த்ருதீயஹேது (சரணம்புக்கோமாகிலித்யாதி) கீழ்நாலுப்ரகாரம் ப்ரபத்திபண்ணியும் பெறாதவர்தூதுவிடுகிறதென்னென்ன (ப்ரஹ்மாஸ்த்ரமித்யாதி) ப்ரஹ்மாஸ்த்ரமென்கிறது-அமோஹமான ப்ரபத்தியை. ஜ்ஞாநகார்யமோ சாபலகார்யமோ தெரிகிறதில்லையென்றது - "ப்ரபத்திபண்ணியும் வாராதவன்தூதுவிட்டால்வாரான்" என்கிறவிவேகமின்றிக்கே, மீளவும் தூதுவிடுகையாலே ஜ்ஞாநகார்யமென்று நிஶ்சயிக்கப்போகாது; அவன்வருகைக்குடலான குணவிஷயகாத்யவசாயம் நெஞ்சிலேகிடக்கையாலே சாபலகார்யமென்றும் நிஶ்சயிக்கப்போகிறதில்லையென்றபடி. உபயகார்யமுமன்றிக்கே அஜ்ஞாநகார்யமென்றாலோவென்ன (ஶ்ருதிகளுமித்யாதி) ஜ்ஞாநகார்மென்ன வொண்ணாமைக்குஹேத்வந்தரம் (பக்ஷிகளித்யாதி) சங்காவாக்யம்(இதரவிஷயங்களிலித்யாதி) (ப்ரயோஜநமாகச்சொல்லுகிறது) என்றவநந்தரம், சாபலம் ஜ்ஞாநகார்யமென்று சொல்லுகிறபடி யெங்ஙனேயென்று கூட்டிக்கொள்வது. பரிஹாரம் ( அந்தஜ்ஞாநேத்யாதி ) அதாவது-விரக்தியோபாதி பகவத்விஷயத்தில் சாபலமும் ஜ்ஞாநபலமென்றபடி. அந்தஜ்ஞாநபலமென்றது - விரக்திஹேதுவான ஜ்ஞாநபலமென்றபடி. வைராக்யம் ஜ்ஞாநபலமென்னுமதுக்கு சம்வாதம் (ஜ்ஞாநவைராக்யேத்யாதி) சாபலம் ஜ்ஞாநகார்யமென்னுமதுக்கு "𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌨𑍁𑌰𑌾𑌗𑌮𑌹𑌿𑌮𑌾𑌤𑌿𑌶𑌯" (ஜ்ஞாநாநுராகமஹிமாதிஶய) இத்யாதி என்று கண்டுகொள்வது. பக்ஷிகள்காலிலேவிழுகிற தஜ்ஞாநகார்யமென்னுமத்தை சோபபத்திகமாக விவரிக்கிறார் (இனித்தூதுவிடவித்யாதி)

இத்தாலென்றது - ஐந்த்ரவ்யாகரணபண்டிதனைவிடாதே, பக்ஷிகளைவிடுகிறவித்தாலென்றபடி. ஏற்றம் - ப்ராமாதிக்யம். அதாவது - நாம் "அஜ்ஞாநமிவர்க்குண்டு" என்கைக்காகச்சொல்லுகிற விதுதன்னைக்கொண்டே பிராட்டியிலேற்றம் சாதிக்கப்பார்த்தால், அதுவுமுண்டென்றபடி. பிராட்டியிலேற்ற முண்டென்கைக்

கு ஹேதுவை யருளிச்செய்வாராக, இவளுடையவு மவளுடையவும் ப்ரதிபத்தியை யருளிச்செய்கிறார் ( இனித்தானத்தலையி லித்யாதிவாக்யத்வயத்தாலே )

இவரிருக்கிறவிடத்திலே பக்ஷிகளுண்டோவென்ன ( பிரிந்தாரித்யாதி ) அதாவது - அந்யாபதேசசமாதிக்குச் சேர வருளிச்செய்கிறதென்றபடி. ஆனாலிவள் நெய்தல்நிலத்திலேயோவிருக்கிறாள், திருவண்வண்டூரிலேயன்றோவென்ன (திருவல்லவாழித்யாதி) திருவல்லவாழை யெடுத்தது - அங்குப்போலே திருவண்வண்டூரிலும் புறச்சோலையளவும்போ யங்கே விழுந்து கிடந்து தூதுவிடுகிறாளென்கைக்காக. ( ஸஞ்ஜாதபாஷ்பஃ என்னும்படியிறேயதிருப்பது ) ஸஞ்ஜாதபாஷ்பஃ என்ற நுஷ்டாநபர்யந்தமாம்படியிறே யதிருப்பதென்றபடி. எதிரிகள்பக்கலிலே யென்றது - “ தான்போலுமென் றெழுந்தான் ” இத்யாதிப்படியே - தன்வீரமொழியப் பிறர்வீரம் சஹியாத ராவணன்பக்கலிலே யென்றபடி. நாயகலக்ஷணம் சொல்லுமளவில் பெருமாள்விஷயமான ப்ரமாணங்களையெடுத்தது - “ ஏறுசேவகனார்க்கு ” என்று - தூதுக்குவிஷயம் பெருமாளாகையாலே. அந்யாபதேச சமாதிக்குச்சேரத் தமிழர் சொல்லுகிற நாயகலக்ஷணமு மிந்தநாயகனுக்குண்டென்கிறார் ( இனித்தானித்யாதி ) ரக்ஷணத்திலே யொருப்பட்டா லித்தலையை மறக்கவேணுமோவென்ன ( ரக்ஷணத்திலேயித்யாதி ) அங்குமார்த்தருண்டே யென்ன ( இனியறிவித்தாலித்யாதி ) தான் போகுதல் தோழிமாரைப்போகவிடுதல் செய்யாதே, பக்ஷிகளைத் தூதுவிடுவானென்னென்ன ( அறிவிக்குமிடத்திலித்யாதி ) உறவில்லாதபக்ஷிகள்தன் கார்யம செய்யக்கூடுமோவென்ன ( தன்பரிசரத்தவையாதி ) ஏகதேச வாசித்வத்தால் வந்த சம்பந்தம் கார்யம்செய்கைக் குறுப்பென்றபடி.

ஸர்வேஸ்வரனிவரிடத்திலே யதிவ்யாமுக்தரா யிருக்கச்செய்தேயு மிவரவிச்சிந்நமாக நோவுபடுகிறபடியை யநுசந்தித்து ஜீயரீடுபட்டருளுகிற ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார் ( உருத்தோறுமித்யாதி ) பாண்டவர்களோ டொப்பா ரொருவரோ விவருமென்ன ( அவர்கள்தாமித்யாதி ) தர்மாபாசங்களைவிட்டு அவன்கைபார்த்திருக்கச்செய்தேயு மிவர்படுகிற தசையானாப்போலே யிருக்கிறதென்ன ( ஸாஹமித்யாதி ) த்ரௌபதி யெல்லாவற்றையும் விட்டு “ அவனேரக்ஷகன் ” என்றிருந்தாளோவென்ன ( மஹத்யாபதித்யாதி ) “ மஹதி ” என்றதுக்குபாவம் (ஆபாஸேத்யாதி) அவனென்றது - ருஷியை. “ ஹரிஃ ” என்றதுக்கர்த்தம் (ஆஸ்ரிதருடையவித்யாதி ) “ ஹரிஃ ” என்றால் விரோதி நிராசகத்வமாத்ரத்தைக் காட்டுமொழிய, தத்ஸ்வபாவத்தைக் காட்டுமோவென்ன ( ஜ்ஞாநாதித்யாதி )

“ நமோசிந்த்யாத்புதாக்லிஷ்ட ஜ்ஞாநவைராக்யராஸயே ” ( நமோசிந்த்யாத்புதாக்லிஷ்டஜ்ஞாநவைராக்யராஸயே) இத்யாதிஸ்தோத்ரே. “யஸ்ஸ்விஜ்ஞாநஸம்பந்நஸ் ஸர்வ ஸ்ரேயஸ்ஸமாதிமாந் ” ( யஸ்ஸ்விஜ்ஞாநஸம்பந்நஸ்ஸர்வஸ்ரேயஸ்ஸமாதிமாந் ) இத்யாதிஸ்ரீ ஸங்க்ஷேபே. “ தேவகல்பம்ருஜும் தாந்தம் ரிபூணாமபி வத்ஸலம் । அவேக்ஷமாணஃ கோ தர்மம் த்யஜேத் புத்ரமகாரணாத் ” ( தேவகல்ப ம்ருஜும்தாந்தம் ரிபூணாமபிவத்ஸலம் । அவேக்ஷமாணஃ கோதர்மம் த்யஜேத்புத்ரமகாரணாத் ) இத்யயோத்யாகாண்டே லக்ஷ்மணஃ. “ ஸ வேத்தா ஸர்வ தர்மஜ்ஞஃ ரிபூணாமபி வத்ஸலஃ ” ( ஸகேரதாகவதர்மஜ்ஞரிபூணாமபி வத்ஸல ) இதியுத்தகாண்டே வைதேஹ்யஃ. “ ஐஸ்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய

𑌵𑍀𑌰𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌵𑌾𑌵𑌚𑍋𑌵𑌾𑌲𑌿𑌜𑌘𑌨𑍍𑌯𑌜𑌸𑍍𑌯। 𑌸𑌞𑍍𑌜𑌾𑌤𑌬𑌾𑌷𑍍𑌪𑌃𑌪𑌰𑌵𑍀𑌰𑌹𑌨𑍍𑌤𑌾 𑌰𑌾𑌮𑍋𑌮𑍁𑌹𑍂𑌰𑍍𑌤𑌂𑌵𑌿𑌮𑌨𑌾𑌬𑌭𑍂𑌵 ” ( இத்யேவமார்த்தஸ்ய ரகுப்ரவீரஶ்ருத்வாவசோவாலிஜகந்யஜஸ்ய । ஸஞ்ஜாதபாஷ்ப:பரவீரஹந்தாராமோமுஹூர்த்தம்விமநாபபூவ ) இதிகிஷ்கிந்தாகாண்டே. “ 𑌶𑌤𑍍𑌰𑍋𑌃𑌪𑍍𑌰𑌖𑍍𑌯𑌾𑌤𑌵𑍀𑌰𑍍𑌯𑌸𑍍𑌯 𑌰𑌞𑍍𑌜𑌨𑍀𑌯𑌸𑍍𑌯𑌵𑌿𑌕𑍍𑌰𑌮𑍈𑌃। 𑌪𑌶𑍍𑌯𑌤𑍋𑌯𑍁𑌦𑍍𑌧𑌲𑍁𑌬𑍍𑌧𑍋𑌽𑌹𑌂𑌕𑍃𑌤𑌃𑌕𑌾𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌤𑍍𑌵𑌯𑌾 ” ( ஶத்ரோ:ப்ரக்யாதவீர்யஸ்யரஞ்ஜநீயஸ்யவிக்ரமை:। பஶ்யதோயுத்தலுப்தோஹம்க்ருத:காபுருஷஸத்வயா ) இதியுத்தகாண்டே ஸூதம் ப்ரதிராவண:. “ 𑌯𑌦𑍍𑌵𑌿𑌸𑍍𑌮𑌯𑌸𑍍𑌤𑌿𑌮𑌿𑌤𑌮𑌸𑍍𑌤𑌮𑌿𑌤𑌾𑌨𑍍𑌯𑌭𑌾𑌵𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌮𑌨𑍍𑌦𑌮𑌮𑍃𑌤𑌪𑍍𑌲𑌵𑌨𑌾𑌦𑌿𑌵𑌾𑌭𑍂𑌤𑍍। 𑌤𑌤𑍍𑌸𑌨𑍍𑌨𑌿𑌧𑍌𑌤𑌦𑌧𑍁𑌨𑌾𑌹𑍃𑌦𑌯𑌂𑌮𑌦𑍀𑌯𑌮𑌙𑍍𑌗𑌾𑌰𑌚𑍁𑌮𑍍𑌬𑌿𑌤𑌮𑌿𑌵𑌵𑍍𑌯𑌥𑌮𑌾𑌨𑌮𑌾𑌸𑍍𑌤𑍇 ” ( யத்விஸ்மயஸ்திமிதமஸ்தமிதாந்யபாவமாநந்தமந்தமம்ருதாப்லவநாதிவாபூத்। தத் ஸந்நிதௌததுநாஹ்ருதயம்மதீயமங்காரசும்பிதமிவவ்யதமாநமாஸ்தே ) இதிமாலதீமாதவீயே. “ 𑌸𑌾𑌹𑌂𑌕𑍍𑌲𑍇𑌶𑌗𑍍𑌰𑌹𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌾𑌪𑌰𑌿𑌕𑍍𑌲𑌿𑌷𑍍𑌟𑌾𑌸𑌭𑌾𑌂𑌗𑌤𑌾। 𑌪𑌶𑍍𑌯𑌤𑌾𑌂𑌪𑌾𑌣𑍍𑌡𑍁𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌂𑌤𑍍𑌵𑌯𑌿𑌜𑍀𑌵𑌤𑍍𑌯𑌪𑌿𑌪𑍍𑌰𑌭𑍋 ” ( ஸாஹம்க்லேஶக்ரஹம்ப்ராப்தாபரிக்லிஷ்டாஸபாம்கதா। பஶ்யதாம்பாண்டுபுத்ராணாம் த்வயிஜீவத்யபிப்ரபோ ) இத்யுத்யோகபர்வணித்ர்யஶீதிதமேத்ரௌபதீ. தத்ராவஸா, “ 𑌜𑍍𑌞𑌾𑌤𑌂𑌮𑌯𑌾𑌵𑌸𑌿𑌷𑍍𑌠𑍇𑌨𑌪𑍁𑌰𑌾𑌗𑍀𑌤𑌂𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌾। 𑌮𑌹𑌤𑍍𑌯𑌾𑌪𑌦𑌿𑌸𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍇𑌸𑍍𑌮𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑍋𑌭𑌗𑌵𑌾𑌨𑍍𑌹𑌰𑌿𑌃 ” ( ஜ்ஞாதம்மயாவஸிஷ்ட்டேந புராகீதம்மஹாத்மநா। மஹத்யாபதிஸம்ப்ராப்தே ஸ்மர்த்தவ்யோபகவாந்ஹரி: ) இதி............*





ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஆறும்பத்து.

### முதற்றிருவாய்மொழி.

### முதற்பாட்டு.

வைகல்பூங்கழிவாய்வந்துமேயுங்குருகினங்காள்
செய்கொள்செந்நெலுயர்திருவண்வண்டூருறையும்
கைகொள்சக்கரத்தென்கனிவாய்ப்பெருமானைக்கண்டு
கைகள்கூப்பிச்சொல்லீர்வினையாட்டியேன்காதன்மையே.

### ஆறாயிரப்படி.

தன்னுடைய நிரவதிக சௌந்தர்யத்தாலே யென்னுடைய சர்வ கரணங்களையு மபஹரித்துப்போய், திருவண் வண்டூரிலுள்ள நிரவதிகைஸ்வர்யத்தாலே யென்னைமறந்திருக்கிற எம்பெருமானைக்கண் டெனக்காக வவனைக் கைகள்கூப்பிச்சொல்லீர் வினையாட்டியேன் காதன்மையென்று சிலகுருகுகளைநோக்கி யருளிச்செய்கிறாள்.......................*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், "நம்மைத் தன்னழகைக்காட்டி யநந்யார்ஹமாக்கிக்கொண்ட சேஷியானவன் திருவண்வண்டூரில் ஸம்ருத்தியாலே யந்யபரனாயிருக்கிறானாகக்கூடும்" என்றுநினைத்து, ஸந்நிஹிதமான சிலகுருகுகளைத் தூதாகப்போகவிடுகிறாள்.

வைகல்-என்றுமொக்க. பூ-அழகிய. கழிவாய்-கழியிலே. வந்து-என்கண்முகப்பேவந்து. மேயும்-மேய்கிற. குருகினங்காள் - குருகினங்காள். செய் - செய்யை. கொள்-விளாக்கொலைகொள்ளுகிற. செந்நெல்-செந்நெலானது. உயர்-மிகவும்வளருகிற. திருவண்வண்டூர்-திருவண்வண்டூரிலே. உறையும் -நித்யவாசம்பண்ணுநிற்பானாய். ஆஸ்ரிதர்க்கநுபாவ்யமாம்படி, கை-கையிலே. கொள் - இடங்கொண்ட. சக்கரம்-திருவாழியையுடையனாய். என்-அவ்வழகாலே யென்னை வசீகரித்தெனக்கு போக்யமாக்கித்தந்த. கனி-கனிபோன்ற. வாய்-அதரசோபையையுடையனாய். பெருமானை-இப்படியென்னை யநந்யார்ஹமாக்கிக்கொண்ட பரமசேஷியானவனை. கண்டு-கண்டு. கைகள்கூப்பி-அவனுடையசேஷித்வத்துக்குத் தகுதியாம்படி சேஷத்வாநுரூபவ்ருத்தியைப்பண்ணி. வினையாட்டியேன்-விஸ்லேஷஹேதுவான பாபத்தையுடையேனான வென்னுடைய. காதன்மை-அபிநிவேசாதிசயத்தை. சொல்லீர்-சொல்லுங்கோள்.

குருகுகைகூப்புதல்-அநுவ்ருத்திரூபமான சிறகசைத்தல். இத்தால்-கடகருடைய சமானதேசவர்த்தித்வத்தால்வந்த சந்நிதியும், உத்தேஸ்யவிஷயாநுவ்ருத்தியுந்தோற்றுகிறது.........*

## ஈடு - முதற்பாட்டு.

சிலகுருகுகளைநோக்கி, திருவண்வண்டூரிலேசென்றெம்பெருமானுக் கென்தசையை யறிவியுங்கோளென்கிறாள்.

(வைகல்) உங்கள் தனிநீர்மையுடையார் சிலரோடே கலக்கப் பெறுமையிறே யெனக்கிப்பிரிவு விளைந்தது; அவ்விழவெல்லா முங்களைக்கொண்டு தீரலாம்படியாயன்றோ வெனக்கிருக்கிறது. ஒருகால் கலந்து பொகட்டுப்போனவவனைப்போலன்றிக்கே நீங்களெப்போது மிங்கேவர்த்திக்கப்பெற்றேனே !, உங்கள் நீர்மையி லேற்றமிருந்தபடியென். (வைகல்) நாடோறும். (பூங்கழிவாய்) அழகியகழியிடத்து. பூத்தகழியிடத்தென்னவுமாம். ரக்ஷகனானவன் கைவிடுவது, பாதகவர்க்கங்களானவை மிகைப்பதான விவ்வளவிலே நீங்கள் முகங்காட்டுவதே. அழகியசோலை, குளிர்ந்ததென்றல், இனியபரிமளந்தொடக்கமான விவையுமுண்டிறே. பிரிந்தவனே பாதகனுகையன்றிக்கே, இருந்ததேசமும் பாதகமாகை. (வந்து) * பம்பாதீரோஹநுமதாஸங்கதஃபோலே, ஆளிட்டறிவிக்கும்தசையிலே நீங்களேவந்து. வழிபறியுண்டவிடத்தே தாய்முகங்காட்டினுப்போலே காணும் பிராட்டியைப்பிரிந்து நோவுபடுகிறசமயத்திலே திருவடிவந்து முகங்காட்டினபடி. [ஹநுமதா] தளர்ந்து "ஆவாரார்துணை" என்று தடுமாறுகிறசமயத்திலே, வெற்றித்தழும்புசுமந்த ஆண்பிள்ளையோடேகூடப்பெற்றதென்கிறது. [வாநரேண] சந்யாஸிவேஷங்கொண்டு வந்து பிரிவைவிளைத்து நலிவுபண்ணுமவனைப்போலன்றிக்கே, செவ்வியானொருவனோடே சேரப்பெறுவதே. [ஹ] ருஷிகொண்டாடுகிறார். போகத்துக்குச் சேர்த்துக்கொள்ளுகிறோம், சத்தைநோக்குவாரைப்பெற்றோமிறே! யென்று ஹ்ருஷ்டனுகிறான். (வந்து) அவனைப்போலே தூதர்க்கு மாளிட்டழைக்க வேண்டாதொழியப்பெற்றோமே. ஆளிட்டழைக்க வேண்டுகிறதிறேயவனை. ஒருகலத்திலேயொக்கவுண்டு ஒருபடுக்கையிலேகிடந்து தூதுபோவாரைப்போலேகாணு மிவற்றின்படி. (மேயும்) "க்ருஹேபுக்தமஸங்கிதம்" (க்ருஹேபுக்தமஸங்கிதம்) என்னும்படியிருக்கை. (குருகினங்காள்) "தர்ஸிதாநிகளத்ராணி" (தர்ஸிதாநிகளத்ராணி) என்கிறபடியே இதொருசேர்த்தியிருந்தபடியென். (வந்துமேயுமித்யாதி) நிருபாதிகபாந்தவமுடையார் பக்கலிலே பார்யாபுத்ராதிகளோடேசென்று "சோறிடும்" என்று புஜிப்பாரைப்போலேகாணு மிவற்றின்படி. குருகினங்காள் - கைகள்கூப்பிச்சொல்லீரென்று க்ரியை. பண்டைமுதலிகள், "பத்தாம்பாட்டிலே-ப்ரணயரோஷந்தோற்றச்சொல்லுகிறாள்" என்று நிர்வஹிப்பர்கள். " பாட்டுத்தோறும் - கிலாந்தோற்றச்சொல்லுகிறு

ள்'' என்று பட்டரருளிச்செய்யும்படி. ( வந்துமேயுங்குருகினங்காள்-கைகள்கூப்பிச்சொல்லீர்) என்றும் பிறர்க்குபகரிக்கவே தேடித்திரியுமித்தனையோ, உங்கள்கார்யமும் செய்யவேண்டாவோ. ( இவள்கார்யமிங்கேவந்து மேய்கை. இவற்றின்கார்யமங்கே சென்றுசொல்லுகை.) * உபவாசக்ருசையாயிருக்கிற வென்கார்யம் புஷ்கலராயிருக்கிற வுங்களுக்குச் செய்யவேண்டாவோ. (செய்கொள்செந்நெல்) இத்தலையை நினைக்கலாம்படியோ அங்குத்தை போக்யதையிருக்கிறபடி. * மதுராம்ப்ராப்யகோவிந்தஃ கதம்கோகுலமேஷ்யதி । நகரஸ்த்ரீகலாலாபமதுஸ்ரோத்ரேணபாஸ்யதி இறேயவன்படி. அத்தேசத்தில் போக்யதையிலே யகப்பட்டிருக்கிறவன் நம்மைநினைக்கப்புகாநின்றானோ. (செய்கொள்செந்நெல்) ஒருமுதலேசெய்யை விழுங்கும்படியாயிருக்கை. (உயர்) அங்குவரம்பில்லாமையாலே முடிய உயராநிற்குமத்தனை. “ ஈஹளூ ” (அஹமந்நம்) என்பாரளவும் செல்லத்தானுயராநிற்குமத்தனை. (திருவண்வண்டூருறையும்) “செய்துபோனமாயங்களும்” என்று கூப்பிடவேண்டாதபடியாயிருக்கை. அதாவது-அவதாரவ்யாவ்ருத்தி. ( கைகொள்சக்கரத்து ) செந்நெலின்படியாயிருக்கை. கைக்கெல்லாம் தானே ஆபரணமாயிருக்கை. (என்கனிவாய்) முறுவலையெனக்கு முற்றூட்டாக்கினவன். (பெருமான்) வாய்க்கரையிலேயெனக்கு ஜீவநத்தையிட்டென்னை யெழுதிக்கொண்டவன். (கைகொள்சக்கரத்தென்கனிவாய்ப்பெருமான்) ராஜபுத்ரர்கள் கையிலிடைச்செறி கடைச்செறிக்குத் தோற்றிருக்குமாபோலே. (பெருமான்) திருவதரத்தில் பழுப்புக்கும் கையுந்திருவாழியுமான சேர்த்திக்குமாயிற்றிவளெழுதிக்கொடுத்தது. (கண்டு) நானநுபவிக்கப்பாரித்த துறைகளெல்லாம் நீங்கள் காணவிறேபுகுகிறது. இவளைப்பற்றினார்க்கிவளிலும் பேறுமுற்பட்டிருக்குமிறே. ஸ்ரீவிபீஷணாதிகள் பக்கலிலேகண்டுகொள்வது. (கைகள்கூப்பி) இத்தலையில் ராஜகுலங்கொண்டு மேன்மையடித்திராதேகிடிகோள். அவர் பழையவரல்லர், பெருமதிப்பர்கிடிகோள், தொழுதுகொடுநில்லுங்கோள். “தலையில் வணங்கவுமாங்கொலோ” என்றிருக்குமவளிறேயிவள்தான், இவள்பரிகரமுமப்படியேயிறே. (சொல்லீர்) தொழுதவநந்தரம் முகம்பார்த்துக்கொடுநிற்பர், பின்னையுங்களுக்கு வேண்டினபடிசொல்லுங்கோள். ப்ரணயித்வத்திலே சிறிதுகொத்தையுண்டானாலும் தானானதன்மைபோகாதே. (சொல்லீர்) இத்தலையில் வைவர்ண்யந்தொடக்கமானவாற்றாமை யடங்கலு முங்கள்பாசுரத்திலவனறியும்படி சொல்லுங்கோள். ஒருபாசுரமிட்டுச் சொல்லவேண்டாவோவென்னில் (காதன்மை-சொல்லீர்) காதன்மையென்றவாறே-தம்மளவிலே யித்தலைக்குமுள்ளதென்றிருப்பர்; “ ஸத்ருஸவிஷயமானால், விளையுமவையும் ஸத்ருஸமாயிருப்பது” என்றிறே யவரிருப்பது. அல்லாதவேற்றங்களோபாதியிறே ஆற்றாமையில்வந்தா லிருக்கும்படியுமித்தலைக்.

கு. (வினையாட்டியேன் காதன்மை - சொல்லீர்) அவர் “ இவ்வூர்க்கவ்வூர்காதம்” என்றிருந்தால், அப்படியே “ இவ்வூர்க்கவ்வூர்காதம் ” என்றிருக்கமாட்டாத பாபத்தைப்பண்ணின வென்னுடையகாதல். தமக்கித்தலையை யொழியச்செல்லும்படியாயிருந்தாலும், எனக்கத்தலையையொழியச்செல்லாதபடியான பாபத்தைப்பண்ணினேன். அங்குநின்றும் வந்தார்க்கு வார்த்தைசொல்லிவிடவும் பெற்றிலேன். ( வினையாட்டியேன் காதல்சொல்லீர் ) வன்னெஞ்சர்காதல்போலன்றிறே மென்னெஞ்சர் காதல்; மெல்லியலார்காதலளவல்லாத வென்காதல் சொல்லீர். சொல்லுவார்தாழ்வே; வரவுதப்பாதென்றிருக்கிருள்............................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (வைகலித்யாதி) “ குருகினங்காள், 'திருவண்வண்டூருறையும்- பெருமானைக்கண்டு - சொல்லீர்வினையாட்டியேன் காதன்மை ” என்கிறபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை (சிலவித்யாதி)

“வந்து” என்றத்தைக்கடாக்ஷித்துபாவம் (உங்கள்தனையித்யாதி) “வைகல்- வந்து” என்றதுக்குபாவம் ( ஒருகாலித்யாதி ) நாடோறும் பூங்கழியிடத்துவந்து. அதாவது - நானிருந்தவிடத்தே வர்த்தித்துக்கொண்டு புஜிக்கிற குருகினங்காளென்று சப்தார்த்தம். “ பூத்தகழியிடத்து ” என்றதுக்குபாவம் (ரக்ஷகனுனவனித்யாதி) பாதகவர்க்கங்களைவையென்ன (அழகியசோலையித்யாதி) இத்தால்பலிதம் (பிரிந்தவனேயித்யாதி) பாதகவர்க்கங்கள் மிகை[illegible]ான வித்தசையிலிவை முகங்காட்டினதுக்கு த்ருஷ்டாந்தம் (பம்பேத்யாதி) “ [Grantha] ” ( பம்பாதீரோஹநுமதாஸங்கதோவாநரோணஹ ) இதிஸங்க்ஷேபே. “ [Grantha] ” ( பம்பாதீரே-ஸங்கதஃ ) என்றதுக்குபாவம் (வழிபறியித்யாதி) வெற்றித்தழும்புசுமந்தவென்றது - “ ஹநுமதா ” என்றத்தைப் பற்ற. கொண்டாடுகிறதுக்கு ஹேதுவேதென்ன (போகத்துக்கித்யாதி) “ ஆளிட்டடிவிக்கவேண்டும்தசையிலே ” இத்யாதிவாக்யவிவரணம் (அவனைப்போலேயித்யாதி) அவனைப்போலேயென்றது - நாயகனையுங் கனையிட்டழைக்குமாபோலேயென்றபடி. தூதர்க்குமென்றது - தூதரானவுங்களுக்குமென்றபடி. அன்றிக்கே, திருவடியை யிளையபெருமாளையிட்டுப் பெருமாளழைப்பித்தாப்போலே யென்னுதல். “ மேயும் ” என்றத்தைக்கடாக்ஷித்துபாவம் ( ஒருகலத்திலேயித்யாதி ) அதாவது- “[Grantha]” (உபௌசந்தநலிப்தாங்கௌ) என்கிறபடியே - அர்ஜுநனும் க்ருஷ்ணனு மொருகலத்திலேபுஜித்து ஒருபடுக்கையிலேகிடந்து க்ருஷ்ணன் தூதுபோனுப்போலேயென்றபடி. “ [Grantha] ” ( கதிதாநிரஹஸ்யாநிக்ருஹேபுக்தமஸங்கிதம்। தர்ஸிதாநிகளத்ராணிஸௌகார்த்தம்கிமதஃபரம் ) இதிமஹாபாரதே க்ருஷ்ணம்ப்ரதிகர்ணஃ. “ வந்து, மேயும், இனங்காள் ” என்றபதச்சேர்த்திக்குபாவம் (நிருபாதிகேத்யாதி) பாந்தவமுடையார்-தர்மபுத்ராதிகள். புஜிப்பாரைப்போலேயென்றது - க்ருஷ்ணனைப்போலேயென்றபடி. பட்டர்நிர்வாஹத்துக்கு நியாமகம் - “ உணர்த்தலூடலுணர்ந்து ” என்று ப்ரணயரோஷத்

தை ப்ரஸங்கிக்கிறபாட்டு. கிலாம் - ப்ரணயரோஷம். "வந்துமேயும் குருகினங்காள், கைகள்கூப்பிச்சொல்லீர்" என்கிறவளுடைய ஹார்த்தபாவம் (என்றுமித்யாதி) பிறர்க்குபகரிக்கையாவது-வந்துமேய்கை. பிறர்க்கென்றது - தனக்கென்றபடி. உங்கள் கார்யமென்றது - தூதுபோய் கடிப்பிக்கை.

"செய்கொள்" இத்யாதி தேசவர்ணநத்துக்குபாவம் (இத்தலையையித்யாதி) அங்குத்தை போக்யதையிலே ஸக்தனு யிவ்விடத்தை நினையாதிருக்குமென்கைக்கு ப்ரமாணம் (மதுராமித்யாதி) "𑌮𑌧𑍁𑌰𑌾𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌗𑍋𑌵𑌿𑌨𑍍𑌦𑌃 𑌕𑌥𑌂 𑌗𑍋𑌕𑍁𑌲𑌮𑍇𑌷𑍍𑌯𑌤𑌿 । 𑌨𑌗𑌰𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌕𑌲𑌾𑌲𑌾𑌪𑌮𑌧𑍁𑌰𑌂 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑍇𑌣 𑌪𑌾𑌸𑍍𑌯𑌤𑌿" (மதுராம்ப்ராப்யகோவிந்தஃகதம்கோகுலமேஷ்யதி । நகரஸ்த்ரீகலாலாபமதுரம்ஶ்ரோத்ரேண பாஸ்யதி) இதி பஞ்சமேம்ஸே. த்ருஷ்டாந்தத்திற்சொன்னத்தை தார்ஷ்டாந்திகத்திலேயுங்காட்டுகிறார் (அத்தேசத்திலித்யாதி) "செந்நெல்" என்ற ஏகவசநார்த்தம் (ஒருமுதலேயித்யாதி) அங்கென்றது - ஆகாசத்திலென்றபடி. "உறையும்" என்றதுக்குபாவம் (செய்துபோனவித்யாதி)

செந்நெலைப்போலே கையைமறைத்துக்கொண்டிருக்கிறதோவென்ன (கைக்கெல்லாமித்யாதி) முற்றூட்டு-பூர்ணமாகபுஜிப்பிக்கை. "கனிவாய் - பெருமான்" என்றுகூட்டிபாவம் (வாய்க்கரையிலேயித்யாதி) வாய்க்கரை-அதரம். "கைகொள் சக்கரம் - பெருமான்" என்றுகூட்டிபாவம் (ராஜபுத்ரர்களித்யாதி) இடைச்செறி கடைச்செறியாவது - ஒருவிரலிலேகீழும் மேலுமிடுகிறமோதிரங்கள். இவளபிமதாலாபத்தாலே நோவுபடாநிற்க, இவளைப்பற்றினார்க்குப் பேறுமுற்படக்கூடுமோ வென்ன (இவளைப்பற்றினார்க்கித்யாதி) "ஸீ𑌤𑌾𑌂 𑌚 𑌰𑌾𑌮𑌾𑌯 𑌨𑌿𑌵𑍇𑌦𑍍𑌯" (ஸீதாஞ்சராமாயநிவேத்ய) இத்யாதியான வாநுகூல்யமாத்ரத்தை - பற்றுகையாகவெண்ணி (ஸ்ரீவிபீஷணாதிகள்பக்கலிலேகண்டுகொள்வது) என்கிறார். ஆதிசப்தத்தாலே-திருவடியைச்சொல்லுகிறது. * பரிஷ்வங்கோ ஹநூமதஃஇறே.

இவள்பரிகரங்களுக்குக்கைகூப்பவேணுமோவென்ன (தலையிலித்யாதி) இது-பூர்வர்கள் நிர்வாஹத்திலே. உன்னையுபேக்ஷித்தவன் நாங்கள்தொழுதவாறே முகங்காட்டுமோவென்ன (ப்ரணயித்வத்திலேயித்யாதி) தானானதன்மையாவது - அஞ்சலிவஶ்யதையாதல், க்ருபாபாரதந்த்ர்யமாதல். (ஒருபாசுரமிட்டுச்சொல்லவேண்டாவோவென்னில் காதன்மைசொல்லீர்) என்றவாக்யத்தையநுசந்தித்தவநந்தரம், (இத்தலையில் வைவர்ண்யம்) இத்யாதிவாக்ய மநுசந்தேயம். அப்படியிருக்கைக்கு ஹேதுவேதென்ன (ஸத்ருஶவிஷயமித்யாதி) "அவரிருப்பர்" என்கிறதென், வஸ்துஸ்த்திதியுமப்படியன்றோவென்ன (அல்லாதவேற்றங்களித்யாதி) அல்லாதவேற்றங்களாவன - "அஸிதேக்ஷணா" என்கிறது முதலானவை. "வினையாட்டியேன்" என்றதுக்கு - பிராட்டியில் வ்யாவ்ருத்தியாகபாவாந்தரம் (அங்குநின்றுமித்யாதி) உக்தார்த்தத்வயத்தையுமடைவே விவரிக்கிறார் (வன்னெஞ்சரித்யாதிவாக்யத்வயத்தாலே) இத்தால் - பெருமாள் காதலையும் பிராட்டிகாதலையும்பற்ற, உபயாநுபவத்தாலேபிறந்த விவர்காதல் வ்யாவ்ருத்தமென்றபடி. மெல்லியலார் - ம்ருதுஸ்வபாவைகள்.

பகல் பூங்கழிவாய்த்தொடங்கி அடைவே யங்வயம் ........................*

# இரண்டாம்பாட்டு.

காதன்மென்பெடையோடுடன்மேயுங்கருநாராய்
வேதவேள்வியொலிமுழங்குந்தண்டிருவண்வண்டூர்
நாதன்ஞாலமெல்லாமுண்டநம்பெருமானைக்கண்டு
பாதங்கைதொழுதுபணியீரடியேன்றிறமே.

## ஆறாயிரப்படி.

( காதல் ) பரமகாருணிகனு யாஶ்ரித வத்ஸலனுயிருந்த திருவண் வண்டூர் நாதனைக்கண்டு, பாதம் கைதொழுது பணியீ ரடியேன் திறமென்கிறுள்.......................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆபத்ஸகனுன அந்தஸேவியைக்குறித்து, பேடையோடே மேய்கிற நாரையைப் போகவிடுகிறுள்.

காதல் - ப்ராவண்யாதிசயத்தாலே. மென் - பிரிவுபொறுக்கமாட்டாத மென்மையையுடைய. பெடையோடு - பேடையோடே. உடன் - கூட. மேயும் - மேயாநிற்கிற. கரு - ஶ்யாமளமான நிறத்தையுடைய. நாராய் - நாராய். வேதவொலி - வேதகோஷமும். வேள்வியொலி - வைதிகக்ரியாகோலாஹலமும். முழங்கும்-முழங்கும்படியாய். தண் - ஸாம்ஸாரிகதாபம் தட்டாத குளிர்த்தியையுடைய. திருவண்வண்டூர் - திருவண்வண்டூருக்கு. நாதன் - ஸ்வாமியாய். ஞாலமெல்லாம் - சகலஜகத்தையும். உண்ட - ப்ரளயங்கொள்ளாமல் வயிற்றிலேவைத்துநோக்கின ஆபத்ஸகத்வத்தை. நம் - நமக்கு ப்ரகாசிப்பித்த. பெருமானை - பெரியவனை. கண்டு-நான் காண்கைக்குறுப்பாக முன்னேகண்டு. பாதம் - அவன்திருவடிகளைக்குறித்து. கைதொழுது - அஞ்சலி பண்ணி. அடியேன் - அவனுக்கு சேஷபூதையானவென். திறம் - இடையாட்டமாக. பணியீர் - வார்த்தைசொல்லுவீராகவேணும்.

பன்மை - பெடையோடேகூட்டிச்சொல்லுகிறது. பணியீரென்று - கௌரவந்தோற்றுகிறது. அடியேனென்று - கடகவிஷயமாகவுமாம். இத்தால் - கடகருடைய அபிமதஸாஹசர்யமும், ஆபிருப்யமு முத்தேஶ்யமென்று கருத்து..........*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

ஆர்த்தரக்ஷணத்திலே தீக்ஷிதனானவனுக் கென்னுற்றுமையை யறிவியென்றொருநாரையை யிரக்கிறுள். ( காதலித்யாதி ) "முன்புபோகவிட்டவர்கள் கொண்டுவருகிறுர்கள்" என்றுகொண்டாறியிருக்கலாம் விஷயமன்றே; அங்ஙனேயாமன்று முன்புபண்ணின ப்ரபத்தியே யமையுமே.

( காதல் மென் பெடையோடுடன்மேயும்கருநாராய் ) "ஊர்த்வம் மாஸாந்நஜீவிஷ்யே" ( ஊர்த்வம்மாஸாந்நஜீவிஷ்யே ) என்றுல், "ந ஜீவேயம்க்ஷணமபி" ( நஜீவேயம்க்ஷணமபி ) என்பாருமுண்டாகாதே.

கடக்கவிருந்து சொலவுமாத்ரமேயாய்ப்போகாதே, அதுதன்னை யநுஷ்ட்டாநபர்யந்தமாக்கித் தலைக்கட்டுவாரையுங் கிடைப்பதே. ஸர்வஜ்ஞர்களோடு கலவாதொழியும்படியான பாக்யத்தைப்பண்ணுவதே நீங்கள் முன்னம். "பின்பு கூடுகை தவிராதாகில் இப்போது பிரிந்தாலென்செய்யவேணும்" என்றிருப்பர்களிறே யவர்கள்; அத்தனை காரியப்பாடில்லையிறே யிவற்றுக்கு. (காதல்) நிரூபித்துப் பார்த்தால் காதலுக்கவ்வருகொன்றின்றிக்கேயிருக்கை. காதலை வடிவாக வுடைத்தாயிருக்கை. (மென்பெடையோடு) கலக்கவுங் கூடப்பொறுத மார்த்தவத்தை யுடைத்தாயிருக்கை. (உடன்மேயும்கருநாராய்) கலக்கவும் பொறுதார்க்குப் பிரியப்பொறுதென்னுமிடம் சொல்லவேண்டாவே. அத்தாலேகூடத் திரியாநின்றது. (காதல்மென்பெடையோ டுடன்மேயும் கருநாராய்) பேடையின் காதலறிந்து கூடத்திரியும் சேவலுமுண்டாகாதே. (உடன்மேயும்) "இதம்மேத்யமிதம்ஸ்வாது" (இதம்மேத்யமிதம்ஸ்வாது) என்கிறபடியேகாணுமிவைதிரிகிறது. அதுவாயலகாலே கோத்தெடுத்துக் கொடுத்தால், பின்பாராயவேண்டாதே மிடற்றுக்குக்கீழேயிழிக்கு மித்தனை யிதுசெய்வது. பேடையின் நினைவறிந்து புஜிப்பிக்கும்சேவலுமுண்டாகாதே. (உடன்மேயும்கருநாராய்) அதுக்கொரு குற்றம்தேடிச் சொல்லுவாரைப்போலே சொல்லுகிறாள் தன்கார்யம் செய்கைக்காக. அடுகுவளத்தைத் தடுப்பாரைப்போலே. தன்னார்த்தத்வநி செவிப்பட்டாலவற்றுக்கு மிடற்றுக்குக்கீழிழியாதென்றிருக்கிறாள்காணும். (கருநாராய்) கூடத்திரிகையாலே நரைதிரைநீங்கி வடிவு புகர்த்தபடி. பிரியாதார்க் குடம்பு வெளாதாகாதே. தானுடம்புவெளுத்துக் கிடக்கிறாளிறே.

(வேதவேள்வியொலிமுழங்கும் தண்டிருவண்வண்டூர்) இவற்றினறிவுகேடுபலித்தபடி சொல்லுகிறது. அங்குண்டான வேதகோஷம், வைதிகக்ரியை, இவைகண்டு கால்தாழவேண்டாவிறே யிவற்றுக்கு. தன்னுயகனவைகண்டிறே வரமாட்டாதே நிற்கிறது. [தாநயஜ்ஞவிவாஹேஷு] [தாநயஜ்ஞவிவாஹேஷு] தாநங்கள்பண்ணுமிடத்தே யெழுந்தருளியிருப்பராயிற்று, தேசத்திலே காலத்திலே ப்ராப்தவிஷயங்களிலே யிடுவிக்கைக்காக. யாகங்களிலே யெழுந்தருளி யிருப்பராயிற்று, ந்யாயார்ஜிததநம்கொண்டு செய்விக்கைக்காகவும், சடங்குகளில்தப்பினவை யுண்டாகில் அவை யெடுத்துக்கொடுக்கைக்காகவும். [விவாஹேஷு] [விவாஹேஷு] இரண்டுதலையையும் பொருந்தவிட்டு, பொருந்தாதார்க்கு வேண்டுவனசெய்து, ஹோமம்பண்ணுவித்துத் தலைக்கட்டிக்கொடுக்கைக்காக, விவாஹம்பண்ணுமிடங்களி லெழுந்தருளியிருப்பர். [ஸமாஜேஷுமஹத்ஸுச] [ஸமாஜேஷுமஹத்ஸுச] தீர்க்கஸத்ரங்களிலேயாதல், உத்ஸவங்களிலேயாதல். [ச] யாவனொருவனொரிடத்தே அத்ருஷ்டகார்யங்கள் செய்யும், அங்கேயிருப்பனென்கிறது. [ந்ருக்ஷ்ராஜ

[illegible] ] [ நத்ரக்ஷ்யாமஃபுநர்ஜாது ] அவரை யவ்வோவிடங்களி லே யிருக்கக் காண்கிறிலோம். [ [illegible] ] [ தார்மிகம்ராமமந்தரா ] என்றான், இவரிவ்விடங்களி லிருக்கிறதென்னில் ; தர்ம ஸம்ஶயங்களறுத்துக்கொடுக்கைக்கும், அவைதப்பாமே யநுஷ்ட்டிப்பிக் கைக்குமாக. இப்படியேயிறே யவன்படிகள். ( திருவண்வண்டூர்நாதன் ) " ஸ்ரீவைகுண்டநாதன் " என்னுமதிற்காட்டிலுண்டான வேற்றம் சொ ல்லுகிறது. எளியாரை வலியார்பறிக்க, அங்கே கோயிற்சாந்து பூசியிரு க்கு மதோரோற்றமன்றிறே. வேதகோஷமும் யாகத்தில் ஶஸ்த்ராதிகோ ஷமும் சமுத்ரகோஷம்போலேயிருக்கிற, ப்ரமஹரமானவூர். ( ஞால மெல்லாமுண்டநம்பெருமானைக்கண்டு ) அம்முதன்மையோடேகூட வ ந்தானாகில் அங்குத்தை யுதவாமையும் கிடக்குமோவென்னில் ; அங்ங னன்று, தளர்ந்தார் தாவளமென்கிறது. ஆபத்ஸகனிறே. ( நம்பெருமா னைக்கண்டு ) ஆபத்ரக்ஷகனென செயலைக்காட்டி யென்னை யகங்யார்ஹமா கவெழுதிக்கொண்டவனைக்கண்டு. ( பாதம்கைதொழுது ) திருவடிகளி லே தெண்டனிட்டு. "' கைகள்கூப்பி ' என்றதே ; தொழுதார்க்குநிற்க வொண்ணாதிறே. உண்ணாநிற்க, மிடற்றைப் பிடித்தாப்போலே யிருப்ப தொன்றிறே தொழுதுவைத்து விழாதேயொழியுமது " என்று பூர்வர் கள் நிர்வஹிக்கும்படி. " மதித்தானொரு ஸ்ரீவைஷ்ணவன் ஸ்ரீபாதத்தே தலைபடத்தெண்டனிட்டவன்று எனக்குண்டு பசிகெட்டாப்போலேயிரு க்கும் " என்றருளிச்செய்வர் ஜீயர். அன்றிக்கே, கிலாங்தோற்றும்படி. அவர்திருவடிகளிலே கைசென்று தாக்கும்படி விழுந்துகிடவுங்கோள். தீர்க்கப்ரணாமம்பண்ணுங்கோளென்றபடி. ( பணிமீர் ) அவனைக் கிட்டி நின்று, ப்ரணயரோஷத்தாலே " நீ, நான் " என்று சொல்லுமவையெ ல்லாம் சொல்லவொண்ணாதிறே இவர்கள் முன்பு. இவர்கள்பக்கலுபசா ரத்தில் குறையாமற்சொல்லுகிறபடி. ( அடியேன் ) உங்களைக்கொண்ட ழைப்பித்துக்கொள்ள விருக்கிறவவனுக்கன்று ; அத்தலையால் வந்தவிழ வு பரிஹரித்து அவனோடே சேர்க்கவிருக்கிற வுங்களுக்கடியே னென்கி றாள். " நித்யம்யதீயசரணௌஶரணம்மதீயம் " ( நித்யம்யதீயசரணௌஶ ரணம்மதீயம் ) என்கிறபடியே. ( அடியேன்றிறமே ) அவன்றிறம்போ லன்று. என்னிடையாட்டத்தைச்சொல்லுங்கோள். சொல்லிலொரு ம ஹாபாரதத்துக்குப் போருமாகாதே.................................*

## ஜீயர்அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (காதலித்யாதி) "கருநாராய், ஞாலமெல்லாமுண்ட நம் பெருமானைக்கண்டு - பணியீரடியேன்றிறமே" என்கிறபதங்களைக்கடாக்ஷித்தவதா ரிகை ( ஆர்த்தரக்ஷணத்திலேயித்யாதி ) கீழ்விட்டதூதர் வருவதற்குமுன்னே பின் னையும் தூதுவிடுவானென்னென்ன (முன்புபோகவித்யாதி)

"காதல்மென்பெடை" என்றத்தையும், "உடன்மேயும்" என்றத்தையுங்கூட்டிபாவம் (ஊர்த்வமித்யாதி) "ஜீவிதம்யாரயிஷ்யாமிமாஸம்தஶரதாத்மஜ । ஊர்த்வம்மாஸாந்நஜீவிஷ்யே ஸத்யேநாஹம்ப்ரவீமிதே" (ஜீவிதம்தாரயிஷ்யாமிமாஸம்தஶரதாத்மஜ । ஊர்த்வம்மாஸாந்நஜீவிஷ்யே ஸத்யேநாஹம்ப்ரவீமிதே) இதிஸுந்தரகாண்டே ஹநூமந்தம்ப்ரதிஸீதா. ஏதச்ச்ருத்வாராமঃ "சிரம்ஜீவதிவைதேஹீயதிமாஸம்தரிஷ்யதி । நஜீவேயம்க்ஷணமபிவிநாதாமஸிதேக்ஷணாம்" (சிரம்ஜீவதிவைதேஹீயதிமாஸம்தரிஷ்யதி ।நஜீவேயம்க்ஷணமபிவிநாதாமஸிதேக்ஷணும்) தன்னுடையநாயகன் "நஜீவேயம்க்ஷணமபி" (நஜீவேயம்க்ஷணமபி) என்னவில்லையோவென்ன (கடக்கவித்யாதி) சொலவுமாத்ரமேயாய்- "நஜீவேயம்க்ஷணமபி" (நஜீவேயம்க்ஷணமபி) என்கிற வுக்திமாத்ரமேயாயென்றபடி. "நாராய்" என்ற அசேதநஸமாதிக்குப்பொருள் (ஸர்வஜ்ஞர்களித்யாதி) ஸர்வஜ்ஞரோடே கலந்தால் தோஷமேது, இதுக்குக்குறையில்லாமையேதென்ன (பின்புகூடுகையித்யாதி) காதலுடைத்தென்றுதே, "காதல்மென்பெடை" என்று-காதலையிட்டு நிரூபித்ததுக்குபாவம் (நிரூபித்ரித்யாதிவாக்யத்வயம்) காதலுக்கவ்வருகொன்றின்றிக்கே யிருக்கையென்றது - காதலுக்கவ்வருகோ ராஶ்ரயமின்றிக்கேயிருக்கையென்றபடி. கலக்கவுங்கூடப்பொருதவென்றது - ஸம்ஶ்லேஷதசையில்விட்டணைக்கவும் பொருதவென்றபடி. அப்படியுண்டோவென்ன; "காதலர்தொடுவுழி தொடுவுழிநீங்கிவிடுவுழிவிடுவுழிபயத்தலானேன்" என்றுனிறே தமிழன். இந்தக்குறளுக்கு - "என்னீர்மைகண்டிரங்கி" என்கிறபாட்டிலே அர்த்தம்கண்டுகொள்வது. "உடன்மேயும்" என்றதுக்கு - பிரியாதேகூடியிருக்குமென்று சப்தார்த்தம் (கலக்கவுமித்யாதி) கலக்கவும்பொருதார்க்கென்றது - சம்ஶ்லேஷசமயத்தில் விட்டணைக்கவும் பொருதார்க்கென்றபடி. பேடையினுடைய காதலைச்சொன்னவநந்தரம், "உடன்மேயும்" என்கிறவளுடைய ஹார்த்தபாவம் (பேடையினித்யாதி) "உடன்மேயும்" என்றதுக்கு - கூடவர்த்திக்கையாகக் கீழருளிச்செய்து, கூடபுஜிக்கையாகவர்த்தாந்தரம் (இதம்மேத்யமித்யாதி) "இதம்மேத்யமிதம்ஸ்வாதுநிஷ்டப்தமிதமக்நிநா । ஏவமாஸ்தேஸதர்மாத்மாஸீதயாஸஹராகவঃ" (இதம்மேத்யமிதம்ஸ்வாதுப்ரபுல்லமிதமித்யபி-மதுனுப்தோமநுகாஃபம்பாநீரத்ருமேஷ்வஸௌ) இதிகிஷ்கிந்தாகாண்டே. "பெடையோடு" என்றவப்ரதாநே த்ருதீயைக்குபாவம் (அதுவிர்யாதி) பாவாந்தரம் (பேடையினித்யாதி) இப்போது, ப்ரதாநேத்ருதீயை. "உடன்மேயும்கருநாராய்" என்று ஸம்போதிக்கிறவளுடைய வெறுப்பாலுண்டான ஹார்த்தபாவம் (அதுக்கொருகுற்றமித்யாதி) குற்றமாவது - நானுபவாஸக்ருசையாயிருக்க, உங்களுக்காஹாரம்மிடற்றுக்குக்கிழிழிவதேயென்றபடி. இப்படிசொன்னால் கார்யம் செய்யுமோவென்ன (அடுகுவளத்தையித்யாதி) அடுகுவளம்-போனகப்பெட்டி. அடுகுவளத்தைத்தடுக்கிறப்போலே தடுக்கிறுளோவென்ன (தன்னூர்த்தத்வநியித்யாதி) "கரு" என்றதுக்குபாவம் (கூடத்திரிகையாலேயித்யாதி) நரை - ஜரை. திரையாவது-உடம்பில் நரம்புபுடைக்கை. இப்படிசொல்லுகிறவளுடைய ஹார்த்தபாவம் (பிரியாதார்க்கித்யாதி)

பலித்தபடியென்றது-தனக்குப்பலித்தபடியென்கை. ஏதத்விவரணம் (அங்குண்டானவித்யாதிவாக்யத்வயம்) அதாவது-திர்யக்காகையாலே யவற்றுக்கிடுபடுகைக்கு யோக்யதையில்லையென்றபடி. அப்படிதன்னுயகன் வைதிகக்ரியைகளிலேடு

பட்டிருக்குமோவென்ன; ப்ரமாணம் (தாயஜ்ஞேத்யாதி) " [illegible] " (தாயஜ்ஞவிவாஹேஷுஸமாஜேஷுமஹத்ஸுச । நத்ரக்ஷ்யாமஃபுநர்ஜாது தார்மிகம்ராமமந்தரா ) இத்யயோத்யாகாண்டேபௌராஃ. சடங்குகள்-க்ரியைகள். " மஹத்ஸு-ஸமாஜேஷு " என்கிறவிதுக்கு - தீர்க்கஸத்ரமென்றும் மஹாஸங்கமென்று மிரண்டுயோஜனை சொல்லலாயிருக்கையாலே, அத்தையருளிச்செய்கிறார் (தீர்க்கஸத்ரங்களிலேயித்யாதி) * சகாரத்தை - அறுக்த ஸமுச்சயபரமாக்கியர்த்தம் (யாவனொருவனித்யாதி) " [illegible] " (அந்தரா-மத்யே, தார்மிகம்) என்றதுக்குபாவம் ( தர்மஸம்ஸயங்களித்யாதி ) ஏற்றமேதென்ன (எளியாரையித்யாதி) கோயிற்சாந்து - ஶ்லாக்யமானசாந்து.

தளர்ந்தார்தாவளம்- தளர்ந்தாருக்குரக்ஷகம். அப்படிதளர்ந்தார்க்கு ரக்ஷகமோவென்ன (ஆபத்ஸகனிறேயென்று)

" திருவடிகளிலேவிழுந்தாலுண்டாப்போலே தாரகமாயிருக்கும் " என்னுமதுக்கைதிஹ்யம் (மதித்தானிந்யாதி) பலிதம் (தீர்க்கப்ராணமமித்யாதி) சொல்லீரொன்றுதே, "பணியீர்" என்றருளிச்செய்கிறதென்னென்ன (அவனைக்கிட்டியித்யாதி) அதாவது-நாயகனை ப்ரணயரோஷத்தாலே "நீ, நான்" என்று சொல்லுகிறுப்போலே, உத்தேஶ்யரான ததீயரையும் சொல்லீரொன்னவொண்ணுதென்றபடி. ததீயருக்கு சேஷமென்னுமதுக்கு ஸம்வாதம் ( நித்யம்யதீயேத்யாதி ) ஸ்தோத்ரே. " திறம் " என்று - இடையாட்டமாதல், வ்யஸநஸமூஹமாதல். " அடியேன்றிறம் " என்றதுக்கு வ்யாவர்த்யம் (அவன்றிறமித்யாதி) "திறம்" என்றதுக்கு - சமூஹமாகவர்த்தாந்தரம் விவக்ஷித்து, அந்தசமூஹத்தைப்பிரித்துச் சொல்லவொண்ணுதோவென்ன (சொல்லிலித்யாதி) இடையாட்டம் - வ்யாபாரம். கார்யமென்றபடி.

க்ரமேணுந்வயஃ.............................................................................................*

## மூன்றும்பாட்டு

திறங்களாகியெங்குஞ்செய்களூடுழல்புள்ளினங்காள்
சிறந்தசெல்வமல்குதிருவண்வண்டூருறையுங்
கறங்குசக்கரக்கைக்கனிவாய்ப்பெருமானைக்கண்
டிறங்கிநீர்தொழுதுபணியீரடியேனிடரே.

### ஆறுயிரப்படி.

( திறங்களாகி ) ஆஶ்ரிதவிரோதி நிரஸநார்த்தமானத்வனாயாலே சுழலாநின்ற திருவாழியைத் திருவணிகலனுகவுடையனாய், ஈஷதுந்மிஷதரவிந்த ஸத்ருஶதிவ்யவதநனை யெம்பெருமானைக் கண்டு இறங்கி நீர் தொழுது பணியீரடியேனிடரொன்கிறுள்................... ...............*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ரக்ஷகத்வபோக்யத்வங்களாலே ஸர்வாதிகனுனவனைக்குறித்து, ஸங்கமர்க வர்த்திக்கிற சிலபக்ஷிகளைப் போகவிடுகிறுள்.

திறங்களாகி - திறந்திறமாக. எங்கும் - சர்வதேசத்திலும். செய்களூடு - விளைநிலங்களுக்குள்ளே. உழல் - சஞ்சரிக்கிற. புள்ளினங்காள் - பக்ஷிஸங்கங்காள். சிறந்த - தன்னுடையபெருமைக்குத் தகுதியான. செல்வம் - ஐஸ்வர்யம். மல்கு - விஞ்சியிருக்கிற. திருவண்வண்டூர் - திருவண்வண்டூரிலே. உறையும் - நித்யவாசம்பண்ணுவானாய். கறங்கு - பகவதநுபவாநந்தத்தாலும் ஆஶ்ரிதவிரோதிநிரஸநோத்யோகத்தாலும் சுழன்றுவருகிற. சக்கரம் - திருவாழியையுடைய. கை - திருக்கையையுடையனாய். கனி - நிரதிசயபோக்யமான. வாய் - அதரசோபையையுடையனாய். பெருமானை - இந்த ரக்ஷகத்வபோக்யத்வங்களால்வந்த மேன்மையையுடையனானவனை. கண்டு - கண்டு. அம்மேன்மைக்கீடாக, நீர் - நீங்கள். இறங்கி - தாழ்ந்து. தொழுது - தொழுது. அடியேன் - என்காரியம் நீங்களிட்டவழக்காம்படி பரதந்த்ரையான வென்னுடைய. இடர் - விஶ்லேஷக்லேஶத்தை. பணியீர் - சொல்லவேணும்.

இத்தால் - கடகருடைய ஸமவாய முத்தேஶ்யமென்று தோற்றுகிறது....*

## ஈடு - மூன்றாம்பாட்டு.

திறந்திறமாக சஞ்சரிக்கிற புள்ளினங்களைக்கண்டு, என் வ்யஸநத்தை யறிவியுங்கோளென்கிறாள்.

( திறங்களாகி ) திரள்திரளாக. இவை திரள்திரளாய்த்திரிகிறது நங்காரியம்செய்து தலைக்கட்டவென்றிருக்கிறாள். * வாயுந்திரையுகளில் வாசனையாலே, தன்னார்த்திகண்டு பொறுக்கமாட்டாமே படுகிறனவாகக் கொண்டு நினைத்திருக்கிறாள். அங்கு - தந்தாமபிமதம் பெறாமையாலே நோவுபடுகிறன வென்றிருந்தாள், இங்கு - தன்னிழவுகண்டு பொறுக்கமாட்டாமையாலே நோவுபடுகிறனவென்றிருக்கிறாள். இங்ஙன்கூடுமோ வென்னில்; “இவைபக்ஷிகள், நங்காரியம் செய்து தலைக்கட்டமாட்டாது” என்னுமறிவின்றிக்கே யொழிந்தபின்பு, இதுவுங்கூடத் தட்டில்லை. (திறங்களாகியெங்கும்) பிராட்டியைப்பிரிந்து பெருமாள் நோவுபடுகிற சமயத்திலே முதலிகளடங்கலும் திரண்டு நாலுதிக்கும் புகுந்து அங்குமிங்கும் திரிந்தாப்போலேகாணு மிவையுந்திரிகிறபடி. ( எங்கும் )தேடினால் காண்கைக்கு சம்பாவனையில்லாதவிட மெங்கும்புக்குத்தேடாநின்றன. ஸ்வயம்ப்ரபையுடைய பிலமகப்படப்புக்குத் தேடினார்களிறே முதலிகள். ( உழல்புள்ளினங்காள் ) காணசம்பாவனையில்லாதவிடமெங்கும் புக்குத்தேடுவது, காணப்பெறுதொழிவது, அநஶநத்திலே தீக்ஷிப்பதாய்க்கொண்டு பட்டபாடெல்லாம் படுகிறனவாயிற்று. ராமாவதாரத்துக்குப் பின்பு பிரிந்தாரைச்சேர்விடுகை திர்யக்குக்களுக்குப் பணியென்று காணும் வாசனை. ( சிறந்தவித்யாதி ) வாராமை அவன் குற்றமன்று கிடிகோள், அவ்வூரில் ஸம்ருத்திவேறேயும் சிலரை நினைக்கவொட்டுமோ. ( சிறந்தசெல்வம்மல்கு ) மிக்கவைஶ்வர்யம் கரைபுரளும்படியான வூர். ( திருவண்வண்டூருறையும் ) அவதாரவ்யாவ்ருத்தியும், பரமபதவ்யாவ்ருத்தியும். ( சிறந்தசெல்வம் ) தகுதியானவைஶ்வர்யம். கலந்துகூடவி

ருக்கிறபோது "நீயேயெனக்கெல்லாவைச்வர்யமும்" என்றுசொல்லிவைத்து, இப்போது தனக்கென்ன வொரு சம்பத்துண்டாயிருக்கிறபடியெங்ஙனேயென்றிருக்கிறாள். திருவண்வண்டுறொன்கையாலே - பரமபதவ்யாவ்ருத்தி. உறையுமென்கையாலே - அவதாரவ்யாவ்ருத்தி. "नोपजनं स्मरन्निदं शरीरम्" (நோபஜநம்ஸ்மரந்நிதம்ஶரீரம்) என்னுமாபோலே, இங்குத்தை யைச்வர்யமு மிவனைமறக்கப்பண்ணிற்றிறே.

(கறங்குசக்கரக்கை) ப்ரதிகூல நிரஸந த்வரையாலே சுழன்றுவாராநின்றுள்ள திருவாழியைக் கையிலேயுடையவனான சர்வேச்வரனையன்றிக்கே, இத்தலையைத் தோற்பித்துக்கொண்டோமென்னும் மேன்மைதோற்ற, ஆயுதத்தைச் சுழற்றி ஸ்மிதம்பண்ணியிருக்கிறபடி. (கனிவாய்ப்பெருமானைக்கண்டு) அகவாயில் ஹர்ஷந்தோற்ற ஸ்மிதம்பண்ணி அத்தாலே யென்னை யெழுதிக்கொண்டவனைக்கண்டு. அவர்க்குப் புறம்பே யைச்வர்யமுண்டானாலு மெங்களுக்குத் தம்மையொழிந்த வைச்வர்யமில்லைகிடீர். * திருவுக்கும் திருவாகியசெல்வனிறே. (இறங்கிநீர்தொழுதுபணியீர்) தொழுங்கோளென்றாள்; தொழுதவளவிலே நில்லாதே; முதலியார்கிடீகோள், பிரம்புகள் படாமே கடுகவிழுந்து கொடுநில்லுங்கோளென்றாள்; விழாநின்றாலு மகவாய்சோதியாநிற்பர், அபிமாநத்தைப்பொகட்டுக்கொண்டு விழுங்கோளென்கிறாள். "निभृतः प्रणतः प्रह्वः" (நிப்ருதஃப்ரணதஃப்ரஹ்வஃ) என்னுமாபோலே. (பணியீர்) இத்தலையில் நின்றும் சென்றாரை யவன்சொல்லும்படியேயாகிலும்சொல்லவேணுமே. தன்னை யொழிந்தாரடங்கலும் தன்னைச் சொல்லும்படியை, இத்தலையில் நின்றும் சென்றாரைச்சொல்லாநிற்குமவன். ஸ்வரூபத்தால் சொல்லுமவை யிவையானால், ப்ரணயித்வத்தால் வருமதுசொல்லவேண்டாவிறே. (அடியேனிடர் - பணியீர்) அவனறியாதவை சொல்லிக்கொடுக்கவேணுமே. அறிந்தானாகில், ஆள்விடப்பார்த்திருக்குமோ. (அடியேனிடர்) இரண்டுதலைக்கும் கலவியொத்திருக்க, இத்தலைக்குவந்தவிடரை யறிவியுங்கோள்........................................... .........*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு. (திறங்களித்யாதி) "திறங்களாகி" இத்யாதய, "புள்ளினங்காள், பணியீர், இடரோ" என்கிற பதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை (திறந்திறமாகவித்யாதி)

ஹார்த்தபாவம் (இரைதிரளித்யாதி) இரைதேடித்திரிகிறவற்றை - "தன்கார்யம்செய்து தலைக்கட்டுகைக்காகத் திரளவிருக்கிறது" என்று நினைத்திருக்கைக்கடியேதென்ன (வாயுந்திரையித்யாதி) அங்குமிங்கும் வாசியில்லையோ, * வாயுந்திரையில் - பகவதலாபத்தாலே நோவுபடுகிறனவாக நினைத்தாளொழிய, தன்னார்த்திகண்டு நோவுபடுகிறனவாக நினைத்தாளோவென்ன (அங்குத்தந்தாமித்யாதி) இத்தால் - இரண்டிடத்திலும் வாசியுண்டேயாகிலும், ப்ரமிக்கிற வாகாரம் துல்யமென்றபடி. இங்ஙன்கூடுமோவென்னிலென்றது-தன்கார்யம்செய்யச் சஞ்சரிக்கிற

ணவாக நினைக்கக் கூடுமோவென்னிலென்றபடி. "எங்கும்" என்கிறபதத்துக்கும், "திறம்" என்கிறபதத்துக்கும் த்ருஷ்டாந்தம் (பிராட்டியையித்யாதி) "எங்கும்" என்றதின் சரமாவதி (தேடினுலித்யாதி) இப்படி தேடினபே ருண்டோ வென்ன (ஸ்வயம்ப்ரபையித்யாதி) ஸ்வயம்ப்ரபையென்கிறவள் - மேரு ஸாவர்ணியினுடையபெண். "உழல்" என்றதுக்கு பாவம் (காணஸம்பாவனையித்யாதி) யோக்யதையுள்ளவிடத்தேயன்ரு ப்ராந்தியுமுதிப்பது. திர்யக்குக்களுக்குத் தன்கார்யம்செய்ய யோக்யதையுண்டோவென்ன (ராமாவதாரத்துக்கித்யாதி)

உன்னைவிட்டுப்போனவன் நாங்கள் சொன்னமாத்ரத்திலேவருவனுேவென்ன (வாராமையித்யாதி) சிறக்கை - மிகுதியாதல், தகுதியாதல். பட்டர் நிர்வாஹத்துக்குச்சேர ஹார்த்தபாவம் (கலந்தித்யாதி) "அவதாரவ்யாவ்ருத்தியும்" இத்யாதிவாக்யவிவரணம் (திருவண்வண்டூரித்யாதி வாக்யத்வயமும்) "அவ்வூரில் ஸம்ருத்திவேறேயும் சிலவை" இத்யாதிவாக்யவிவரணம் (நோபஜாமித்யாதி)

பூர்வர்கள் நிர்வாஹத்திலேபாவம் (ப்ரதிகூலேத்யாதி) பட்டர்நிர்வாஹத்திலேபாவம் (அன்றிக்கே யித்தலையையித்யாதி) "பெருமான்" என்றதுக்கு ஹார்த்தபாவம் (அவர்க்குப்புறம்பேயித்யாதி) இவளுக்கைஶ்வர்யமவனுேவென்ன (திருவுக்குமித்யாதி) ஸ்வவ்யதிரிக்தருடைய சம்பத்துக்கு நிதாநபூதையானபிராட்டிக்கும் சம்பத்தானவனேயென்றபடி. திருமொழி ஏழாம்பத்து ஏழாந்திருமொழி முதற்பாட்டு.

கீழ்ப்பாட்டுக்களில், "கைகள்கூப்பி," "பாதங்கைதொழுது" என்றதுக்கும், "இறங்கிநீர்தொழுது" என்றதுக்கும் வாசியேதென்ன (தொழுங்கோளித்யாதி) "இறங்கி" என்று - மாநஸப்ரணுமத்தைச்சொல்லுகிறது. மூன்றுபாட்டிலும்சொன்ன ப்ரணுமத்ரயத்துக்கு, பட்டர் நிர்வாஹாநுகுணமாகத் தலைக்கட்டின வநந்தரம், பூர்வர்கள் நிர்வாஹாநுகுணமாக வருளிச்செய்கிருர் (நிப்ருதஇத்யாதி) "நிப்ருதஃ" என்று - ஒடுக்கமாய், அஞ்சலியையும்; "ப்ரணதஃ" என்று - சாஷ்டாங்கப்ரணுமத்தையும், "ப்ரஹ்வஃ" என்று - மாநஸப்ரணுமத்தையும்சொல்லுகிறது. ஜநககுலஸுந்தரியானதான், திர்யக்குக்களை "பணியீர்"என்னலாமோவென்ன (இத்தலையில்நின்றுமித்யாதி) அவன்சொல்லுகிறதேதென்ன (தன்னையொழிந்தாரித்யாதி) ஸ்வவ்யதிரிக்தர் தன்னைச்சொல்லும்வார்த்தையை, தூதுவந்தவர்களுக்கு சர்வாதிகனவன் சொல்லக்கூடுமோவென்ன (ஸ்வரூபத்தாலித்யாதி) அதாவது - சேஷிவிஷயத்தில் பயத்தாலே சேஷபூதன்சொல்லுமவை யிவையானுல், சேஷபூதனிடத்தில் ஸ்நேஹத்தாலே சொல்லுமது பூஜ்யோக்தியாகவேணுமென்று மதுகிம்புநர்ந்யாயஸித்தமென்றபடி.. "பணியீர்" என்றுசொல்லுகிறதென், அவனறியானுேவென்ன (அவனறியாதவையித்யாதி) ஸர்வஜ்ஞனுக் கஜ்ஞாதமுண்டோவென்ன (அறிந்தாஞுகிலித்யாதி) "அடியேனிடர்" என்றதுக்குபாவம் (இரண்டுதலைக்குமித்யாதி) "𑌵𑍃𑌕𑍍𑌷𑌮𑍂𑌲𑍇 𑌨𑌿𑌰𑌾𑌨𑌨𑍍𑌦𑌾𑌂 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑍀𑌭𑌿𑌸𑍍𑌸𑌮𑌾𑌵𑍃𑌤𑌾𑌮𑍍 । 𑌨𑌿𑌭𑍃𑌤𑌃 𑌪𑍍𑌰𑌣𑌤𑌃 𑌪𑍍𑌰𑌹𑍍𑌵𑌸𑍍𑌸𑍋𑌽𑌭𑌿𑌗𑌮𑍍𑌯𑌾𑌭𑌿𑌵𑌾𑌦𑍍𑌯 𑌚" (வ்ருக்ஷமூலேநிராநந்தாம் ராக்ஷஸீபிஸ்ஸமாவ்ருதாம் । நிப்ருதஃப்ரணதஃப்ரஹ்வஸ்ஸோபிகம்யாபிவாத்யச) இதிராவணவதாநந்தரம் ஹநுமதஸ்ஸீதாபிவந்தநம்.

க்ரமேணுர்வயஃ ...... ..........................................................................*

## நான்காம்பாட்டு

இடரில்போகமூழ்கியிணைந்தாடுமடவன்னங்காள்
விடலில்வேதவொலிமுழங்குந்தண்டிருவண்வண்டூர்க்
கடன்மேனிப்பிரான்கண்ணனைநெடுமாலைக்கண்
டுடலநைந்தொருத்தியுருகுமென்றுணர்த்துமினே.

### ஆறாயிரப்படி.

(இடரில்) சௌந்தர்ய சௌலப்ய வாத்ஸல்ய கல்யாணகுணகணநிதியான வவனைக்கண்டு, ஐயோ!, ஒருத்திபடும்பாடே இதுவென்று சொல்லுங்கோளென்று சிலவன்னங்களைக்குறித்துச் சொல்லுகிறாள்...*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், அபிரூபனா யாஶ்ரிதபவ்யனானவனைக்குறித்துச் சிலவன்னங்களைப்போகவிடுகிறாள்.

இடர்-விஶ்லேஷப்ரஸங்கம். இல் - இல்லாதபடியான. போகம் - போகத்திலே. மூழ்கி-அவகாஹித்து. இணைந்து-பிரியாதே. ஆடும் - நடையாடுவதாய். மடம்-பரஸ்பரபவ்யங்களான. அன்னங்காள்-அன்னங்காள். விடர்-விச்சேதம். இல்-இல்லாத. வேதவொலி-வேதகோஷமானது. முழங்கும்-முழங்கும்படியாய். தண்-ஶ்ரமஹரமான. திருவண்வண்டூர்-திருவண்வண்டூரிலே வர்த்திப்பானாய். கடல் - கடல்போலே தர்ஶநீயமான. மேனி - வடிவை. பிரான் - எனக்குபகரிப்பானாய். கண்ணனை-நானிட்டவழக்காம்படி யெனக்குபவ்யனாய். நெடு - அந்தபவ்யதைக்கெல்லைகாணவொண்ணாதபடி. மாலை-மிகவும்பெரியனானவனை. கண்டு-கண்டு. ஒருத்தி - ஒருத்தி. உடலம்-தன்ஶரீரம். நைந்து-சிதிலமாய். உருகும் - உருகாநின்றாள். என்று-என்று. உணர்த்துமின்-அறிவியுங்கோள்.

இத்தால் - கடகருடைய, “𑌤𑍁𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌚 𑌰𑌮𑌨𑍍𑌤𑌿 𑌚” (துஷ்யந்திசரமந்தி ச) என்கிற பரஸ்பரபகவதநுபவ சௌக்யமும், அந்யோந்யபவ்யதையு முத்தேஶ்யமென்று கருத்து. ....................................................................*

### ஈடு - நான்காம்பாட்டு.

சில அன்னங்களைக்குறித்து, சரீரம்கட்டழிந்து சிதிலையாகாநின்றாளென்று சொல்லுங்கோளென்கிறாள்.

( இடரில்போகம்மூழ்கி ) விஶ்லேஷகந்தமில்லாத சம்ஶ்லேஷரஸத்திலே யவகாஹித்து. நான்செய்தபடிசெய்ய, இப்படியே யிருப்பாரையும் காணப்பெற்றோமிறே லோகத்திலே. போகோபக்ரமத்திலே விஶ்லேஷம்பிறந்ததிறே தனக்கு. வீட்டில் ஆய்ச்சிக்கு மய்யருக்கும் பரதந்த்ரராகவேணும், நாடுகேட்கவேணுமென்கிற அந்யபரதையெல்லாந் தீரும்படி யேகாந்தஸ்த்தலம் தேடிபுஜிக்கப்போக, அங்கேராவணன்வந்து தோற்றினானிறே தனக்கு; அதில்லையேயிவற்றுக்கு. (இடரில்போகம்மூ

ழ்கி) ஸம்ஶ்லேஷத்துக்குப் பாரித்துக்கொண்டிருந்து விஶ்லேஷத்தோடே தலைக்கட்டு மென்னைப்போலே யாகாதொழியப்பெறுவதே. (வாழ்கி) தறைகாண்கிறனவில்லை யின்னம். (இணைந்தாடும் மடவன்னங்காள்) ஒருதலைகளிக்க, ஒருதலை துடிக்கவேண்டாதபடியாயிருக்கை. ஒன்றின்நினைவுக்கொன்று காலெடுக்கவமைந்திருக்கை. (மடவன்னங்காள்) ஒன்றுக்குச்சொல்லுகிற ஸ்வபாவமிரண்டுக்கு முண்டாயிருக்கை. மடப்பமுள்ளது பேடைக்கேயாயிருக்க, இரண்டுக்குமொக்கச்சொல்லுகிறது ஸம்ஶ்லேஷத்தால்வந்த துவட்சியிரண்டுக்கு மொத்திருக்கை. (விடியல்வேதவொலிமுழங்கும்) அத்யயநம் மறுத்ததிறே யிவ்வூர்கிடக்கிறது. ஜநககுலமிறே ஓதுவாரின்றிக்கே கிடக்கிறது. "கர்மணைவஹி" என்கிறதிறே. (முழங்கும்) மற்றோரடையாளஞ்சொல்லவேணுமோ, புறப்பட்டவாறே வேதகோஷம் வழிகாட்டுகிறதிறே. வேதமார்க்காநுசாரிகளன்றோ நீங்கள். (கடல்மேனிப்பிரான்) கடல்போலே ஶ்ரமஹரமான வடிவையுடையனாய், அவ்வடிவைத்தாழநின் றித்தலைக்கு முற்றூட்டாகபுஜிப்பித்து, பின்னையும் "ஒன்றும்செய்யப்பெற்றிலோம்" என்னும் வ்யாமோஹத்தையுடையவன்.அன்றிக்கே, குளிர்ந்தவடிவை பவ்யனைப்போலேநின்று புஜிப்பித்து, இப்போதெட்டாதபடி யிருக்கிறவன். அன்றுதானும் தனக்கு வேண்டுவதாய்ச்செய்தானல்லன், இத்தலையையழிக்கைக்காகச் செய்தானித்தனை; அன்றுவேண்டியிருந்தானாகில் இன்றும்வேண்டியிரானோ. (உடலம்நைந்து) "நெஞ்சிலே சிறிதுநோவுபிறந்த வளவேயாகில், சரீரத்தேயொருவாட்டம் வருவதற்குமுன்னேசென்று கைக்கொள்ளுகிறோம்" என்றிருக்கவேண்டா. (உடலம்நைந்து) தனித்தனியேசைதந்யம்பெற்றழியவல்லவுடம்பிறே. அவ்வுடம்போடே யணைந்துபிரிந்த விவ்வுடம்புகொண்டு பிழைக்கவொண்ணாது என்னுமிடம் தாமேயறிவரிறே. (ஒருத்தி) "இன்னகாட்டிலே மான்பேடைகிடந் துழற்றுகின்றது" என்றால், எய்தவன்கை யுணருமிறே. (ஒருத்தியுருகும) எதிர்த்தலைக்கிதில்லையென்னுமிட மறிவியுங்கோள். (உணர்த்துமினே) தாமித்தலையைமறந்தமையை ஸ்மரிப்பியுங்கோள். உணர்த்தியற்றாரை யுணர்த்தவேணுமே. அறியாதாரை யறிவிக்கை அன்னத்துக்கே பணியிறே; பண்டும் * பிறங்கிருணிறங்கெட அன்னமாயிறே அருமறைபயந்தது. (ஒருத்தியுருகுமென்றுணர்த்துமினே) ஒருத்திபடும்பாடே என்று சொல்லுங்கோள்.......................................................................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (இடரிலித்யாதி) "அன்னங்காள், உடலம்நைந்தொருத்தி" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (சிலவன்னங்களையித்யாதி)

சப்தார்த்தம் (விஶ்லேஷகந்தமித்யாதி) இதுக்கு ஹார்த்தபாவம் (நான்செய்தபடியித்யாதி) அதாவது-விஶ்லேஷித்திருக்கிற வுங்களைக்கூட்டிப்பின்னை யென

கார்யம் பார்க்கவேண்டியிராதே, ஏற்கவேகூடியிருக்கப்பெற்றதேயென்றபடி. தானப்படியிருக்கவில்லையோவென்ன (போகோபக்ரமத்திலேயித்யாதி) போகோபக்ரமத்திலே யெங்குவிஸ்லேஷம்பிறந்ததென்ன ( வீட்டிலித்யாதி ) நாடுகேட்கவேணும்-நாட்டில் வ்ருத்தாந்தம் கேட்கவேணும். “ நான்செய்தபடி ” இத்யாதிவாக்யவிவரணம் (சம்ஸ்லேஷத்துக்கித்யாதி) வர்த்தமாநார்த்தம் (தறையித்யாதி) “ இணைந்தாடும் ” என்றதுக்கு - காயிகஸம்ஸ்லேஷமாகவர்த்தம் (ஒருதலையித்யாதி) பிரியாதேகூடி வர்த்திக்கிறவென்று சப்தார்த்தம். இருவரு மேகஹ்ருயதராய், ஒன்றுக்கொன்று முற்கோலி நினைவறிந்து பரிமாறுகிற வென்றர்த்தாந்தரம் ( ஒன்றின்நினைவுக்கித்யாதி) அன்றிக்கே, கீழ்வாக்யவிவரணமாதல். காலெடுக்கை-அநுமதிபண்ணுகை. துவட்சிபேடைக்கொழியச் சேவலுக்குண்டோவென்ன ( மடப்பமுள்ளதித்யாதி) அதாவது-ஸ்த்ரீக்கே துவட்சிஸ்வபாவமாயிருக்கச்செய்தேயும், சம்ஸ்லேஷத்தாலே புருஷனுக்குமுண்டாயிருக்கிறதென்றபடி.

“ அங்குவிடாதே வேதவொலிமுழங்கும் ” என்கையாலே-இங்குவிச்சிந்நமாயிருக்கிறதென்று ஸித்தவத்கரித்தருளிச்செய்கிறார் ( அத்யயநம்மறுத்தித்யாதி ) இவ்வூர் - தானிருக்கிறவூர். மறுத்திறே இவ்வூர்கிடக்கிறதென்கையாலே - இதுதான் ஸதாத்யயந சீலமாயிருக்குமென்னுமத்தை ஹ்ருதீகரித்துக்கொண்டு, இப்படியிருக்கிற விது நம்மார்த்திகண்டு பொறுக்கமாட்டாமலிறே யத்யயநமின்றிக்கேயிருக்கிறதென்றீடுபடுகிறாள் (ஜநககுலமித்யாதி) ஜநககுலத்துக்கேற்றமேதென்ன (கர்மணைவஹீத்யாதி) “ 𑌕𑌰𑍍𑌮𑌣𑍈𑌵 𑌹𑌿 𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌮𑌾𑌸𑍍𑌥𑌿𑌤𑌾 𑌜𑌨𑌕𑌾𑌦𑌯𑌃 ” ( கர்மணைவ ஹிஸம்ஸித்திமாஸ்த்திதாஜநகாதய: ) இதிபகவத்கீதாயாம். நாங்கள்போகிறவூருக்கடையாளமேதென்ன (மற்றூரித்யாதி) விவரணம் (வேதமார்க்கேத்யாதி) அதாவது-வேதத்துக்காக மதுகைடபர்களைத் தேடித்திரிகிற ஹம்ஸரூபியானவனோடு ஸஜாதீயரன்றோ வென்றபடி.

நிர்வாஹத்வயாநுகுணமாக வர்த்தத்வயம் ( கடல்போலே யித்யாதிவாக்யத்வயத்தாலே ) “ கடல்மேனி-கண்ணபிரான்-நெடுமால் ” என்றந்வயம். பட்டர்நிர்வாஹமான விரண்டாவதுக்கு, நெடுமாலென்றது-பெரியோனென்றபடி.. இப்போதெட்டாதபடியிருக்கிறவனன்று கலக்கக்கூடுமோவென்ன ( அன்றுதானுமித்யாதி)

அசேதநமான சரீரம் நையக்கூடுமோவென்ன; * முடியானேயிற்கரணங்களாகையாலே கூடுமென்கிறார் (தனித்தனியேயித்யாதி) உடலம்நைகிறதென், தரித்திருந்தாலோவென்ன (அவ்வுடம்போடேயித்யாதி) அவ்வுடம்பென்றது - “ கடல் மேனி ” என்றத்தைப்பற்ற. இன்னொன்னுமல், “ ஒருத்தி ” என்றால் தெரியுமோவென்ன (இன்னகாட்டிலேயித்யாதி) உழற்றாநின்றது - க்லேஸியாநின்றது. “ ஒருத்தி ” என்றதுக்கர்த்தாந்தரம் ( எதிர்த்தலைக்கித்யாதி ) ஸர்வஜ்ஞனுக்குணர்த்தவேணுமோவென்ன (தாமித்தலையையித்யாதி) விவரணம் ( உணர்த்தியித்யாதி ) எங்களுக்கிதுவேயோ ப்ரயோஜநமென்ன (அறியாதாளையித்யாதி) அன்னமப்படியறிவித்ததோவென்ன; அறிவித்ததுக்குப்ரமாணம் (பிறங்கிருளித்யாதி) (பிறங்கிருணிறங்கெடவொருநா ளன்னமாயன்றங்கருமறைபயந்தான்)மிக்கதமஸ்ஸு நிறங்கெடும்படி யொருநாள் ஹம்ஸமாய், அன்று பெறுதற்கரிய வேதங்களையுண்டாக்கினானென்றபடி. திருமொழி அஞ்சாம்பத்து ஏழாந்திருமொழி மூன்றாம்பாட்டு. “ ஒருத்தி ” என்றதுக்கு த்ருதீயதாத்பர்யம் ( ஒருத்திபடும்பாடேயித்யாதி ) து:கிதையானபடியைச் சொல்லுங்கோளென்றபடி.

க்ரமேணாந்வய:..................................................................*

# ஐந்தாம்பாட்டு.

உணர்த்தலூட லுணர்ந்துடன்மேயுமட வன்னங்கா
டிணர்த்தவண்டல்கண்மேற்சங்குசேருந்திருவண்வண்டூர்ப்
புணர்த்தபூந்தண்டுழாய்முடிநம்பெருமானைக்கண்டு
புணர்த்தகையினராயடியேனுக்கும்போற்றுமினே.

## ஆறாயிரப்படி.

(உணர்த்தல்) நாங்களு முன்றிறமாகச் சொல்லும் வார்த்தையை யவன் கேட்டருளாதொழியிற் செய்வதென் னென்னில்; உங்களுடையசேவல்களுங்களோடுள்ள வூடலாலே தொழுதுங்களை யூடல்தீர்த்தாப்போலே, நீங்களுமெனக்காக அவனைத்தொழுது என்னோடுள்ள வூடல் தீர்த்துப் பின்னை யென்திறம்சொல்லுவது. உங்களுக்குத்தானித்தனை வருத்தம் வேண்டுவதில்லை, அவன்றா னித்தனைபோ திங்கெழுந்தருளுகைக்காக வொப்பித்தருளாநிற்கும், சொல்லுமித்தனையே வேண்டுவதென்கிறாள்.................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், போக்யத்வ சேஷித்வபூர்ணனான சர்வாதிகனைக்குறித்துப்பின்னும் சிலவன்னங்களைப் போக விடுகிறாள்.

உணர்த்தல் - உணர்த்தலிலருமையையும். ஊடல் - ஊடலில் க்லேஶத்தையும். உணர்ந்து - உணர்ந்து. உடன் - பிரியாதேகூட. மேயும் - மேய்வனவாய். மடம் - ஒன்றுக் கொன்று துவட்சியை யுடையவாயிருக்கிற. அன்னங்காள் - அன்னங்காள். திணர்த்த - கதிப்பையுடைத்தான. வண்டல்கள்மேல் - வண்டல் மணல்களின்மேலே. சங்கு - சங்குகளானவை. சேரும் - சேருகிற. திருவண்வண்டூர்-திருவண்வண்டூரிலே. புணர்த்த - தொடுக்கப்பட்ட. பூ - அழகிய. தண்டுழாய் - செவ்வித்திருத்துழாயையுடைய. முடி - திருமுடியையுடையனான. நம் - நம்முடைய. பெருமானை - ஸ்வாமியை. கண்டு - கண்டு. புணர்த்த - அஞ்சலிபந்தம்பண்ணின. கையினராய் - கையை யுடையீராய். அடியேனுக்கும் - உங்களுக்கு சேஷபூதையானவெனக்காகவும். போற்றுமின் - ஸ்தோத்ர ரூபமாம்படி கௌரவித்து வார்த்தை சொல்லவேணும்.

இத்தால் - கடகருடைய பரஸ்பரவிஶ்லேஷபீருத்வமு முத்தேஶ்யமென்று கருத்து.................................................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

திரியவும் சில அன்னங்களைக்குறித்து; அத்தேசம் புக்காரைமறப்பிக்கும், நீங்கள்புக்கா லென்னையும் நினையுங்கோளென்கிறாள்.

(உணர்த்தலித்யாதி) உணர்த்தலையு மூடலையு முணர்ந்து உடனே திரிகிற அன்னங்காள். பிரிந்தால் பின்புவரும் துஃகங்களெல்லா மநு

சந்தித்துக் கூடத் திரியாநின்றன. இனித்தான், போகப்ரகாரந்தான் மூ ன்றுவகைப்பட்டாயிற்றிருப்பது. அவையாவன– "ஊடலுணர்தல் புண ர்தலிவைமூன்றும் - காமத்தாற்பெற்றபயன்" என்று மூன்றையும் ப்ர யோஜநமாகச் சொன்னார்கள் தமிழர். இதிலே ஊடலாவது - எதிர்த்த லையோடே கூடினால் அஹேதுகமாக விளைவதொன்று. அதுதான் - "எ ன்னை யொழியக்குளித்தாய், என்னையொழியப் பூவைப்பார்த்தாய், உன் னுடம்பு பூநாறிற்று" என்றாப்போலே வருமவை. உணர்த்தலாவது - "'உனக்கென்றுகுளித்தேன்" என்கையும், "'உனக்காம்' என்றுபார்த் தேன்" என்கையும், "உன்வரவுக்கொப்பித்தேன்" என்றாப்போலே சொல்லுமிவை. இவையிரண்டினநந்தரத்தே வருவது கலவி. இவையெ ல்லாமுண்டிறே யிவளுடையவனுக்கும். (உணர்த்தலூட லுணர்ந்துட ன்மேயும்) பிரியவல்லாரார், பின்பு நோவுபடவல்லாரார், பின்பு கெய் யிலே கையிடவல்லாராரொன்று கூடத்திரியாநிற்கும். "குற்றவாளராகி லிறே பின்பு பொறுப்பித்துக்கொள்ளவேண்டுவது" என்றுகாணுமிவற் றினுடைய சித்தாந்தம். (உடன்மேயும்) * "ஊஹஂஒஷய ஒிஷஂஸ்வாஹு" (இதம்மேத்யமிதம்ஸ்வாது) என்னாநின்றன. ஊடல், உணர்தல், புண ர்தலென்கிற மூன்றிலும்; இவற்றுக்குப் புணர்தலேயாய்ச்செல்லுகிறப டி. ஒருகலத்திலே யொக்கவுண்டு திரிவாரைப்போலே. ஒன்றையொன் றகன்று இரண்டுங்கூடப் பட்டினிகிடக்கையன்றிக்கே யிருக்கை. விழுக் காட்டி லுணரப்பெறாமை கெட்டோமென்கிறாள். அதாவது - "ஸம்ப்ர லேஷவர்த்தகங்காணிவ்விப்ரலேஷம்" என்றால், "அவ்வளவு மாறியிரு க்கவல்லார்க்கிறே பின்பு போகஸம்ருத்திவேண்டுவது" என்னப்பெற்றி லேன். விவேகமில்லாதவிவை விவேகபலம்பெற்றன, அதுடைய நான் பெற்றிலேன். (மடவன்னங்காள்) போகத்தால் வந்த துவட்சி யடங்க லும் வடிவிலே தோற்றவிருக்கை. (உணர்த்தலித்யாதி) வருவதறிந்து பரிஹரித்திருப்பார், விழுக்காடறியாதே அகப்பட்டார் காரியம் செய்து தலைக்கட்டவேண்டாவோ. இந்நிர்த்தேசத்தாலும் – இத் திருவாய்மொ ழியடங்கலும் ஊடல் கர்ப்பிக்கிறமை தோற்றுகிறது. (திணர்த்தவித்யா தி) வாராதொழிந்தவிடம் அவன்குற்றமன்று கிடிகோள். செருமினவ ண்டல்கள்மேலே. அழுக்குக்கிறாய்க்கக்கடவ சங்குகளானவை நீருறுத் தினவாறே கொழுத்தவண்டல்களிலே சேராநிற்கும். (சங்குசேரும்) அ சேதநங்களுங்கூடக் கால்வாங்கமாட்டாத தேசங்கிடிகோள். (சேரும்) வேறுபோக்கிடமின்றிக்கேயிருக்கை. "நவுநராவர்தெ" (நசபுந ராவர்த்ததே) என்னும்படியே மீட்சியின்றிக்கேயிருக்கை. மார்த்தவத் தாலும் குளிர்த்தியாலும் வேறொன்றை நினைக்கவொட்டாதிருக்கை. (சங்குசேரும்) ப்ரமாணபரதந்த்ர ரல்லாதாரையும் மீளவொட்டாததே சங்கிடிகோள். வெள்ளைகளையுங்கூடக் காற்கட்டுகிறதிறே மண்பாடு. (பு ணர்த்தவித்யாதி) தொடுக்கப்பட்டு தர்ஶநீயமாய் ப்ரமஹரமான திரு

த்துழாயைத்திருமுடியிலே யுடையவனும், அத்தாலேயென்னை யநங்யார் ஹை யாக்கினவனேக்கண்டு. நீங்கள்சென்றறிவிக்கு மித்தனையேவேண்டு வது, இங்குத்தைக்குவருகைக் சொப்பித்தபடியே யிருக்கிறவன். அன்றி யே, இத்தலையைத்தோற்பித்த வேண்டப்பாடு தோற்றும்படி வளையம் வைத்து முதன்மைகொண்டாடியிருக்கிறவன். புணர்த்த-சேர்த்த. (பூந் தண்டுழாய்முடி நம்பெருமானேக்கண்டு) தம்மொப்பனையையும் முதன் மையையும் நம்மோடேகாட்டியிருக்கிறவனேக்கண்டு. (புணர்த்தகையின ராய்) அங்கேசென்றால் தொழப்பார்த்திராதே, கையொத்துச்செல்லு ங்கோள் கிடிகோள். வழியேபிடித்துத் தொழுதுகொடுபோங்கோள்; இ ல்லையாகில் "ஜவஸாஃப்ர திவெஷிரெ" (அவஸாஃப்ரதிபேதிரே) என் கிறகண்ணழிவிலே சிலவெழுதுவர்கிடிகோள். (அடியேனுக்கும் போற் றுமினே) (உங்கள்பரிகரமான வென்னையும் நினையுங்கோள். போற்று கையாவது - கௌரவித்துச்சொல்லுகை. தொழுதகைகளும் நீங்களுமா யெனக்காகவு மொருவார்த்தைசொல்லவேணும்.) நீங்களு மவனைப்போ லே செய்யாதே கிடிகோள், அங்கேபுக்காலென்னையும் நினைக்கவேணு ம். அதாவது - புக்காரையெல்லாம் தந்தாம் ப்ரயோஜநத்தே மூளப்ப ண்ணவல்ல தேசமாகையாலே, இத்தலையைநினைக்க விரகில்லையிறே. "நொவஜநஂஸ்ரநு" (நோபஜநம்ஸ்மரந்) என்னும்படியிறேயிருப்பது. (அடியேனுக்கும் போற்றுமினே) அடியேனிடையாட்டத்தையு மத்த லைக்கறிவிக்கவேணும்.........................................................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (உணர்த்தலித்யாதி) "அன்னங்காள், அடியேனுக்கும்போ ற்றுமினே" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (திரியவும்சிலவித்யாதி)

சப்தார்த்தம் (உணர்த்தலைபுமித்யாதி) (ஊடலையும்-உணர்த்தலையும்-உணர்ந் து) என்றந்வயிப்பது. "உணர்ந்துடன்மேயும்" என்றதுக்குபாவம் (பிரிந்தாலித்யா தி) ஊடலுக்கு முணர்த்தலுக்கு மர்த்தமருளிச்செய்வாராக வடிகொண்டெழுந்தி ருக்கிறார் (இனித்தான் போகப்ரகாரேத்யாதி) புணர்தலே போகப்ரகாரமாயிருக்க, மூன்றும் போகப்ரகாரமென்கிற தென்கொண்டென்ன (அவையாவனவித்யாதி) இத்தால்-புணர்தலோபாதி, அவையும் ஸம்ஶ்லேஷவர்த்தகமாகையாலே போகப்ர காரமாயிருக்குமென்றபடி. அந்தமூன்றுசப்தத்துக்கும் பிரித்தர்த்தமருளிச்செய்கி றார் (இதிலேயித்யாதி) காமத்தால் பெற்றபயனென்றது - காமத்தால்வந்தப்ரயோ ஜநமென்றபடி. ஊடல்-ப்ரணயரோஷம். உணர்த்தல்-அறிவித்தல். புணர்தல்-ஸம் ஶ்லேஷம். அன்னங்களைக்குறித்து இவற்றை ப்ரஸங்கிக்கையாலே, இவளுடையநா யகனுக்கு மிவைகளுண்டென்கிறார் (இவையெல்லாமித்யாதி) இவையெல்லாமுண் டிறேயென்றது - அன்னங்களுக்குப்போலே புணர்தல் மாத்ரமின்றிக்கே, இவளு டையவனுக்கு, தாம்பலமாகச்சொன்ன மூன்றுமுண்டென்றபடி. "பிரிந்தால்பின் புவரும்" இத்யாதிவாக்யவிவரணம் (பிரியவல்லாரித்யாதி) பின்பு நோவுபடவல் லாரென்றது - பேடையானது விஶ்லேஷத்தாலே பூடப்பின்பு நோவுபடவல்லா ரென்றபடி. கூடத்திரிந்தா லூடல்வாராதோவென்ன (குற்றவாளரித்யாதி) கீழே-

கலந்துவர்த்திக்கைகயாக வருளிச்செய்து, புஜிக்கிறவென்றர்த்தாந்தரம் (இதம்மேத்யமித்யாதி) " [illegible] " (நிஷஸாதகிரிப்ரஸ்த்தேஸீதாம்மாம்ஸேசசந்தயந்இதம்மேத்யமிதம்ஸ்வா துவிஷ்டப்தமிதமக்நிநா । ஏவமாஸ்தேஸதர்மாத்மாஸீதயாஸஹராகவஃ) இத்யயோத்யாகாண்டே ஷண்ணவதிதமே. முந்தினவர்த்தத்திலே, "மேயும்" என்கிற வர்த்தமாநத்துக்கர்த்தம் (ஊடலித்யாதி) கீழ்ச்சொன்ன வர்த்தத்வயத்தையு மடைவே விவரிக்கிருர் (ஒருகலத்திலேயித்யாதி வாக்யத்வயத்தாலே) இரண்டுங்கூடப்பட்டினிகிடக்கை யன்றிக்கேயென்றது - " [illegible] " (நமாம்ஸம்ராகவோபுங்க்தே) என்றும், " [illegible] " (உபவாஸக்ருஶாம் தீநாம்) என்றுமிருக்கையன்றிக்கேயென்றபடி. " உணர்த்தலூடல் " இத்யாதிக்கு ஹார்த்தபாவம் (விழுக்காட்டிலித்யாதி) விழுக்காடு - மேல்வரும்கார்யம். அங்கு சேவல் ப்ரணயரோஷம்வாராமல் பரிஹரிக்கிறதாகையாலே பிரியாமல் வர்த்திக்கிறதென்னலாம், இங்குநாயகியிறே யதுவாராமல் பரிஹரிக்கிருள்; அவன்பிரியாநிற்க, இவள் அதுவாராமல் பரிஹரிக்கும்ப்ரகாரமேதென்ன (அதாவதித்யாதி) " அன்னங்காள் " என்று - திர்யக்குக்களைச்சொன்னதுக்குபாவம் (விவேகமித்யாதி) " மடம் " என்றதுக்குபாவம் (போகத்தாலித்யாதி) " அன்னங்காள் " என்னுமளவுக்கும் பாவம் (வருவதறிந்தித்யாதி) இந்நிர்த்தேசத்தாலுமென்றது - " உணர்த்தலூடலுணர்ந்து " என்கிறநிர்த்தேசத்தாலுமென்றபடி. அதாவது - " கைகள்கூப்பி, " "பாதம்கைதொழுது" என்கிறவிடத்திலே - ப்ரணயரோஷம் தோற்றுகிறவோபாதி, " உணர்த்தலூடலுணர்ந்து " என்கிற பதப்ரயோகத்தாலும் - ப்ரணயரோஷம் தோற்றுகிற தென்றபடி. சஶப்தம் - " கைகள்கூப்பி, " " பாதம்கைதொழுது " என்றத்தை சமுச்சயிக்கிறது.

சப்தார்த்தம் (செருமினவித்யாதி) செருமின - நிபிடமான. அழுக்குக்கிருய்க்கக்கடவசங்குகள் வண்டல்கள்மேல் சேருகைக்குஹேது (நீருறுத்தினவாறேயென்று) கொழுத்த - ஸம்ருத்தமான. வர்த்தமாநார்த்தம் (வேறுபோக்கிடமித்யாதி) இத்தால்பலிதம் (நசபுநரித்யாதி) மீட்சியில்லாமைக்கு ஹேதுவேதென்ன (மார்த்தவத்தாலுமித்யாதி) " அசேதநங்களுங்கூட " இத்யாதிவாக்யவிவரணம் (ப்ரமாணபரதந்த்ரரித்யாதி) " அழுக்குக்கிருய்க்கக்கடவ " இத்யாதிவாக்யவிவரணம் (வெள்ளைகளையுமித்யாதி) வெள்ளையென்று - விரக்தனுக்கும், சங்குக்கும்பேர்.

" புணர்த்த " என்றதுக்கு பூர்வர்கள் நிர்வாஹத்திலேபாவம் (நீங்களித்யாதி) பட்டர் நிர்வாஹம் (அன்றியேயித்தலையையித்யாதி)

பட்டர் நிர்வாஹத்திலேபாவம் (அங்கேசென்றுலித்யாதி) கையொத்து-அஞ்சலிபண்ணிக்கொண்டு. " கையொத்துச்செல்லுங்கோள் " என்றதின்விவரணம் (வழியேபிடித்தித்யாதி) அங்கேசென்றபின்பு தொழுதால்வரும் ஹாநியேதென்ன (இல்லையாகிலித்யாதி) இல்லையாகிலென்றது - வழியேபிடித்துத்தொழாதே, அங்கேபோனபின்பு தொழுதிகோளாகிலென்றபடி. அவஶ்யப்ரதிபேதிரோ எண்கிறகண்ணழிவிலே சிலவெழுதுகையாவது - நம்மழகுதொழுவிக்கத் தொழுதிகோளித்தனை, "நமேயம்" என்கிறதே யுங்களுக்கு ஸங்கல்பமென்கை. " அடியேனுக்கும் " என்கிறசஶப்தத்தாலே - உங்கள்போகத்தைப்பார்த்து நீங்களு மீஶ்வரனைப்போலேயங்கே கால்தாழாதே, என்கார்யத்தையு மறிவிக்கவேணுமென்று தோற்றுகிறதிறே; அத்தை யருளிச்செய்கிருர் (நீங்களுமித்யாதி வாக்யத்வயத்தாலே) உன்கார்ய

த்துக்குப்போகிற நாங்களுன்னை நினையாதிருப்புதோமோ, "என்னையும் நினைக்க வேணும்" என்கிறதென்கொண்டென்ன (அதாவது புக்காளையித்யாதி) அங்கேபோனால் நினையாததுக்கு த்ருஷ்டாந்தம் (நோபஜநமித்யாதி) சப்தார்த்தம் (அடியேனிடையாட்டத்தை யித்யாதி) இடையாட்டம் - கார்யம். போற்றுதல் - சொல்லுதல். அடியேனுக்குமென்றது - அடியேனிடையாட்டத்தையுமென்றபடி. "அடியேனுக்காகவும் சொல்லவேணும்" என்றுனை. "ஜ்ஷாகு஼ஷ்ணஂ தயாயாகுஂஸ்ரபுவஜஃ வளஜஸா । யயாஹஂகெஶவெவுக்ஷிவஶாஃபுஂ திவெஷிரெ" (த்ருஷ்ட்வாக்ருஷ்ணம் ததாயாந்தம் ப்ரதபந்தமிவௌஜஸா । யதார்ஹம்கேஶவேவ்ருத்திமவஶா:ப்ரதிபேதிரே) இதிபாரதே..........................................................*

---

# ஆறும்பாட்டு.

போற்றியானிரந்தேன்புன்னைமேலுறைபூங்குயில்காள்
சேற்றில்வாளைதுள்ளுந்திருவண்வண்டூருறையு
மாற்றலாழியங்கையமரர்பெருமானைக்கண்டு
மாற்றங்கொண்டருளீர்மையறீர்வதொருவண்ணமே.

## ஆருயிரப்படி.

(போற்றியான்) ஆஶ்ரிதர்க்காத்மதாநம்பண்ணினாலு மொன்றும் செய்யாதானுயிருக்கும் ஸ்வபாவனுய், ஆஶ்ரிதவிரோதி நிரஸநார்த்தமாக வநவரதமுத்யதாயுதனுய், ஆஶ்ரிதஸம்ஶ்லேஷைக போகனுயிருந்த வெம்பெருமானைக்கண்டு, மாற்றங்கொண்டருளீர் மையல்தீர்வதொருவண்ணமென்கிறுள்..........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், போக்யதாப்ரகர்ஷத்தாலே ஸஹ்ரிசேவ்யனுனவனைக் குறித்துச் சில குயில்களைப் போகவிடுகிறுள்.

புன்னைமேல் - பசுத்தநிறத்தையும் பரபாகமாய் நாநாவர்ணமான புஷ்பத்தையுமுடைய புன்னையின்மேலே. உறை - சுபாஶ்ரயமான விஷயத்தைப்பற்றியிருப்பாரைப்போலே நிரந்தராஶ்ரயணம்பண்ணி. பூ - அத்தாலே யுஜ்ஜ்வலவேஷங்களான. குயில்காள் - குயில்காள். போற்றி - உங்கள் * நிவாஸவ்ருக்ஷாஶ்ரயணத்துக்கும் தர்ஶநீயதைக்கும மங்களாசாஸநம்பண்ணி. யான் - உங்கள்வாயது வாளுளாயிருக்கிற நான். இரந்தேன் - அநந்யகதியானுர் பண்ணும் ப்ரார்த்தனையைப் பண்ணினேன். சேற்றில் - தன்னிலத்திலே வர்த்திக்கையாலே களித்து. வாளை - வாளை. துள்ளும் - துள்ளாநிற்கிற. திருவண்வண்டூர் - திருவண்வண்டூரிலே. உறையும் - வர்த்திப்பானுய். ஆற்றல் - பெருமிடுக்கனுன. ஆழி - திருவாழியாலே. அம்- அலங்க்ருதமான. கை - திருக்கையையுடையனுய். அவ்வழகாலே, அமரர்- நித்யஸூரிகளை நிர்வஹிக்கிற. பெருமானை - சர்வாதிகனை. கண்டு - கண்டு. மையல் - என்னுடைய ப்ரமம். தீர்வது - தீரும்படியானது. ஒருவண்ணம் - ஒருப்ரகாரத்தாலே. மாற்றம் - மறுமாற்றம். கொண்டு-கொண்டுவந்து. அருளீர்-எனக்குபகரிக்கவேணும்.

ஆற்றல் - அமைதியாய், மதிப்பையுடையவனென்றுமாம். இத்தால் - கடகருடைய வுக்திமாதுர்யமு மர்த்தநியதியுந் தோற்றுகிறது.........................*

## ஈடு - ஆறாம்பாட்டு.

சிலகுயில்களைக்குறித்து, அவனுக்கென்தசையையறிவித்து அங்குநின்றுமொரு மறுமாற்றங்கொண்டுவந் தருளிச் செய்யவேணுமென்கிறாள்.

(போற்றியானிரந்தேன்) சம்சாரவெக்காயம் தட்டாதபடி, வைமாநிகர் விமாநங்களிலே யுயரவிருக்குமாபோலே புன்னையிலே யுயரவிருந்தன சில குயில்கள்; அவற்றின் செவியிலே தன்னார்த்த த்வநி படும்படி யுயர (போற்றி) என்கிறாள். முகம்பார்க்கைக்குச் சொல்லும் பாசுரமிதுபோலேகாணும். இப்ஶப்தம் செவிப்பட்டால் கார்யம்செய்தல்லது நிற்கவொண்ணாதென்றிருக்கிறாள் காணும். (யான்) அவன்றான் தானிரக்கவிருக்கக்கடவ வேண்டப்பாடுடைய நான். ஆள்விடுவானு மிரப்பானு மெல்லாம் தானேயிறே. (யானிரந்தேன்) "ஸீதாஸமுவாச" (ஸீதாமுவாச) என்கிறபடியே - புருஷகாரத்வாரா எல்லாராலு மிரக்கப்படும் நானிரந்தேன். நியமிக்கிறேனல்லேன், இரக்கிறேன். இரப்பார் கார்யம் செய்தறவேணுமென்னும் நினைவாலே. (இரந்தேன்) அவற்றின் நெஞ்சிலே புண்படுத்துகிறாள். (புன்னைமேலுறைபூங்குயில்காள்) (வைமாநிகரைப்போலே மநுஷ்யகந்தம் நடையாடாதபடியுயரவர்த்திக்கிற, ஸம்ஶ்லேஷத்தாலே யுஜ்ஜ்வலங்களான குயில்காள். நெய்தல் நிலத்தில் புன்னை பணைத்தோங்கியிருக்கும்; * வானார்வண்கமுகும், *சேண் சினையோங்குமரமும்போலே.) உங்களைப்போகவிடுகை, தர்மஹாநியாயிருந்ததீ!, ஆகிலுமென்செல்லாமையாலே செய்கிறேனென்கிறாள். (போற்றி) பெருமாளும் பிராட்டியுமாகக் காட்டிலே யேகாந்த போகத்துக்குப் போகாநிற்கச்செய்தே நடுவே ராவணன்வந்தாப்போலே, உங்கள் போகத்துக்கு நான் விச்சேதம்பண்ணத் தோற்றினேன்போலேயிருந்தது; இத்தாலொரு வ்யஸநமின்றிக்கே யொழிந்திடுக உங்கள்போகத்துக்கு. (புன்னைமேல்) பிள்ளையமுதனார், திருவிருந்தவளைமார்வனை "இப்பதத்துக்கு பட்டரருளிச்செய்ததென்" என்றுகேட்க, "'தன்னார்த்தி யவற்றின்செவியிலே படும்படி யுயரச்சொல்லுகிறாள்,' என்றருளிச்செய்தார்" என்ன, "நெய்தல்நிலத்தில் புன்னைபடர்ந்தன்றோ கிடப்பது, இங்ஙனே சொல்லக்கூடுமோ" என்ன, அவன் பட்டர்பாடேவந்து, "இங்ஙனேபணித்தார்" என்ன, "இவ்வர்த்தத்துக்கு நிர்ணயகம்- இசையாயிற்று; அது, போற்றியென்று - உயரச்சொல்லியிருக்குமோ! தாழச்சொல்லியிருக்குமோ!" என்றருளிச்செய்தார்.

(சேற்றில்வாளைதுள்ளும்) ப்ரளயத்திலே கொண்டுபோய்விட்டாலு மானைக்கன்றுபோலே செருக்கிச் சேறாக்குமாயிற்று வாளைகள். "அலைகடல்நீர்குழம்ப வகடாடவோடி யகல்வானுருஞ்சமுதுகில் மலைக

ளைமீதுகொண்டு வருமீனே '' என்னுமாபோலே. சேதநாசேதந விபாகமறக் களித்துவர்த்திக்கும் தேசமாயிற்று. அவ்வூரில் பதார்த்தங்கள் செருக்கி வர்த்தியாநிற்கச்செய்தேகிடீர் நான் பிரிந்திருந்து தூதுவிடுகிறது. ( ஆற்றலாழியங்கை யமரர்பெருமானைக்கண்டு ) ஆஸ்ரிதவிஷயத்திலெல்லாம் செய்தாலும் " ஒன்றும்செய்யப்பெற்றிலோம்'' என்றுநோவுபட்டிருப்பானொருவனுமாய், அவர்கள் ரக்ஷணத்துக்குப் பரிகரமான திருவாழியைக் கையிலேயுடையனாய். நான் காணவாசைப்பட்ட கையுந் திருவாழியுமான வழகை நிரபேக்ஷர்க்குக் காட்சிகொடுத்திருக்கிறவனை. ( ஆற்றல் - வலியாதல் - பிரிவுக்குச் சிளையா திருக்கையாதல், நோவுபாடாதல். ) ஆற்றலாழியென்று - திருவாழிக்கு விசேஷணமாய், ஆஸ்ரிதரக்ஷணத்தி லவன்றன்னிற்காட்டிலும் க்ருபையையுடைய திருவாழியைக் கையிலேயுடையவனை. அன்றியே, அவன்றனக்கேவிசேஷணமாய், பிரிவுக்குச் சிளையாதே யாறியிருப்பானாய்க் கையுந் திருவாழியுமான சர்வேஸ்வரனையென்றுமாம். ( மாற்றங்கொண்டருளீர் ) ஒருவார்த்தைகொண்டுவந்தருளவேணும். எங்ஙனேகொண்டுவர என்றால்; என் தசையிருந்தபடி கண்டிகோளே, இதுதீருவ தொருவழி நீங்களே தேடிக்கொண்டுவந்துசொல்லுங்கோள். " ஓஷாஸீதா " ( த்ருஷ்டாஸீதா ) என்றாப்போலே. ( மையல்தீர்வதொருவண்ணம்-மாற்றங்கொண்டருளீர் ) என் க்லேஸந்தீருவதொருப்ரகாரம் வார்த்தைகொண்டுவந்தருளிச்செய்யவேணும். தூதுவிடுகிற தான் ஜநகராஜன்றிருமகளாகவுமாம், விடுகிறது திர்யக்குக்களையாகவுமாம், பகவத் விஷயத்தில் கடகரா யிருப்பாரை யிங்ஙனல்லது சொல்லவொண்ணாதுகாணும். ( மையல் - ப்ரமமும், க்லேஸமும், மோஹமும். )..........................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆரும்பாட்டு. ( போற்றியித்யாதி ) " பூங்குயில்காள் மாற்றங்கொண்டருளீர் " இத்யாதிகளைக் கடாக்ஷித் தவதாரிகை ( சில குயில்களையித்யாதி )

" போற்றி '' என்ற வுச்சைஸ்ஸ்வரத்துக்கு பலிதமான பாவம் ( ஸம்ஸாரேத்யாதி ) இத்தால் - புன்னைமேலே நீங்களுங்கள் பேடையோடேகூட வேகாந்தமாக வநுபவிக்கிற சேர்த்தி நித்யமாய்ச்செல்லவேணுமென்று மங்களாசாஸநம் பண்ணுகிறாளென்றபடி. மங்களாசாஸநம்பண்ணி நானிரந்தேனென்று சப்தார்த்தம். மங்களாசாஸநம்பண்ணுகிற தெதுக்காகவென்ன ( முகம்பார்க்கைக்கித்யாதி ) முகம்பார்த்து கார்யம் செய்கைக்கென்று கூட்டுவது. இத்தால் - தன்முகம் பார்த்துக் காரியம் செய்கைக்காக மங்களாசாஸநம்பண்ணுகிறா ளென்றபடி. மங்களாசாஸநம்பண்ணினால் கார்யம் செய்யவேண்டி யிருக்குமோ வென்ன ( இஸ்ஸப்தமித்யாதி ) இத்தால் - ஸ்வப்ரக்ருதியையிட்டு நினைக்கிறாளென்றபடி. அவனப்படியிரக்குமோவென்ன ( ஆள்விடுவானுமித்யாதி ) " யான் " என்றதுக்கர்த்தாந்தரம் (ஸீதாமித்யாதி) " ஸஹ்ராதஸ்ரணளமாஸாநிவீவ்ரவஹநநுந ஸீதாவாவாதியஸாஸாவவணுஹாவுதி " ( ஸப்ராதுஸ்சரணௌகாடம்நிபீட்ய

ரகுநந்தந: | ஸீதாமுவாசாதியஶா: ராகவஞ்சமஹாவ்ரதம் ) இத்யயோத்யாகாண்டே லக்ஷ்மண:. ( நியமிக்கிறேனல்லேன் ) “𑌅𑌸𑍍𑌯𑍇𑌶𑌾𑌨𑌾,” (அஸ்யேஶாநா,) “𑌪𑍁𑌂𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑍇𑌶𑍍𑌵𑌰𑍇𑌶𑍍𑌵𑌰𑍀” (பும்ப்ரதாநேஶ்வரேஶ்வரீ) இத்யாதிகளாலே-நியமிக்க ப்ராப்தியுண்டாயிருக்கவும், நியமிக்கிறேனல்லேனென்றபடி. “உறை” என்றதுக்கு பாவம் ( உங்களைப்போகவித்யாதி ) மங்களாசாஸநம்பண்ணும்போத மங்களத்துக்கு ப்ரஸக்தியுண்டாகவேணுமேயென்ன (பெருமாளுமித்யாதி) ஸ்ரீஜே-போகவிச்சேதப்ரஸங்க மில்லாவிட்டாலும் முகம்பார்க்கைக்குச் சொன்ன பாசுரமென்று ; இங்கே - விச்சேதப்ரஸங்க முண்டென்கையாலே, இது பாவாந்தரமென்று கண்டுகொள்வது. “ உயரப்போற்றியென்கிறாள் ” என்று கீழ் தாமருளிச்செய்ததுக்கு ஸம்வாதம் ( பிள்ளையமுதனாரித்யாதி ) இத்தால் - “ போற்றி ” என்று உச்சைஸ்ஸ்வரமாகையாலே, “ வானார்வண்கமுகு, ” “ சேண்சினையோங்குமரச் செழுங்கானல் ” என்கிறபடியே அங்குள்ள புன்னைமுதலான வ்ருக்ஷங்களு முந்நதமாயிருக்குமென்று கருத்து.

“ தேறுநீர்ப்பம்பை ” என்று - ஜலஸம்ருத்தி யுண்டானதாகச் சொல்லியிருக்க, “சேற்றில் வாளைதுள்ளும்” என்கிற தென்னென்ன ( ப்ரளயத்திலே யித்யாதி ) “ ப்ரளயஜலத்தையும் சேருக்கும் ” என்னுமதுக்கு ப்ரமாணம் ( அலைகடலித்யாதி ) அலைமோதிக்கொண்டுவருகிற கடலின் நீர், மத்ஸ்ய சஞ்சாரத்தாலே குழம்பித் தன் கீழ்வயிற்றிலே யோடிவந்து சேரும்படியாகவும், பெரிய வாகாசத்திலேசென்று சேரும்படியாகத் தன்முதுகிலே மலைகளை, அமிழ்ந்துபோகாதபடி மேலே கொண்டுவருகிற மீனையென்று சப்தார்த்தம். அகடு - கீழ் வயிறு. திருமொழி பதினோராம்பத்து நாலாந்திருமொழி முதற்பாட்டு, “ நிலையிடம் ” இத்யாதி. “வாளைதுள்ளும் ” என்றதுக்கு பாவம் ( சேதநாசேதநேத்யாதி ) கீழ் வாக்யத்தால் பலித்த ஹார்த்தபாவம் ( அவ்வூரிலித்யாதி )

பூர்வர்கள் நிர்வாஹத்திலே பாவம் ( ஆஶ்ரிதவிஷயத்திலித்யாதி ) இந்தபக்ஷத்தில், “ ஆற்றல் ” என்று - தயை. இது - ஈஶ்வரவிசேஷணமாதல், திருவாழிக்கு விசேஷணமாதல். பட்டர் நிர்வாஹம் ( அன்றியேயித்யாதி ) இந்தபக்ஷத்தில், “ ஆற்றல் ” என்று - பொறை.

எங்ஙனேகொண்டுவரவென்றாலென்றது - எப்படிப்பட்டவார்த்தை கொண்டுவரவென்றாலென்றபடி. இதுவென்றது - மையலென்றபடி. இது தீருவதொருவழி தேடிக்கொண்டுவந்து சொல்லுகையாவதென்னென்ன (த்ருஷ்டாஸீதேத்யாதி) “𑌸𑍋𑌽𑌭𑌿𑌗𑌮𑍍𑌯 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌰𑌾𑌮𑌂 𑌪𑍍𑌰𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌂 । 𑌨𑍍𑌯𑌵𑍇𑌦𑌯𑌦𑌮𑍇𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌦𑍃𑌷𑍍𑌟𑌾 𑌸𑍀𑌤𑍇𑌤𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑌃” ( ஸோபிகம்யமஹாத்மாநம் க்ருத்வாராமம்ப்ரதக்ஷிணம் | ந்யவேதயதமேயாத்மா த்ருஷ்டாஸீதேதிதத்த்வத: ) இதி ஸங்க்ஷேபே. சொல்லீரென்னுதே, “ அருளீர் ” என்றதுக்குபாவம் (தூதுவிடுகிறவித்யாதி)

புன்னைமேலுறை பூங்குயில்காள், போற்றியானித்யாரப்ய, கண்டு - மையல்தீர்வதொருவண்ணம் - மாற்றங்கொண்டருளீ ரித்யந்வய:. மையல்-வ்யாமோஹமும், க்லேஶமும், ப்ரமமும். மாற்றம் - மறுமாற்றம். ப்ரத்யுத்தரம்...............*

## ஏழாம்பாட்டு.

ஒருவண்ணஞ்சென்றுபுக்கெனக்கொன்றுரையொண்கிளியே
செருவொண்பூம்பொழில்சூழ்செக்கர்வேலைத்திருவண்வண்டூர்
கருவண்ணஞ்செய்யவாய்செய்யகண்செய்யகைசெய்யகால்
செருவொண்சக்கரஞ்சங்கடையாளந்திருந்தக்கண்டே.

### ஆறாயிரப்படி.

(ஒருவண்ணம்) திருவண்வண்டூரிற் சோலைகளுடையவும், தாமரைத்தடாகங்களினுடையவு மதிமனோஹரமான வழகுகளிலே யகப்படாதே யொருவண்ணம் சென்றுபுக்கு, என்னோடுள்ள கலவியாலே புதுக்கணித்த திருநிறத்தையும் திருப்பவளத்தையும் திருக்கண்களையும் திருக்கைகளையும் திருவடிகளையும், திருவாழியையும் திருசசங்கையும் தனக்கு திவ்யசிஹ்நமாகவுடையனாயிருந்தவனைத்திருந்தக்கண்டெனக்கொன்றுரை யொண்கிளியேயென்கிறாள்..................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், அஸாதாரணதர்ஶநீய லக்ஷணனானவனைக்குறித்து ஒருகிளியைப் போகவிடுகிறாள்.

ஒண்-வடிவழகாலே யவனையொப்புச்சொல்லலாம்படியான வைலக்ஷண்யத்தையுடைய.கிளியே-கிளியே. செரு-பரஸ்பரஸ்பர்த்தாளுக்களைப்போலே யிசலிபிசலி. ஒண்-அழகிய. பூ-பூக்களையுண்டாக்கும். பொழில்-பொழில். சூழ்-சூழ்ந்து. அந்தப்புஷ்பபராகத்தாலே,செக்கர்-செக்கர். வேலை-காலந்தையுடைத்தான. திருவண்வண்டூர்-திருவண்வண்டூரிலே. பொழிலின் போக்யதையிலகப்படாதே, ஒருவண்ணம்-ஒருபடி. சென்று-சென்று. புக்கு-புக்கு. அந்த அமரர்பெருமானுடைய. கரு - ஶ்யாமளமான. வண்ணம்-வடிவும். செய்ய-சிவந்த. வாய்-வாயும். செய்ய - செய்ய. கண்-கண்ணும். செய்ய-செய்ய. கை-கையும். செய்ய-செய்ய. கால்-காலும். செரு-இவ்வழகுக்கு போக்தாக்களானருடைய விரோதிநிரஸநத்திலே யுத்யுக்[illegible]ாய். ஒண்-போக்யமானவேஷத்தையுடைத்தான. சக்கரம்-திருவாழியும். சங்கு-ஸ்ரீபாஞ்சஜந்யமுமாகிற. அடையாளம்-அடையாளங்களை. திருந்த - அபரோக்ஷித்து. கண்டு-கண்டு. எனக்கு-அப்படிகாணவாசைப்பட்டிருக்கிறவெனக்கு. இனிதாக, ஒன்று-ஒருவார்த்தை. உரை-சொல்லவேணும்.

கண்டபடி வந்தெனக்கொருவார்த்தைசொல்லவேணுமென்றுமாம். இத்தால்-கடகருடைய பகவத்ஸமாகாரதை தோற்றுகிறது ..............................*

### ஈடு - ஏழாம்பாட்டு.

சிலகிளிகளைக்குறித்து, அவனடையாளங்களைச்சொல்லி, இவ்வடையாளப்படியேகண்டு எனக்காக வொருவார்த்தை சொல்லுங்கோளென்கிறாள்.

(ஒருவண்ணம்சென்றுபுக்கு) இதுக்கிரண்டுபடியாக வருளிச்செய்வர். இத்தலையில் தனிமைநினையாதேபோய் நிற்கையாலே, போரமுதலிகளாயிருப்பர்; மேன்மேலனப்பிரம்புகள்விழும், அத்தைப்பொறுத்துப்போய்ப்புகுங்கோள். அன்றியே,வழியிலே நெஞ்சையபஹரிக்கும் போக்யதையையுடைத்து; அதில் கால்தாழாதே வருந்தி யொருபடிசென்றுபுக்கு. [ஸதஜூஜ:வ-ரஆரஂவஸ2தீத்ய] [ஸததந்தஃபுரத்வாரம்ஸமதீத்ய] "பொன்னியலுமாடக்கவாடங்கடந்துபுக்கு" என்னுமாபோலே. [ஸராஂஸிசஸ-ஹ-லாநி நதீஸ்வி2மொஜகாঃ। நிரீக்ஷ2ாணாஜக்ராமி] [ஸராம்ஸிசஸ-புல்லாநி நதீஸ்சவிமலோதகாঃ। நிரீக்ஷமாணு இத்யாதி] வழியைப்பாராதே போனார்களென்கை. [காய்ஷவஶாக் - ஜக்3முঃ] [கார்யவஶாத் - ஜக்முঃ] கார்யவஶராய்க்கொண்டு போனார்கள். அப்படியே போக்யதை யளவிறந்திருக்கையினாலே, இவற்றில் கால்தாழாதே போய்ப்புகுகை, சாலப்பணியாயிருக்கும். (எனக்கு) பரிபவத்துக் குங்களுக்கிருய்க்கலாம்படியோ! நானிருக்கிறது. "ஏஹிபஶ்யஶரீராணி," (ஏஹிபஶ்யஶரீராணி,) "நிவேதயதமாம்" (நிவேதயதமாம்) என்கிறபடியே வடிவைக்காட்டுகிறாள். என்னைக்கண்டவுங்களுக்கு, போக்யதையிலே நெஞ்சுசெல்லுதல், பரிபவங்கண்டிருப்த்தல் செய்யலாம்படியோவிருக்கிறது. பிறர்காரியம் செய்வார்க்கவை பார்க்கவொண்ணுமோ. (ஒன்றுரை) ஒருவார்த்தைசொல்லு. அன்றியே, என்னாற்றாமையாலே சொல்லுகிறேனத்தனை, இருகால்மட்டுச் சொல்லுகை மிகையாம்படிகிடீகோளவனிருப்பதென்றுமாம். போக்யதையாலே கால் கட்டுப்பட்டுநின்றானித்தனை. ஆர்த்தவிஷய மொருதலையானால், போக்யதையிலே நெஞ்சுசெல்லுதல், மறுத்துச்சொல்லப் பொறுந்தல்செய்யவல்ல விஷயமன்றுகிடீகோள். (எனக்கொன்றுரை) என்னிடையாட்டமொன்றுசொல்லுங்கோள். (ஒண்கிளியே) மௌக்த்யமும் பேச்சும் வாயில் பழுப்பும் வடிவில் பசுமையு மவனோடு போலியா யிருக்கையாலே உன்னைக்கண்டுகொண்டிருக்க வமைந்திருக்க, கைப்புகுந்தவுங்களையு மிழக்கப்புகுகிறேனித்தனையிறே. (செருவொண்பூம்பொழில்சூழ்) செருவை விளைப்பிப்பதாய் அழகிதான பூம்பொழிலாலே சூழப்பட்டிருக்கை. அங்கு மிதுநமாய் வர்த்திப்பார்க்கெல்லாம் நித்யவிப்ரதிபத்தியாய்ச் செல்லாநிற்குமத்தனை. அதாவது -"என்னைப்பாராதே பூவை யமைந்திருக்கப்பார்த்தாய், (அமைந்திருக்கப்பார்க்கையாவது - நாயகனைப்பாராதே "நமக்குப்பூவேயமையும்" என்றுபார்க்கை.) நான் பறிக்க நினைத்த பூவைப் பறித்தாய், அணைப்பதற்குமுன்னே யுன்னுடம்பு பூ நாறிற்று" என்றிப்படி சீறுபாறென்று செல்லாநிற்குமத்தனை. "சலங்கொண்டு மலர்சொரியும்" என்கிறபடியே யிசலிப்பூக்குமென்றுமாம். (செக்கர்வேலைத்திருவண்வண்டூர்) இளமணலெக்கல்களிலேவிழுந்த பூக்களின் தாதுக்களாலும் சுண்ணங்களாலும் சிவந்தபர்யந்தங்களை யுடைத்தாயிருக்கை. கட

த்கரையாகையாலே சிவந்தமணலீட்டை யுடைத்தென்னுதல். இவ்வ யெல்லாவற்ருலும் – போகயோக்யமான தேசமென்றபடி. (கருவண்ண ம்) இத்தலையை யநங்யார்ஹமாக வெழுதிக்கொண்ட வடிவிருக்கிறபடி. (செய்யவாய்) அதுதான் மிகையாம்படி, “நானுனக்கு” என்ருப்போ லே சொல்லப்புக்கு விக்கினதிருப்பவளம். (செய்யகண்) “அது உக்தி மாத்ரமன்று, அகவாயிலுமுண்டு” என்றுதோற்றுகிற திருக்கண்கள். அகவாயிலுள்ளதுக்கெல்லா மானைத்தாளிறே திருக்கண்கள். அத்தைக் ரியாபர்யந்தமாக வநுஷ்டிக்கிறதிருக்கைகள். அவையத்தனைக்கும்தோ ற்றுவிழும்துறை, திருவடிகள். (செருவொண்சக்கரம்சங்கு) இவ்வடிவ ழகையெல்லாம் காத்தூட்டவற்றுமாய், அஸ்த்தாநே பயசங்கைபண்ணி யுத்தோங்முகமாய், கைகழியப்போய் நின்றுரக்ஷிப்பதும், கைவிடாதே வாய்க்கரையிலேநின்று ரக்ஷிப்பதுமான திவ்யாயுதங்கள். கிட்டினரை “இன்னுமொன்றறியேன்” என்று மதிமயங்கப்பண்ணுவிக்கும் திவ்யாயுத ங்கள். (அடையாளம்) திவ்யாவயவத்தோபாதி திவ்யாயுதங்களு மஸா தாரண சிஹ்நமாகை. ‘ யா நிராமஸ்ய சிஹ்நா நிலக்ஷ்மணஸ்ய யாநிவை’ (யாநிராமஸ்யசிஹ்நாநிலக்ஷ்மணஸ்யசயாநிவை) (திருந்தக்கண்டே) எ ன்னைப்போலே மாநஸமாகவன்றிக்கே வ்யக்தமாகக்கண்டு. இவ்விஷயத் தில் காட்சியிறேப்ரயோஜநம், அதுங்களுக்கு முற்படப்பெற்றதே. பிரா ட்டிகார்யம்செய்தால், அவளுக்குமுன்னே யிவனுக்குப்பேறு முற்பட் டிருக்குமிறே. * பரிஷ்வங்கோஹநூமத:இறே. (திருந்தக்கண்டே) இத்த லையில் வைவர்ண்யங்கண்ட நெஞ்சாற லெல்லாம் தீரும்படி, கலவியிலு ம் பிரிவிலு மொருபடியாயிருக்கும் வடிவைக்காண்கிறிகோளிறே. “ஸதைகரூபரூபாய” (ஸதைகரூபரூபாய) என்று உக்திமாத்ரமா ய்ப்போகையன்றிக்கே, அத்தை யநுஷ்டாநபர்யந்தமாக்கிக்கொண்டி ருக்கிற வடிவைக்காணுங்கோள்...... ...................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (ஒருவண்ணமித்யாதி) “ஒண்கிளியே, கருவண்ணம் செய்ய வாய்தொடங்கி, திருந்தக்கண்டு - எனக்கொன்றுரை” என்கிறவற்றைக்கடாக்ஷித் தவதாரிகை (சிலகிளிகளையித்யாதி)

பட்டர்நிர்வாஹம் (இத்தலையிலித்யாதி) பூர்வர்கள் நிர்வாஹம் (அன்றியே யித்யாதி) போக்யதையாலே கடந்துபோகவொண்ணுமைக்கு ப்ரமாணத்ரயம் (ஸத தந்த:புரேத்யாதி) அதித்ய என்னுதே, (ஸமதீத்ய) என்கையாலும், (கடந்து) என் கையாலும் - போக்யதையாலே, கடந்துபோகையிலுள்ள வருமைதோற்றுகிறது. “ஸததந்த:புரத்வாரம்ஸமதீத்யஜநாகுலம் । ப்ரவிவிக்தாம்ததஃகக்ஷ்யாமாஜகாமபுராணவித்” (ஸததந்த:புரத்வாரம்ஸமதீத்யஜநாகுலம் । ப்ரவிவிக் தாம்ததஃகக்ஷ்யாமாஜகாமபுராணவித் ) இத்யயோத்யாகாண்டே ராமாஹ்வாநார்த் தம்ததந்த:புரம் கச்சந்ஸுமந்த்ர:. தத்ரைவ, ம்ருதேதஸூரதேபரதாஹ்வாநார்த்தம்

நச்சந்தோதுதாஃ, " [illegible] " (ஸராம்ஸீசஸபுல்லாநிக்ஷீரீக்ஷமாணாஜக்முஸ்தேநுதாஃகார்யவஸாத்த்ருதம்) " [illegible] " (நிரீக்ஷமாணாஃ) என்றுநிற்க, (பாராதேபோனார்கள்) என்கிறதென் கொண்டென்ன; மேலே " [illegible] " (கார்யவஸாத்த்ருதம்) என்றிருக்கையாலே, பார்த்துவைத்து மதிலந்வயமில்லாமல் - வழியில் போக்யதையிலே யீடுபடாதேபோனார்களென்கிறார் (கார்யவஸாதித்யாதி) (பொன்னியலுமாடக்கவாடங்கடந்துபுக்கு) பொன்னாலே பண்ணப்பட்டமாடங்களில் வாசற்கதவுகளைக்கடந்துள்ளேபுக்கென்றபடி. பெரியதிருமடல். சாலப்பணியாயிருக்கும்-மிகவும் ப்ரயாஸமாயிருக்கும். பிரம்புகள் விழாநிற்கப்போகப்போமோவென்ன; பட்டர்நிர்வாஹத்திலே யருளிச்செய்கிறார் (பரிபவத்துக்கித்யாதி) அதாவது-என்னார்த்தியைக்கண்டால், அவன்பண்ணுகிற பரிபவங்கண்டுங்களுக்குப் பிற்காலிக்கலாயிருக்கிறதோவென்றபடி. "எனக்கு" என்கிறவித்தால் - ஆர்த்திதோற்றுமோவென்ன; " [illegible] " (ரூபமேவாஸ்யைதந்மஹிமாநம்வ்யாசஷ்டே) என்கிறபடியே வேஷங்கண்டபோதே யார்த்தியுந்தெரியுமென்னுமத்தை ப்ரமாணகதநமுகேந தர்ஸிப்பிக்கிறார் (ஏஹிபஸ்யேத்யாதி) " [illegible] " (ஏஹிபஸ்யஸரீராணிமுநீநாம்பாவிதாத்மநாம் | ஹதாநாம்ராக்ஷஸைர்கோரைர்பஹூநாம்பஹுதாவநே) இத்யாரண்யகாண்டே ராமம்ப்ரதிருஷயஃ. " [illegible] " (ஸர்வலோகஸரண்யாயராகவாயமஹாத்மநே | நிவேதயதமாம்க்ஷிப்ரம்விபீஷணமுபஸ்த்திதம்) இதியுத்தகாண்டேவிபீஷணஃ. பட்டருடையவும் பூர்வர்களுடையவும் நிர்வாஹத்வயவிவரணம் (என்னைக்கண்டவித்யாதி) பரிபவாதிகள் பாராமலுன்காரியம் செய்யவேண்டுகிறதென்னென்ன (பிறர்காரியமித்யாதி) பிறர்காரியம்செய்வார்க்கு-பரோபகாரசீலர்க்கு. " ஒன்றுனை " என்றதுக்குமுந்தினவர்த்தம் - " [illegible] " (வாசாதர்மமவாப்நுஹி) என்னுமாபோலே யொருவார்த்தைமாத்ரம் சொல்லென்றபடி. த்விதியார்த்தத்துக்கு, ஒருகால்சொல்ல வமையுமென்றபடி. இப்படிஸுலபனானால், இத்தனைநாளாக வுன்னையுபேக்ஷித்து வாராமலிருப்பானென்னென்ன (போக்யதையாலேயித்யாதி) " எனக்கு " என்றதுக்கு - பாட்டினவதாரிகையிலே (எனக்காக) என்றருளிச்செய்து, இங்கேயர்த்தாந்தரம் (என்னிடையாட்டமித்யாதி) இடையாட்டமாவது-வைவர்ண்யம், கார்ஸ்யந்தொடக்கமானவை. இடையாட்டம்-வ்யாபாரம். * ஒண்மைக்குமர்த்தமருளிச்செய்துகொண்டு, அதிலிவளுக்கு விவக்ஷிதமான ஹார்த்தபாவத்தை யருளிச்செய்கிறார் (மௌக்த்யமுமித்யாதி)

செரு-யுத்தம். ஆர்க்குச்செருவைவிளைப்பிக்குமென்ன (அங்குமிதுநமித்யாதி) " செரு " என்றதுக்கு - ஸ்பர்த்தையாகவர்த்தாந்தரம் (சலங்கொண்டித்யாதி) இஸலிஸலிமலனைச்சொரிகிற வித்யர்த்தஃ. திருமொழி மூன்றும்பத்து ஒன்பதாந்திருமொழி முதற்பாட்டு, "சலங்கொண்டவிரணியன்" இத்யாதி. ஸலம்-சலம். "செக்கர்வேலை" - (சிவந்தபர்யந்தம்) வேலைசிவந்திருக்கைக்கடியேதென்ன (இளமணலித்யாதி) தாது-உள்ளிதழ். சுண்ணம்-ரஜஸ்ஸு,

அப்படி யகவாயிலுள்ளதுக்கு ப்ரகாஶகமாயிருக்குமோவென்ன (அகவாயி லித்யாதி) அருளிச்செய்தார் - த்வாரம். அத்தை-அகவாயிலுண்டான ஸ்நேஹத்தை. க்ரியாபர்யந்தமாகவென்றது - "ஸோப்யேநம் த்வஜவஜ்ராப்ஜ" (ஸோப்யேநம்த் வஜவஜ்ராப்ஜ) இத்யாதிப்படியேயெடுத்தணைக்கை. "செரு" என்றதுக்கர்த்தம் (இவ்வடிவழகையித்யாதி) காத்தூட்டுகைக்காகவு மஸ்த்ராதேயசங்கையாலும் யுத்தோந்முகமாயென்றபடி. காத்தூட்டுகையாவது - அநுபவிதாக்களுக்கு விரோதியைப்போக்கி யநுபவிப்பிக்கை. வாய்க்கரை-மேலெழவென்றும், வாயருகென்றுமர்த்தத்வயம். * ஒண்மைக்கர்த்தம் (கிட்டினாரையித்யாதி) திவ்யாவயவங்களோடே திவ்யாயுதங்களை ஸஹபடித்ததெதுக்கென்ன (திவ்யாவயவத்தோபாதியித்யாதி) திவ்யாவயவங்களை சிஹ்நமாகச்சொன்னவிடமுண்டோவென்ன (யாநிராமஸ்யேத் யாதி) "யாநிராமஸ்ய சிஹ்நாநி லக்ஷ்மணஸ்ய ச வாநர। தாநி பூயஸ்ஸமாசக்ஷ்வ ந மாம் ஶோகஸ்ஸமாவிஶேத்" (யாநிராமஸ்யசிஹ்நாநிலக்ஷ்மணஸ்யசவாநர। தாநிபூயஸ்ஸமாசக்ஷ்வநமாம்ஶோகஸ்ஸமாவிஶேத்) இதிஸீதயோக்தே; "யாநிராமஸ்ய சிஹ்நாநி லக்ஷ்மணஸ்ய ச யாநி வை। லக்ஷிதாநி விஶாலாக்ஷி வததஶ்ஶ்ருணு தாநி மே" (யாநிராமஸ்யசிஹ்நாநிலக்ஷ்மணஸ்யசயாநிவை। லக்ஷிதாநிவிஶாலாக்ஷிவததஶ்ஶ்ருணுதாநிமே) இதிஹநூமாந் ஸுந்தரகாண்டே. "ராமः கமலபத்ராக்ஷः" (ராமःகமலபத்ராக்ஷः) என்று ப்ரதிவசநமிருக்கையாலே, இங்கு, சிஹ்நமென்றது-அவயவங்களை. "திருந்தக்கண்டு" என்றதுக்கர்த்தத்வயம். முந்தினது - ப்ரத்யக்ஷமாகக்கண்டேனென்று; அத்தையருளிச்செய்கிறார் (என்னைப்போலே யித்யாதி) வ்யக்தமாகக்கண்டேனென்றது - ப்ரத்யக்ஷமாகக்கண்டேனென்றபடி. அநுபவித்தேனென்றதே, "கண்டு" என்றதுக்குபாவம் (இவ்விஷயத்திலித்யாதி) முற்பட்டதெங்கேயென்ன (பரிஷ்வங்கஇத்யாதி) "திருந்தக்கண்டு" என்றதுக்கர்த்தாந்தரம் (இத்தலையிலித்யாதி) அதாவது - ப்ரத்யக்ஷத்திலு மென்னைக்கண்ட விழவெல்லாம் தீரும்படி, விஶ்லேஷவ்யஸந ரஹிதனாயிருக்கிறவனை நன்றாகக்கண்டேனென்றபடி. விவரணம் (ஸதைகேத்யாதி) "ஸதைகரூபரூபாய விஷ்ணவே ஸர்வஜிஷ்ணவே" (ஸதைகரூபரூபாய விஷ்ணவேஸர்வஜிஷ்ணவே) இதி ஸ்ரீவிஷ்ணுபுராணே.

ஒண்கிளியே, செருவொண்பூம்பொழிலென்றுதொடங்கி, திருவண்வண்டூர்-ஒருவண்ணம்சென்றுபுக்கு, கருவண்ணமித்யாரப்ய, திருந்தக்கண்டு-எனக்காகவொன்றுரையென்னுதல்; என்னிடையாட்டத்தைச்சொல்லுங்கோளென்னுதல். திருவண்வண்டூர்-திருவண்வண்டூரிலே. ஒருவண்ணம்-ஒருபடி............................*

---

## எட்டாம்பாட்டு.

---

திருந்தக்கண்டெனக்கொன்றுரையாயொண்சிறுபூவாய்
செருந்திநாழல்மகிழ்புன்னைசூழ்தண்டிருவண்வண்டூர்ப்
பெருந்தண்டாமரைக்கட்பெருநீண்முடிநாற்றடந்தோட்
கருந்திண்மாமுகில்போற்றிருமேனியடிகளையே.

## ஆறுயிரப்படி.

(திருந்த) ஸ்வஸம்ஶ்லேஷ ஜநிதமான வழகு தானிருக்கும்படியைச் சொல்லுகிறாள்.......................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆதிக்யஸூசகலக்ஷணங்களை யுடையவனைக் குறித்து ஒரு பூவையைப் போகவிடுகிறாள்.

ஒண் - தர்ஶநீயமாய். சிறு - "புலன்கொள்மாண்" என்றவடிவுபோலேசிறும்பித் தநுபவிக்கலாம்படி சிறுகினவடிவையுடைய. பூவாய் - பூவாய். செருந்தி ஞாழல் மகிழ்புன்னை - செருந்தி தொடக்கமான நாநாவித புஷ்ப வ்ருக்ஷங்களாலே. சூழ்-சூழப்பட்டு. தண்-ப்ரமஹரமான. திருவண்வண்டூர் - திருவண்வண்டூரில். பெரு-அதிவிசாலமாய். தண்-குளிர்ந்த. தாமரை-தாமரைபோலேயிருக்கிற. கண்-திருக்கண்களையும். விஶ்வாதிராஜ்யஸூசகமாய், பெரு-பெரிய. நீள் - வளர்த்தியையுடைய. முடி-திருவபிஷேகத்தையும். தடம் - சுற்றுடைத்தாய்ப்பணைத்த. நால் - நாலு. தோள் - திருத்தோள்களையும். கரு - ஶ்யாமளமான நிறத்தை யுடைத்தாய். திண் - காலாந்தரத்தே வேற்று நிறமாகை யன்றியே ஸ்த்திரமான. மாமுகில்போல் - மஹா மேகம்போலே யிருக்கும். திருமேனி - திருமேனியையுமுடைய. அடிகளை-சர்வஸ்வாமியானவரை. அவருடையநினைவை, திருந்த-திருந்த. கண்டு - கண்டு. எனக்கு-அவரபிப்ராயமறிய வாசைப்பட்டிருக்கிறவெனக்கு. ஒன்று-ஒருவார்த்தை. உரையாய்-சொல்லவேணும்.

ஞாழல்-பச்சைநிறமாயிருப்பதொரு லதாவிசேஷம். இத்தால்-கடகருடைய வடிவில்சுக்ரஹத்வமும், யதாத்ருஷ்டார்த்தவாதித்வமுமுத்தேஶ்யமென்றுகருத்து.

## ௮டு - எட்டாம்பாட்டு.

சில பூவைகளைக்குறித்து ; மீண்டுவந்தெனக்குச் சொல்லலாம்படி வ்யக்தமாகக்கண்டு, ஒருமறுமாற்றம் கேட்டுவந்து சொல்வேணுமென்கிறாள். காணவொண்ணுமைக்கு வேண்டும் ஹேதுக்களைச் சொல்லிவைத்துத் திரியவும், திருந்தக்காணுங்கோளென்கிறாளிறே.

(திருந்தக்கண்டு) நான் சொன்ன வடையாளத்திலொன்றும் குறையாமற்காணுங்கோள். உங்களுக்கென்றுகாணுதே, பிறர்க்குச் சொல்லலாம்படிகாணுங்கோள். (எனக்கு) உங்கள் சொற்கேட்டு தரிக்கவிருக்கிற வெனக்கு. (ஒன்றுரையாய்) எனக்கவன்படிகளெல்லாம்சொல்லவேண்டா, ஒன்றுசொல்லவமையும். போகத்துக்கன்றே யிவள்தேடுகிறது, ஸத்தை நோக்குகைக்கிறே பார்க்கிறது. "யாநிராமஸ்யசிஹ்நாநி" என்றால், உள்ளபடியெல்லாம் சொல்லவற்றாயிருக்கை. அத்தலையைத் திருந்தக்கண்டு எனக்கொன்று சொல்லென்னவுமாம். எனக்காகவொன்றுசொல்லென்னவுமாம். ஆக, இவ்விரண்டாலும்-ஆசார்யன்வார்த்தைகேட்டு தரித்தல், அவனபிமாநத்தாலே தரித்தலொழிய வேறொன்றில்லையென்றபடி. (ஒண்சிறுபூவாய்) உங்களொருப்பாடு கண்டேனுக்கு

கானபேக்ஷிக்கை மிகையாயிருந்ததீ!, பிறர்காரியம்செய்ய வடிவுகொண் டாப்போலே யிராநின்றதீ ! உங்களுத்யோகம் (சிறுபூவாய்) கடல்கடக் கும்போதொருவடிவாய், எதிரிகள் படைவீட்டில்புகும்போ தொருவடி வாயிருக்கவேண்டாதபடிகாணு மிவற்றின் வடிவில் லாகவமிருக்கிறபடி. ஒண்மை - கண்டுகொண் டிருக்கவேண்டு மழகு. ( செருந்தியித்யாதி ) அவன்பாடு செல்லவேண்டாதே, போகஸ்த்தாநமே யமைந்திருக்கை. வாராமை யவன் குற்றமன்று, நிலப்பண்புகிடிகோள். (செருந்திநாழல் மகிழ் புன்னைசூழ் ) காற்கட்டொன் றிரண்டாகிலன்றோ வரலாவது ; அவை நாலுபாடும் சூழ்ந்து நிற்க அவனாலே வரப்போமோ. ஒருதிக் குக் கொன்றே அமைந்திருக்கிறது காணும். ( நாழல் - பசுமை நிற மாயிருப்பதொருலதாவிசேஷம்.) (பெருந்தண்டாமரைக்கண்) போக்தா க்களளவல்லாதபடி பெருத்து ப்ரமஹரமாய்; விகாஸம், செவ்வி, குளி ர்த்தி, பரிமளந்தொடக்கமானவற்றை யுடைத்தாயிருக்கை. ( பெருநீண் முடி ) உபயவிபூதிக்கும் கவித்தமுடியையுடையவனென்னுதல். உபய விபூதியோகத்துக்கும் மேலேயிறே யவ்வூர்க்குக்கடவனென்னுதல். அ ன்றியே, "யஸ்ய ஸாஜநகாத்மஜா" (யஸ்யஸாஜநகாத்மஜா) என்றுகொ ண்டிவள் தன்னைத்தோற்பித்துச்சூடின முடியென்னுதல். ( பெருநீள் ) பெரியவளர்த்தி. (நாற்றடந்தோள்) அவளையணைந்து அத்தாலே கல்பக தரு பணைத்தாப்போலேயிருக்கிற (நாலாய்ச்சுற்றுடைத்தாயிருக்கிற) தி ருத்தோள். ( கருந்திணித்யாதி ) கறுத்துத் திண்ணியதாயிருப்பதொரு மஹாமேகம்போலே யாயிற்று வடிவிருப்பது. அன்றிக்கே, ப்ரமஹரமா ன நிறத்தையுடைத்தாய் ஸ்த்திரமா யபரிச்சேத்யமான மேகம்போலே யிருக்கும்வடிவு. நிறமித்தனையுங்கிடீர் மேகத்துக்கொப்பு, அகவாயில் திண்மையிவர்க்குத்தன்னேற்றம். கறுத்து அகவாய் திண்ணியதாயிருப் பதொரு மேகம் பெறிலாயிற்றிவர்க்கொப்பாவதுநேரே. (திருமேனியடி களையே) வேறொன்றுசொல்லவேண்டாதபடி வடிவுகண்டபோதே "இ வனேயிதுக்கெல்லாம் கடவன்" என்று தோன்றும்படியிருக்கை. அன் றிக்கே, அவ்வடிவைப்படைத்துத் தமக்கென்றிருக்கிற ஸ்வாமிகளை ...*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (திருந்தவித்யாதி) " திருந்தக்கண்டெனக்கொன்றுரையா யொண்சிறுபூவாய் " என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (சிலபூவைகளையித்யாதி) மறுமாற்றம் - ப்ரத்யுத்தரம். "திருந்தக்கண்டு" என்றதுக்குக் கீழ்ப்பாட்டிற்சொன் ன விரண்டுபொருளிங்குமாகவொண்ணாதோ, அத்தைவிட்டு, (மீண்டுவந்தெனக்குச் சொல்லலாம்படி வ்யக்தமாகக்கண்டு) என்றுயோஜிக்கிறதுக்கு ஹேதுவேதென்ன (காணவொண்ணாமைக்கித்யாதி) காணவொண்ணாமைக்கு ஹேதுக்களாவன- "பெரு ந்தண்டாமரைக்கண்" இத்யாதிகள். (காணவொண்ணாமைக்குவேண்டும் ஹேதுக்க ளை-திரியவும்-சொல்லிவைத்து) என்றந்வயிப்பது. " பெருந்தண்டாமரைக்கண் " எ

ன்றுதொடங்கி, "திருமேனியடிகளை - திருந்தக்கண்டு" என்றந்வயமாகையாலே (திரியவும்-சொல்லிவைத்து) என்கிறார்.

காண்கிறதிலே திருத்தமேதென்ன (நான்சொன்னவித்யாதி) ஒன்றும் குறையாமல் காண்கிறவிதுக்கு ப்ரயோஜநமருளிச்செய்கிறாரதல், விவரணமாதல் (உங்களுக்கித்யாதி) "ஒன்றுரையாய்" என்றத்தைக்கடாக்ஷித்து, "எனக்கு" என்றதுக்கர்த்தம் (உங்கள்சொற்கேட்டித்யாதி) தாத்பர்யம் (எனக்கவனித்யாதி) ஒன்று சொன்னால் போருமோவென்ன (போகத்துக்கித்யாதி) * ஒண்மைக்கர்த்தம் (யாநிராமஸ்யேத்யாதி) அதாவது - "𑌯𑌾𑌨𑌿 𑌰𑌾𑌮𑌸𑍍𑌯 𑌚𑌿𑌹𑍍𑌨𑌾𑌨𑌿" (யாநிராமஸ்யசிஹ்நாநி) என்றுகேட்டால், "𑌰𑌾𑌮𑌃 𑌕𑌮𑌲𑌪𑌤𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑌃" (ராமஃகமலபத்ராக்ஷஃ) என்று தொடங்கி திருவடிசொன்னப்போலே யிதுவும் சொல்லவற்றென்றபடி. ஒண்மை - சாமர்த்யம். "எனக்கவன்படிகளெல்லாம்" இத்யாதிவாக்யோபஸம்ஹாரம் (அத்தலையைத்திருந்தவித்யாதி) ஆக, "எனக்கொன்றுரையாய்" என்றதுக்கு, அவதாரிகையிலே யோரர்த்தமும், இங்கே யிரண்டர்த்தமுமாகக்கண்டுகொள்வது. அதாவது-எனக்கொரு மறுமாற்றங்கொண்டுவந்துசொல்லென்றும், அடையாளங்களிலே யொன்று சொல்லென்றும், எனக்காகவவனோடே யொன்று சொல்லென்று மர்த்தத்ரயம். எனக்காக வொன்றுசொல்லென்னவுமாமென்றது - எனக்காக வீஶ்வரனோடே ஒன்றுசொல்லென்னவுமாமென்றபடி. உக்தமான வர்த்தத்வயத்துக்கும் ஸ்வாபதேஶம் (ஆகவித்யாதி) * சிறுமைக்குபாவம் (உங்களொருப்பாடித்யாதி) ஒருப்பாடு-உத்யோகம். விவரணம் (பிறர்காரியமித்யாதி) இத்தால் திருவடியில்வ்யாவ்ருத்தி (கடல்கடக்குமித்யாதி) கடல்கடக்கும்போ தொருவடிவென்றது - "𑌦𑌶𑌯𑍋𑌜𑌨𑌵𑌿𑌸𑍍𑌤𑍀𑌰𑍍𑌣𑌾 𑌤𑍍𑌰𑌿𑌂𑌶𑌦𑍍𑌯𑍋𑌜𑌨𑌮𑌾𑌯𑌤𑌾 । 𑌛𑌾𑌯𑌾 𑌵𑌾𑌨𑌰𑌰𑌾𑌜𑌸𑍍𑌯 𑌸𑌮𑍁𑌦𑍍𑌰𑍇 𑌸𑌮𑌦𑍃𑌶𑍍𑌯𑌤" (தஶயோஜநவிஸ்தீர்ணா த்ரிம்ஶத்யோஜநமாயதா। சாயாவாநரராஜஸ்ய ஸமுத்ரேஸமத்ருஶ்யத) என்றத்தைப்பற்ற. எதிரிகள் படைவீட்டில் புகும்போ தொருவடிவாயென்றது - "𑌸𑍂𑌰𑍍𑌯𑍇 𑌚𑌾𑌸𑍍𑌤𑌂 𑌗𑌤𑍇 𑌰𑌾𑌤𑍍𑌰𑍌 𑌦𑍇𑌹𑌂 𑌸𑌂𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌯 𑌮𑌾𑌰𑍁𑌤𑌿𑌃 । 𑌪𑍃𑌷𑌦𑌂𑌶𑌕𑌮𑌾𑌤𑍍𑌰𑌸𑍍𑌸𑌨𑍍 𑌬𑌭𑍂𑌵𑌾𑌦𑍍𑌭𑍁𑌤𑌦𑌰𑍍𑌶𑌨𑌃" (ஸூர்யேசாஸ்தம்கதேராத்ரௌ தேஹம்ஸம்க்ஷிப்யமாருதிঃ। ப்ருஷதம்ஶகமாத்ரஸ்ஸந்பபூவாத்புததர்ஶநঃ) என்றத்தைப்பற்ற.

அவன்பாடுசெல்லவேண்டாதேயென்றது - அவனவயவங்களளவும் போகவேண்டாதேயென்றபடி. தாத்பர்யாந்தரம் (வாரார்மையித்யாதி) நிலப்பண்பு-நிலஸ்வபாவம். நாலுவ்ருக்ஷங்களைச்சொன்னதுக்கு, இரண்டாலும் பாவாநுகுணமாகத் தாத்பர்யம் (காற்கட்டித்யாதிவாக்யத்வயம்) "செருந்தி" இத்யாதி நாலினுடைய ஏகவசநத்துக்குபாவம் (ஒருதிக்குக்கித்யாதி) செருந்தி - கோங்கு. நாழல்-லதாவிஶேஷঃ.

போக்தாக்களளவல்லாதபடி யென்றது - இந்தபோக்யதையை யநுபவிக்கிறவர்க்கு; எல்லாம்வேண்டா, ஏகதேசமே யமையும்படியென்கை. "பெருநீண்முடி" என்றதுக்கு பாவத்ரயம் (உபயவிபூதிக்குமித்யாதி வாக்யத்ரயத்தாலே) "திருவண்வண்டூர்-பெருநீண்முடி" என்றுகூட்டி யிரண்டாம்பாவம் (உபயவிபூதியோகத்துக்குமேலேயித்யாதி) உகந்தருளினநிலம் த்ருதீயவிபூதி. "தடம்" என்றதுக்குபாவம் (அவனையித்யாதி) "கருந்திண்" இத்யாதிக்கர்த்தத்வயம் பூர்வர்கள் நிர்வாஹத்திலே. முந்தினது (கறுத்தித்யாதி) திண்மையாவது-நித்யத்வம். * திண்மையை-மநঃகாடிந்யமாக்கி, பட்டர்நிர்வாஹத்திலே யர்த்தாந்தரம் (நிறமித்தனையுமித்யாதி) வி

வரணம் (கறுத்தகவாயித்யாதி) "திருமேனி" என்றவநந்தரம், "அடிகள்" என்றதுக்குபாவம் (வேறென்றித்யாதி) பட்டர் நிர்வாஹம் (அன்றிக்கே யவ்வடிவையித்யாதி) தமக்கென்றிருக்கை - ஸ்வார்த்தமென்றிருக்கை.

ஒண்சிறுபூவாயித்யாதி, அடிகளை - திருந்தக்கண்டெனக்சொன்னாயாயித்யந்வயஃ. திருவண்வண்டூரென்றது - திருவண்வண்டூரிலேயென்றபடி ..............*

# ஒன்பதாம்பாட்டு.

அடிகள்கைதொழுதலர்மேலசையுமன்னங்காள்
விடிவைசங்கொலிக்குந்திருவண்வண்டூருறையுங்
கடியமாயன்றன்னைக்கண்ணனைநெடுமாலைக்கண்டு
கொடியவல்வினையேன்றிறங்கூறுமின்வேறுகொண்டே.

## ஆறாயிரப்படி.

(அடிகள்) சென்றாலெங்களுக்குக் காலமாயிருக்குமோ வென்ன; நீங்கள் செல்லுமளவிலே திருப்பள்ளி யுணர்ந்தருளும் காலமாம், திருப்பள்ளியுணர்ந்தருளினவாறே, ஆஶ்ரிதருடைய ஸமஸ்ததுஃகங்களையுமொருக்ஷணத்திலே போக்கியருளும் ஸ்வபாவனாய் ஆஶ்ரிதசுலபனாயிருந்தவனைக்கண்டு, கொடியவல்வினையேன் திறம் கூறுமின் வேறுகொண்டென்கிறாள்.........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரிதவிஷயத்தி லத்யந்த வ்யாமுக்தனானவனைக் குறித்து விலக்ஷணங்களான சில வன்னங்களைப் போகவிடுகிறாள்.

தறையில் பாவாதபடியான செருக்காலே, அலர்மேல் - பூவின்மேலேயிருந்து. அசையும் - தூங்குமெத்தையி லிருப்பாரைப்போலே காற்றுவளத்திலே அசைகிற. அன்னங்காள் - அன்னங்காள். விடிவை-விடிவுக்குப்ரகாசகமான. சங்கு-சங்கு. ஒலிக்கும் - முழங்குகிற. திருவண்வண்டூர் - திருவண்வண்டூரிலே. உறையும்-வர்த்திப்பானாய். கடிய - தான் நினைத்தகாரியத்திலெதிர்த்தலையிலும் முற்பாடனான கடுமையையுடையனாய். மாயன்றன்னை - எதிர்த்தலை யகப்படும்படியான வாஶ்சர்ய சேஷ்டிதங்களையுடையனாய். கண்ணனை - அவ்வளவி லத்யந்த நியாம்யனானபவ்யதையையுமுடையனாய். நெடுமாலை - அதுக்கடியான வதிசயித வ்யாமோஹத்தையுடையனானவனை. கண்டு - உங்கள் பெருமையாலே மேலெழ நினைத்திராதே யுள்ளுறக்கண்டு. அடிகள் - அவன்திருவடிகளை யுத்தேசித்து. கைதொழுது - அநுவ்ருத்திகளைப்பண்ணி. கொடிய - அத்யந்த பரிதாபஹேதுவாய். வல் - அதி ப்ரபலமான. வினையேன் - ப்ராவண்யரூபமான பாபத்தையுடையேனான வென். திறம் - இடையாட்டமாக. வேறுகொண்டு - ஏகாந்தத்திலே யிடங்கொண்டு. கூறுமின் - வார்த்தைசொல்லுங்கோள்.

இத்தால் - கடகருடையஜந்மோத்கர்ஷமும், விலக்ஷண ஸமாஸ்ஸம்ஶ்லேஷத்தால் வந்த செருக்குந் தோற்றுகிறது..............................................*

ஈடு - ஒன்பதாம்பாட்டு.

சிலவன்னங்களைக்குறித்து; ஏகாந்தத்திலே "நகஸ்ஜ்ஞாவபராயதி" (நகஸ்சிஞ்நாபராத்யதி) என்பார் முன்பாக என்னிடையாட்டத்தை யறிவியுங்கோ ளென்கிறாள்.

(அடிகள்கைதொழுது) திருவடிகளைக் கையாலேதொழுது. அவனுக்கு மறுக்கவொண்ணாத செயலைச்செய்து. (அடிகள்கைதொழுது-கூறுமின்) நீங்களும் பரக்கச் சொன்னிகோளாய் அவனும் பராக்கடித்திருந்தானுகையன்றிக்கே, செவிப்படும்படி பண்ணிச்சொல்லுங்கோள். வரவுதாழ்த்ததென்னு, வஸ்துவஸ்த்வந்தரமாகாதிறே. வந்தேறியான ப்ரணயித்வத்திலிறே சிறிது நழுவநிற்கலாவது, ஸ்வரூபாந்தர்க்கதையான க்ருபைக்கழிவில்லையிறே. அது சத்தையுள்ளதனையும்விலைசெல்லுமிறே. (அலர்மேலசையுமன்னங்காள்) நான் பூக்காணவிருப்க்கும்படியாயிருக்க, உங்களுக்குப் பூவிலே கால்பொருந்துகைபோருமோ. நான் தறைக்கிடைகிடக்க, உங்களுக்கிது போகமாய்த் தலைக்கட்டுமோ; என்னையும் * மென்மலர்ப்பள்ளி பொறுப்பித்தாலன்றோ உங்களுக்கிது போகமாவது. (அலர்மேலசையுமன்னங்காள்) உங்கள்செயலுக்கவனால் வாராதொழியவொண்ணாது. உங்களுக்குச் சேர்த்தல்லது ஸ்வரூபசித்தியில்லை. ஆனபின்பு நானிக்கிடைகிடக்க ப்ராப்தியுண்டோ. ஸம்ஶ்லேஷத்தாலே பூவிலே அசையாநின்றுள்ள அன்னங்காள். (விடிவையித்யாதி) புறப்பட்டவாறே சங்கத்வநி செவிப்படுகிறதிறே. இங்குப்போலே கிடக்கிறதன்றேயங்கு, அங்குமிங்குப்போலேயாகில் வாரானோ. விடிவை-விடிவுகள்தோறும். (விடிவைசங்கொலிக்குந்திருவண்வண்டூர்) பகலுமிரவுமாய்க்காணு மவ்வூர்செல்லுகிறது [ஜ்ஞ-ஞுவஹ-ஞு] [ருதாங்பஹு-ஞு] என்கிறபடியே - காலம்கூறிட்டு அவ்வோகாலத்துக் கடைத்த வுபகரணங்களைக்கொண்டு சாணு மவனநுபவிக்கிறது; இல்லையாகில் [ருதூந்] என்னவேண்டாவிறே. வத்ஸராந் என்னவமையுமிறே. (விடிவைசங்கொலிக்கும்) விடியாவிராவிறே யிவளிருக்கிறவிடம். (திருவண்வண்டூருறையும்) விடியாதவூரிலே யென்னைவைத்தான், விடியுமூரிலே தானிருந்தான். அவன் யாதோரிடத்திலே நின்றால், அவ்விடம் விடியுமத்தனையிறே. * பகற்கண்டேன்நாரணனைக்கண்டேனிறே. (கடியமாயன்றன்னை) ஆஶ்ரிதவிரோதிகளை யழியச்செய்யுமிடத்தில் கண்பாராத ஆஶ்சர்யத்தையுடையவனை. (கண்ணனை) ஆஶ்ரிதர்க்குத் தான் கையாளாகநின்று தன்னைக்கொடுக்குமவனை. (நெடுமாலை) இத்தனையும்செய்தாலும், "ஒன்றும்செய்யப்பெற்றிலோம்" என்னும் வ்யாமோஹத்தை யுடையவனை. அன்றிக்கே, கடியமாயனென்றது - தன்னைப்பிரிந்தார்படும்நோவறியாத கொடுமையையுடையவனை. (கண்ணனைநெடுமாலை) பவ்யதை ஸாதாசித்கம், முதன்மையேகிடிகோள் பெருத்திருப்பது. இனி யெளிய

னதுவும் வேண்டிச் செய்தானல்லன், இத்தலையை நலிகைக்காகச்செய்த செயல்கிடிகோள். ( கொடியவல்வினையேன் ) நாட்டார்படி யல்லாத பாபத்தைப்பண்ணினேன். அல்லாதார்வினை பகவத் ப்ரத்யாஸத்தியாலேபோமிறே, ப்ரத்யாஸத்திதான் பாதகமாம்படியான பாபத்தைப்பண்ணினேன். (திறம்) ஒருமஹாபாரதமிறே. (கூறுமின்வேறுகொண்டே) செவிப்படாதபடி ஓலக்கத்திலே சொல்லாதே, ஏகாந்தத்திலேசொல்லுங்கோள். அதாவது - அவனு மவளுமா யிருந்தவிடத்திலே சொல்லுங்கோளென்கை. அதாவது - "என்திருமார்வற்கென்னை" என்றும், "திருமாலார்க்கென்பிழைத்தாள்" என்றும், "மாதரைத்தம்மார்வகத்தே வைத்தார்க்கு" என்றுமிறே யிவர்தமக்குப் பாசுரம். ( வேறுகொண்டே - கூறுமின் ) "ஸீதாஸமக்ஷம்காகுத்ஸ்தம்" ( ஸீதாஸமக்ஷம்காகுத்ஸ்தம் ) என்கிறபடியே அத்தை ஜீவிப்பிக்கு மவள் ஸந்நிதியிலேசொல்லுங்கோள். நல்வார்த்தைசொல்லுவாரு மவனுமான விடத்தே சொல்லுங்கோள்...........................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. ( அடிகளித்யாதி ) "அன்னங்காள், திறங்கூறுமின்வேறுகொண்டு" என்கிறபதங்களைக் கடாக்ஷித் தவதாரிகை ( சிலவன்னங்களையித்யாதி ) "வேறுகொண்டு" என்றத்தைப்பற்ற ( ஏகாந்தத்திலேயித்யாதி )

"அடிகள்கைதொழுது - கூறுமின்" என்று விசேஷித்ததுக்குபாவம் ( நீங்களுமித்யாதி ) உன்னையுபேக்ஷித்துப்போனவன் தொழுதால் வருமோவென்ன (வரவுதாழ்த்ததித்யாதி) விவரணம் (வந்தேறியானவித்யாதிவாக்யத்வயம்) க்ருபைக்கழிவில்லாமையைக் காட்டுகிறார் ( அது ஸத்தையித்யாதி )

"அலர்" என்றதுக்கு பாவம் ( நான் பூக்காணவித்யாதி ) "மேல்" என்றதுக்குபாவம் ( நான் தறையித்யாதி ) விவரணம் ( என்னையுமித்யாதி ) * அசைகையை - நடையாக்கியர்த்தம் ( உங்கள்செயலுக்கித்யாதி ) செயலுக்கென்றது-நடைக்கென்றபடி. "ஸாப்ரஸ்கலந்தீ" ( ஸாப்ரஸ்கலந்தீ ) இத்யாத்யநுஸந்தேயம். "அன்னங்காள்" என்றதுக்கு ஹார்த்தபாவம் ( உங்களுக்கித்யாதி ) அதாவது - ஆர்த்தையான நானிருக்கிறவிடத்திலே வந்திருக்கிற வுங்களுக்கு, என்னை யவனோடே சேர்த்தாலொழிய ஸ்வரூபசித்தி யில்லையென்றபடி.

அவ்வூருக்கு வழியறியும்படி யென்னென்ன ( புறப்பட்டவாறேயித்யாதி ) அவ்வூர் சங்கொலிக்குமென்றவாறே - இவ்வூருக்கில்லையென்னுமத்தை சித்தவத்கரித்து ஹார்த்தபாவம் ( இங்குப்போலேயித்யாதி ) இங்குப்போலேயென்றது-இங்கு * நீளிரவாய் சங்கத்வநி யில்லாமல் கிடக்கிறுப்போலே யென்றபடி. "இங்குப்போலே கிடக்கிறதன்று" என்கிறதுக்கு நியாமகமேதென்ன ( அங்குமித்யாதி ) "விடிவை" என்றதுக்குபாவம் ( பகலுமித்யாதி ) இத்தால் - காலாநுகுணபோகோபகரணங்களைக்கொண் டநுபவிக்கிறுரென்று விவக்ஷித்து, அதுக்கு ப்ரமாணம் ( ருதூம்பஹூநித்யாதி ) இதுக்கு நியாமகமேதென்ன ( இல்லையாகிலித்யாதி ) இல்லையாகிலென்றது - "காலத்துக்கடைத்த போகோபகரணங்கள்கொண்டுபுஜித்தார்",

என்னுமது கூடாதாகிலென்றபடி. அவ்வூரிலே விடிவையென்கையாலே- இவளிருக்கிறவிடத்திலே விடிவில்லையென்கிருர் ( விடியாவித்யாதி ) "விடிவைசங்கொலிக்கும் - திருவண்வண்டூருறையும்" என்றுகூட்டி, அதுக்குஹார்த்தபாவம் ( விடியாதவூரிலேயித்யாதி ) இது விடியாதவூராகைக்கும், அது விடியுமூராகைக்கும் ஹேதுவேதென்ன ( அவன் யாதோரிடத்திலே யித்யாதி ) அவனிருந்தவிடம் விடிந்ததென்றதுக்கு ப்ரமாணம் ( பகலித்யாதி )

பூர்வர்கள் நிர்வாஹத்திலே ( ஆஶ்ரிதவிரோதிகளையித்யாதி ) பட்டர்நிர்வாஹத்திலே ( அன்றிக்கேகடியவித்யாதி ) காதாசித்கமாயாகிலும் பவ்யதையுண்டேயென்ன ( இனியெளியனுனதுவுமித்யாதி ) கொடுமை - க்ரௌர்யம். கடியமாயன்றன்னை - கடிநனுன வாஶ்சர்யபூதனையென்று சப்தார்த்தம்.

"கொடியவல்வினையேன்" என்று விசேஷித்ததுக்கு பாவம் ( நாட்டாரித்யாதி ) விவரணம் ( அல்லாதாரித்யாதி ) ப்ரத்யாஸத்தி - பகவத் ஸமாஶ்ரயணம். "திறம்" என்றதுக்கு - அவதாரிகையிற்சொன்ன வர்த்தமொழிய, இங்கே - வ்யஸநஸமூஹமென்று கண்டுகொள்வது. திறம் - ஸமூஹம். "வேறுகொண்டே—கூறுமின்" என்றத்தால் பலிதம் ( செவிப்படாதபடியித்யாதி ) வேறுகொண்டு-ஏகாந்தமானவிடங்கொண்டென்று சப்தார்த்தம். ஏகாந்தத்திலே யென்ருல் - அவனுமவளுமானவிடத்திலேயென்று காட்டுமோவென்ன; மூன்றுதூதிலு மிவளோட்டைச் சேர்த்தியை முக்தகண்டமாகச் சொல்லுகையாலே இங்கு மதுவே யர்த்தமாகவேணுமென்கிருர் ( அதாவது என்றிருமார்வற்கித்யாதி ) இவளோட்டைச் சேர்த்தியிலே சொன்னுல் கார்யமறுதியாகப்பலிக்குமென்னுமத்தைக் காட்டுகிருரென்னுதல், "அவனுமவளுமாய்" இத்யாதி வாக்யவிவரணமாதல் ( ஸீதாஸமக்ஷமித்யாதி ) வார்த்தை ஜீவிக்கும் ப்ரகாரத்தைக்காட்டுகிருர் ( நல்வார்த்தையித்யாதி ) கீழ்வாக்யவிவரணமாதல். "ந கஸ்சிந் நாபராத்யதி" ( நகஶ்சிந்நாபராத்யதி ) என்ற நல்வார்த்தையென்றபடி.

அலர்மேலசையுமென்று தொடங்கி, நெடுமாலைக்கண்டு, அடிகள்கைதொழுது, வேறுகொண்டு, கொடியவல்வினையேன் திறங்கூறுமினித்யந்வயః. "ராமஸ்து ஸீதயா ஸார்த்தம் விஜஹார பஹூந் ருதூந்" ( ராமஸ்துஸீதயாஸார்த்தம் விஜஹாரபஹூந்ருதூந் ) இத்யாதி, பாலகாண்டே.................................*

## பத்தாம்பாட்டு.

வேறுகொண்டும்மையானிரந்தேன்வெறிவண்டினங்கா
டேறுநீர்ப்பம்பைவடபாலைத்திருவண்வண்டூர்
மாறில்போரரக்கன்மதிணீறெழச்செற்றுகந்த
வேறுசேவகனுர்க்கென்னையுமுளளென்மின்களே.

### ஆருயிரப்படி.

( வேறுகொண்டு ) தன்னுடைய புஜபலத்தாலே சகல ஜந்துஜாதமும் சுபரித்ராதமாய்ச் செல்லாநிற்கச்செய்தே, திருவண்வண்டூரிலுள்

ள தன்னுடைய நிரவதிக ஸம்ருத்தியாலே பென்னை மறந்த வவனுக்கு, தனக்கு ரக்ஷணீயையாயிருப்பாள் நானுமொருத்தியுளளென்று சொல்ல வேண்டுமென்று சில வண்டுகளை யபேக்ஷிக்கிருள்.......................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரிதவ்யாமோஹகார்யமான விரோதிநிரஸந சாமர்த்யத்தை யுடையவனைக் குறித்துச் சில வண்டுகளைப் போகவிடுகிருள்.

வெறி - "ஸர்வகந்த: ஸர்வரஸ:" (ப்ரஹ்மகந்த:ப்ராவிஶதி) என்று முக்தனுக்கு * அமரர்சென்னிப்பூவான ப்ரஹ்மகந்தப்ராப்திபோலே, உங்கள்போகவிஷயமான பூவில் பரிமளம் ஸங்க்ரமிக்கும்படியான வடிவை யுடைய. வண்டினங்காள் - வண்டினங்காள். உம்மை - உங்களை. வேறுகொண்டு - இதர ஸஜாதீயபுத்தி பண்ணுதே யத்யந்த வ்யாவ்ருத்தபுத்திபண்ணி. யான் - உங்கள் வ்யாவ்ருத்தியேதஞ்சமென்றிருக்கிற நான். இரந்தேன் - உத்தேஶ்யனுனவவன்பக்கல்பண்ணும்ப்ரார்த்தனையை, அவனைச்சேர்த்துத்தருமுங்கள் பக்கலிலே பண்ணினேன். விரஜைக்கக்கரையான தேசம்போலே, தேறு - தெளிந்த. நீர் - நீரையுடைய. பம்பை - பம்பைக்கு. வடபாலை - வடகரையான. திருவண்வண்டூர் - திருவண்வண்டூரில். மாறு - எதிர். இல் - இல்லாத. போர் - யுத்தத்தையுடையனுய். அரக்கன் - யுத்தக்ரௌர்ய ஹேதுவான ராக்ஷஸஜந்மத்தையுடைய ராவணன். மதிள் - அரணுகவிட்ட மதிளை. நீறெழ - பொடிப்பொடியாம்படி. செற்று - அழித்து. உகந்த-அத்தாலே "க்ருதக்ருத்யர்" என்னும்படி யுகந்திருப்பாராய். ஏறு - அநுகூல ப்ரதிகூலவிபாகமற வெல்லார்க்கும் ஸம்ப்ரதிபந்நமான ஸம்ருத்தியையுடைத்தான. சேவகனுர்க்கு - பராக்ரமாதிசயத்தையுடையவர்க்கு. உளள் - தாம்சேவகஞ்செய்து விரோதிநிரஸநம்பண்ணிப் பெற்றவளொழிய இவளுமொருத்தி யுளளென்று. என்னையும் - என்னையும். என்மின்கள் - சொல்லுங்கோள்.

அவளையொழிய வென்னையு மிதற்கு முன்பு ஸத்தையோடேயிருந்தாளென்னுங்கோளென்றுமாம். இத்தால் - "யஶோபி: - ஸஹ" (யஶோபி:-ஸஹ) என்கிறபடியே, கடகருடைய பகவதநுபவ ப்ரதைபால் வந்த ஸௌரப்யந்தோற்றுகிறது. வெறியென்று - தேஜஸ்ஸாய், ஔஜ்ஜ்வல்யமாகவுமாம்...........*

## ஈடு-பத்தாம்பாட்டு.

"சிலவண்டுகளைக்குறித்து, அவர் இந்தலையில் சத்தையுமில்லை யென்றிருப்பர், அவளுமுளளென்றுசொல்லுங்கோளென்கிருள்" என்றுளவந்தாரருளிச்செய்வர். "இத்தலை யில்லையாகி லத்தலை யுண்டாகக் கூடாது; 'பெண்பிறந்தார் காரியமெல்லாம் செய்தோம்' என்றுக்ருதக்ருத்யரா யிருக்கிறவர்க்கு, ரக்ஷ்யவர்க்கத்திலே நானுமொருத்தியுண்டென்று சொல்லுங்கோளென்கிருள்" என் றெம்பெருமானு ரருளிச்செய்வர்.

(வேறுகொண்டு) திக்குக்கள்தோறும் முதலிகளைப்போகவிடாநிற்கச்செய்தே திருவடிகையிலே திருவாழிமோதிரங்கொடுத்துவிட்டாப்போலேகாணும். "விஶேஷேண து ஸுக்ரீவோ ஹநுமத்யர்த்தமுக்தவாந்"

வாநு" (விஶேஷேண து ஸுக்ரீவோ ஹநூமத்யர்த்தமுக்தவாந்) என்றுப்போலே. (உம்மை) இரந்தார் காரியம் செய்தன்றிநிற்கமாட்டாதவுங்களை. (யான்) அவனுடைய முதலிரப்புப்போலேகாணுமிவளதும். (யானிரந்தேன்) அவன்தானிரக்கவிருக்குமவளிறே. இவள்பக்கலிலே தாழநிற்பானவனாயிற்று. வேறுகொண்டிவற்றை யிரக்கவேண்டுவானென்னென்னில்; அவற்றிலுமிவை பதஸ்த்தமாகையாலே; இன்னமொன்று - ஸதோபீதியுமின்றிக்கே, வளையத்தேயிருந்து வார்த்தைசொல்லவும்வற்றே; "தேனுண்ணும் வண்டேபோல் பங்கிகள்" என்றும் - அவனுக்குத்தலையான த்ருஷ்டாந்தமாகவும் சொல்லுவதிவற்றையிறே. (வேறுகொண்டும்மையானிரந்தேன்) நம்மாசார்யர்கள் வ்யாபகமந்த்ரங்கள் மூன்றிலும் த்வயத்தையே யாதரிக்குமாபோலே. இவைதான் ஷட்பதங்களுமே. (வெறிவண்டினங்காள்) உங்களுக் கென்கார்யம் செய்தல்லது நிற்கவொண்ணுதாயிருந்தது. கலவியாலுண்டான வேறுபாடடங்கலும் வடிவிலே தோன்றும்படியாயிருந்தது. வெறி – பரிமளம். பரிமளத்தையுடைத்தாயிருக்கை. தனித்துப்போனாலும் வழிக்குபாதேயம்போந்திருந்ததீ. உடம்பைமோந்துகொண்டுபோகவமைந்துகாணுமிருக்கிறது. இனங்காளென்கையாலே - இவைதனக்குப் பிரிவில்லையிறே. "𑌸𑌰𑍍𑌵𑌗𑌨𑍍𑌧𑌃" (ஸர்வகந்தஃ) என்கிறவிஷயத்தோடே யணைந்த விவளுக் கிவற்றின்பரிமளங்கண் டாபீ⁰சர்யப்படும்படிகாணும் வாசனையுங்கூட மறந்தபடி.

(தேறுநீர்ப்பம்பை) இவ்வூரொல்லையைக்கழிந்தவாறே தெளிந்த பதார்த்தங்களையும் காண்கிறிகோளிறே. இவளிருந்தவிடத்தி லடையக்கலங்கியிறே கிடக்கிறது. [𑌉𑌪𑌤𑌪𑍍𑌤𑍋𑌦𑌕𑌾 𑌨𑌦𑍍𑌯𑌃] [உபதப்தோதகா நத்யஃ] "தாபார்த்தனுக்கு நீரிலே விழுந்தால் தாபமாறும்" என்னுமிவ்வாசனையைக் கொண்டு, "ராமவிப்⁰லேஷத்துக்கு மிது பரிஹாரமாமோ" என்று ஜலத்திலே விழுவதாகக்கொண்டுசெல்ல, கரையிலுங்கூடக்கிட்டவரிதாயிருந்தது. "நிலைநீர்கள்தான்குளிரவற்றோ" என்றுபார்த்தார்கள், அவையுமப்படியேயா யிருந்தன. [𑌪𑌲𑍍𑌵𑌲𑌾𑌨𑌿 𑌸𑌰𑌾𑌂𑌸𑌿 𑌚] [பல்வலாநிஸராம்ஸிச] வ்ருக்ஷங்களோடு வஸிஷ்ட்டாதிகளோடு வாசியற அழியுமாபோலே. இப்படியேயிறே யிவளிருக்கிறவிடம். (வடபாலைத்திருவண்வண்டூர்) வடபாலை - வடபார்ப்⁰வத்திலே. ஊருமாறுமின்னப்ரதேசத்தே யென்னுமிடம் நெஞ்சிலேபட்டுக் கிடக்கிறபடிகாணுமிவர்க்கு. கடலுக்குத் தென்பாலிருக்கிற பிராட்டியைப்போலேயாயிற்றிவளிருக்கிற விருப்பு. (மாறிலித்யாதி) அறிவிப்பார்தாழ்வே; பின்பு விரோதியென்று கிடப்பதொன்றில்லை. (மாறில்போரரக்கன்) வீரப்பாட்டுக்குத்தலையான சக்ரவர்த்திதிருமகனார் "நமக்கிவனெதிரியாகப்போரும்" என்று மதிக்கும்படியாகப் பிறந்த பையல். வரபலபுஜபலங்களாலே யெதிரில்லாத போரையுடைய ராவணனையும், அவன் தனக்கரணாக

இட்ட மதிளையும் துகளாம்படியழியச்செய்து ஹ்ருஷ்டராயிருக்கிற. (ஏறுசேவகனார்க்கு) (எங்குமோர்பேர்பட்ட ஆண்பிள்ளைத்தனத்தையுடையவர்க்கு. (உகந்த) "ருஷிகள்குடியிருப்புப்பெற்றோம், பிராட்டியோடே கூடப்பெற்றோம், லங்கையை விபீஷணவிதேயமாக்கப்பெற்றோம்" என்றுகந்த.) அல்பம் வரவுதாழ்த்ததென்று, எதிரிகள் மதித்துமேலெழுத்திட்ட வீரப்பாட்டுக்குக் குறைசொல்ல வொண்ணாதிறே. "ரயுவர்யஸஸம்மதஃ" (ரதசர்யாஸஸம்மதஃ) என்று வீரர்கள் கொண்டாடினவீரமிறே. (என்னையுமுளளென்மின்களே) இன்னமும்நோவுபடுகிறாளுண்டென்று சொல்லுங்கோள். ஆளவந்தாரருளிச்செய்ததாகத் திருமாலையாண்டான் பணிக்கும்படி. "'இத்தலையைப்பிரிந்தாரிருப்பாரில்லை' என்றிருக்கையாலே வாராதொழிந்தா ரத்தனை, இத்தலையில் சத்தையுள்ளமையை யறிவியுங்கோள்" என்று. இத்தை யெம்பெருமானார் கேட்டருளி, "அழகிது; ஆகிலும், 'இன்றியமையாமை' என்று தமிழரதொரு ப்ரவாதமுண்டு; அதாகிறது - ஒருதலையுண்டானாலொரு தலையின்றிக்கே யிராது; இரண்டுதலையுமுண்டாதல், இரண்டுதலையு மின்றிக்கே யொழித லித்தனையாயிற்று. அதில், தாமுளராகையாலே இத்தலையுமுண்டென்கை நிப்ரஸிதம்; ஆனபின்பு, ப்ரதிகூலித்தாரைக் கிழங்கெடுத்துப்பொகட்டு அநுகூலித்தார் தலையிலே முடியைவைத்து க்ருதக்ருத்யராய், 'இனிக் கர்த்தவ்யசேஷமில்லை' என்றிருக்கிறவர்க்கு, இன்னமும் ரக்ஷ்யவர்க்கமொன்றுண்டென்று சொல்லுங்கோள்" என்று...*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (வேறுகொண்டித்யாதி) "வண்டினங்காள், என்னையுமுளளென்மின்கள்" என்கிறபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (சிலவண்டுகளையித்யாதி) "உளள்" என்றதுக்கர்த்தம் - உண்டாயிருக்கிறாளென்றிறே; இது வெறுமனே சொல்லக்கூடாமையாலே, அவன் "இல்லை" என்று நினைத்தானாகவேணுமென்று திருவுள்ளம்பற்றி (சத்தையில்லையென்றிருப்பர்) என்கிறார். அப்போது "என்னையும்" என்கிற சப்தத்துக்கு-நிறந்தொடக்கமானவையில்லாதவோபாதி சத்தையுமில்லையென்றர்த்தமாகத் திருவுள்ளம்பற்றி (சத்தையுமில்லையென்றிருப்பர்) என்கிறார். ஆளவந்தார்நிர்வாஹத்துக்கு, "உளள்" என்கிறபதத்துக்கு ஸ்வாரஸ்யமுண்டு; * சப்தத்துக்கும், "மாறில்போர்" என்றுதொடங்கி "ஏறுசேவகனார்க்கு" என்கிறதுக்கும் ஸ்வாரஸ்யமில்லை. எம்பெருமானார் நிர்வாஹத்திலே, இவையிரண்டுக்கும் ஸ்வாரஸ்யமுண்டு; "உளள்" என்கிறபதத்துக்கு ஸ்வாரஸ்யமில்லை.

"வேறுகொண்டு" என்றதுக்கு - வ்யாவ்ருத்தமாகபுத்திபண்ணி. அதாவது-அல்லாதபக்ஷிகளிற்காட்டில் விசேஷித்துக்கார்யம்செய்யச்சமர்த்தமென்று நிஶ்சயித்தென்றர்த்தம் விவக்ஷித்து, அதுக்கு த்ருஷ்டாந்தம் (திக்குக்கள்தோறுமித்யாதி) த்ருஷ்டாந்தாந்தரம் (விஶேஷேணேத்யாதி) "விஶேஷேண [illegible] வொஹ [illegible] । [illegible]"

யெ-ராய-ஷலாயெ ந " (விஶேஷேண துஸ–க்ரீவோஹநுமத்யர்த்தமுக்தவாந் । ஸஹிதஸ்மிந்ஹரிஶ்ரேஷ்டேநிஶ்சிதார்த்தோர்த்தஸாதநே ) இதிகிஷ்கிந்தாகாண்டே. அவனுடைய முதலிரப்புப்போலேயென்றது- "யஸ்ய ப்ரஸாதே ஸதத" (யஸ்யப்ரஸாதேஸததம்) என்றிருக்கக்கடவவன் "வாநரேந்த்ரஸ்ய ப்ரஸாதமபி காங்க்ஷதே" (வாநரேந்த்ரஸ்ய ப்ராஸாதமபிகாங்க்ஷதே ) என்றிரந்தாப்போலே, சர்வராலு மாஶ்ரயிக்கப்படும் பெருமையையுடைய விவளும் திர்யக்குக்களையிரக்கிறவிதுவு மென்றபடி. அவன்றன்னை யிரக்கவிருக்கு மவளிறே யித்தையிரக்கிறுளென்று தாத்பர்யாந்தரம் ( அவன்தானித்யாதி ) இவளவனையிரக்கப்ராப்தமாயிருக்க, அவனிவளையிரக்குமோவென்ன (இவள்பக்கலித்யாதி) அவற்றிலுமிவை பதஸ்த்தமாகையாலேயென்றது-அந்தப்பக்ஷிகளைப்பற்றவு மிவற்றுக்குக்காலதிகமாகையாலே யென்றபடி; பதருதேகார்யம் செய்யுமதாகையாலே யென்றும். த்ருதீயதாத்பர்யம் (தேனுண்ணுமித்யாதி) பெரியாழ்வார்திருமொழி ஒன்பதாந்திருமொழி இரண்டாம்பாட்டு, " செங்கமலப்பூவில் " இத்யாதி. இதுக்கர்த்தம்-மதுபானம்பண்ணுகிற வண்டுகள்போலே சுருண்டதிருக்குழல்களென்று. பங்கி-குழல். தலையானத்ருஷ்டாந்தம் - ஶ்ரேஷ்டமான த்ருஷ்டாந்தமென்றும், தலைமயிருக்கு த்ருஷ்டாந்தமென்று மர்த்தத்வயம். ஆக, இவற்றை யிரக்கைக்கு ஹேதுத்ரயம். " அவற்றிலுமிவை பதஸ்த்தம் " என்னுமதுக்கு ஸ்வாபதேஶம் (நம்மாசார்யர்களித்யாதி) மூன்றிலுமென்றது - மூன்றையும்பற்றவென்னுதல்; மூன்றிலும் திருமந்த்ரத்தை யாதரிக்குமாபோலே யென்னுதே,த்வயத்தையென்றது-த்வயம் திருமந்த்ரவிவரணமாகையாலே வ்யாபகமாகநினைத்தென்னுதல். இவற்றுக்கு த்வயஸாம்யமெத்தாலே யென்ன (இவைதானித்யாதி) (ஷட்பதங்களும்) என்கிறசப்தம் - த்வயமும் ஷட்பதமென்கிறத்தை ப்ரத்யபிஜ்ஞைபண்ணுகிறது. "இனங்காள்" என்றதுக்குபாவம் (உங்களுக்கித்யாதி) அதாவது - நான் துःகிதையாயிருக்க உங்களுக்கு போகம்ரஸியாமையாலே, என்காரியம்செய்தல்லது நிற்கவொண்ணுதென்றபடி. "வெறி" என்றதுக்குபாவம் (கலவியாலித்யாதி) "வெறி" என்றதுக்குத் தாத்பர்யாந்தரம் (தனித்தித்யாதி) விவரணம் (உடம்பையித்யாதி) " தனித்துப்போனும் " என்பானென், விஶ்லேஷமில்லையோவென்ன (இனங்காளித்யாதி) தனக்கும் "ஸர்வகந்தः" (ஸர்வகந்தः என்கிறவனோடே கலந்தகந்தமுண்டே, அத்தைமோந்துகொண்டு தரித்திருந்தாலோவென்ன (சர்வகந்தஇத்யாதி)

" தெளிந்தநீரையுடையபம்பை" என்றதுக்குஹார்த்தபாவம் (இவ்வூரெல்லையையித்யாதி) " இவ்வூரெல்லையைக்கழிந்தவாறே " என்கைக்கு, தானிருக்கிறவிடமப்படி யிருக்கவில்லையோவென்ன ( இவளிருந்தவித்யாதி ) இதுக்கு த்ருஷ்டாந்தம் (உபதப்தேத்யாதி) " உபதப்தோதகா நத்ய: பல்வலாநி ஸராம்ஸி ச । பரிஶுஷ்கபலாஶாநி வநாந்யுபவநாநி ச. " ( உபதப்தோதகாநத்ய:பல்வலாநிஸராம்ஸிச । பரிஶுஷ்கபலாஶாநிவநாந்யுபவநாநிச ) " உபதப்தோதகா: " (உபதப்தோதகா:) என்றதுக்கு-"ஸமீபே பி தப்தோதகாः" (ஸமீபேபிதப்தோதகா: ) என்றர்த்தமாகையாலே ( கரையிலுங்கூட ) என்கிருர். " பல்வலாநி ஸராம்ஸி ச - உபதப்தோதகாநி " (பல்வலாநிஸராம்ஸிச - உபதப்தோதகாநி) இத்யந்வய:. நிலைநீர்கள்தான்குளிரவற்றேவென்றது - ஆற்றுநீரோடுகிறதாகையாலே சுடக்கூடும், இதுமேற்சுட்டாலு முள்குளிர்ந்திருக்குமாகையாலே தாபமாறுமென்று பார்த்தார்களென்றபடி. அவையுமப்படியேயாயிருந்தனவென்றது- ஆதி

த்டகிரணங்களாலன்றிக்கே,தனக்கே ராமவிரஹத்தால் வந்த தாபமாகையாலே எங்குமொக்கச் சுட்டிருந்தனவென்றபடி. "ஸராம்ஸி" என்னாதே, "பல்வலாநி" என்றதுக்குபாவம் (வ்ருக்ஷங்களோடித்யாதி) இத்தால் - உத்க்ருஷ்டரான வஸிஷ்ட்டாதிகளோடு, அபக்ருஷ்டமான வ்ருக்ஷங்களோடு வாசியற ராமவிரஹத்தால்வந்த தாபம் ஸமமாயிருக்குமாபோலே; சிறுகுழிகளோடு பெரியகுழிகளோடு வாசியற ராமவிஶ்லேஷத்தாலே யழிந்ததென்கை. இவருடைய ஸார்வஜ்ஞ்ய விஷயமாக வ்யாக்யாதாவினீடுபாடு (ஊருமாறுமித்யாதி) ஆளவந்தார் நிர்வாஹத்திலே பாவம் (அறிவிப்பாரித்யாதி) "மாறில்போரரக்கன்" என்று விசேஷித்ததுக்கு பாவம் (வீரப்பாட்டுக்கித்யாதி) "மாறில்போர்" என்றதுக்கர்த்தம் (வரபலேத்யாதி) ஏறுசேவகனார்க்கு - ஶத்ருகோஷ்டியிலு மேறும்படியான வாண்பிள்ளைத்தனத்தை யுடையவர்க்கென்றபடி. "உகந்த" என்றது - "ருஷிகள் குடியிருப்புப்பெற்றோம், பிராட்டியோடேகூடப்பெற்றோம், லங்கைவிபீஷணவிதேயமாகப்பெற்றது" என்றுகந்தவென்றபடி. மாறு - எதிர். "கடியன் கொடியன்" என்று - அவனை வெறுக்கிறவிவள், இங்கே "ஏறுசேவகனார்" என்றுகொண்டாடுகிறதென்னென்ன (அல்பமித்யாதி) அப்படி மேலெழுத்திட்டார்களோவென்ன (ரதசர்யாஸ்வித்யாதி) "ஸஜஸ்ஸ்வ ப்ருஷ்டேச ரதசர்யாஸு ஸம்மத: । யதா ந வேதேச நிரத: பித்ருஶுஶ்ருஷணே ரத:" (கஜஸ்கந்தேஶ்வப்ருஷ்ட்டேச ரதசர்யாஸுஸம்மத: । தநுர்வேதேசநிரத:பித்ருஶுஶ்ருஷணேரத:) இதி பாலகாண்டே. ஸம்மத: - ஶத்ருஸம்மதமான வீரத்தை யுடையவனென்றபடி. எம்பெருமானார் நிர்வாஹத்திலே (இன்னமுமித்யாதி) இத்தலையைப்பிரிந்தாரிலிருப்பாரில்லை யென்றிருக்கையாலே யென்றது - ஸ்வவைலக்ஷண்யஜ்ஞாநத்தாலே. "இன்றியமையாமை" என்றதுக் கர்த்தம் (இரண்டுதலையுமித்யாதி)

வெறிவண்டினங்காள், வேறுகொண்டும்மை யிர்யாரப்யார்வய:..........*

---

## பதினொன்றாம்பாட்டு.

மின்கொள்சேர்புரிநூற்குறளாயகன்ஞாலங்கொண்ட
வன்கள்வனடிமேற்குருகூர்ச்சடகோபன்சொன்ன
பண்கொளாயிரத்துள்ளிவைபத்துந்திருவண்வண்டூர்க்
கின்கொள்பாடல்வல்லார்மதனர்மின்னிடையவர்க்கே.

### ஆறாயிரப்படி.

(மின்கொள்) இப்பிராட்டி, ஒருபடியாலும் விரஹவ்யஸநமாற்றவும் முடியாததொரு தசைவரச்செய்தேயு மெம்பெருமானெழுந்தருளாதொழிந்தவாறே, தன்னழகாலே மஹாபலியைத்தோற்பித்து அவனகல் ஞாலங்கொண்ட வன்கள்வனடிமேற்சொன்ன வித்திருவாய்மொழியைவல்லார், மின்னிடையவர்க்கு மதனர்போக்யமாமாபோலே எம்பெருமானுக்கும் ஸ்ரீவைஷ்ணவர்க்கும் போக்யமாவரென்கிறார்.........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழியை யப்யஸித்தவர்கள் ஸ்புரத்ஸ்வபாவரான பாகவதவிஷயத்துக் குகப்புக்குறுப்பாவரென்று பலத்தையருளிச்செய்கிறர்.

மின்-ஒளியை. கொள்-உடைத்தாய். சேர்-திருமேனிக்கும் ப்ரஹ்மவர்ச்சஸத்துக்கும்சேர்ந்த. புரிநூல்-திருயஜ்ஞோபவீதத்தையுடைய. குறளாய்-வாமநனாய். அகல்-விஸ்தீர்ணமான. ஞாலம்-பூமியை. கொண்ட-அநந்யார்ஹமாக்கிக்கொண்டவனாய். வன்-கொடுக்கிறவனோடு நாட்டாரோடுவாசியற விசையும்படி ப்ரபலமான. கள்வன்-வஞ்சநத்தையுடையவன். அடிமேல்-திருவடிகள்விஷயமாக. குருகூர்ச்சடகோபன்-ஆழ்வார். சொன்ன-அருளிச்செய்ததாய். பண்-பண்ணுனது. கொள்-இயலைத்தனக்குள்ளேயாக்கிக்கொள்ளும்படியான. ஆயிரத்துள்-ஆயிரத்துள்ளே. திருவண்வண்டூர்க்கு-திருவண்வண்டூர்க்கேயாய். இன்-இனிமையை. கொள் - உடைய. பாடல்-பாட்டலான. இவைபத்தும்-இவைபத்தையும். வல்லார்-அப்யஸிக்கவல்லவர்கள். மின்-மின்போலேஸ்ப்புரிக்கிற. இடையவர்க்கு-மத்யாவயவத்தை யுடையவர்களுக்கு. மதனர்-மதநஹேதுவாவர்.

இத்தால் - ப்ரமாணஶரீரத்தில் மத்யமா வயவஸ்த்தமான அநந்யஶரணத் வௌஜ்ஜ்வல்யத்தையுடைய பாகவதர்க்கு ஹர்ஷஹேதுவாவரென்று கருத்து ...*

இது - கலித்துறை.

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில் - இத்திருவாய்மொழிவல்லவர்கள், காமிநிகளுக்குக் காமுகர் போக்யமாமாபோலே சர்வேஶ்வரனுக்கு ஸ்ப்ருஹாவிஷயமாவரென்கிறர்.

(மின்கொள்சேர்புரிநூற்குறளாய்) மின்னேவென்று ஶ்யாமமான திருமேனிக்குப்பரபாகமான சேர்த்தியுடைய திருயஜ்ஞோபவீதத்தையுடையஶ்ரீவாமநனாய். இப்போதிதுசொல்லுகிறது-அவன்சர்வஸ்வத்தையுங்கொடுக்கும்படி விநீதவேஷத்தோடேபோய்ப்புக்கபடி. "பகற்கண்டேன்" என்கிறதோற்றரவுக்குக்கிழக்குவெளுக்கிறபடி. தூதுவிடுகைக்குங்கூட சக்தனல்லாதமை தோற்ற இரப்பாளனாய், இத்தலையைப்பிரிந்துவந்த சிறும்புதலெல்லாம் வடிவிலேதோற்றநின்றபடி. (அகல் ஞாலங்கொண்டவன்கள்வனடிமேல்)பூமிப்பரப்படங்கலுமவனுக்கொன்றும் தொங்காதபடி அபஹரித்த மஹாவஞ்சகன் றிருவடிகளிலே. * மின்னிடைமடவார்க்குக்கிழக்கு வெளுக்கிறபடி. அதாவது-மஹாபலியினுடைய துர்மாநத்தைப்போக்கி ஒன்றொழியாமல் கைக்கொண்டாப்போலே, ப்ரணயரோஷத்தாலேவந்த இவளுடைய அபிமாநத்தைப்போக்கிச்சேர விட்டுக்கொண்டபடி. எதிரியாய் வந்தவனுடைய துர்மாநத்தைப்போக்கினப்போலன்றிறே ப்ரணயிநியுடையமாநம். அதழிக்கலாம், இதழிக்கவொ

ண்ணுதே. நிர்விஷயமாகக்கோபிக்கிறவர்கள் இலக்குப்பெற்ருல் மிகைக் குமத்தனையிறே. அவன் சந்நிதியிலு மழியாததொன்றிறேயிது. (குருகூ ரித்யாதி) (பண்கொளாயிரம்) "ஈழம்பிரம்புகொண்டது" என்னுமா போலே பண்ணேமிக்கிருக்கை. (இன்கொள்பாடல்வல்லார்) இனிதான பாடலைவல்லார். இதுக்குபலப்ரஸ்ருதி வேண்டாகாணும், இதுதன்னையே யினிதாகச்சொல்லவமையும். (மதனர்மின்னிடையவர்க்கே) காமிநிக ளுக்குக்காமுகரெவ்வளவு, இத்தையதிகரிக்கவல்லவர்கள் ஸ்ரீவைஷ்ணவ ர்களுக் கவ்வளவாவர். இங்ஙனன்ருகில், "பலநீகாட்டிப்படுப்பாயோ," "புறத்திட்டின்னங்கெடுப்பாயோ" என்றுசொல்லுகிற விவர், ஸ்த்ரீ களுக்கு போக்யராவரென்கிருரன்றே. காமிநிகளுக்குக் காமுகரைப்போ லே அபிமதவிஷயத்துக்கு போக்யராவரென்கிருர். காலைச்சொல்லப்பு க்குத் தாமரையைச்சொல்லாநின்றதிறே. சர்வதாசத்ருஸமான வற்றுக் றுக் குபமாநந்தன்னையே சொல்லக்கடவது. "அதுபோல" என்றும் "அதுதான்" என்றும் சொல்லக்கடவதாயிருக்கும்........................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (மின்கொளித்யாதி) "இவைபத்தும் - வல்லார் மதநர் மின்னிடை யவர்க்கு" என்கிறபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை (இத்திருவாய்மொழிவல்லவ ர்களித்யாதி)

சப்தார்த்தம் (மின்னையித்யாதி) கொள்கை - க்ரஸிக்கை. மஹாபலிபக்க லிலே யகல்ஞாலங்கொள்ளப் பார்க்கிறவிடத்திலே திருயஜ்ஞோபவீதத்தைச்சொல் லுகிறதுக்கு பாவம் (இப்போதித்யாதி) அதாவது - மஹாபலியைப்போலே யிவ ளையும் ஸர்வஸ்வாபஹாரம் பண்ண அவன்புக்கபடி யென்றிதுக்கு ஹார்த்தபாவம். * மின்னிடைமடவாராஸந்நமாக வாமநனைச் சொல்லுகிறதுக்குபாவம் (பகற்கண் டேனித்யாதி) அதாவது- *மின்னிடைமடவாரில் தோற்றரவுக் குபக்ரமித்தபடிசொ ல்லுகிறதென்று கருத்து. "மின்கொள்சேர்புரிநூல் குறளாய்" என்கிறபதத்வயத் துக்கும் ஹார்த்தபாவம் (அதுவிடுகைக்குமித்யாதி) சிறும்புதல்-ஸங்கோசம். வடி வில் கார்ஸ்யமித்யர்த்தஃ. * மின்னிடைமடவாராஸந்நமானவிடத்திலே "வன்கள் வன்" என்றதுக்குபாவம் (மின்னிடையித்யாதி) "அகல்ஞாலங்கொண்ட" என் கிறவிது - இவளுடைய அபிமாநத்தைப்போக்கி இவளோடே ஸம்ஸ்லேஷித்தமைக் குத்யோதகமென்கிருர் (அதாவதுமஹாபலியித்யாதி) அபலையினுடைய வபிமாந த்தைப்போக்கினதுக்கு எதிரியினுடைய வபிமாநத்தைப்போக்கினது த்ருஷ்டாந்த மாகமாட்டாதேயென்ன; அதிலுமதிகமென்கிருர் (எதிரியாயித்யாதி) இததிக மானபடி யெங்ஙனேயென்ன (அதழிக்கலாமித்யாதி) அழிக்கவொண்ணுதென்கி றதென், முகங்காட்டினு லபிமாநமழியாதோ வென்ன (நிர்விஷயமாகவித்யாதி) அதாவது - ப்ரணயரோஷத்தினுடைய உபக்ரமாவஸ்த்தையிலேபோனுற்போமித்த

ளையலலது; அதுமுற்றினால் முகங்காட்டினாலும் போகாது, அதிசயிக்குமென்றபடி. விவரணம் (அவன்ஸந்நிதியிலுமித்யாதி)

“பண்” - காநம். ஈழம் - த்வீபவிசேஷம். பிரம்புகொண்ட தென்கையாவது - பிரம்புமிருந்ததென்கை. “இன்கொள்” என்ற வினிமைக்குபாவம் (இதுக்கித்யாதி)

அவதாரிகாநுகுணமாகவர்த்தம் (காமிநிகளுக்கித்யாதி) அவதாரிகைக்குச் சேர; ஸர்வேஸ்வரனுக்கும் (ஸ்ரீவைஷ்ணவர்களுக்குமவ்வளவாவர்) என்று கூட்டுவது. இருந்தபடியே யர்த்தமானாலோவென்ன (இங்ஙனன்றிகிலித்யாதி) என்கிறானன்றேயென்றது - ஸ்த்ரீகளுக்கு போக்யராவரொன்கிற சொன்னக்கூடாதிறே யென்றபடி. அபிமதவிஷயமென்றது - ஈஸ்வரனையும் ஸ்ரீவைஷ்ணவர்களையும். ஆனால், மதனர்போலென்னாதே, “மதனர்” என்கிறதென்னென்ன; பரிஹாரம் (காலைச்சொல்லப்புக்கித்யாதிவாக்யத்ரயம்) (சொல்லாநின்றதிறே) “தாவிவையங்கொண்ட” என்கிறவிடத்திலேயென்றபடி. அங்குத் தான்சொல்லுகைக்குக் கருத்தேதென்ன (ஸர்வதேத்யாதி) “தாமரையன்னபொன்னாரடி” என்று - தாமரைப்பூப்போலே யென்கிறவிடங்களுமுண்டேயென்ன (அதுபோலவென்றுமித்யாதி)

மின்கொள்சேரித்யாரப்ய, பண்கொளாயிரத்துள் - திருவண்வண்டூர்விஷயமாயிருக்கிற - இவைபத்துமான - இன்கொள்பாடல்வல்லார் - மின்னிடையவர்க்கு - மதனரொன்றந்வயம். மதனர் - காமுகர்.........................................*

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(வைகல்பூங்கழிவாய்.)

𑌚𑌕𑍍𑌰𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌸𑍍𑌵𑌾𑌮𑌿𑌭𑌾𑌵𑌾𑌦𑍍𑌵𑌿𑌪𑌦𑌿𑌸𑌖𑌿𑌤𑌯𑌾𑌬𑌿𑌮𑍍𑌬𑌦𑍃𑌶𑍍𑌯𑌾𑌦𑌰𑌤𑍍𑌵𑌾𑌦𑌬𑍍𑌧𑌿
𑌶𑍍𑌯𑌾𑌮𑌾𑌤𑍍𑌮𑌕𑌾𑌨𑍍𑌤𑍍𑌯𑌾 𑌧𑍃𑌤𑌤𑍁𑌲𑌸𑌿𑌤𑌯𑌾 𑌨𑌿𑌰𑍍𑌜𑌰𑌾𑌧𑍀𑌶𑌭𑌾𑌵𑌾𑌤𑍍 । 𑌶𑌕𑍍𑌤𑌾𑌨𑍍
𑌸𑌨𑍍𑌦𑌿𑌷𑍍𑌟𑌵𑌾𑌨𑍍 𑌤𑍍𑌵𑌰𑌿𑌤𑌗𑌤𑌿𑌤𑌯𑌾 𑌸𑍍𑌵𑌾𑌂 𑌵𑌿𑌵𑌶𑍍𑌯𑌦𑍋𑌷𑌾𑌤𑍍 𑌶𑍍𑌰𑍀𑌶𑌂
𑌵𑍍𑌯𑌾𑌤𑍁 𑌕𑍃𑌷𑍍𑌣𑌂 𑌸𑌂𑌜𑌿𑌘𑍃𑌕𑍍𑌷𑍁𑌃 𑌶𑍍𑌲𑌿𑌷𑍍𑌟𑌵𑌾𑌕𑍍𑌯𑍈॥　　(௫௦)

(சக்ரித்வாத்) கைகொள்சக்கரத்தென் கனிவாய்ப்பெருமானைக்கண்டு - திருவாழியைத் திருக்கையிலே யுடையனாகையாலும்; (ஸ்வாமிபாவாத்விபதிஸகிதயா) நாதன் ஞாலமெல்லாமுண்டநம்பெருமானை - ப்ரளயாபத்திலே சகல லோகங்களையும் திருவயிற்றிலேவைத்து ரக்ஷித்தருளின ஸர்வேஸ்வரனாகையாலும்; (பிம்பத்ருஶ்யாதரத்வாத்) கனிவாய்ப்பெருமானைக்கண்டு - கோவைப்பழம்போலே தர்ஸநீயமான திருவதரத்தையுடையனாகையாலும்; (அப்திஶ்யாமாத்மகாந்த்யா) கடல்மேனிப்பிரான் - சமுத்ரம்போலே ஶ்யாமளமான திருநிறத்தை யுடைத்தாகையாலும்; (த்ருததுளஸிதயா) புணர்ந்தபூந்தண்டுழாய்முடி - திருத்துழாய்மாலையா

லே யலங்க்ருதமான திருமுடியையுடையனுகையாலும்; ( நிர்ஜராதீஶபாவாத் ) அமரர்பெருமானைக்கண்டு- * அயர்வறுமமரர்களதிபதியாகையாலும்; ( ரக்தாபாஸ்யாங்க்ரிபாவாத் ) செய்யவாய் செய்யகண் செய்யகை செய்யகால் - சிவந்ததிருப்பவளம், திருக்கண்மலர், திருக்கைகள், திருவடிகள், இவை யுடையனுகையாலும்; ( ப்ருதுமகுடதயா ) பெருநீண்முடிநாற்றடந்தோள் - தனக்குத் தகுதியான திருவபிஷேகத்தையுடையனுகையாலும்; ( ஆஶ்சர்யசர்யாவிஶேஷை: ) கடியமாயன்றன்னைக்கண்ணனை - அத்யாஶ்சர்யங்களானசேஷ்டிதங்களாலும்; ( லங்காத்வம்ஸாச்ச ) மாறில்போரரக்கன் மதிணீறெழச்செற்றுகந்த - "நநமேயம்" என்றெதிரம்புகோத்த ராவணனுடைய லங்கையையழிக்கையாலும், திருவண்வண்டூரெம்பெருமானை, தேசிகர் புருஷகாரமாகவடையப்படுமவனுக "வைகல்பூங்கழிவாய்" என்கிற தஶகத்திலே வகுளாபரணரருளிச்செய்தாரென்கிருர்.......................(சுO)

---

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

வைகல்திருவண்வண்டூர்வைகுமிராமனுக்கென்
செய்கைதனைப்புள்ளினங்காள்செப்புமெனக் - கைகழிந்த
காதலுடன்றூதுவிடுங்காரிமாறன்கழலே
மேதினியீர்நீர்வணங்குமின். (ருக)

( வைகல் ) இதில் - ஆற்றுமையாலே தூதுவிடுகிற ஆழ்வார்பாசுரத்தையநுவதித்தருளிச்செய்கிருர். அதெங்ஙனேயென்னில்; அடிவிடாமல் * நோற்றநாலிலும் - அமோகமாயிருக்கிற சரணவரணமாகிற ப்ரஹ்மாஸ்த்ரப்ரயோகம்பண்ணியிருக்கச்செய்தேயும், அவன் ஜகத்ரக்ஷணஹேதுவாக கார்யம் செய்யாதொழிய, அத்தாலே தம்மபேக்ஷிதங்கிடையாமல் மிகவும் தளர்ந்து, ஆர்த்தரக்ஷணத்திலேதீக்ஷித்திருக்கிறவனுகையாலே, நம்மார்த்தியையறிவிக்கவே தப்பாமல் நங்காரியம்செய்யும்; திருவண்வண்டூரிலைஶ்வர்யத்திலே கால்தாழ்ந்து நம்மைமறந்தானித்தனை; என்றநுசந்தித்து, கடகரையிட்டு, "நத்யஜேயம்" (நத்யஜேயம்) என்றதசரதாத்மஜனுக்குத் தந்தஶையை யறிவித்துச்சொல்லுகிறபடியை; நாயகன் வருமளவும் கண்டாறியிருக்கமாட்டாம லாற்றுமையாலே நாயகனைக்குறித்துத் தூதுவிடுகிறநாயகிபாசுரத்தாலே யருளிச்செய்கிற * வைகல்பூங்கழிவாயி லர்த்தத்தை "வைகல் திருவண்வண்டூர்" என்றுதொடங்கி யருளிச்செய்கிருரென்கை.

( வைகல்திருவண்வண்டூர்வைகுமிராமனுக்கு ) "தேறுநீர்ப்பம்பைவடபாலைத்திருவண்வண்டூர்மாறில்போரரக்கன்மதிணீறெழச்செற்றுகந்த ஏறுசேவகனுர்" என்றத்தை நினைக்கிறது. இரண்டாம்தூதுக்கு விஷயம் விபவமிறே "வ்யவஸாயஜ்ஞர் ரக்ஷணஸ்த்தைர்யம் பம்போத்தரதேஶஸ்த்தம்" என்ருரிறே. திருவண்வண்டூரிலே பிற்பட்டாரை ரக்ஷிக்கைக்கு சர்வகாலமும் நித்யவாஸம்பண்ணுகிற சக்ரவர்த்தி திருமகனுக்கு ஜநககுலசுந்தரி "ஜீவந்தீம்" (ஜீவந்தீம்) என்றுஆள்விட்டதும்

பம்பாபரிஸரபர்வதத்திலே வர்த்திக்கிறவரைக்குறித்தாயிற்று. (என்செய்கைதனை ப்புள்ளினங்காள்செப்புமென) என்தசையை பக்ஷபாதமுடையவர்களே தாழாம ற்சொல்லுமென்று. அதாவது - "குருகினங்காள்-வினையாட்டியேன்காதன்மையை-கைகள்கூப்பிச்சொல்லீர்" என்றும், "பாதம்கைதொழுதுபணியீரடியேன்திறமே" என்றும், "திறங்களாகியெங்கும்செய்களூடுழல்புள்ளினங்காள் - அடியேனிடரை-இறங்கிநீர்தொழுதுபணியீர்" என்றும், "மடவன்னங்காள் - உடலைந்தொருத் தியுருகுமென்றுணர்த்துமினே" என்றும், "உடன்மேயுமடவன்னங்காள் - அடி யேனுக்கும்போற்றுமினே" என்றும், "புன்னைமேலுறைபூங்குயில்காள் - மாற்றங் கொண்டருளீர்மையல்தீர்வதொருவண்ணமே" என்றும், "அடையாளந்திருந்தக் கண்டு - எனக்கொன்றுரையொண்கிளியே" என்றும், "கருந்திண்மாமுகில்போல் திருமேனியடிகளை - திருந்தக்கண்டெனக்கொன்றுரையாயொண்சிறுபூவாய்" என் றும், "அடிகள்கைதொழுதலர்மேலசையுமன்னங்காள் - கொடியவல்வினையேன்றி றங்கூறுமின்வேறுகொண்டே" என்று மிப்புடைகளிலே அத்யார்த்தியை யனைவர் க்குமறிவித்தவையென்கை. (கைகழிந்தகாதலுடன்தூதுவிடும்) "என்னையுமுள ளென்மின்களே" என்று - தாம்வந்து நோக்காவிடில் ஸத்தையில்லை, இப்போதுவ ந்து நோக்குகைக்கிடான ஸத்தாமாத்ரங்கிடக்கிற தென்னுங்கோ ளென்கையாலே, கைகழிந்தகாதலுடன் தூதுவிட்டபடி யிதுவாயிற்று. (காதலுடன்தூதுவிடும்காரி மாறன்கழலேமேதினியீர்நீர்வணங்குமின்) ஆற்றாமையோடே தம்பேற்றுக்கு கட கரையர்த்திக்கிற வாழ்வார்திருவடிகளை, உங்கள்பேற்றுக்கு, பூமியிலுண்டானவர்க ளே, நீங்கள்வணங்கிவழிபடுங்கோள். அவர் "மாநிலத்தெவ்வுயிர்க்கும்" என்னு மாபோலே, இவருமிருந்ததே குடியாக உபதேசிக்கிறார்........................(ருக)

ஆறும்பத்தில் - முதற்றிருவாய்மொழி முற்றிற்று.



ஆக - திருவாய்மொழி - ருக.—பாட்டு - ருசுங.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஆறும்பத்து.

## இரண்டாந்திருவாய்மொழி.

### மின்னிடைமடவார் – ப்ரவேஶங்கள்.

### ஆறுயிரப்படி.

(மின்னிடைமடவார்கள்) "இப்படி தன்னை நான்நெடுங்காலம் விஶ்லேஷித்திருக்கச்செய்தேயும் தூதப்ரேஷணம் பண்ணச் செய்தேயு மெம்பெருமா னெழுந்தருளாதொழிகிறது என்னுடைய நிகர்ஷாநுசந் தாநத்தாலே யென்னை யுபேக்ஷித்து, அவர்கள்பக்கலுள்ள ப்ரேமாதிசய த்தாலே அவர்களை விஶ்லேஷிக்கில் தரிக்கமாட்டாமையாலே" என்று நிஶ்சயித் தத்யந்தமவஸந்நையாய் ப்ரணயகோப யுக்தையுமாய், அந்த ப்ரணயகோபத்தாலே; தோழிமாரோடும், கிளிகள்பூவைகளென்றுள்ள தன்னுடைய லீலோபகரணங்களோடுங்கூட, "இனிநாமவன்வந்தாலுமவனைக் கடாக்ஷிக்கவுங்கடவோமல்லோம்" என்று சமயமிட்டுக்கொண்டு, அவனெழுந்தருளினாலும் வந்தணுகவொண்ணாததொருபடி யநபிபவநீயையாயிருக்க; எம்பெருமானு மிவளைப் பிரிந்த நிரவதிகவ்யஸநத்தாலே அத்யந்த மவஸந்நனாய்வந்து; இவளுடைய தோழிமா ரநபிபவநீயைகளாயிருக்கையாலே,அவர்களைச்சென்றணுகி அவர்களைப் புருஷகாரமாகக்கொண் டிவளுடைய திருவடிகளிலே விழுந்து ஸ்வாபராதத்தை க்ஷமிப்பித்து ஸம்ஶ்லேஷித்து தாரணம்பண்ணுதல்; தன்திருநாமங்களை க்கற்பித்து வளர்த்த விவளுடைய கிளிகள் பூவைகளென்றுள்ள லீலோபகரணங்களினுடைய வநபிபவநீயதையாலே, அவற்றைச் சென்றெடுத்துத் தன்திருநாமங்களைச்சொல்லுவித்து அவைசொல்லக்கேட் டாஶ்வஸித்தல்; இப்பிராட்டி தன்னுடைய வநபிபவநீயதையாலே, இவளை வந்தணுகி யிவளோடே ஸம்ஶ்லேஷித்து தாரணம்பண்ணுதல் செய்யப் பெறுமையாலே யாத்மதாரணக்ஷமனன்றியே; ஆத்மதாரணார்த்தமாக, ஸ்வஸம்ஸ்பர்ஶவிஸம்வாதாக்ஷமமான விவளுடையபந்து, கழல்களென்றவசேதநமான லீலோபகரணங்களையெடுத்து அவற்றை ஸர்வகாத்ரங்களாலும் ஸ்பர்ஶித்தும் ப்ரோக்ஷணம்பண்ணியு மாஶ்வஸித்து லப்தாத்மதாரணனாயிருந்த விவனை யபாங்கவீக்ஷணத்தாலே பார்த்து;........*

## பன்னீராயிரப்படி.

இரண்டாந்திருவாய்மொழியில், "இப்படி சடகோபஜ்ஞமாகவாஸ்ரயிக்க வுத்யோகித்தவர், அநாதிகாலம் பகவத்வேஷத்தாலே விமுகரான தம்மை யீஸ்வரன் ஸ்வயத்நத்தாலே யபிமுகராக்கிக்கொண்டபடியை யாராய்ந்து; இந்த அபிமுகீகரணத்துக்கடியான வவனுடைய விரோதி நிவர்த்தகத்வத்தையும், ஆகர்ஷகமான அவயவஸோபையையும், அகோஷாப்யக்ஷோபகத்வத்தையும், அகடிதகடநா சாமர்த்யத்தையும், ஆஸ்ரிதகார்யார்த்தமான பரிகரவத்தையையும், ஸர்வலோக நிர்வாஹகத்வத்தையும், ஆஸ்ரிதஸம்ரக்ஷணத்தி லத்யந்தாபிநிவேசத்தையும், அதிசயிதஜ்ஞானத்தையையும், அபிமததமமான முகஸோபையையும், அகிலப்ரகாரரக்ஷணத்தையு மநுசந்தித்து ; இந்த ஸ்வபாவவிசேஷங்களாலே, ஸ்வரூபாநுவிதமன்றியே தமக்குவந்தேறியான வைமுக்யத்தைக்கழித்து அபிமுகீகரித்துக்கொண்ட வாகாரத்தை, ப்ரணயரோஷத்தாலே விமுகையாய் "அவன்வந்தாலும் முகங்கொடேன்" என்று தோழிமாரோடேகூட லீலாப்ரஸங்கத்தாலே அந்யபரதாபாவனை பண்ணியிருக்கிற கோபிகையை யநுநயித்து ஊடல்தீர்த்து ஆபிமுக்யம்பண்ணுவித்துக்கொண்டு ஸம்ஸ்லேஷித்த வாகாரமாகிற அந்யாபதேசத்தாலே யருளிச்செய்கிறார்..............*

## ஈடு.

இவ்வாழ்வாராகிறார், ஸம்ஸாரபயத்தாலும் பகவத்ப்ராவண்யத்தாலும் கைங்கர்யருசியாலும் வ்யதிரேகத்தில் தரியாமையாலும், பகவத்விஷயத்தில் கைவைத்தா ரெல்லாருடைய படியு முடையரா யிருப்பர். "பொய்ந்நின்றஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்பும்" என்கையாலே - பத்தர்படியுண்டென்னவுமாயிருந்தது, "இந்நின்றநீர்மையினியாமுறாமை" என்றுகொண்டு-அதுபொருந்தாதபடியிருக்கையாலே, முமுக்ஷுக்கள்படியுமாயிருந்தது, "வழுவிலாவடிமைசெய்ய வேண்டு நாம்" என்று - கைங்கர்யத்தாலல்லது தேஹயாத்ரை செல்லாமையாலே, முக்தர்படியுண்டென்னலாயிருந்தது, "நின்னலாலிலேன்காண்" என்று - அதுதான் ஸத்தாப்ரயுக்தமாயிருக்கையாலே, நித்யரோடொக்கச் சொல்வலாயிருந்தது, ப்ரணயரோஷத்தாலே யூடுகையாலே - பிராட்டிமாரோடொக்கச் சொல்லலா யிருந்தது. "விஷ்ணுநாஸத்ருஸோவீர்யே ஸோமவத்ப்ரியதர்ஸந:" (விஷ்ணுநாஸத்ருஸோவீர்யே ஸோமவத்ப்ரியதர்ஸநः) என்று - பெருமாளுடைய வோரோ ஸ்வபாவங்களுக்கு சகலபதார்த்தங்களையு மொப்பாகச் சொல்லுமாபோலே, அல்லாதார்படி யடங்கலு மிவருடைய வோரோவவஸ்த்தைக் கொப்பா மத்தனை. இதுதான் பால்யாத்ப்ரப்ருதியிறேயிவர்க்கு, "அறியாக் காலத்துள்ளே யடிமைக்கணன்புசெய்வித்து" என்றும், "மூலையோமுழுமுற்றும்போந்தில - பெருமான்மலையோதிருவேங்கடமென்று கற்கின்றவாசகம்" என்றும் சொல்லுகிறபடியேயிறே யிவர்பருவம் நிரம்புவதற்குமுன்னு மிருக்கிறபடி. இனி * எருளுமிறையோனிலே - அவன் வேண்டாத நானுமென்னுடைமையும் வேண்டாவென்றார், * மாசறுசோதியிலே - எனக்

குறைப்பல்லாத வவனு மவன்விபூதியும்வேண்டா என்றழிக்கப்பார்த்தார், * பிறந்தவாற்றிலே - தரித்துநின்று குணநுசந்தானம்பண்ணவல்லேனும்படி யண்ணியருள வேணுமென்று சரணம்புக்கார், அப்பெரியவார்த்தியோடேகூடத் தூதுவிட்டார்; விட்ட ஆள்சென்று அத்தலைப்பட்டு அவனுக்கறிவிக்க, அவனுமிழவாளனாய் ஆனைக்கருள்செய்யவந்து தோற்றினாப்போலே பதறிநடந்துவாராநிற்க; அவ்வளவு பற்றாமே கிடந்து துடித்தலமந்து, “ இனியிவ்வளவில் நாம்செய்யவடுப்பதென் ” என்று பார்த்து, “ முடிந்துபிழைக்கைக்கு மேற்பட்டபரிஹாரமில்லை ” என்று பார்த்தறுதியிட்டு முடியப் பார்க்கிறாள். அதிவள் ஸங்கல்பித்தபோதாக முடியலாயிராதிறே; அங்ஙன் செய்யலாமன்று, இவள் * எருளுமிறையோனில் - வேண்டா என்றபோதே போமிறே இனிப்போகத்துக்கவன் வரவுவேண்டினவோபாதி முடிவுக்குமவன்வரவு வேண்டியிருந்தது. பிரிவில் குணநுசந்தானம்பண்ணி தரிக்கலாம், அவன் சந்நிதியிலவனையொழிய அரைக்ஷணம் முகம் மாறியிருக்குமதுக்கு மேற்படமுடிவுண்டோ. அவன்பேரநின்றித்தலையைப்பண்ணின மிறுக்கடங்கலும், அவன் சந்நிதியிலே தான்முடிந்து அவனையே நோவுபடுத்தப்பார்க்கிறாள். அவன்வரவிலே அல்பம்தாழ்க்க, ப்ரணயரோஷம் தலையெடுத்து, “ இனியிருந்துஜீவிக்கும்ஜீவநம்வேண்டா ” என்று முடியப் பார்க்கிறாளிறே பிரிவு பொறுக்கமாட்டாமை. [ ப்ரணயாஷாஹிஶா நாஷு வஸிஷிகெக்ஷுவஶாவவஃ ] [ ப்ரணயாச்சர்பிமாநாச்சபரிசிக்ஷேபரீகவம் ] என்கிறபடியே. அவரோடுண்டான சிரபரிசயத்தாலும் கலவியாலும், “ என்னுடையவரன்றோ ” என்கிறவேண்டப்பாட்டாலும் பெருமாளைமேலிட்டுவார்த்தை சொன்னாள். என்சொன்னாளென்னில் [ கிஂஷாஶ நூதவெவெஜஹஃ விதாஜெஶியிஶாயிவஃ । ஶாஜாஶாதாஂஷாவஃ ஸ்திரியாவஂஷவிஷுஹஃ ] [ கிம்த்வாமந்யதவைதேஹஃ பிதாமேமிதிலாதிபஃ । ராமஜாமாதரம்ப்ராப்ய ஸ்த்ரியம்புருஷவிக்ரஹம் ] என்று வாரீர், ஒருவனுக்காற்றவொருத்தியுண்டோ, என்னையொருத்தியையும் நோக்கமாட்டாமையே! வைத்துப்போகப்புகுகிறது. இது தன்னை யெங்களய்யர்கேட்கில் போரவெறுப்பர்; ஒருபெண்பெண்டாட்டி ஆணுடையுடுத்து என்மகளைக்கைப்பிடித்துக்கொண்டுபோனவித்தனையாகாதே யென்றிராமே கடுகக் கொண்டுபோகப்பாரும். [ ஶஂஷஹாஷெஶாஷஹவஹிஷ்க்ருத்ய ]; [ ஈர்ஷ்யாரோஷௌ பஹிஷ்க்ருத்ய ] பிறருயர்த்திகண்டால் பொறுக்கவேண்டாவோ. நான், “ உம்மோடேகூடப்போர ” என்று புறப்பட்டு நாலடியிட்டால், எனக்கத்தால்வரு மேற்றங்கண்டு பொறுக்கமாட்டாமையாலுண்டான கோபாஸூயைகளைப் பொகடும். [ ஷஶக்தெஶஷிவொஷகஃ ] [ புக்தஶேஷமிவோதகம் ] இதுவு மப்படியாகாதே தான். ப்ரணயிகள் கோஷ்டியிலிங்ஙனேகாணும் பரிமாற்றம் - ப்ரணயிநிகளுக் குண்டான

தன்னேற்றம் தன்னதாயிருக்கவேண்டாவோ. [नयमां वीर] [நயமாம்வீர] என்னை யறியாதாப்போலே உம்மையுமறிந்திலீராகில், நான் சொல்லக்கேளும். உமக்கொரு குறைகளுமில்லைகாணும், என்னைக் கொடுபோகப்பாரும். [विस्रब्धः] [விஸ்ரப்தஃ] தந்தாமை யறியாவிட்டா லாப்தர் வாயிலே கேட்டறியவேணுங்காணும். [पापं मयि न विद्यते] [பாபம் மயிநவித்யதே] போகடும்; இங்ஙனன்றாகில், நீரென்னை யிங்கே நிறுத்திப்போனால், நீர் மீண்டுவருந்தனையும் தரித்திருக்கைக்குவேண்டும்ஹேது வெனக்கில்லைகாணும். இப்படியிறே ப்ரணயரோஷம் தலையெடுத்தாலிருக்கும்படி. இன்னமிவ்வளவேயோ; இவர்தா மிலக்காகச் சொன்னவையிறேயிவை, இவர்வரவிட்டவாளின்முன்பேயும் [कुशली यदि काकुत्स्थः किं नु सागरमेखलाम् । महीं दहति कोपेन युगान्ताग्निरिवोत्थितः] [குஶலீயதிகாகுத்ஸ்த்தஃ கிம்நுஸாகரமேகலாம் । மஹீம்தஹதிகோபேநயுகாந்தாக்நிரிவோத்திதஃ] என்னுமவளிறே. [काकुत्स्थः] [காகுத்ஸ்த்தஃ] பரபரிபவம் பொறாத குடியிலேயன்றோ தாம்பிறந்தது; "பிறர்க்குவந்தவை பரிஹரிக்குமத்தனையல்லது, தமக்குவந்ததுபரிஹரிக்கலாகாது" என்றிருக்கிறாரோ. [किं नु सागरमेखलां महीं दहति] [கிம்நுஸாகரமேகலாம்மஹீம்தஹதி] "த்ரவத்ரவ்யத்துக்கோரம்பும் கடினத்ரவ்யத்துக்கோரம்பும் வேணும்" என்றிருக்கிறாரோ; கடலில் நீரே நெய்யாக வெரிக்கவல்ல அம்புடையவரன்றோ. ஒக்கக்கைப்பிடித்தவர்களாகிலும் பரிவட்டம் பேணியிருக்கும்படி வைத்தாரிறே; ராஜாக்களுக்கு பூமியும் ஸ்த்ரீபோலேயிறே. ஈஶ்வரர்கள் ஸ்ருஷ்டித்தபடி கிடப்பது இவர் கண்சிவக்குமளவுமாகாதேயென்றும்; [धर्मोपदेशात्त्यजतश्च राज्यं मां चाप्यरण्यं नयतः पदातिम्]. [தர்மோபதேஶாத்த்யஜதஶ்சராஜ்யம் மாம்சாப்யரண்யம்நயதஃபதாதிம்] என்கிறபடியே - பித்ருவசநபரிபாலநம் பண்ணப் போந்தாரோ, என்னை நலிகைக்காகப் போந்தாரத்தனையிறே யென்று மிப்புடைகளிலே சொன்னவை அநேகமிறே. இவளும் * மாசறுசோதிதொடங்கி - போர நோவுபட்டு, அது தன்னை * வைகல்பூங்கழிவாயளவும் வரப்பாடாற்றி, அவ்வளவிலும் வரக்காணாமையாலே தூதுவிட்டு, தூதவாக்யமத்தலைப்பட்டு மீளுவதற்குமுன்னே பற்றாதபடி பதறி, "இனி அவன்றான்வந்தாலும் ஸம்ஶ்லேஷமாய்அது விஶ்லேஷாந்தமாயல்லதிராது; ஆனபின்பு, அவன்வந்துகலந்து பிரிந்தகோள்வாய் பொறுக்க வரிதாயிருக்கும்; அநந்தரம் பிரிவாகிற புதுக்கோமுற்றவன் வந்துமுதன்மைகொண்டாடுமதில், முகம்பழகினவ்யஸனத்தையே யமையும்" என்று ஆற்றாமை தோற்றவிருந்தாள். எங்ஙனே யிருந்தாளோவென்னில் [हिमहतनलिनीव नष्टशोभा] [ஹிமஹதநளிநீவநஷ்டஶோபா] பன்னிரண்டாண்டு தண்ணீர்த்துரும்பறக்கலந்துபோந்தவிவளுக்கு வந்தேறியானபிரிவிறே, அத்தாலே அழகழிந்திருந்தாள்.

[வ்ஸநவாரமூரயா] [வ்யஸநபரம்பரயா] பிரிவோபாதிகலவியும் வந்து கழியப்பெற்றதில்லே. [அதிவீஷுஜா நா] [ அதிபீட்பமாநா ] ஆப்ரயத்தி னளவல்லாதபடியாயிருக்கை. [ ஸஹசாரஹிதேவசக்ரவாகீ ] [ஸஹ சராஹிதேவசக்ரவாகி] வருமளவுமுணர்ந்து பொறுத்திருக்கமாட்டாதி ருக்கை. அவற்றின்படி யங்ஙனேயிறே. [ ஜநகஸுதா ] [ ஜநகஸுதா ] " இவைவரும் " என்று வளரப்பெற்றதில்லே. [ க்ருபணாம்தஸாம்ப்ரப ஞா ] [ க்ருபணும்தஸாம்ப்ரபந்நா ] கீழ்ச்சொன்ன விவையொன்றுமொ ப்பாகமாட்டாது, சிலசொல்லிற்றுமித்தனே. இவளுமப்படியே, " முகம் பழகினவாற்றுமையோடே யிருந்து முடியவமையும், இனி, அவன் வர வுநமக்குவேண்டா " என்றிருக்கிருள். இவள்தானிப்படி பாரிக்கைக்கு அவன்றுன் வாராநின்றுனேவென்னில் ; அவன் வரவுக்கு ஸூசகமான நன்னிமித்தங்க ளநேகமுளவாயிருந்தன. [ பக்ஷீவ ] [ பக்ஷீச ] பக்ஷி யானது சிறகை விரித்தது. ( பக்ஷத்தையுடைத்தென்கிறவிசேஷணத்து க்கிதுவேயிறேகருத்து. ) [ ஶாகாநிலய: ] [ ஶாகாநிலய: ] உலர்ந்த கொம்பிலன்றிக்கே, பசுமையையுடைத்தான பணேயிலேயிருந்தது. வ்ரு க்ஷத்தை வலமாகவந்து, தழைத்தபணேயிலே நற்றரிக்கவிருந்தது. [ப்ர ஹ்ருஷ்ட: ] [ ப்ரஹ்ருஷ்ட: ] அங்குள்ள பலாதிகளே புஜிக்கையாலுண்டா ன ஹர்ஷம் வடிவிலே தோற்றும்படி யிருந்தது. [ புந:புநருத்தம ஸாந்த்வவாதீ ] [ புந:புநப்ʼசோத்தமஸாந்த்வவாதீ ] மேன்மேலன நல் வார்த்தைகள் சொல்லத் தொடங்கிற்று. அதுக்கு மேலே [ ஸுஸ்வாகதாம்வாசமுதீரயாந: ] [ ஸுஸ்வாகதாம்வாசமுதீரயாந: ] இவ்வளவல் லகிடாயத்தலேபட்டது என்று சொல்லுமாபோலேயிருந்தது. [புந: புநஶ்சோதயதீவ ] [ புந:புநப்ʼசோதயதீவ ] வரவு நிப்ʼசிதமான பின் பு, குளித்தலொப்பித்தல் செய்யாதிருக்கிற தென்னென்று சொல்லுமா போலே யிருந்தது. [ ஹ்ருஷ்ட: ] [ ஹ்ருஷ்ட: ] வந்தால் பிறக்கும்வேறு பாடுதோற்ற வுடம்புமயிரொறிந்திருந்தது. [ததாகதாம்] [ததாகதாம்] " ரஹஸ்யஞ்சப்ரகாஶஞ்ச " [ ரஹஸ்யஞ்சப்ரகாஶஞ்ச ] என்றுகொண் டு - ப்ரஹ்மாவின் ப்ரஸாதத்தாலே யுள்ளபடியெல்லாம் தோற்றக்கடவ தாகப் பெற்றுடையனுன ருஷிக்குப் பாசுரமிட்டுச் சொல்லவொண்ணுத படி யிருக்கிறபடி. [ தாம் ] தர்மிக்குமேற்பட அவ்வருகொன்றின்றிக்கே யிருக்கை. [ வ்யதிதாம் ] [ வ்யதிதாம் ] கீழ்ச்சொன்னவை ப்ரக்ருதியா ய், வ்யஸநமுள்ளது மேலே யென்று தோற்றும்படியாயிருந்தாள். " ஸமாத்வாதஶதத்ராஹம் ] [ ஸமாத்வாதஶதத்ராஹம் ] என்று பன்னிரண் டாண்டு கலந்து பிரிந்த விவளுக்கதொன்றுந் தோற்றுதே, துஃகத்தையி ட்டு நிரூபிக்கவேண்டும்படியா யிருந்தாள். [ அநிந்திதாம் ] [ அநிந்திதா ம் ] அத்தலேயைப்பிரிந்தா லிருக்கக்கடவபடியே யிருந்தாள். இப்படி யி

ராதவன்று நிந்திதையேயாகாதே. [ வ்ரெவத ஹஷா ] [வ்யபேதஹ ர்ஷாம் ] "ஹர்ஷம்குடிபுகுந்து, போயிற்று" என்று தெரியாதாயிருக் கை. [ வரிஹீநஶா நஸாஂ ] [ பரிதீநமாநஸாம் ] ஹர்ஷம்வந்தாலுமாப் ரயமுமின்றிக்கே யிருக்கை. [ ஶுஹாஂ ] [ ஶுபாம் ] மண்தின்றுவந்த நகடுபோலன்றிறே குணதிகவிஷயத்தைப் பிரிந்தா விருக்கும்படி. கட் லேறிலடிந்தாப்போலே யிருக்கிற வவ்விருப்பு தனக்கே யாலத்தி வழிக்க வேண்டும்படி யிருக்கை. [நிமித்தாநிஶுபாநிபேஜிரே] [நிமித்தாநிஶு பாநிபேஜிரே] நிமித்தங்களானவை யித்தலைக்கு நன்மைசொல்லித் தந் தாம் ஸ்வரூபம்பெற்றன. [ நரஂஶ்ரியாஜுஷ்டமிவோபஜீவிநः ] [ நரம் ஶ்ரியாஜுஷ்டமிவோபஜீவிநः ] ஸாக்ஷால்லக்ஷ்மிக்குக்கிஞ்சித்கரித்து ஸ்வ ரூபம்பெற்றன. என்போலவென்னில் ; ஆர்த்திகளாயிருப்பா ருதாரர்ப க்கலிலேசென்று தந்தாம் ப்ரயோஜநம் பெற்று ஹ்ருஷ்டராமாபோலே. இப்படியாயிருந்தன நிமித்தங்களினளவு. இனி, அவனளவு பார்த்தால், [ஆர்த்தோவாயதிவாத்ருப்தः] [ஆர்த்தோவாயதிவாத்ருப்தஃ) ஆர்த்தனாய் ச ரணம்புகவுமாம்; அன்றிக்கே, நாம் திருநாமங்களைச்சொன்னால் சேவக ர் நம்மை யாக்ஷேபித்துச் சொல்லுமாபோலே செருக்காலே சொல்லவு மாம். இங்ஙன் விகல்பிப்பானென், ஆர்த்தனுக்கன்றோ பலப்ராப்தியுள் ளது, மற்றை யவனுக்குண்டாகச்சொல்லுகிறவிடம் ப்ரஸித்தமன்றிறே யென்னில் ; இப்ஶ்லோகத்தால் - சரணாகதலக்ஷணம் சொல்லுகிறதல் ல, சரண்யலக்ஷணம் சொல்லுகிறது. இவனுடைய வார்த்திதானு முபா யத்திலந்வயியாதிறே, ஆனபின்பு அவனோடிவனோடுவாசியில்லை. "தன் தசையறிந்து, 'நமக்கொருகைம்முதலில்லையாயிருந்தது' என்று தன்கு றையை யறிவிக்கவும் மாட்டாதபடியாயிருந்தான் ; ஆனபின்பு, இவனுக் கு நாமே யாகாதேயுளோம்" என்று திருவுள்ள மிவன்பக்கலூன்றியிரு க்கும். [ வரேஷாஂஶரணாஂகதஃ அரிः ] [ பரேஷாம்ஶரணாகதः அரிः] ஶத்ருக்களில் வைத்துக்கொண்டு சரணாகதனை ஶத்ருவாயிற்றிவன். அ தென்னென்னில் ; "ஶரணம்" என்கிற வுக்தியைச்சொல்லுகையாலே - சரணாகதனென்னவுமாய், அகவாயிலில்லாமையாலே - ஶத்ருவென்னவு மாயிருக்கை. அன்றிக்கே, பூர்வவ்ருத்தத்துக் கநுதாப மில்லாமையாலு ம், இப்போது "ஶரணம்" என்கிற சப்தத்தைச் சொல்லுகையாலும்- இரண்டும் சொல்லலா யிருக்கை. "கொன்றேன் - அன்றே வந்தடைந் தேன்" என்னுமாபோலே. [ ப்ராணாநுவரித்யஜ்ய ] [ ப்ராணாந்பரித் யஜ்ய ] ப்ராணங்களை யொருதலையாகவிட்டு. ப்ராணநபி என்னவேண் டாவோவென்னில் ; அவன்சொன்னசொலவுக் கிதொன்றும்போராமை யாலே அதுவேண்டாவாயிற்று. [ ரக்ஷிதவ்யःக்ருதாத்மநா ] [ ரக்ஷிதவ் யः க்ருதாத்மநா ] சிக்ஷிதமநாவா யிருக்குமவனு மித்தனையும் செய்யப்ப டும். அறிவுடையார்க்கித்தனையும் செய்தல்லதுநிற்கவொண்ணாது. இதி றேயவன்படி. "இப்படி, களித்து 'ஶரணம்' என்றாலும் பொறுக்கமாட்

டாதவன் ; * மாசறுசோதியே தொடங்கிப்போர மிறுக்குப்பட்டு நாலு ப்ரயோகமடுத்து சரணம்புக்கு, அவ்வளவிலும் முகங்காட்டாதொழியச் செய்தேயும் தூதுவிட்டு, இப்படியிம்மிறுக்குக்களெல்லாம்பட்டது நம்மையுத்தேசித்திறே' என்றிருக்கும்" என்றிருக்கையாலும், இவ்வளவும்வர இவள்தான் முடியாதே கிடக்கையாலும், அவன் ஸ்வபாவத்தை விப்லவஸித்திருக்கையினாலும் அவன் வரவுக்கு த்யோதகமான ஸந்நிமித்தங்களநேகங்களுண்டாகையினாலும், இதெல்லாங்கிடக்க "நம்முடைய பாக்யஹாநிதா னவனை நம்முன்னேகொண்டுவந்துநிறுத்தும்" என்றிருக்கையினாலும், "பிரிவநிஷ்டமான தசையிலே போகவல்ல நிர்லஜ்ஜன், வரவநிஷ்டமானதசையிலே முன்னே வந்து நிற்கவும்வல்லன்" என்றிருக்கையினாலும், "இன்னமுமொருகால் கலந்துபிரிந்துநம்மைமுடிக்கவேணும்" என்றிருக்கையினாலும், "வரவுதப்பாது" என்றுஅவன்வரவை நிர்ணயித்து ; தோழிமாருந்தானுமாக, "இனி அவன்வந்தாலு மவனுக்கு முகங்கொடுத்தல் வார்த்தைசொல்லுதல்செய்யக்கடவோமல்லோம்" என்று ஸங்கல்பித்து, "அவனறியாததோரிடத்தேபோயிருக்கவேணும்" என்றுபார்த்து ; காயாம்பொழிலாய் அதிலே விளையாடுசூழலாய் அதின் நடுவே அதிமநோஹரமா யிருப்பதொரு மண்டபமாய், அதிலே யிவர்களெல்லாருங்கூடிக் கழகமாகவிருந்து ; வந்தாலு மவனுக்கிட் டடுகொள்ளுகைக்குப் பற்றுசில்லாதபடி பூவைகிளிதொடக்கமான அசேதநமாயும் சேதநமாயுமுள்ள லீலோபகரணங்களை, ஊரழிபூசலிலரணுள்ள கோட்டைகளிலே சரக்கு வாங்குவாரைப்போலே ஓரிடத்தே திரளவாங்கி, இனி இவர்கள் மறந்தவையேதேனுமுண்டாகில் அதுபெற்று அவனுக்கு சத்தைபுண்டாகவேண்டும்படியாய், இப்படி யிவர்கள் சமயமிட்டு, வந்தாலு மவனுக்குப் புகுரவொண்ணாதபடி யநாதரமாகிற கன்மதிளையுரக்கவிட்டு, அவனுடைய சர்வஜ்ஞத்வங் கொண்டு காரியங் கொள்ளுகைக்கொருவழியில்லாதபடியும், சர்வசக்தித்வங்கொண்டு வ்யாபரிக்கவொண்ணாதபடியாகவு மிவர்கள் வ்யவஸ்த்தைபண்ணியிருந்து ; க்ருஷ்ண வ்ருத்தாந்தம் சொல்லுவார் [ க்வஸ்தாஸௌ ஸ்ரீக்ருஷ்ண: ] [ கச்சித்ஸுகுமாலீக்ருஷ்ண:] என்று,இப்பிதற்றுத்தானென் என்று [அதவாகிஜ்ஜானாவெ:] [அதவாகிந்ததாலாபை: ] என்பாராய் ; ஆஸுரப்ரக்ருதிகளான உகவாத ஹிரண்யாதிகள் கோஷ்ட்டிகளில் திருநாமம் சொல்லுகை யஸஹ்யமாமோபாதி, இவர்கள் கோஷ்ட்டியிலு முகவை தலைமண்டையிட்டு, திருநாமஞ்சொல்லில் நெஞ்சு சிவிட்கென்னும்படியாய்க் கொண்டிருந்தார்களிவர்கள். இதித்தலையிருந்தபடி.

இனி யத்தலை யிருந்தபடியென்னென்றால் ; "வேறுகொண்டும்மையானிரந்தேன்" என்கிற ஆர்த்தநாதம் செவிப்பட்டது. [ ஸுஹ்ருவா: ] [ ஸுசிஃப்ரவா: ] நல்லது செவிப்படுமவனிறே. இவ்வளவி லாறியிருக்குமவனன்றே ; "வாசாவஹாவஹ:" ( பரமாபதமாபந்ந: ) எ

ன்றுகொண்டு ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய ஆர்த்தநாதம் செவிப்பட்ட போது [சுஷீக்ரு தப்ரணீதமணிவாதுகம் கிமிதிசாகுலாந்தஃபுரம் । அவாஹநபரிஷ்க்ரியம்] [அஸ்வீக்ருதப்ரணீதமணிபாதுகம் கிமிதிசாகுலாந்தஃபுரம் । அவாஹநபரிஷ்க்ரியம்] என்கிறபடியே- திருவடிநிலைகோத்தெழுந்தருளப் பற்றாமை, வெறுந் தறையிலே பத்தெட்டடி யிட்டும்; "ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளிலும் நினைவுக்குமேற்பட வொன்றும் காணாமையாலே, இப்பதற்ற மிருந்தபடியால் இது இவ்வளவுகளிலன்று, இதுக்கடியென்" என்று திவ்யாந்தஃபுரம் கைநெருக்கும்படியாய்; பாவஜ்ஞனான பெரியதிருவடியைப் பண்செய்தேறப்பெறாதே, வெறும்புறத்தேமேற்கொண்டு, [ஹமவதஸ்ராயெநமஃ] [பகவதஸ்த்வராயைநமஃ] என்றறிவுடையார் நீடுபடும்படிவந்து தோற்றினாற்போலவும்; த்ரௌபதியை துஸ்ஸாஸநன் நலிகிறபோது ரக்ஷகராக ப்ரஸித்தரான பர்த்தாக்களைவிருக்க, [கொவிநெதியதாக்ராந்த] [கோவிந்தேதியதாக்ரந்தத்] என்று நம்மை ரக்ஷகராக நினைத்துக் கூப்பிட, [ஊஂதூரவாஸிநஂ] [மாம்தூரவாஸிநம்] என்று நான் சந்நிஹிதனாயுதவப்பெற்றிலே னவளாபத்துக்கென்று நொந்து, "அவள் தனக்கடுக்கும்படி செய்தாள், நானவதரித்தே அவதாரப்ரயோஜநமொன்றும் பெற்றிலேன்" என்றிழவாளனாய், தர்மபுத்ரன்றலையிலே முடியையும் வைத்து இவள்குழலையும் முடிப்பித்து விரோதிவர்க்கம் கிழங்கெடுத்துப் போகட்டு * தன்னுடைச்சோதியேறவெழுந்தருளுகிறபோதும் [நாதிஸ்வஸ்தமநாஃ] [நாதிஸ்வஸ்தமநாஃ] என்று திருவுள்ளம் புண்பட்டாப்போலவும்; [ஸரதல்பகதோபீஷ்மஃ ஸாம்யந்நிவஹுதாஸநஃ । மாம்த்யாதிபுருஷவ்யாக்ரஸ்ததோமேதத்கதம்மநஃ] [ஸரதல்பகதோபீஷ்மஃப ஸாம்யந்நிவஹுதாஸநஃ । மாம்த்யாதிபுருஷவ்யாக்ரஸ்ததோமேதத்கதம்மநஃ] என்றுகொண்டு - ஸரதல்பகதரான ஸ்ரீபீஷ்மர்க்கு முற்பாடரா யுதவவேண்டியிருக்கப் பிற்பாடரானோமென்று நோவுபட்டாப்போலவும்; [தெநதெதநுவ்ரதாஃ] [தேநதேதமநுவ்ரதாஃ] என்று என்முற்பாடுகண்டநுவர்த்திக்கக்கடவவர்கள் முற்பாடராம்படி நாம் பிற்படுவதே என்றிருக்குமவனிறே; இப்படிகளாலே திருவுள்ளம்போரவிரங்கி; [ப்ரஸீதந்துபவந்தோமே ஹ்ரீரேஷாஹிமமாதுலா । யதீத்ருஸைரஹம்விப்ரைருபஸ்த்தேயைருபஸ்த்திதஃ] [ப்ராஸீதந்துபவந்தோமே ஹ்ரீரேஷாஹிமமாதுலா । யதீத்ருஸைரஹம்விப்ரைருபஸ்த்தேயைருபஸ்த்திதஃ] என்று தண்டகாரண்ய பரிஸரவர்த்திகளான ருஷிகளுடைய வார்த்திக்கு முற்பாடரா யுதவப்பெற்றிலோமென்னு மிழவாலே லஜ்ஜித்து, அவர்களைக் காலைக்கட்டிப் பொறுப்பித்துக்கொள்ளுமவனிறே; இனி "வ்யஸநேஷுமநுஷ்யாணாம்" (வ்யஸநேஷுமநுஷ்யாணாம்) என்று சாமாந்யத்திலே யிருக்கும்படிகண்டால், ப்ரணயிநி யொருதலையானால் சொல்லவேண்டாவிறே. "நா

ம்கிட்டிநின்று கையைக்காலைப் பிடிக்கவேண்டும் விஷயம் ஒரு திர்யக்கி ன்காலிலே விழும்படி நாம் பிறப்பதே, நமக்கினியொரு பும்ஸ்த்வமா வதென், நாமங்கினிப்போய்ச்செய்வதென், இங்கிருந்துசெய்வதென்'' என்றுகொண்டு தடுமாறி, இத்தலையோடே கலந்தல்லது தரிக்கமாட்டா தானுய், இவர்களிருந்தவிடத்துக் கதூர விப்ரக்ருஷ்டமாகவந்து, ப்ரண யகோபத்தாலே யணுகவொண்ணுதபடியிருக்கிற விருப்பைக்கண்டு, "இ த்தலையிலபிசந்தியைக் குலைத்து நாம் கூடினோமாம்படியென்'' என்று சிந்தித்து, "அழகுகொண்டுவெல்லுவோம்'' என்றுபார்க்கில், சௌந் தர்யங்கொண்டு தண்ணீர் வார்ப்பாரில்லையிக்கோஷ்டியில்; "ஊஸிதெ க்ஷணா'' (அஸிதேக்ஷணு) என்கிற தன்னேற்றமுண்டிறேயித்தலைக்கு; இனி, "மேன்மைகொண்டுவெல்லுவோம்'' என்று பார்க்கில், அந்தஃ புரத்தை ஆனைக்காலிட்டுத் துகைப்பித்து புஜிக்கவொண்ணுதே; இனி இவ்விஷயத்தைப் பெறுகைக்குத் தாழ்ச்சியேயிறே பரிகாரம், அதித்தலை யின் கடாக்ஷம் பெறுதிருக்க ப்ரவர்த்திக்குமன்று நிஷ்ப்ரயோஜநமிறே; இனி யித்தனையும் செய்தால், ஆசை யற்றுப்போகைக்குத் திருவடிகள் பேராதே; இசைவின்றிக்கே யிருக்க, மேல்விழமாட்டானே; இனிவி ழுக்காடுபாராதே மேல்விழுமன்று, ம்ருதுப்ரக்ருதியாகையாலே இழக்க வரிலும் வருமே; இனி, சேர்ந்து குளிர்ந்ததண்ணீர் ஸந்நிஹிதமா யிரு க்க, பெருவிடாயனுனவன் அழிஞ்சுக் காடேறப்போகமாட்டானே; அ தாவது - "இவனல்பம்தாழ்த்தான்'' என்று வெறுத்து, "புகுருவான ல்லன் நம்கோஷ்டியில்'' என்றிருக்கிற விவர்களைவிட்டு நாட்டாரோ டே யுறவுபண்ணப்போவானன்றே; இனி "ஒருபடிபொருந்தினோமாம் விரகென்'' என்று கடல்கடந்த திருவடிபட்டதெல்லாம் பட்டு, "'ரா ஜாஉஸ்ரயொநாஉ' (ராஜாதஸ்ரதோநாம) என்னுமளவன்றே, இனிச் செய்யவடுப்பதென்'' என்று "ஷவம்பஹுவிதாம்விந்தாம்'' (ஏவம் பஹுவிதாம்சிந்தாம்) என்று மநோரதித்து, "நந்தலையுமவர்கள்காலு ங்கிடந்ததாகில் காலைக்கட்டிப் பொருத்திக்கொள்ளுகிறேம்'' என்றறு தியிட்டான். தலையான வுபாயமிதிற்காட்டிலில்லையே, இதுதானடியிலே கண்டதொன்றிறே. ஆக, இப்படி யறுதியிட்டு, தன்னிறத்தோ டொக்க விகல்பிக்கலாவதொரு சோலையுள்ளிட்டு அவளுக்கும் தோழிமார்க்கும் தெரியாதபடி கிட்டச்சென்று, அவர்களைக் காணப்பெறுதே விடாய்த்த வன் கண்களாரளவும் நின்று விளைநீரடைத்துக்கொண்டு க்ருதார்த்தனுய் நின்றுன். ஆலோகாநந்தர மாலாபாதிகளிலே ப்ரத்தைவர்த்திக்குமிறே, அதுவும்பெற்றிலன்; அவ்வளவிலும் தனக்கு ப்ராணதாரகமான இவர் களுடைய பூவை கிளிதொடக்கமானவற்றினுடைய இனியபேச்சைக்கே ட்கப் பெறுமையாலும் மிகவும் தளர்ந்து; தானுமவளுமான லவளிற் காட்டிலும் தன்பக்கல் ப்ரேமமிரட்டித்திறே தோழிமாரிருப்பது, பிரிவி

லுமப்படியே யென்றிருந்தான், அவர்களங்ஙனன்றிக்கே அவனிற்காட்டி லும் கோபமதிசயித்திருந்தார்கள், "ஸஹ்ராதுஶ்ரணாகதம்" (ஸப் ராதுஸ்சரணௌகாடம்) என்று புருஷகாரம் முன்னாகத் தன்பக்கல்புகு ந்தார்க்குத் தன்றிருவுள்ள மிரங்கும்படி தானறியுமே, இங்கப்படியேஅ வர்கள் புருஷகாரமாகவும் பெற்றதில்லை ; இனி யித்தலையி லிசைவுண் டானாலு மவர்களிசையாதவன் றழைக்கவும் போகாதே, "த்தமஸ்யாபயம்மயா" (தத்தமஸ்யாபயம்மயா) என்றாலும் "வத்யதாம்" (வத் யதாம்) என்றவர்தம்மையிட்டே "ஆநய" (ஆநய) என்னவேண்டி ற்றிறே ; அவ்வழிகளாலு மொருமுகம்பெற்றிலன். "நஜீவேயம்க்ஷணமபி" (நஜீவேயம்க்ஷணமபி) என்றும், "க்ஷணேபி தேயத்விரஹோதிதுஸ்ஸஹ:" (க்ஷணேபிதேயத்விரஹோதிதுஸ்ஸஹ:) என்றும், க்ஷண மாத்ரவிப்ரலேஷமும் பொறுக்கமாட்டாதவன், அவர்கள் சந்நிதியிலே முகம்பெறுமே நின்று பிழைக்கமாட்டானே. இனி இவன்றன்னணுகுத லாலே, இவர்களிருந்தவிட மடங்கலும் "ஶோபயந்தண்டகாரண்யம்" (ஶோபயந்தண்டகாரண்யம்) என்கிறபடியே மயிற்கழுத்துச்சாயலாய்; இவனுடைய நிரந்தர கடாக்ஷபாதத்தாலே புலகித காத்ரைகளாய், இவ னுடைய கடாக்ஷபாதத்தா லுண்டான சைத்ய மிவர்களுடைய ப்ரணய ரோஷத்தால் வந்த கோபாக்நியும் விரஹாக்நியுமன்றாகில் பொறுக்கவரி தாம்படியாய் ; கோபந்தா னிவன்சந்நிதியிலே மிகைத்து வாரா நிற்குமி றே, இவ்வோலக்ஷணங்களைக்கொண்டு, இவன் வந்தமையை நிஶ்சயித் துத் தங்களிலே யொருமித்து முகம் மாறியிருக்க ; இவனுமவ்விருப்பை க்கண்டு எதிரிகளிட்ட மதிளாகிலிறே முறித்துப் புகலாவது ; கிட்டப் பெருமையாலும் சந்நிதியாலு மாற்றாமை கரைபுரண்டு கால் தறையில் பாவாதபடியாய்க்கொண்டு தடுமாறிவருகிற சமயத்திலே, இவனுடைய ஜீவநாத்ருஷ்டத்தாலே யிவர்கள் மறந்துபோன பந்தும் கழலுமிவன்கா லிலேதாக்க ; அப்போது, இருட்டறைகளிலே தடவிக்கொண்டுவாராநி ன்றால் உறியும் வெண்ணெயும் கையிலே தாக்கினால் ஹ்ருஷ்டனுமா போலே பெரிய ஹர்ஷத்தோடே விழுந்து இவற்றை யெடுத்துக்கொண் டு, அத்தலையில் பண்ணின வ்யாமோஹமடங்கலு மிதிலேதோற்றும்படி கண்களிலே யொத்திக்கொள்வது தலையிலே வைத்துக்கொள்வதாய் ; பி ராட்டி, திருவாழிமோதிரங்கண்டு பட்டதெல்லாம் பட்டான். [க்ருஹீத்வாப்ரேக்ஷமாணா] [க்ருஹீத்வாப்ரேக்ஷமாணஸா] "ராவணன்மா யையாலேவந்ததோ" என்னும் பயத்தாலே முற்படக் கண்வைக்கமாட் டாதே யிருந்தாள், "அத்தலையாலேவந்தது" என்று தெளிந்த பின்பு கண்மாறவைக்கை யரிதாம்படியா யிருந்தாள். [ஸா - ப்ரேக்ஷமாணா] [ஸா - ப்ரேக்ஷமாணா] "பஶ்யதேவி" (பஶ்யதேவி) என்றுகொண் டு - முன்பு பார்வைக்கு க்ருஷி பண்ணவேண்டும்படி யிருந்தவள்தானே,

கண்மாறவைக்கைக்கு க்ருஷிபண்ணவேண்டும்படியாயிருந்தாள். [ஹர்த்து꞉கரவிபூஷணம்] [பர்த்துஃகரவிபூஷணம்] முதல் கைப்பிடிக்கிறபோது ஹத்தினபடியை நினைத்தாள். [கரவிபூஷணம்] [கரவிபூஷணம்] * அணிமிகு தாமரைக்கையிறே. ஆபரணத்துக் காபரணங்காணும். [ஹர்த்தாரமிவ] [பர்த்தாரமிவ] இவனித்தைத் திருக்கையிலே கொடுத்தவாறே, இத்தோடே சேர்ந்த விரலையுந்தோளையும் நினைத்தாள்; அந்நினைவுதான், தானிக்கரையிலாளாகவும் அவரக்கரையிலாராகவும், கடலிடையிலே கிடக்கிறதாகவுமறிந்திலள்; ஒரு படுக்கையிலே கூடவிருந்ததாக நினைத்தாள், ஒரு சூது சதுரங்கங்களிலே தோற்றுத் தன்கையி லிருந்ததாகநினைத்தாள். இவ என்கிறுன் ருஷி - ஜநகீசமாதியாலே. இவளுணர்ந்தாலென்படக்கடவளென்று. [ஜாநகீ] சோகஹர்ஷங்களுக் கிளையாத குடியிலே பிறந்தவள். [முதிதாபவத்] [முதிதாபவத்] ஹ்ருஷ்டையானுள். அப்படியேயாயிற்றிவனு மிவைபெற்றபின்பு. சம்சாரி, முக்தனு லவனுடைய லீலோபகரணமும் போகோபகரணமும் சமமாய்த் தோற்றக்கடவது; ஆகாராந்தரமான ஸ்ம்ருதியில்லையே, ததீயத்வாகாரத்தாலே நித்யவிபூதியோடொக்கத் தோற்றுமித்தனை; அப்படியே யிவளுடைய லீலோபகரணமும் போகோபகரணமாய்த் தோற்றக்கடவது. அவற்றிலே யவன்பண்ணும் வ்யாமோஹத்தைக்கண்டார்கள், "நம்மைப்பிரிந்தபின்பு சத்தையோடே குறியழியாமே யிருக்கக்கடவ விவன் இவையெல்லாம் நம்மை யுத்தேசித்துச்செய்கிறுனுகக்கூடாது; இங்ஙனே யாகவேணும் - நம்மைப் பிரிந்தபின்பு போய்ச் சிலரோடே கலந்தான், அவர்களையும் பிரிந்தான், அவ்வாற்றுமைபோடே யிங்குவந்தான், இவற்றை 'அவர்களுடைய லீலோபகரணமாயிருக்கும்' என்று ப்ரமித்தானித்தனை, இது நம்பக்கல் வ்யாமோஹமுடையனுய்ச் செய்கிறு னல்லன்" என்றுகொண்டு, இவர்களிருக்க; அவனும் தன்னழகாலும் குணங்களாலும் தன் செல்லாமைகளாலும் தாழ்ச்சிகளாலு மித்தலையி லூடலைத்தீர்த்து சம்ஶ்லேஷித்தபடி சொல்லுகிறது - இத்திருவாய்மொழி.

இனி, இத்திருவாய்மொழிதன்னை பூர்வாசார்யர்கள், "பகவத்விஷயத்தில் ஸாபத்ந்யந்தோற்ற வார்த்தைசொல்லுகை சேஷத்வலக்ஷணமன்று, * வளவேழுலகிற்படியாலே அயோக்யதாநுசந்தாநம் பண்ணுகிறார்" என்று நிர்வஹிப்பர்கள். இத்தை பட்டர் கேட்டு, "என்சொன்னூரானுர்கள்; இவர்க்கு பகவத்விஷயத்திலுண்டான ருசிக்கு ப்ரகாசகமித்திருவாய்மொழியாயிருக்கும், இதுக்கு வேறே யொருவழியிடுவதே, ஆனபின்பு இதுவே பொருளாமித்தனை" என்றருளிச்செய்தார். "ஹநிஷ்யாமிஸபாந்தவம்" (ஹநிஷ்யாமிஸபாந்தவம்) என்று மஹாராஜரோடே பெருமாளுக்குக் கிலாய்க்கைக்கு முறவுண்டாயிற்றிறே.................*

## ஜீயர் அரும்பதம்.

மின்னிடைமடவார்ப்ரவேஶே, இப்படி கீழ்விட்டதூதர்சென்று அவனுக்கறிவித்து அவனும் வாராநிற்க, வருமளவும் பற்றுமலாற்றாமைமுறுகி ப்ரணயரோஷம் தலையெடுத்து அத்தாலே, "அவன்வந்தாலு மவனோடே சம்ஶ்லேஷிப்போமல்லோம்" என்றிருக்கிறவிவளை, அவனும்வந்து தன் சௌந்தர்யாதிகளாலே இத்தலையி லூடலைத்தீர்த்து சம்ஶ்லேஷித்தபடி சொல்லுகிறதென்று - மேல்சொல்லப்புகுகிற சங்கதியை யுட்கொண்டு; ப்ரணயரோஷத்தாலே யூடுவார்கள் பிராட்டிமாரன்றோ, ஆழ்வார்க்குக்கூடுமோவென்ன; இவர்க்கெல்லார்படியு முண்டாகையாலே கூடுமென்கிறார் (இவ்வாழ்வாரித்யாதி) இவ்வாழ்வாராகிறாரென்றது - ஆழ்வாரென்றபடி. பகவத்விஷயத்தில் கைவைத்தாரெல்லாருடையவென்றது - முமுக்ஷுக்கள் முக்தர் நித்யர் பிராட்டிமாருடையவென்றபடி. சம்சாரபயந்தொடக்கமான வாகாரங்களை முமுக்ஷுக்கள் முதலானார்பக்கலிலே யிவர் சந்தைகளாலே தர்ஶிப்பிப்பதாகத் திருவுள்ளம்பற்றி, சம்சாரபயம் பிறப்பதுபண்டு சம்சாரியாயிருந்து பகவத்ஸமாஶ்ரயணம்பண்ணினவனுக்கே யாகையாலே, ப்ராசங்கிகமாக, பத்தர்படியுமுண்டென்னுமத்தை யிவர்சந்தையாலே தர்ஶிப்பிக்கிறார் (பொய்ந்நின்றஞானமித்யாதி) அநந்தரம் முமுக்ஷுக்களுடைய சம்சாரபய மிவர்க்குண்டென்கிறார் (இந்நின்றநீர்மையித்யாதி) முக்தருடையகைங்கர்யருசியு முண்டென்னுமத்தை தர்ஶிப்பிக்கிறார் (வழுவிலாவித்யாதி) நித்யருடைய, வ்யதிரேகத்தில் தரியாமையுமுண்டென்னுமத்தை தர்ஶிப்பிக்கிறார் (நின்னலாலித்யாதி) பிராட்டிமாருடைய பகவத்ப்ராவண்யமு மிவர்க்குண்டென்னுமத்தை தர்ஶிப்பிக்கிறார் (ப்ரணயரோஷத்தாலேயித்யாதி) இத்தைப் பிற்சாடுவிவரித்தது - ப்ரகரணமிதுவாகையாலே, அதுக்குச் சேரப்பிராட்டியோடே சர்வதாசாம்யம் சொல்லவேண்டுகையாலே. ஒருத்தருக்கே யெல்லாருடையபடிகளு முண்டாகக்கூடுமோவென்ன (விஷ்ணுநேத்யாதி) கீழுக்தமான வாகாரங்களல்லாத ஆழ்வார்களுக்குமுண்டே, இவர்க்கு வாசியேதென்ன (இதுதானித்யாதி) பால்யந்தொடங்கி "பகவத்ப்ராவண்ய முண்டென்னுமதுக்கு ப்ரமாணம் (அறியாக்காலத்துள்ளேயித்யாதி)

இப்படி, ஊடுகைக்கு யோக்யதையைசாதித்து, ப்ராசங்கிகசங்காபரிஹாரங்களும்பண்ணினவநந்தரம், ஏறாளுமிறையோன்றொடங்கி விஶ்லேஷவ்யஸநமாகையாலே யூடுகிறாளென்று கீழோடித்திருவாய்மொழிக்கு ஸங்கதி (இனியேறாளுமித்யாதி, முடியப்பார்க்கிறதென், முடிந்துவிடலாகாதோவென்ன (அதிவளித்யாதி வாக்யத்வயம்) ஆனபின்பு அவன்வந்தே முடியவேணுமென்கிறார் (இனிபோகத்துக்கித்யாதி) பிரிவன்றோமுடிகைக்குறுப்பு, அவன்வரவுமுடிகைக்குறுப்போவென்ன (பிரிவிலித்யாதி) தான்முடியப்பார்க்கிறாளென்றார் - கீழ்; அவன்றன்னைமுடிக்கப்பார்க்கிறாளென்று பாவாந்தரம் (அவன்பேரநின்றித்யாதி) ஆனாலவனிடத்திலே த்வேஷத்தாலே செய்கிறாளோவென்ன (அவன்வரவிலேயித்யாதி)

ப்ரணயரோஷத்தாலே யிப்படியூடினபேருண்டோவென்ன (ப்ரணயாச்சேத்யாதி) இதுக்கர்த்தம் (அவரோடித்யாதி) ப்ரகர்ஷேணநயஃ ப்ரணயஃஎன்றாய், "நீஞ்ப்ராபணே" என்கிறதாதுவாலே, சிரபரிசயத்தையும் அத்தாலுண்டானகலவியையும்சொல்லுகிறது. வேண்டப்பாடு-பெருமை. அபிமாநமாவது - (வேண்டப்பாடு) சிரபரிசயம்பண்ணினவன் விட்டுப்போகப்புக்கால் கோபமாயிறே, ஆகையாலே, சிரபரிசயம், மேலிட்டுவார்த்தைசொல்லுகைக்குஹேது; ஏகதத்த்வமென்னலாம்ப

டி கலந்தவன் விட்டுப்போகப்புக்கால் கோபமாகையாலே, சலவியும் மேலிட்டுவா ர்த்தைசொல்லுகைக்குஹேது. * அபிமாநமாவது - "என்னுடையவரன்றே" என்கி றபெருமையாகையாலே, தனக்குப்பரதந்த்ரராயிருந்தவர் விட்டுப்போகப்புக்கால் கோபமாகையாலே, இதுவும் மேலிட்டுவார்த்தைசொல்லுகைக்கு ஹேதுவென்றப டி. மேலிட்டுவார்த்தைசொல்லுகையாவது - வீரனைவனைகாபுருஷனுக்கிவார்த்தை சொல்லுகை. (வாரீரென்றுதொடங்கி, போரவெறுப்பனென்னுமளவாக) " கிஂத்வாமந்யத " (கிந்த்வாமந்யத) இத்யாதிஸ்லோகத்துக்கவதாரிகை. (ஒருபெண்பெண் டாட்டியென்றுதொடங்கி) ஸ்லோகார்த்தம். " ஹோராம, வைதேஹ: - மிதிலாதிப: - மேபிதா - ஜாமாதாரம்-த்வாம்-புருஷவிக்ரஹம்ப்ராப்ய-ஸ்த்ரியம்-அமந்யதகிம் " (ஹேராம, வைதேஹ: - மிதிலாதிப: - மேபிதா - ஜா மாதரம்-த்வாம்-புருஷவிக்ரஹம்ப்ராப்யஸ்த்திதாம் - ஸ்த்ரியநுமந்யதகிம்) இத்யந் வய:. அமந்யதகிம் - மந்யேதகிமித்யர்த்த:. எண்ணுவரன்றேவென்றபடி. ஊடின துக்குப்ரமாணந்தரம் (ஈர்ஷ்யேத்யாதி, குஶலீ யதீத்யாதி, தர்மாபதேசாதித்யாதி ப்ரமாணத்ரயமும்) "ஈர்ஷ்யாகோபங்களைத்தள்ளிப்போகடும்" என்கிறவளுடை யஹார்த்தபாவம் (பிறருயர்த்தியித்யாதி) உனக்குயர்த்தியெது, அதுகண்டு நாமெ, ன்செய்கிறோமென்ன (நானும்மோடேயித்யாதி) ஈர்ஷ்யை - பொறாமை. " அக்ஷாந்திரீர்ஷ்யாஸூயாதுதோஷாரோபோகுணேஷ்வபி " (அக்ஷாந்திரீர் ஷ்யாஸூயாதுதோஷாரோபோகுணேஷ்வபி) என்னக்கடவதிறே. இதுவுமென்ற து-ஈர்ஷ்யாரோஷங்களை. (அப்படியாகாதேதான்) புக்தஸேஷாதகவத்த்யாஜ்ய மன்றேவென்றபடி. உன்னுயர்த்திகண்டால் பொறுக்கவேண்டுவானென்னென்ன; உம்முடைய ப்ரணயித்வ ஸித்திக்காகவென்கிறார் (ப்ரணயிகளித்யாதிவாக்யத்வய த்தாலே) இங்ஙனேகாணுமென்றது-மேல்வாக்யத்திலர்த்தத்தைப்பராமர்ஸிக்கிறது "வீர - மாம்நய" (வீர - மாம்நய) என்கிறவளுடையஹார்த்தபாவம் (என்னையித் யாதி) என்னையறியாதாப்போலே யும்மையுமறிந்திலீராகிலென்றது - " ஜலாந்மத்ஸ்யாவிவோத்ருதௌ, " (ஜலாந்மத்ஸ்யாவிவ்ருத்தௌ,) " அகலகில்லேனிறையு ம் " என்கிறவென் ஸ்வரூபத்தையறியாதாப்போலே, " ஶத்ரோ:ப்ரக்யாதவீர்யஸ்ய " (ஶத்ரோ:ப்ரக்யாதவீர்யஸ்ய) என்கிறவும்மையுமறிந்திலீராகிலென்ற படி. விஶ்லேஷத்தில் தரிக்கைக்குஹேது - பாபமென்று விவக்ஷித்தருளிச்செய்கி றார் (பொகடுமித்யாதி) பொகடும்-விடுமென்றபடி. உக்தார்த்தத்தை ப்ரக்ருதத்தி லே யேறிடுகிறார் (இப்படியித்யாதி)

இவர்தாமிலக்காக - பெருமாள்முன்னிலையாக. (ஆளின்முன்பேயும்-என்னு மவளிறே) இதிவாக்யாந்வய:. " காகுத்ஸ்த்த: " (காகுத்ஸ்த்த:) என்கிறவளுடை ய ஹார்த்தபாவம். (பரபரிபவமித்யாதி வாக்யத்வயமும்) தஹியாமைக்கு ஹேது நம்பக்கலுபேக்ஷையொழிய, தம்முடைய அம்புஇரண்டையும் தஹிக்கமாட்டாமை யில்லையென்கிறார் (த்ரவத்ரவ்யத்துக்கித்யாதிவாக்யத்வயத்தாலே) இரண்டுக்கும் வேறே யம்புவேண்டாவோவென்ன (கடலில்நீரோயித்யாதி) இப்படியிருக்க, தாம் தஹியாதிருந்தது என்பக்கல் ஸ்நேஹமில்லாமையென்று கருத்து. " மேகலாம் " (மேகலாம்) என்றதுக்கு ஹார்த்தபாவம் (ஒக்கக்கைப்பிடித்தவித்யாதி) ஈஶ்வர ர்களான ப்ரஹ்மாதிகள் ஸ்ருஷ்டித்தத்தை யிவராலே யழிக்கப்போமோ வென்ன (ஈஶ்வரர்களித்யாதி) இது - " கோபேந " (கோபேந) என்றதுக்குபாவம்.

“ 𑌕𑌾𑌕𑍁𑌤𑍍𑌸𑍍𑌥𑌃 - 𑌕𑍁𑌶𑌲𑍀𑌯𑌤𑌿, 𑌉𑌤𑍍𑌥𑌿𑌤𑌃 - 𑌯𑍁𑌗𑌾𑌨𑍍𑌤𑌾𑌗𑍍𑌨𑌿𑌰𑌿𑌵, 𑌕𑍋𑌪𑍇𑌨 - 𑌸𑌾𑌗𑌰𑌮𑍇𑌖𑌲𑌾𑌂𑌮𑌹𑍀𑌂, 𑌦𑌹𑌤𑌿𑌕𑌿𑌂𑌨𑍁 ” ( காகுத்ஸ்த்தஃ - குஶலீயதி, உத்திதஃ-யுகாந்தாக்நிரிவ, கோபேந - ஸாகரமேகலாம்மஹீம், தஹதிகிம்நு ) - தஹியாரோ. தஹியாமையாலே ப்ரணயித்வமில்லையென்றபடி. அன்றிக்கே, ஈஶ்வரஸத்தையுண்டானால் ஜகத்தை தஹியாரோ, ஆஶ்ரிதபரிபவம் பொறுப்பரோவென்னுதல்; “ 𑌤𑍍𑌵𑌯𑌿𑌜𑍀𑌵𑌤𑍍𑌯𑌪𑌿 ” ( த்வயிஜீவத்யபி ) இதிவத். ( என்றும், என்றும், என்றது ) தாத்பர்யாந்தரமல்ல, இப்படியுமிப்படியும் சொன்னாளென்றபடி. பிராட்டி நெடுநாள் விஶ்லேஷித்தாடினாள், இவளிப்படி நெடுநாள் நோவுபட்டாளோவென்ன ( இவளும் மாசறுசோதியித்யாதி ) கோள்வாய் - புதுப்புண். புதுக்கோமுற்றவன் - புத்ரதிகாரி.

எங்ஙனேயிருந்தாளோவென்னிலென்றது - இவளாற்றாமை தோற்றவிருந்தவாகார மாரைப்போலே யிருந்ததென்னிலென்றபடி. ஹிமஹதமாவதற்கு முன்பு தாமரையோடை நன்றாயிருந்தவோபாதி, இவளும் திருவயோத்யையி லிருக்கிறநாள் பன்னிரண்டு ஸம்வத்ஸரமு மொருவிக்நமறக் கலந்தாளென்று - “ 𑌨𑌷𑍍𑌟𑌶𑍋𑌭𑌾 ” ( நஷ்டஶோபா ) என்றதுக்கு பாவமருளிச்செய்கிறார் ( பன்னிரண்டாண்டித்யாதி ) தண்ணீர்த்தரும்பறவென்றது - “ 𑌸𑌮𑌾𑌤𑍍𑌵𑌾𑌦𑌶 ” ( ஸமாத்வாதஶ ) என்கிறவிடத்தில், “ 𑌕𑌾𑌲𑌾𑌧𑍍𑌵𑌨𑍋𑌰𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌸𑌂𑌯𑍋𑌗𑍇 ” ( காலாத்வநோரத்யந்தஸம்யோகே ) என்று, அத்யந்தஸம்யோகே விஹிதத்விதீயையைப்பற்ற. “ 𑌪𑌰𑌮𑍍𑌪𑌰𑌯𑌾 ” ( பரம்பரயா ) என்றதுக்கு பாவம் (பிரிவோபாதியித்யாதி) “ 𑌅𑌤𑌿 ” (அதி) என்கிற உபஸர்க்கார்த்தம் ( ஆஶ்ரயத்தினித்யாதி ) “ 𑌚𑌕𑍍𑌰𑌵𑌾𑌕𑍀 ” ( சக்ரவாகீ ) என்றதுக்கு பாவம் ( வருமளவித்யாதி ) கீழ்ச்சொன்னவிவையென்றது-நளிநீசக்ரவாகிகளை.

( அவன்றான் வாராநின்றானேவென்னில் ) என்கிற ஶங்கைக் கஞ்ச பரிஹாரமருளிச்செய்கிறார் ( அவன்வரவுக்கித்யாதி ) அண்டஜமென்னாதே, “ 𑌪𑌕𑍍𑌷𑍀 ” ( பக்ஷீ ) என்றதுக்குபாவம் ( சிறகைவிரித்ததென்று ) காஷ்ட்டநிலயஃ என்னாதே, “ 𑌶𑌾𑌖𑌾𑌨𑌿𑌲𑌯𑌃 ” ( ஶாகாநிலயஃ ) என்றதுக்குபாவம் ( உலர்ந்தவித்யாதி )நன்னிமித்தமாகையாலே தது பயுக்தத்தையுங்கூட்டிக்கொண்டு, “ 𑌨𑌿𑌲𑌯𑌃 ” (நிலயஃ) என்கிற பதத்துக்கு பாவம் ( வ்ருக்ஷத்தையித்யாதி ) பக்ஷியானதுஇரையெடுத்தால் நல்லலக்ஷணமிறே, ஆகையாலே யருளிச்செய்கிறார் ( அங்குள்ளபலாதிகளையித்யாதி ) * உத்தமஸாந்த்வவாதியாகையாவது - பெருமாள் சீக்ரத்திலே வருகிறாரென்கை. “ 𑌸𑌾𑌨𑍍𑌤𑍍𑌵𑌵𑌾𑌦𑍀 - 𑌇𑌵, 𑌉𑌦𑍀𑌰𑌯𑌾𑌨𑌃 - 𑌇𑌵 ” ( ஸாந்த்வவாதி - இவ, உதீரயாநஃ - இவ ) என்று இவசப்தத்தை - கீழ்ப்பதங்களிலுங் கூட்டுவது. வந்தால்பிறக்கும் வேறுபாடென்றது - பெருமாள்வந்தால் பிராட்டிக்குப் பிறக்கும் சந்தோஷமென்றபடி. “ 𑌰𑌹𑌸𑍍𑌯𑌂𑌚𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌂𑌚𑌯𑌦𑍍𑌵𑍃𑌤𑍍𑌤𑌂𑌤𑌸𑍍𑌯𑌧𑍀𑌮𑌤𑌃 । 𑌰𑌾𑌮𑌸𑍍𑌯𑌸𑌹𑌸𑍌𑌮𑌿𑌤𑍍𑌰𑍇𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌾𑌨𑌾𑌂𑌚𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 ” ( ரஹஸ்யஞ்சப்ரகாஶஞ்சயத்வ்ருத்தம்தஸ்யதீமதஃ । ராமஸ்யஸஹஸௌமித்ரோராக்ஷஸாநாஞ்சஸர்வஶஃ ) இதிபாலகாண்டே. ததாகதாம் - வாசாமகோசரமான தசையை யடைந்தவளென்றபடி. தாமென்றது - ஸ்வரூபமாத்ரவாசி. “ 𑌵𑍍𑌯𑌥𑌿𑌤𑌾𑌂 ” ( வ்யதிதாம் ) என்றதுக்கு-

* ஆதிகர்மணிக்தப்ரத்யயமாய், வ்யஸநோபக்ரமத்தைச் சொல்லுகிறதென்றர்த்தமருளிச்செய்கிறார் ( கீழ்ச்சொன்னவையித்யாதி ) ப்ரக்ருதியாயென்றது - ஸ்வஸ்ந்

த தசையாயென்றபடி. "வ்யதிதாம்" (வ்யதிதாம்) என்றதுக்கு - நிரூபகமா கபாவாந்தரம் (ஸமாத்வாதஶேத்யாதி) (அத்தலைப்பிரிந்தால்) இத்யாதிக்கு-உத் தமநாயகனைப்பிரிந்தா லிருக்கக்கடவபடியே யிருந்தாளென்று கருத்து. உபஸர்க்கா ர்த்தம் (ஹர்ஷம்குடிபுகுந்தித்யாதி) "ஶோபாம்" (ஶோபாம்) என்கைக்கு- இத் தசையிலழகுண்டோவென்ன (மண்தின்றுவந்தவித்யாதி) இங்கே - "குர்வந்தீம் ப்ரபயா தேவீம் ஸர்வா விதிமிராதிஶ:" (குர்வந்தீம்ப்ரபயாதேவீம்ஸர்வாவி. திமிராதிஶ:) என்றதநுசந்தேயம். நகடு - வைவர்ண்யமும், சோபையும், வ்யாதி யும். விவரணம் (கடலேறியித்யாதி) (ஆலத்திவழிக்கவேண்டும்படி) என்றவிடத்தி லே - "அலமருகின்றனவாழியரோ" என்றதநுசந்தேயம். "ஶோபாநி-நிமித்தாநி-பேஜிரே" (ஶோபாநி-நிமித்தாநி-பேஜிரே) என்றந்வயித்தர்த்தம் (நிமித்த ங்களானவையித்யாதி) "பஜஸேவாயாம்" (பஜஸேவாயாம்) என்கிறதாது வாலும், "ஶ்ரியா ஜுஷ்டம் - நரமிவ" (ஶ்ரியாஜுஷ்டம் - நரமிவ) என்றத்ரு ஷ்டாந்தபலத்தாலும் (ஸ்வரூபம்பெற்றனவென்றது) இப்படியந்வயியாதே, "நி மித்தங்களானவை சுபத்வங்களையடைந்தன" என்றுகொள்ளுமளவில், "தமாகதாம்" (ததாகதாம்) இத்யாதி காரகங்களுக் கந்வயமின்றிக்கே யொழியும்; ஆகையாலே, ஏவம்பூதாம்ப்ராப்ய என்றத்யாஹரித்து யோசிக்கவேணும். இப்படி யுமோருருவிலே யருளிச்செய்தார். "நிமித்தங்களானவை" இத்யாதிவாக்யவிவர ணம் (ஸாக்ஷால்லக்ஷ்மிக்கித்யாதி)

நிமித்தங்கள்மாத்ரமன்றிக்கே, அவன் க்ருபாவிசிஷ்டனுகையாலும் வரவுத ப்பாதென்று த்விதீயபரிஹாரம் (ஆர்த்தோவேத்யாதி) "த்ருப்தனுவான் - ஸம் ஸாரதோஷ பகவத்வைலக்ஷண்ய ஜ்ஞாநயுக்தனுய் ஸதாசார்யஸமாஶ்ரயணபூர்வ கமாக 'ஈஶ்வரனேயுபாயோபேயம்' என்றத்யவஸித்து, தேஹாந்தரம் ஸஹியாம ல் ஏதத்தேஹாவஸாநத்தளவு மாறியிருக்குமவனுயிருக்க, (சேவகர்நம்மையாக்ஷே பித்துச்சொல்லுமாபோலே) என்று லகூகரிப்பானென்" என்றுகேட்க; "ஶரண் யவைபவ ப்ரகரணமாகையாலே நஹிநிந்தாந்யாயேந லகூகரிக்கிறுர்" என்றருளிச் செய்வர். அன்றிக்கே, த்ருப்தியின் சரமாவதியான அஹ்ருதயோக்தியாகச்சொல்லு கிற வதிகாரியைச் சொல்லுகிற தென்னுதல்; "ப்ரபத்திவாசைவயேநகேநாபி ப்ரகாரேண த்வயம் வக்தா" (ப்ரபத்திவாசைவயேநகேநாபிப்ரகாரே ணத்வயம்வக்தாத்வம்) இத்யாத்யநுசந்தேயம். (இங்ஙன்விகல்பிப்பானென்) எ ன்றதுக்குக்கருத்து - இருவர்ப்ரபத்தியும் நெடுவாசிப்பட்டிருக்க, "ரக்ஷிதவ்ய:" (ரக்ஷிதவ்ய:) என்கிற ஏகபலவிஷய விகல்பங்கூடுமோவென்னிலென்றபடி. ஏன், விகல்பிக்கைக்குக் குறையேதென்ன (ஆர்த்தனுக்கன்றேவித்யாதி) (ப்ரஸித்தம ன்றிறே) என்கையாலே - அபுத்திபூர்வகமாக ஏககரணத்தாலே ப்ரபத்தி பண்ணு கிற சரமாவதி த்ருப்தன்விவக்ஷிதனென்று கருத்து. சரண்யலக்ஷணஞ்சொல்லுகி றதுகொண்டு ஆர்த்தனையும் த்ருப்தனையு மொக்கச்சொல்லலாமோவென்ன (இவனு டையவித்யாதி) ஆர்த்தனேடு ஸாம்யஞ்சொல்லி, ஆதிக்யஞ்சொல்லுகிறுர் (தன்த சையித்யாதி) "ஆர்த்தோவாயதிவாத்ருப்த:" (ஆர்த்தோவாயதிவாத்ருப்த:) எ ன்று - ஆர்த்தனையும் ப்ரதிஜ்ஞைபண்ணி, "பரேஷாம் மத்யே ஶரணாகதோ'ரி:" (பரோஷாம்மத்யேஶரணுகத: அரி:) என்றுகொண்டு - த்ருப்தன் படியைச் சொல்லுகிறது, இஶ்ஶ்லோகம் - சரண்யன்படியைச் சொல்லுகிற தாகையாலே. அதென்னென்னிலென்றது - சரணுகதத்வமும் ஶத்ருத்வமும் விருத்தமன்றேவென்

றபடி. லோகபரிபாடியாலே - கீழருளிச்செய்து, ஶாஸ்த்ரபரிபாடியாலேபரிஹாராந்தரம் (அன்றிக்கே பூர்வவ்ருத்தத்துக்கித்யாதி) மூன்றும்பரிஹாரம் (கொன்றேனித்யாதி) அதாவது - "ஷஷ்டி - ஶ்லிஷ்டு - ஶரணாகதஃ" (பரோக்ஷாம் - அரிஸ்ஸங் - ஶரணாகதஃ) என்றந்வயித்து, பிறர்க்கும் ஶத்ருவாய்க்கொண்டு ப்ராயஶ்சித்தாதிகள் பண்ணுதே சரணாகதனானவனென்றபடி. கொன்ற வுதிரக்கை கழுவாதே யுடனேவந்தடைந்தே னித்யர்த்தஃ. திருமொழி முதற்பத்து ஒன்பதாந் திருமொழி மூன்றும்பாட்டு. ஒருதலையாக - தனக்கே பரமாக வென்றபடி. இவனிலும் ப்ராணங்களதிகமன்றோ வென்றுசங்கித்து, சரணாக்திக்கு ப்ராணங்கள் ஶத்ருஶமாகாமையாலே யென்று பரிஹரிக்கிருர் (ப்ராணுநபீத்யாதி) விவரணம் (அறிவுடையார்க்கித்யாதி) சரணாகதிவைபவத்தி லறிவுடையார்க்கென்றபடி. (இனியவனளவுபார்த்தால்) என்று கீழ்ச்சொன்னவாக்யத்துக்கு (இதிறேயவன்படி) என்றவாக்யத்தோடே யந்வயம். இஶ்ஶ்லோகத்தாற்சொன்ன குணுதிக்யத்தை கிம்புநர்ந்யாயத்தாலே யிவர்பக்கலிலேயேறிட்டுக்காட்டுருர் (இப்படிகளித்தித்யாதி)

மூன்றும்ஹேது (இவ்வளவும் வரவித்யாதி) கீழ்ச்சொன்ன நன்னிமித்தங்களையும், "ஆர்த்தோவா" (ஆர்த்தோவா) இத்யாதியாற்சொன்ன அவன்குணுதிக்யத்தையும் வ்யுத்க்ரமமாக வநுவதிக்கிருர் (அவன்ஸ்வபாவத்தையித்யாதியாலே) அவன் ஸ்பாவத்தை - க்ருபாவைஶிஷ்ட்யஸ்வபாவத்தை. நாலாம்ஹேது (இதெல்லாங்கிடக்கவித்யாதி) அஞ்சாம்ஹேது (பிரிவரிஷ்டமானவித்யாதி) முன்னேவந்துநிற்கிறதெதுக்கென்ன (இன்னமுமொருகாலித்யாதி) அன்றிக்கே, * இன்னுயிர்ச்சேவல் ப்ரக்ரியையாலே ஆறும்ஹேதுவாதல். கீழ்ச்சொன்ன ஹேதுக்களாலும் கர்மவிசேஷத்தாலே விபலமாய், வாராதிருக்கையே நியதமென்னுமத்தைத் தோற்றுவிக்கிறது - (வந்தாலும்) என்கிற சப்தம். காயாம்பொழில் - காசாந்தோப்பு. விளையாடுசூழல் - மணற்குன்று. கழகம் - ஸமூஹம். இட்டுக்கொள்ளுகை - வார்த்தையிட்டு வார்த்தைகொள்ளுகை. (பூவைகிளிதொடக்கமான - சேதநமாயும் - அசேதநமாயும்) என்றந்வயிப்பது. அசேதநமான லீலோபகரணங்களாவன - பந்து, கழல்தொடக்கமானவை. பூவை - கறுத்தகிளி. ஊரழிபூசல்-ஊரழியும்படியான சண்டை. ஆனுல், "என்னுடைய பந்தும்கழலும்தந்துபோகு" என்று-அவன்கையிலே யிருக்கிறதாகச் சொல்லாநின்றதேயென்ன (இனியிவர்கள்மறந்தவையித்யாதி) உரக்க - த்ருடமாக. (ஸர்வஜ்ஞத்வங்கொண்டு) இத்யாதிக்கு பாவம் - அவனுக்குமுன்னே யேலக்கோலிச்செய்கிருளாகையாலே அது கொண்டு கார்யங்கொள்ள வழியில்லை. அந்தஃபுரமாகையாலே ஸர்வசக்தித்வங்கொண்டு கார்யமில்லையென்றபடி. (கச்சித்ஸ்ஶுஶுஶலீக்ருஷ்ணஃ என்று - க்ருஷ்ணவ்ருத்தாந்தம் சொல்லுவார் - அதவாகிந்ததாலாபைஃ - என்று - இப்பிதற்றுத்தானென் - என்பாராய்) என்றந்வயிப்பது. உகவை - உகப்பு. சிவிட்கு - அஸஹ்யம்.

இவர்களிப்படி யிருந்தார்களாகில் அவனென்செய்தானென்னு மாகாங்க்ஷையை யநுவதிக்கிருர் (இனியித்தலையித்யாதி) கீழே-விட்ட ஆள்சென்று அவனுக்கறிவிக்க, அவனு மிழவாளனுய் வருகிருனென்ருர்; இங்கே-தூதனைக்குறித்துச்சொன்ன ஆர்த்தநாதம் செவிப்பட்டுவருகிருனென்ருர்; இவையிரண்டுக்கும் சேர்த்தியென்னெனனில்; தூதர்சென்றறிவிக்க, வருகிருனென்றும்; இவளார்த்தநாதம் கேட்டுவருகிருனென்று மிரண்டுசங்கதியாக யோஜித்துக்கொள்வது. இங்கேயிருந்துகூப்பிட்டால் கேட்குமோவென்ன (ஶப்ரவாஇத்யாதி) இதுக்கர்த்தம் (நல்லதித்யாதி) செவிப்பட்டால் மெள்ளவரவொண்ணுதோவென்ன (இவ்வளவிலித்யாதி)

ஆர்த்தநாதம் கேட்டுத்வரித்துவந்ததுக்கும், ஆறிப்ராமைக்கும் க்ரமேணமூன்றுத்ரு ஷ்டாந்தம் (பரமாபதமித்யாதி) "[illegible] । [illegible]" (பரமாபதமாபத்தோமஹாஸிந்தபத்தரிம் । ஸத்ராகவஸ்ஸ்ரீமாந்நாராயணபராயணः) இதி மஹாபாரதே. தத் ஸாலஸஹஸ்ரநாமாத்யாயே, "[illegible]" (ருத்ரோபஹுசிராபப்ருர்விச்வயோனிச்சுசிச்ரவாः) இதி.

"[illegible] । [illegible] । [illegible] । [illegible]" (கச்சித்ஸாக்ருஸீக்ருத்தஸ்சலத்ப்ரேமலவாத்மகः । அஸ்மச்சேஷ்டாமபஹுஸர்ஸகச்சித்புரயோஷிதாம் । ஸௌபாக்யமாநமதிகம்கரோதிக்ஷணஸௌஹ்ருதः । அதவாகித்ததாஸைபரபாக்ரிபதாம்கதா । அப்யஸௌமாதரந்த்ரஷ்டும் ஸக்ருதப்யாகமிஷ்யதி) இதிபஞ்சமேம்ஸே பல பத்ரம் ப்ரதிகோப்யः. "[illegible] । [illegible]" (ஆர்த்தோவாயதிவாத்ருப்தःபரேஷாம்ஶரணாகதः । அரிःப்ராணாந்பரித்யஜ்யரக்ஷிதவ்யःக்ருதாத்மநா) இதி யுத்தகாண்டே அபயப்ரதாநப்ரகரணே. "[illegible] । [illegible]" (க்ரஸீயதிகாசுத்ஸ்த்ரஃகிந்நஸாகரமேகலாம் । மஹீந்தஹதிகோபேந யகார்த்தாக்ஷிதிவோத்திதः,) '[illegible] । [illegible]' (தர்மாபதேஶாத்த்யஜதச்சராஜ்யம் மாஞ்சாப்யரண்யம்நயதःபதாதிம் । நாஸீத்வ்யதாயஸ்யநபீர்நஶோகः கச்சித்ஸதைர்யம்ஹ்ருதயேகரோதி) இதிஸுந்தர காண்டே ஹநுமந்தம்ப்ரதிஸீதா. தத்ரைவ ஹநுமாந், "[illegible] । [illegible]" (ஹிமஹதாளிர்வாஷ்டஶோபாவ்யஸநபரம்பரயாதிபீட்யமாநா । ஸஹசராஹிதேவசக்ரவாகீஜநகஸுதா க்ருபணாம்தஶாம்ப்ரபந்நா.) "[illegible] । [illegible]" (பக்ஷீசாகாநிலயःப்ரஹ்ருஷ்டःபுநःபுநஶ்சோத்தமஸாந்த்வவாதீ । ஸுஸ்வாகதாம்வாசமுதீரயாநः புநःபுநஶ்சோதயதீவஹ்ருஷ்டः) "[illegible] । [illegible]" (ததாகதாந்தாம்வ்யதிதாமநிந்திதாம்வ்யபேதஹர்ஷாம்பரிதீநமாநஸாம் । ஶுபாம்நிமித்தாநிஶுபாநிபேஜிரே நரம்ஶ்ரியாஜுஷ்டமிவோபஜீவிநः.) "[illegible] । [illegible]" (ஸமாத்வாதஸ்தத்ராஹம்ராகவஸ்யபதிவ்ரதே । புஞ்ஜாநாமாஜ

க்ஷாந்போகாந்ஸர்வகாமஸம்ருத்திநீ. ) “ [illegible] ” (ஸாதமுத்தமஸம்விக்ராஸீதாவிபுலவக்ஷஸம் । ப்ரணயாச்சாபிமாநாச்ச பரிசிக்ஷேபராகவம் । கிந்த்வாமந்யத ) இத்யாதி.

“ [illegible] ” ( அதந்த்ரிதசமூபதிப்ரஹிதஹஸ்தமஸ்வீக்ருதப்ரணீதமணிபாதுகம்கிமிதிசாகுலாந்தஃபுரம் । அவாஹநபரிஷ்க்ரியம்பதகராஜமாரோஹதஃ கரிப்ரவரப்ரும்ஹிதேபகவதஸ்த்வராயை நமஃ ) இதி ஸ்ரீரங்கராஜஸ்தவே. “ [illegible] ” (கிமிதிச) என்றதினர்த்தம் ( திவ்யாந்தஃபுரம் கைநெருக்கும்படியென்றது ) பண்செய்து - அலங்கரித்து. ( விரோதிவர்க்கம் கிழங்கெடுத்து - இவள்குழலையும்முடிப்பித்து. தர்மபுத்ரன்றலையிலே முடியையும்வைத்து ) என்றந்வயிப்பது. “ [illegible] ” ( கோவிந்தேதியதாக்ரந்தத்க்ருஷ்ணமாம்தூரவாஸிநம் । ருணம்ப்ரவ்ருத்தமிவமே ஹ்ருதயாந்நாபஸர்ப்பதி ) இதிமஹாபாரதே. “ [illegible] ” (நாதிஸ்வஸ்த்தமநாஃ) என்றது ப்ரமாணத்திரட்டிலே கண்டுகொள்வது. “ [illegible] ” ( ஶரதல்பகதோபீஷ்மஶ்ஶாம்யந்நிவஹுதாஶநஃ । மாம்த்யாதிபுருஷவ்யாக்ரஸ்ததோமேதத்கதம்மநஃ ) இதிமஹாபாரதே. “ [illegible] ” ( மாம்த்யாதி ) என்று - அவன்முற்பாடுசொல்லி, “ [illegible] ” ( ததஃ ) என்கையாலே, ததஶ்ஶப்தம்-ஹேதுபரமன்று, ஆநந்தர்யபரமென்றபடி. (பிற்பாடராளுமென்றுநோவுபட்டாற்போலவும் ) என்றவநந்தரம், பிற்பாட்டுக்குநோவுபடுமவனிறே என்றத்யாஹரிப்பது. பிற்பாட்டுக்குநோவுபடுமென்னுமதுக்கு ப்ரமாணத்வயம் (தேநதேதமித்யாதி, ப்ரஸீதந்த்வித்யாதி ) “ [illegible] ” (ஸர்வேஷாம்ஹிஸதர்மாத்மா வர்ணாநாம்குருதேதயாம் । சதுர்ணாம்ஸமயஸ்ஸ்தாநாம் தேநதேதமநுவ்ரதாஃ) இத்யயோத்யாகாண்டே. “ [illegible] ” ( ப்ரஸீதந்துபவந்தோமேஹ்ரீரேஷாஹிமமாதுலா । யதீத்ருஶைரஹம்விப்ரை ருபஸ்த்தேயைருபஸ்த்திதஃ ) இத்யாரண்யகாண்டே. திருவயோத்யாவாசிகளுக்கு முந்தற க்ருபைபண்ணினபின்பிறே யவர்களிவரிடத்திலே ஸ்நேஹித்தது ; அத்தையுட்கொண்டு, இவன் பிற்பாட்டுக்கு நோவுபடும்ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார் ( என்முற்பாடுகண்டித்யாதி ) “ [illegible] ” (ப்ரஸீதந்து) என்றதுக்குபாவம் காலைக்கட்டியித்யாதி) இவளார்த்திக்கவன் நோவுபடும்ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார் (இனிவ்யஸநேஷ்வித்யாதி) ப்ரஸீதந்து என்றது-நாலாம் த்ருஷ்டாந்தமாகவுமாம்.

மேலீஶ்வரன்செய்யும் ப்ரகாரங்களை விஸ்தரேண வருளிச்செய்கிறார். ( நாம்கிட்டிநின்றித்யாதி ) ( இப்படிகளாலே திருவுள்ளம்போரவிரங்கி-நாம்கிட்டிநின்

றுகையைக்காலைப்பிடிக்க ) என்றந்வயித்துக்கொள்வது. இப்படிகளாலேயென்றது-பூர்வோக்தத்ருஷ்டாந்தத்திற் படிகளாலே யென்றபடி. வேண்டும்விஷயம்-நாயகி. ஒருதிர்யக்கு-தூதுவிட்டபக்ஷி. இருக்கிறவிருப்பை - கழகயிருக்கிற விருப்பை. தண்ணீர்வார்ப்பாரில்லையென்றது - துப்புவாரில்லையென்றபடி. அப்படி ஸௌந்தர்யத்திலதிகையோவென்ன (அஸிதேக்ஷணேத்யாதி) "ராகவோர்ஹதிவைதேஹீம் தஞ்சேயமஸிதேக்ஷணா" ( ராகவோர்ஹதிவைதேஹீம் தஞ்சேயமஸிதேக்ஷணா. ) (ஆனைக்காலிட்டு) இத்யாதிக்குக்கருத்து - ரஸிகத்வபங்கமாமென்று ஆனைக்காலிட்டுத் துகைப்பிக்கையாவது - பலாத்காரம்பண்ணுகை. 'ஆனைக்காலிட்டழித்து) என்றும்பாடமுண்டு. அதுக்கும் - கீழ்ச்சொன்னதேயர்த்தம். இவ்விடத்திலே-"கவிதாவநிதாசைவஸ்வயமேவாகதாவரா। பலாதாக்ருஷ்யமாணாசேத்ஸரஸாவிரஸாபவேத்" (கவிதாவநிதாசைவஸ்வயமேவாகதாவரா । பலாதாக்ருஷ்யமாணாசேத்ஸரஸாவிரஸாபவேத்) என்கிறதநுசந்தேயம். ஆனால் தாழ்ச்சிசெய்துவிடுகிறதுக்கென்னென்ன (அதித்தலையினித்யாதி) அது-தாழ்ச்சி. ஆனால், "அஸாத்யம்" (அஸாத்யம்) என்றுவிட்டுப்போகிறதுக்கென்னென்ன (இனி யித்தனையுமித்யாதி ) இத்தனையும்செய்தாலென்றது-இப்படியானாலென்றபடி. பலாத்காரத்தாலே மேல்விழவொண்ணாதோவென்ன (இசைவின்றிக்கேயித்யாதி) ம்ருதுப்ரக்ருதிகளாகையாலே-மாநிநிகளாகையாலேயென்றபடி. ஆத்தாலே முடிவர்களென்றுகருத்து. இவர்களிசையாவிட்டால் வேறபிமதவிஷயங்களில்லையோ, அங்கேறப்போகவொண்ணாதோவென்ன; ஒண்ணாதென்னுமத்தை ஸநிதர்ஶநமாகவருளிச்செய்கிறார் (இனிச்சேர்ந்தித்யாதிவாக்யத்வயத்தாலே) அழிஞ்சுக்காடு - பாலைநிலம். திருவடியைப்போலே திருநாமஸங்கீர்த்தநம்பண்ணினாலோவென்ன ( ராஜா தஶரத இத்யாதி) "ஏவம்பஹுவிதாம்சிந்தாம் சிந்தயித்வாமஹாகபிஃ। ஸம்ஶ்ரவேமதுரம்வாக்யம்வைதேஹ்யவ்யாஜஹாரஹ । ராஜாதஶரதோநாமரதகுஞ்ஜரவாஜிமாந் । புண்யஶீலோமஹாகீர்த்திருஜுராஸீந்மஹாயஶாஃ" (ஏவம்பஹுவிதாம்சிந்தாம் சிந்தயித்வாமஹாகபிஃ । ஸம்ஶ்ரவேமதுரம்வாக்யம்வைதேஹ்யவ்யாஜஹாரஹ । ராஜாதஶரதோநாமரதகுஞ்ஜரவாஜிமாந் । புண்யஶீலோமஹாகீர்த்திருஜுராஸீந்மஹாயஶாஃ ) இதிஹநுமாந். ராஜாதஶரதோநாம என்னுமளவன்றேயென்றது - பிராட்டியைப்போலே திருநாமங்கேட்டு மீளுமளவன்றென்னுதல், பிராட்டிக்கு ராவணபயமொழியப்ரணயரோஷ மில்லையென்னுதல். இத்தால் கோபம்தீருமோவென்ன ( தலையானவித்யாதி ) இது - சாடு; தலையான-ஶ்ரேஷ்டமான. இதுதானறிந்தபடியெங்ஙனேயென்ன (இதுதானடியிலேயித்யாதி) அதாவது -" தமேவஶரணம்கதஃ" ( தமேவஶரணம்கதஃ ) என்ற காகத்தை க்ருபையாலே ரக்ஷிக்கையாலே அடியிலேகண்ட தொன்றென்றபடி. விளைநீரடைக்கையாவது - விளையுமளவுக் கொருகாலே நீர்கட்டுகை. ஸமாதாநம்பண்ணுகைக்குத் தோழிமாரில்லையோவென்ன (தானுமவளுமானாலித்யாதி) அப்படியே யென்றிருந்தானென்றது - ஸ்நிக்தைகளாய் புருஷகாரமாவர்களென்றிருந்தானென்றபடி. அங்ஙனன்றிக்கே-தான்நினைத்தபடியன்றிக்கே இத்யர்த்தஃ. "புருஷகாரபூர்வகமாகப்பற்றினால் கார்யகரமாம்" என்றுதானறிந்தபடியென்னென்ன (ஸப்ராதுரித்யாதி)அதாவது-இளையபெருமாள் தம்மைப்பின்செல்லுகைக்குறுப்பாகப்பிராட்டியைப்புருஷகாரமாகமுன்னிடத்தானிரங்கி யவனைக்கூட்டிக்கொண்டுபோனத்தைபறிந்திருக்குமவனாகையாலேயென்றுகருத்து. அஹேதுகமாக நாயகிதனக்கே யிசைவுண்டானாலோ

வென்ன (இனியித்தலேயிலித்யாதி) இசையாதவன்றழைக்கப்போகாதோவென்ன (தத்தமஸ்யேத்யாதி) " [illegible] " (ஆநயைநம்ஹரிஸ்ரேஷ்ட்டதத்தமஸ்யாபயம்மயா । விபீஷணோவாஸுக்ரீவயதிராவணஸ்ஸ்வயம்) இதி யுத்தகாண்டே ஸுக்ரீவம்ப்ரதிராமঃ. " [illegible] " (வத்யதாமேஷதீவ்ரேண தண்டேநஸசிவைஸ்ஸஹ । ராவணஸ்யந்ருஸம்ஸஸ்யப்ராதாஹ்யேஷவிபீஷணঃ) இதிஸுக்ரீவঃ. அவ்வழிகளாலுமென்றது - பூவைகிளிதொடக்கமானவற்றினுடையபேச்சு, தோழிமாருடைய புருஷகாரபாவம், நாயகியினுடைய விசைவாகிற வழிகளாலுமென்றபடி. ஆனல் "மெள்ளப்பெறுகிறேம்" என்றுறியிருந்தாலோவென்ன (நஜீவேயமித்யாதி) " [illegible] " (நஜீவேயம்க்ஷணமபிவிநாதாமஸிதேக்ஷணும்) இதிராமঃ. (க்ஷணேபிதே இத்யாதி ஸ்தோத்ரே, " [illegible] " (ஸக்ருத்த்வதாகாரவிலோகநாஸயா) இத்யாதி.

இப்படி யிவன்தடுமாறுகிறவிடத்தி லவர்கள்செய்ததென்னென்ன (இனியிவன்றன்னணுகுதலாலேயித்யாதி) இவன்வந்தத்தை மூன்றுவழியாலே யறிந்து த்ருடப்ரக்ருதிகளாய் முகம்மாறியிருந்தார்களென்றபடி. அகன்றிருந்தாலன்றேகோபம், ஸந்நிஹிதனுயிருந்தால் கோபம்சமியாதோவென்ன (கோபந்தானித்யாதி) இது - மூன்றும்ஹேது. இவ்வோலக்ஷணங்களேக்கொண்டென்றது - தாங்களிருந்தவிடம் மயிற்கழுத்துச்சாயலாகையும், தாங்கள் புளகிதகாத்ரைகளாயிருக்கையும், மிகைத்துவருகிறகோபத்தையுடையராகையுமாகிற லக்ஷணங்களேக்கொண்டென்றபடி.

இவ்வளவிலவன் செய்ததென்னென்ன (இவனுமிவ்விருப்பையித்யாதி) கிட்டப்பெறுமையாலுமென்றது - அவர்களோடே கலக்கப்பெறுமையாலுமென்றபடி. கலக்கப்பெறவிட்டாலும், தூரஸ்த்தனுயிருந்தானுகில் பொறுத்திருக்கலாம், சமீபத்திலேயிருந்து கலக்கப்பெறவிட்டால் பொறுக்கவொண்ணுதிறே, அத்தைப்பற்ற (சந்நிதியாலும்) என்கிறுர். " [illegible] " (ஏகவஸ்த்ரதரோதந்வீஸிகேநகமாலயா । ஸோபயந்தண்டகாரண்யம்தீப்தேநஸ்வேநதேஜஸா) இதி ஆரண்யகாண்டேமாரீசঃ. பிராட்டியப்படிபட்டாளோவென்ன (க்ருஹீத்வேத்யாதி) " [illegible] " (க்ருஹீத்வாப்ரேக்ஷமாணுஸாபர்த்துঃகரவிபூஷணம்। பர்த்தாமிவஸம்ப்ராப்தாஜாநகீமுதிதாபவத்) இதிஸுந்தரகாண்டே. வர்த்தமாநநிர்த்தேசத்திலே நோக்காகபாவம் (ராவணனித்யாதி) "ஸா" என்றதிலேநோக்காகபாவம் (பஸ்யதேவீத்யாதி) " [illegible] " (வாநரோஹம்மஹாபாகேதூதோராமஸ்யதீமதঃ । ராமநாமாங்கிதஞ்சேதம்பஸ்யதேவ்யங்குளீயகம்.) பூஷணமென்னுதே, " [illegible] " (விபூஷணம்) என்கையாலே - ஆபரணபூதமானகரத்துக்கு மாபரணமென்கிறுர் (அணிமிகுவித்யாதி) " [illegible] " (க்ருஹீத்வா-பர்த்தாரம்ஸம்ப்ராப்தா) என்றந்வயம். திருவா

ழிமோதிரமன்றோ கையிலிருக்கிறது, இத்தாலே பர்த்தாவை ஸம்ப்ராப்தையாளு
ளென்னக்கூடுமோவென்ன; பாவநாப்ரகர்ஷத்தாலே பர்த்தாவை சம்ஶ்லேஷித்த
தாக நினைத்தாளென்கிறார் ( இவனித்தையித்யாதி ) கூடவிருந்ததாகநினைத்தால், அ
வன்திருக்கையில் மோதிரம் தன்கையில்வருவானென்னென்ன (ஒருசூதித்யாதி)
ஆனால், பர்த்தாரமேவ ஸம்ப்ராப்தா என்னவமைந்திருக்க, "இவ" என்றுசொல்லு
வானென்னென்ன ( இவளென்கிறனித்யாதி ) "இவ" என்றதுக்கிரண்டுதாத்பர்யம்.
முந்தினது - தாயாருடைய ஸம்ஶ்லேஷப்ரகாரத்தை ஸ்ப்புடீகரிக்கவொண்ணாமை
யாலே - இவ என்கிறனென்று; இத்தையருளிச்செய்கிறார் ( ஜநகீஸமாதியாலேயெ
ன்று ) த்வீதீயதாத்பர்யம் (இவளுணர்ந்தாலித்யாதி) அதாவது - இந்தபாவனைகு
லைந்தால், "இவர்கள்றியும்படியிருந்தோமோ" என்று லஜ்ஜித்து நோவுபடப்புகு
கிறளோவென்றபடி. (இவளுணர்ந்தால்) இத்யாதிவாக்யம் - வ்யாக்யாதாவினீடுபா
டாதல். பிராட்டி, போகோபகரணமான திருவாழிமோதிரத்தை யாதரித்தாள்; இ
வன் லீலோபகரணங்களை போகோபகரணங்களாக வாதரிக்கிறதென்னென்ன; அ
துவும் "இவளுடையது" என்கிற வாகாரத்தாலே போகோபகரணம்போலே யவ
னுக்குத்தேஶ்யமாயிருக்குமென்னுமத்தை ஸநிதர்ஶநமாக வருளிச்செட்கிறார் ( சம்
ஸ்ாரியித்யாதி ) அவனுடையவென்றது - ஈஶ்வரனுடையவென்றபடி. ஆகாராந்தர
மென்றது - கர்மநிபந்தநமான வாகாரமென்றபடி.

தங்களுடைய பந்துமுதலானவற்றிலே யபிநிவேஶம்பண்ணுகிற விவனைக்க
ண்டிவர்கள் செய்ததென்னென்ன (அவற்றிலேயித்யாதி) தன்னழகாலுமென்றது-
"தாமரைபுரைகண்ணிணையும்" இத்யாதியைப்பற்ற. "நம்பீ" என்றத்தைப்பற்ற
( குணங்களாலுமென்றது ) தன்செல்லாமைகளாலுமென்றது - "எம்குழறுபூவை
யொடும்," "கையிற்பாவைபறிப்பது" என்றத்தைப்பற்ற. தாழ்ச்சிகளாலுமென்
றது - "உணக்கிநீவளைத்தால்" என்றத்தைப்பற்ற.

இனி யித்திருவாய்மொழிக்கு ஸ்வாபதேஶமிரண்டுவகையாக வருளிச்செய்
கிறார் (இனி யித்திருவாய்மொழிதன்னையித்யாதி) (சேஷத்வலக்ஷணமன்று) என்ற
தக்குக்கருத்து-"உன்றன்றிருவுள்ளமிடர்கெடுந்தோறும் நாங்கள் வியக்கவின்புறு
தும்" என்றிருக்கிறவிவர், ஸ்ரீவைஷ்ணவர்களோடேகல்ந்தத்தைத் தமக்கஸஹ்யமா
கச்சொல்லுகை சேஷத்வவிருத்தமென்று. இதுவேபொருளா மித்தனையென்றது-
இத்திருவாய்மொழியிற்சொல்லுகிற ப்ராவண்யகார்யமான ப்ரணயரோஷமே ஸ்
வாபதேஶத்திலும் பொருளாமென்றபடி. ப்ராவண்யாதிஶயத்தாலே ப்ரணயரோ
ஷமாகச்சொன்ன விடமுண்டோவென்ன (ஹநிஷ்யாமீத்யாதி) கிலாய்க்கைக்கும்-
ப்ரணயரோஷம்பண்ணுகைக்குமென்றபடி. "ஏக ஏவ வரேண வாலீ ஶரேண நி
ஹதோ மயா । த்வாந்து ஸத்யாதிக்ராந்தம் ஹநிஷ்யாமி ஸபாந்தவம்" (ஏக
ஏவரேணவாலீஶரோணநிஹதோமயா । த்வாந்துஸத்யாதிக்ராந்தம்ஹநிஷ்யாமிஸ
பாந்தவம்) இதி கிஷ்கிந்தாகாண்டேராமஃ .............................................*

# இரண்டாந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

மின்னிடைமடவார்கணின்னருள்சூடுவார்முன்புநானதஞ்சுவன்
மன்னுடையிலங்கையரண்காய்ந்தமாயவனே
யுன்னுடையசுண்டாயநானறிவனினியதுகொண்டுசெய்வதென்
னென்னுடையபந்துங்கழலுந்தந்துபோகுநம்பீ.

### ஆறாயிரப்படி.

நிரவதிகசௌந்தர்யகுணயுக்தைகளாய் உன்னருள்சூடப் பிறந்தவர்களுடைய பந்துங்கழலுமல்லகாணிவை, என்னுடையபந்துங் கழலுமென்ன; "ஆனலென்" என்ன. என்னுடையபந்துங்கழலு மெடுத்து விளையாடுகிற வித்தை யவர்கள்காணிற்செய்வதென்னென்ன; "அஸந்நிஹிதைகளாயிருக்கிற வவர்கள் காண்கைக்குபாயமென்" என்ன, நானஸந்நிஹிதையாயிருக்கச்செய்தே, நீ யவர்களோடே கலந்து பரிமாறிற்றெல்லாமெங்ஙனேகண்டபடி, அப்படியே யவர்களும் காணுவர்களிறேயென்ன; "கண்டால்தான்வருவதென்" என்ன, தங்கள் கடாக்ஷதாரகனாயிருந்த வுன்னை யுபேக்ஷிப்பாரொன்று பார்த்து நானஞ்சாநின்றேனென்ன; "உனக்கென்னேறுறவில்லையாகில்வருகிறதென்" என்ன,என்னுடைய க்ருபையாலே, "உனக்கநிஷ்டம்வருகிறது" என்றஞ்சுகிறேனத்தனை, உறவினுலல்ல என்றிவள்சொல்ல; "இப்படி யஸம்பாவிதங்களை யாசங்கிக்கிறதென், அந்யோந்த்தேசேந வருகைக்கு ப்ரசங்கமுண்டோ, உன்பக்கலுள்ள ப்ரேமாதிசயத்தாலே யுன்னைப்பிரிந்து தரிக்கமாட்டாமையாலே வந்தேனத்தனை" என்றருளிச்செய்ய, "என்பக்கலுனக்கு ஸ்நேஹமானதுபொய்யிறே" என்ன; "நானுரோனுமொருவரோடே பரிமாறினு லவர்கள்பக்கல் பொய்யான ஸ்நேஹத்தைப்பண்ணுமவனோ" என்றருளிச்செய்ய, "உனக்காரோனுமொருவர்திறத்திலே மெய்யான ஸ்நேஹமுண்டாகி லவர்களை 'இன்னுர்' என்று சொல்லிக்காண்" என்ன; அசோகவநிகையிலே யிருந்த ஸ்ரீஜநகராஜர் தநயைத் திறத்து நான் பண்ணின ஸ்நேஹம் மெய்யன்றோ என்றருளிச்செய்ய, அதுவும் பொய்யேயென்றிவள் சொல்ல; அவள்பக்கலுள்ள ஸ்நேஹம்பொய்யாகி லவளுக்காக லங்கையையழிக்கக்கூடுமோவென்றருளிச்செய்ய, அதென்னை யகப்படுத்துகைக்குச் செய்த வஞ்சனையென்னுமிட மறியேனே, ஆதலாலென்னுடைய பந்துங்கழலும் தந்து அங்கேபோகு நம்பி யென்றுசொல்லுகிருள்.......................................................*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், இவள், தன்லீலோபகரணங்களையும் மறையவைத்துத்தோழிமாரையும் விமுகைகளாம்படிபண்ணி யிருக்கிறவளவில்; தன் பாக்ய விசேஷத்

தாலே யிவள் விஸ்மரித்து, அசேதநமாகையாலே தான் போகமாட்டாத பந்தையும் கழலையுமெடுத்துக்கொண்டு அவற்றிலே அத்யாதரத்தைப்பண்ணி, "நாம்முன்பு பெண்பிறந்தார்க்குதவி விரோதிநிரஸநம் பண்ணின வாகாரத்தை யாவிஷ்கரித்து, அபிமுகியாக்கக்கடவோம்" என்று நினைத்துநிற்க; "அவையெங்களது, நீநினைத்தவர்களதன்றுகாண், தந்துபோ" என்று அவனோடுறவற வார்த்தைசொல்லுகிறாள்.

உன்னைத் தந்தாம்பக்கலிலே அபிநிவேசிக்கும்படி பண்ணுகிற, மின் - மின்போலே நுடங்கும். இடை - இடையையுடையராகையாலே ரூபசோபையில்குறைவற்று. மடவார்கள் - மடப்பம்முதலான ஆத்மகுணங்களையு முடையவர்களாய்க் கொண்டு. இவ்விரண்டுமுண்டாயிருக்கச்செய்தே யென்னைப்போலன்றியே, நின் - உன். அருள் - அருளை. சூடுவார் - தலைக்கொண்டிருக்குமவர்களின். முன்பு-சந்நிதியிலே. நான் - அவர்களளவில் நீபண்ணின வ்யாபாரமறிந்திருக்கிற நான். அது - நீயிங்குப்பண்ணு மதிக்ரமங்க ளவர்களறிந்து நீ சிதிலனும்படி உனக்குமுகப்ரதாநம் பண்ணுதே வெறுப்பனோன்கிற வித்தைப்பற்ற. அஞ்சுவன் - அஞ்சாநிற்பன். மன்னுடையிலங்கையரண்காய்ந்த - நமக்குன்னையொழிய வேறு சிலருண்டோ, நாம்முன்பு ஏகதாரவ்ரதராய் அவர்களுக்கு வந்த இடையூறு கழித்துக்கொடுத்தமை கேட்டறியாயோவென்ன. மாயவனே - "பெண்பிறந்தார்க்குதவுமவன்" என்று இளநெஞ்சாயகப்படுகைக்குச் செய்த க்ருத்ரிமசேஷ்டிதத்தையுடையவனே. அது, உன்னுடைய - உன்னுடைய. சுண்டாயம் - ஸ்வார்த்தபரதையென்று. நான் - புறம்புள்ளாரைப்போலன்றியே உன் நினைவறியும் நான். அறிவன் - அறிவன். இனி - இனி. ஒருபேதைக்குப் பொய்குறிக்குமாபோலே, என்பக்கல், அது-அது. கொண்டு-கொண்டு. செய்வது - செய்யலாவது. என் - உண்டோ. நம்பீ - நானொருத்தியுமே யல்லாதபடி "பதினாறுமாயிரவர்தேவிமார்" என்று ப்ரசித்தமான பூர்த்தியை யுடையவனல்லையோ, அவர்கள் வெறுதபடிபோக ப்ராப்தம். போமிடத்தில், என்னுடைய - என்னுடைய மமதாந்தர்ப்பூதமான. பந்தும் - பந்தையும். கழலும்- கழலையும். தந்து - தந்து. போகு - போ.

"விமுகருடைய மமதாவிஷயம் த்யாஜ்யமாக நினைத்திருக்கும்" என்றிருந்தாளிவள்; "இவள்வைமுக்யம் ப்ரணயக்ருதமாகையாலே யிவளோடு சம்பந்தித்தவஸ்து உத்தேஶ்யம்" என்றிருந்தானவன். செந்நூலும் கருநூலும் வெண்ணூலுமிட்டுச் சமைத்த பந்தையும் ஐந்துகழலையுமவனுதரித்தது - இவருடையகுணத்ரயாத்மகசரீரமும் இந்த்ரியங்களைந்தும் தன்விஷயமாக்க நினைத்து. இவளதுதரச்சொன்னது - உன்னைக்கிடையாவிட்டால் பழைய சரீரேந்த்ரியங்க ளமையுமென்றுநினைத்து. சுண்டாயம் - ஸ்வார்த்தபரத்வம்..........................................................*

## ஈடு - முதற்பாட்டு.

இப்படி வரவுதாழ்த்தது மித்தலையையொழியச்செல்லுவதாயன்றிறே. கடுகவந்துகொண்டுநின்றான், பந்தையும் கழலையுமெடுத்துக்கொண்டான், அலப்யலாபமென்று தோற்றும்படி நின்றான், இத்தலையில் பண்ணக்கடவ வ்யாமோஹமடங்கலு மிவற்றின்பக்கலிலேபண்ணினான். அவன்படுகிற வலமாப்பைக்கண்டு, "இவையெல்லாம் நம்மைக்குறித்துச் செய்கிறானல்லன், தான் கலந்துபிரிந்தவர்களுடைய வுபகரணங்களாகக் கொண்டு செய்கிறானித்தனை; இவனுடன் வார்த்தைசொல்லாதேயிருக்

கிறதென்" என்று, "வாராய், நீநினைக்கிறவர்க ளதன்றுகா ணிவை, உனக்குபேக்ஷாவிஷயமான வெங்களதுகாணிவை, இவற்றைத்தந்து அவர்கள்பக்கலிலேறப்போ" என்ன.

"ஓம், அதுசெய்கிறேன், (இங்ஙனே) காரைச்சுமந்ததொரு மின்னின்றநீ" என்ன (மின்னிடைமடவார்கள்) என்கிறார்கள்– "அவர்கள்பாடேறப்போகிறவன் இடையிலே யிதொன்றைச்சொன்னான்,அதுதான் நிலைநில்லாது" என்று பார்த்து; வாராய், நீயுபேக்ஷித்ததொருவிஷயத்திலே யித்தனை கால்தாழ்ந்தால், உன்னை விரும்பியிருப்பாரநேகராகையாலே போரநெருக்குண்புதிகிடாய். அவர்கள் தங்கள்படி யிருந்தபடியென்றான், இதொரு தேஹகுணமு மாத்மகுணமு மிருக்கும்படியே!. மின்னிடை - மற்றும் தேஹகுணத்துக் குபலக்ஷணம். (மடவார்கள்) இது-நாண், மடம், அச்சம், பயிர்ப்பு முதலான ஆத்மகுணங்களுக்குமுபலக்ஷணம். மடவாரென்கிற பஹுவசநத்தாலே – ஒருவர்க் குற்றாறாயிராமைசொல்லுகிறது. நீ அதஸ்மிம்ஸதத்புத்திபண்ணும்படி பண்ணுவிப்பதே அவர்கள் சிலர். இவனுடைய வலமாப்யைக்கொண்டே அவர்களுடைய வைலக்ஷண்யத்தை யநுமிக்கிறாளிறே. பாவியேன், உன்னை யிங்ஙனே இடையிலே பிச்சேறித்துடிக்கப்பண்ணினாரோ. (மின்னிடைமடவார்கள்) இவனோடு சம்பந்தமுடையாருடைய தேஹகுணங்களையுமாத்மகுணங்களையும் ஸ்வாபாஸ்ரயமாக நினைத்திருந்தபடி தோற்ற வார்த்தைசொன்னபடியென்றான்! ; ப்ரணயரோஷம் புறவாயிலே செல்லாநிற்கச்செய்தேயு மகவாயில்நினைவிதிறே. அகவாயிலும் த்வேஷமேயானாலும் வஸ்துவிருந்தபடிசொல்லவேணுமே ; த்வேஷத்தாலேசொல்லு மன்றும் "தரு॰ணெள॰ரூபஸம்பந்நௌ" (தருணௌரூபஸம்பந்நௌ) என்றல்லது சொல்லவொண்ணாதே. (மின்னிடைமடவார்கள்) தங்கள் பாடுகிட்டினால், "இதோரிடையே!, இதொருகுணமே!," என்று அவனுழங்கால் படும் துறையறியுமே ; "அப்படியேயிறே யிவன்போனவிடத்திலும்" என்றிருககிறார்கள். இங்ஙனன்றாகில் எதிர்த்தலையைக்கண்டு சொல்லுகிறாளன்றே. இப்படி யிருப்பாருமுண்டோ புறம்பே யென்ன (நின்னருள்சூடுவார்) உன்னுடைய ப்ரசாதத்துக்கு ; பாத்ரபூதைகளாயிருப்பார். இவ்வளவில் "உன்றலையிலே கால்வைக்கப்பிறந்தார்" என்று சொல்லவிறே யடுப்பது ; அங்ஙன்சொல்லுமன்று அதவனுக்கிடமாமே, அதாவது- இவள்காலைத் தன்றலையிலே யெடுத்துவைத்துக்கொள்ளுமென்கை. உறவுதோற்றாமலிருக்கிறவ ளங்ஙன்சொல்லாளிறே. பாவபந்தமடியாகவந்த கலவியாகையாலும், நினைவு மத்தலையாலே வந்ததாகையாலும், அவன் வார்த்தையாக நடுவொன்றில்லையேயாகிலு மிடையீடுபொறுக்கக்கட்வது. ஆனாலென், அவர்களிங்கில்லையேயென்றான் (முன்பு) எங்களை அவர்களாகநினை. நாங்கள் காணவர்களென்கிறாள். "அவையெ

ல்லாமிங்கேயிறே" என்னவேண்டியிருக்க, தனக்குவேறேசிலருண்டாகச் சொல்லுவானென்னென்னில்; பலகேட்க நினைத்திருக்கிறவனொருவார்த் தையோடே தலைக்கட்டானே, இட்டீடுகொள்ளுகையிறே யிவன்றனக்கு தாரகம். (முன்பு) நீசெய்யு மவையெல்லாம் மறைக்கப்போகாதுகாண். நீ அங்குச்செய்தவையெல்லாம் கண்டாயே நாங்களறிந்தபடி; இப்படி யே, நீயிங்குச்செய்யுமவையெல்லா மவர்களறிவர்கள்காண். அவர்களுக் குன்னைப்போலே வேறந்யபரதையில்லைகாண். உன்னைப்போலேநினையா தேகொள்ளாயவர்களை. உன்னைக்கலந்துபிரிந்தா ருன்னை ஸாக்ஷாத்கரித் தபடியே யிருப்பர்கள்காண், "பிரிந்தொன்றுநோக்காது தம்முடைய பி ன்னே திரிந்துழலும் சிந்தனையார்" என்றிறேயிருப்பது. அவர்களுக்கு வேறுவிஷயமில்லாமையாலே சர்வகாலத்துக்கும் ஸ்ம்ருதிவிஷயம் நீயே காண். ஆனாலென், உங்களுக்கென்னோடொரு சம்பந்தமில்லையானபின் பு அத்தால்வருவதொன்றில்லையேயென்றான் (நானதஞ்சுவன்) உன்னை ப்போலல்லோங்காண் நாங்கள். நீயிங்கே சிறிதுபோது கால்தாழ்த்துப் போனால், அவர்களுன்னை யரைக்ஷணம் முகம்மாறினால், நீபொறுக்கமா ட்டாமல் கிடந்து துடிக்கும்துடிப்பு நான் காணமாட்டேன். கலந்துபிரி யவல்லாயும் துடிப்புக்காணவல்லாயும் நீயேகாண், பராநர்த்தங் கண்டா ல் பொறுக்கமாட்டோங்காண் நாங்கள். உன்னோடுறவில்லையேயாகிலும் நீபடுமலமாப்புக்கண்டால் பொறுக்கமாட்டோம்; சிலர் கிணற்றிலே வி ழுந்தா லொருகுரல் கூப்பிடும்போதுறவுவேணுமோ. அவர்கள் பக்கல் முகம்பெறாதேநிற்கும் தடுமாற்றத்தை ஆற்றே னென்கிறாள். அரைக்ஷ ணமித்தலையையொழிய ஜீவிக்கமாட்டாத செல்லாமையையுடையவென் னைப்பொய்யனாக்கிப் புறம்பாக்கி வார்த்தைசொல்லுவதே! யென்றான் (மன்னுடையிலங்கையரண்காய்ந்தமாயவனே) "என்றான், நீபொய்ய னல்லையோ" என்றாள், "நானென்னோடு பரிமாறினாரிலிதுக்குமுன்பா ர்க்குப்பொய்செய்தேன்" என்றான், நீதானார்க்கு மெய்செய்தாயென்றா ள்; ஏன்றான், "உண்ணாதுறங்காதொலிகடலையூடறுத்து" என்று, ஏக தாரவ்ரதனாய்க்கொண்டு நான் பட்டதெல்லாம் பொய்யோ வென்றான். அதுதான் நீ வேண்டிச்செய்தாயோ, "ஒருதுறையிலே யொருமெய்பரி மாறுவிடில், நமக்குமேலுள்ளதெல்லா மொருதொகையி லகப்படாது" என்றுசெய்தாயத்தனையன்றோ. அபலைகளை யகப்படுத்திக்கொள்ள இட் டவழியன்றோ. (மன்னுடையிலங்கையரண்காய்ந்த) நிலமிதிதானெதிரி கள் மண்ணுண்ணும்படியாய், அதுக்கு மேலே "லங்காம்ராவணபாலி தாம்" (லங்காம்ராவணபாலிதாம்) என்றுகொண்டு, சிம்ஹங்கிடந்த முழஞ்சுபோலே பையலுணர்ந்து நோக்குகிற வூரையழியச்செய்த. (ம ன்னுடை) மன்னனையுடைய. (மாயவன்) க்ருத்ரிம வ்யாபாரத்தை யு டையவன்.

அழகிது, ஒருமெய்யுமுண்டாகச் சொன்னுயே, அத்தையிங்கே செய்தேனுலோ மேலுள்ளது மெல்லாமாகைக்காக வென்முன் (உன்னுடைய சுண்டாயம் நானறிவன்) அதுனக்குச்செய்யலாவது செவ்வே பரிமாறுமவர்களோடுகாண். நீசெய்கிறவையெல்லாம் பண்டேயெனக்கு ஜ்ஞாதங்காண். நீசெய்கிறவையெல்லாம் "மெய்" என்றிருப்பாள் ஸ்ரீஜநகராஜன்திருமகள்காண், உன்னுடைய க்ருத்ரிமலீலைகளெல்லாம் நானறிவன். சுண்டாயம் - ஸ்வார்த்தபரத்வம். அறிந்தென், அறியாவிடிலென், ப்ரவ்ருத்தமாயிற்றேயென்முன் (இனியதுகொண்டுசெய்வதென்) சாத்யமாயிற்றதிறேயென்முன், சாத்யாம்சத்துக்கொரு ப்ரயோஜநங்கண்டிலோமீ என்முள். (அதாவது-நானறிந்தபின்பு உன்க்ருத்ரிமத்தை முன்னிட்டு என்பக்கல் ப்ரயோஜநமில்லையென்கை.)

அவனுமொன்றைநினைத்து, "ஆகிலெனக்கு சாத்யாம்சந்தானில்லையோ" என்முன்; (என்றவநந்தரத்தே கைப்பட்டபந்தையும் கழலையும்கொண்டுபோகப்புக்கான்) (என்னுடையபந்துங்கழலும்) கைப்பட்ட பந்தையும் கழலையும் போரவிரும்பப்புக்கான். பாவியேன், நீயெங்கே செய்யக்கடவத்தை யெங்கேசெய்கிறுய், அவை நீநினைக்கிறவர்களதன்றுகாண், அவையென்னதுகாணென்முள். "அதுதான், மெய்யே" என்முன், இவன் விருப்பத்துக் கதுதானேயிறே வேண்டுவது, "யஸ்யைதே தஸ்ய தத்தநம்" (யஸ்யைதேதஸ்யதத்தநம்) என்று மற்றையது அநந்தரத்தேவருமிறே. (அதாவது-ஸ்வரூபஜ்ஞாநமுடைய வுன்னுடைய மமகாரவிஷய மடங்கலு மென்னதன்றோ என்று போகத்தொடங்கினுன்.) இனி ப்ரவேஸத்திலே, "முடியப்பார்க்கிருள்" என்று சொல்லிற்றென்றுண்டு, அது - இப்பதத்திலே தோற்றுகிறது. அவன் ஸந்நிதியிலே "என்னது" என்று சொல்லுகைக்கு மேற்பட்டமுடிவில்லையிறே, * த்வ்யக்ஷரஸ்துபவேந்ம்ருத்யுः இறே. "மாமகாः பாண்டவாஸ்சைவ" (மாமகாःபாண்டவாஸ்சைவ) என்கிறவிடத்துக்குச் சிறியாத்தான்சொல்லும்படி - "என்னுடையவர்களென்றும் பாண்டவர்களென்றும் பிரித்தான், அதிறே விநாஸபர்யந்தமாக்கிவிட்டது" என்று. இதுதான் தத்வகதையேயன்று, ப்ரணயகோஷ்டியிலும்; கலவியிலேவந்தால் "உன்னது, என்னது" என்கையிறே உறவறுகையாவது. (என்னுடையபந்துங்கழலும்) "ஆத்மேத்யேவ துக்ருஹ்ணீயாத்" (ஆத்மேத்யேவதுக்ருஹ்ணீயாத்) என்கிறபடியே ஒன்றையொன்றுபாசியாநிற்கச்செய்தே, தன்னை யுபாசித்ததென்று சொல்லலாம்படியிறே யிரண்டுவஸ்துவுக்கும் ப்ரத்யாஸத்தியிருந்தபடி. ஸ்வரூபம் விஸதமானுல், "நான்" என்னவுமாய் "அடியேன்" என்னவுமாய்க்காணுமிருப்பது. (தந்துபோகுநம்பீ) நீயிங்கே கால்தாழாநின்றுய், இதுக்கொரு தாத்பர்யமறியாதே யுன்னையுபேக்ஷிக்கத்தொடங்குவர்கள், அதுக்குமுன்னேபோ. (நம்பீ) முகப்பழக்க

முமின்றிக்கேயிருந்தது, முதலியாருமாயிராநின்றீர், கடுகப்போகப்பாரும். "கண்டகாட்சி புல்லெழுந்துபோனபடியிறே யிவளிங்ஙன்சொல்லுகிறது" என்று பெரியமுதலியார்வார்த்தை. என்னுடைய பந்துங்கழலுமென்றவிடம் - அவன்பொகடுகைக்குச்சொன்னவார்த்தை. தந்துபோகு என்றவிடம் - அவன்விரும்பினவையொழியத் தனக்குச்செல்லாதென்னுமிடந் தோற்றுகிறது. (நம்பி) "ஷொடஶஸ்த்ரீஸஹஸ்ராணி" (ஷோடஶஸ்த்ரீஸஹஸ்ராணி) என்று - உமக்குப்போனவிடமெங்கும் கொண்டாட்டத்தால் குறையில்லை, எங்களுக்கும்மைக்கிடையாது, இனி யும்முடைய கரஸ்பர்ஶமுண்டாய்ப்பொகட்டவைகொண்டாகிலு மெங்களுக்கு ஜீவித்துக்கிடக்கவேணும், ஆனபின்பு அவற்றை யெங்களுக்குத்தந்துபோம். "உயிரைவைத்துப்போம்" என்பாரைப்போலே. "இவனிவை கைவிட்டுப்போகமாட்டான்" என்றறிந்து, மர்மஜ்ஞையாகையாலே - தந்துபோவென்கிருள் ........................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (மின்னிடையித்யாதி) இத்தனைவ்யாமோஹம்பண்ணுகிறவன் வாராதிருப்பானென்னென்ன (இப்படிவரவுதாழ்த்ததித்யாதி) (செல்லுவதாயன்றிறே) என்றவநந்தரம்; ப்ராவண்யம் விளைக்கைக்காகவிறே, அதுவிளைந்தவாறே (கடுகவந்துகொடுகின்றுன்) என்றுகூட்டிக்கொள்வது. (இப்படிவரவுதாழ்த்ததுமென்று தொடங்கி, காரைச்சுமந்ததொரு மின்னின்றதியென்ன என்னுமளவும்) பாட்டில் தாத்பர்யத்தையும் சூசிப்பியாநின்றுகொண்டு, "மின்னிடைமடவார்" என்றபதத்துக்கவதாரிகை யருளிச்செய்தபடி. காரைச்சுமந்ததொரு மின்னின்றதியென்றது-அலகபாரத்தைச்சுமந்ததோரிடை யிருந்ததியென்றபடி. "காரைச்சுமந்ததொரு மின்னின்றதி" என்று அவன் தங்களை வர்ணித்ததுக்கு இவர்கள் ப்ரதிவசநத்வேந "மின்னிடைமடவார்" என்றதுக்கிரண்டு தாத்பர்யம். அதில், அவன்சொன்னவார்த்தை யஸ்த்திரமாகையாலே, உன்னுடைய மின்னிடைமடவார்களெல்லோம் நாங்களென்று முந்தினபாவம்; அத்தையருளிச்செய்கிறுர் (அவர்கள்பாடேறவித்யாதி) இடையிலே-நடுவேயென்றும், இடையிலேயென்று மர்த்தத்வயம். இத்தனைகால்தாழ்ந்தாலென்றது-எங்கள்பக்கல் ஸ்நேஹமின்றிக்கே தாமஸித்தாலென்றபடி. போரநெருக்குண்புதிகிடாயென்றது - "நீ அந்யாஸக்தன்" என்று அவர்களுன்னை முகம்பாராமையாலே போரநோவுபடுவுதிகிடாயென்றபடி. "மின்னிடைமடவார்" என்றுவர்ணித்ததுக்கு பாவம் (அவர்கள் தங்களித்யாதி) படி - வடிவு. விவரணம் (இதொருவித்யாதி) ஆத்மகுணம் - பவ்யதைதொடக்கமானவை. உற்றுனுயிராமை-பொருந்தினவனுயிராமை. "மின்னிடைமடவார்" என்றதுக்கு - இவனபிமதவிஷயங்களோடே கலந்து பிரிந்துவந்து தங்களைக்கண்டு அவர்களாக ப்ரமித்துச்சொல்லுகிறுனென்று த்விதியதாத்பர்யம் (நீ அதஸ்மிந்நித்யாதி) "மின்னிடைமடவார்கள்" என்று அவர்கள் வைலக்ஷண்யத்தை யிவர்களறிந்தபடியென்னென்ன (இவனுடையவித்யாதி) அலமாப்பாவது - அதஸ்மிம் ஸ்தத்புத்திபண்ணுகை. "நீஶுதஸ்மிம்ஸ்தத்புத்தி" (நீஅதஸ்மிம்ஸ்தத்புத்தி) இத்யாதிவாக்யத்துக்கு ரஸோக்தியாக விவரணம் (பாவியேனித்யாதி) இடையிலேயிச்சேறி - நடுவேப்ரமித்தென்றும், இடை

யைக்கண்டு பிச்சேறியென்று மர்த்தத்வயம். பதோபாதாந பூர்வகமாக ஸ்வாபதேஶம் (மின்னிடைமடவார்க ளிவனோடுசம்பந்தமித்யாதி) நினைத்திருந்தபடி - ஆழ்வார்நினைத்திருந்தமையென்றபடி. ப்ரணயரோஷம் செல்லாநிற்க, சுபாஶ்ரயமாக நினைக்கக்கூடுமோவென்ன (ப்ரணயரோஷம்புறவாயிலேயித்யாதி) பட்டர்நிர்வாஹத்திலே ப்ரணயரோஷமன்றே, ஶ்லாகிக்கலாமோவென்ன (அகவாயிலுமித்யாதி) ஸத்ருஶத்ருஷ்டாந்தமாக விவரணம் (த்வேஷத்தாலேயித்யாதி) "தருணௌ ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ மஹாபலௌ । புண்டரீகவிஶாலாக்ஷௌ சீரக்ருஷ்ணாஜிநாம்பரௌ" (தருணௌரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌமஹாபலௌ, புண்டரீகவிஶாலாக்ஷௌசீரக்ருஷ்ணாஜிநாம்பரௌ) இத்யாரண்யகாண்டே கரம் ப்ரதிஶூர்ப்பணகா. அவர்கள்வைலக்ஷண்யத்தை யிவர்களறிந்தபடி யென்னென்கிற சங்கைக்குப் பரிஹாரார்ந்தரம் (தங்கள்பாடித்யாதி) "அநுமிக்கிறுள்" என்று கொள்ளாதவர்களுக் கநிஷ்டப்ரஸஞ்ஜநம்பண்ணுகிறார் (இங்ஙனன்றாகிலித்யாதி) (உறவுதோற்றாமல்) இத்யாதி வாக்யாநந்தரம், (அங்ஙன்சொல்லுமன்று) இத்யாதிவாக்ய மநுசந்திப்பது.

ப்ரத்யுத்தரமாக வவன்வார்த்தையில்லாமலிருக்கப் பரிஹரிக்கக்கூடுமோவென்ன (பாவபந்தமித்யாதி) அதாவது - ஸ்நேஹபூர்வகமான கலவியாகையாலே பாவகர்ப்போக்தியாமென்றபடி. நினைவு மத்தலையாலே வந்ததாகையாலுமென்றது- இவர்கள்சொலவு மவன்வார்த்தைக்கு ப்ரத்யுத்தரமாகையாலுமென்றபடி. அதாவது-ப்ரணயதாரையில் விதக்தைகள்சொல்லுகிற வார்த்தையாகையாலே, இவர்கள் சொலவு நாயகனுடையநினைவை அநுவிதாநம்பண்ணி அவ்வுக்திக்கு ப்ரத்யுக்தியாயிருக்குமென்றபடி. நினைவென்றது - நினைவின்கார்யமானசொலவை. நினைவென்று - சொலவைச்சொல்லுமோவென்ன; " 'இந்தவார்த்தையை யங்கேநினைப்பிடு' என்றால் - அங்கேசொல்லென்றபடியிறே" என்றருளிச்செய்வர். இடையீடுபொறுக்கக்கடவதென்றது - நடுவே யவன்வார்த்தையை யத்யாஹரித்துக்கொள்ளக்கடவதென்றபடி. ஆனாலென்றது - அவர்கள் "அந்யாஸக்தன்" என்று முகம்மாறியிருந்தாலென்றபடி. பூர்வவாக்யவிவரணம் ( நாங்கள்காணித்யாதி ) அதாவது - உன்னுடைய வ்யாபாரங்களெல்லாம் நாங்களறிந்தாப்போலே, நீயிங்குச்செய்தவையு மவர்க ளறிவர்களென்றபடி. (அவையெல்லாம்) இத்யாதி சங்காவாக்யத்துக்குபாவம் - வேறேசிலருண்டாகச்சொல்லுகை ப்ரணயித்வத்துக்குச் சேராதென்று. இது வார்த்தையிட்டு வார்த்தைகொள்ளுகைக்காகச்சொன்ன தத்தனையொழிய, தனக்குவேறே சிலருண்டென்றுசொன்னவார்த்தை யன்றென்று பரிஹரிக்கிறார் (பலகேட்கவித்யாதி வாக்யத்வயத்தாலே) நானொளித்துச்செய்கிறவை யவர்களறிவர்களோவென்ன (நீசெய்யுமவையித்யாதி) "எங்களையவர்களாகநினை" என்றவாக்ய விவரணம் (நீயங்கித்யாதி வாக்யத்வயம் அவர்களுக்கு வேறுபராக்கில்லையோவென்ன ( அவர்களுக்கித்யாதி ) அந்யபரதையில்லாமைக்கு ஹேது வுன்வைலக்ஷண்யமென்கிறார் ( உன்னைக்கலந்தித்யாதி ) பகவதேகபரதைக்கு ப்ரமாணம் (பிரிந்தொன்றித்யாதி) வேறொன்றைப்பாராதே தம்முடையபின்னே யிடைவிடாமல் திரிந்து தடுமாறுகிற மாஸ்ஸையுடையவர்களென்றபடி. பெரியதிருவந்தாதி ஐம்பதாம்பாட்டு. நம்மைக்கலந்துபிரிந்தார் நம்மை ஸாக்ஷாத்கரித்தபடியே யிருக்கிறதெத்தாலே யென்ன (அவர்களுக்கு வேறுவிஷயமித்யாதி)

கீழ்ப்பதத்தையு மநுசரித்து, "நானதஞ்சுவன்" என்றதுக்கவதாரிகை (ஆனாலித்யாதி) ஆனாலென்றது - அவர்களறிந்தாலென்றபடி. அத்தால் வருவதொன்றி

ல்லையே யென்றது - அவர்கள் முகம்பாராமையால் வரும்வ்யஸநமுங்களுக்கில்லை யேயென்றபடி. இதுக்குத்தரமாக ( நீயிங்கேசிறிதுபோது ) இத்யாதிவாக்யத்தைச் சொல்லிக்கொண்டு, அநந்தரம் (உன்னைப்போலல்லோங்காண்நாங்கள்) என்கிறவா க்ய மநுசந்திப்பது. துடிப்புக்காணமாட்டாமைக்கடியேதென்ன; எங்கள் ப்ரக்ருதி ஸ்வபாவமென்கிறார்கள் ( உன்னைப்போலல்லோங்காண்நாங்களென்று ) இத்தைவி வரிக்கிறார் ( கலந்துபிரியவல்லாயுமித்யாதிவாக்யத்வயத்தாலே ) துடிப்பென்றது- " அது " என்றத்தைப்பற்ற. (கலந்துபிரியவல்லாயும்) இத்யாதிவாக்யம் - " நானத ஞ்சுவன் " என்றதுக்கு ப்ரதிகோடித்வேநபாவமாயிருக்கிறது. " ஆனாலென், உங்க ளுக்கென்னோடொரு சம்பந்தமில்லையானபின்பு " என்கிறசங்கைக்குப் பரிஹாரமே தாயிற்றென்ன (உன்னோடுறவில்லையேயித்யாதி) இந்தவாக்யம் (நீயிங்கேசிறிதுபோ து) இத்யாதிவாக்யத்துக்கு விவரணமாயிருக்கிறது. உறவில்லாதவிடத்திலே தயை யுதிக்குமோவென்ன (சிலர்கிணற்றிலேயித்யாதி) "மின்னிடை" இத்யாதிக்கு-மின் போலே நுடங்குமிடையையு மாத்மகுணங்களையுமுடையராய், உன்னருளை சிரஸா வஹிக்குமவர்கள் சந்நிதியில் நீபண்ணின வ்யாபாரமறிந்திருக்கிறோம், நீயிங்குப் பண்ணு மதிக்ரமங்களை யவர்களறிந்து நீசிதிலனும்படி யுனக்கு முகங்கொடாதே வெறுப்பரென்கிறத்தைப்பற்ற வஞ்சாநின்றேனென்று சப்தார்த்தம்.

"மன்னுடையிலங்கை" இத்யாதிக்கவதாரிகை ( அனைகூணமித்தலையையித் யாதி ) " மின்னிடைமடவார் " என்று - எங்களையவர்களாக ப்ரமித்தாயென்கையா லே, (பொய்யனுக்கியென்றது) "நின்னருள்சூடுவார்" என்கையாலே, (புறம்பாக் கியென்றது) " மாயவன் " என்றது - சரமயுக்த்யபிப்ராயத்தாலே யாகையாலே, தத்பூர்வபாவியான யுக்திகளை யருளிச்செய்கிறார் ( என்றான் நீபொய்யனித்யாதி ) (அபலைகளை) இத்யாதிவாக்யம்-சரமயுக்த்யபிப்ராயமான " மாயவன் " என்கிறதுக் குத் தாத்பர்யம். தொகை-ஸங்க்யை. சப்தார்த்தம் (நிலமிதியித்யாதி) நிலமிதி-நில த்தின் ஸ்வபாவம். வீரக்ஷேத்ரமென்றபடி. முழஞ்சு-புதர்.

"உன்னுடையசுண்டாயம்" என்றதுக்கவதாரிகை ( அழகிதித்யாதி ) ஆனால் நீயெப்படிக்கொத்தவளென்ன ( நீசெய்கிறவையித்யாதி ) செவ்வே பரிமாறுமவர் களாரென்ன ( நீசெய்கிறவையித்யாதி ) சப்தார்த்தம் ( உன்னுடையவித்யாதி )

ப்ரவ்ருத்தமாயிற்றேயென்றது - ஆலோகாலாபாதிகள் ப்ரவ்ருத்தமாயிற்றே யென்றபடி. ஏதத்விவரணம் (ஸாத்யமாயிற்றதிறேயென்றானென்றது) இதுக்கநந் தரம், ( இனியதுகொண்டுசெய்வதென் ) என்றதநுஸந்தேயம். ஒருப்ரயோஜநங் கண்டிலோமீயென்றது - ஸம்பாஷணாதிகளாற் பெற்ற ப்ரயோஜநமொன்றுங் கண் டிலோமீயென்றபடி. அதாவது - ஸம்ஶ்லேஷம்வாராதென்றபடி.

ஒன்றைநினைத்தென்றது - கைப்பட்ட பந்தையும் கழலையும் நினைத்தென்றப டி. ( கைப்பட்டபந்தையும் ) இத்யாதி வாக்யாநந்தரம் - ( என்னுடையபந்துங்கழ லும் ) என்றதநுசந்தேயம்.

மெய்யேயென்றது - மெய்யோவென்றபடி. மெய்யானாலென்னென்ன ( இ வன்விருப்பத்துக்கித்யாதி ) அதெப்படியென்ன ( யஸ்யைத இத்யாதி ) " 𑌤𑍍𑌰𑌯 𑌏𑌵𑌾𑌧𑌨𑌾 𑌰𑌾𑌜𑌨𑍍 𑌭𑌾𑌰𑍍𑌯𑌾 𑌦𑌾𑌸𑌸𑍍𑌤𑌥𑌾 𑌸𑍁𑌤𑌃 । 𑌯𑌤𑍍𑌤𑍇 𑌸𑌮𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌯𑌸𑍍𑌯𑍈𑌤𑍇 𑌤𑌸𑍍𑌯 𑌤𑌦𑍍𑌧𑌨𑌮𑍍 " ( த்ரயஏவாதநாராஜந் பார்யாதாஸஸ்ததாஸுத:। யத்தேஸமதிகச்சந்தி யஸ்யைதேதஸ்யதத்தநம் ) இத்யுத்யோகபர்வணி த்ருதராஷ் ட்ரம் ப்ரதிவிதுர:. (யஸ்யைதே) இத்யாதிவாக்யதுக்கு - இவர்களவனுடையவர்க

ளானு லிவர்களதவனுடையதாமிறே யென்று கருத்து. மற்றையதென்றது - சேஷ பூதனுடைமை சேஷியதாகையென்றபடி. ( அதுதான்மெய்யே ) இத்யாதிவாக்யத் ரயமும் - " தந்துபோகு " என்றதுக்கவதாரிகை.

இப்பதத்திலேயென்றது - " என்னுடைய " என்றபதத்திலே யென்றபடி. அதெப்படியென்ன ( அவன் ஸந்நிதியித்யாதி ) " என்னது " என்றால் - முடிவாம்படி யெங்ஙனேயென்ன ; அஹங்காரமமகாரங்கள் விநாஶகரமென்று ஶாஸ்த்ரஞ் சொல்லுகையாலே யென்கிறார் ( த்வ்யக்ஷரஸ்த்வித்யாதி ) " [illegible] " ( த்வ்யக்ஷரஸ்துபவேம்ம்ருத்யு ஸ்த்ர்யக்ஷரம்ப்ரஹ்மண: பதம் | மமேதித்வ்யக்ஷரோம்ருத்யுர் நமமேதிசஶாஶ்வதம் ) இதி பகவச்சாஸ்த்ரே. அஹங்காரமமகாரங்கள் விநாஶகரமென்னுமதுக்கு ஸம்வாதம் ( மாமகா இத்யாதி ) " [illegible] " ( தர்மக்ஷேத்ரேகுருக்ஷேத்ரேஸமவேதாயுயுத்ஸவ: | மாமகா:பாண்டவாஶ்சைவகிமகுர்வதஸஞ்ஜய ) இதி பகவத்கீதாஸூப்ரதமே. இதுதான் ஸ்வாபதேசத்திலன்றிக்கே யந்யாபதேசத்திலும் விநாஶகரமென்கிறார் ( இதுதான் தத்த்வேத்யாதி ) தத்த்வகதையிலே " என்னது " என்கை- உறவறுகையானல், உறவறுதப்ரகார மேதென்ன ( ஆத்மேத்யேவேத்யாதி ) அதாவது - சேதந னீஶ்வரனை யுபாசியாநிற்கச்செய்தே தன்னையே யுபாசித்த தென்னலாம்படியன்றே ஶரீரஶரீரிபாவத்தால் வந்த ப்ரத்யாஸத்தியிருக்கிறபடி ; இப்படிஶரீரபூதனு யவனபிமாநத்திலே யந்தர்ப்பூதனுயிருக்கை யுறவறுமையாவ தென்றபடி. " [illegible] " ( ஆத்மேத்யேவது க்ருஹ்ணீயாத்ஸர்வஸ்யதந்நிஷ்பத்தே: ) இதிவாக்யகாரவசநம். ஆனாலும், அவனபிமாநத்திலே யந்தர்ப்பூதனுயிருக்கு மாகாரம்தோற்றுவது - அடியேனென்றலன்றேவென்ன ( ஸ்வரூபமித்யாதி )

" போகு " என்றதுக்கு பாவம் ( நீயிங்கேயித்யாதி ) "நம்பீ" என்றத்தால் பலிதமான தாத்பர்யம் ( முகப்பழக்கமித்யாதி ) முன்புமுகப்பழக்கமில்லையோவென்ன (கண்டகாட்சியித்யாதி) பெரியமுதலியார் - ஆளவந்தார். " என்னுடைய பந்தும்கழலும்தந்துபோகு " என்கிறவளுடைய ஹார்த்தபாவம் (என்னுடையபந்துமித்யாதி) விவரணம் ( ஷோடஶேத்யாதி ) " [illegible] " ( ஷோடஶஸ்த்ரீஸஹஸ்ராணிஶதமேகம்ததோதிகம் | தாவந்திசக்ரேரூபாணிபகவாந்தேவகீஸுத: ) இதிபஞ்சமேம்ஶே. " தந்துபோகு " என்றதுக்கு - ஸ்வஸத்தை தரிக்கைக்காகத் தந்துபோவென்கிறுளென்று கீழருளிச்செய்து, அவன் போகாமைக்காகச் சொல்லுகிறுளென்று பாவாந்தரம் ( உயிரைவைத்தித்யாதி )

மன்னுடையிலங்கை - ராஜாவையுடையலங்கை. மன்-ராஜா. சண்டாயம்- க்ருத்ரிமமும், லீலையும், ஸ்வார்த்தப்ரவ்ருத்தியும். கழல் - கழக்கோடி.............*

## இரண்டாம்பாட்டு.

---

போகுநம்பியுன்றாமரைபுரைகண்ணிணையுஞ்செவ்வாய்முறுவலு
மாகுலங்கள்செய்யவழிதற்கேநோற்றோமேயாம்
தோகைமாமயிலார்கணின்னருள்சூடுவார்செவியோசைவைத்தெழ
வாகள்போகவிட்டுக்குழலூதுபோயிருந்தே.

### ஆறாயிரப்படி.

(போகுநம்பி) இப்படி யெம்பெருமானை யுத்திஸ்யதான் சொன்னவார்த்தைகளாகிற வம்ருதவர்ஷத்தாலே யவனுஜ்ஜீவித்து நிரதிசயப்ரீதியுக்தனுமாய், புதுக்கணித்த திருக்கண்களையும் திருப்பவளத்தையுமுடையனுமாயிருந்த விடத்தில், இதுவெல்லாம் அவர்களாகக்கருதி யிவனுக்குவந்ததாகக்கொண்டு; இவ்வழகையாசைப்பட்டுப்பெறாதே யவஸந்நைகளாய் மாயப்பிறந்தவர்கள்காண் நாங்கள், இவ்வழகைக்கண்டு வாழப்பிறந்தவர்களல்லோம்; தோகைமாமயிலார்கள் நின்னருள்சூடுவார், நீயுமங்கேபோ யவர்களோடேகலந்து பரிமாறென்றிவள்சொல்ல; பின்னையு மவனெழுந்தருளாதே நின்றவாறே; போனாலவர்களைச் சந்திக்கைக்குபாயமறியாமே நிற்கிறாயோ, ஆகில் நல்லதோருபாயமுண்டு, அதென்னென்னில், பசுக்களைக்கழியப்போகவிட்டு அவற்றையழைக்கிறாயாய் * ஆய்ச்சியர்க்கேயூது மத்திங்குழலைப்போயிருந் தூதென்றுசொல்லுகிறாள் ..........................................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், இவள், போகச்சொன்னவிடத்திலும் போகாதே யிவளைப்பார்த்து மந்தஸ்மிதம்பண்ணினவதிலே சிதிலசித்தையாய்; எங்களைநலியாதே, உன்னபிமதைகளிருந்த பரிஸரத்திலேபோய் அவர்கள்வருகைக்கிடாகவிருந்து குழலூதென்கிறாள்.

நம்பி - எங்களையொழியக் குறைவாளனன்றிக்கே பூர்ணனானவனே. போகு - "போ" என்றுசொல்ல, போகாதிருக்கிறதென், எங்களருகில்நின்றும்போ. உன்-இங்கேநின்றெங்களைப்பார்ப்பது முறுவலிப்பதாகிற வுன்னுடைய. தாமரைபுரை - தாமரைபோலே தர்ஶநீயமான. கண்ணிணையும்-கண்களும். செம்-சிவந்த. வாய் - வாயிலே பரக்கிற. முறுவலும் - முறுவலுங்கண்டுகேட்கும்படி பாக்யம்பண்ணினவர்களன்றியே. யாம்-நாங்கள் நின்றநிலைகுலைந்து. ஆகுலங்கள்-அலமாப்புக்களை. செய்ய-பண்ண. அழிதற்கே-அழிந்துவிடுகைக்கு. நோற்றோமே-நோற்றுவைத்தவர்களல்லோமோ. உங்களை யழிக்கைக்கோ நான்வந்தது, உங்கள்மயிர்முடிகண்டுகேட்டேனத்தனையன்றோவென்னில்; அவர்கள் நாங்களல்லோங்காண், தோகை-தோகைவிரித்த. மா-நல்ல. மயிலார்கள் - மயில்போலேயலைந்த குழலையுடையவர்கள். நின் - உன்னுடைய. அருள்-அருளை. சூடுவார்-சூடுமவர்களல்லவோ. அவர்கள ஸந்நிதிகளன்றோவென்னில்; அவர்கள், ஓசை-த்வநி. செவிவைத்து-கேட்டு. எழ-எழுந்திருந்துவ

ரும்படியாக. "அவர்களைக்குறித்தூதுகிறான்" என்று நாட்டுக்குத்தெரியாதபடி, ஆகள்-பசுக்களை. போகவிட்டு - தூரத்திலேபோகவிட்டு. அழைப்பாரைப்போலே, போய்-அங்கேபோய். இருந்து-இருந்து. குழல்-குழலை. ஊது-ஊது. "அதுவுமிங்கே யாகாதோ" என்றிராதே கொள்ளென்றுகருத்து ..................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

நோக்குப்பெறாதவன் முகம்பார்க்கப்பெற்றான், வார்த்தை கேட்கப்பெறாதவன் "போ" என்னவும்பெற்றான், இனி யிதுக்கு மேற்பட க்ருதார்த்தனாகையில்லையிறே. "போ" என்றால் - அவ்வார்த்தையே யன்றிறே யிவன் புத்திபண்ணுவது, அதிலகவாயிலோடுகிறதுமறியுமவனிறே. "இன்னமென்கையகத்திங்கொருநாள்வருதியேலென்சினந்தீர்வனே" என்றித்தை உய்ந்தபிள்ளைபாடாநிற்கச்செய்தே, காலாலேயுதைப்பது கையாலே தள்ளுவதாய் அபிநயித்துக்காட்டினார்; இத்தை யெம்பார்கேட்டருளி, "அங்ஙனன்று, அதுபின்னைப்பெற்றானாகில் அவன்நெடுநாள் ப்ரார்த்தித்துக்கிடந்ததன்றோ; ஆனபின்பு அதன்றுபொருள்" என்று முகத்தைத்திரியவைத்துக்காட்டினார். "நீயகலநின்று பண்ணினவையெல்லா முன்சந்நிதியிலே யுன்னைப்பண்ணுவேனென்கிறாள்" என்றருளிச்செய்தார். எம்பார் தாம் பாஹ்யவிஷயங்களில் ருசி யில்லாமையாலே பதார்த்தஜ்ஞாநமின்றிக்கே யிருப்பர், இப்படி யிருக்கையாலே "'ஸ்த்ரீகளுக்கசாதாரணமான சிஹ்நங்களெங்ஙனேயிருக்கும்படி' என்று சிங்கப்பிரானைக்கேட்டருளினார்" என்று ப்ரசித்தமாயிருக்கும்; இப்படியிருக்கிறவர்தாம் * மின்னிடைமடவாரருளிச்செய்யப்புக்கால், "இந்த சந்யாசி பிரட்டுப்பாடத்தொடங்கினார்" என்பராம் பிள்ளையுறங்காவில்லிதாசர். இவருடைய பகவத்விஷயத்தி லவகாஹநமிருக்கும்படி. ஒரு க்ஷேத்ரவிஷயத்திலே நாலுநாள் வாசனைபண்ணினார்கள் போர விதக்தராயிராநின்றார்கள், அவ்வளவல்லவிறே சமஸ்தகல்யாணகுணாத்மகனோடே நெடுநாள் வாசனைபண்ணினார்க்கிருக்கும்படி. எம்பார் "(ஈஶ்வரன் முன்னேவந்துநின்றாலும்) 'வா' என்பாரையும் கிடையாத சம்சாரத்திலே, (அவனல்பம்தாழ்த்தானென்னா) 'போ' என்பாரைப்பெறுவதே" என்பர்.

(போகுநம்பி) "போகுநம்பீ" என்று முன்பே சொல்லச்செய்தே, திரியவும்சொல்லும்போது - ஒன்றிரண்டடி வரவிட்டுக் கிட்டநின்றானாகவேணுமிறே. வாரீர், எத்தனைபேரைத் தீண்டிவந்தீரென்று தெரியாது; புடவைபடாமே கடக்கநில்லுமென்றாள். "போ" என்ன, வரநிற்கக்கடவன், "தீண்டாதேகொள்ளும்" என்றாலென்படுமோ. (நம்பி) எளியார்செய்வதை நீர்செய்யக்கடவீரோ, நீர் நிரபேக்ஷரன்றோ. (நம்பி) எங்கள்பக்கலி லிப்படி கால்தாழ்க்க நீரோதேனும் குறைவாளரோ, நாங்கள்வேண்டியிருந்ததோ வுமக்கு. "உயிரினாற்குறைவிலம்" என்று *ஏ

றுளுமிறையோனிலே, தம்மை யழிக்கப்பார்த்தார்; அதவனுண்டாகையாலே யழிந்ததில்லை; * மாசறுசோதியிலே - அதுக்கடியானவவன்றன்னை யழிக்கப்பார்த்தார்; இங்கு - அவன்வரக்கொள்ள, "போ" என்றுநின்றார்; இதுக்கடியென்னென்றறிகிறிலோம். இவர்களிப்படி (நம்பி) என்று சொல்லி யிருக்கையாவது - இக்கோஷ்டிக் கநர்ஹனுகையிறே. தாழ்ச்சியேமேன்மையாமிடத்தில் முதன்மைகொண்டாடுகைபோராதே.

(உன்றமலர்புரைகண்ணிணையும் செவ்வாய்முறுவலும்) காணப்பெறாதே விடாய்த்து றுவினகண்களும், கண்டுசெவ்விபெற்றுக் குளிர்ந்தன; அகவாயில் ஹர்ஷத்துக்குப்போக்காக ஸ்மிதம்பண்ணவும்பெற்றான் இவர்கள் நிஷேதவசநமாகிற அம்ருதபாநத்தாலே யவனுக்குப்பிறந்த வேறுபாடிருக்கிறபடி. "வா" என்பாரையுங்கூடக் கிடையாத சம்சாரத்திலே "போ" என்பாரைக்கிடையாதிறே - ஒருப்ரயோஜநத்துக்காகவும் தன்னை வேண்டுவாரின்றிக்கே யிருக்கிறவிடத்தே, தன்னையே ப்ரயோஜநமாகப்பற்றி இப்படிபடுவாரைக்கிடையாதிறே. (ஆகுலங்கள்செய்ய) ஆகுலம் - பூசலும், வருத்தமும், துஃகமும். ஹேதுவிரண்டாயிருக்கச்செய்தே, சர்வகரணங்களுமழியாநின்றது. அவனுக்கொன்றிரண்டாயிற்று விக்ருதமாயிற்று, இவர்களுக்கு சர்வாவயவங்களும் விக்ருதமாயிற்று. அனுவழிக்குமாபோலன்றிறே விபுவழிப்பது. "வாரீகோள், உங்களுக்கென்னோடொன்றில்லை என்றுநின்றீகோள், பாவபந்தமுடையாரைப்போலே வார்த்தைசொல்லாநின்றீகோள், வ்யாஹ்ருதமாயிருந்ததி - 'போகுநம்பி' என்றுநின்றீகோள், 'ஆகுலங்கள்செய்ய' என்றுநின்றீகோள், இதுக்கடியென்" என்றான்; வாராய், நாங்கள் தாம் பாவபந்தமுண்டாய்ச்செய்கிறோமென்றிருக்கிறாயோ; சந்த்ரதர்ஶநத்தில் சந்த்ரகாந்தமுருகுகிறதென்ன பாவபந்தமுண்டாய்; "அவஶ்யமநுபோக்தவ்யம்" (அவஶ்யமநுபோக்தவ்யம்) என்கிறவிதியைத்தப்பவொண்ணுமோ (அழிதற்கேநோற்றோமேயாம்) எங்களுக்கிது ப்ரக்ருதிகாண். இளையபெருமாள் காடேறப்போகாதவன்றன்றோ எங்களாலழியாதிருக்கலாவது. * ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாயஇறே. நோன்பாகிறது - பூர்வஜந்மத்திலுள்ளதிறே. இவர்களிப்படிசொன்னவாறே, "அவ்வழிவு சம்ஶ்லேஷார்த்தமிறே" என்றுபார்த்து; அவன், "நம்தர்ஶநத்திலே யித்தனைவேறுபாடுண்டானபின்பு, மேலுள்ளதெல்லாம் செய்துகொள்ளீகோளோ" என்றான்; அதுவோ! வுன்னினைவு, நாங்களவர்களல்லோங்காண், நாங்களிங்ஙனேயழிந்தேபோக நோற்றோங்காண். (யாம்) உன்னைப்பிரிந்தால் கலக்கைக்கு நோற்றார்வேறே சிலர்காணென்கிறாள்.

நெடும்போதிவர்கள்பேச்சுக்கேட்கையாலுண்டான ஹர்ஷந்தோற்றப்பார்த்துக்கொடுநின்றான், "நம்தர்ஶந மிவனுக்காஶ்வாஸ ஹேதுவாயிருந்தது" என்று, முகத்தைமாறிப்பின்னேக்கியிருந்தாள்; அவ்வளவி

லவன்நெஞ்சிலே மயிர்பாடுண்டாயிற்று. (தோகைமாமயிலார்கள்) "நம்மைவர்ண்யமும் கண்ணநீரு மிவன்காண்பானல்லன், தைவயோகத்தால் காணு மவற்றை நம்மாற்செய்யலாவதில்லையிறே" என்றுத்திரியவிருந்தாள்; அதுதானேயிவனுக்குக் கார்யமாயிற்று. (பெருக்காற்றை யெதிர் செறிப்பாரைப்போலே, கண்ணுங்கண்ணீரும், பேணுதவடிவுங்கண்டாலவனுற்றமாட்டானே.) முறுவலுக்கும் கண்ணுக்கு மிலக்காயழிந்துபோகாதே, திரியவிருந்ததும் நின்றநுபவிக்கைக் குடலாயிற்று. "நங்கார்யம் தலையாகப்போயிற்று" என்றிருக்கிருனிறேயவன். [ஊரு-ஸ்ரா௨-ஷ௱௱ஹா௨ாவாஹ-ஸ்ராஜுவயொயரள] [ஊருப்யாமுதரம்சாத்யபாஹுப்யாஞ்சபயோதரௌ] என்றுகொண்டு - "அவனுடைமை ஆசுரப்ரக்ருதிகள் காணவொண்ணுது" என்று மறைக்கக்கடவவள், "இவன்றுன்காணவொண்ணுது" என்றுமறைக்கும்படி காணும் ப்ரணயகோபம் தலைமண்டையிட்டபடி. (தோகைமாமயிலார்கள்) "நீஉகாமாஹயாவெணரா" (நீலநாகாபயாவேண்யா) என்று, பேணுதகுழலிருக்கிறபடியைக்கண்டான்; "நீங்கள்முன்னமானுராகிடுக, இதொருமயிர்முடியிருந்தபடியென்றுன்" என்றுன். இவள்தானேதிகல்லளாயிருக்குமே; இவன் கூழையாகையாலேகொண்டாடுமே. * குழல்கூழையோதியிறே. (குழலென்றும், கூழையென்றும், ஓதியென்றும் - மயிர்முடியிறே.) எங்கள் மயிர்முடியைக்கண்டு, தந்தாம் மயிர்முடியென்று ப்ரமிக்கும்படிபண்ணுவதே அவர்கள்சிலர்; அபிமதவிஷயத்தைபபிரிந்தால் கண்டதெல்லா மதுவாய்த்தோற்றுமிறே என்றுர்கள். தோகைவிரித்த நல்லமயில்போலே அலைந்தகுழலையுடையவர்கள். "அங்஗னேசிலருண்டோ" என்றுன் (நின்னருள்சூடுவார்) உன்னோடு சம்ப்லேஷித்து, பிரிவிலேயிப்படி பிச்சேறும்படி பண்ணினவர்கள். அவர்களைப்பிரிந்து நோவுபடாதே அவர்களோடே சம்ப்லேஷி. "ஆனலதுக்கென், அவர்களைப்பெறுகைக்கொருவிரகு பெறுந்தனையும் நானிங்஗னே சற்றுப்போதிருந்துபோகிறேன்" என்றுன்; உனக்கிங்஗ன் விரகற்றுப்போகவேணுமோ, நீகைகண்டத்தை ப்ரயோகி; "அதெது" என்ன (செவியோசைவைத்தெழ - குழலூது) "எங்களுக்கே யொருநாள் வந்தூதவுன் குழலின்னிசைபோதராதே" என்றிருக்குமவர்கள்; நீகுழலூதினலதுசென்று செவிப்படும், அநந்தரத்தே வருவர்கள்காண். சர்ப்பயாகத்தில் சர்ப்பங்கள் வந்துவிழுமாபோலே, நீகுழலூதவே பெண்களடங்கலுமுன் காற்கீழேவந்துவிழுங்காண். "குழலோசைகேட்பதெப்போது" என்று செவிகொடுத்துக் காணவர்களிருப்பது; உன்னைப்பிரிந்தார் சர்வகரணங்களு முன்மேலே வைத்திருப்பர்கள்காண். "தூவலம்புரியுடையதிருமால் தூயவாயில் குழலோசைவழியே கோவலர்சிறுமிய ரிளங்கொங்கை குதுகுலிப்ப வுடலுளவிழ்ந்தெங்கும் காவலுங்கடந்து கயிறுமாலையாகிவந்து கவிழ்ந்துநி

ன்றனர்" என்று நீகுழலூதப்புக்கால் நிற்பாருண்டோ, உன்காற்கீழே
வந்து விழுவர்காண், அத்தைச்செய்யென்றாள். "அதெனக்கொருவிரக
ன்று, 'கொங்கைநங்குழலார்களோடு குழைந்து குழலினிதூதிவந்தாய்'
என்று - ஒத்ததரத்தில் பெண்களுந்தானும் கலக்கைக்காக அவர்களைய
ழைத்துக் குழலூதாநின்றானென்பர்கள், நான்குழலூதுகை பெண்களை
யழைக்கைக்கென்று ப்ரஸித்தம், அதெனக்கிடன்று" என்றான்; ஆகிலுன
க்கொரு நல்விரகுசொல்லக்கேள் (ஆகள்போகவிட்டு) பசுக்களைக்கைக
ழியவிடுவது, அநந்தரத்தே குழலையூதுவதா; அறியாதார் "பசுக்களைம
றிக்கவூதுகிறான்" என்றிருப்பர்கள், அதற்குப்போரும் பெண்களுன்பக்க
லிலே வந்துகிட்டுவர்கள். இதுதானுனக்கு ஜாத்யுசிதவ்ருத்தியுமிறே,
* நீங்குழலூதிற்றும் நிரைமேய்த்ததுமிறே. ஆனபின்பு அத்தைச்செய்
யென்றாள். அநுஷ்டேயமான உபாயஸ்வரூபமிருக்கும்படி யறிந்தோ
ம், அநுஷ்டாந ப்ரகாரத்துக்கீடான வுபதேசம்பெற்றோம்; இனி உ
பேயாம்சத்தில் கைப்படாததில்லை, இனிநமக்கொரு குறையில்லை" எ
ன்றுபார்த்து, அவ்விடந்தன்னிலே யிருந்தூதப்புக்கான். இனித்தான் வி
த்யதிக்ரமம்பண்ணுமவனன்றே; "தோகைமாமயிலார்கள் - செவியோ
சைவைத்தெழ" என்றிறேயிவர்கள்சொல்லிற்று, "இன்னவிடத்தே"
என்றுசொல்லிற்றிலர்களே, இங்கேயிருந்தூதத்தொடங்கினான்; அது
வோ! பார்த்தபடி; நீதுடியாமைக்கொரு விரகுசொன்னோமாகில் அத்
தையிங்கேகொள்ளப்பார்த்தாயோ (குழலூதுபோயிருந்தே) உனக்குப்
பெண்கள்படும் வாய்ப்புள்ளவிடங்களிலேபோயிருந் தூதப்பாராய்.

(தோகைமாமயிலார்கள்) இவனேதிபுணர்ந்தவறுகையாலே கொ
ண்டாடத்தொடங்கினான்; "இவனேதியுணராமலிறே நங்குழலையிப்படி
கொண்டாடுகிறது" என்று, "இதுப்ராமகவாக்யம்" என்று அவர்களங்
யதாகரிக்கிறார்கள். தலையானபேச்சையிறே யிவர்களங்யதாகரிக்கிறது.
(செவியோசைவைத்தெழ) குழலோசையைச்செவியிலேவைத்துக்கொ
ண்டுவர. (ஆகள்போகவிட்டுக்குழலூது) பசுக்களைப்போகவிட்டுக்குழ
லூது. ஊதவே, உன்னினைவும் முடிந்து பசுக்களின் வயிறும்நிறையும்.
"செவியோசைவைத்தெழுகைபலமாய், குழலூதுகை உபாயமாயிருந்
தது; அதுதானபிமதவிஷயத்தைப்பற்றியன்றோ செய்வது, இங்கேயிரு
ந்தூதுகிறேன்" என்று குழலைவாங்கியூதினான் (போயிருந்தே - குழ
லூது) ஒன்றைச்சொல்ல, ஒன்றைச்செய்யாதே, உனக்கபிமதைகள் திர
ளுகைக்கு நீர்வாய்ப்புள்ள நிலங்களிலேபோயிருந்தூதாய் ..............*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. (போருமம்பிகித்யாதி) இவர்களாலே நிரஸ்த்ருதனுயி
ருக்க, "தாமரைபுரைகண்ணிணையும் செவ்வாய்முறுவலும்" என்று - ப்ரீதியால்வ

ந்த நேத்ரவிகாஸமும் மந்தஸ்மிதமுமுண்டாகக் கூடுமோவென்ன (நோக்குப்பெருதவனித்யாதி) ஆனாலும் "போகு" என்று தள்ளாநிற்க க்ருதார்த்ததைகூடுமோவென்ன (போவென்றலித்யாதி திரஸ்காரமே க்ருதார்த்ததைக்கு ஹேதுவென்னுமதுக்கு ஸம்வாதம் (இன்னமென்கையகத்தித்யாதி) அன்றிக்கே, நோக்குப்பெருவிடிலக்ருதார்த்தனு மிருக்குமென்னுமதுக்கு ஸம்வாதமாதல். இன்னமென்கையகத்தித்யாதிக்கு - நீ நியதஸ்வபாவனல்லாமையாலே என்கையிலேயு மொருநாளகப்படக்கூடுமிறே. ஆனபின்பு இன்னமென்கையிலே யிங்கொருநாள்வந்தகப்பட்டாயாகில் என் கோபம் தீருவன் நானென்று பாவார்த்தம். பெருமாள்திருமொழி ஆறுந்திருமொழி எட்டாம்பாட்டு, "என்னைவருக" இத்யாதி. (அதுபின்னைப்பெற்றுகில்) என்றவிடத்திலே - "ஸாவ ஜுகெ ந நவவஜூவமெகாஉமெ ந வாஜெ ந நஷெபெ௱வ தாஉஜஊவமெஸ ந । யத்ாஸ்ரமெதஜயிதயா ஷணயாவஸா யாமெஷாஜீக்ருமெதாஷமவ தாஉகாய்ஷமெஜ ந" (ஸாலக்தகேநநவபல்லவகோமலேந பாதேநநூபுரவதாமதலாலஸேந । யஸ்தாட்யதேதயிதயா ப்ரணயாபராதாத் ஸோங்கீக்ருதோபகவதாமகரத்வஜேந) என்கிற ஶ்லோகமநுஸந்தேயம். கீழ்வாக்யத்துக்குபாவம் (நீயகலநின்றித்யாதி) எம்பார்க்கிவ்வர்த்த மறியக்கூடா தென்கைக்காக வவருடைய இதரவிஷயவைராக்யத்தை யருளிச்செய்கிறார் (எம்பார்தாமித்யாதிவாக்யத்வயத்தாலே) இப்படி விரக்தராயிருக்கிறவர். ஶ்ருங்காரவிதக்தரிலுங்காட்டி லித்திருவாய்மொழியில் ப்ரௌடரா யருளிச்செய்யும் வார்த்தைகளுக்கு ஹேதுவருளிச்செய்கைக் குபோத்காதம் (இப்படியிருக்கிறவர்தாமித்யாதி) இதுக்கு ஹேதுவருளிச்செய்கிறார் (இவருடையவித்யாதி) அவகாஹித்தால் தெரியுமோவென்ன (ஒருக்ஷணத்ரோத்யாதி) ஆழ்வார் ப்ரணயரோஷத்தாலேயூடி "போகு" என்கிறவித்தை யநுஸந்தித்த வெம்பாருடைய ஈடுபாடு (எம்பார் வாவென்பாரையுமித்யாதி)

முதல் "போகுநம்பீ" என்றவாறேவந்தான், அவனைமீளவும் "போகுநம்பி" என்றுசொல்லுகிறதுக்கு பாவம் (வாரீரித்யாதி) என்படுமோவென்றது - நீண்டிவிடுமென்றபடி. "நம்பி" என்றதுக்கு - பூர்ணனென்றர்த்த மருளிச்செய்கிறார் (எளியாரித்யாதிவாக்யத்வயத்தாலே) எளியார் - சப்பரர். * மின்னிடைமடவாரால் பூர்ணனென்றர்த்தாந்தரமாதல், கீழ்வாக்யவிவரணமாதல் (எங்கள்பக்கலித்யாதி இவர் ப்ராவண்யாதிசய மென்னென்று வ்யாக்யாதாவினீடுபாடு (உயிரினித்யாதி) இதுக்கடி யென்னென்றறிகிறிலோ மென்றது - நெடுநாட்பட விஶ்லேஷிக்கையாலே ப்ரணயரோஷம் தலைமண்டையிட்டுச் சொல்லுகிற வார்த்தையன்றோவென்றபடி. "கடியன் கொடியன்" என்றாப்போலே சொல்லாதே, "நம்பி" என்கிறவிது - கொண்டாட்டமாயிருக்க, உறவறச்சொல்லுகிற வார்த்தையோ வென்ன (இவர்களிப்படியித்யாதி) இதுக்குபபத்தி (தாழ்ச்சியேயித்யாதி)

விஶ்லேஷவேளையில் இவன் கண் விகஸிதமாகைக்கு ஹேத்வந்தரம் (காணப்பெருதேயித்யாதி) முந்தினஹேது - அவர்களுடைய நோக்குப் பெருமையாலே புருவிக்கிடந்தன வவர்கள் தன் முகம்பார்க்கப் பெறுகையாலே ஸந்தோஷித்தானென்று; இத்தை யருளிச்செய்தார் - அவதாரிகையிலே. இவர்கள் ப்ரஸந்நராகாதேயிருக்க, ஹர்ஷம்பிறக்கும்படி யென்னென்ன (இவர்கள்நிஷேதேத்யாதி) வேறுபாடு - விக்ருதி. ஸிம்ஹாவலோகநந்யாயேந "போகுநம்பி" என்றத்தைக் கடாக்ஷித்து பாவம் (வாவென்பாரையுமித்யாதி.) அதவா, நிஷேதவசநத்தாலே விகாரம் வரக்கூடுமோவென்ன (வாவென்பாரையுமித்யாதி) என்னுதல். விவர

ணம் ( ஒருப்ரயோஜநத்துக்கித்யாதி ) " ஆகுலங்கள் " என்கிற பஹுவசநார்த்தம் (ஹேதுவிரண்டாயித்யாதி) ஹேதுவிரண்டென்றது - கண்ணும்செவ்வாயும். ஆகுலம் - விகாரம். விவரணம் ( அவனுக்கித்யாதி ) இதுக்குஹேதுவேதென்ன ( அனுவித்யாதி )

கீழெல்லாம்கடாக்ஷித்து மேலுக்கு ஸங்கதி ( வாரிகோளித்யாதி ) கீழுக்தத்தை விசதீகரிக்கிறார் ( போகுநம்பியித்யாதி ) " அழிதற்கே " என்றதிலேநோக்காக ப்ரத்யுத்தரம் ( வாராயித்யாதி ) பாவபந்தமின்றிக்கே யொழிய வுருகக் கூடுமோவென்ன ; கூடுமென்னுமதுக்கு த்ருஷ்டாந்தம் ( சந்த்ரதர்ஸநத்திலித்யாதி ) ஆனாலிதுவருவானென்னென்ன (அவஶ்யமித்யாதி " ௮வஶ்யமநுலோக்தவ்யம் க்ருதம்கர்மஶுபாஶுபம் । நாபுக்தம்க்ஷீயதே கர்ம கல்பகோடிஶதைரபி. " ( அவஶ்யமநுபோக்தவ்யம் க்ருதம்கர்மஶுபாஶுபம் । நாபுக்தம்க்ஷீயதே கர்ம கல்பகோடிஶதைரபி. ) " அழிதற்கேநோற்றோமே " என்கிறவவதாரணத்துக் கர்த்தம் ( எங்களுக்கிது ப்ரக்ருதிகாணென்று ) இதுக்கு த்ருஷ்டாந்தம் ( இளைய பெருமாளித்யாதி ) அவர் காடேறப்போனதுக்கு ப்ரமாணம் ( ஸ்ருஷ்டஸ்த்வமித்யாதி ) " ௮வஶ்யமநுலோக்தவ்யம் " ( அவஶ்யமநுபோக்தவ்யம் ) என்கிறவாக்யவிவரணம் ( நோன்பாகிறதித்யாதி ) " அழிதற்கே " என்கிறவவதாரணத்திலே நோக்காக சங்கித்து பரிஹரிக்கிறார் ( இவர்களிப்படியித்யாதி ) ( மேலுள்ளதெல்லாம் ) இத்யாதிக்குக்கருத்து - கரணஶூந்யஜநககர்மந்தானே ஸம்ஶ்லேஷத்தையுண்டாக்காதோவென்று. " யாம் " என்றதுக்கு வ்யாவர்த்யம் ( உன்னைப்பிரிந்தாலித்யாதி )

முகம்மாறவைத்ததுக்கிரண்டுஹேது. " தாமரைபுரைகண்ணிணையும் செவ்வாய்முறுவலும் " என்றத்தைக்கடாக்ஷித்து முந்தினது ( நம்தர்ஶநமித்யாதி ) மயிர்பாடு - மயிரின்வைலக்ஷண்யம். " ஆகுலங்கள்செய்யவழிதற்கேநோற்றோமேயாம் " என்றத்தைக்கடாக்ஷித்து, பின்னேக்கியிருந்ததுக்கு த்விதீயஹேது ( நம்மைவர்ண்யமுமித்யாதி ) பின்னேக்கியிருந்தாலும் போக்யமான மயிர்முடி காண்பனேயென்ன ( தைவயோகத்தாலித்யாதி ) திரியவிருந்தாள் - திரும்பியிருந்தாள். கார்யமானபடியைக்காட்டுகிறார் ( முறுவலுக்குமித்யாதி ) அதாவது - இவனுடையமுறுவலுக்கும் கண்ணுக்குமிலக்கா யவர்களழியாதே தரித்துநின்றநுபவிக்கைக் குடலாயிற்றென்னுதல், அவர்கள் முறுவலுக்கும் கண்ணுக்கு மிலக்கா யிவனழியாதே தரித்துநின்று மயிர்முடியையநுபவிக்கைக்குடலாயிற்றென்னுதல். " ஆகுலங்கள் " என்றவிக்ருதியிலே - இவர்களுக்கும் கண்ணீரும் முறுவலுமுண்டென்று ஸித்தம். ரஸோக்தி ( நங்காரியமித்யாதி ) இவர்களவனுக்கு போக்யமான வவயவங்களை மறைக்கலாமோவென்ன ( ஊருப்யாமித்யாதி ) அன்றிக்கே, வ்யாக்யாதாவினீடுபாடாதல். " ஊருப்யாமுதரஞ்சாத்ய பாஹுப்யாஞ்சபயோதரௌ । உபவிஷ்டாவிஶாலாக்ஷீ ருதந்தீவரவர்ணிநீ " ( ஊருப்யாமுதரஞ்சாத்ய பாஹுப்யாஞ்சபயோதரௌ । உபவிஷ்டாவிஶாலாக்ஷீ ருதந்தீவரவர்ணிநீ ) இதிஸுந்தரகாண்டே. " நீலநாகாபயாவேண்யாஜகநம்கதயைகயா । நீலயாநீரதாபாயே வநராஜ்யாமஹீமிவ " ( நீலநாகாபயாவேண்யாஜகநம்கதயைகயா । நீலயாநீரதாபாயே வநராஜ்யாமஹீமிவ ) இதிஸுந்தரகாண்டே. ஆனாரிடுகவென்றது - ஸ்நேஹிகளாகவுமாம், தத்ரஹிதராகவுமாமென்னுதல் ; முன்னேக்கியிருந்தாலுமாம், பின்னேக்கியிருந்தாலுமாம், நமக்கதுகொண்டு கார்யமில்லை யென்னுதல்.

அவனிப்படி கொண்டாடுகைக்கடி - இவள் குழலில் வைலக்ஷண்யமென்னுமத்தைர ஸோக்தியாக வருளிச்செய்கிறார் (இவள்தானித்யாதி) ஓதியென்று - குழலும், அத்யயநமும். இப்படி விலக்ஷணையான விவளுடைய வைலக்ஷண்யத்தை நன்றாக வறியுமவனுகையாலே கொண்டாடினனென்னுமத்தை ரஸோக்தியாகக்காட்டுகிறார் (இவன்கூழையித்யாதி) கூழையென்று - மயிரில் வைலக்ஷண்யமறிந்தவனும், சபலனும். இஸ்ஸப்தத்வயமும் - கேஸவாசி என்கிறதுக்கு நிகண்டு (குழல்கூழையோதியிறேயென்று) அவர்கள் வைலக்ஷண்யத்தாலன்றிக்கே, இவன் ப்ராவண்யத்தாலும் ப்ரமிக்கிறனென்று ஹேத்வந்தரம் (அபிமதேத்யாதி) தோகையுடைத்தாய் ஸ்லாக்யமான மயில்போலேயிருக்கிற வலகபாரத்தை யுடையவர்களென்று ஸப்தார்த்தம். தோகை - பிஞ்சம். கீழ்வாக்யத்துக்கு பலிதம் (அவர்களைப்பிரிந்தித்யாதி)

கைகண்டது - அநுபூதமானது. கையிலேயிருந்த குழலென்று சாடு. நான் குழலூதினல், அந்யபரைகளானவர்களுக் கிதுசெவிப்படுமோவென்ன (எங்களுக்கேயித்யாதி) இதுக்கர்த்தம் - நீ ஸர்வஸாதாரணனனபின் புன்குழலும் ஸர்வஸாதாரணமாயிருக்க, எங்களுக்கே யோரோரவிடங்களிலே ஒருநாள் நாங்கள்கேட்கவந்தூதவேணுமென்றால் நீயூதிலு மிசை புறப்படாதபடியாயிற்று குழலின் ஸ்வபாவமென்று. விவரணம் (ஸர்ப்பயாகத்திலித்யாதி) ஸர்ப்பயாகம்பண்ணினவன் - ஜநமேஜயன். "எங்களுக்கேயொருநாள்" இத்யாதிவாக்யவிவரணம் (குழலோசை கேட்பதித்யாதி) அதுக்கடி - அவர்களுக்குன்விஷயத்தி லுண்டான ப்ராவண்யமென்கிறார்கள் (உன்னைப்பிரிந்தாரித்யாதி) குழலோசையிலே யீடுபட்டு அவர்கள் வருவதொன்றதுக்கு ப்ரமாணம் (தூவலம்புரியித்யாதி) (தூவலம்புரியுடையதிருமால்) நினைவறிந்து கார்யம்செய்யவல்ல சுத்தியையுடைத்தான வலம்புரியையுடைய ஸ்ரியஃபதியானவனுடைய. (தூயவாயில்குழலோசைவழியே) தன்னுக்தி விசேஷங்களாலே யநுகூலரை வாழப்பண்ணும் சுத்தியையுடைய திருப்பவளத்திலேவைத்தூதுகிற திருக்குழலோசைவழியே. (கோவலர்சிறுமியர்) கோரக்ஷணத்தில் ஸமர்த்தரானவர்களுடைய சிறுப்பெண்கள். (இளங்கொங்கைகுதுகுலிப்ப) பரிணதமான முலைகளானவை தங்களைப் பிற்பாடராக்கி "நாங்கள்முன்னேபோகிறோம்" என்று கௌதூஹலம்பண்ண. (உடலுளவிழ்ந்து) ஸரீரமும் மநஸ்ஸூம் கட்டுக்குலைந்து. (எங்கும்காவலும்கடந்து) எங்குமுண்டான காவல்களை யெல்லாம் கடந்து. (கயிறுமாலையாகிவந்து) கயிற்றிலே யொழுங்குபடச் சேர்த்த மாலைகள்போலே நிரைநிரையாகவந்து. (கவிழ்ந்துநின்றனரே) இவனைக் கண்டவாறே லஜ்ஜித்துக் கவிழ்தலையிட்டு நின்றார்களென்கை. பெரியாழ்வார்திருமொழி மூன்றாம்பத்து ஆறாந்திருமொழி முதற்பாட்டு, "நாவலம்" இத்யாதி. ப்ரக்ருதோபஸம்ஹாரம் (நீகுழலூதவித்யாதி)

"ஆகள்போகவிட்டு" என்றதுக்கவதாரிகை (அதெனக்கித்யாதி) "குழலினிதூதி - கொங்கைநறுங்குழலார்களோடு குழைந்து - வந்தாய்" எனறந்வயம். இனிதாகக்குழலூதி, பரிமளத்தையு மழகையுமுடைய குழலை யுடையவர்களோடே யொருநீராகக் கலந்துவந்தா யித்யர்த்தஃ. கொங்கு - பரிமளம். நறு - அழகு. பெருமாள்திருமொழி ஆறாந்திருமொழி ஒன்பதாம்பாட்டு, "மங்கல்நல்" இத்யாதி. இதுக்குபாவம் (ஒத்ததரத்திலித்யாதி) இதுக்காகப் பசுக்களை மேய்த்துக்கொண்டுதிரியவோவென்ன (இதுதானுனக்கித்யாதி) ஜாத்யுசிதவ்ருத்தியென்னுமதுக்குப்ரமாணம் (தீங்குழலித்யாதி)

(அநுஷ்டேயமானவென்றுதொடங்கி, இங்கே கொள்ளப் பார்த்தாயோவென்னுமளவும்) "போயிருந்து" என்றதுக்கவதாரிகை. உபாயஸ்வரூபம் - குழ

ஹூதுகை. அநுஷ்டானப்ரகாரம் - ஆகள்போகவிடுகை. அநுஷ்டாநம் - உபாய த்தைச்செய்கை. இவர்கள்சொன்னமாத்ரத்திலே யூதவேணுமோவென்ன ( இனித் தான்வித்யதிக்ரமமித்யாதி ) வாய்ப்பு - ஸித்தி.

புநஶ்ச, ஒரு ஸ்ரீவைஷ்ணவ ரெழுந்தருள அவருக்காகவாதல், ரஸோக்திக் காகவாதல் பதோபாதாநம் ( தோழைமாமயிலார்களித்யாதி ) ஓதியுணர்ந்தவன் - மயிரில்வைலக்ஷண்யமறிந்தவன் ; அதீத்யஜ்ஞாநவா னென்றும். ஓதியுணராமல்-எங்கள்குழலென்றறியாமலென்றும், அத்யயநம்பண்ணி யறியாமலென்று மர்த்தத்வயம். ப்ராமகவாக்ய மென்றது - ப்ராந்தவாக்ய மென்றபடி. தலையானவென்றது-சாடு ; ஶ்லாக்யமானவென்றும், தலைவிஷயமானவென்றும். குழலூதினல், பசுக்கள் மேய்கைதவிர்ந்து வருமிறே ; வந்தாலவற்றுக்குப் பட்டினி யாகாதோ வென்ன ( ஊதவே உன் நினைவுமித்யாதி ) உன்னினைவுமுடிந்தென்றது - உன்னினைவுதலைக்கட்டியென்றபடி. நினைவுதலைக்கட்டுகையாவது - அபிமதைகளான பெண்களும்வருகை. " அநுஷ்டேயமான " இத்யாதி வாக்யவிவரணம் ( செவிபோசை வைத்தெழுகைமித்யாதி )........................................*

---

## மூன்றாம்பாட்டு

போயிருந்துநின்புள்ளுவமறியாதவர்க்குரைநம்பிநின்செய்ய
வாயிருங்கனியுங்கண்களும்விபரீதமிந்நாள்
வேயிருந்தடந்தோளினரித்திருவருள்பெறுவார்யவர்கொல்
மாயிருங்கடலைக்கடைந்தபெருமானலே.

### ஆறாயிரப்படி.

(போயிருந்து) இப்படியிவன், மேன்மேலன விவனுடைய வம்ருதோபமமான வார்த்தைகளைக்கேட்டதினாலேவந்த நிரவதிகப்ரீதியாலே அத்யத்புத நிரவதிக சௌந்தர்யமயமான திருப்பவளத்தையும் திருக்கண்களையுமுடையனைக்கொண்டு விநீதனையருளிச்செய்ய;

இவற்றையெல்லா முன்னுடைய க்ருத்ரிமமறியாதார்க்குப் போயிருந்து சொல்லென்று அவனையுபாலம்பித்துவைத்து; உன்னுடைய திருக்கண்களினுடையவும் திருப்பவளத்தினுடையவு மழகிருந்தபடியென், கண்டுங்கேட்டு மறியாததொருபடியான விவ்வழகு, திருப்பாற்கடலிலே அம்ருதமதநசமயத்திலே யவதீர்ணையா யம்ருதசீகராலங்க்ருதையாய் சௌந்தர்ய சௌகந்த்ய சௌகுமார்ய லாவண்ய யௌவநாத்யபரிமிதோதார குணபரிபூர்ணையாய் சர்வதிவ்யபூஷண பூஷிதையாய் சர்வேஶ்வரேஸ்வரியான பெரியபிராட்டியோடன்று கலந்தகலவியாலும் பிறந்ததில்லை, இப்படி பெரியபிராட்டியிற்காட்டிலு முனக்கபிமதைகளாயுன்னை புஜிக்கப்பிறந்தவர்களாரோவென்கிருள் ..............................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், "போயிருந்து-குழலூது" என்றவாறே புகுரவிருந்து சில உபச்சந்த வாக்யங்களைச்சொல்லி, போகச்சொல்லுகிறபோதை ஹஸ்தசேஷ்டையை

க்கொண்டாட; அக்ஷோப்யமான கடலையும் க்ஷுபிதமாம்படிபண்ணின வுன்னையிப்படி ப்ரமிக்கும்படி தங்கள்தோள்களாலே கலக்கினாரோவென்கிறாள்.

வேறேசிலருமுண்டாய் அங்கேபோயிருக்கவும் சொல்லுகிறதென், உங்களையொழிய ஆருண்டெனக்கு, இருப்பிடமுமுங்கள் ஸந்நிதியல்லவோவென்ன; ஆஸந்நமாகப்புகுந்திருக்கிற விவ்விருப்பைத்தவிர்ந்து, நம்பி-" கள்வம்பொதியறை " என்னும்படி களவால் பூர்ணனானநீ. போய் - எங்கள் பரிசரத்தில்நின்றும்போய். இருந்து-உன்னபிமதைகள் பரிசரத்திலேயிருந்து. நின்-உன்னுடைய. புள்ளுவம் - களவு. அறியாதவர்க்கு-அறியாதார்க்கு. உரை-இந்தக்கள்ளவார்த்தைகளைச்சொல்லு. எங்களளவில், நின்-உன்னுடைய. செய்ய-சிவந்த. வாய்-அதரமாகிற. இரு-ச்லாக்யமான. கனியும்-கனியும். கண்களும்-பிறரையழிக்கையே ஸ்வபாவமாயிருக்கும்கண்களும். முன்புபோலே ஹ்ருத்யமாயிருக்கையன்றியே, இந்நாள் - இப்போது. விபரீதம்-பாதகமாயிராநின்றன. இவ்வளவிலுன்னுடைய நிஷேதார்த்தமான வெங்களுடைய ஹஸ்தசேஷ்டையைக்கொண்டாடாதே; நீகொண்டாடும் தோளழகையுடையவர்களல்லோம் நாங்கள், மா-அகாதமாய். இரு-விஸ்தீர்ணமான. கடலை - கடலை. கடைந்த-கடைந்த. பெருமானாலே-அதிசயிதசக்தியானவிவன்றன்னாலே. இத்திரு - நெஞ்சுகலங்கி வாய்விட்டுக்கொண்டாடும்படியான. அருள்-அருளை. பெறுவார்-பெற்றிருப்பாராய், அதுக்கடியான, வேய்-வேய்போலே. இரு-சுற்றுடைத்தாய். தடம் - நெடிதான. தோளினார்-தோளையுடையவர்கள். யவர்கொல்-ஆர்.

அவர்களைக்கண்டேனாகி லுன்னோபாதி நானும் கொண்டாடலாயிற்றேயென்று ப்ரணயரோஷத்தாலே வினவினாளென்றுகருத்து ................................*

## ஈடு - மூன்றாம்பாட்டு.

"'குழலூதுபோயிருந்து' என்றிறே என்னைச்சொல்லுகிறது, உக்தமானது தன்னையநுஷ்டிக்கு மத்தனையிறே. 'இனித்தான் 'உனக்குப்பெண்கள்படும் நீர்வாய்ப்புள்ள விடங்களிலேபோயிருந்தூது' என்றிறே நீங்கள் சொல்லிற்று; அழகிது, இத்தனையிறே, நீர்வாய்ப்புள்ளவிடந்தானெது, அத்தைச்சொல்லலாகாதோ" என்று இரண்டடி உட்புகுரவிட்டு நற்றரிக்கவிருந்து, குழலினிய பேச்சிலேகைவைத்தான். குழலோசைபோலன்றிறே பேச்சிலினிமையிருக்கும்படி. "நான்செய்தபடி செய்கிறேன், 'செவியோசைவைத்தெழ-குழலூதுபோயிருந்து' என்று நீங்கள்சொன்னவிதுக்குக்கருத்து எனக்குப்போச்சுதில்லை; 'இதெனக்கு ஜாத்யுசிதவ்ருத்தியன்றோ" என்றான்.

(போயிருந்து நின் புள்ளுவமறியாதவர்க்குரைநம்பி) உன்பொய்யிலே பழகினவெங்கள்பக்கல் உன்பொய்விலைசெல்லாது, இங்கு நின்றும்போய் உன்பொய்யறியாதவர்கள் கோஷ்டியிலேயிருந்துசொல்லு. நினைவொன்றும் சொலவொன்றுமான வுன்னையறியாதாரையும் கிடைக்குமிறே, பஞ்சலக்ஷங்குடியில் பெண்களுண்டாகையாலே. உன்பொய்யை "மெய்" என்றிருக்குமவர்களுக்கன்றோ இதெல்லாம் சொல்லுவது. "பொய்கேட்டிருந்தேன்" என்றிருப்பாரையும் கிடைக்குமே. (நம்பி) பூர்ணரல்லீரோ, உமக்கெங்களைப்பெறாமலிருந்தீரோ. தன்னைக்குறித்திவர்கள்சொல்லுகிற அம்ருதோபமமான நிஷேதவசநங்கேட்டவாறே அவ

ன்முகத்திலே யொருல்லாஸம்பிறந்தது ( நின்செய்யவாயிருங்கனியும் க ண்களும் விபரீதமிந்நாள் ) ( உன்னுடைய சிவந்தவதரமாகிற ஸ்லாக்ய மானகனியும், பிறரையழிக்கையே ஸ்வபாவமாயிருக்கும் கண்களும் மு ன்புபோலே ஹ்ருத்யமாயிருக்கையன்றிக்கே, இப்போது பாதகமாயிரா நின்றது. ) நாங்களிதுக்குமுன் பொருநாளு மிச்செவ்வியும் வேறுபாடு ங்கண்டறியோம், இவையிருந்தபடி யென்னென்றார்கள்.

" கழுத்துக்குமேலே யொன்றைச்சொல்லுகிறிகோளித்தனையன் றே, அதுகிடக்கிடுங்கோள், இதொரு தோளழகிருந்தபடியென் " என் றான் (வேயிருந்தடந்தோளினாரித்திருவருள் பெறுவாரவர்கொல்) ஆ ரேனும் தோளழகைக்கண்டு, தந்தாம்தோளழகென்று ப்ரமிக்கும்படிக் கிடான தோளழகுடையாரரோ. (பசுமைக்கும் செவ்வைக்கும் மூங்கி ல்போலேயாய் நீண்டு சுற்றுடைத்தான தோளேயுடையவர்கள்.) (இத்தி ருவருள்பெறுவார்யவர்கொல்) நீகிடந்திப்படி துடிக்கும்படி பண்ணவ ல்லராவதே அவர்கள்சிலவர். செய்யவாயிருங்கனியும் கண்களுமென்ற விடம் - அவன்பக்க லிவர்களுக்குண்டான பாவபந்தம் சொல்லுகிறது; வேயிருந்தடந் தோளினாரென்றவிடம்-இவனுக்கவர்கள் பக்கலுள்ள பா வபந்தம்சொல்லுகிறது. இவர்களுக்குத்தன்பக்கல் பாவபந்தம் தந்முகே நவறிந்தானவன், தங்கள்பக்க லிவனுக்குண்டான பாவபந்தம் கைமே லே கண்டுவிட்டாரவர்கள். (யவர்கொல்) உனக்கிப்படி ஸ்ப்ருஹணீயத மைகளாயிருக்குமவர்களாரோ. இவன்பக்கல்ப்ரணயரோஷத்தாலேசொ ல்லுகிறாளத்தனைபோக்கி, இவனோடுகலந்தாரைத் தனக்குத்தேஶ்யமொ ன்றிறே யிவளிருப்பது. (மாயிருங்கடலைக்கடைந்தபெருமானாலே- இத்தி ருவருள்பெறுவார்யவர்கொல்) " மந்தரம்நாட்டியன்று மதுரகொழுஞ் சாறுகொண்ட சுந்தரத்தோளுடையான் " என்றுசொல்லுகிற தோளழ குடையவன் விரும்பும்படியான தோளழகுபடைப்பதே. தன்றோளழகு கண்டு பெண்பிறந்தாரடங்கலும் படும்பாட்டையடங்கலு மிவன்றன்னை ப்படுத்தும்படியான தோளழகுடையாருண்டாவதே. பெரியவன்கையி லே பெரியதுபட்டபாடடங்கலும் தங்கள்கையிலேயிவன்படும்படி பண் ணவல்லராவதே. " வைகுண்டதோர்ப்ரமிதமந்தரமூடபாதம் " என்று கொண்டு அது ஊமைக்கூறனகப்பட்டதெல்லாம் படுகையிறே. அன்றி க்கே, மந்தரத்தைநட்டுக் கடலைநெருக்கிக்கடைந்து பெரியபிராட்டியா ரை லபித்தவன்று மிவ்வேறுபாடுகண்டிலோமீ. பழையாரைப்பெற்றுப் போலன்றிறே புதியாரைப்பெற்றுவிருக்கும்படி..........................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு (போயிருந்தித்யாதி) கீழ்ப்பாட்டிலே " குழலூதுபோயி ருந்து " என்றவநந்தரம், "போயிருந்துநின் புள்ளுவமறியாதவர்க்குரை" என்றது க்குசங்கதி - குழலூதுகையைவிட்டு வார்த்தைசொல்லப்புக்கான் என்றது. இதுசா ந்தமான ப்ரமேயம். அப்படிசொன்னவார்த்தைதானிரண்டு. அதாவது -"நீர்வாய்ப்

புள்ளவிடமேது" என்றொருவார்த்தை; இத்தையருளிச்செய்கிறார் (குழலூதுபோயிருந்தென்றிறேயென்றுதொடங்கி. இனியபேச்சிலே கைவைத்தானென்னுமளவும்) "நான்சிலரை யழைக்கைக்காகவோ குழலூதுவது எனக்கது ஜாத்யுசிதவ்ருத்தியன்றோ" என்றிரண்டாம்வார்த்தை; இத்தையருளிச்செய்கிறார் (நான்செய்தபடி செய்கிறேனித்யாதி) ஆக, "நீர்வாய்ப்புள்ளவிடமேது" என்றும், "நான்குழலூதுகை ஜாத்யுசிதவ்ருத்தியாகையாலே பெண்களை யழைக்கைக்கு சாதநமாகமாட்டாது" என்றும்வார்த்தைசொல்லப்புக்கான்; "போயிருந்துநின் புள்ளுவமறியாதவர்க்குரைநம்பி" என்கிறார்களென்றுசங்கதி. (குழலூதுபோயிருந்தென்றிறேயென்றது) போயிருந்து-குழலூதென்றிறேயென்றபடி. உக்தமானதுதன்னை யநுஷ்டிக்குமத்தனையிறேயென்றது - நீங்கள்சொன்னத்தை நான்செய்யுமத்தனையிறேயென்றபடி. இவர்கள்சொன்னதேதென்ன, அத்தை விஶதீகரிக்கிறார் (இனித்தானித்யாதி) பெண்கள்படும் - பெண்களகப்படும். நீர்வாய்ப்புள்ளவிடங்களிலே - பலிக்குமிடங்களிலே. பேச்சுகுழலிலினிதாயிருக்குமோவென்ன (குழலோசைபோலித்யாதி) போச்சுதில்லை-தெரியவந்ததில்லை. செய்தபடிசெய்கிறேனென்றது - சொன்னபடி செய்கிறேனென்றபடி.

"நின்புள்ளுவமறியாதவர்க்கு" என்றதுக்கு வ்யாவர்த்யம் (உன்பொய்யிலேயித்யாதி) என்புள்ளுவமறியாதபேருண்டோவென்ன (நினைவொன்றுமித்யாதி) பலிதம் (உன்பொய்யையித்யாதி) பொய்யை "மெய்" என்றிருப்பாருண்டோவென்ன (பொய்கேட்டித்யாதி) (புல்லாணியெம்பெருமான் பொய்கேட்டிருந்தேனே) புல்லாணி யெம்பெருமானுடைய பொய்யைக்கேட்டு தரித்திருந்தேனித்யர்த்தஃ. திருமொழி ஒன்பதாம்பத்து நாலாந்திருமொழி அஞ்சாம்பாட்டு, "வில்லாலிலங்கை" இத்யாதி. "நமக்கங்ஙனேசிலருண்டோ, நானுன்னையொழியவறிவனோ" என்கிறவனுடைய வுக்தியையுட்கொண்டுசொல்லுகிறார்கள் (பூர்ணரித்யாதி) 'எங்களைப்பெருமல்) குறைவாய் (இருந்தீரோ) என்றுகூட்டுவது. புள்ளுவம்-பொய்.

"நின்செய்யவாய்" இத்யாதிக்கவதாரிகை (தன்னைக்குறித்தித்யாதி) வாயாகிற, இருங்கனி-பக்வபலம். "இன்னாள்" என்றுவிசேஷித்ததுக்குபாவம் (நாங்களிதுக்குமுன்பித்யாதி) (இச்செவ்வியும், வேறுபாடும்) என்றிரண்டாகச்சொல்லிற்று- "இருங்கனியும், விபரீதம்" என்றத்தைப்பற்ற. "விபரீதமின்னாள்" என்றது-முன்புபோலே ஹ்ருத்யமாயிருக்கையன்றிக்கே, இப்போது பாதகமாயிராநின்றனவென்றபடி.

கழுத்துக்குமேலேயென்றது -"வாய், கண்கள்" என்றத்தைப்பற்ற; அஹ்ருதயமென்றுசாடு. தோளழகு கழுத்துக்குக்கீழேயாகையாலே ஸஹ்ருதயமென்று த்வநி. வேயிருந்தடந்தோளினார் - மூங்கில்போலேநீண்டு சுற்றுடைத்தான தோள்களையுடையவர்களித்யர்த்தஃ. தங்களுக்கந்யோந்யமுண்டான பாவபந்தத்தை யிருவருமறிந்தபடி யெங்ஙனேயென்ன (இவர்களுக்கித்யாதி) தந்முகேநவென்றது-தன்னுடையமுகத்தாலேயென்றபடி. அதாவது - தன்னுடையமுகத்தைக் கொண்டாடுகையாலே யறிந்தானென்றபடி; அவர்கள்வார்த்தையைக் கொண்டறிந்தானென்னும். கைமேலேயென்றது - சாடு; ப்ரத்யக்ஷமாகவென்றும், தோளழகைக்கொண்டாடுகையாலேயென்றும். இது - "வேயிருந்தடந்தோளினார்" என்றத்தைப்பற்ற.

"மாயிருங்கடலை" இத்யாதிக்குமூன்றுபாவம். முந்தினது (மந்தரம்நாட்டியித்யாதி) துர்வாஸஶ்ஶாபோபஹதரான வன்று மந்தரபர்வதத்தைக் கடலிலேநட்டு அம்ருதமாகிற செவ்விய சாராம்ஶத்தைக்கொண்ட வழகியதோளுடையவனித்ய

ர்த்தஃ. நாய்ச்சியார் திருமொழி. "சுந்தரத்தோளுடையான்" என்றதுக்குபாவம் (தன்றேளழகித்யாதி) இது - சீழ்வாக்யவிவரணம். "பெருமான், மாயிருங்கடல்" என்றத்தைக்கடாக்ஷித்து த்விதீயதாத்பர்யம் (பெரியவனித்யாதி) கையிலேயிவன்படும்படியென்றது - தோளழகிலே யிவனீடுபடும்படியென்றபடி. விவரணம் (வைகுண்டேத்யாதி) ஊமைக்கூறன்-அநக்ஷரமாகச்சொல்லுகை. த்ருதீயதாத்பர்யம் (அன்றிக்கேயித்யாதி) முந்தினவிரண்டுபாவமும் - "வேயிருந்தடந்தோளினர்" என்றத்தைக்கடாக்ஷித்து. மூன்றும்பாவம் - "நின்செய்யவாயிரு." இத்யாதியைக்கடாக்ஷித்து. பெரியபிராட்டியாரைப்பெற்றத்தைப்பற்ற விவர்களைப்பெற்றதுக்கேற்றமேதென்ன (பழையானாயித்யாதி) மாயிருங்கடலை - அகாதமாய் விஸ்தீர்ணமானகடலை இத்யர்த்தஃ.......................................................................*

---

# நான்காம்பாட்டு

---

ஆலினீளிலையேழுலகுமுண்டன்றுநீகிடந்தாயுன்மாயங்கண்
மேலைவானவருமறியாரினியெம்பரமே
வேலினேர்தடங்கண்ணினார்விளையாடுசூழலைச்சூழவேநின்று
காலிமேய்க்கவல்லாயெம்மைநீகழறேலே.

## ஆறுயிரப்படி.

(ஆலினீளிலை) "நம்முடையவிளம்பமிறே யிவளுடையவிவ்வதிசங்கைக்குக்காரணம்" என்றுபார்த்து, "நான்பரதந்த்ரனல்லேனே; எனக்குப் பசுமேய்க்கப்போகவேண்டாவோ, நீ நினைத்தபோதே வரலாயிருக்குமோ, ஆகையாலே விளம்பித்தேன், மற்றொன்றால் விளம்பித்தேனல்லேன்" என்றிவனருளிச்செய்ய; சர்வலோகங்களையுமமுதுசெய்து ஓராலிலையிலே கண்வளர்ந்தருளின இம்மஹாப்சர்யத்தையுடையவுனக்கு "பசுமேய்க்கப் போனேன்" என்றொரு பொய்யை, கேட்டார்க்கு "மெய்" என்றிருக்கும்படி சொல்லுகை யாஸ்சர்யமோ; "பசுமேய்க்கப்போனமைபொய்யோ" என்னில், வேலினேர்தடங்கண்ணினார் விளையாடும் மணற் குன்றுகளிலே நின்றோ காலி மேய்ப்பது. இந்தப்பொய்களெங்களுக்குச் சொல்லவேண்டாவென்கிறாள்..........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், "ஜாத்யுசிதமாகப் பசுக்களை மேய்க்கப்போய்ச் சிறிதுவிளம்பித்தவளவிலே யிப்படி யந்யபரனாகச் சொல்லலாமோ" என்றடர்த்து வார்த்தைசொல்ல; கூடாதது கூடும்படி செய்யவல்லவுனக்கெதுசொல்லவொண்ணாதென்கிறாள்.

ஏழுலகும் - ஸமஸ்தலோகங்களையும். உண்டு - சிறுவயிற்றிலேயடங்கும்படியமுதுசெய்து. ஆலின் - "இன்னவிடத்திலே முளைத்தது" என்று தெரியாததோராலினுடைய. நீள் - முகிழ்விரிந்து நீளுமளவான. இலை - இலையிலே. அன்று - சர்வலோகமும் ப்ரளயங்கொண்டவன்று. நீ - "ப்ரளயத்திலேவிழுவோம்" என்றறியாத மௌக்த்யத்தையுடைய நீ. கிடந்தாய் - நிஸ்ஸங்கமாகக்கிடந்தவனல்லையோ.

ஏவம்விதமான, உன் - உன்னுடைய. மாயங்கள் - க்ருத்ரிமசேஷ்டிதங்களை. மேலை- அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தரான. வானவரும் - நித்யஸூரிகளும். அறியார் - * ஓர் மாயையினுலிட்டிய வெண்ணெய்தொடுவுண்ணப்போத விட்டிருந்தவர்களாகையாலே யறியார்கள். இனி - இனி. எம் - இதுக்கு நாங்கள் பாசுரமிட்டுச் சொல்லுகை. பரமே - பரமோ. அதுகிடக்கிடீர், வேலினேர் - வேல்போலே ஆளழிக்கும்படியான. தடம் - பெரிய. கண்ணினுர் - கண்களை யுடையவர்கள் கண்வட்டம் விடமாட்டாமையாலே. விளையாடு - அவர்கள்விளையாடுகிற. குழலை - மணற்குன்றை. சூழ- சூழ. நின்றே - நின்றே. காலி - காலிகளை. மேய்க்கவல்லாய் - வயிறுநிறையமேய்க்கவல்ல அகடிதகடநா ஸமர்த்தனன்றே. ஆகையாலே, எம்மை - இக்க்ருத்ரிமமறிந்தவெங்களை. நீ - நீ. கழறேல் - "காலிமேய்க்கப்போனவென்னைக்களவுசொன்னேனென்றுசொல்லுகையாவதென்" என்று மேலிட்டு வார்த்தைசொல்லாதேகொள்.*

## ஈடு - நான்காம்பாட்டு.

"நான்சொன்னவையெல்லா மிவர்களந்யதாவாக புத்திபண்ணுகிறது; நம்மையொழியச்செல்லாமைபிறந்து, நாமனாக்ஷணம் தாழ்த்தது பொறுக்கமாட்டாமையிறே" என்றுபார்த்து; "நீங்களென்னை யிங்ஙனேசொல்லலாமோ, நான் பித்ராதிகளுக்குப் பரதந்த்ரனன்றே, அவர்களென்கையிலே கோலைத்தந்து 'நீபோய்ப்பசுமேய்த்துவா' என்றால், என்னுல், 'மாட்டேன்' என்னப்போமோ" என்றான்; பித்ராதிகளுக்குப் பரதந்த்ரராய்க்கொண்டு பசுமேய்ப்பார் மேய்க்கும்படியிதுவோ, நீசெய்யும்செயல் சேர்ந்திருக்கிலிறே நீசொல்லும்சொலவும் சேர்ந்திருப்பது.

(ஆலினிலையேழுலகுமுண்டன்றுநீகிடந்தாய்) ஓராலிலையாவது, அதுதான்முகிழ் விரியாதவளவாயிருப்பது; அதிலே, ஏழுலகங்களையும் வயிற்றிலேவைத்து, ஒருயசோதாதிகளுங்கூட வுதவாததசையிலே கண்வளர்ந்தருளினுய். ஜகத்தையடங்கலும் வயிற்றிலேவைத்து, சிறுவடிவைக்கொண்டு ப்ரளயத்திலே தனியேகிடக்கவல்லவனன்றேநீ; அசங்கதங்களை சங்கதமாகச்செய்யவல்ல சாமர்த்யமுடையவுனக்கு இவையெல்லாம் சேரச்சொல்லுகைபொருளோ. நீசொல்லுகிறவை ப்ரணயிகள் கோஷ்டியில் பரிமாறுவதல்லகாண்; "பிதாநாமமூர்த்தப்ஸிரோரோகஃ" (பிதாநாமமூர்த்தப்ஸிரோரோகஃ) என்றும், "குரவஃகிம்கரிஷ்யந்தி" (குரவஃகிம்கரிஷ்யந்தி) என்றுங்காணிங்குப் பரிமாறுமவை. "அன்னையென்செய்யிலெனூரொன்சொல்லிலென்" என்றிறே யிங்கிருப்பது. [தக்தாநாம்விரஹாக்நிநா] [தக்தாநாம்விரஹாக்நிநா] இதுக்கு நீர் சொரியவல்லவர்களோ அவர்கள். அவர்களைமறைத்துவந்து கிட்டக்கடவவெங்களுக்கிவை வார்த்தையல்லகாண். ("நானனாக்ஷணம் தாழ்க, கோபத்தாலே 'அசத்யன்' என்றிகோள்; எல்லாருமறியாரோ என்னசத்யம்" என்ன) (உன்மாயங்கள் மேலைவானவருமறியார்) உன்னுடைய க்ருத்ரிமங்கள், ஆக்கனுன இந்த்ராதிகளன்றிக்கே நித்யசூரிகளுமறியார்கள். "ப்ரஹ்மாபிநவேதநாராயணம்..." (ப்ரஹ்மாபிநவேதநா

ராயணம்ப்ரபும்) என்கிறபடியே அறியாமைக்கவர்களு மொத்திருக்கச் செய்தே, உகந்தாரைக் காற்கடைக்கொள்ளுகிற ப்ரகரணமாகையாலே நித்யசூரிகளை நிதர்ஶநமாகச்சொல்லுகிறது. “சூட்டுநன்மாலைகள் தூயன வேந்தி” என்றுகொண்டு - அவர்கள் சமாராதநத்துக்கு வேண்டுவன கொண்டுநிற்க, * ஈட்டியவெண்ணெய் தொடுவுண்ணப்போந்ததிறே; அதுதன்னையும் விட்டிறே அடலாயர்தங்கொம்பினுக்குக் கோட்டிடையாடிற்று. பழையாரையெல்லாம் காற்கடைக்கொள்ளுகிற ப்ரகரணமாயிற்றிறே. நவப்ரியைகளை விரும்புவாரைப்போலேகாணும்.

(இனியெம்பரமே) நித்யசூரிகளோடொக்கத் தங்களையும் சமாநாதிகரிக்கிறுர்கள். அவர்களுக்கு நிலயமல்லாத தெங்களாலளவிடப்போமோ. அவையெல்லா மெங்களை யொழியச்சொல்லாய்.

“என்றுன், நான்பசுமேய்த்தமை ‘இல்லை’ என்கிறிகோளோ, ‘அறிந்திலோம்’ என்கிறிகோளோ, நான்சொன்னது ‘பொய்’ என்கிறிகோளோ” என்றுன்; அவையெல்லாமப்படியேயாகிலும் நீதான்பசுமேய்க்கும்படி யிப்படியேயோ (வேலினேர்தடங்கண்ணினுர் விளையாடுசூழலைச்சூழவேநின்றுகாலிமேய்க்கவல்லாய்) பெண்களுடைய கண்களிலே துவக்குப்பட்டு அவ்வருகுபோகமாட்டாதே நின்றுபோலேகாணும் பசுமேய்ப்பது. போக்தாக்களளவல்லாதபடி பரப்பையுடைத்தாய், ஓராளுமொருநோக்கும் நேரானகண்ணையுடையராயிருக்கை. “கார்த்தண்கமலக்கண்ணென்னும் நெடுங்கயிறுபடுத்தென்னை, யீர்த்துக்கொண்டுவிளையாடுமீசன்றன்னைக்கண்டீரோ” என்று, தன்கண்ணழகைக்கண்டபெண்கள் படும்பாடெல்லா மிவன்றன்னை யவர்கள்படுத்தவல்லவர்கள். (விளையாடுசூழலைச்சூழவேநின்று காலிமேய்க்கவல்லாய்) “உன்வயிறும்நிறைத்துப்பசுக்களின்வயிறும்நிறைத்தல்லது வாராதேகொள்” என்றன்றே பித்ராதிகளுன்னைச்சொல்லிவிட்டது; “இன்னவிடத்தேநின்று பசுமேய்” என்றொரு ப்ரதேசநியமம்பண்ணிவிட்டார்களோ. அவர்கள் நியமித்த தொழியச்செய்யப்பார்த்தால் அதிங்குச்செய்யலாகாதோ. கண்ணுக்கிடவொருதுரும்புமின்றியே, அவர்கள் விளையாடுகிற மணற்குன்றுகளைச் சூழநின்று மேய்க்கவேணும்போலேகாணும். பசுக்கள்மேய்க்கைக்கு சம்பாவனையில்லாத விடங்களிலே யிவற்றின் வயிறுகளைநிறைத்துக்கொடுபோகையினுலே,கீழி லகடிதகடநாசாமர்த்யம்போலே யிதுவுமோராஶ்சர்யஞ்சொல்லுகிறதாகவுமாம். (வல்லாய்) உன்னையாரேலும் நியமித்தாலும் நீநினைத்ததுசெய்து தலைக்கட்டவல்லானொருத்தனன்றேவென்கிறுள். இவர்கள்சொன்னமர்மம் புத்திபண்ணுதே, “நம்முடையசாமர்த்யந்தோற்றச்சொல்லாநின்றுர்கள்” என்று, தன்மேன்மைதோற்றச்சிலசொல்லப்புக்கான். “இவனழியும்படி நெடும்போதுசிலவார்த்தைசொன்னேம், இவனும் சிலசொல்லுவானுக்கு” என்றிருந்தாள். [இதீவ] கீழே நெ

டும்போது சிலபாசுரமிட்டுச்சொல்லிக்கொடுபோந்தான்; ப்ரணயதாரை யிலோடுமது ருஷிகளாயிருப்பார்க்கு நிலமன்றே; இப்புடைகளிலேயெ ன்கிறான். [தேவீ] வல்லபைகளுடைய பரிமாற்றம்கடக்க நிற்பார்க்குத் தெரியாதிறே. [𑌵𑌚𑌨𑌂 𑌮𑌹𑌾𑌰𑍍𑌥𑌂] [வசநம்மஹார்த்தம்] கட்கநிற்பா ர்க்கேயன்று, தேசிகரானவர்கள் தங்களுக்கும்தெரியாதபடியாயிருக்கை. [𑌤𑌂 𑌵𑌾𑌨𑌰𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌂] [தம்வாநரேந்த்ரம்] இவனோடொக்கக்கடவாரொருத் தருமில்லை; சேஷத்வத்துக்கு முடிசூடினார் மஹாராஜரேயாகிலும், பார தந்த்ர்யத்தினெல்லையிலே நின்றானிவனென்கை. இவ்வளவிலே யிவள் முகம்பார்த்து வார்த்தைசொல்லப்பெற்றிலரிறேயவர். [𑌮𑌧𑍁𑌰𑌾𑌰𑍍𑌥𑌂] [மதுரார்த்தம்] அபூமியென்னாகைவாங்கவொண்ணாதபடியாயிருக்கை. [உக்த்வா] அவனுமவனுடையவர்களும் வாழும்படி வார்த்தைசொன்னா ள். [𑌪𑍍𑌰𑍋𑌤𑍁𑌂 𑌪𑍁𑌨𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌵𑌚𑍋𑌽𑌭𑌿𑌰𑌾𑌮𑌂] [ப்ரோதும்புநஸ்தஸ்யவ சோபிராமம்] "அழிந்தாரையாக்கவல்லன்" என்னுமிடங்கண்டாள், தா னழிச்சதலையுண்டாம்படி வார்த்தைசொல்ல வல்லமைகேட்கவேணுமெ ன்றிருந்தாள். [𑌰𑌾𑌮𑌾𑌰𑍍𑌥𑌯𑍁𑌕𑍍𑌤𑌂] [ராமார்த்தயுக்தம்] ராமப்ரயோஜநயுக் தம். தன்கார்யம்செய்து தலைக்கட்டவல்லானொருத்தன். [விராம] நெடு ம்போதுதான் வார்த்தைசொல்லுகையினாலும், ஸ்வாமிவார்த்தைசொல் லும்போது மேலிட்டுவார்த்தைசொல்ல வொண்ணாமையினாலும் பேசா தேயிருந்தவனுக்கு அவகாசப்ரதாநம்பண்ணினாள். [ராமா] இவ்விட்டு நீட்டுகையொழிய வார்த்தைசொல்லாதேயிருக்கிறபோதை யழகையவர் தாம் காணப்பெற்றிலோம். இவனுமடர்த்து வார்த்தைசொன்னான் (எம் மைநீகழறேலே) வாராய், நோவுபடுத்திநலிந்தார் முடிக்கவும்தேடுவர்க ளோ. (எம்மை) உன்னைப்பிரிந்தாற்றாமை நோவுபடுகிறவெம்மை. (நீ) ஒருகாலமும் பிரியாதநீ. பிரிவால்வரும்நோவின்றிக்கே யிருக்கிறநீ. (கழ றேலே) விசாய்ந்துவார்த்தைசொல்லாதேகோள். நீ யிங்ஙன் மேலிட்டு வார்த்தைசொல்லப்பெறாய்காண். நீயும் நாங்களுமானால் எங்களை நீயட ர்த்துவார்த்தைசொல்லவென்ன ப்ராப்தியுண்டு. சேதநரைப்போலேவந் துவார்த்தைசொல்லுவதே, அதிலேவைத்து மிகைத்துவார்த்தைசொல் லுவதே. ஆற்றாமைக்குதவினார்க்கன்றோவாயுள்ளது ........................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (ஆலினிளிலையித்யாதி) ப்ரணயரோஷத்தாலே யூடுகிறவிட த்திலே, பெண்களிருக்கிற மணற்குன்றிலே யவன்பசுமேய்த்தப்ரகாரத்தையும், வ டதளசயநத்தையும் சொன்னதுக்கு ப்ரயோஜநமருளிச்செய்கிறார் (நான்சொன்ன வையெல்லாமித்யாதி) இத்தால் - இவர்கள் ப்ரணயரோஷந்தீருகைக்காக, தான் தாழ்த்ததுக்கு பித்ராதிகளேவினதடியாகப் பசுமேய்த்தபடியையவன்சொல்ல; அ த்தை யஸங்கதோக்தியாகப்பரிஹாஸம்பண்ணுகிறவர்கள், "இவன்சொல்லுமதஸங்க தோக்தி" என்னுமதுக்குழுப்பாக, அஸங்கதவ்யாபாரமான வடதளசயநத்தைமுன்

ணிடுகிறார்களென்றபடி. செய்யும்செயலென்றது - " ஆலினிளிலை " இத்யாதியைப் பற்ற.

நீளிலையென்றது - நீளுகிறவிலையென்றாய், முகிழ்விரியாத சிற்றிலையென்றபடி. ஒருயசோதாதிகளுங்கூட வுதவாததசையிலேயென்றது- பரிவரில்லாததசையிலேயென்றபடி. விவரணம் (ஜகத்தையித்யாதி) பலிதம் (அஸங்கதங்களையித்யாதி) பொருளோ - அருமையோவென்றபடி. இதஸங்கதமானபடியைக்காட்டுகிறார் ( நீ சொல்லுகிறவிவையித்யாதி ) அதாவது - "பித்ராதிகளுக்குப் பரதந்த்ரன்" என்று சொல்லுமவை ப்ரணயிகள் கோஷ்டியில் பரிமாறுமவை யன்றென்றபடி. ப்ரணயிகள் கோஷ்டியில் பரிமாறும்படி யெங்ஙனேயென்ன ( பிதாநாமேத்யாதி ) "[Grantha text] । [Grantha text]" (குருணுமக்ரதோவக்தும்கிம்ப்ரவிஷிநஃக்ஷமம்। குருவஃகிம்கரிஷ்யந்திதக்தாநாம் விரஹாக்நிநா) இதிபஞ்சமேம்மே. ப்ரமாணாந்தரம் (அன்னையெனித்யாதி) மாத்ராதிகளை த்ருணீகரிக்கலாமோன்ன (தக்தாநாமித்யாதி) கீழ்வாக்யத்துக்குப்பலிதம் (அவர்களைமறைத்தித்யாதி)

நீங்கள் " பொய் " என்கிறப்போலே, எல்லாரும் "பொய்" என்றார்களோவென்ன (உன்னுடைய க்ருத்ரிமங்களித்யாதி) "மேலைவானவரும்" என்றுவிசேஷிக்கவேணுமோ, ப்ரஹ்மாதிகளுமறியாரென்னவொண்ணுதோவென்ன ( ப்ரஹ்மாதீத்யாதி ) நித்யஸூரிகளைக் காற்கடைக்கொண்டானோவென்ன (சூட்டுநன்மாலைகளித்யாதி) சோட்டிடை - கொம்பின்நடுவே. " உகந்தாரைக்காற்கடை " இத்யாதிவாக்யவிவரணம் (பழையாரையித்யாதி) பழையாரென்கிறது-இங்கே, ஊடுகிறவர்களை. புதியாரென்கிறது - அவன்மின்னிடைமடவாரை.

நித்யஸூரிகளை வஞ்சித்தாப்போலே யெங்களையும் வஞ்சித்தாயென்றுபலிதம் (நித்யஸூரிகளோடொக்கவித்யாதி) சமாநாதிகரிக்கிறார்களென்றது - அறியாமையில் சாம்யத்தைப்பற்ற. அவையெல்லாமென்றது - மாயங்களெல்லாமென்றபடி. அதாவது - "மாதாபிதாக்களுக்குப் பரதந்த்ரன" என்றுதொடங்கிச்சொல்லுகிற வார்த்தைகளென்றபடி.

வேலினேர் - வேலோடு ஸத்ருஶமானவித்யர்த்தஃ. தாத்பர்யார்த்தம் (பெண்களுடையவித்யாதி ) "வேலினேர்" என்றபதத்துக்கு ஹார்த்தபாவம் (கார்த்தண்கமலமித்யாதி) மேகத்திலே ஶ்ரமஹரமான தாமரைபூத்தாப்போலே யிருக்கிற திருக்கண்களாகிற பாசத்திலே யகப்படுத்தி, என்கார்யமென் புத்த்யதீநமல்லாதபடி யென்னைத் தன்பக்கலிலே யிழுத்துக்கொண்டு, இதுவே லீலையாகவிருக்கு மீசனைக்காணப்பெற்றாருண்டோவித்யர்த்தஃ. நாய்ச்சியார்திருமொழி பதினாலாந்திருமொழி நாலாம்பாட்டு. " வேலினேர் " இத்யாதிக்கிரண்டுதாத்பர்யம். முந்தினது-பித்ருவசந பரிபாலநத்துக்காகவானுல் மணற்குன்றிலேவந்து பசுமேய்ப்பர்களோ, இது பொய்யென்று; இத்தையருளிச்செய்கிறார் ( உன்வயிறும்நிறைத்தித்யாதி ) " விளையாடுகுழல் " என்றத்தைக்கடாக்ஷித்துஹார்த்தபாவம் ( இன்னவிடத்தேயித்யாதி ) கீழ்ச்சொன்ன வ்யங்க்யங்களுக்குப் பலிதம் (அவர்கள்நியமித்ததொழியவித்யாதி) ஏதத்விவரணம் (கண்ணுக்கிடவித்யாதி) பசுக்கள்மேய்க்கைக்கு சம்பாவனையில்லாதவிடங்களிலே யிவற்றின் வயிறுகளை நிறைத்துக்கொண்டு போகையினாலே, கீழகடிதகடநா சாமர்த்யம்போலே யிதுவுமோராஶ்சர்யமென்று - " வேலினேர் " இத்யாதிக்கிரண்டாம்பாவம் ( பசுக்கள்மேய்க்கைக்கித்யாதி ) முந்தினபாவத்துக்குச் சேர " வல்லாய் " என்றதுக்கர்த்தம் (உன்னையாரோனுமித்யாதி) ஆகையாலே யெ

ங்களோடும் சம்ஶ்லேஷிக்கலாமென்றபடி. த்விதீயபாவத்துக்குச்சேர "வல்லாய்" என்றதுக்கு - அகடிதகடநாசமர்த்தனென் றர்த்தங்கண்டுகொள்வது.

த்விதீயார்த்தத்துக்குச்சேர மேலுக்கவதாரிகை (இவர்கள்சொன்னவித்யாதி) மர்மமென்றது - வ்யங்க்யமாகச்சொன்னவார்த்தையையென்றபடி. முந்தின வர்த்தத்துக்குச்சேர வவதாரிகாந்தரம் இவனழியும்படியித்யாதி) இவனழியும்படியென்றது - இவன் நிருத்தரனும்படியென்கை. சொல்லுவானுக்கென்றது - சொல்லக்கடவனென்றபடி. இதுக்குத்ருஷ்டாந்தம் (இதீவேத்யாதி) இதுக்கு ஹேதுவேதென்ன (தேவீ) என்றுபதசங்கதி. இவள்சொன்னவார்த்தை விரக்தனுக்கேயன்றிக்கே, உட்புகுந்தநாயகனுக்குந் தெரியாதென்கிறுர் (கடக்கவித்யாதி) தேஶிகர்-பெருமாள். வாநரேந்த்ரமென்னுதே, "தம் வாநரேந்த்ரம்" (தம்வாநரேந்த்ரம்) என்றதுக்குபாவம் (இவனேடொக்கவித்யாதி) இவனேடொக்கக்கடவா ரொருத்தருமில்லையென்றது - பெருமாளுக்கு ப்ரத்யாஸந்நனென்னுமதுகொண்டிறே; அது மஹாராஜருக்கு மில்லையோவென்ன (சேஷத்வத்துக்கித்யாதி) அதெப்படியென்ன (இவ்வளவிலேயித்யாதி) அதாவது - மஹாராஜர்க்குப்போலே யதேஷ்டவிநியோகார்ஹத்வமாத்ரமன்றிக்கே, யதேஷ்டவிநியுஜ்யமாநரான திருவடி வாநரேந்த்ரனென்றபடி. அவனென்றது - மஹாராஜனை. அபூமியென்னுவென்றது - "மஹார்த்தம்" என்றத்தைப்பற்ற. சரஸமாகையாலே, "நிலமன்று" என்று விடப்போகாதிருக்கையென்றுகருத்து. அவனு மவனுடையவர்களுமென்றது - திருவடியும், திருவடியுடைய பெருமாள் மஹாராஜர் தொடக்கமானவர்களுமென்றபடி. தான் பெருமாளை ப்ரணயரோஷத்தாலேயழித்தவார்த்தைக் கிவன்சமாதாநம்பண்ணவல்லனென்கிற விதந்திந்தபடியெங்ஙனேயென்ன (அழிந்தாரையித்யாதி) அதாவ்து-வேண்யுத்க்ரதநத்திலே யொருப்பட்டுமுடியப்புக்க தன்னையுண்டாக்குகையாலே, அழிந்தாரையாக்கவல்லனென்னுமிடம் கண்டாளென்றபடி. இப்படியாகையாலே (தானழிச்சதலே) என்றுகூட்டிக்கொள்வது. தானழிச்சதலையென்றது - "நிர்த்தயர், ஸ்வார்த்தபரர்" என்று தானழித்தபெருமாளையென்றபடி. உண்டாம்படி வார்த்தைசொல்லுகையாவது - நிர்த்தோஷராம்படி வார்த்தைசொல்லுகை. (ராமப்ரயோஜநயுக்தம்) ராமனுகிற ப்ரயோஜநயுக்தமென்றபடி. சேஷியானவனை சமாதாநம்பண்ணுகை சேஷபூதனுடைய கார்யமாகையாலே (தன்கார்யம்செய்துதலைக்கட்டவல்லானென்றது) அது - "தஸ்ய" (தஸ்ய) என்றதுக்கர்த்தமாறுல் ஸ்வரஸம். வெறுமனேயிருந்ததுக்குப்ரயோஜநம் (நெடும்போதித்யாதி) ஸ்வாமிவார்த்தையென்றது- ஸ்வாமியுடையவார்த்தையென்றபடி. இவ்விட்டுநீட்டுகையொழியவென்றது - இவள்வார்த்தை சொல்லுகிறபோதை யழகைத் திருவடிசொல்லக்கேட்கையன்றிக்கே யென்றபடி. (இவனும் சிலசொல்லுவானுக்கென்றிருந்தாள் - இவனுமடர்த்துவார்த்தைசொன்னுன்) என்று கீழோடே சங்கதி. விவரணம். (பிரிவால்வருமித்யாதி) விசாய்ந்து-மேலிட்டு. மேலிட்டுவார்த்தைசொல்லவொண்ணுதோவென்ன; ஸாபராதனுனவுனக்கதுக்கு யோக்யதையில்லைகாணென்கிறுர் 'நீயிங்ஙனித்யாதி) "எம்மைநீ" என்கிறபதங்களையுங்கூட்டி உக்தார்த்தவிவரணம் (நீயும்நாங்களுமித்யாதி) சாபராதனுனநீயும், துஃகிதைகளானநாங்களுமாறுலென்றபடி. சேதநரைப்போலேயென்றது - எங்களை சைதந்யமுள்ளவர்களைப்போலேயெண்ணியென்றபடி. "இதீவ தேவீ வசநம் மஹார்த்தம் தம் வாநரேந்த்ரம் மதுரார்த்தமுக்த்வா। ச்ரோதும் புநஸ்தஸ்ய வசோபிராமம் ராமார்த்தயுக்தம் விரராம ராமா" (இதீவதேவீவசநம்மஹார்த்தம்தம்வாநரேந்த்ரம்மதுரார்த்தமுக்த்வா । ஶ்ரோதும்புநஸ்தஸ்யவசோபிராமம்ராமார்த்தயுக்தம்விரராமராமா ) இதிஸுந்தரகாண்டே ..................................*

# ஐந்தாம்பாட்டு.

கழறேனம்பியுன்கைதவமண்ணும்விண்ணுநன்கறியுந்திண்சக்கர
நிழறுதொல்படையாயுனக்கொன்றுணர்த்துவனுன்
மழறுதேன்மொழியார்கணின்னருள்சூடுவார்மனம்வாடிநிற்கவெங்
குழறுபூவையொடுங்கிளியோடுங்குழகேலே.

## ஆறாயிரப்படி.

(கழறேல்) இப்படி தன்னை யுத்திப்ரய மேன்மே லிவள் சொன்னவார்த்தைகளையே தனக்குப் பற்றாசாகக்கொண்டு, இவளுடைய கிளிகளையும் பூவைகளையு மெடுத்து அவற்றைக்கொண்டு திருநாமங்களைச் சொல்லுவித் தாஸ்வஸியா நின்றுகொண்டு, "என்பக்கல் பொய்யுண்டோ" என்றுதானருளிச்செய்ய; உன்னுடைய பொய்யை யறியாதாருண்டோ, பகலையிரவாக்கவல்லனல்லையோ; அது நிற்க, ஒரு ஹிதம் சொல்லக்கேள். அதேதென்னில்; உன்திருநாமங்களைக்கேட்க விருந்தாயாகில், நின்னருள்சூடுவார் மனம்வாடி நிற்க விங்கேநின்று எங்களுடைய பூவைகளையும் கிளிகளையு முன்திருநாமங்களைச் சொல்லுவித்துக்கொண்டு கேளாதே, உன்னுடைய மழறுதேன்மொழியார்களைச் சொல்லுவித்துக்கொண்டு கேளென்கிறாள்.........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், உன்பொய்க்குப் பெருநிலைநிற்கும் பரிகரத்தையுடைய நீ, அஹ்ருதயமாக வெங்கள் பேச்சைக்கொண்டாடுவது, இனியபேச்சையுடைய வெங்கள் பூவையையும் கிளியையும் கொண்டாடுவதாகாதே கொள்ளென்கிறாள்.

நம்பி - "பொய்நம்பி" என்னும்படி பொய்யாலே நிறைந்தவனான நீ. கழறேல் - "என்னைப் பொய்செய்தே னென்கையாவதென்" என்று மேலிட்டு வார்த்தைசொல்லாதேகொள். திண் - பகலையிரவாக்கின பொய்க்குப் பெருநிலை நிற்கும் திண்மையையுடைய. சக்கரம் - திருவாழியாகிற. நிழறு - தேஜ: ப்ரஸாரியான. தொல்படையாய் - அசாதாரணாயுதத்தையுடையவனே. உன் - உன்னுடைய. கைதவம் - க்ருத்ரிமசேஷ்டிதங்களை. மண்ணும் - அந்தமஹாபாரதஸமரத்திலே பூமியில் திரண்ட ராஜலோகங்களோடு. விண்ணும் - ஊர்த்வலோக வாசிகளான தேவர்களோடு வாசியற. நன்கு - நன்றாக. அறியும் - அறியும். ஆனபின்பு, உனக்கு - உனக்கு. நான் - நான். ஒன்று - ஒன்று. உணர்த்துவன் - அறிவிக்கக்கேள். எங்கள்வார்த்தை யினிமை கொண்டாடாதே; நாங்களவர்களல்லோம், நின் - உன்னுடைய. அருள் - அருள். சூடுவார் - சூடுகைக்கு இட்டுப்பிறந்தவர்களாய். மழறு - அபிநவமான. தேன் - தேன்போலேயிருக்கிற. மொழியார்கள் - மொழியையுடையவர்கள். மனம் - நெஞ்சானது. வாடி - செவ்வியழிந்து விஷண்ணமாம்படி. நிற்க - நிற்க. எம் - அவர்களதன்றியே யெங்களதாயிருப்பதாய். குழறு - அவர்களைப்போலே யுனக்குத் தெளிய வார்த்தைசொல்லமாட்டாதே, அநக்ஷர சரசமான குழறுதலை

யுடைத்தான. பூவையொடும் - பூவையோடும். கிளியோடும்-கிளியோடும். குழகேல் - லீலாரசம்கொண்டாடாதேகொள்.

இங்கு, பூவையும் கிளியுமென்கிறது-ஆஶ்ரிதர்க்குசாத்துணையாகைக்கு யோக்யமான வ்யவஹாரத்தையுடைத்தாய் ததேகரக்ஷ்யமான ஶிஷ்யவர்க்கத்தை ரூசிப்பிக்கிறது.........................................................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

" ஸ்நேஹிகளாயிருப்பார்க்குக் குற்றத்தை குணமாகக் கொள்ளவுமாம், நிஸ்ஸ்நேஹிகளுக்கு குணந்தன்னையே குற்றமாகக்கொள்ளவுமாம், விஷயாநுகுணமாயிறே குணதோஷங்க ளிருப்பது ; ஆகையாலே, நான் சொன்னவையெல்லா மிப்போ தித்தலைக்குக் குறையாய்த்தோற்றுமிறே ; ஆனாலும் மத்யஸ்த்தர்சொன்னதிறே அர்த்தமாய்த் தலைக்கட்டுவது " என்றான்.

( கழறேல்நம்பி ) அது முன்னம் செய்தபடிசெய்ய, நீர்தாம் முதன்மைகொண்டாடி அபிபவித்து வார்த்தைசொல்லாதே கொள்ளுமெங்களை. (நம்பி) ப்ராபவங்கொண்டபிமதம் சாதிக்கவொண்ணாதுகாணும்.

நெஞ்சில் வெறுப்புடையார் சொல்லுமதுவார்த்தையன்று, உங்களையொழிய சாக்ஷியுண்டோவென்ன ( உன்கைதவம் மண்ணும் விண்ணும் நன்கறியும் ) உன் க்ருத்ரிமமெங்களளவன்று, சகலலோக ப்ரசித்தங்காண். * வாயுந்திரையுகளில் வாஸனையாலே " ஜகத்தெல்லாம் தம்மைப்போலே நினைத்திருக்கும் " என்றிருக்கிறார். சம்பந்தமவிசிஷ்டமானு லங்ஙன் நினைத்திருக்க வொரு தட்டில்லையிறே. அன்றிக்கே, சேஷியொருவனானால் சேஷவஸ்துக்களெல்லா மொருமிடறா யிருக்குமிறே ; ஒருவனுக்குப் பலவடிமையுண்டானால் தங்களிலெல்லாரு மொத்திருப்பர்களிறே க்ருதஸங்கேதிகளாய். மண்ணிலுள்ளாரும் விண்ணிலுள்ளாருமழகிதாகவறியும். விசேஷஜ்ஞரோ டவிசேஷஜ்ஞரோடு வாசியறவறியும். " இவ்விடையாட்ட மிரண்டுமறியாதாரையோ சாக்ஷியாகச்சொல்லுவது, * அறிவினால்குறைவில்லாத வகல்ஞாலமன்றோ விது " என்றான் ( விண்ணும்நன்கறியும் ) " ஆனாலுமவர்களிலே யொருத்தரைச் சொல்லச்சொல்லுங்கோள் 'பொய்'என்று " என்றான் ; ஆனாலுனக்குப்பக்ஷபதித்திருக்கு மவர்களிலே யேற்றுகிறோம் கைமேலே ( திண்சக்கரநிழறுதொல்படையாய் ) குற்றந்தன்னையே குணமாகக்கொள்ளுவாரைக்கேள் உன் க்ருத்ரிமத்துக்குப் பெருநிலைநிற்பார்க்கன்றோ தெரிவது. உன் நினைவறிந்து கையிலேவந்திருப்பது, " பகலையிரவாக்கவல்லையோ " என்று கேட்டால் " ஓம் " என்றுகொண்டு ஆதித்யனைமறைப்பது, இப்படியேயிறே யவனுடைய வர்த்தநம். (திண்சக்கரம்) அப்பொய்யிலவனை பேதிக்கிலுமிவனை பேதிக்க வொண்ணாதா யிருக்கை. ஸ்வதந்த்ரனாகையாலே கார்யாநுகுணமாக வேறிட்டுக் கொள்ளுமவன், இவனுக் கதில்லையிறே.

(நிழறுதொல்படையாய்) நிழறுகையாவது - நடத்துகை. அதாவது—நிறங்கொடுக்கையாய்; அஸத்யப்ரதிஜ்ஞனு யிருக்கச்செய்தே, ஸத்யப்ரதிஜ்ஞனுனல் பிறக்கும் கார்யத்தைப் பிறப்பித்துக்கொடுக்கை. (தொல்படையாய்) இப்படிக்குப் பழையனுய்ப்போருகை.

இவளிப்படி சொன்னவாறே "ஸ்வபக்ஷத்திலே சிலரிப்படிநமக்குண்டாவதே!" என்று, சொல்லலாவதுகாணுமல் கவிழ்தலையிட்டான் (உனக்கொன்றுணர்த்துவன்நான்) வாராய், நீசொலவற்றிருக்கவேண்டா; உனக்கு நான் நல்லதொரு ஹிதஞ்சொல்லவாவென்ருள்.

இது செவிகொடுத்துக் கேட்டானுகில், இதுக்குச் சொல்லலாவதொரு மறுமாற்றமில்லை; தனக்கு மேல்வார்த்தைசொல்லுகைக்கொரு போக்கடியுமில்லை, (இவனுக்குப்போக்கடியாவது - "நான் ஸ்வதந்த்ரன்" என்றுசொல்லுகையிறே.) இதெல்லாங் கிடக்கச்செய்தே பேசாதேபுகா, "இதொருபேச்சினினிமையிருந்தபடியென்" என்ருன் (மழறுதேன்மொழியார்கள்) பாவியேன், நீ யாருடையபேச்சை யாருடையபேச்சென்று ப்ரமிக்கிருய். மழறுதேன் - மழலைத்தேன். கலங்கின தேன்போலே யினியபேச்சுக்களை யுடையராயிருக்கை. இவன் சந்நிதிமாருமையாலே கலக்கமும் மாருதேயிருக்குமே. "அவையெல்லாமிங்கேயிறே" என்னுமேயவன். (மொழியார்கள்) எத்தனைபேருனக்கு. (நின்னருள்சூடுவார்) ஆனேனும் பேச்சைக்கேட்டுத் தங்கள் பேச்சென்று ப்ரமிக்கும்படிபண்ணவல்லவர்கள். ஒருக்தியாலே "ஸ்திதோஸ்மிகதஸந்தேஹ:" (ஸ்திதோஸ்மிகதஸந்தேஹ:) என்னும்படி வார்த்தைசொல்லவல்ல வுன்னை யோருக்தியாலே கலங்கப்பண்ணவல்லவர்கள். "அதுக்கென்" என்ருன்; அவர்களெங்களைப்போ லல்லகாண்; நீ ப்ரயோஜநநிரபேக்ஷமாக விங்கே நிற்கச்செய்தேயும், இத்தை யறிந்துவைத்தும் க்ஷணமாத்ரவிப்ரலேஷம் பொறுக்க மாட்டாமையாலே அவர்கள் மநஸ்ஸூ வாடுங்காண். ஆஶ்ரயத்தை யிழந்த தளிர்போலேகா ணவர்கள் நெஞ்சுவாடும்படி. "கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப்புகுந்தொருநாள் தங்குமேலென்னுவிதங்கும்" என்றிருக்குமவர்களிறே யவர்கள். அவ்வளவில் நீ யுதவப்பெருமையாலே போர நோவுபடுவர்கள், அதுகண்டால் நீ பொறுக்கவல்லையோ என்றுசொல்லிப் பேசாதேயிருந்தாள். "உங்கள்பேச்சிலு மெனக்கு தாரக மிவற்றின்பேச்சன்ரே" என்று அவர்களைவிடா, பூவையையும் கிளியையும் கொண்டாடப் புக்கான்; சிலரை யாதரிக்கையாவது - அவர்க ளுடைமையை யாதரிக்கையிறே. அவற்றை யாதரித்து வார்த்தைகொள்ளப் புக்கவாறே; வாராய், அவைதான் நீ ஆரினவென்றிருக்கிருய்; அவை நீ நினைக்கிறவர்களதன்று காண் (எங்குழறுபூவையொடும் கிளியோடும் குழகேலே) அவையுனக்குவார்த்தைசொல்லுகிறனவல்லகாண், அவற்றுக்கது ஸ்வபாவங்காண். (குழ

கேலே) நாங்களந்யமாக வார்த்தை சொல்லச்செய்தேயும் கண்டாயே! நீ அநந்யகதித்வந்தோற்ற வார்த்தைசொல்லுகிறபடி, அப்படியே இவற்றின்பேச்சு மந்யார்த்தங்காண். ((குழறுபூவை) அநக்ஷரசரசமாகப் பேசுகிறபூவை. குழகுதல் - லீலாரஸங்கொண்டாடுகை.)................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. (கழறேலித்யாதி) "உன்கைதவம் மண்ணும்விண்ணும் நன்கறியும்" என்கிறபதத்துக்கிடாக "மத்யஸ்த்தர்வேணும்" என்று அவன் சொல்லுகிறதாக வவன்வார்த்தையை யூஹித்து; "அதுக்கு வேறு மத்யஸ்தனைத் தேடவேணுமோ, அந்தரங்கைகளான நாங்கள் சொன்னது போராதோ" என்று சொல்லுவர்களாகவெண்ணி, "நீங்கள் சொன்னது நமக்கு விஶ்வஸநீயமாயிராது" என்கைக்குறுப்பான வுபபத்தியைப் பலவார்த்தைகளாலே தர்ஶிப்பியாநின்றுகொண்டு, இப்படி யாகையாலே மத்யஸ்தர் சொன்னதே யர்த்தமாவதென்கிறுனென்றருளிச்செய்கிறுர் (ஸ்நேஹிகளாயிருப்பார்க்கித்யாதி) ஆகையாலேயென்றது- லோகபரிபாடி யதுவாகையாலே யென்றபடி. குறையாய்த் தோற்றுமிறே யென்றது - "அஸங்கதங்களைச்செய்தேன்" என்றும், "பொய்யைமெய்யாகவுபபாதித்தேன்" என்று மிவ்வழியாலே குறையாய்த்தோற்றுமிறே யென்றபடி. ஆனுலுமென்றது - நீங்கள் சொன்னவார்த்தை விஶ்வஸநீயமானுலு மென்றபடி.

கழறுகை - அபிபவித்து வார்த்தைசொல்லுகை. இது - கீழிலநுவாதம். மத்யஸ்தனைக்கொண் டபிமதம் ஸாதித்துக்கொள்ளுகிறபோது ஸாதித்துக்கொள்ளுகிறேம், நீ யெங்களை யபிபவித்து வார்த்தைசொல்லாதே கொள்ளென்கிறுள் (அதுமுன்னமித்யாதி) அதுமுன்னமென்றது - மத்யஸ்தர் சொன்னதென்றபடி. முதன்மை - பரத்வம்.

"உன்கைதவம்" இத்யாதிக்கவதாரிகை (நெஞ்சிலித்யாதி) நான்க்ருத்ரிமனென்றதுக்கு (உங்களையொழிய ஸாக்ஷியுண்டோ) என்று கூட்டுவது. தான் "க்ருத்ரிமன்" என்றுசொன்னுல், எல்லாரு மப்படிசொல்லுவர்களோவென்ன (வாயுந்திறையித்யாதி) அப்படி நினைக்கக்கூடுமோ வென்ன (ஸம்பந்தமித்யாதி) உபயவிபூதியும் தன்பக்ஷத்திலே நிற்கையாலே "க்ருத்ரிமன்" என்று சொல்லுவர்களென்று விவக்ஷித்தருளிச்செய்கிறுர் (அன்றிக்கேசேஷியித்யாதி) விவரணம் (ஒருவனுக்கித்யாதி) விவரணம் (விசேஷஜ்ஞரித்யாதி) கீழே "விண்" என்று- உபரிதநலோகவிவக்ஷயா வருளிச்செய்து, நித்யவிபூதிவிவக்ஷயாவர்த்தாந்தரம் (இவ்விடையாட்டமித்யாதி) இடையாட்டம் - வ்யாபாரம். அறிவினுற் குறைவில்லாவகல்ஞாலமென்றது - "நமக்கு ஜ்ஞாநமில்லை" என்று, குறைவுபடவும் - அநுதபிக்கவு மறியாத வகல்ஞாலமென்றபடி.

(ஏற்றுகிறேம்கைமேலே) என்றது - சாடு; ப்ரத்யக்ஷமாகவிசைவிக்கிறேமென்று சாடுவுக்கர்த்தம்; கையில் திருவாழியைக்கொண் டறிவிப்பிக்கிறேமென்று ஸ்வபாவார்த்தம். குற்றந்தன்னையே குணமாகக்கொள்ளுவாரைக்கேளென்றது- தோஷத்தை யதாவாக வறிந்திருக்கச்செய்தேயும், நாட்டார் "தோஷம்" என்று நினையாதே, "குணம்" என்றுகொள்ளும்படி மறைக்குமவர்களைக் கேளென்றபடி. விவரணம் (உன்க்ருத்ரிமத்துக்கித்யாதி) அதாவது - உன் க்ருத்ரிமத்துக்கு ஸஹாயம்பண்ணுவார்க்கன்றே உன் தோஷத்தை மறைக்கும் ப்ரகாரம் தெரிவதென்றபடி

டி. பெருநிலைநிற்பார் - ஸஹாயம்பண்ணுவார். பெருநிலைநிற்கும்படியைக் காட்டுகிறார் ( உன்னினைவறிந்தித்யாதி ) கையிலேவந்திருப்பதென்றது - பீஷ்மநிரஸநத்துக்காகக் கையிலேவந்திருப்ப தென்றபடி. * திண்மைக் கர்த்தம் (அப்பொய்யிலித்யாதி ) பேதிக்கவொண்ணுமைக்கு ஹேதுவேதென்ன ( ஸ்வதந்த்ரனித்யாதி ) இவனுக்கதில்லையிறே யென்றது - பரதந்த்ரனுகையாலே பேதிக்கப்போகா தென்றபடி. நடத்துகையாவது - பெருநிலைநிற்கை. அர்த்தாந்தரம் ( அதாவது நிறங்கொடுக்கையித்யாதி) அதாவதென்றது - நிழலுகையாவதென்றபடி. ( கார்யத்தைப் பிறப்பித்து ) என்றவிடத்திலே - " ஸ்வநிகமமபஹாய " (ஸ்வநிகமமபஹாய) இத்யாத்யநுஸந்தேயம். இப்படிக்கென்றது - இவ்வாகாரங்களுக் கென்றபடி. திண்ணிதான திருவாழியாகிற தேஜஸ்கரமான வஸாதாரணுயுதத்தை யுடையவனேயென்று சப்தார்த்தம்.

நல்லதொருஹிதமென்றது - க்ருத்ரிமங்களைப்பண்ணுதே யங்கேறப்போவென்கையாதல், க்ருத்ரிமங்களைப்பண்ணினேனென்று சொல்லிவிடு என்கையாதல்.

மறுமாற்றமில்லையென்றது - திருவாழியாலே யாதித்யனை மறைக்கையாலே, "க்ருத்ரிமத்தைப்பண்ணவில்லை" என்றுசொல்லலாவதொரு ப்ரத்யுத்தரமில்லையென்றபடி. போக்கடியுமில்லையென்றது - தானஸத்யவாதியென்னுமதுக்கு ப்ரத்யுத்தரமில்லாதபின்பு, இவர்களோடிட்டீடுகொண்டு வார்த்தைசொல்லுகைக்கவகாசமில்லையென்றபடி. இதெல்லாங்கிடக்கச்செய்தேயென்றது - "உணர்த்துவன்நான்" என்றால், "அதெது" என்றுகேட்குதல், ப்ரத்யுத்தரம்சொல்லுதல் செய்கையாகிறவிதெல்லாங்கிடக்கச்செய்தேயென்றபடி. பேசாதேபுகா - பேசாதேயிருந்து. மழலைத்தேன் - இளந்தேன். அர்த்தாந்தரம் (கலங்கினவித்யாதி) கலங்குகைக்குஹேதுவேதென்ன (இவன்ஸந்நிதியித்யாதி) " மொழியார்கள் " என்றதுக்கவதாரிகை (அவையெல்லாமித்யாதி) "மழறுதேன்" என்றதினர்த்தத்வயத்துக்கும் சேரபாவம் (ஆனோம்பேச்சையித்யாதிவாக்யத்வயமும்) என்னுதல், கீழ்வாக்யத்துக்குபலிதம் (ஒருக்தியாலேயித்யாதி) என்னுதல். ஒருக்தியாலே - " மாஶுச: " (மாஶுச:) என்கிறவுக்தியாலே இத்யர்த்த:. எங்களைப்போலல்லகாணென்றது - நெடுநாள்பிரிந்து நோவுபட்டு, ஜீவிக்கவும்மாட்டாதேமுடியவும் மாட்டாதேதரித்திருக்கிறவெங்களைப்போலல்லகாணென்றபடி. விவரணம் (நீப்ரயோஜநேத்யாதி) " வாடிநிற்க " என்றதுக்குபாவம் (ஆஶ்ரயத்தையித்யாதி) க்ஷணமாத்ரம் விஶ்லேஷம்பொறுக்கமாட்டாமல் வாடுகைக்கடியேதென்ன ( கொங்கைமேலித்யாதி ) நாய்ச்சியார்திருமொழி. பாசுரஸ்பஸ்பஷ்டோர்த்த:.

இவர்களைவிட்டுப் பூவைக்கிளிகளையாதரிக்கிற தென்னென்ன (சிலரையித்யாதி) "எம்" என்றதுக்குபாவம் (வாராயித்யாதி) " குழறுபூவை " என்றதுக்குபாவம் (அவையித்யாதி) ஸ்வபாவமானபடியெப்படியென்ன (நாங்களந்யமாகவித்யாதி) அந்யமாக - வேருக. உறவறவென்றபடி. குழகேலே - ஆதரித்துவார்த்தைகொள்ளாதேகொள். குழறுகை - அநக்ஷரசரஸமாகச்சொல்லுகை. " ஸ்திதோஸ்மிகதஸந்தேஹ: கரிஷ்யேவசநந்தவ " ( ஸ்த்திதோஸ்மிகதஸந்தேஹ:கரிஷ்யேவசநந்தவ ) இதிபகவத்கீதா ஸ்வஷ்டாதஶே ........................................................*

# ஆறும்பாட்டு.

குழகியெங்கள்குழமணன்கொண்டுகோயின்மைசெய்துகன்மமொ
பழகியாமிருப்போம்பரமேயித்திருவருள்க [ன்றில்லை
ளழகியாரிவ்வுலகுமூன்றுக்குந்தேவிமைதகுவார்பலருளர்
கழகமேறேனம்பியுனக்குமிளைதேகன்மமே.

## ஆறுயிரப்படி.

(குழகி) முற்படவிவளையணுகக்கூசியிருந்தவெம்பெருமான், இப்படி யிவள்தன்னைக்குறித்துச் சிலவார்த்தைகளைச்சொன்னவாறே யதுவேபற்றாசாக நிர்ப்பயனாய்ச்சென்றணுகி, இவள்பாடேயிருந்த குழமணனையெடுத்தருள; குழகியெங்கள் குழமணன்கொண்டு அடிக்கழிவுசெய்தா லுனக்கென்னப்ரயோஜநமுண்டென்றிவள்சொல்ல; "என்னுடைய வாத்மதாரணார்த்தமாக வெடுத்தேன்" என்று அவனருளிச்செய்ய, நாங்களிப்பொய்களுக்குப் பழையோமல்லோமோ, உன்னுடைய விந்தநிரவதிகமான வபிநிவேசத்துக்கு நாங்கள் விஷயமாகப்போதுவோமோ என்றிவள்சொல்ல; "நீயல்லது மற்றெனக்கு ஸ்ப்ருஹணீயவிஷயமுண்டோ" என்று அவனருளிச்செய்ய, த்ரைலோக்யத்திலுள்ளாரிலு மழகியாருனக்கே தேவிமைக்குறுப்பாயிருப்பார் எத்தனைபேருளர்; அதுநிற்க, நீமூந்தற வெங்கள்பரிஷத்திலேவந்தேறுதேகொள், இதுனக்கு மிளையதான கன்மமென்கிறுள்.........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், மேஞ்ணித்தக் குழமணனையெடுத்தவவனைக்குறித்து; உன்னுடையவீஸ்வரத்வ மெங்களோடேகாட்டாதே, அதுக்குத்தகுவாரோடே காட்டென்கிறுள்.

குழகி-விளையாட்டாலே. எங்கள்-எங்கள். குழமணன்-குழமணனை. கொண்டு-எடுத்துக்கொண்டு. கோயின்மைசெய்து-கைப்பட்டப்ரியத்தாலே மேன்மைபாவித்தால். ஒன்று-ஒரு. கன்மம்-காரியம். இல்லை-இல்லை. உம்முடைய சரஸங்களும் மேன்மையும், யாம்-நாங்கள். பழகி-பண்டேபழகி. இருப்போம்-இருப்புதோம். இ-இந்த. திரு-அதிசயிதமான. அருள்கள்-அருள்களானவை. பரமே-நாங்கள்பொறுக்கவல்லவையல்ல. அழகியார்-அதுக்கநுரூபமான வழகையுடையராய். இ-உம்முடைய சர்வேஶ்வரத்வத்துக்கு விஷயமான இந்த. உலகுமூன்றுக்கும்-லோகத்ரயத்துக்கும். தேவிமை-உம்மோடொக்கமுடிசூடுகைக்கு. தகுவார்-தகுதியாயிருப்பார். பலர்-"தேவ்யஸ்ஸஹஸ்ரம்" (தேவ்யஸ்ஸஹஸ்ரம்) என்னும்படி அநேகம்பேர். உளர்-உளர். நம்பி-பரிபூர்ணமானமேன்மையையுடைய வுனக்கு அவர்கள்திரளல்லவோ தகுவது. கழகம்-எங்கள்திரளில்வந்து. ஏறேல்-ஏறுதேகொள். உனக்கும்-பிறர்க்குத்தீமைசெய்கையே ப்ரக்ருதியானவுனக்கும். கன்மம்-இந்தச்செயல். இளைது-பால்யசூசகம்.

கழகம் - திரள். குழமணனென்று - ஆஶ்ரிதருடைய லீலாபரிகரமு மவனுக் கபிமதமென்று சூசிப்பிக்கிறது ......................................................*

## ௬ - ஆ று ம் பா ட் டு.

தங்களகவாயிலோடுகிறது தெரியாமல் மறைத்துக்கொண்டு அநபிபவநீயைகளாயிருக்கிற விப்பிராட்டியையுந் தோழிமாரையுங்கண்டு; அவன், தன்முகமுத்ரைகளாலும், பாவகர்ப்பமான வுக்திகளாலும், அத்தை யநுவதித்தாப்போலேயிருக்கிற விலாசசேஷ்டிதங்களாலுமாக இவர்களபிசந்தியைக்குலைத்து; இனியிவர்கள் நான் சொன்னவையெல்லாம் "வேண்டா" என்னமாட்டாதவர்களென்னும்படி வாய்மாளப்பண்ணி, அவ்வளவிலேசென்று இவளுடைய லீலோபகரணமான குழமணனை யெடுத்துக்கொண்டான்.

( குழகியெங்கள்குழமணன்கொண்டு ) என்கிறார்கள். குழகுகையாவது - யுவாக்களாயிருக்குமவர்கள், எதிர்த்தலை தங்களுக்கபவ்யமானால் அவர்களைச்சேரவிட்டுக்கொள்ளுகைக்காகப்பண்ணும் சேஷ்டிதங்களுக்குப்பேர். மேன்மையாலேயாகவுமாம், கீழ்மையாலேயாகவுமாம், ஏதேனுமாக விவ்வளவுகிட்டிநின்று அவர்கள் நினைவைக்குலைத்துக் குழமணனை யெடுத்துக்கொள்ளும்படியாகக் கைப்புகுந்தானிறே. ( எங்கள்குழமணன்கொண்டு ) அதுதான் நீயாரதென்றிருக்கிறாய், அதுநீநினைக்கிறவர்களதல்லகாண், அது எங்களது. உனக்கிதிலொருகார்யமில்லை. "' எங்களது ' என்றவாறே பொகட்டுப்போம்" என்றுசொன்னார்கள், அதுதானே யவனுக்குப்பற்றுகைக்குடலாயிற்று. " எங்களநுமதிவேண்டாவோவுனக்கு " என்ன, " எனக்கு நிவாரகருண்டோ, நான்செய்வது செய்யலாமித்தனையன்றோ " என்ன (கோயின்மைசெய்து கன்மமொன்றில்லை) நீசெய்கிறவடிக்கழிவாலுனக்கொரு பலமில்லை. கன்மமென்று- கர்மபலத்தை நினைக்கிறது. ஆராய்ச்சியில்லாதவிடத்தே செய்யுமவற்றைச்செய்யாதேகொள்ளாய். அவைசெய்தாலுமாமிறே யுனக்கொருப்ரயோஜநமுண்டாகில். கோயின்மைசெய்கையாகிறது - இவர்களிசைவின்றிக்கேயிருக்க இவர்கள் லீலோபகரணங்களை யெடுத்துக்கொள்வது, அவர்கள் வேண்டவேண்டக்கொடாதொழிவதாய் மிறுக்குப்பண்ணுகை. (கன்மமொன்றில்லை) நீபோகிறவிடத்துக்கிவை கொண்டுபோகவொண்ணாது, உனக்கிவைதான்வேண்டா, இனியெங்களுக்கோ? அநபிமதம், ஆனபின்பிச்செயலாலென்ன ப்ரயோஜநமுண்டு. இவைகொண்டுபோனால், தங்களதல்லாமையாலே அவர்கள்முகம் பாரார்களே; நீ ஆதரித்தவிஷயத்தினதல்லாமையாலே யுனக்குவேண்டா, எங்களிசைவோடேகொடுபோகாமையாலே யெங்களுக்கு ப்ரியமன்றே; ஆனபின்பு இத்தால்வருவதொரு பேறில்லைகாணென்றார்கள்.

"அதுகிடக்க, நான்முன்ன முங்களோடேககண்டன், எனக்கு மொருப்ரயோஜநமில்லை, இத்தை சாதநமாகக்கொண்டு சாதிக்கவேண்டுவதோரர்த்தங்கண்டுவைத்திலேன், இதுதானேயிறே யெனக்குப்ரயோஜநம், ப்ரயோஜநத்துக்கொரு ப்ரயோஜநமுண்டோ" என்றான்; அங்ஙனேயானவன்று அநவஸ்த்தைவரத்தொடங்குமிறே.(பழகியாமிருப்போம்) இப்பொய்களுக்குப் பழையோமல்லோமோ. எங்களுக்கன்றுகாணிவைசொல்லுவது, நீசொல்லும்பொய்யெல்லாம் "மெய்" என்றிருப்பார்க்குச்சொல்லாயென்றார்கள்.

அவனும் "இத்தலையையொழியவெனக்குச்செல்லாது" என்னுமிடந்தோற்றச் சிலக்ரியைகளைப்பண்ண (எம்பரமேயித்திருவருள்கள்) நீயெங்களளவல்லாதவபிநிவேசத்தைப்பண்ணி, குளப்படியிலே கடலை மடுத்தாப்போலே நீசெய்கிறவையெல்லா மெங்களால்பொறுக்கப்போமோ. நீசெய்கிறவையெல்லாம் பொறுக்கவல்லார்வேறே சிலவர்களென்றார்கள்.

"அவர்களார்" என்றான் (அழகியாரிவ்வுலகு மூன்றுக்கும்) [ த்ரைலோக்யராஜ்யம்ஸகலம்ஸீதாயாநாப்நுயாத்கலாம்] [ த்ரைலோக்யராஜ்யம்ஸகலம்ஸீதாயாநாப்நுயாத்கலாம் ] மூன்றுலோகத்தையும், அத்தோடே, விப்ரவசப்தவாச்யனானவன்றன்னையுங்கூட வொருதட்டாக்கினால், பிராட்டியுடைய வொருகலாமாத்ரத்துக் கிடைநிற்கமாட்டாது. "அவர்களெங்ஙனேயிருப்பர்கள்" என்றான் (தேவிமைதகுவார்) உனக்குப்பட்டங்கட்டப்போரும்படியாயிருப்பாரொன்ன. "ஆனால், எனக்குபேக்ஷிக்கைக்கும் சிலர்வேணுமே" என்றான் (பலருளர்) உனக்குப்பொகடுகைக்கும் விஷயமங்கேயுண்டென்கிறார்கள். ஒருத்தனுக்கொன்று ஸ்வபாவமானால், அதுவேறோரிடத்தேபோங்காட்டில் குலையாதிறே; அப்படியே, அங்குள்ளாரையும் பொகடுகை இவனுக்கு ஸ்வபாவமென்னுமிடந்தோற்றச்சொல்லுகிறாள். ஓரடிப்பாடரல்லீரோநீர், பரப்பரல்லீரோ, அவர்கள்பக்கலேறப்போமென்ன.

"ஆனால், அங்குப்போம்வழியும், போனார்செய்யும்படிகளுமெல்லாம் கேட்டுப்போகவேணுமே; இனித்தானந்தேவாஸிகளுக்கிறேயென்றுசொல்லுவது, 'பரிப்ரச்நேநஸேவயா' (பரிப்ரப்ஂநேநஸேவயா) என்றிறே கேட்பார்படி; ஆனபின்பு, நாலடிகிட்டநின்று கேட்கவேணும்" என்று திரளிலேவந்து புகுரப்புக்கான் (கழகமேறேல்நம்பி) அவர்கள் முன்னமானாராகிடுக, எறட்டுக்கொள்ளாத தெங்களுக்குப்பரமோ. நீர் முன்னமெங்களோலக்கத்தில் புகுராதேகொள்ளும். இவ்விடத்தே பட்டரருளிச்செய்வதொரு வார்த்தையுண்டு –" சமஸ்தகல்யாணகுணாத்மகனுய் உபயவிபூதியுக்தனுய் சர்வாதிகனுய் சர்வநியந்தாவாயிருக்கிற

சர்வேச்'வரன், நாலிடைப்பெண்களிருந்தவிடத்தே புக்கல்லது நிற்கமாட்டாத செல்லாமைவிளைய. அவர்கள் 'நீயிங்குப்புகுராதேகொள்' என்ன, விலங்கிட்டாப்போலே பேரவும் திரியவும்மாட்டாதே தடுமாறிநின்றான், என்கிற சௌசீல்யம் (தங்களையுமிவர்களையுமொழிய) ஆரறிந்து கொண்டாட வ்யாஸாதிகளெழுதியிட்டுவைத்துப்போனார்களோ'' என்றருளிச்செய்வர். "சர்வநியந்தாவானவன் சிலர்க்கு நியமிக்கலாம்படியெளியனானான்'' என்றால் "இதுமெய்" என்றுகைக்கொள்ளுவாரைக்கிடையாதிறே. சாஸ்த்ரங்களெல்லா மீமேஷிதவ்யவிபாகம்பண்ணி யொருங்க விடாநிற்க, அத்தலையித்தலையாகச்சொல்லுகிறதிறேயிது. [ சாதுகோட்டியுட்கொள்ளபபடுவார்] என்றுசொல்லுவது - வைஷ்ணவர்களுடைய திரளிலே யொருவன்வந்துபுகுந்தால் துர்மாநத்தாலே மலையிட்டமுக்கினாப்போலே யிருக்கையன்றிக்கே, நீரும்நீரும் கலந்தாப்போலே இவன் புகுந்தமைதெரியாதபடியிருந்து, அவர்களிடங்கொடுத்து, அவர்கள்பரிக்ரஹிக்கையிறே யொருவனுக்கு நன்மையாவது; இதிவர்களுக்கேயன்றியே, அவனுக்குமொத்திருக்கிறபடி, [ ஸஹாவிராமைஃபரிஷத்தஸ்ஸெந்ருஸுஷயாஸக்தமநாபூவஹ][ஸசாபிராமஃபரிஷத்கதப்ஶஶநைர்ப் புபூஷயாஸக்தமநாபபூவஹ ] பெருமதிப்பராய்ப் பாட்டறிந்துகொண்டாடுகைக்குப்போரும்படி பேரறிவாளரான வித்வஜ்ஜநங்களுந் தாமுமாகப் பேரோலக்கமிருந்து பிள்ளைகளைப்பாடவிட்டுத் தாம் ஸிம்ஹாஸநஸ்தராயிருந்தார்; இவர்கள் தாழவிருக்கத் தாமுயரவிருந்தவிடம் தமக்கநபிமதமாகையாலே ஸிம்ஹாஸநத்தினின்றும் மெள்ளவிழிந்து, தெரியாதபடி யிவர்கள்நடுவேபுகுந்திருந்தார். அதுவென்னென்னில்; ராஜாவெழுந்திருந்தா லோலக்கம் கிளம்புமிறே; தாமெழுந்திருந்தவாறே ஓலக்கம் கிளம்புகிறதாகக்கருதி, மெள்ளப்புகுந்திருந்தாரென்கிறது. இங்நன்வேண்டுவானென்னென்னில்; அநுபுபூஷயா என்னுதல், பவிதுமிச்சயா என்னுதல் - இவர்களோடேகூடியிருந்தநுபவிக்கைக்காகவென்னுதல், தாமுளராகைக்காகவென்னுதல். ( நம்பி ) உமக்கு மெங்களுக்குமுள்ள நெடுவாசிபாரீர், உமக்கொன்று கேட்கவேண்டும்படியாயிருந்ததோ. முதலிகளாயிருக்கிற வுமக்கு நாங்களிருக்கிறவிடத்தே புகுருகைபோருமோ என்றார்கள்.

" அழகிது, நான்முதலியாகிலு மாகிறேன், பயலியாகிலுமாகிறேன்; என்னைத்தானறிகையில்லையோ, *'தீமைசெய்யும்சிரீதரன்' என்றன்றோ என்னைச்சொல்லுவது; ஆனபின்பு, நாலுபெண்களிருந்தவிடமெங்கும் தீம்புசெய்கையெனக்கு ஸ்வரூபமன்றோ'' என்றான் (உனக்கு மிளைதேகன்மமே) தீம்புசெய்கையிலே சமைந்திருக்கிற வுனக்குங்கூட விதுபாஷம், தீமைசெய்வார்க்குமொரு ப்ராப்திவேண்டாவோ... ...*

## ஜீயர் அரும்பதம்.

ஆரும்பாட்டு (குழகியித்யாதி) "குழகியெங்கள் குழமணன்கொண்டு" என்கிறபதத்திலே நோக்காகவவதாரிகை (தங்களகவாயிலித்யாதி) "குழகியென்றது க்குபாவம் (தன்முகேத்யாதி) அத்தை-அந்தபாவத்தை. அறுவதிக்கை-ரூசிப்பிக்கை. சொன்னவையெல்லாமென்றது - செய்தவையெல்லாமென்றபடி. வாய்மாளப்பண்ணியென்றது - ஈடுபடுத்தியென்றபடி.

"குழகி" என்றால் - (முகமுத்ரைகளாலும்) என்றுதொடங்கிச்சொன்னவிவையெல்லாங்காட்டுமோவென்ன (குழகுகையாவதித்யாதி) "குழகி" என்கிறவிது-சாமாந்யசப்தமாகையாலே, கீழ்ச்சொன்னவற்றையெல்லாம் காட்டுமென்றுகருத்து. "கோயின்மைசெய்து" என்கிறபதத்தாலே - மேன்மைதோற்றியிருக்க, முகமுத்ரைதொடக்கமானவற்றால் குழமணன்கொள்ளுகிறபடி யெங்ஙனேயென்ன (மேன்மையாலேயித்யாதி) குழமணன் - மரப்பாச்சி. "எங்கள்" என்றவநந்தரம் "கொண்டு" என்கிறபதத்துக்குவாஸனை (எங்களதென்றவாறேயித்யாதி)

கோயின்மையாவது - நியாமகர்கிழட்ங்காத வாகாரமாகையாலே (நீசெய்கிறவடிக்கழிவால்) என்கிறார்கள். அடிக்கழிவு-அடைவுகேடு. கோயின்மைசெய்து-மேன்மைபாவித்தித்யர்த்தஃ. குழகி-வசீகரணவ்யாபாரங்களைப்பண்ணி யென்றுசப்தார்த்தம். கன்மம்-கர்மம். "கன்மம்" என்றால்-பலத்தைக்காட்டுமோவென்ன (கன்மமென்றித்யாதி) "கோயின்மைசெய்து" என்றபதத்துக்கர்த்தம் (ஆராய்ச்சியித்யாதி) ஆராய்ச்சியில்லாதவிடத்தேயென்றது- அராஜகதேசத்திலேயென்றபடி. "கன்மமொன்றில்லை" என்றதுக்கர்த்தம் (அவைசெய்தாலுமித்யாதி) "கோயின்மைசெய்து" என்றிவர்கள்சொல்லுகைக் கவன்செய்தகோயின்மையேதென்ன (கோயின்மைசெய்கையாகிறதித்யாதி) "ஒன்று" என்றதுக்குபாவம் (நீபோகிறவிடத்துக்கித்யாதி) அடைவே கீழ்வாக்யவிவரணம் (இவைகொண்டுபோனாலித்யாதி)

மேலிற்பதத்துக்கவதாரிகை (அதுகிடக்கவித்யாதி) அதுகிடக்கவென்றது-எனக்குங்கள்பக்கல் ஸ்நேஹமில்லையென்றதுகிடக்கவென்றபடி. அங்ஙனேயானவன்று - ப்ரயோஜநத்துக்குப்ரயோஜநம் கல்பிக்குமன்று. அவஸ்த்தையாவது - அதுக்கும் ப்ரயோஜநம், அதுக்கும்ப்ரயோஜநமாகை. "பழகியாமிருப்போம்" என்றதுக்கு ஹார்த்தபாவம் (எங்களுக்கன்றுகாணித்யாதி)

"எம்" என்றத்யாஹரித்து (எம்பரமே) என்கிறார்.

"அழகியாரிவ்வுலகுமூன்றுக்கும்" - உலகுமூன்றும் விலையாகப்போரும்படி யழகியாரொன்றுவிவக்ஷித்து, அதுக்குப்ரமாணம் (த்ரைலோக்யராஜ்யமித்யாதி) "ராஜ்யம்வா த்ரிஷு லோகேஷு ஸீதா வா ஜநகாத்மஜா । த்ரைலோக்ய ராஜ்யம் ஸகலம் ஸீதாயா நாப்நுயாத் கலாம்" (ராஜ்யம்வாத்ரிஷுலோகேஷு ஸீதாவாஜநகாத்மஜா । த்ரைலோக்யராஜ்யம்ஸகலம்ஸீதாயாநாப்நுயாத்கலாம்) இதிஸுந்தரகாண்டே.* சகலசப்தத்துக்கர்த்தம் (விஸ்வரூபத்வாச்யஞானவித்யாதி) கலாமாத்ரத்துக்கென்றது - அழகிலே கலாமாத்ரத்துக்கென்றபடி. அவர்களெங்ஙனேயிருப்பர்களென்றது - அவர்கள்நமக்கு பேக்ஷாவிஷயமாயிருப்பர்களோ? ஆதரவிஷயமாயிருப்பர்களோ? வென்றபடி. தேவிமை-தேவியாகைக்கும். ஆனாலென்றது - அவர்களெனக்காதரவிஷயமானாலென்றபடி. உபேக்ஷிக்கிறதுக்குத் தாங்களேவிஷயமித்தனையொழிய, அங்குள்ளாரை யிவன்பொகடுமோவென்ன (ஒருத்தனுக்

இத்யாதி) "அழகியார்" இத்யாதிக்கு-இவ்வுலகம்மூன்றும் விலையாம்படியானவழகையுடையராய், தேவியாகைக்கும் தகுதியாயிருப்பாரநேகம்பேருளரென்று சப்தார்த்தம். தேவியாகைக்கும் - பட்டமஹிஷியாகைக்கும். "மூன்றுக்கும்" என்றது - மூன்றுமென்றபடி. "அழகையுடையராய், இந்தலோகத்ரயத்துக்குமொக்க முடிசூடுகைக்குத் தகுதியாயிருப்பாரநேகம்பேருளர்" என்று இருந்தபடியேயுரையில் சப்தார்த்தம். "பலர்" என்றதுக்குபலிதம் (ஓரடிப்பாடரித்யாதி) அதாவது-உபேக்ஷாவிஷயமுமுண்டென்றபடி. ஓரடிப்பாடர்-சங்குசிதர்.

தூரவிருந்துகேட்கவொண்ணாதோவென்ன (இனித்தானித்யாதி) அந்தேவாசியானால் கிட்டவரவேணுமோவென்ன (பரிப்ரஶ்நேத்யாதி) "தத்வித்தி ப்ரணிபாதேந பரிப்ரஶ்நேந ஸேவயா । உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ்தத்த்வதர்ஶிந:" (தத்வித்திப்ரணிபாதேநபரிப்ரஶ்நேநஸேவயா । உபதேக்ஷ்யந்திதேஜ்ஞாநம்ஜ்ஞாநிநஸ்தத்த்வதர்ஶிந:) இதி பகவத்கீதாஸூ. ஏறிட்டுக்கொள்ளுவதெங்களுக்குப் பரமோவென்றது-இதுக்குமுன்பில்லாத வாசார்யத்வத்தை யேறிட்டுக்கொள்ளுகை யெங்களுக்குப் பரமோவென்னுதல்; போம்வழியும்பேரானால் செய்யும்படிகளும் சொல்லுமத்தை யேறிட்டுக்கொள்ளுகையெங்களுக்குப் பரமோவென்னுதல். இவர்கள் "கழகமேறேல்" என்றவாறே யவன்ஸ்தப்தனாய்நின்றபடியை யநுசந்தித்து பட்டரீடுபாடு (இவ்விடத்தேபட்டரித்யாதி) இது - ப்ராசங்கிகம். நாலிடைப்பெண்களென்றது - "ஆய்ச்சியோம்" என்றத்தைப்பற்ற. வ்யாஸாதிகளென்றது - க்ருஷ்ணவ்ருத்தாந்தத்திலே யீடுபட்டவர்களாகையாலே. ஆதிசப்தத்தாலே-ஆழ்வார்களைச்சொல்லுகிறது. "ஆரறிந்துகொண்டாட" என்பானென், கொண்டாடுவாரில்லையோவென்ன (சர்வநியந்தாவானவனித்யாதி) சாஸ்த்ரஞ்சொன்னால் "மெய்" என்றுகொள்ளலாமேயென்ன (சாஸ்த்ரங்களெல்லாமித்யாதி) ஒருங்கவிடுகையாவது - ஒருதலைப்படவிடுகை. அத்தலையித்தலையாகச்சொல்லுகிறதிறேயென்றது-நியந்த்ருநியாம்யபாவத்தைமாறுடி, அவனை நியாம்யனாயு மிவர்களை நியந்த்ரிகளாயும் சொல்லுகிறதிறேயென்றபடி. "கழகமேறேல்" என்கையாலே-ஸ்ரீவைஷ்ணவகோஷ்ட்யந்தர்ப்பாவம் சேஷபூதர்க்கேயன்றிக்கே சேஷியானவனுக்கு முத்தேஶ்யமென்கிறார் (சாதுகோட்டியித்யாதி) ஸ்ரீவைஷ்ணவர்கள் திரளிலேபுகுந்தாலவர்கள் ஸஹ்ருதயமாக பரிக்ரஹிக்கும்படியாவர்களித்யர்த்த:. பெரியாழ்வார்திருமொழி மூன்றாம்பத்து ஆறாந்திருமொழி சாற்றுப்பாட்டு, "குழலிருண்டு" இத்யாதி. "உட்கொள்ள" என்றதுக்குபாவம் (வைஷ்ணவர்களுடையவித்யாதி; தூர்மாநத்தாலே - வருகிறவனுடைய தூர்மாநத்தாலேயென்றபடி. அப்படியொத்திருக்குமோவென்ன (நசாபீத்யாதி) "ததஸ்து தௌ ராமவச:ப்ரசோதிதாவகாயதாம் மார்க்கவிதாநஸம்பதா । ஸசாபி ராம: பரிஷத்கத: ஶநைர்புபூஷயாஸக்தமநா பபூவ ஹ" (ததஸ்துதௌராமவச:ப்ரசோதிதாவகாயதாம்மார்க்கவிதாநஸம்பதா । ஸசாபிராம:பரிஷத்கதஶ்ஶநைர்ப்புபூஷயாஸக்தமநாபபூவஹ) இதிபாலகாண்டே. "ஶநை:" (ஶநை:) என்றதுக்கர்த்தம் (தெரியாதபடியென்று) அதுவென்னென்னிலென்றது - ஸிம்ஹாஸநத்திலிருந்தவர்க்கிங்ஙன்வேண்டுவானென்னென்னிலென்றபடி. இங்ஙன்வேண்டுவானென்னென்னிலென்றது - மெள்ளவாகிலுமிவர்கள் நடுவே புகுரவேண்டுவானென், சிம்ஹாஸநத்திலேதானேயிருந்துவிடவொண்ணாதோவென்றபடி. (அநுபுபூஷயா) என்றுபசர்க்கத்தைக்கூட்டினது- "யாதஸ்ஸ்ரீ நஸ்ஸோபஸர்கஜவாந்" (தாதுலீநமுபஸர்க்கஜவார்த்தம்) என்கிற

ந்யாயத்தைப்பற்ற. உக்தார்த்த ...யவிவரணம் (இவர்களோடேயித்யாதிவாக்யத்வயம்) தாமுளராகைக்காகவெ... து - "ஸு-ஞு ஸ-தாயாழ்" (பூஸத்தாயாம்) என்கிறதாதுவைப்பற்ற. ...தாத்பர்யாந்தரம் (முதலிகளாயித்யாதி) பயலி-பாலிசன்.

பாலிசமாவானென்னென்ன (தீமைசெய்வார்க்குமித்யாதி) பாலிசம் - சப்பளை. கன்மம்-கர்மம். இந்தக்கார்யமென்றபடி. (தீமைசெய்யும்சிரீதரன்) தீம்புசெய்யும் ப்ரீதரனித்யர்த்த:. நாய்ச்சியார்திருமொழி இரண்டாந்திருமொழி முதற்பாட்டு, "நாமமாயிரம்" இத்யாதி.

"கழகம்-திரள். இளை - பால்யசூசகம்" என்றுரையிலர்த்தம்...............*

---

## ஏழாம்பாட்டு.

கன்மமன்றெங்கள்கையிற்பாவைபறிப்பதுகடன்ஞாலமுண்டிட்ட
நின்மலாநெடியாயுனக்கேலும்பிழைபிழையே
வன்மமேசொல்லியெம்மைநீவிளையாடுதியதுகேட்கிலென்னைமார்
தன்மபாவமென்னறொருநான்றுதடிபிணக்கே.

### ஆறுயிரப்படி.

(கன்மமன்று) இப்படியவன் நிவார்யமாணனாயிருக்கச்செய்தேயுமிவளுடைய பரிஷத்திலேயேறி யிவளுடைய கையிற்பாவையைப்பறித்தருள; எங்கள்கையிற்பாவை பறிப்பதுனக் கவத்யாவஹமாம்; அநந்யப்ரயோஜநனாய்க்கொண்டு சர்வாத்மாக்களையும் வயிற்றிலேவைத்தது மஹாகுணத்தைவிளைத்தாற்போலே, இத்தீமையுமுனக்கு மஹாவத்யத்தைவிளைக்குமென்றிவள்சொல்ல; அதின்மேலே பணிமொழிகளை யிவனருளிச்செய்ய, இங்ஙனே யதிதுஸ்ஸஹமான வார்த்தைகளையேசொல்லி எம்மைநீ விளையாடுதி, அதுகேட்கி லென்னைமார் இதுகூடும்கூடாது என்றுபாராதே யுன்னையுபேக்ஷித்தொருநாளும் கடாக்ஷிப்பதும் செய்யாரொன்கிறாள்.........................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ப்ர...பாஜநநிரபேக்ஷமாக சர்வலோகத்தையும் ரக்ஷிக்கும்பெருமையையுடையவுனக்கு, எங்களைஸ்பர்சித்துக் கையில்பாவையைப்பறிக்கிற விதுகார்யமன்றென்கிறாள்.

எங்கள்-எங்கள். கையில்-கையிலிருக்கிற. பாவை - பாவையை. பறிப்பது-தீண்டிப்பறிப்பது. கன்மம்-காரியம். அன்று-அன்று. கடல் - ப்ரளயார்ணவத்திலேயமூழ்குகிற. ஞாலம்-ஜகத்தை. உண்டிட்ட-அமுதுசெய்து வயிற்றிலேவைத்துரக்ஷித்த. நின்மலா - அதுதானே ப்ரயோஜநமாம்படியான ஔஜ்ஜ்வல்யத்தையுடையையாய். நெடியாய் - "இன்னமும்செய்ததுபோராது" என்று அவற்றை வெள்ளிநாடுகாட்டி ரக்ஷிக்கும் பெருமையையுடையவனே. உனக்கும்-இப்படிப்பட்டவுனக்கும்.

பிழை-இப்படி அபலைகளாயிருப்பாரைத்திண்டிப்பறித்தாயென்கிறபிழை. பிழையே-அவத்யமாயேவிடும். நீ-இப்படிபெரியையாயிருக்கிறநீ. வன்மம் - "நானுங்களைஸ்பர்சிக்கலாமோ, அன்றானைநினைத்திருந்திகோள்" என்று பூர்வஸம்ச்லேஷஸ்மரணத்தைப்பண்ணுவித்து, எங்களுக்குநினைக்கவும் சொல்லவுமொண்ணாதமர்மங்களை. எம்மை-எங்களைநோக்கி. சொல்லி-சொல்லி. விளையாடுதி-லீலைகொண்டாடாநின்றாய். என்னைமார்-எங்களுடையவாணுடன்பிறந்தார். அது-அது. கேட்கில் - கேட்பராகில். தன்மபாவம்-தர்மமும்பாபமுமென்று. என்னார்-நிரூபியார்கள். ஒருநான்று-ஒருநாள்வரையிலேவந்து. தடி-தடியையெடுத்து. பிணக்கு-பிணங்கும்படி. ஆம்-ஆம்.

என்னைமார் - ஆணுடன்பிறந்தார். என்னைமாரென்கிறது - ஸஹஜமான துர்மாநதம்பமதாதிகள் பகவத்விரோதிகளென்று சூசிப்பிக்கிறது. பாவையென்கிறது-ஆச்ரிதவிஷயத்தில் பரதந்த்ரமான அசித்வஸ்துவு மீச்வரனுக்குத்தேச்யமென்று சூசிப்பிக்கிறது..........*

## ஈடு - ஏழாம்பாட்டு.

ஸர்வோபாயங்களையுமநுஷ்டித்து ஸ்ரீபரதாழ்வான் தன்பக்கல் பட்டதெல்லாம் தானிவர்கள்பக்கலிலேபட்டான். [ விநிவர்த்தயிதும்பலாத் ] [விநிவர்த்தயிதும்பலாத்] என்று மீட்கையிலேபோர வருந்தினானிறே. [ சேஷ்யே புரஸ்தாச்சாலாயாம் யாவந்மே ந ப்ரஸீததி ] [சேஷ்யேபுரஸ்தாச்சாலாயாயாவந்மேநப்ரஸீததி] தாமேயிரங்கி மீளும்படிபண்ணுகிறேன்; அதுதான் கேட்டார்வாய்க்கேட்கவேணுமோ, புரஸ்தாத் என்றானிறே. அப்படியே யிவனும் ஸர்வோபாயங்களையும் ப்ரவர்த்திப்பித்தவிடத்திலு மனுகவொண்ணாதபடி கடுமைதோற்றவிருந்தார்கள்; "இனிச்செய்யலாவதென்" என்றுபார்த்தான்; "பலத்தாலே கார்யங்கொள்ளுவோம்" என்றுநிச்சயித்து, இவர்கள்பாவையை யெடுப்பானாகக்கணிசித்தான்; "ப்ரேக்ஷிதஜ்ஞாஸ்து கோஸலா:" (ப்ரேக்ஷிதஜ்ஞாஸ்துகோஸலா:) என்று நினைவறியுமவர்களாகையாலே, எல்லாருங்கூடவைத்த பாவையைச்சென்றெடுத்துக்கொண்டார்கள்; அதுதான் "நங்கார்யம்" என்றேயிருந்தான். "ப்ருதக்ப்ரயத்நாபேக்ஷிதமின்றிக்கே பொழியப்பெற்றோம்" என்றுபார்த்தான். திருக்குரவைபோலே ஆளுக்காளாய்நின்று கைப்பிடிக்கவேண்டாவாயிருந்தது, "நல்லவாய்ப்பு" என்று இவர்கள் பாவையைச்சென்றுபற்றினான்.

(கன்மமன்று) வாராய், உனக்கிதுகார்யமன்று கிடாயென்றார்கள். "ஏன்றான், இதுகார்யமன்றிக்கே யொழிவானென்" என்றான் (எங்கள்கையிற்பாவைபறிப்பது) இதுதானாரதென்றிருக்கிறாய், நீநினைக்கிறவர்களதன்றுகாண், இதெங்களதுகாண், என்றார்கள். "அதுதான்மெய்யே" என்றான்; * யஸ்யைதே தஸ்ய தத்தநமிறே. (இவர்கள் ஸ்வரூபஜ்ஞராகையாலே யிவனுடையவர்களிறே.) இவர்கள் "எங்களது" என்கையிறேயவன்விருப்பத்துக்கடி. "இவர்களது" என்றுமிட மறுதியிட்டுக் கொள்ளுகையிலேயிறே யவனுக்குத் தாத்பர்யம; நீநினைக்கிறவர்களதன்

றென்கையிறே யிவர்களுக்குத்தாத்பர்யம். (எங்கள்கையில் பாவைபறிப்பது இவர்கள்கையிலே பாதிகொடுத்துப்போலேகாணும்பறிப்பது. அவர்கள்விட்டுக்கடக்க நிற்குமதி லொருப்ரயோஜநமில்லையே; அத்தையவர்களொரு தலைப்பற்றத்தானு மொருதலைப்பற்றுமன்றிறே யொருகலத்திலே யுண்பாரைப்போலே போகமாயிருப்பது. (கையில்பாவைபறிப்பது) கிடக்கிறதெல்லாங்கிடக்க, எங்கள்கையிற்பாவைபறிப்பது கன்மமன்று. செய்யக்கடவதல்லாதத்தைச் செய்யாநின்றாய். உனக்கித்தாலொரு ப்ரயோஜநமில்லைகாணென்றார்கள். ஆக, இத்தால்பலித்ததென்னென்னில்; ஒருவைஷ்ணவன் " என்னது " என்றபிமாநித்துக் கைப்பிடித்தாலவன் விரும்புவதென்றபடி.

" 'செய்யக்கடவதல்லாதத்தைச்செய்யாநின்றாய்' என்று நீங்கள் சொல்லுவானென், செய்யக்கடவதுக்கும் செய்யக்கடவதல்லாததுக்கும் வரம்புகட்டினேன் நானன்றோ " என்றான் (கடல்ஞாலமுண்டிட்ட) ப்ரளயாத்யாபத்திலே யிவற்றையெல்லாமெடுத்து வயிற்றிலேவைத்து நோக்கிற்றிலேனோ. இவர்களளவு மப்படியேயாகாதேதான். இவன்சென்று பறித்திலனாகி லழியுமளவாகாதே யவர்களது. அதவஸ்த்தாந்தரத்தை பஜித்தாகிலும் கிடக்குமிறே, இவர்களுக்கிவனையொழிந்தவன்று சத்தாநாசமிறேயுள்ளது. " ஆபத்ரக்ஷகனன்றோநான் ; ஆனபின்பு, நான் செய்யுமவையெல்லாம் ப்ரயோஜநநிரபேக்ஷமாயன்றோ விருப்பது, ஆகையிறு லெனக்கிதுதானேயிறேப்ரயோஜநம்; ப்ரயோஜநத்துக்கு ப்ரயோஜநம் வருமன்று அநவஸ்த்தையாமிறே, இத்தை சாதநமாக நினைத்திருக்கிலிறே நான் வேறேயொன்றை ப்ரயோஜநமாக சாதித்துக்கொள்வது " என்றான்; நீ யிங்ஙன்சொல்லுமது வார்த்தையன்றுகாண்; எங்களிசைவின்றிக்கேயிருக்க, நீபலத்தாலேபறிக்கிறவிதுக்கு "ஆபத்ரக்ஷகன்" என்றுசொல்லுகிறவிது நிதர்ஶநமாகமாட்டாதுகாண்; ஆனபின்பு, உனக்கு குணஹாநியேகாண் மேற்படுவதென்றார்கள். (நின்மலாநெடியாய்) " பஹுகுணனை வெனக்கொருதோஷம்கிடக்குங்காட்டிலதுதெரியாநின்றதோ " என்றான் ( நின்மலாநெடியாய் ) நிர்மலனான சந்த்ரனுக்குமன்றோ மறுக்கிடக்கிறது; ஆனபின்பு, குணம்ப்ரகாசிக்குமிடமெங்கும் குணஹாநியும் ப்ரகாசிக்குங்காண். ஹேயப்ரத்யநீகனா யபரிச்சேத்யமஹாகுணனானவனே. (உனக்கேலும்பிழைபிழையே) அபரிச்சேத்யமான குணங்களையுடையையாயிருந்தாயேயாகிலும், குணஹாநி குணஹாநியாயேகிடக்குங்காண்.

இவர்களிப்படிசொன்னவாறே, இதுக்கொரு மறுமாற்றங்காணாமையாலே, பிறர்க்குப்பாசுரமிட்டுச் சொல்லவொண்ணாதபடி இவர்கள் செவியிலே சிலவற்றைச்சொல்லப்புக்கான் (வன்மமேசொல்லி) என்கிறார்கள். தங்கள்நெஞ்சு மவன்நெஞ்சு மறியுமத்தனை, வாசாவ்யவஹாரிக்

கவொண்ணுது. (ப்ரணயவேளையில்பணிமொழிகள்.) (எம்மைநீவிளையாடுதி) நீமர்மம்சொல்லும்போது, சொல்லுகிறவுன்னையும் கேட்கிறவெங்களையுமறிந்தன்ரோசொல்லுவது. ("இவன்சொன்னமர்மமேது" என்று எம்பாரைச்சிலர்கேட்க, *"மயர்வறமதிநலமருளப்பெற்றவர் பாசுரமிடமாட்டாமல் 'வன்மம்' என்னுநின்ருர், என்னைப்பாசுரமிடச்சொல்லுகிறிகோளோ" என்றருளிச்செய்தார்.) (விளையாடுதி) அவன்தன்னையழியமாறி ஒருமர்மம்சொன்னுனுன், இவர்களத்தையெல்லாம் விளையாட்டாக்குகிருர்கள்; நெஞ்சிலில்லாதவை சொல்லுகிறவத்தாலுனக்கென்ன ப்ரயோஜநமுண்டென்கிருர்கள்.

திரியவும் சிலவற்றைச்சொல்லப்புக்கான் (அதுகேட்கிலென்னைமார்) சொல்லுகிறவையெல்லா மெங்கள்பந்துக்கள் கேட்பர்களாகில் சாலத்தப்பாய்விடுங்கிடாய். என்னைமார் — ஆணுடன்பிறந்தார். (தன்மபாவமென்னுர்) உன்பக்கலெங்களுக்கு பாவபந்தமில்லை என்னுமிடமறிந்தார்கள் நீமேல்விழுகிறத்தைக்கண்டு; இதுசெய்யலாம், இதுசெய்யவொண்ணுது என்றுபாராதே நலிவர்கள்கிடாய். "ஆனுலென், அவர்களதறியாநின்ருர்களோ; அவர்களிங்கில்லையே" என்ருன் (ஒருநான்று) அதுவோ!; முதலிலேதவிரிலறியாதொழியுமத்தனைபோக்கி, எல்லாம்செய்தாலு முண்டானுலொருநாள்வாயிலே யறிவர்கள்காண்.

"அழகிது, அறிந்தால்தான் வருவதென்" என்ருன் (தடிபிணக்கே) பின்னைக்குத்தும் பூசலுமாயன்ரோ தலைக்கட்டுவது. ராமாவதாரத்தில் சர்வவ்யாபாரங்களும் விற்கொண்டே வ்யாபரிக்குமாபோலே, க்ருஷ்ணவதாரத்திலே தடிகொண்டே கார்யங்கொள்ளுமத்தனை .........*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (கனமித்யாதி) "கன்மமன்றெங்கள்கையில் பாவைபறிப்பது" என்றதிலேநோக்காகவவதாரிகை (சர்வேத்யாதி) சர்வோபாயங்களையுமென்றது - தாய்மாரையிட்டும், வசிஷ்டாதிகளையிட்டும் சொல்லிவைக்கை தொடக்கமானவற்றை. (ஸ்ரீபரதாழ்வான் - பட்டதெல்லாம்) என்றதுக்குப்ரமாணம் (விநிவர்த்தயிதுமித்யாதி) ப்ரமாணந்தரம் (சேஷ்டிஇத்யாதி) "[illegible]" (ஸர்வோபாயந்துவர்த்திஷ்யேவிநிவர்த்தயிதும்பலாத் । ஸமக்ஷமார்யமிஸ்ராணும் ஸாதூநாம்குணவர்த்திநாம்) "[illegible]" (அநாஹாரோநிராலோகோதநஹீநோயதாத்விஜ:। ஶேஷ்யேபுரஸ்தாச்சாலாயாயாவந்மேநப்ரஸீததி) இத்யயோத்யாகாண்டே. இதுக்குபாவம் (தாமேயிரங்கியித்யாதி) கணிசிக்கை-உபக்ரமிக்கை. அவன்கணிசித்தபடியை யிவர்களறிந்தபடியெங்ஙனேயென்ன (ப்ரேக்ஷிதஜ்ஞாஇத்யாதி) "[illegible]"

நாஃக்ஷிணாவயமா: ” (இங்கிதஜ்ஞாஸ்துமகதாஃப்ரோக்ஷிதஜ்ஞாஸ்துகோஸலா:। அர்த்தோக்தா:குருபாஞ்சாலாஸ்ஸர்வோக்தாதக்ஷிணபதா:) “எங்கள்” என்று - பஹுவசநமாய், “பாவை” என்று - ஏகவசநமாயிருக்கையாலே (எல்லாருங்கூட வைத்தபாவையையித்யாதி) கார்யமானபடியெங்ஙனேயென்ன (ப்ருதக்ப்ரயத்நேத்யாதி) அபேக்ஷிதமென்றது - அபேக்ஷையென்றபடி. விவரணம் (திருக்குரவையித்யாதி)

மெய்யானால் தனக்குப்ரயோஜநமேதென்ன (யஸ்யைதஇத்யாதி) ஆகையாலே (இவர்களதெனனுமிடம்) என்று கூட்டிக்கொள்வது. இவர்கள் “எங்களது” என்றதுக்குபாவமேதென்ன (நீநினைக்கிறவித்யாதி) “எங்கள்” என்றபஹுவசனத்துக்கும், “பாவை” என்ற வேகவசனத்துக்கும், “பறிப்பது” என்கிறவர்த்தமானத்துக்கும் பலிதார்த்தம் இவர்கள்கையிலேயித்யாதி) இவன்சக்தனன்றே, பாதி கொடுக்கிறதென்னென்ன (அவர்கள்விட்டித்யாதி) விவரணம் (அத்தையவர்களித்யாதி “கையில்” என்றதுக்குபாவம் (கிடக்கிறதெல்லாமித்யாதி) “வாராயுனக்கு” இத்யாதிவாக்யத்திலே, “கன்மம்” என்று - கார்யமாகவிவக்ஷித்தருளிச்செய்து, கர்மபலத்தை விவக்ஷித்தருளிச்செய்கிறார் (செய்யக்கடவதல்லாதத்தையித்யாதி) ஆகவித்தாலென்றது - “எங்களது” என்றதேஹேதுவாக வவன்மேல்விழுந்துவந்து பறிக்கிறவித்தாலென்றபடி. பலித்ததென்னென்னிலென்றது - ஸ்வாபதேசத்திலெந்தவர்த்தம் சொல்லிற்றாயிற்றென்னிலென்றபடி.

“கன்மமன்று” எனறதின் முந்தினவர்த்தத்துக்குச்சேர மேலிற்பதத்துக் கவதாரிகை (செய்யக்கடவதல்லாதத்தையித்யாதி) வரம்புகட்டுகையாவது-கடலாலேசூழப்பண்ணுகை. வரம்புகட்டினபடியைக்காட்டுகிறார் (ப்ரளயாத்யாபத்திலேயித்யாதி) நாயகியின் ஹார்த்தபாவத்தை வ்யாக்யாதாவருளிச்செய்கிறார் (இவர்களளவுமித்யாதி) விவரணம் (இவன்சென்றித்யாதி) இவர்களளவுமப்படியே யாகாதேதானென்றது - இவர்கள்தலையும் ஜகத்தின்படியன்றேவென்றபடி. பூமியோடு சாம்யமன்றிக்கே யாதிக்யமருளிச்செய்கிறார் (அதவஸ்த்தாந்தரத்தையித்யாதி) “கன்மம்” என்றதின் த்விதீயார்த்தத்துக்குச்சேர, “கடல்ஞாலமுண்டிட்ட” என்றதுக் கிரண்டாமவதாரிகை ஆபத்ரக்ஷகனன்றேவித்யாதி) இந்தவவதாரிகாத்வயத்துக்கும்சேர, “கடல்ஞாலமுண்டிட்ட” என்றதுக்குபாவம் (எங்களிசைவின்றிக்கேயித்யாதி) அதாவது - இசைவின்றிக்கே யிருக்கப்பறிக்கையாலே யுனக்கொருப்ரயோஜநமில்லையென்று த்விதீயஸங்கதிக்குபரிகாரம்; பலத்தாலே பறிக்கிறவிதுனக்கு கார்யமன்றென்று முந்தினசங்கதிக்குபரிஹாரம். “பிழைபிழையே” என்றத்தை - “கடல்ஞாலமுண்டிட்ட, நின்மலா, நெடியாய்” என்றபதத்ரயத்திலு மந்வயிப்பது. நின்மலா - ஹேயப்ரத்யநீகனானவனே. நெடியாய்-பெரியோனே. சமஸ்தகல்யாணகுணாத்மகனே. உனக்கேலும் பிழைபிழையே-இப்படிப்பட்டவுனக்கும் அபலைகளைத்தீண்டிப்பறிக்கிற விந்தத் தப்பவத்யமாயேவிடுமென்று சப்தார்த்தம்.

சிலவற்றையென்றது - ப்ரணயவேளையிற் பணிமொழிகளை. வன்மம்-மர்மம். அந்தவன்மமேதென்ன (தங்கள்நெஞ்சுமித்யாதி) அஸதஸ்யமென்றபடி. (சொல்லுகிறவுன்னையும்) இத்யாதிக்குக்கருத்து - உனக்குமெங்களுக்கு முறவுண்டானாலன்றோ ஹாஸ்யம்பண்ணலாவது, உறவில்லாதவிடத்திலே ஹாஸ்யம்பண்ணலாமோவென்று. விளையாட்டாக்குகைக்குஹேதுவேதென்ன(நெஞ்சிலில்லாதவையித்யாதி)

திரியவும் சிலவற்றையென்றது - பஞ்சலக்ஷங்குடியிற்பெண்களுமெனக்குறவன்றேவென்கை. என்னைமாவென்றது பந்துக்களுக்குமுபலக்ஷணம். “தன்ம

பாவமென்னூர் " என்றதுக்குபாவம் (உன்பக்கலிந்யாதி) பாவபந்தமென்றது - சம்ஶ்லேஷமென்றபடி. சம்ஶ்லேஷமுண்டென்று நிரூபித்துச்செய்கை - தர்மம், நிரூபியாமல்செய்கை-பாபம். இரண்டும்பாராதே யடிப்பர்களென்றபடி.

தடியென், ஆயுதமில்லையோவென்ன (ராமாவதாரத்திலித்யாதி)

என்னைமார் - ஆணுடன்பிறந்தார். தமயன்மாரென்றபடி. தடிபிணக்கு - தடிச்சண்டை ...............................................................................................*

## எட்டாம்பாட்டு.

பிணக்கியாவையும்யாவரும்பிழையாமற் பேதித்தும்பேதியாததோர்
கணக்கில்கீர்த்திவெள்ளக்கதிர்ஞானமூர்த்தியினு [தோமை
யிணக்கியெம்மையெந்தோழிமார்விளையாடப்போதுமினென்னப்போந்
துணக்கிநீவளைத்தாலென்சொல்லாருகவாதவரே.

### ஆறாயிரப்படி.

( பிணக்கி ) " இப்படி யிவன் க்ருத்ரிமம்செய்து நம்மை யிங்கிருந்து விளையாடவொட்டானாகில், நாமிங்குநின்றும் போவோம் " என்று பார்த்துத் தன்றோழிமாரோடேகூடப் போகப்புக, " நான்போகவொட்டேன் " என்றிவன் தங்களை வளைத்தருள ; அறியாதே விளையாடப்போந்த வெங்களை உன்னுடைய நிரவதிக ஸௌந்தர்யத்தாலே விழுவித்துக்கொண்டு, சர்வேஶ்வரனான நீ வளைத்தால், உன்னை யுகவாதவருனக்கென்ன பழிசொல்லார் ; உனக்கெங்களோடே சம்ஶ்லேஷம் வ்ருத்தமென்றும் சொல்லுவரிறே, ஆனபின்பு இதீடல்லவென்று அவனை யுபாலம்பிக்கிறாள்................................................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், " இவன் ஸந்நிதியிலிருக்கிலன்றோ மர்மம் சொல்லுவது " என்று போகத்தேட, இவர்கள்போகிறவழியைக் கட்டித்தகைந்தவவனைநோக்கி ; " எல்லாமறிவீர்தேயறியீர் " என்று ஸர்வஜ்ஞனான நீ யெங்களைத் தகைந்தா லுகவாதாரென்சொல்லாரென்கிறாள்.

யாவரும் யாவையும் - சகல சேதநாசேதநங்களையும். பிணக்கி - ஸம்ஹ்ருதயவஸ்த்தையிலே நாமரூபவிபாகரஹிதமாம்படி கலசி. ஸ்ருஷ்டியில்வந்தவாறே, பிழையாமல் - அவ்வோசேதநருடைய கர்மங்களுக்கு ஸாங்கர்யம்பிறவாதபடி. பேதித்தும் - தேவதிர்யகாதிபேதத்தைப் பண்ணினவிடத்தும். பேதியாதது-தத்கததோஷத்தால் ஸ்வரூபத்துக்கு பேதம்வாராதபடி. ஓர் - அத்விதீயமாய். கணக்கில்- அபரிச்சிந்நமான. கீர்த்திவெள்ளம் - கீர்த்திசமுத்ரத்தையுடைத்தாயிருக்கிற. கதிர்-ப்ரபாரூபமான. ஞாநம் - ஸங்கல்பரூபஜ்ஞாநத்தை. மூர்த்தியினாய் - வடிவாகவுடையவனே. எம் - ஸஜாதீயைகளாய் ஸமாநதுக்கைகளான, தோழிமார் - தோழிமார்.

எம்மைப்பிணக்கி - நாங்களிசையும்படி வார்த்தைசொல்லி. விளையாட - விளையாட. போதுமின் - போங்கோள். என்ன - என்று லீலையைவ்யாஜமாகச்சொன்னபடியாலே. போந்தோமை - நீயிங்குநிற்ப தறியாதே லீலாபராகளாய் வந்த வெங்களை. உணக்கி - உண்ணவுமொட்டாதே யுணங்கும்படிபண்ணி. நீ, வளைத்தால் - தகைந்தால். இச்செய்திகண்டு, உகவாதவர் - உகக்கமாட்டாத நாட்டார். என் - என்ன. சொல்லார் - சொல்லார்.

உகவாதவர் - உன்னுடைய மின்னிடைமடவாரொன்றுமாம். இங்கு, இணக்கியெந்தோழிமாரொன்றது ஸாஜாத்யத்தாலே கலந்து லீலாரஸ வ்யபதேசத்தாலே பகவத்விஷயத்திலே மூட்டும் பாகவதவிஷயத்தை ஸூசிப்பிக்கிறது..........*

## ஈடு - எட்டாம்பாட்டு.

கிட்டிநின்று இவர்களைச் சிலமிறுக்குக்களைப் பண்ணப்புக்கான், "இங்கேயிருக்கிலன்றோ விதெல்லாம் வேண்டுவது" என்றுபார்த்து, ஒருவரொருவராகப்போகப்புக்கார்கள்; "இதுவோ! பார்த்தபடி" என்றுவழியைப்பற்றி யிருவிலங்காகக்கிடந்தான், உத்யாநமாகையாலே வழியோரடிப்பாடாயிருக்குமிறே. இப்பாட்டை ஜீயரருளிச்செய்யாநிற்கச்செய்தே ஆப்பானிருந்தவர் "இவர்களிவ்வளைக்கடந்துபோனார்களாகிற் செய்வதென்" என்றுகேட்க, "அதார்காரியம், 'பின்னையிரண்டத்தொன்றுசித்திக்கும்' என்றன்றோ அவன்றான்கிடந்தது" என்றருளிச்செய்தார். (நின்றார்களாகில் நினைத்தது பெற்றானாகிறான், கடந்துபோனார்களாகில் சம்ஶ்லேஷார்த்தமான க்ருஷிதலைக்கட்டிற்றாகிறது.)

நீவழியைப்பற்றிக்கிடவாநின்றாய், நீசெய்கிறவையெல்லா முறவுண்டாய்ச்செய்கிறாயென்றிருப்பர்கள்கிடாய்; நீசர்வவிஷயமாகப்பண்ணும் லீலைக்கோரளவுண்டோ, உன்னையொழிந்தவஸ்துக்களெல்லாவற்றுக்கும் கோடிவிகாரத்தைப்பண்ணி, அவிக்ருதனாயிருப்பானொருவனிறே; அப்படியே யெங்களை விக்ருதராகப்பண்ணி நீ அவிக்ருதனாயிராநின்றாய் (யாவையும்யாவரும்-பிணக்கி) தன்பக்கல்பொருந்துகைக்கு நினைவில்லாதவற்றையும், நினைவாலே பொருந்ாதவற்றையுங்கூட்டி, "தமஃபரெ தேவஏகீபவதி"(தமஃபரோதேவஏகீபவதி) என்று தன்னோடவிபக்தமாம்படிகலசி. (பிழையாமல் பேதித்தும்) தப்பாமல் பிரித்தும். வயிற்றிலே வைத்துப்புறப்படவிடுதல், ஸம்ஹரித்துப்புறப்படவிடுதல். ஓரோக்ஷேபங்களிலேயமர்ந்தநிலங்களிலேகுடிவாங்கிப்பின்புதெளிந்தவாறேஸ்வஸ்த்தாநங்களிலேபுகுந்து, விட்டகார்யங்களிலே அதிகரிப்பாரைப்போலே. ஒருத்தன்பண்ணினகர்மம் வேறொருத்தன்சென்று புஜியாதபடிதன்பக்கலினின்றும் பிரித்தும். (பேதியாதத்தோர்கணக்கில் கீர்த்திவெள்ளக்கதிர் ஞானமூர்த்தியினாய்)கார்யாவஸ்த்தமானதுவே காரணாவஸ்த்தமானாலும், அசித்கதமான ஸூக்ஷ்மபரிணாமம், சேதநகதமான அஜ்ஞாநம், ஸ்ருஷ்டிகாலத்தில் அசித்கதமான ஸ்வரூபாந்யதாபாவம், சேதநகதமான ஸ்வபா

வாங்யதாபாவம், ஆக விப்பேதங்க ளொன்று மின்றிக்கே ஏகரூபமாய், அத்விதியமாய், அநவதியான கீர்த்தி சமுத்ரத்தை யுடைத்தாய், ப்ரபா ரூபமான ஸங்கல்பரூபஜ்ஞாநத்துக் காஸ்ரயமானவனே. *எல்லாப்பொருள்களுக்கும் வித்தாய் முதலிற்சிதையாத மனஞ்செய்ஞானமிறே. இத்தால் – விப்லேஷதசையில் கலக்கமும், ஸம்ப்லேஷதசையில் போகரூபவிக்ருதியுமின்றிக்கே யேகரூபனென்கை. (கணக்கில் கீர்த்திவெள்ளம்) "இப்படிப்பட்ட குணங்களை அளவிடுவோம்" என்றுபார்த்தாருண்டாகில் இளைத்துக் கால்வாங்கும்படி யிருக்கை. (கதிர்ஞானமூர்த்தியினாய்) இப்படி கூட்டுவன கூட்டிப்பிரிப்பன பிரித்தாலும், ஜ்ஞாநத்துக் கொரு குறைவற்றிருக்கை. (கதிர்ஞானமூர்த்தியினாய்!) கார்யங்கொண்டதென்று, மழுங்காதிருக்கை, கார்யங்கொள்ளக் கொள்ளப் புகர்த்துவருகை. (கதிர்ஞானமூர்த்தியினாய்) ஜ்ஞாநஸ்வரூபனாயுள்ளவனே. (இணக்கியித்யாதி) நீ செயகிறவற்றால் ப்ரயோஜந முள்ளது நீ யிருந்தவிடத்தே நினைத்துத் தேடிவந்தாருண்டாகிலன்றோ. (இணக்கி) இசையும்படி வார்த்தைசொல்லி "அவ்விடம் க்ருஷ்ணன் வாராதவிடம்" என்றுகிடீர் சொல்லிக்கொண்டுபோந்தது. (எம்மை) "உன்னோட்டைக்கலவியபாயம்" என்றறியாதவெங்களை. (எங்கோழிமார்) உன்னைவெறுக்கிறதென், உன்பக்கல் குற்றமுண்டோ, சேர்த் தாராலேவந்ததுகிடீர். பகவத்விஷயத்தில் வைலக்ஷண்யம் நெஞ்சிலேபட்டா லுபகாரகரைக்கொண்டாடுமென்னு மர்த்தமிறேயுள்ளோடுகிறது. [நித்யம் யதீய சரணௌ ஶரணம் மதீயம்] [நித்யம்யதீயசரணௌஶரணம்மதீயம்] என்று இங்கொடங்கோடுவாசியற அவர்களாலே வருமதிறே. (எங்தோழிமார்) ஸஜாதீயராயிறே சேர்ப்பது. (விளையாடப்போதுமினென்னப்போந்தோமை) அவர்களுனக்குப் பெருநிலைநிற்பதறியப்பெற்றிலோம். சொலவுக்குமே லகவாயாராயப்பெற்றிலோம். "நீயுண்டு" என்றறிந்தோமாகி லிவ்விட மென்று நினையோம், "அவர்களுனக்குப்பார்வை" என்னுமிடமறியப்பெற்றிலோம். "பொகடுங்கோள், ஆனாலென் - அவர்கள்சொல்லப்போந்திகோளாகிலுங்களுக்கு வந்தவநர்த்தமென்" என்றான் (உணக்கிநீவளைத்தால்) உணக்குகையாவது - தரிக்கமாட்டாதே துவளும்படி பண்ணுகை. எங்களுக்கிதுக்குமேல் வருவதென்; கால்வாங்கிப்போசப் பெறுகிறிலோம், கிட்டிநின்று முகம்பார்த் தநுபவிக்கப்பெறுகிறிலோம். இதுகாணவேண்டாதவர்க ளென்சொல்லுவர்கள். "எத்தைச் சொல்லுவது; என்னை 'ஈஶ்வரன்' என்றிகோளாகில், உங்களை 'இடைச்சிறுப்பெண்கள்' என்றிகோளாகில், இனியெத்தைச்சொல்லுவது" என்றான். நீ ஸர்வேஶ்வரனானவிதுவும், நாங்களிடைப்பெண்களான விதுவுமேயிறே சொல்லுகைக்கு ஹேதுவும். ஈஶ்வரனோடொக்கப் பழிசொல்லுகைக்கிவர்கள்தாமொரு நப்பின்னைப்பிராட்டிபோல்வாராகாதேதான். "அதுவென்றான், என்னோடுங்களுக்கு பாவபந்தமில்லை என்னுநின்றிகோளாகி லித்தால் வருவ

தென்" என்றான் (என்சொல்லாருகவாதவரோ) "உன்பக்கலெங்களு க்கு பாவபந்தமில்லை" என்றறிவர்களோ உகவாதார். நீ அல்பம்கால்தா ழ்த்த விதுவே ஹேதுவாக "ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமாயிற்று" என் னுர்களோ. வளைக்கிற வுன்னையும், வளைப்புண்கிற வெங்களையுமறிந்தோ வவர்கள் வார்த்தைசொல்லுவது. (என்சொல்லாருகவாதவரோ) உன் னுடைய மின்னிடைமடவா ருன்னை நெகிழ வார்த்தை சொல்லுவர்கள். பிரிவாற்றுமல் கண்ணுஞ் சுழலையிடுகிறவர்க ளெத்தைச் சொல்லார்....*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (பிணக்கியித்யாதி) "உணக்கிநீவளைத்தால்" என்றிருக்கை யாலே - இவனவளைவளைத்துக்கிடக்கும்போது, இவன்மிறுக்கடியாக விவர்கள்போ கப்புக்கார்களாக வேணுமென்கிருர் (கிட்டிநின்றிவர்களை யித்யாதிவாக்யத்வயத்தா லே) மிறுக்குக்களை - நிஷ்டுரோக்திகளை. இருவிலங்கு - பெருவிலங்காதல், இரட் டைவிலங்காதல். வேறுவழியில்லையோவென்ன (உத்யாநமித்யாதி) இரண்டத்தொ ன்றென்றது - தகைவுபட்டு நிற்கையாதல், கடந்துபோம்போது ஸ்பர்ஶமாதல்; ஸ் பர்ஶித்தல்லது போகக்கூடாதிறே.

"பிணக்கி" என்றுதொடங்கி, "பேதியாதது" என்னுமளவுக்கு மவதாரி கை (நீ வழியைப்பற்றியித்யாதி) "பேதித்தும் பேதியாதது" என்றதுக்கு ஹார் த்தபாவம் (அப்படியேயித்யாதி) நீ யவிக்ருதனுயிராநின்றுயென்றது - விஶ்லேஷ த்தால் வந்தகலக்கமும், சம்ஶ்லேஷத்தால்வந்த போகரூபவிக்ருதியு மின்றிக்கேயி ராநின்றுயென்றபடி. அசேதநங்களை முந்தறச்சொல்லி சேதநனை யநந்தரம்சொன் னதுக்குபாவம் (தன்பக்கலித்யாதி) அ[illegible]வது - இரண்டுவஸ்துக்களுக்கும் பொருந் தாமை சமாநமாகையாலே யசேதநங்களோடே சேதநனையுங்கூட்டி யருளிச்செய் கிருரென்றபடி. நினைவாலேயென்றது - நினைவுண்டாயிருக்கச்செய்தேயென்றபடி. கூட்டியென்னுதே, "பிணக்கி" என்றதுக்குபாவம் (தமஃபர இத்யாதி) பிணக்கி- கலசி. மஹாப்ரளயபக்ஷத்திலே, பிணக்குகை-கலக்கை; அவாந்தர ப்ரளயபக்ஷத்தி லே, பிணக்குகை - வயிற்றிலேவைக்கையென்று கண்டுகொள்வது. இதுக்குச்சேர வர்த்தத்வயம் (வயிற்றிலேயித்யாதிவாக்யத்வயம்) (வயிற்றிலேவைத்துப்புறப்பட விடுதல்) என்றதுக்கு த்ருஷ்டாந்தம் (ஓரோரக்ஷாபங்களிலேயித்யாதி) சம்ஹரித் துப்புறப்படவிடுதலென்றபக்ஷத்தில், "பிழையாமல்" என்றதுக்கர்த்தம் (ஒருத்த னித்யாதி) பிரிக்கை - ஸ்ருஷ்டிக்கை. "பேதியாதது" என்றதுக்கர்த்தம் (கார்யாவ ஸ்த்தமென்றுதொடங்கி, ஆகவிப்பேதங்களொன்று மின்றிக்கேயென்னுமளவும்) கார்யாவஸ்த்தமானதுவேயென்றது - கார்யாவஸ்த்த ப்ரஹ்மஸ்வரூபமென்றபடி. காரணவஸ்த்தையில் (அசித்கதமான ஸூக்ஷ்மபரிணமம்) என்றுகூட்டுவது. ஏகரூப னுமா யத்விதியனுமாய், கீர்த்திஸமுத்ரத்தையுடையனுமாயென்று திருத்துவது. ஸ்வரூபாந்யதாபாவமாகிறது - ஸ்த்தூலபரிணமம். இது - (ஸூக்ஷ்மபரிணமம்) என் றதுக்கு ப்ரதிகோடி ஸ்வபாவாந்யதாபாவமாகிறது - ஜ்ஞாநவிகாஸம். இது - (சே தநகதமானவஜ்ஞாநம்) என்றதுக்குப்ரதிகோடி. "பேதியாதது" என்றத்தால்பலி தம் (ஏகரூபமாயென்று) "ஓர்" என்றுதொடங்கி யுண்டானபதங்களுக்கெல்லாம்ச ப்தார்த்தம் (அத்விதியமாயித்யாதி) "பேதித்தும் பேதியாதது" என்றதுக்குப்ரமா ணம் (எல்லாப்பொருள்களுக்குமித்யாதி) "கணக்கில்" என்றதுக்குபாவம் (இப்ப

டிப்பட்டவித்யாதி) "கதிர்" என்றுவிசேஷித்ததுக்குபாவம் (இப்படிகூட்டுவனவி த்யாதிவாக்யத்ரயத்தாலே) "இப்படிகூட்டுவன" இத்யாதிவாக்யவிவரணம் (கார் யங்கொண்டதித்யாதிவாக்யத்வயம்) "ஞானமூர்த்தியினாய்" என்றதுக்கு - சங்கல் பரூபஜ்ஞானத்துக்காச்ரயமானவனென்று கிழருளிச்செய்து, ஸ்வரூபபரமாகவர்த் தாந்தரம் (ஜ்ஞானஸ்வரூபனுயுள்ளவனேயென்று) ஏததர்த்தகதநார்த்தம் பதோ பாதாநம் (கதிர்ஞானமூர்த்தியினாயென்று) "பேதியாததோர் கணக்கில்சீர்த்தி வெள்ளம்" என்றபதங்கள் - யோஜநார்த்வயத்திலும், ஸ்வரூபவிசேஷணங்கள்.

"இணக்கி"என்றதுக்குஹார்த்தபாவம் (நீசெய்கிறவித்யாதி, விவரணம்(அவ் விடமித்யாதி) இணக்கி-இசையும்படிவார்த்தைசொல்லி. கலவி அபாயமென்றறியா தவென்றது - கலவியாகிறவபாயம் வருமென்றறியாதவென்றபடி. "எம்" என்றது க்குபாவம் (உன்னையித்யாதி) ஸ்வாபதேசம் (பகவத்விஷயத்திலித்யாதி) ஆச்ரய ணதசையிலொழிய போகதசையிலு மாசார்யன்வேணுமோவென்ன (நித்யம்பதி யேத்யாதி) "ஊதரவாரூதவாவீ" (அத்ரபரத்ரசாபி) என்றதுக்கர்த்தம் (இ ங்கோடித்யாதி) தோழிமாராகவேணுமோ சேர்க்கைக்கென்ன (ஸ்ஜாதீயராயித்யா தி) "விளையாடப்போதுமினென்னப்போந்தோமை" என்றதுக்கு ஹார்த்தபாவம் (அவர்களுனக்கித்யாதி) பெருநிலை - சஹாயம். "விளையாடவாருங்கோள்" என்று நிற்க, இவனுக்குப்பெருநிலையென்று சொல்லுகிறபடி யெங்ஙனேயென்ன (சொல வுக்கித்யாதி) அகவாயாராய்ந்தால் நீங்கள்செய்வதென்னென்ன (நீயுண்டென்றி த்யாதி) "உனக்குப்பெருநிலைநிற்பது" என்றத்தைவிவரிக்கிறார் (அவர்களுனக்கித் யாதி) பார்வை-பக்ஷிக்ரஹணசாதநமான பக்ஷிமுதலானது.

உணக்கி-துவளப்பண்ணி. "உணக்கி" என்றதுக்குபாவம் (எங்களுக்கித் யாதி) "பிணக்கியாவையும் யாவரும் விளையாடப்போதுமின்" என்றபதத்வயத் தையுங்கடாக்ஷித்து யோக்யதையில்லையென்கிறார் (என்னை ஈச்வரனித்யாதி) ஆ தாவது - சர்வாதிகனான வெனக்கு அதிக்ஷுத்ரைகளான வுங்களோடு சம்ச்லே ஷயோக்யதையில்லாமையாலே யபவாதவசநமில்லையென்றுகருத்து. அவன்சொ ன்னதுக்குத்தரம் (நீ சர்வேச்வரனானவிதுவுமித்யாதி) இதுக்குபாவம்-சர்வேச்வர னாய்வைத்தும் நப்பின்னைப்பிராட்டியைக் கைப்பிடிக்கையாலே, இடைப்பெண்களா னதுவே ஹேதுவென்றபடி. பலிதம் (ஈச்வரனோடொக்கவித்யாதி) த்விதீயாவதா ரிகையாகப்பழிசொல்லாமைக்கு ஹேத்வந்தரம் அதுவென்றானித்யாதி) விவரணம் (நீஅல்பமித்யாதிவாக்யத்வயமும்) கீழ், உகவாதாரொன்று - லௌகிகராகவருளிச் செய்து, அர்த்தாந்தரம் (உன்னுடையமின்னிடையித்யாதி) இந்தப்பக்ஷத்தில் பழிக் குவிஷயம்-ஈச்வரன். வளைக்கிறவிவனையும் வளைப்புண்கிற விவர்களையுமறிந்தால் "பாவபந்தமில்லை" என்றுநிச்சயிக்கலாயிருக்க, அதுசெய்யாதே "பாவபந்தமு ண்டு" என்றுசொல்லுகிறபடி யெங்ஙனேயென்ன (பிரிவாற்றாமலித்யாதி)......*

---

## ஒன்பதாம்பாட்டு.

---

உகவையாநெஞ்சமுள்ளுருகியுன்றாமரைத்தடங்கண்விழிகளி
னகவலைப்படுப்பானழித்தாயுன்றிருவடியாற்
றகவுசெய்திலையெங்கள்சிற்றிலும்யாமடுசிறுசோறுங்கண்டுநின்
முகவொளிதிகழமுறுவல்செய்துநின்றிலையே.

## ஆருயிரப்படி.

(உகவையால்) தன்னை யெம்பெருமானிப்படி வளைக்கச் செய்தேயு மவனைக் கடாக்ஷியாதே யிருந்து தன் றோழிமாரோடேகூடச் சிற்றிலிழைத்துச் சிறுசோறிட்டு விளையாடாநிற்க இவளுடையகடாக்ஷமல்லது தனக்காத்மதாரண மில்லாமையாலே, "ஏதேனுமொருபடியா லிவள் நம்மைக்கடாக்ஷிக்க வமையும்" என்றுபார்த்து, இவள்தன்னைப்பார்த்தருளும்படியாக விவளுடைய சிற்றிலைத் தன்னுடைய திருவடிகளாலேயழித்தருள, இவளுமவனுடைய திருமுகத்லதைப்பார்த்து அவனுடைய திருக்கண்களினழகாலே வசீக்ருதையாய் ; உன்பக்கலுள்ள ப்ரீத்யதிசயத்தாலே நெஞ்சுருகிக்கொண்டு உன்றாமரைத்தடங்கண் விழிகளாகிற வலையிலே நாங்களகப்படுகைக்காக, எங்கள் சிற்றிலும் யாமடுசிறுசோறும் உன்திருவடியா லழித்தருளினாய் ; நாங்கள் விளையாடுகிறபடியைக் கண்டுகந்துகொண்டு நிற்கமாட்டிற்றில்லை, ஒன்றும் க்ருபையில்லையாகாதேயென்றுகொண்டு, தன்னுடைய அத்யவசாயத்தை யெம்பெருமான் தன்னழகாலே யழித்ததாக அவனையின்னாதாகிறாள்...........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இவன் தகைந்தவாறே கடக்கப்போய்ச் சிற்றிலிழைக்க, "நம்மை யநுவர்த்தித்துப்போகாதே அநாதரித்தார்கள்" என்கிற சீற்றத்தாலேசிற்றிலை யழிக்க ; நாங்களுன் முகசோபையைப்பார்த்திருந்து சிற்றிலிழையாதபடி யித்தை யழித்தாயே யென்றின்னாதாகிறாள்.

உகவையால் - அகவாயிலுகப்பாலே. நெஞ்சம் - நெஞ்சானது. உள்ளுருகி- உள்ளுருகி. உன் - உன். தாமரை - தாமரைபோலேயிருக்கிற. தடம்-பெரிய. கண்- கண்ணினுடைய. விழிகள் - பார்வைகளாகிற. வலை - வலைக்குள்ளே. அகப்படுப்பான் - அகப்படுத்துகைக்காக. எங்கள் - எங்கள். சிற்றிலும் - சிற்றிலையும். யாம் - நாங்கள். அடு - அடுகிற. சிறுசோறும் - சிறுசோற்றையும். கண்டு - கண்டு. நின்-உன்னுடைய. முகம் - திருமுகத்தில். ஒளி - ஒளி. திகழ - திகழும்படி. முறுவல் - முறுவல். செய்து - செய்து. நின்றிலை - பார்த்துக்கொண்டுநில்லாதே. உன் - உன். திருவடியால் - திருவடிகளாலே. அழித்தாய் - அழித்தாய். தகவுசெய்திலை - இதிலோரிரக்கமறச்செய்தாய்.

இத்தால் - ஆஸ்ரிதருடைய லீலாவிபூதியில் பாரிப்பை யழிக்குமென்னுமிடந் தோற்றுகிறது..........................................................................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

"இவன் 'போகவொட்டேன்' என்று வளைத்துக் கிடந்ததுக்கு ப்ரயோஜநமுள்ளது இவனுக்கு நினைத்தபடி பரிமாறப் பெற்றாலன்றோ ; ஒரு தேசவிசேஷத்திலே முக்தர் சம்சாரிகளோ டுறவற்றிருக்குமாபோலே இவன்முகம் பாராதேயிருக்கிறோம்" என்றத்யவசித்து ; "பேசாதே யிருந்தவாறே, தன்னை நினைத்துக்கொண்டிருந்தோம் என்றிருக்குமி

வன்" என்று "அங்யபரதைதோற்றச்சிற்றிலிழைப்போம்" என்று இழைக்கப்புக; "என்னைப்பாராதே யிருப்பதுமன்றிக்கே சிறிதங்யபரதை பண்ணுவதே" என்று சிற்றிலையும் சிறுசோற்றையும் தன்றிருவடிகளாலே யழிக்க; அத்தாலே யவர்களுக்குச் சீற்றம்பிறந்து, தங்கள் சங்கல்பத்தைமறந்து அவன்முகத்தைப் பார்த்துச் சொல்லுகிறார்கள். அவனுடைய அபிமதசித்திக்கும் சாதநம் திருவடிகள்காணும். அடியுடையார்க்கெல்லாம் சாதித்துக்கொள்ளலாமே.

(உகவையால் நெஞ்சமுள்ளுருகி) வாராய், உன்ப்ரவ்ருத்தி வ்யர்த்த ப்ரவ்ருத்திகாண்; பிரிந்து நெஞ்சைப் புண்படுத்துகையாலேவந்த வுருகுதலொழிய, எங்களுக்குகவையால் நெஞ்சமுள்ளுருகப் பண்ணவிறே நீ பார்த்தது; அதுசெய்யப்போகாது. (உன்றாமரையித்யாதி) பகற்கண்டகுழியிலே விழவிட் டகப்படுத்துவான். த்ருஷ்டிபந்தத்தாலேயிறே யநங்யார்ஹமாக்குவது. தாமரைபோலே பரிமளத்தையும் குளிர்த்தியையும் சிவப்பையு முடைத்தாய், போக்தாக்களாலுண்டறுக்கவொண்ணாத போக்யதா ப்ரகர்ஷத்தை யுடைய திருக்கண்களின் நோக்காகிற வலையுள்ளே யகப்படுத்துகைக்காக. (அகவலை) வலைக்குள்ளே. அகவலை - அகவியவலையென்றுமாம். * கண்ணென்னும் நெடுங்கயிறிறே. கண்ணிலே யகப்பட்டால், ஜ்வரஸந்நிபதிதரைப்போலே பிதற்று மித்தனையிறே; "தாமரைக்கண்ணனை விண்ணோர்பரவுந்தலைமகனை" என்கிறபடியே. (அழித்தாயுன்றிருவடியால்) சங்கல்பத்தாலழிக்கலாவது தன்சிற்றிலிறே, இவர்களுடைய சிற்றில் ஸ்பர்ஶித்தழிக்கவேணுமே. உன்சிற்றிலழிக்கும் பரிகரமமையாதோ விதுக்கு. ஜகதுபஸம்ஹாரம் பண்ணுவது சங்கல்பத்தாலேயிறே. சேஷபூதனுக்குத்திருவடிகளுத்தேஶ்யமானவோபாதி, ப்ரணயிநிகளுக்கும் திருவடிகளுத்தேஶ்யமாயிறேயிருப்பது. (அழித்தாய்) வெறும் சிற்றிலையன்றுகாண். நீ யழித்தது, எங்களகவாயையுமழித்தாய்காண்; * சிற்றிலோடெங்கள் சிந்தையும் சிதைத்தாய்காண். காலாலே சிற்றிலையழித்து, கண்ணாலே யெங்களபிசந்தியையு மழித்தாய் காணென்கிறார்கள்.

(தகவுசெய்திலை) க்ருபையுடையார் செய்வதைச்செய்திலை. பிரிந்தபோதே ப்ரணயித்வம்போயிற்றிறே, இனிக்கண்ணுடையார் செய்வதும் செய்திலை. கண்படைத்ததுக்கு ப்ரயோஜநம் நல்லதுகண்டுகொண்டிருக்கவன்றே; * உன்முகத்தனகண்களல்லவே. "நான் செய்தகுறையென்" என்ன (எங்கள்சிற்றிலித்யாதி) உன் ஸ்ருஷ்டிபோலே யநுபாதேயமோ வெங்கள்ஸ்ருஷ்டி, உபாதேயதமமன்றே. "என்னுடைய ஸ்ருஷ்டி அநுபாதேயமானபடியென், உங்கள்ஸ்ருஷ்டி உபாதேயமானபடியென்" என்னுமே அவன்; உன்னைப்போலே நெருப்பும் காற்று மின்னலுந் துன்னலுமாகவிட்டு கர்மாநுகுணமாக ஸ்ருஷ்டித்ததோ விது

* வண்டல் நுண்மணல்தெள்ளி யாம் வளைக்கைகளால் சிரமப்பட்டதன் றோ விது. (யாமடுசிறுசோறுங் கண்டு) நீயடுசிறுசோறு நிர்மால்யத் தோபாதி புறம்பொருத்தர்க்கு புஜிக்கலாகாது, நீயே புஜிக்கு மத்தனை, (* அத்தாபரமாத்மாவிறே ;) நாங்களடுசிறுசோறு * மூடநெய்பெய்து முழங்கை வழிவாரக் கூடியிருந்து புஜிக்குமதன்றோ. (கண்டுநின் முக வொளிதிகழ முறுவல்செய்துநின்றிலையே) எங்களுடைய லீலாவிநோ தங்கண்டு ப்ரீதனுய், உன்னுடையமுகவொளிதிகழ மந்தஸ்மிதம்பண்ணி நிற்கமாட்டிற்றிலையே. இங்ஙன்செய்தவிடம் தக்கோர்மைசெய்தாயல்லை யே யென்றின்னுதாகிறார்கள். (தகவுசெய்திலை) நாங்கள் சிற்றிலிழைக் கிறோமாக பாவித்துக் கடைக்கண்ணாலே யுன்முகவொளியையும் முறுவ லையுங் கண்டுகொண் டிருக்கவொட்டிற்றிலையே. முழுக்கப்பார்க்கி லெல் லாரோபாதியுமாமே, ப்ரணயியைப் பார்ப்பது கடைக்கண்ணாலேயிறே. எங்ஙனே ப்ராரதேயிருந்து சிற்றிலிழைத்தார்கள்தான்..................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. (உகவையித்யாதி) "அழித்தாயுன்றிருவடியால்" என் றத்தைக்கடாக்ஷித்து, தததுகுணமாகவவதாரிகை (இவன்போகவொட்டேனித்யா தி) சிற்றில் - சிறியக்ருஹம். ரசோக்தி (அவனுடையவித்யாதிவாக்யத்வயமும்) அடியுடையார்க்கு - ஐச்வர்யமுடையார்க்கென்றும், திருவடிகளையுடையார்க்கென் று மர்த்தத்வயம்.

இவனுடைய ஸங்கல்பவாக்யத்தைச் சொல்லுமவர்களுடைய வுட்கருத்தை இவர்கள் வார்த்தையாலே யருளிச்செய்கிறார் (வாராயித்யாதி) இவனுடைய ப்ர வ்ருத்திதன்னையும், அது வ்யர்த்தமானபடியையு மடைவே சொல்லுகிறார்கள் (பிரி ந்தித்யாதிவாக்யத்வயத்தாலே) உகவை - உகப்பு. "உன்றாமரைபுரைகண்ணிணையும் செவ்வாய் முறுவலுமாகுலங்கள்செய்ய" என்றத்தைப்பற்ற (பகற்கண்டகுழியி லேயென்றது) கண்ணாலே யகப்படுத்துமோவென்ன (த்ருஷ்டிபந்தத்தாலே யித் யாதி) "தாமரைக்கண்களுக்கற்றுத்தீர்ந்தும்" என்னக்கடவதிறே. விழி-நோக்கு "வலை - அகப்படுப்பான்" என்னுதல், "அகவிய - வலைப்படுப்பான்" என்னுதல் படுப்பான் - படுத்துகைக்காகவித்யர்த்தஃ. அகவியவலை - நெடியவலை. அப்படிநெடி யவலையாயிருக்குமோவென்ன (கண்ணென்னுமித்யாதி) கண்களாகிற நெடியகயி றென்றபடி. நாய்ச்சியார்திருமொழி, "கார்த்தண்" இத்யாதி. அப்படி கண்ணழ கிலே யீடுபடுவர்களோவென்ன (கண்ணிலேயித்யாதி) உக்தார்த்தத்துக்கு ப்ரமா ணம் (தாமரைக்கண்ணனையித்யாதி) ஸங்கல்பத்தாலே யழிக்கவொண்ணாதோவெ ன்ன (ஸங்கல்பத்தாலித்யாதி) "திருவடியால் - அழித்தாய்" என்றவர்களுடை யஹார்த்தபாவம் (உன்சிற்றிலித்யாதி) அவன்சிற்றில் - ஜகத்தென்னுமத்தையும், அழிக்கும் பரிகரம் - ஸங்கல்பமென்னுமத்தையும் வ்யக்தமாக வருளிச்செய்கிறார் (ஜகதுபஸம்ஹாரமித்யாதி) ப்ரணயிநியானவள் காலாலென்னுதே, "திருவடியா ல்" என்று - பூஜ்யமாகச்சொல்லுவானென்னென்ன (சேஷபூதனுக்கித்யாதி) ஹா ர்த்தபாவம் (வெறும்சிற்றிலையித்யாதி) விவரணம் (சிற்றிலோடித்யாதி) நாய்ச் சியார்திருமொழி. சிதைத்தாய் - அழித்தாயித்யர்த்தஃ. அழித்தப்ரகார மேதென்ன (காலாலேயித்யாதி)

ப்ரணயிநி க்ருபைசெய்திலை யென்னலாமோவென்ன (பிரிந்தவித்யாதி) தகவு - க்ருபை. "தகவு" என்றதுக் கர்த்தாந்தரம் (இனிக்கண்ணுடையாரித்யாதி) தகவு - ந்யாயம். ஏகார்த்தமாதல். கண்ணுடையாரென்றது - ஶ்லேஷம்; கண்ணுக்கும், தயைக்கும்பேர். விவரணம் (கண்படைத்ததுக்கித்யாதி) இரண்டாமர்த்தத்துக்கு, கண்படைத்தார்க்கு யோக்யமானது செய்திலையென்று சப்தார்த்தம். நல்லது காணாதபோது கண்படைத்ததுக்கு ப்ரயோஜநமில்லையோவென்ன (உன்முகத்தனகண்களல்லவேயென்று) உன்முகத்திலிருக்கிறவை கண்களல்லவோவித்யர்த்தஃ. நாய்ச்சியார்திருமொழி.

"எங்கள்சிற்றில்" என்றதுக்கு வாஸநை (உன்ஸ்ருஷ்டிபோலேயித்யாதி) அன்னல் - வெய்யில். துன்னல் - சிறுதிவலை. (வண்டலித்யாதி) நாய்ச்சியார்திருமொழி, "குண்டுநீர்" இத்யாதி, பாசுரத்துக்கர்த்தம் - வண்டலிலுள்ள நுண்ணிய மணலைத்தெள்ளி துர்ப்பலைகளான நாங்கள் வளையையுடைய கைகளாலே க்லேஶப்பட்டிட்டதன்றோவென்று. "யாமடு" என்றதுக்கு பாவம் (நீயடுவித்யாதி) நீயே புஜிக்குமத்தனை யென்றது - "யஸ்யப்ரஹ்மசக்ஷத்ரஞ்சஉபேபவதஓதநஃ" (யஸ்யப்ரஹ்மசக்ஷத்ரஞ்சஉபேபவதஓதநஃ) என்றத்தைப்பற்ற. (மூடநெய்பெய்து) இத்யாதிக்கு - பால்சோறு மூடநெய்யைவிட்டுக் கலந்து முழங்கை வழியிலே நெய் பெருகும்படி கூடியிருந்தென்றர்த்தம். ஸ்வாபதேசத்தில், அவன்சிற்றிலாவது - லீலாவிபூதி. "எங்கள்சிற்றில்" என்றுதொடங்கி, "நின்றிலை - தகவுசெய்திலை" என்றந்வயித்துபாவம் (எங்களுடையவித்யாதி வாக்யத்வயம்) திகழுகை - ப்ரகாசிக்கை. தக்கோர்மை - க்ருபை, ந்யாயமும். இன்னாதாகை - வெறுக்கை. கீழ்வாக்ய விவரணம் (நாங்கள்சிற்றிலித்யாதி) வ்யாக்யாதாவினீடுபாடு (எங்ஙனேயித்யாதி)*

---

## பத்தாம்பாட்டு.

நின்றிலங்குமுடியினுயிருபத்தோர்காலரசுகளைகட்ட
வென்றிநீண்மழுவாவியன்ஞாலமுன்படைத்தா
யின்றிவ்வாயர்குலத்தைவீடுய்யத்தோன்றியகருமாணிக்கச்சுடர்
நின்றன்னுளலிவேபடுவோமென்றுமாய்ச்சியோமே.

### ஆறாயிரப்படி.

(நின்றிலங்கு) இப்படியெம்பெருமானுடைய வழகாலும் ஸ்வவிஶ்லேஷஜநித நிரவதிகாவஸாதத்தாலுமாகத் தன்னுடையவூடலெல்லாந் தீர்ந்து; தன்னையகப்படுத்தின வவனுடையவழகையும் சௌர்யகாருண்ய வாத்ஸல்யாதிகுணங்களையும்பேசி; இப்படியே குணவானாயிருந்து வைத்து, விஶ்லேஷபரம்பரைகளாலே யெங்களையென்று மிங்ஙனே நலிவேசெய்துபோனாய்; ஆய்ச்சியோமாய்ப்பிறந்துநாங்களுன்னால்பட்டது; உன்னைப்பிரிந்தார்படும் வ்யஸநமறியாத நீயறியாய்காணென்கிறாள் ... *

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், "முகவொளிதிகழமுறுவல்செய்துநின்றிலையே" என்று முகம் பார்த்துவார்த்தைசொன்னவளவிலே தங்களகவாயில் மறந்தீர்ந்து, தங்களை பலூர

மூகப்ராவ்ருத்தியாலே அவனுபிமுக்யம்பண்ணுவித்தபடியை நினைத்து; சர்வப்ரகார ரக்ஷகனனவுன்னுலே நாங்களிப்படி நலிவுபடுவதேயென்று சமாஹிதையாய் வார்த்தைசொல்லுகிருள்.

சமஸ்தஜகத்ரக்ஷணத்துக்கு மொருநாளும் தாழ்வில்லாமையாலே, நின்று-நிலைநிற்க. இலங்கு - விளங்குகிற. முடியினுய் - திருவபிஷேகத்தையுடையையாய். இருபத்தோர்கால்-இருபத்தொருபடிகால். அரசு-ராஜாக்களை. களைகட்ட-உன்மூலநம்பண்ணின. வென்றி-வென்றியையுடைத்தான. நீள் - பெரிய. மழுவா-மழுவையுடையையாய். வியல்-விஸ்திர்ணமான. ஞாலம்-ஜகத்தை. முன்-ஸ்ருஷ்டிகாலத்திலே. படைத்தாய்-உற்பாதித்தவனுய். இன்று-இக்காலத்திலும். இ-இந்த. ஆயர்குலம் - இடைக்குலமானது. வீடு-தங்கள்குடியோடே. உய்ய-உஜ்ஜீவிக்கும்படியாக. தோன்றிய-அவதீர்ணனுன. கருமாணிக்கச்சுடர் - நீலரத்நப்ரபோஜ்ஜ்வலமான வடிவையுடையவனே. நின்றன்னுல்-இப்படி சர்வப்ரகாரரக்ஷகனுகையினுலே எங்களுக்கு நாயகனுமாய், எங்கள் மறத்தையுமழித்து அழிந்தசத்தையுமுண்டாக்கி எங்களோடுறவுமுடையையாய், அநுபாவ்யமான வடிவையுமுடையவுன்னுலே, ஆய்ச்சியோம்-அறிவில்லாதவிடைக்குலத்திலே பிறந்தநாங்கள். என்றும்-என்றும். நலிவு - நலிவு. படுவோமே - படும்படியாவதேயென்று, சமாஹிதையானபின்பு முன்புபட்டநலிவை நினைத்துச்சொன்னுளாகிறது.

“நானதஞ்சுவன்” என்றுமுதற்பாட்டிலே வந்தவொருமைக்குப்பின்பு வந்தபன்மையெல்லாம் - ஆத்மநிபஹுவசநமாதல், தோழிமார்களையுங்கூட்டி அவர்களுக்காகச்சமைந்துசொன்னதாதல்...........................................*

## ௧௦-பத்தாம்பாட்டு.

“நின்முகவொளிதிகழமுறுவல்செய்துநின்றிலையே” என்று விழுக்காடறியாதே வாய்தப்பச்சொல்லிக்கொண்டு நின்ருர்கள்; காலாலழித்தது சிற்றிலையன்றே, இவர்கள்நெஞ்சில் மறத்தையேயிறே. அந்தமறம்போனவாறே மேல்நோக்கி பாதாதிகேசாந்தமாகப்பார்த்தார்கள், தங்களை ஜயிக்கையாலுண்டான ஹர்ஷம் வடிவிலேதோற்றும்படிநின்ருன், அவ்வடிவில் பிறந்தவேறுபாட்டைச் சொல்லுகிருர்கள்.

( நின்றிலங்குமுடியினுய் ) இவர்களைஜயிப்பதற்குமுன்பு தலைச்சுமையாய்க்காணும்கிடந்தது,இப்போதாயிற்று நற்றரித்தொளிவிடத்தொடங்கிற்று. சிலராஜாக்கள் தந்தாமெதிரிகளையழித்து வீராபிஷேகமும் விஜயாபிஷேகமும்பண்ணி நிற்குமாபோலே, முன்பேமுடிசூடியிருக்கச்செய்தேயு மிவர்களைத் தோற்பிப்பதற்குமுன்பு அஸத்ஸமமாய்க்காணுமிருந்தது. ராவணுதிகளை ஜயித்ததுக்குச் சூடினமுடிபோலல்லவிறே ப்ரணயிநிகளை ஜயித்ததுக்குச்சூடின முடியிருப்பது. இவர்களபிஸந்தியைக் குலைத்துப்பொருந்தவிட்டுக்கொண்டபின்புகாணும் மேன்மையையுடையனு யுஜ்ஜ்வலனுமாய் முடியும்நற்றரித்தது. [ அபிஷிச்யசலங்காயாம்ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம் । க்ருதக்ருத்ய: ] [ அபிஷிச்யசலங்காயாம்ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம் । க்ருதக்ருத்ய: ] “ஸ்ரீபரதாழ்வானைப்போலே (‘நான்முடிசூடேன், நீர்முடிசூடும்’ என்று) முடிக்கிருய்க்கிற்செய்வ

தென்'' என்றுட்டம்புவெளுத்துக்காணு மிவரிருந்தது. "ஒருபடியத்த லைச்சுமையைக்கழித்துப்போந்தோம், இதுவும் தலைச்சுமையாகிற்செய் வதென்'' என்று. இக்ஷ்வாகுவம்ஶ்யர்க்குப்பணியிறே முடிக்கிறாய்க்கை. அடிக்கிறாயாதிருக்கையும் முடிக்கிறாய்க்கையுமிறே ஸ்வரூபம். "அதுகி ட்க்க, உங்களபிசந்தியைக்குலைத்து உங்களைவென்றோமிறே'' என்றான் (இருபத்தோர்காலித்யாதி) மிடுக்கரான ராஜாக்களை யிருபத்தொருபடி கால் வென்றவுனக்கு அபலைகளானவெங்களை வெல்லுகை பெரியபணி யோ. "எனக்கு'' என்றிருப்பாரையு முனக்காக்கிக்கொள்ளவல்ல வுன க்கு உனக்கேயாயிருப்பாரைவெல்லுகை பெரியவேற்றமோ. ஆசுரப்ராக் ருதிகளாய் நாட்டைப்படவடித்துத்திரிகிற க்ஷத்ரியகுலத்தைக் கிழங்கெ டுத்தமிடுக்கனே. களைகட்டலாவது - எடுத்துப்பொகடுகை. ராஜாக்க ளைவென்றவுனக்கு, இடைச்சிகளைவென்றாய் என்பதோரேற்றமோ. ( ரா ஜாக்களை யுந்மூலமாம்படிபண்ணின வெற்றியையுடைத்தான் பெரியம மூவையுடையவனே.) ( வியன்ஞாலமுன்படைத்தாய் ) ப்ரளயத்திலே யுருமாய்ந்துகிடந்த பூமியையுண்டாக்கினாப்போலேயிறே ப்ரணயரோஷ த்தாலேயழிந்த வெங்களையுண்டாக்கினபடி. வியன்-விஸ்மயம். ப்ரளயங் கொண்ட பூமியையெடுத்தாப்போலே, விரஹப்ரளயங்கொண்ட வெங் களையெடுத்தபடி. அங்குவிலக்குவா ரில்லாமையாலே செய்யலாம், "க ழகமேறேல்'' என்று நிஷேதிக்கச்செய்தேயன்றோ வுண்டாக்கிற்று. (இ ன்றித்யாதி) "𑌬𑌹𑍁 𑌸𑍍𑌯𑌾𑌮𑍍'' ( பஹுஸ்யாம் ) என்ற பொதுவான ஸ்ருஷ்டிதேடிப்போகவேணுமோ; இவ்விடைக்குலத்தேவந்துபிறந்து, இன்றிவ்விடைச்சாதியை சபரிகரமாக வடிவைக்காட்டி ரக்ஷித்தவனன்றோ. ஆஶ்ரிதவிஷயத்திற்பண்ணின வோரம் தன்பேறென்னுமிடம் வடி விலேதோன்றும்படிகாணு மிருக்கிறது. (வீடுய்ய) "𑌸𑌪𑍁𑌤𑍍𑌰𑌪𑍌𑌤𑍍𑌰𑌸𑍍𑌸𑌗𑌣𑌃'' ( ஸபுத்ரபௌத்ரஸ்ஸகண: ) என்கிறபடியே சபரிகரமாகவு ய்ய. தோன்றிய-ஆவிர்ப்பவித்த. ப்ரணயரோஷத்தாலே "சேரோம்'' எ ன்றிருக்கிற தங்களைச்சேர்த்தபடியாலே - கருமாணிக்கச்சுடரென்கிறார் கள். (நின்றன்னாலித்யாதி) சத்ருக்களாய்முடிந்துபோகப்பெறாதே, சம் சாரிகளாயந்யபரராய்ப்போகப்பெறாதே, நீநலியவும் நாங்கள்நோவுபட வுமாம்படி சமைந்துவிட்டதிறே. இரண்டுதலையுங்கூடி மேல்விழுந்தணை த்துக்கொண்டு நின்று சொல்லுகிறவார்த்தையிறே. இவ்வளவும் தங்கள் வெற்றியேயிறே சொல்லிப்போந்தது, இப்போதிறே தங்கள் தோல்வி க்கிசைந்தது. (இவ்வநுபவம் ஸ்வப்நகல்பமாயாற்றாமையிறே யெங்களு க்கு நிலைநின்றுபோருவதென்று, தாங்கள்பட்டநோவை யறிவிக்கிறார்க ளென்னுதல்; அன்றிக்கே, "𑌜𑌿𑌤𑌂𑌤𑍇'' (ஜிதந்தே) என்றும் "தோற்றோ ம்மடநெஞ்சம்'' என்றும் தாங்கள்தோற்றபடியை யவன்றனக்குச்சொ ல்லுகிறார்களாகவுமாம். ( நலிவேபடுவோம் )) இதுதானெங்களுக்கு மெய் யாகப்புகாநின்றதோ, எங்களுடையதேயிறே யெங்களுக்கு சித்தித்துவி

டுவது. இவர்களுடையதாவது - " கூடிலும் நீங்கிலும் யாம்மெலிதும் "
என்று மெலிவேயாயிருக்கை. (ஆய்ச்சியோமே) இடக்கையும் வலக்கை
யுமறியாதநாங்கள்...............................................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (நின்றிலங்கித்யாதி) " நின்றிலங்குமுடியினாய் " இத்யாதி
யைக்கடாக்ஷித்தவதாரிகை (நின்முகமித்யாதி) விழுக்காடறியாதேயென்றது - மே
ல் சம்ஶ்லேஷிக்குமதறியாதேயென்றபடி. வாய்தப்பச்சொல்லுகைக்கு ஹேதுவே
தென்ன (காலாலழித்ததித்யாதி) இந்தப்பாட்டுக்கவதாரிகை ( அந்தமறமித்யாதி )

சுஸ்த்திரமாய் ப்ரகாசியாநிற்கிற முடியையுடையவனே என்று சப்தார்த்த
ம். இப்போது சுஸ்த்திரமாய் ப்ரகாசியாநிற்கிறதென்கையாலே - இதுக்குமுன்பதி
ல்லையென்று தோற்றிற்றிறே; அத்தையருளிச்செய்யாநின்றுகொண்டு, "நின்றிலங்
கு" என்கிறத்தை ஸஹேதுகமாக வருளிச்செய்கிறார் ( இவர்களையித்யாதி வாக்யத்
வயத்தாலே ) " நின்று, இலங்கு " என்கிறபதத்வயத்துக்குமர்த்தம் (நற்றரித்தொ
ளிவிடத்தடங்கிற்றென்று) உக்தத்துக்குத்ருஷ்டாந்தம் ( சிலராஜாக்களித்யாதி )
வீராபிஷேகம் - அபிமந்யுவுக்கும், விஜயாபிஷேகம் - அர்ஜுநனுக்குமாக விபாகங்க
ண்டுகொள்வது. அபலைகளைஜயித்து முடிசூடினானென்றததிசயமோவென்ன (ராவ
ணாதிகளையித்யாதி) " நின்று, இலங்கு, முடியினாய் " என்றபதத்ரயார்த்தத்தையும
வரோஹணக்ரமத்தாலே விவரிக்கிறார் ( இவர்களபிஸந்தியையித்யாதி ) இவர்களைப்
பொருந்தவிட்டுக்கொண்டு அத்தாலே க்ருதார்த்தனாயிருந்ததுக்கு த்ருஷ்டாந்தம்
(அபிஷிச்யேத்யாதி) " அபிஷிச்ய - க்ருதக்ருத்ய: " ( அபிஷிச்ய - க்ருதக்ருத்ய: )
என்கிறதென், அபிஷேகம்பண்ணுகிற தருந்தலோவென்ன ( ஸ்ரீபரதாழ்வானையித்
யாதி ) உடம்புவெளுத்திருந்த பெருமாளுடைய வுட்கருத்தை யருளிச்செய்கிறார்
(ஒருபடியத்தலையித்யாதி) ( உடம்புவெளுத்துக்காணுமிவரிருந்தது ) என்றவாக்யத்
தை - மேலில்வாக்யத்திலும் கூட்டிக்கொள்வது. ஸ்ரீபரதாழ்வான் முடிக்கிருய்த்
தாலிவர்க்கு முடிக்கிருய்க்கவேணுமோவென்ன (இக்ஷ்வாக்வித்யாதி) ஸ்ரீவிபீஷணா
ழ்வானை இக்ஷ்வாகுவம்ஶஜரென்றது - " ஆக்யாஹி மம தத்த்வேந ராக்ஷஸாநாம்
பலாபலம் " ( ஆக்யாஹிமமதத்த்வேநராக்ஷஸாநாம்பலாபலம் ) என்றத்தைப்ப
ற்ற. அவர்கள்தான் முடிக்கிருய்க்கைக்கடியேதென்ன; ஸ்வரூபஜ்ஞாநம்பிறந்த வுரா
ப்பென்கிறார் (அடிக்கிருயாதித்யாதி)

அதுகிடக்கவென்றது - " நின்றிலங்குமுடியினாய் " என்றென்னைக்கொண்
டாடுகிறது கிடக்கவென்றபடி. "உங்களைவென்றோம்" என்றுசொன்னவனுக்கு மூ
ன்றுவகையாகவுத்தரம் சொல்லுகிறார்கள் (மிடுக்கரானவித்யாதியாலும், எனக்கெ
ன்றிருப்பாரையித்யாதியாலும், ராஜாக்களையித்யாதியாலும்) அதாவது-காயிகமும்
மாநஸமும் ஜாதிப்ரயுக்தமுமான தோல்விகளென்றபடி. சப்தார்த்தம் ( ஆசுரப்ரக்
ருதிகளாயித்யாதி ) இருபத்தொருதலைமுறை ராஜாக்களை யுந்மூலநம்பண்ணினவெ
ன்றியையுடைத்தான பெரியமழுவை யுடையையாயித்யர்த்த:.

தங்கள் ப்ரணயரோஷத்தைப்போக்கிச் சேர்த்துக்கொண்டபடி சொல்லுகி
றவிடத்திலே ஸ்ருஷ்டியைச்சொல்லுகிறதுக்குபாவம் (ப்ரளயத்திலேயித்யாதி) த
களை

ங்களுக்கு ப்ரளயமுண்டோவென்ன (ப்ரளயங்கொண்டவித்யாதி) முன்படைத்தா ய்-மஹாப்ரளயாந்தத்திலே படைத்தாயென்றபடி. வியன்ஞாலம்-விஸ்மயநீயமான பூமியென்னுதல், விஸ்தீர்ணமான பூமியென்னுதல். ஜகத்ஸ்ருஷ்டியத்தனை யருமை யுண்டோவென்ன; அதிலுமிததிகமென்கிருர் (அங்குவிலக்குவாரித்யாதி வாக்யத்வ யத்தாலே)

"கருமாணிக்கச்சுடர்" என்றதுக்குமூன்றுபாவம். தன்வடிவழகாலே யிடைக்குலத்தை வசீகரித்தவனென்று பூர்வபாவியாக வொருபாவம்; இத்தையருளிச்செய்கிருர் ( சபரிகரமாகவித்யாதியாலே ) இத்தையுஜ்ஜீவிப்பித்தபின்பவன்வடிவு புகர்பெற்றதென்ற பரபாவியாக விரண்டாம்பாவம்; இத்தையருளிச்செய்கிருர் (ஆஶ்ரிதவிஷயத்திலித்யாதி) இடைக்குலத்தை யுஜ்ஜீவிப்பித்தவனுய், எங்கள் ப்ரணயரோஷந்தீர்க்கையாலே யுஜ்ஜ்வலனுனவனேயென்று மூன்ரும்பாவம்; இத்தையருளிச்செய்கிருர் (ப்ரணயரோஷத்தாலேயித்யாதி) பூர்வபாவியான வர்த்தவிவரணமாதல். "கருமாணிக்கச்சுடர்" என்று - சம்புத்தி.

"நின்றன்னல் நலிவேபடுவோம்" என்றவர்களுடைய ஹார்த்தபாவமாதல், "நலிவே" என்றவவதாரணத்துக்குபாவமாதல் (சத்ருக்களாயித்யாதி) "அரசுகளை கட்ட, வியன்ஞாலம்" என்றபதங்களைப்பற்ற (சத்ருக்களாயென்றும், சம்சாரிகளாயென்றும்) அருளிச்செய்தது. இத்தால்-ராஜாக்களையும் சம்சாரிகளையும் வ்யாவர்த்திக்கிறதென்னுகருத்து, " நலிவேபடுவோம் " என்றது - ப்ரணயரோஷத்தாலே சொல்லுகிற வார்த்தையோவென்ன (இரண்டுதலையுமித்யாதி) இதுக்குநியாமகமேதென்ன (இவ்வளவுமித்யாதி) சம்ஶ்லேஷம்சித்தித்திருக்க, " என்றும் - நலிவேபடுவோம் " என்பானென்னென்ன (இதுதானித்யாதி) என்றும்-சர்வகாலமும். "நலிவேபடுவோம்" என்று - தங்கள் து:கம்சொல்லுகிருர்களாதல், தோல்விசொல்லுகிருர்களாதல்; முந்தினது - (சத்ருக்களாய்) இத்யாதிவாக்யத்திலேகண்டுகொள்வது. அதாவது - சம்ஶ்லேஷமல்பமாய், தாங்கள் பட்டநோவே யதிகமென்றறிவிக்கிருர்களென்றபடி. தோல்விசொல்லுகிறது - ( இவ்வளவும் தங்கள்வெற்றியேயிறே ) இத்யாதிவாக்யத்திலே கண்டுகொள்வது. ( கூடிலும்நீங்கிலும்யாமெலிதும் ) திருவிருத்தம்பதிஞரும்பாட்டு, " பலபலவூழிகளாய் " இத்யாதி. ( கூடிலும்நீங்கிலும்யாமெலிதும்) என்றதுக்கர்த்தம் - கூடில் "மேல்பிரிவுவருகிறதோ" என்னும்பயத்தாலும், நீங்கில் விஶ்லேஷவ்யசநத்தாலும் மெலிவுதோமென்றபடி. ஆய்ச்சியோம் - அறிவில்லாத விடைக்குலத்திற்பிறந்தநாங்கள், என்றும் - நலிவேபடுவோம் இத்யந்வய:.

" நானதஞ்சுவன் " என்றவேகவசநத்துக்குப்பின்பு சொன்னபன்மையெல்லாம் - ஆத்மநிபஹுவசநமாதல், தோழிமாரையுங்கூட்டிக்கொண்டாதல்... ......*

## பதினென்ரும்பாட்டு.

ஆய்ச்சியாகியவன்னையாலன்றுவெண்ணெய்வார்த்தையுள்சிற்றமுண்டமூ
கூத்தவப்பன்றன்னைக்குருகூர்ச்சடகோப
னேத்தியதமிழ்மாலையாயிரத்துள்ளிவையுமோர்பத்திசையொடு
நாத்தன்னுனவிலவுரைப்பார்க்கில்லைநல்குரவே.

## ஆறாயிரப்படி.

(ஆய்ச்சியாகிய) அதிஸ்நேஹிநியான யசோதைப்பிராட்டி, "வெண்ணெய்களவுகண்டாய்!" என்று பொடிந்த போதுபோலே, ஆழ்வார் தாம் ப்ரணயகோபத்தாலே "எம்பெருமானோடுகலப்பேனல்லேன்" என்றகல, அது பொறுக்கமாட்டாமே தளர்ந்த தளர்த்தியை யநுசந்தித்தினியரா யவ்வெம்பெருமானை யேத்தின வித்திருவாய்மொழியை, இப்பாவவ்ருத்தியின்றிக்கே சொன்னார்க்கும், எம்பெருமான் சந்நிஹிதனாயிருக்கச்செய்தே பிறங்கித் தாம் பட்ட துஃகம் படவேண்டா வென்கிறார்.

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழியைச் சொல்லுமவர்களுக்கு புகவதலாபரூபமான தாரித்ர்யமில்லையென்று பலத்தை யருளிச்செய்கிறார்.

ஆய்ச்சியாகிய - இடைக்குலத்திலேபிறந்த. அன்னையால் - யசோதையாகிற தாயாராலே. அன்று, வெண்ணெய்வார்த்தையுள் - வெண்ணெய்க்களவுவார்த்தை பிறந்தவளவிலே. சீற்றமுண்டு - சீறப்பட்டு. அழுகூத்தன் - அழுதுதோப்புக்கண்டமிட்ட கூத்தையுடையவனை. அப்பன்றன்னை - லோகோபகாரகனை. குருகூர்ச்சடகோபன் - ஆழ்வார். ஏத்திய - ஸ்தோத்ரரூபமாகவருளிச்செய்த. தமிழ்மாலை-த்ராவிடசந்தர்ப்பரூபமான. ஆயிரத்துள்ளும் - ஆயிரத்துள்ளும். இவையோர் - விமுகரை அபிமுகராக்கிக்கொண்ட அத்விதீயமான விவை. பத்தும் - பத்தையும். இசையொடு - இசையோடேகூட. நாத்தன்னால் - நாவுக்கு ப்ரயோஜநமாக. நவில - செறிய. உரைப்பார்க்கு - உரைப்பார்க்கு. நல்குரவு - பகவதலாபமாகிற தாரித்ர்யம். இல்லை - இல்லை.

இது - அறுசீராசிரியத்துறை........................................................*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில் - இத்திருவாய்மொழியை சாதரமாகச் சொல்ல வல்லார்க்கு பகவத்தாரித்ர்ய மில்லையென்கிறார்.

(ஆய்ச்சியாகிபவன்னையால்) க்ஷத்ரியஸ்த்ரீ யொருதாயும் இடைச்சி யொருதாயுமாகையாலே, பொதுவறுத்து, இடைச்சியாகிய தாயாலேயென்கிறார். தேவகிப்பிராட்டியாரடிக்கி லித்தனை நோவாதுகாணும். "தாயெடுத்தசிறுகோலுக்குளைந்தோடி" என்கிறபடியே - "இவள் நம்மையதட்டுவதே" என்றுளைந்திறே கிடப்பது. தைவமறியத்தாயானதேயிறே தேவகியார்பக்கலுள்ளது, முலைச்சுவடறிந்ததும் முகம்பழகிற்றும் வளர்ந்ததுமெல்லாமிங்கேயிறே. (அன்றுவெண்ணெய்வார்த்தையுள்) ஊரிலே "வெண்ணெய்களவுபோயிற்று" என்றார்கள், அவ்வளவிலே "நாமிறே யிதுக்கிலக்கு" என்று அழப்புக்கான். "மடம் மெழுகுவாரார்" என்ன, "அஸ்ரோத்ரியன்" என்றார்கள்; "இப்பரப்பெல்லா

மென்றாலே மெழுகப்போமோ" என்றான், அதுபோலே. ஆனோனுமே தேனும் செய்யிலு மிவனைச்சொல்லும்படியிறே யிவன்தீம்புதான். "பல்லாயிரவரிவ்வூரில்பிள்ளைகள்தீமைகள்செய்வா, ரெல்லாமுன்மேலன்றிப்போகாது" என்னும்படியிறே யிருப்பது. ( சிற்றமுண்டழுகூத்தவப்பன்றன்னை ) தாயார் பொடியப்பொடியுண் டழுகிறதசையில் "பையவே நிலையும்" என்கிறபடியே நிற்கிற நிலைவல்லாராடினுப்போலே யிருந்தபடி. அன்றிக்கே, அழுகையாகிற கூத்தையுடைய மஹோபகாரகனையென்றுமாம். இதொன்றுக்கு நிதர்ஶநமாகச்சொல்லுகிறது - "போகுநம்பி" என்றும், "கழகமேறேல்நம்பி" என்று மிவர்கள்சொன்னபோது நிரபேக்ஷனவன் கால்வாங்கிப் போகமாட்டாதே நின்ற நிலைக்கு த்யோதகம். ( அப்பன்றன்னை ) அந்நிலையைக் காட்டிச் சேர்த்துக்கொண்டு தம்மையுண்டாக்கினபடி. ( குருகூர்ச்சடகோப னேத்தியதமிழ்மாலை ) ப்ரணயரோஷத்தாலே "போகுநம்பி" என்றும், "கழகமேறேல்நம்பி" என்றும், "உன்புள்ளுவமறியாதவர்க்குரைநம்பி" என்றும் சொன்னவையெல்லா மந்தரோஷம்போனவாறே ஏத்தாய்விட்டது. ( ஆயிரத்துள்ளிவையுமோர்பத்து ) ஆஶ்ரிதரோடுண்டான பாவபந்தத்தை வெளியிட்ட அத்விதீயமான பத்து. இசையோடே, வாங்மாத்ரத்தாலே, நவிலவுரைப்பார்க்கு - சாதரமாகச்சொல்லுவார்க்கு. ( இல்லைநல்குரவே ) தாரித்ர்யமில்லை. அதாவது - தூதுவிட்டு, அவன்வரக்கொண்டு "புகுரவொட்டோம்" என்று பட்டக்லேஶம்படவேண்டா. சோறும் புடவையும் கிடைக்குமென்கிறதன்று, பகவத்தாரித்ர்யமில்லையென்கிறது ; "உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும்வெற்றிலையு மெல்லாங்கண்ணன்" என்றிருக்கிற விவருடைய நல்குரவிறே, ஆகையாலே. அதிகாராநுகூலமாயிறே அந்நபாநாதிகளுமிருப்பது. "உண்டியேயுடையேயுகந்தோடுமிம் மண்டலத்தொடுங்கூடுவதில்லையான்" என்கிறவர்கள் இத்தை யைஶ்வர்யமாக நினையார்களே. "சென்றொன்றிநின்றதிரு" என்கிறபடியே, அவன்றானேவந்து மேல்விழ நித்யாநுபவம்பண்ணப்பெறுவர்கள். ( அழுகூத்தவப்பன் ) என்கிறவிடத்திலே - "முழுதும் வெண்ணெ யளைந்து தொட்டுண்ணும்" என்கிறபாட்டை யோஜித்துக்கொள்வது. .........*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் ( ஆய்ச்சியித்யாதி ) "நவிலவுரைப்பார்க்கில்லைநல்குரவு" என்றதைக் கடாக்ஷித்தவதாரிகை ( இத்திருவாய்மொழியையித்யாதி ) ( பகவத் ) அநுபவ ( தாரித்ர்யம் ) என்றுகூட்டுவது.

அன்னையாலென்றுதே, ( ஆய்ச்சியாகியவன்னை " என்று விசேஷித்ததுக்கு பாவம் ( க்ஷத்ரியஸ்த்ரீ யித்யாதி ) " இடைச்சியாகிறதாய் " என்றதுக்குக் கருத்தேதென்ன ( தேவகிப்பிராட்டியாரித்யாதி ) யசோதைப்பிராட்டியடித்தால் நோமோவென்ன ( தாயெடுத்தவித்யாதி ) திருமொழி எட்டாம்பத்து மூன்றாந்திரு

மொழி அஞ்சாம்பாட்டு, "வாயெடுத்த" இத்யாதி. உளேந்து - ஈடுபட்டு. பயப்ப ட்டென்றபடி. சிறுகோல் - வைக்கோலென்றபடி. மாத்ருத்வ முபயசாதாரணமா யிருக்க, அவளடித்தால் பொறுக்கப்போகாதென்கைக்கு ஹேதுவேதென்ன (தைவ மறியவித்யாதிவாக்யத்வயம்) வெண்ணெயுண் டழுவென்னுதே "வார்த்தையுள் - அழு" என்று விசேஷித்ததுக்கு பாவம் (ஊரிலேயித்யாதிவாக்யத்வயத்தாலே) தன்னை யெண்ணுதிருக்க, ப்ரசங்கமாத்ரத்தாலே தன்மேலே யாரோபித்துக்கொள் ளுகிறதுக்கு த்ருஷ்டாந்தம் (மடம்மெழுகுவாரித்யாதி) தன்னையெண்ணுதிருக்க தன்பேரிலே யேறிட்டுக்கொண் டிவனழுகைக்கு ஹேதுவேதென்ன (ஆரோனுமித் யாதி) உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் (பல்லாயிரவரித்யாதி) பஞ்சலக்ஷங்குடி யான விவ்வூரில் தீமைசெய்யுமவர்களான பிள்ளைகளநேகமாயிரம்பேர்களிறே. (எ ல்லாமுன்மேலன்றிப்போகாது) தாந்தாம்செய்த தீமைகளை நீசெய்தாய் என் றுன் மேலே வையாநின்றூர்கள், ஆகையாலே யவர்கள் செய்கிற தீமைகளெல்லா முன் மேலே யேறுமதொழியப் புறம்புபோகாதென்றபடி. பெரியாழ்வார்திருமொழி. சீ ற்றமுண்டு - தாயாலேகோபிக்கப்பட்டு. அழுகை கூத்தாகமாட்டாமையாலே, அழு கிறபோது "பையவேநிலையும்" என்கிறபடியே நிற்கிற நிலையென்கிறூர் (தாயார் பொடியவித்யாதி) அதாவது - "ந்ருத்யந்திமிவமாதரம்" (ந்ருத்யந்திமிவமாத ரம்) என்கிறபடியே தமக்காகர்ஷகமாயிருக்கையாலே - "கூத்து" என்கிறுரொன் றபடி. த்விதீயார்த்தத்துக்கு பாவம் - சர்வ நியந்தாவானவனுக்கு ரோதநயோக்ய தை யில்லாமையாலே யழுகிறுனுக பாவித்தானென்றபடி. இப்போது, "அழுகூத் தவப்பன்" என்று வர்ணிக்கிறதென்னென்ன (இதொன்றுக்கித்யாதி) "அப்பன்" என்றதுக்கு - உபகாரகனென்று கீழருளிச்செய்து, ஜநகனென்றர்த்தாந்தரம் (அந் நிலையைக்காட்டியித்யாதி)

ப்ரணயரோஷத்தாலே திரஸ்கரித்து வார்த்தைசொல்லாநிற்க, "ஏத்திய" என்கிறதென்னென்ன (ப்ரணயரோஷத்தாலேயித்யாதி) அதாவது - தம்முடைய ரோஷம்போ யவனைக்கண்டவாறே, ஸ்தோத்ரம்பண்ணிஞற் பிறக்கும் ப்ரீதி யவ னுக்குண்டாகையாலே - "ஏத்திய" என்கிறுரொன்றபடி. "இவையுமோர்" என்று விசேஷித்ததுக்கு பாவம் (ஆஸ்ரிதரோடித்யாதி)

வாங்மாத்ரத்தாலே யென்றது - அர்த்தசஹிதமாகவன்றிக்கே யென்றபடி. நவிலுகை - விரும்புகை. (பகவத்தாரித்ர்ய மில்லையென்கிறது) என்றவநந்தரம்- (அதாவது) இத்யாதிவாக்யமநுசந்தேயம். ஐஸ்வர்யதாரித்ர்ய மில்லையென்கிறதோ வென்ன (சோறுமித்யாதி) சோறும் புடவையும் கிடைக்குமென்றுலோ வென்ன (உண்ணும்சோறித்யாதி) கீழ் அந்வயத்தாலே யருளிச்செய்து, வ்யதிரேகத்தாலே யருளிச்செய்கிறுர் (உண்டியேயித்யாதி) சோறுபுடவைமுதலான ப்ராக்ருதபோ கங்களையே விரும்பிக்கொண்டு திரிகிற விஜ்ஜகத்தோடும் கூடுவதில்லை யித்யர்த்தः. பெருமாள்திருமொழி. நல்குரவில்லையாகில் பெறுகிறதேதென்ன (சென்றென்றி யித்யாதி) தானேவந்து மேல்விழுந்து ஒருநாளும் விடாதேநிற்கும் பகவானுகிற சம்பத்தென்றபடி. நான்முகன் திருவந்தாதி அறுபத்தோராம்பாட்டு, "மனக்கே தம்" இத்யாதி. "நல்குரவு" என்று - முழுச்சொல்லு.

(அழுகூத்தவித்யாதி) "அழுகூத்தவப்பன்" என்றதின் முந்தின வர்த்தத் திலே, "முழுதும்வெண்ணெய்" இத்யாதியை யோஜித்துக்கொள்வ தென்றபடி. பெருமாள்திருமொழி ஏழாந்திருமொழி எட்டாம்பாட்டு. (முழுதும்வெண்ணெய

ளைந்து தொட்டுண்ணும் முகிழிளம் சிறுத்தாமரைக்கையும் ) வெண்ணெயிலுண்டா ன வாதராதிசயத்தாலே குடத்தில் வெண்ணெயெல்லாவற்றையுமளைந்து, “மாளு மோ” என்னும் சாபலத்தாலே தொட்டுண்கிற, இளந்தளிர்போலேயும் தாமரைப் பூப்போலேயு மிருக்கிற சிறுக்கையும். ( எழில்கொள் தாம்புகொண் டடிப்பதற்கெ ள்குநிலையும் அவன்திருமேனியில் ஸ்பர்ஶத்தால் வந்த காந்தியையுடைய தாம்பை க்கொண் டடித்ததுக் கிடெபட்டுநிற்கும்நிலையும். ‘வெண்டயிர்தோய்ந்தசெவ்வாயும்) வெளுத்த தயிர்படிந்த சிவந்த திருப்பவளமும். ( அழுகையும் ) “கள்ளனுக்குவ தேநம்மை” என்றழுகையும். ( அஞ்சிநோக்கு மந்நோக்கும் ) அழப்புக்கவாறே “வாய், வாய்” என்ன, அத்தாலே பயப்பட்டுப் பார்த்துக்கொடுநிற்கு மந்தநோக் கும். ( அணிகொள்செஞ்சிறுவாய்நெளிப்பதுவும் ) அழாதிருக்கவும்மாட்டாதே ய ழவும்மாட்டாதே, அழகிய சிவந்த சிறுத்திருப்பவளத்தை நெளிக்குமதுவும். (தொ ழுகையும்) அபராதபரிஹாரார்த்தமாகப் பண்ணுகிற வஞ்சலியும். ( இவைகண்டவ சோதை ) இவற்றை யிங்கே ஸாக்ஷாத்கரித்த யசோதைப்பிராட்டி. ( தொல்லையின் பத்திறுதிகண்டாளே ) பரமபதத்தில் நிரவதிகமான வாநந்தத்தினவதி கண்டாளி றேயித்யர்த்த꞉. தொல்லை - பெருமை.

வெண்ணெய்வார்த்தையுள் - அனறு - ஆய்ச்சியாகியவன்னையால் - சீற்றமு ண்டழுகூத்தவப்பன்றன்னை என்றந்வயிப்பது. வெண்ணெய்களவுபோனவார்த்தை பிறந்தவளவிலே யிடைச்சியாகிற தாயாலே கோபிக்கப்பட்டழுகிற கூத்தை யுடை ய வுபகாரகனையென்று சப்தார்த்தம். .............................................................*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

---

(மின்னிடைமடவார்.)

பூர்ணத்வாத் கோபநாரீஜநஸுலபதயா லோகநாதாம்புராஶே:
ந்யக்ரோதாக்ரஶயத்வாத் அரிஸுலபதயா ஶ்ரீமஹீவல்லபத்வாத் | நி
ர்தோஷாத்ஸ்த்ரீஜநஸ்நேஹாந்நிரவதிகயஶஸ்ஸ்வீகாராத் ப்ராகூந ஸாக்ஷாத்வேஶே
ஷ்யாவஶ்யமஹிஸா தீத்வா ஹத்ருஷ்ணம் ஶௌரி:. (௫௧)

(பூர்ணத்வாத்) பந்துங்கழலுந் தந்துபோகுநம்பீ - அவாப்த சமஸ்தகாமனு கையாலும்; ( கோபநாரீஜநஸுலபதயா ) தோகைமாமயிலார்கள் நின்னருள்சூடு வார் - ஸ்ரீகோபிமார்க்கு சுலபனுகையாலும்; (லோடநாதம்புராஶே꞉) மாயிருங்க டலைக்கடைந்த - பிராட்டியைப் பெறுகைக்காகத் திருப்பாற்கடலைக்கடைந்தருளு கையாலும்; ( ந்யக்ரோதாக்ரஶயத்வாத் ) ஆலினிளிலையேழுலகுமுண்டன்று நீகி டந்தாய் - ஏழுலோகங்களையும் திருவயிற்றிலேவைத்துக்கொண் டாலிலைமேலே ய த்யாஶ்சர்யமாகக் கண்வளர்ந்தருளுகையாலும்; (அரிஸுலபதயா) திண்சக்கரநிழ றுதொல்படையாய் - திருவாழியை திவ்யாயுதமாக வுடையனுகையாலும்; ( ஸ்ரீம ஹீவல்லபத்வாத் ) அழகியாரிவ்வுலகுமூன்றுக்கும் தேவிமைதகுவார்பலருளர்-பெ ரியபிராட்டியாருக்கும் பூமிப்பிராட்டியாருக்கும் வல்லபனுகையாலும்; (நிர்த்தோ

ஷேர்த்துங்கபாவாத்) நின்மலாநெடியாய் - ஹேயப்ரத்யநீகனுய் மஹோந்நதனு கையாலும்; (நிரவதிகயஶஃ) கணக்கில் சீர்த்திவெள்ளம் - நிரவதிககீர்த்தியையுடையனுகையாலும்; (ஸத்வஶீகாரித்ருக்த்வாத்) தாமரைத்தடங்கண் விழிகளினகவலைப்படுப்பான் - ஆஶ்ரிதரைவஶீகரிக்கிற திருக்கண்மலரை யுடையனுகையாலும்; (மோக்ஷஸ்பர்ஶேச்சயாச) ஆயர்குலத்தை வீடுய்யத்தோன்றிய - ஆஶ்ரிதரான கோபர்களுடைய உத்தரணத்தி லிச்சையையுடையனுகையாலும் வண்டுவரைப்பெருமாளாஶ்ரிதரிருந்தவிடத்திலேதானேவந்து மேல்விழுந்து ரக்ஷித்தருளுமென்று "மின்னிடைமடவார்" என்கிறஶ்லோகத்திலே ஆழ்வாரருளிச்செய்தாரென்கிருர்........(சுக)

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

மின்னிடையார்சேர்கண்ணன்மெத்தெனவந்தானென்று
தன்னிலைபோய்ப்பெண்ணிலையாய்த்தான்றள்ளி - யுன்னுடனே
கூடேனென்றூடுங்குருகையர்கோன்ருெடாழவே
நாடோறுநெஞ்சமேநல்கு. (ருஉ)

(மின்னிடையார்) இதில் - ப்ரணயரோஷத்தாலேயூடினபாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிருர். எங்ஙனேயென்னில்; தம்மாற்ருமையாலே * நோற்றநாலிலும் சரணம்புக்குத் தூதுவிட்டு, இத்தனையும்செய்தவிடத்து மவன்வரக்காணுமையாலே ப்ரணயரோஷம் தலையெடுத்து, "அவன்வந்தாலு மினி அவனோடு கலப்போமல்லோம்" [illegible]று பரிசரவர்த்திகளான் சுஹ்ருத்துக்களோடேதாம் துணிந்திருக்க, அவ[illegible] கஜேந்த்ராழ்வான் முதலான வாஶ்ரிதராபத்திலே முற்பாடனுய்ச்சென்[illegible]ருந்திருநப்போக்கி ரக்ஷித்தநா மாழ்வாருக்குப் பிற்பாடரானேனுமே" என்று பிராண்ட விருப்போரநொந்து, தம்முடனேகலப்பதாகப் பதறிநடந்துவந்து, வடிவ[illegible]னக்கு விஜசேஷ்டிதங்களாலும் தன்செல்லாமையாலும் தம்மூடலைத்தீர்த்துத் தம்முட[illegible]ாசக்தியை [illegible]ந்தபடியை; க்ருஷ்ணன்வரவுதாழ்க்கையாலே யவனோடேயூடி, "இனிக்கூடோம்" என்றிருந்த இடைப்பெண்களை, ஸௌந்தர்யாதிகளாலும் தன்செல்லாமையாலு மூடலைத்தீர்த்து க்ருஷ்ணன் தன்னுடனே சேர்த்துக்கொண்ட வ்ருத்தாந்தத்தின்மேலே வைத்தருளிச்செய்கிற * மின்னிடைமடவாரிலர்த்தத்தை "மின்னிடையார்சேர்கண்ணன்" என்றுதொடங்கி யருளிச்செய்கிருரென்கை.

(மின்னிடையார்சேர்கண்ணன் மெத்தெனவந்தானென்று) மின்னிடைமடவாருடனேசேர்ந்தக்ருஷ்ணன் அங்குத்தையி லங்யபரதையாலே ஆற்ருமைக்குதவவாராமல் மந்தகதியாய்வந்தானென்று. அவன்தங்களிடத்திற்பண்ணு மபிநிவேசத்தை யங்யதாகரித்துத் தங்களாற்ருமையாலே அவன்பதற்றத்தையு மஸத்கல்பமாக்குகிற - "மின்னிடைமடவார்கள் நின்னருள்சூடுவார்முன்பு நானதஞ்சுவன்" என்றத்தைக்கடாக்ஷித்தருளிச்செய்தபடி. (தன்னிலைபோய்ப் பெண்ணிலையாய்) அதாவ

து - "குருகூர்ச்சடகோபன்" என்கிற வாகாரங்குலைந்து கோபிமாருடைய வாகாரத்தையுடையராய். (தான்தள்ளி) தாங்கள் கழகமிருக்கிற சங்கேதஸ்த்தலத்திலே புகுருவதாக அவனருகேவர, "போகுநம்பீ," "குழலூதுபோயிருந்தே," "போயிருந்து நின்புள்ளுவமறியாதவர்க்குரைநம்பி," "எம்மைநீகழறேலே," "எங்குழலுறுபூவையொடுங்கிளியோடுங்குழகேலே," "கழகமேறேல்நம்பி," "கன்மமன்றெங்கள்கையிற்பாவைபறிப்பது," "உனக்கேலும் பிழைபிழையே" என்று அவனுக்கவகாசமறும்படி "ப்ரணயாச்சாபிமாநாச்சபரிசிக்ஷுபராகவம்" (ப்ரணயாச்சாபிமாநாச்சபரிசிக்ஷபராகவம்) என்றாடும்படியையும்; அவனும், "உன்றாமரைபுரைகண்ணிணையும் செவ்வாய்முறுவலுமாகுலங்கள்செய்ய" என்றும், "நின்செய்யவாயிருங்கனியுங்கண்களும் விபரீதமிந்நாள்" என்றும், "வன்மமேசொல்லி யெம்மைநீவிளையாடுதி" என்றும், "உகவையால்நெஞ்சமுள்ளுருகியுன்றாமரைத்தடங்கண் விழிகளினகவலைப்படுப்பானழித்தாயுன்திருவடியால்" என்று மென்னும்படி ஸ்மிதவீக்ஷணங்களாலும் பாவகர்ப்பமான வுக்திகளாலும் சேஷ்டிதங்களாலு மூடலைத்தீர்த்துச் சேரவிட்டுக்கொள்ள, "கூத்தவப்பன்றன்னைக் குருகூர்ச்சடகோப னேத்தியதமிழ்மாலை" என்னும்படி கூடினபடியையுமருளிச்செய்கையாலே; (உன்னுடனேகூடேனென்றாடும் குருகையர்கோன்) என்றருளிச்செய்தவிதிலே - கூடினபடியு மிவர்க்குவிவக்ஷிதம். மேலே "நல்லவலத்தால்நம்மைச் சேர்த்தோன்" என்றிறே யருளிச்செய்யப்புகுகிறது; அதுக்குச்சேர விங்கேகூட வேணுமிறே. (ஊடுங்குருகையர்கோன்றுள்தொழவே நாடோறும்நெஞ்சமேநல்கு) அவனல்பம் தாழ்த்ததுக்கூடும்படியான ப்ரேமத்தையுடைய வாழ்வார்திருவடிகளை நித்யஸேவைபண்ணும்படி மநஸ்ஸே நீயும் நித்யமாக ஸஹகாரி கரி. நல்குதல்-கொடுத்தல். "மநஏவ" இறே.................................. ......(௫உ)

ஆறும்பத்தில் - இரண்டாந்திருவாய்மொழி மு ...

ஆக - திருவாய்மொழி - ௫உ.—பாட்டு - ௫எச.

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஆரம்பத்து.

## மூன்றாந்திருவாய்மொழி.

### நல்குரவும் – ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

( நல்குரவும் ) இப்படி " எம்பெருமான்றிறத்துப் படுவோமல்லோம் " என்றிருந்தவாழ்வார், தம்மோடே ஸம்ஶ்லேஷிக்கைக்காகத் திருவிண்ணகரிலே யெழுந்தருளின வெம்பெருமானுடைய நிரவதிகஸௌந்தர்யத்தாலும், ஸ்வஸம்ஶ்லேஷாலாப ஜநிதமான அவஸாதத்தாலும் நிவ்ருத்த ப்ரணயகோபராய் அவனோடே ஸம்ஶ்லேஷித்து, தத் ஸம்ஶ்லேஷஜநித நிரவதிகப்ரீதியாலே; ஸஸம்ப்ரமமாக அந்தத்திருவிண்ணகரிலே காமவனைக்கண்டு ஸம்ஶ்லேஷித்தபடியையும், கீழ் ப்ரஸ்துதமான ஜகதைஶ்வர்யத்தையும், அசேஷதோஷ ப்ரத்யநீகத்வ ஸௌந்தர்யாத் யஸங்க்யேய கல்யாணகுணங்களையும் பேசுகிறார் ...............................*

### பன்னீராயிரப்படி.

மூன்றாந்திருவாய்மொழியில், இப்படிவிமுகரானதம்மை யபிமுகராம்படி பண்ணிக்கொண்ட விருத்தாகாரப்ரசங்கத்தாலே, பரஸ்பரவிருத்தமான பதார்த்தங்களைத் தனக்கு விபூதியாக கடிப்பித்துக்கொண்டு நிற்கவல்ல ஈஶ்வரனுடைய அகடிதகடநாசக்தியை யபரோக்ஷித்து; அதுக்கடியான ஸர்வவ்யாபகத்வத்தையும், இதரவிஸஜாதீயதையையும், உஜ்ஜ்வலகீர்த்தித்வத்தையும், அதிசயிதக்ருபாயோகத்தையும், லீலாவிபூதிநிர்வாஹகத்வத்தையும், ஆஶ்ரிதாநுபாவ்யமான ஔஜ்ஜ்வல்யத்தையும், ஸர்வலோக ஶரண்யத்வத்தையும், ஆஶ்ரிதபவ்யதையையும், நிருபமோபகாரகத்வத்தையும், அஸாதாரண ரக்ஷகத்வத்தையு மநுஸந்தித்து, இவ்வோவாகாரங்களாலே அகடிதங்களை கடிப்பிக்கவல்லவன், நித்யஸம்ஸாரிகளான நம்மையும் நித்யஸூரிகளோடே சேர்க்கவல்லவனென்று அவனுடைய பலப்ரதத்வசக்தியை யநுஸந்தித்து, தாம் கண்டபடியே யுபதேசித்தருளுகிறார் ...................................*

### ஈடு.

" ' இப்படிதாழநின்றவன் ஸர்வேஶ்வரனென்கிறார் ' என்றுபிள்ளான்பணிக்கும் " என்றருளிச்செய்வர். அதாகிறது - "யாவையும்யாவரும்பிழையாமல் - பிணக்கி" என்று கீழே ப்ரஸ்துதமான ஸர்வேஶ்வரத்வத்தை யருளிச்செய்கிறானென்று. " இதிலேயொருவாசிதோற்ற பட்

டரருளிச்செய்வர் " என்று ஜீயரருளிச்செய்வர். அதாவது - "சேரோம்" என்ற அபிஸந்தியைக்குலைத்துத் தம்மைச்சேரவிட்டுக்கொண்ட ஆஶ்சர்யத்தைக்கண்டு விஸ்மிதராகிறுரென்று. சேரவிட்டுக்கொண்டபடி தானநேகமிறே - முதல் தன்னிலேதம்மையு மறியாதே யவனையுமறியாதேயிருக்க, தன்படிகளை யறிவித்துக் கூடவிட்டுக்கொண்டான்; உள்ளே புகுர நின்று ஸ்வ நிகர்ஷத்தையு மவனுடையவுத்கர்ஷத்தையு மநுசந்தித்து " நாமங்குத்தைக்கயோக்யர் " என்றகல, தன்செல்லாமையைக் காட்டிப்பொருந்தவிட்டுக்கொண்டான்; (* வளவேழுலகிலே.) இனி அவைபோலன்றிறே இது; ஒன்றுல் பரிஹரிக்கலாமதன்றே. அகலில்குற்றம், அணுகில் குற்றமாயிருப்பதொன்றிறே. ஜாதிசண்டாலனைநோக்கில் ப்ராயஶ்சித்தமுண்டு, ப்ரணயாபராதசண்டாலர்க்கதுவுமில்லை. ஆக இப்படிகளாலே தன்செல்லாமையைக்காட்டி அவன்பொருந்தவிட்டுக்கொண்டபடியைக்கண்டு விஸ்மிதராகிறவிவர்க்கு, " இவ்வளவல்லகாணும் நம்முடையவாஶ்சர்யங்களிருக்கும்படி, லோகத்தில் தன்னில்தான் சேராதவிருத்தபதார்த்தங்களுமெல்லாம் நம்மோடே சேர்ந்திருக்கிறபடிபாரீர், ஆனபின்பு நம்மோடுசேராதாரில்லைகாணும் " என்று தன்னுடைய விருத்த விபூதிகத்வத்தைக்காட்டிக்கொடுக்கக்கண்டு; " இதிருந்தபடியென்; " கொடுத்தசைதங்யத்தைக்கொண்டு அகலுகைக்குடலாயிருக்கிற விவற்றையெல்லாம் கூடவிட்டுக்கொடுநிற்கிறபடிகளும்; இனிநிமித்தமானது உபாதாநமாகமாட்டாது, உபாதாநமானது நிமித்தமாகமாட்டாது, இங்ஙனேயிருக்க இவையெல்லாம் தானுயிருக்கிறபடியையும்; இவற்றோடுகூடியிருக்கச்செய்தேயு மிவற்றில்தோஷங்கள் தனக்குஸ்பர்ஶியாமலிருக்கிறபடியையும்; தோஷந்தட்டாமல் கடக்கவிருக்கையன்றிக்கே நியந்தாவாயிருக்கிறபடியையும், இனிநாட்டில் ப்ராப்யமானது ப்ராபகமாகமாட்டாது, ப்ராபகமானது ப்ராப்யமாகமாட்டாது, இங்ஙனேயிருக்க, ப்ராப்யப்ராபகங்களிரண்டும் தானேயாயிருக்கிறபடியையும்; மற்றுமிவனுடைய சௌந்தர்யசீலாதிகளையுமநுசந்தித்து; இப்படி உபகாரசீலனுன சர்வேஶ்வரன் திருவிண்ணகரிலேவந்து சந்நிஹிதனுனுன், இவனல்லது நமக்கு பரமபந்துக்களில்லையென்றறுதியிட்டு, இவன்றிருவடிகளல்லது பற்றில்லை என்று பேசுகிறுராயிருக்கிறது.

முதற்றிருவாய்மொழியிலே - பரத்வாநுபவம்பண்ணி, மூன்றுந் திருவாய்மொழியிலே - சௌலப்யத்தை யநுசந்தித்து, " எத்திறம் " என்றுகிடந்தார்; இங்கு - "போகுநம்பீ" என்று தள்ளச்செய்தேயும் கால்வாங்கமாட்டாதே நின்றநீர்மையை யநுசந்தித்து, அதுக்கெதிர்த்தட்டான பரத்வத்தை யநுசந்திக்கிறுர்; * மயர்வறமதிநலமருளப்பெற்றவரிறே, மேன்மையை யநுசந்திப்பது, நீர்மையையநுசந்திப்பதாமத்தனையிறே........................................................................

## ஜீயர் அரும்பதம்.

நல்குரவுப்ரவேஶ, கீழ-நீர்மையைச்சொன்னவர், இங்கே-சர்வேஶ்வரத்வத்தைச்சொல்லுவா னென்னென்கிறசங்கையிலே; பெரியவனெளிமையே குணமாவதென்கிற விவக்ஷையாலே பரத்வத்தைச்சொல்லுகிறானென்னுமத்தை யாப்தஸம்வாதமுகேந தர்ஶிப்பிக்கிறார் (இப்படிதாழநின்றவனித்யாதி) இப்படிதாழநின்றவனென்றது -" போருநம்பீ, " " கழகமேறேல்நம்பி " என்னலாம்படி தாழநின்றவனென்றபடி. (தாழநின்றவன்) காபுருஷனன்று (சர்வேஶ்வரனென்கிறார்) என்று கூட்டுவது. விவரணம் (அதாகிறதித்யாதி)

ஒருவாசிதோற்றவென்றது - பரத்வப்ரதிபாதகமா யிருக்கச்செய்தே விருத்தவிபூதிகத்வத்தை யருளிச்செய்கையாலே ஒருவிசேஷந்தோற்றவென்றபடி. (இதிலேயொருவாசிதோற்ற) என்கையாலே - இவ்வர்த்தத்தை யங்கீகரித்தமைதோற்றுகிறது. (அதாவது) இத்யாதிவாக்யத்துக்கு தாத்பர்யம்; இதில் - சர்வேஶ்வரத்வத்தைச்சொல்லுகிறாராகில், உபயவிபூதிக்கும் நிர்வாஹகனென்கிற விவ்வளவைச்சொல்லவமைந்திருக்க, " நல்குரவும்செல்வும் " என்றுதொடங்கி யித்திருவாய்மொழிமுடிய - விருத்தவிபூதிகத்வத்தை யருளிச்செய்கிறதுக்கு ப்ரயோஜநமடைவுபடாமையாலே, ப்ரணயரோஷத்தாலே "சேரோம்" என்றுமுடிந்துபோகப்புக்கதம்மைத்தன்னுடைய சக்திவிசேஷத்தாலே சேரவிட்டுக்கொண்டமைக்குத்யோதகமாக விருத்தவிபூதிகத்வத்தைக்காட்டித்தந்தானென்று. கீழேயும்சேரவிட்டுக்கொண்டதில்லையோ, அதிலிதுக்கு வாசியேதென்ன;வாசியை யறிவிப்பாராகவதிஷ்டிகை (சேரவிட்டித்யாதி) அவற்றினுடைய ஸ்வரூபங்களை விசதமாக தர்ஶிப்பியாநின்றுகொண்டு, அவற்றிலுமிதுவே யதிகென்கிறார் (முதல்தன்னிலே யித்யாதிவாக்யங்களாலே) முதல்தன்னிலே யித்யாதிக்கு-* மயர்வறமதிநலமருளிச்சேரவிட்டுக்கொண்டமையிலே நோக்கு. உள்ளேபுகுரவித்யாதிக்கு - * வளவேழுலகிலே நோக்கு. (இனியவைபோலன்றிறே ) இத்யாதிவாக்யத்துக்குக்கருத்து - தன்ஸ்வரூபாதிகளையும் தனக்கிவர்பக்கலுண்டான வ்யாமோஹத்தையு மறியாதே யகன்றவிவரை, அவற்றை யறிவித்துக் கூடவிட்டுக்கொண்டதாகையாலே கீழ்ச்சொன்னவிரண்டும் சுலபம்; இது, தன்பக்கல் பாவபந்தம் முருடுகொளுந்தி யகன்றவராகையாலே யொருஹேதுக்களாலும் பரிஹரிக்கப்போகாதாகையாலே யரிதென்று. இதுபரிஹரிக்கப்போகாதென்னுமத்தை ஸ்த்ரீகரிக்கிறார் ( அகலிலித்யாதி ) " பாவியேன்மனத்தே " என்றத்தைக்கடாக்ஷித்து, ஈஶ்வரன்மேல் விழாநிற்க முகம்மாறியிருந்த விது நிஷ்க்ருதியில்லாத பாபமென்கிறார் ( ஜாதிசண்டாலனையித்யாதிவாக்யத்வயத்தாலே ) நோக்கினால் - திருத்தப்பார்த்தாலித்யர்த்தஃ. ( ப்ரணயாபராத ) இத்யாதிவாக்யத்துக்குபாவம் - நாயகவிஷயத்தில் நாயகிக்குண்டான ப்ரணயகோபத்துக்கு பரிஹாரமில்லையென்று. ப்ரணயத்தாலேபிறந்த கோபமாகிற வபராதத்தாலே பாபிஷ்டரானவர்க்கு ப்ராயஶ்சித்தமில்லையென்று சப்தார்த்தம். " ப்ரணயாபராதசண்டாலனென்று - ஈஶ்வரனைச்சொல்லுகிறதென்னில்; அதுசேராது, ' பாவியேன் மனத்தேயுறைகின்ற ' என்கையாலே ஆழ்வார் ப்ரணயகோபந்தன்னையே சொல்லுகிறது " என்றருளிச்செய்வர். ஆகவென்றது - கீழ் சேரவிட்டுக்கொண்டத்தைப்பற்ற விதகடிதமாயிருக்கச்செய்தேயு மென்றபடி. இப்படிகளாலேயென்றது-கீழிற்றிருவாய்மொழியிற்சொன்ன ப்ரகாரங்களாலேயென்றபடி. ( விஸ்மிதராகிறவிவர்க்கு - காட்டிக்கொடுக்க ) என்றந்வயம்.

"எண்ணமாய்மறப்பாய்" என்றத்தைப்பற்ற (கொடுத்தசைதந்யத்தையித்யாதி) "பெய்தகாவுகண்டீர்" என்றத்தைப்பற்ற (இனிநிமித்தமானதித்யாதி) "அல்லனாய்" இத்யாதியைப்பற்ற (இவற்றேடித்யாதி) "பரஞ்சுடர்" என்றத்தைப்பற்ற (தோஷந்தட்டாமலித்யாதி) "என்சரண், என்னையாளுடை" என்றத்தைப்பற்ற (இனிநாட்டிலித்யாதி) "பொன்னப்பன்" இத்யாதியையும், "தந்தனன் தன தாள்நிழல்" என்றத்தையும்பற்ற (சௌந்தர்ய சீலாதிகளையென்றது) "என்னப்பனெனக்காயிகுளாய்" என்றத்தைப்பற்ற (பரமபந்துக்களில்லையென்றது) "கழல்களன்றி மற்றோர்களைகணிலம்" என்றத்தைப்பற்ற (இவன்றிருவடிகளல்லதித்யாதி)

(பரத்வத்தையநுசந்திக்கிறார்) என்றவகந்தரம், இப்படி வ்யுத்க்ரமமாக வருளிச்செய்கிறதுக்கடியேதென்னிலென்று கூட்டுவது. மேல்பரிஹாரம் (மயர்வறவித்யாதி) அதாவது - மயர்வறமதிநல மருளப்பெற்றவராகையாலே ப்ராவண்யாதிசயத்தாலே யருளிச்செய்கையாலே தோஷமில்லையென்றபடி......................*

## மூன்றாந் திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

நல்குரவுஞ்செல்வுநரகுஞ்சுவர்க்கமுமாய்
வெல்பகையுநட்பும்விடமுமமுதமுமாய்ப்
பல்வகையும்பரந்தபெருமானென்னையாள்வானைச்
செல்வமல்குகுடித்திருவிண்ணகர்க்கண்டேனே.

### ஆறுயிரப்படி.

தாரித்ர்ய சம்பந்நரக ஸ்வர்க்கா ஸ்நேஹ ஸ்நேஹ விஷாம்ருதப்ரப்ருதி விவிதபதார்த்தாந்த ராத்மபூதனாய், சர்வேஶ்வரனாயிருந்துவைத்து என்னோடே ஸம்ஶ்லேஷித்த வெம்பெருமானை, தத்கைங்கர்ய ரதித்வ சம்பத் ஸம்ருத்த திவ்யஜந பரிபூர்ணமான திருவிண்ணகரிலே கண்டேனென்கிறார்..................................................*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், ப்ரீத்யப்ரீதிஹேதுவான விருத்தார்த்தங்களை விபூதியாகவுடைய சர்வவ்யாபகனைத் திருவிண்ணகரிலே கண்டேனென்கிறார்.

நல்குரவும் - பதார்த்தஸங்கோசரூபதாரித்ர்யமும். செல்வும் - தத்விகாஸரூபமான சம்பத்தும். நரகும்-துஃகஸ்த்தாநமானநரகமும். சுவர்க்கமும்-சுகஸ்த்தாநமான ஸ்வர்க்கமும். ஆய்-ஆய். வெல்-எதிர்த்தலையைச்சாய்க்கும். பகையும்-சாத்ரவமும். நட்பும்-அதுக்கெதிர்த்தட்டானமைத்ரமும். விடமும் - முடிக்கும்விஷமும் அமுதமும்-உஜ்ஜீவிப்பிக்குமம்ருதமும். ஆய்-ஆய். இப்படி, பல்வகையும் - பலவகையாலும். பரந்த - வ்யாப்தனான. பெருமான்-சர்வாதிகனாய். என்னை - இவ்வாகாரத்தையெனக்கு ப்ரகாசிப்பித்து. ஆள்வானை-அடிமைகொண்ட ஸ்வாமியானவனை. செல்வம்-பகவதநுபவைஶ்வர்யம். மல்கு - மிகாநிற்கிற. குடி - சஜ்ஜநஸமவாயத்தையுடைய. திருவிண்ணகர்-திருவிண்ணகரிலே. கண்டேன் - அபரோக்ஷிக்கப்பெற்றேன்.

ஆயென்கிறது - ப்ரதிபதம்சேர்த்துக்கொள்வது ..................................

## ஈடு - முதற்பாட்டு.

விருத்தவிபூதிகனான சர்வேச்வரனைத் திருவிண்ணகரிலே காணப்பெற்றேனென்கிறார்.

(நல்குரவும்செல்வும்) தாரித்ர்யமும், அதுக்கெதிர்த்தட்டான ஐச்வர்யமும். (நரகும்சுவர்க்கமும்) துःகைகதாநமான நரகமும், சுகைகதாநமான ஸ்வர்க்கமும். (வெல்பகையும்நட்பும்) சமாதாநத்தாலே மீளுமதன்றியிலே வென்றே விடவேண்டும்பகையும், அதுக்கெதிர்த்தட்டான வுறவும். (விடமுமமுதமுமாய்) முடித்தேவிடுவதானவிஷமும், போனவுயிரை மீட்கவற்றான வம்ருதமுமாய். போனவுயிரை மீட்டுத்தான் போக்யமுமாயிறே அம்ருதமிருப்பது. அநிஷ்டமான தாரித்ர்யாதிகளோடு இஷ்டமானஐஸ்வர்யாதிகளோடுவாசியறத்ததீயத்வாகாரத்தாலே யிவர்க்குத்தேப்யமாயிருக்குமிறே. ஆய் என்றது - ப்ரதிபதம்சேர்த்துக்கொள்வது. (பல்வகையும் பரந்தபெருமான்) ஜ்ஞாநாதிகனான தானுங்கூட விபூதியைப்பேசப்புக்கு "நாஸ்த்யந்தோவிஸ்தரஸ்யமே" (நாஸ்த்யந்தோவிஸ்தரஸ்யமே) என்று இளைத்துக் கைவாங்கினத்தை, இத்தனை ப்ரேமத்தில் கனமுடைய இவர்க்குச்சொல்லப்போகாதிறே. ஆனாலும் சிறிதுபேசினாராகவும் வேணுமிறே. வஸ்து தனக்கு விசேஷணத்தையொழிய ப்ரதீதியில்லையிறே, "நிர்விசேஷம் வஸ்து" (நிர்விஶேஷம் வஸ்து) என்று விசேஷணரஹிதமாக மாயாவாதம்சொல்லுகிறான்றே. அங்ஙனேயாகில் மோக்ஷசாஸ்த்ரந்தான் வேண்டாவே. வஸ்து சத்பாவங்கொள்ளும்போது விசேஷணம் வ்யாவர்த்தகமாயல்லதிராது. ஒன்றுக்கொன்று விசேஷணமாம்போது அந்யயோகவ்யவச்சேதம்பண்ணிக்கொண்டல்லது விசேஷணமாகமாட்டாது, இங்கிவனுக்கு ஸ்வவ்யதிரிக்தங்களடங்கலும் விசேஷணமாயிருக்கையாலே அந்யயோகவ்யவச்சேதம்பண்ணவொண்ணாது, ஆனால் விருத்தவிசேஷணங்களேகவ்யக்தியிலே சங்கதமாகிறபடி யெங்ஙனேயென்னில்; அயோகவ்யவச்சேதம் பண்ணிக்கொண்டு சங்கதமாகிறது. இவர்தாமவனை யநுபவிக்கவாகிலிழிகிறது,இவ்விருத்தவிசேஷணங்களைச் சொல்லுகிற விவற்றால் ப்ரயோஜநமென்னென்னில்; அவனையுள்ளபடிகண்டநுபவிக்கவேணுமே. ராஜபுத்ரனுக்கு ராஜாவினுடைய போகஸ்த்தாநமான வோலக்கத்தோடு சிறைக்கூடத்தோடு வாசியற "என்பிதாவினைப்வர்யம்" என்றிருக்குமிறே. இவர்தமக் கிங்குண்டானவநுசந்தாநம், முக்தனுக்கு லீலாவிபூத் யநுசந்தாநம்போலேயிறே. "நோபஜநம்ஸ்மரந்நிதம்ஶரீரம்" (நோபஜநம்ஸ்மரந்நிதம்ஶரீரம்) என்னுநிற்கச்செய்தே, முக்தனுக்கு லீலாவிபூதி ததீயத்வாகாரத்தாலே யுத்தேப்யமாகாநின்றதிறே; இவர்க்கு மப்படி முக்தரோடொக்க, ததீயத்வாகாரமொழிய ஆகாராந்தரஸ்ம்ருதி யில்லாதபடி, இங்கேயிருக்கச்செய்தே * மயர்வறுத்துக் கொடுத்தான். ஸ்வசம்பந்தத்

தாலே பார்த்தபோது கால்வாங்கியல்லது நிற்கவொண்ணுதபடி த்யாஜ்யமாய்த்தோற்றும்; ஜ்ஞாநாஜ்ஞாநங்களுக்குப் பொதுவான இவ்விருப்பைக்கழித்து, அதுக்குக் கலக்கமில்லாத தேசத்திலேபோகையிலே த்வரிக்கக்கடவனிறே. ( பல்வகையும்பரந்தபெருமான் ) இப்படி விபூதிமுகத்தாலே பலபடியாக விஸ்த்ருதனுனவன். ( பரந்தபெருமா னென்னையாள்வானை ) இந்த வ்யாப்தியெல்லாம் தம்மை யகப்படுத்தவென்றிருக்கிருர், ஒருவனை யகப்படுத்தநினைத்தா ரூரைவளையுமாபோலே. ( செல்வம்மல்குகுடித் திருவிண்ணகர்க்கண்டேனே ) மருபூமியிலே பொய்கை கண்டாப்போலே. ( செல்வம்மல்குகுடி ) மிக்கசம்பத்தையுடைத்தான குடிகளையுடைத்தான திருவிண்ணகர். " 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑍋 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌿𑌸𑌮𑍍𑌪𑌨𑍍𑌨𑌃 " ( லக்ஷ்மணோலக்ஷ்மிஸம்பந்நঃ ) என்னுமாபோலே - சம்பந்தமொத்திருக்கச்செய்தே கடக்கக்கிடந்த ஸ்ரீபரதாழ்வானைப்போலன்றிக்கே, கிட்டநின்றடிமைசெய்யு மிளையபெருமாளைப்போலே. ( திருவிண்ணகர்க்கண்டேனே ) " காணவேணும் " என்னுமாசையோடே யிருந்து தேஹாந்தரப்ராப்திபண்ணி தேசாந்தரத்திலே போய்க் காண்கையன்றிக்கே, பசித்தவிடத்தே சோறுபெறுமாபோலே ஆசைப்பட்டவிடத்தே யநுபவிக்கப்பெறுகை. " நான்சென்றுநாடி நறையூரிற் கண்டேன் " என்னுமாபோலே.............................. ....................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (நல்குரவித்யாதி) * நல்குரவுதொடங்கி, " திருவிண்ணகர்க்கண்டேனே " என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (விருத்தேத்யாதி)

அம்ருதம் போக்யமா மதொழியப்போன வுயிரைமீட்கவற்ருய் மிருக்குமோவென்ன ( போனவுயிரையித்யாதி ) அதாவது - அம்ருதத்துக்கிரண்டாகாரமுமுண்டென்றபடி. இஷ்டமான வைஶ்வர்யாதிகளையொழிய அநிஷ்டமான தாரித்ர்யாதிகளைச்சொல்லுவானென்னென்ன ( அநிஷ்டமானவித்யாதி ) யத்வா, பிள்ளான்நிர்வாஹத்திலே, பரத்வத்தைச்சொல்லுகிருராகில் விருத்தவிபூதிகத்வம் சொல்லுவானென்னென்ன (அநிஷ்டமானவித்யாதி) என்னுதல்.

இன்னம் சிலவற்றைச்சொல்லாதே, " பல்வகையும்பரந்த " என்றுதிரளச்சொல்லுவா னென்னென்ன (ஜ்ஞாநாதிகனுனவித்யாதி) "𑌹𑌨𑍍𑌤 𑌤𑍇 𑌕𑌥𑌯𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾 𑌹𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌭𑍂𑌤𑌯𑌃 । 𑌪𑍍𑌰𑌾𑌧𑌾𑌨𑍍𑌯𑌤𑌃 𑌕𑍁𑌰𑍁𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠 𑌨𑌾𑌸𑍍𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑍋 𑌵𑌿𑌸𑍍𑌤𑌰𑌸𑍍𑌯 𑌮𑍇" ( ஹந்ததேகதயிஷ்யாமிவிபூதீராத்மநஶ்ஶுபாঃ। ப்ராதாந்யதঃ குருஶ்ரேஷ்ட்டநாஸ்த்யந்தோவிஸ்தரஸ்யமே ) இதிபகவத்கீதாஸூக்தமே. ஆனுல், முதலிலே " பல்வகையும்பரந்த " என்றுதே சிலவற்றைப்பிரித்துச்சொல்லுவானென்னென்ன (ஆனுலுமித்யாதி) அதாவது - சொல்லவொண்ணுதென்னும்போது, சிலசொல்லிப்பின்னை " முடியாது " என்னவேணுமிறேயென்றபடி. அதுவேண்டுவானென்னென்ன (வஸ்துதனக்கித்யாதி) விசேஷணமின்றியிலே வஸ்து ப்ரதீதமாகவொண்ணுதோவென்ன; அதுமாயாவாதிகளுக்கொழிய விவர்க்கு பக்ஷமன்றென்கி

ருர் (நிர்விசேஷமித்யாதி) "நிர்விசேஷமேவஸ்து" என்ருல் விரோதமேதென்ன (அங்ஙனேயாகிலித்யாதி) அதாவது - "ஸவிஶேஷவஸ்துவிஷயத்வாத்ஸர்வப்ரமாணாநாம்" (ஸவிஶேஷவஸ்துவிஷயத்வாத்ஸர்வப்ரமாணநாம்) என்கையாலே மோக்ஷசாஸ்த்ரமும் ஸவிஶேஷப்ரஹ்மப்ரதிபாதகமொழிய நிர்விசேஷவஸ்து ப்ரதிபாதகமல்லாமையாலே, மோக்ஷசாஸ்த்ரம் வ்யர்த்தமாமென்றபடி. வஸ்துதனக்கு விசேஷணத்தையொழிய ப்ரதீதியில்லையென்ருர் - கீழே; அதுக்குஹேதுவை யருளிச்செய்கிருர் ( வஸ்துஸத்பாவமித்யாதி ) ஸ்வேதரவ்யா வ்ருத்தத்வேநவஸ்துவை யங்கீகரிக்கவேண்டுகையாலென்றபடி. "விசேஷணத்தை வ்யாவர்த்தகமாகவுடையதேவஸ்து" என்ருல், "நல்குரவும்" என்கிறவிடத்தி லதுசொல்லப்போகாதென்று சங்கிக்கிருர் (ஒன்றுக்கொன்றித்யாதி வாக்யத்ரயத்தாலே) அந்யயோகவ்யவச்சேதத்துக்குதாஹரணம் - ராமஏவதநுஷ்மானென்று. அயோக வ்யவச்சேதத்துக்குதாஹரணம் - ராமோதநுஷ்மாநேவவென்று. விசேஷணமாவது - அந்யயோக வ்யவச்சேதத்வாரா ஸ்வேதரங்களிற்காட்டில் ஸ்வாஶ்ரயத்தை வ்யாவர்த்திப்பிக்குமதென்றபடி. இங்கந்யயோக வ்யவச்சேதமுண்டோவென்ன ( இங்கிவனுக்கித்யாதி ) அயோக வ்யவச்சேதமாத்ரமென்றுகருத்து. கீழே "அநிஷ்டமான தாரித்ர்யாதிகள்" என்றவாக்யத்தை சங்காபரிஹாரபூர்வகமாக விவரிக்கிருர் (இவர்தாமவனையித்யாதி) ஹேயமான வித்தைக்கூட்டி யநுபவிக்கும்போது துःகரூபமாயிராதோவென்ன ( ராஜபுத்ரனுக்கித்யாதி ) ததீயத்வாகாரத்தாலே யுத்தேஶ்யமாவது முக்தனுக்கன்ருேவென்ன ( இவர்தமக்கித்யாதி ) "அவன்ருனே நினையான்" என்றுசொல்லுகிறதேயென்ன ( கோபஜாமித்யாதி ) ஆக, இத்தால் - கர்ம நிபந்தநமான வாகாரத்தாலே ஸ்மரியான், ததீயத்வாகாரத்தாலே "உத்தேஶ்யம்" என்றநுபவிக்குமென்றபடி. அதிவர்க்குத் திருமேனியோடே யிருக்கச்செய்தேகூடுமோவென்ன (இவர்க்குமப்படியித்யாதி) ஆனல் "இந்நின்றநீர்மையினியாமுருமை" என்று - த்யாஜ்யமாகச் சொல்லுவானென்னென்ன (ஸ்வசம்பந்தத்தாலேயித்யாதி) த்யாஜ்யமாகச்சொன்னதுக்கு ஹேத்வந்தரம் (ஜ்ஞாநாஜ்ஞாநங்களுக்கித்யாதி) "பரந்தபெருமான்" என்று - வ்யாப்தியைச்சொன்னவநந்தரம், "என்னையாள்வான்" என்றதுக்கு பாவம் (இந்தவ்யாப்தியெல்லாமித்யாதி) இவரொருத்தரை யாளுகைக்கு சமஸ்த வ்யாப்தி வேணுமோவென்ன (ஒருவனையித்யாதி)

திருவிண்ணகர் - திருவிண்ணகரிலேயென்றபடி. "கண்டேனே" என்றதுக்குபாவம் ( மருபூமியிலேயித்யாதி ) "குடி" என்றது - தேசவாசிகளை. மிக்க சம்பத்தாவதேதென்ன (லக்ஷ்மணஇத்யாதி) "ஸர்வப்ரியகரஸ்தஸ்ய ராமஸ்யாபிஶரீரதः। லக்ஷ்மணோலக்ஷ்மிஸம்பந்நோ பஹிःப்ராணஇவாபரः" (ஸர்வப்ரியகரஸ்தஸ்ய ராமஸ்யாபிஶரீரதः। லக்ஷ்மணோலக்ஷ்மிஸம்பந்நோ பஹிःப்ராணஇவாபரः) இதிபாலகாண்டே. ஶ்லோகத்துக்கு பாவம் ( சம்பந்தமித்யாதி ) "திருவிண்ணகர்க்கண்டேன்" என்றவருடைய ஹார்த்தபாவம் (காணவேணுமித்யாதி) ஆசைப்பட்டவிடத்தே யநுபவிக்கப்பெற்ற பேருண்டோவென்ன ( நான்சென்றித்யாதி ) வைமுக்யம்பண்ணித்திரிந்த நான் தேடிச்சென்று திருநறையூரிலே காணப்பெற்றேனென்றபடி. திருமொழி ஆரும்பத்து எட்டாந்திருமொழி, "மான்கொண்ட" இத்யாதி.......................................................*

## இரண்டாம்பாட்டு.

கண்டவின்பந்துன்பங்கலக்கங்களுந்தேற்றமுமாய்த்
தண்டமுந்தண்மையுந்தழலுநிழலுமாய்க்
கண்டுகொள்தற்கரியபெருமானென்னையாள்வானூர்
தெண்டிரைப்புனல்சூழ்திருவிண்ணகர்நன்னகரே.

### ஆறுயிரப்படி.

(கண்டவின்பம்) உபலப்யமான சுகதுஃககாலுஷ்ய ப்ரஸாத நிக்ரஹாநுக்ரஹ சீதோஷ்ணாத்யந்யோந்ய விருத்த வஸ்த்வந்த ராத்மபூதனாய், சுதுர்த்தர்ஶநனாயிருந்த சர்வேஶ்வரனை நான் கண்ணாலேகண் டடிமை செய்யும்படி புகுந்தருளின திருநகரி திருவிண்ணகரென்று திருநகரியை யநுபவிக்கிறார்...............................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், அந்த ப்ரீத்யப்ரீதிரூப சுகதுஃகங்களை யநுபந்தித்துவரும் பதார்த்தங்களை விபூதியாகவுடையனாய், தத்ஸஜாதீயதயாத்ரஷ்டு மஶக்யனான சர்வேஶ்வரனுக்கசாதாரணதேசம் திருவிண்ணகரென்கிறார்.

கண்ட - லோகத்ருஷ்டமான. இன்பந்துன்பம் - சுகதுஃகங்களையும். கலக்கங்களும் - துஃகமடியாகவரும் சித்தவ்யாகுலதைகளும். தேற்றமும் - சுகமடியாக வரும் தெளிவுகளும். ஆய் - ஆய். தண்டமும் - அக்கலக்கமடியாகவரும்கோபமும். தண்மையும் - தேற்றமடியாகவரும் ப்ரசாதமும். தழலும் - கோபசமமான ஔஷ்ண்யத்தையுடைய அக்நியும். நிழலும் - ப்ரசாதசமமான சைத்யத்தையுடைய நிழலும். ஆய் - ஆய். கண்டுகொள்தற்கு - ஸஜாதீயதயாகாண. அரிய - அரியனாயிருக்கிற. பெருமான் - சர்வேஶ்வரனாய். என்னை - என்னை. ஆள்வான் - அடிமைகொண்டவன். ஊர் - ஊர். தெண் - தெளிந்தும். திரை - திரைக்கிளப்பத்தையு முடைய. புனல் - ஜலத்தாலே. சூழ் - சூழப்பட்ட. திருவிண்ணகர்-திருவிண்ணகராகிற. நல்நகர் - தர்ஶநீயநகரம்...............................................................*

### ஈடு - இரண்டாம்பாட்டு.

ஸ்வயத்நத்தாலே யொருவர்க்கும் காணவொண்ணாத பெருமையையுடையவனாய் வைத்தென்னை யடிமைகொள்ளுகிறவனூரான திருவிண்ணகர் சர்வவிலக்ஷணமென்கிறார்.

(கண்டவின்பம்) "ஐங்கருவிகண்டவின்பம்" என்னுமாபோலே பரிச்சிந்நசுகம். (துன்பம்) நாமபேத மாத்ரமாய் அத்தோடொத்த துஃகம். (கலக்கங்களுந்தேற்றமுமாய்) இதரவிஷயங்களினுடையஅலாபத்தால் வரும் கலக்கமும், அவற்றினுடைய லாபத்தால் வரும் தேற்றமும். (தண்டமுந்தண்மையும்) கோபமும், ப்ரஸாதமும். (தழலுநிழலுமாய்) உஷ்ணத்தைப் பண்ணக்கடவதான அக்நியும், சைத்யத்தைப்

பண்ணக்கடவதான நிழலுமாய். (கண்டுகொள்தற்கரியபெருமான்) இவையெல்லாவற்றாலும் - அவனுடைய வபரிச்சேத்யதை சொல்லிற்றாயிற்று. இவருடைய ஜ்ஞாநவைஶத்யமிருந்தபடியென்றான்; இங்கே - சில விசேஷணங்களைச் சொல்லா, கண்டுகொள்தற்கரிய பெருமானென்று - அவனைச்சொல்லாநின்றார்; கீழே - சிலவற்றைச்சொல்லா, "பல்வகையும் பரந்தபெருமான்" என்றுநின்றார்; இதென்ன வநுசந்தாந க்ரமந்தான். இவனையொழிந்த தொருவஸ்துவுக்கு சத்பாவமின்றிக்கே யிருக்கிறபடியிறே. நல்லாருநம்பி ஸ்ரீசேநாபதிதாசருங் கூடத் திருமலைக்குப் போகாநிற்க, ஸ்ரீசேநாபதிதாசர் தண்டையிட்டுத்தூற்றையடிக்க, நல்லார், "அர்த்தகாமநிமித்தமான த்வேஷ மித்தோடின்றிக்கேயிருக்க, நிர்நிபந்தநமாக ஈஶ்வரவிபூதியைநலிவதே" என்ற வார்த்தையை நினைப்பது. (ஸ்வயத்நத்தால் கண்டுகொள்தற்கரிய சர்வேஶ்வரன்) (என்னையாள்வானார்) என்னை யிழக்கமாட்டாமல் * மின்னிடைமடவாரில்மிறுக்கெல்லாம்பட்டு என்னை யடிமைகொண்டவனார். (தெண்டிரையித்யாதி) தெளிந்த திரைகளையுடைத்தான புனல்களாலே சூழப்பட்ட திருவிண்ணகராகிற நன்னகர். (தெண்டிரைப்புனல்சூழ்) திவ்யநதியானவிரஜைக்குப்போலியான ஆறுமுண்டாகப்பெற்றது. அங்கிருக்கிறவனிங்கேவந்துநின்றா லங்குள்ளவையெல்லா மிங்கே யுண்டாகத்தட்டில்லையே. (திருவிண்ணகர்நன்னகரே) இவ்வளவில் முகங்காட்டாத ஸ்ரீவைகுண்டமுமொருதேசமாயிற்றதோ. அவன் விரும்பினவிடம் ப்ராப்யபூமியாமித்தனையிறே.........................................................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (கண்டவின்பமித்யாதி) "கண்டுகொள்தற்கரிய" இத்யாதிமேலெல்லாம் கடாக்ஷித்தவதாரிகை (ஸ்வயத்நத்தாலேயித்யாதி)

இன்பமென்றுதே, "கண்டவின்பம்" என்றதுக்குபாவம் (ஐங்கருவியித்யாதி) "இன்பந்துன்பம்" என்றெக்கவெடுக்கையாலே - மோக்ஷாபேக்ஷயாவிரண்டும் து:கமாயிருக்குமென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (நாமபேதமாத்ரமித்யாதி)

(இவையெல்லாவற்றாலுமித்யாதி) "கண்டுகொள்தற்கரிய" என்றதுக்கவதாரிகையிற்சொன்ன வர்த்தமொழிய இதுவுமோரர்த்தமென்றுகண்டுகொள்வது. இவையெல்லாவற்றாலுமென்றது - * கண்டவின்பந்தொடங்கி உக்தமானவிவையெல்லாவற்றாலுமென்றபடி. அதாவது - "இவ்வளவு" என்றெல்லைகாணமுடியாதவிபூதிவிஸ்தாரத்தையுடைய சர்வேஶ்வரனென்றபடி. "கண்டவின்பம்" என்றுதொடங்கி, "தழலுநிழலும்" என்று - விசேஷ்யவிசேஷணங்களைப்பிரிய நினையாதே சொல்லிக்கொடுபோந்து, "கண்டுகொள்தற்கரியபெருமான்" என்று - விசேஷ்யமானவனை யருளிச்செய்தபடியை யநுசந்தித்து வ்யாக்யாதாவினீடுபாடு (இவருடையவித்யாதி) வைசத்யமாவது - சர்வமும் ப்ரஹ்மாத்மகத்வேந தோற்றுகை. விவரணம் (இங்கேசிலவித்யாதி) இவ்வநுசந்தாநக்ரமத்துக்கடியேதென்ன (இவனையொழிந்ததித்யாதி) ஜ்ஞாநாதிகர்க்கு ப்ரஹ்மாத்மகமாய்த் தோற்றுமென்றதுக்கைதிஹ்யம் (நல்லாருமித்யாதி)

திருவிண்ணகரை பரமபதத்தோடொத்ததாக - மேலேயருளிச்செய்கையா லே, இங்குத்தையிலாறும் விரஜையோடொத்ததென்கிறார் (திவ்யநதியானவித்யா தி) இவ்விடத்தை பரமபதமென்றும், இங்குத்தை யாற்றை விரஜையென்றும் சொல்லுவானென்னென்ன (அங்கிருக்கிறவனித்யாதி) திருவிண்ணகராகிறநன்னகரொன்று - கீழருளிச்செய்து, திருவிண்ணகரோ நன்னகரொன்றர்த்தாந்தரம் (இவ்வளவிலித்யாதி) பரமபதமே நன்னகரமொழிய, இத்தைநன்னகரமாகச் சொல்லலாமோவென்ன (அவன்விரும்பினவிடமித்யாதி) யத்வா, லீலாவிபூதியிலிருப்பு பரமபதம்போலே யுத்தேஶ்யமாமோவென்ன (அவன்விரும்பினவித்யாதி)

திருவிண்ணகரான நன்னகர் - என்னையாள்வானூரொன்னுதல்; என்னையாள்வானூரான - திருவிண்ணகரோ - நன்னகரொன்னுதல் ........ ........................*

# மூன்றாம்பாட்டு.

நகரமுநாடுகளுஞானமுமூடமுமாய்
நிகரில்சூழ்சுடராயிருளாய்நிலனாய்விசும்பாய்ச்
சிகரமாடங்கள்சூழ்திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான்
புகர்கொள்கீர்த்தியல்லாலில்லையாவர்க்கும்புண்ணியமே.

## ஆறாயிரப்படி.

(நகரமும்) நகரஜநபத ஜ்ஞாநாஜ்ஞாந தமஃப்ரகாஶாவநிககந ஸர்வநியந்தாவாயிருந்த, சிகரமாடங்கள்சூழ் திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரானுடைய நிரவதிககாருண்யமல்லது மற்றுஜ்ஜீவநோபாயமில்லையென்று, தமக்குஜ்ஜீவநோபாயமான காருண்யகுணத்தை யநுபவிக்கிறார். ... ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஜ்ஞாநாஜ்ஞாநாநுபந்தி பதார்த்தங்களை விபூதியாகவுடைய சர்வேஶ்வரனுடைய வுஜ்ஜ்வலமான குணப்ரதையையொழிய வேறொருவர்க்கு முத்தாரகமில்லையென்கிறார்.

நகரமும்-விசேஷஜ்ஞப்ரசுரமானநகரமும். நாடுகளும்-அவிசேஷஜ்ஞப்ரசுரமானநாடும். தத்ததாகாரஹேதுவான, ஞானமும்-ஜ்ஞாநமும். மூடமும்-மௌக்த்யமும். ஆய்-ஆய். அந்தஜ்ஞாநாஜ்ஞாநசாம்யத்தையுடைத்தாய், நிகர் - ஒப்பு. இல்-இன்றியே. சூழ்-பரந்த. சுடர்-ப்ரகாஶமும். ஆய், இருள் - ததாவிதமானவிருளும். ஆய்-ஆய். நிலன்-இருளுக்குஸ்த்தாநமானபூமியும். ஆய், விசும்பு - ப்ரகாஶஸ்த்தாநமான ஆகாஶமும். ஆய்-ஆய். சிகரம்-சிகரங்களையுடைத்தான. மாடங்கள்-மாடங்கள். சூழ்-சூழ்ந்த. திருவிண்ணகர்-திருவிண்ணகரிலே. சேர்ந்த-பொருந்திவர்த்திக்கிற. பிரான்-சர்வேஶ்வரனுடைய. புகர்-ஔஜ்ஜ்வல்யத்தை. கொள் - உடைத்தான. கீர்த்தி-குணப்ரதையை. அல்லால்-ஒழிய. யாவர்க்கும் - சர்வர்க்கும். புண்ணியம்-உஜ்ஜீவநஹேதுவானசுக்ருதம். இல்லை-இல்லை ..........................................*

## ஈடு - மூன்றாம்பாட்டு.

திருவிண்ணகரப்பனுடைய கல்யாணகுணங்களையொழிய வேறொருவர்க்கு முத்தாரகமில்லையென்கிறார்.

(நகரமுநாடுகளும்) போகப்ரதாநராய் சுகித்திருக்கும் நகரத்தி லுள்ளார், கர்ஷகராய்க்கொண்டு தேஹயாத்ரைபோக்கியிருக்கும் நாட் டிலுள்ளார். அன்றிக்கே, பரிச்சிந்நமாயுள்ளவையும், அபரிச்சிந்நமாயு ள்ளவையுமென்றுமாம். (ஞானமும் மூடமுமாய்) பதார்த்தஸ்வபாவத் தையுள்ளபடி க்ரஹிக்கக்கடவதான ஜ்ஞாநமும், அத்தைவிருத்தமாக ப்ரதிபத்தி பண்ணக்கடவதான அஜ்ஞாநமும். (நிகரில்சூழ்சுடராயிருளா ய்) உபமாநரஹிதமாய்க்கொண்டு எங்கும் வ்யாபித்துநிற்கிற தேஜஸ்ஸா ய், அதுக்கெதிர்த்தட்டான அந்தகாரமாய். (நிலனாய்விசும்பாய்) ரூபவ தியானபூமியும், அரூபியான வாகாசமுமாய். கடினையானபூமியும், அச் சமான வாகாசமுமாயென்றுமாம். (சிகரமித்யாதி) பர்வதசிகரங்களைக் கொண்டுவந்து சூழவைத்தாப்போலேயிருக்கிற மாடங்களாலே சூழப்ப ட்ட திருவிண்ணகரிலே பொருந்திநிற்கிற வுபகாரகன். (புகர்கொள்கீர்த் தியல்லாலில்லை) பரமபதத்தில் புகழ்மழுங்கியாகாதே கிடப்பது; அங் குள்ளாரில் தன்னிற்குறைந்தாரில்லையே, "ஸஹாயத்ரஹ்ஶாமதாஃ," (ம மஸாதர்ம்யமாகதாஃ,) "வாஹஂஸாஜாமெவைதி," (பரமம்ஸாம்ய முபைதி,) "தம்மையேயொக்கவருள்செய்வர்" என்று தன்னோடு ஸாம்யாபந்நராயிறே யங்குள்ளாரிருப்பது. குறைவாளர்க்கு முகங்கொ டுத்தாலிறே புகழ்நிறம்பெறுவது. (யாவர்க்கும்புண்ணியமே) (* மின் னிடைமடவாரிலிருய்த்த நமக்கேயன்றிக்கே) சர்வர்க்கு முத்தாரகமது வல்லதில்லை. தாந்தாந்தேடிக்கொள்ளுமவையெல்லாம் கழுத்துக்கட்டி யாமத்தனை, * மின்னிடைமடவாரில் - அவன்வர, "வேண்டா" என்று முடிந்துபோகப்புக்கதிறே. இவன்பார்க்குமுபாய மிவனுக்கும் கழுத்து க்கட்டியாம், அவன்காட்டுமுபாய மவனுக்கும் காற்கட்டாம், இதிறேயு பாயத்திலடிப்பாடு.........................................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு (நகரமுமித்யாதி) "திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் புகர்கொ ள்கீர்த்தி" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (திருவிண்ணகரப்பனுடையவித்யா தி) (ஒருவர்க்கும் - வேறு - உத்தாரகமில்லை) என்றந்வயிப்பது. கீழ்ப்பாட்டிலே, "நன்னகர்" என்று - ப்ராப்யத்வமும்; இப்பாட்டிலே, "யாவர்க்கும்புண்ணியம்" என்று - ப்ராபகத்வமும்சொல்லுகிறது.

விருத்தவிபூதிகத்வம்சொல்லுகிறவிதிலே "நகரமுநாடுகளும்" என்கிறுரிறே, இதுக்கு விரோதமேதென்ன; இரண்டுவகையாகவிரோதமுண்டென்கிறுர் (போகப் ரதானராயித்யாதிவாக்யத்ரயத்தாலே)

"நிலனாய்விசும்பாய்" என்றதுக்குமிரண்டுவகையாக விரோதமருளிச்செ ய்கிறுர் (ரூபவதியான வித்யாதிவாக்யத்வயத்தாலே)

* கீர்த்தியாவது-தயா திகுணங்கள். "திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் புகர் கொள்கீர்த்தி" என்கையாலேபாவம் (பரமபதத்திலித்யாதி) மழுங்குகைக்குஹே துவேதென்ன (அங்குள்ளாரித்யாதிவாக்யத்வயம்) இங்குப்புகருண்டாகைக்குஹே

து - தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கையாலேயென்கிருர் ( குறைவாளர்க்கித்யாதி ) "𑌇𑌦𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍁𑌪𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌮𑌮 𑌸𑌾𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌮𑌾𑌗𑌤𑌾𑌃 । 𑌸𑌰𑍍𑌗𑍇𑌽𑌪𑌿 𑌨𑍋𑌪𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 𑌪𑍍𑌰𑌳𑌯𑍇 𑌨 𑌵𑍍𑌯𑌥𑌨𑍍𑌤𑌿 𑌚" ( இதம்ஜ்ஞாநமபாஶ்ரித்யமமஸாதர்ம்யமாகதா: | ஸர்கேபிநோபஜாயந்தேப்ரளயேநவ்யதந்திச ) இதிபகவத்கீதாயாம் சதுர்த்தமே. "𑌨𑌿𑌰𑌞𑍍𑌜𑌨𑌃 𑌪𑌰𑌮𑌂 𑌸𑌾𑌮𑍍𑌯𑌮𑍁𑌪𑍈𑌤𑌿" ( நிரஞ்ஜந:பரமம்ஸாம்யமுபைதி ) இதி முண்டோபநிஷதி. ( தம்மையேயொக்கவருள்செய்வர் ) தம்மோடு ஸாம்யாபத்தியைத் தந்தருளுவரித்யர்த்த:. திருமொழி பதிநோராம்பத்து மூன்ருந்திருமொழி அஞ்சாம்பாட்டு, " தம்மையேநாளும்வணங்கி " இத்யாதி. சர்வர்க்குமென்றது-* மின்னிடைமடவாரிலிருய்த்த நம்மோடு, இதிலிழியாதவல்லாதாரோடு வாசியறவெல்லார்க்குமென்றபடி. " யாவர்க்கும் புண்ணியம் - இல்லை " என்றந்வயம். வேறுபாயமில்லையென்கிறதென், உபாயாந்தரங்களுண்டேயென்ன (தாந்தாமித்யாதி) அப்படி கழுத்துக்கட்டியோவென்ன (மின்னிடையித்யாதி) " ஸ்வயத்நம் ப்ரதிபந்தகம், அவன்கீர்த்தியேயுபாயம் " என்கிறவித்தால் - இவன்பார்க்கிற வுபாயத்தினுடைய பந்தகத்வத்தையும், அவன்காட்டு முபாயத்தினுடைய வேற்றுத்தையுமருளிச்செய்கிருர் (இவன்பார்க்குமித்யாதிவாக்யத்ரயத்தாலே) அவனுக்கும் காற்கட்டாமென்றது - "போகுநம்பி" என்ருலும் போக்மாட்டாமையை நினைத்து. அடிப்பாடு-பத்வி .................................................................................*

---

## நான்காம்பாட்டு.

புண்ணியம்பாவம்புணர்ச்சிபிரிவென்றிவையா
யெண்ணமாய்மறப்பாயுண்மையாயின்மையாயல்லனுய்த்
திண்ணமாடங்கள்சூழ்திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான்
கண்ணனின்னருளேகண்டுகொண்மின்கள்கைதவமே.

### ஆருயிரப்படி.

( புண்ணியம் ) புண்யபாப தத்பலபூதாபிமதவிஷய சம்ஶ்லேஷ விஶ்லேஷ ஸ்மரணவிஸ்மரண பாவாபாவாதி சகலபதார்த்தாந்தர்யாமிதயா வ்யாப்தனுயிருந்துவைத்தே தத்கததோஷைர சம்ஸ்ப்ருஷ்டனு யிருந்த, திண்ணமாடங்கள்சூழ் திருவிண்ணகர்ச் சேர்ந்த பிரானுடைய க்ருபையாலே சகலபுருஷார்த்த சாதநபூத கரணகளேபரப்ரப்ருதி சர்வபதார்த்தங்களும் ஸ்ப்ருஷ்டமான விவ்வர்த்தம் திருவிண்ணகரிலே ப்ரத்யக்ஷிக்கலாமென்கிருர்.................................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், கீழ்ச்சொன்ன புகர்கொள் கீர்த்தியாவது - புண்யபாபாநுபந்திபதார்த்தவிபூதிகனுன க்ருஷ்ணனுடைய நிர்ஹேதுக க்ருபையென்கிருர்.

புண்ணியம்பாவம் - இஷ்டாநிஷ்டஹேதுவானபுண்யபாபங்கள். புணர்ச்சிபிரிவு - தத்க்ருதமான தத்தத்ஸம்ஶ்லேஷவிஶ்லேஷங்கள். என்று-என்று. இவை-இவை. ஆய் - ஆய். எண்ணம் - சம்ஶ்லேஷவிஶ்லேஷகணனையும். ஆய், மறப்பு-

விஸ்மரணமும். ஆய் - ஆய். உண்மையின்மை - தத்ததநுரூப வஸ்துக்களுடைய சத்பாவாசத்பாவங்கள். ஆய் - ஆய்வைத்து. அல்லன் - தத்தத்கர்மவஶ்யனன்றியே. ஆய் - இருப்பானாய். திண்ணம் - ஸ்த்திரமான. மாடங்கள் - மாடங்கள். சூழ் - சூழ்ந்த. திருவிண்ணகர் - திருவிண்ணகரிலே. சேர்ந்த - சேர்ந்த. பிரான் - சர்வாதிகனான. கண்ணன் - க்ருஷ்ணனுடைய. இன் - அதிஶயித போக்யமாம்படி அநந்யப்ரயோஜநமான. அருளே - க்ருபையே. கண்டுகொண்மின்கள் - கீழ்ச்சொன்ன உத்தாரக கீர்த்தியாகக்கண்டுகொள்ளுங்கோள். கைதவமே - இது கைதவமோ. பரமார்த்தமென்று கருத்து.......................................................*

## ஈடு - நான்காம்பாட்டு.

புண்யபாபாதியாய் எம்பெருமானுக்கு விசேஷணத்வேந தோற்றுகிற விபூதியெல்லாம் அவன் க்ருபையாலே யுண்டாயிற்றென்கிறார்.

( புண்ணியம்பாவம் ) சுகசாதநமான புண்யம், துஃகசாதநமான பாபம். ( புணர்ச்சிபிரிவு ) புண்யபலமான சம்ஶ்லேஷம், பாபபலமான விஶ்லேஷம். ( எண்ணமாய்மறப்பாய் ) அபிமதவிஷயத்தில் ஸ்ம்ருதி, அநபிமதவிஷயத்தில் விஸ்ம்ருதி. ( உண்மையாயின்மையாய் ) அஸ்திஶப்தவாச்யமுமாய், நாஸ்திசப்தவாச்யமுமாய். சத்பாவாசத்பாவமென்னுதல். சேதநாசேதநங்களென்னுதல். ( அல்லனாய் ) புண்யபாபாதிகளுக்குரியாமகனாய், அவற்றுக்கு வஶ்யனன்றிக்கே யிருக்குமென்கிறது. ( திண்ண மித்யாதி ) "வாஸுதேவக்ருஹம் த்வேகம் நப்லாவயதி ஸாகர:" ( வாஸுதேவக்ருஹம்த்வேகம்நப்லாவயதிஸாகர: ) என்கிறபடியே, ப்ரளயகாலத்துக்கு மழியாதபடி திண்ணிதான மாடங்களாலே சூழப்பட்ட திருவிண்ணகரிலே சேர்ந்து நிற்கிற வுபகாரகனான க்ருஷ்ணன்.

( இன்னருளே ) புண்யபாபாதிகளாய்க்கொண்டு அவனுக்கு விபூதியாய்த்தோற்றுகிறவையெல்லா மவனுடைய க்ருபையாலே யுண்டாயிற்று. பாபமு மவன்க்ருபையாலேயோவென்னில்; அதுவுமப்படியே, சேதநனுடைய பூர்வ கர்மாநுகுணமாக ப்ரவர்த்திப்பிக்கையினாலே அதுவுமவன்க்ருபையாலேயாமத்தனை. எல்லாம் செய்தாலும் தீமை அவன்க்ருபையாலே வரக்கூடுமோவென்னில் ; தீயத்தைக்காட்டி வெறுப்பி நல்வழிபோக்குகையினாலே கூடுமிறே. ( இன்னருள் ) நிர்ஹேதுக விஷயீகாரம்.

( கைதவமே ) நான்சொல்லுகிறவிதிலர்த்தவாதமில்லை. (கண்டுகொண்மின்கள்) நீங்களுமெல்லாங்கண்டுகொள்ளுங்கோள். அன்றிக்கே, ( கைதவமே ) க்ருதகமென்றபடியாய், பண்ணப்பட்டவையடங்கலுமவனுடைய நிர்ஹேதுகவிஷயீகாரத்தாலே..................................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு.(புண்ணியமித்யாதி)"புண்ணியம்பாவம்"என்றுதொடங்கி,"கண்ணனின்னருளே"என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (புண்ய பாபாதியாயித்யாதி)

"உண்மை, இன்மை" என்கிற தர்மவாசகசப்தத்துக்கு - தர்மிபரத்வம் ஸ்வரசமன்றென்று ( சத்பாவாசத்பாவமென்னுதல் ) என்கிறார். "அஸ்திசப்தவாச்யமுமாய்" இத்யாதியின் விவரணம் ( சேதநாசேதநங்களென்னுதலென்று )

"புண்ணியம்" என்று தொடங்கி, "அல்லனுயிருக்கிறவன் - கண்ணன்" என்று வாக்யபேதம்பண்ணி, ஏவம்விதமானவையெல்லா மவன்க்ருபையாலேயுண்டாயிற்றென்றந்வயம் விவக்ஷித்தர்த்தம் (புண்யபாபாதிகளாயித்யாதி) தீமை யவன்க்ருபையாலே வரக்கூடுமோவென்றது - தீமை யவன் நிர்ஹேதுகவிஷயீகாரத்தாலே வரக்கூடுமோவென்றபடி. அதுவும் ஹிதரூபமாகையாலே கூடுமென்றுபரிஹரிக்கிறார் (தீயத்தையித்யாதி) (தீயத்தைக்காட்டி) என்றவிடத்திலே - "ஸுஹ்ருதிவ நிஜஸாபெஷ்வோ:" (ஸுஹ்ருதிவநிகளாத்யை:) இத்யாத்யநுசந்தேயம்.

(கண்டுகொண்மின்கள்) சாஸ்த்ரங்களிலே இதிசேஷ:. "கைதவமே" என்கிற ஸ்வரத்துக்கர்த்தம் (நான்சொல்லுகிறவித்யாதி) இந்தவர்த்தத்தில், ஏகாரம்-பிரிநிலையிலே. கைதவமே - கைதவமோ. இது கபடமோ வென்றபடி. பரமார்த்தமென்றுகருத்து. கைதவம் - கபடம். த்விதியார்த்தத்துக்கு, கைதவமென்று-க்ருத்ரிமமாய், க்ருத்ரிமமாவது-க்ருதகமாய், (பண்ணப்பட்டவையடங்கலும்) என்றபடி.

இப்படி விசேஷணமாய்த் தோற்றுகிற புண்யபாபாதிகளெல்லாம், புண்ணியமென்றுதொடக்கி, அல்லனுய்க்கொண் டிருக்கிற திண்ணமாடங்கள் தொடக்கி, கண்ணனுடைய நிர்ஹேதுகக்ருபையாலே யுண்டாயிற்று; கைதவமேயென்று கார்யாம்ஸத்தை யத்யாஹரித்துக் கொள்வது. அன்றிக்கே, (கைதவமென்று) க்ருதகமான விந்தலோகமெல்லாம் - புண்ணியமென்று தொடக்கி, கண்ணனுடைய நிர்ஹேதுக க்ருபையாலே யுண்டாயிற்று என்றநத்யாஹாரேண யோஜித்துக்கொள்ளுதல். "ப்லாவயாமாஸதாம்ஸூங்யாம்த்வாரகாஞ்சமஹோததி:। வாஸுதேவக்ருஹந்த்வேகம் நப்லாவயதிஸாகர:" (ப்லாவயாமாஸதாம்ஸூங்யாம்த்வாரகாஞ்சமஹோததி: । வாஸுதேவக்ருஹந்த்வேகம் நப்லாவயதிஸாகர:) இதி பஞ்சமேம்ஸே......................................................................*

---

## ஐந்தாம்பாட்டு.

கைதவஞ்செம்மைகருமைவெளுமையுமாய்
மெய்பொய்யிளமைமுதுமைபுதுமைபழமையுமாய்ச்
செய்ததிண்மதிள்சூழ்திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான்
பெய்தகாவுகண்டீர்பெருந்தேவுடைமூவுலகே.

### ஆருயிரப்படி.

( கைதவம் ) ஆர்ஜவாநார்ஜவஸிதநீல சத்யாசத்யயௌவநவார்த்தக நவத்வாநவத்வாதிரூபனான வெம்பெருமான், ப்ரஹ்மாதி ஸ்தம்பபர்யந்த நிகிலஜந்து பரிபூர்ணமான சர்வலோகங்களுக்கும் ரக்ஷகனென்கிறார்.......................................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், உத்க்ருஷ்டாபக்ருஷ்ட ரூப சமஸ்தவஸ்துப்ரகாரகனான சர்வேஶ்வரனுக்கு சகலஜகத்தும் லீலோத்யாநமென்கிறார்.

கைதவம் - அபக்ருஷ்டமானகௌடில்யமும். செம்மை - உத்க்ருஷ்டமான ஆர்ஜவமும். தத்தத்ஸத்ருஶமான, கருமை - கருமை. வெளுமையும்-வெளுமையும். ஆய் - ஆய். மெய்பொய் - அப்படிஉத்க்ருஷ்டாபக்ருஷ்டரூப சத்யாசத்யங்கள். இளமைமுதுமை - யௌவநவார்த்தகங்கள். புதுமைபழமையும் - அபிநவத்வ ஜீர்ணதைகளும். ஆய் - ஆய். செய்த - தொழிற்படச்செய்யப்பட்டு. திண்-சிக்கெனவையுடைத்தான. மதிள் - மதிளாலே. சூழ் - சூழப்பட்ட. திருவிண்ணகர் - திருவிண்ணகரிலே. சேர்ந்த - சேர்ந்த. பிரான் - சர்வேஶ்வரன். பெய்த - வைத்த. காவுகண்டீர் - லீலோத்யாநங்கிடிகோள். பெருந்தேவு - ப்ரஹ்மாத்யுத்க்ருஷ்ட தேவதைகளை. உடை - உடைத்தான. மூவுலகு - த்ரைலோக்யமும். ........................*

## ௫ - ஐந்தாம்பாட்டு.

சிறியார் பெரியாரென்றுதே சர்வர்க்கும் ரக்ஷகன் திருவிண்ணகர்ச்சேர்ந்த பிரானென்கிறார்.

( கைதவம்செம்மை ) அநார்ஜவார்ஜவங்கள். ( கருமைவெளுமை ) கறுப்புவெளுப்பு ( மெய்பொய் ) சத்யாசத்யம். ( இளமை முதுமை ) பால்யவார்த்தகம். ( புதுமைபழமை ) அத்யதநமும், புராதநமும். ( செய்தவித்யாதி ) காலம்செல்லச்செய்தேயு மிப்போது செய்தாப்போலேயிருக்கிறதொழில் புதுமையைச் சொல்லுகிறது. ( சிக்கெனவையுடைத்தான மதிளாலே சூழப்பட்ட திருவிண்ணகரிலேசேர்ந்த சர்வேஶ்வரன். ) ( பெய்தகாவுகண்டீர் ) வைத்தாக்கினசோலைகிடீர். (காவு-சோலை.) ( பெருந்தேவுடைமூவுலகே ) ஈஶ்வராபிமாநிகளான தேவர்களையுடைத்தான த்ரைலோக்யம். ( ( மூவுலகு ) மேலும் கீழும் நடுவும். ) இத்தால் சொல்லிற்றுயிற்றென்னென்னில் - அச்சோலையானது தனக்கு வேண்டும் ரக்ஷையயறிவிக்கமாட்டாதிறே, நின்றவிடத்தே நின்று வாடிக்காட்டுகையும், பின்பு வைத்தாக்கினவனே அதுக்குவேண்டும் ரக்ஷபண்ண வேண்டுகையு மித்யாதிகளை யுடைத்தாகை; அப்படியே ஈஶ்வரோசிதவ்ய விபாகமற அவன்புத்த்யதீநமென்றபடி. ( * மின்னிடைமடவாரில் "பொருந்தோம்" என்றதுவும் ஸ்வாதீநமன்றென்கை. )*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. ( கைதவமித்யாதி ) "பெரியதேவதைகளை யுடைத்தான த்ரைலோக்யமு மவனுண்டாக்கினசோலை" என்கையாலே பலித்தபாவம் ( சிறியாரித்யாதி) "மூவுலகு" என்றத்தைப்பற்ற ( சிறியாரென்றது ) பெரியாரென்றது - "பெருந்தேவுடை" என்றத்தைப்பற்ற.

வார்த்தகம் - வ்ருத்தத்வம்.

"எல்லாமாய்க்கொண்டிருக்கிற திருவிண்ணகர்ச் சேர்ந்தபிரான் பெய்தகாவு" என்கையாலே - ஸ்வரூபைக்யமன்று, கார்யகாரணபாவத்தாலே சமாநாதிகரிக்கிறதென்றதாயிற்று. பெய்தல் - இடுதல். இத்தால் - "பெய்தகாவு" என்றத்தாலென்றபடி. உக்தார்த்தத்தைப்ரக்ருதத்திலேயதிதேசிக்கிறார் (அப்படியேயித்யாதி)

# ஆறும்பாட்டு.

மூவுலகங்களுமாயல்லனுயுகப்பாய்முனிவாய்ப்
பூவில்வாழ்மகளாய்த்தௌவையாய்ப்புகழாய்ப்பழியாய்த்
தேவர்மேவித்தொழுந்திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான்
பாவியேன்மனத்தேயுறைகின்றபரஞ்சுடரே.

## ஆருயிரப்படி.

(மூவுலகங்களுமாய்) நிகிலலோக ததந்தர்வர்த்தி ப்ரீத்யப்ரீதி லக்ஷ்ம்யலக்ஷ்மீ கீர்த்யகீர்த்தி ப்ரப்ருதிகல்யாணஹேய சகலபதார்த்தாந்தராத்மபூதனுய், கல்யாணபதார்த்தாந்தர்வர்த்திதையாலே யாதொருபடி தோஷந்தட்டாதே யிருக்கும், அப்படியே ஹேயபதார்த்தாந்தர்வர்த்திதையாலும் நிர்த்தோஷனுயிருக்கும். அதெங்ஙனேயறிந்தபடியென்னில்; சமஸ்தஹேயாஸ்பதமான வென்னுடைய நெஞ்சிலேபுகுந்துவைத்தொருதோஷமுந்தட்டாதேநிரதிசயதீப்தியுக்தனுயிருக்கையாலேயென்கிருர்.

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், விலக்ஷணவிலக்ஷண பதார்த்தங்களை விபூதியாகவுடைய சர்வேஶ்வர ஞுஶ்ரிதபவ்யதையால்வந்த ஔஜ்ஜ்வல்யத்தை யுடையவனென்கிருர்.

மூவுலகங்களும் - ஸ்ருஜ்யத்வ கர்மவஶ்யத்வ துணத்ரயாத்மகத்வாதிகளாலே அவிலக்ஷணமான த்ரைலோக்யமும். ஆய்-ஆய். அல்லன்-தத்ப்ரதிபடநித்யவிபூதியுக்தனும். ஆய்-ஆய். உகப்புமுனிவு - அப்படிவிலக்ஷணவிலக்ஷணத்மகராகத்வேஷங்களையும். ஆய், பூவில்வாழ்மகள்-ப்ரீதிஹேதுவான லக்ஷ்மீயையும். ஆய், தௌவை-அப்ரீதிஹேதுவான ஜ்யேஷ்டையையும். ஆய், தத்தத்கார்யமான, புகழ் - புகழையும். ஆய், பழி-பழியையும். ஆய்-ப்ரகாரமாகவுடையனுய். இந்தவிபூதியோகத்தாலேவந்த நீர்மையை யநுபவிக்கைக்காக, தேவர்-சூரிகள். மேவி-பொருந்தி. தொழும்-தொழாநிற்கிற. திருவிண்ணகர்-திருவிண்ணகரிலே. சேர்ந்த-சேர்ந்த. பிரான்-சர்வேஶ்வரன். பாவியேன் - தான்மேல்விழுந்தவரிலும் வைமுக்யம்பண்ணும் பாபத்தையுடையேனுனவென். மனத்தே - நெஞ்சிலே. உறைகின்ற-நித்யவாசம்பண்ணுநின்றுகொண்டு. பரஞ்சுடர்-அத்தாலே நிரதிசயௌஜ்ஜ்வல்யத்தையுடையனுனன். ✳

## ஈடு - ஆறும்பாட்டு.

"நானல்லேன்" என்னச்செய்தே தன்குணசேஷ்டிதங்களைக்காட்டி மறக்கவொண்ணுதபடி கலந்து அத்தாலே யுஜ்ஜ்வலனுயிருக்கிறவன் திருவிண்ணகரிலே நின்றருளின சர்வேஶ்வரன் கிடீரென்கிருர்.

(மூவுலகங்களுமாய்) த்ரைலோக்யத்துக்கும் நிர்வாஹகனுய். க்ருதகம் அக்ருதகம் க்ருதகாக்ருதகமென்றும். (அல்லனுய்) அல்லாத உபரிதநலோகங்களுக்கும் நிர்வாஹகனுய். இவற்றைச்சொல்லி, அல்லனுயென்கையாலே - இவ்வளவன்றிக்கே அஸாதாரணமான நித்யவிபூதியை

யுடையனுயென்றும். (உகப்பாய்முனிவாய்) அநுக்ரஹநிக்ரஹங்களாய். (பூவில்வாழ்மகளாய்த்தெளவையாய்) ஸ்ரீயுமஸ்ரீயுமாய். தெளவை-அஸ்ரீ. (புகழாய்ப்பழியாய்) ஸ்ரீயினுடைய கடாக்ஷமுடையார்க்கு வரும்புகழ், தெளவையினுடைய கடாக்ஷமுடையார்க்கு வரும்பழி. (தேவரித்யாதி) இந்த்ராதிக ளிங்குள்ளாருடைய ஹவிஸ்ஸுகொள்ளும்போது மூன்று யோஜநமவ்வருகேநின்று முகத்தைத்திரியவைத்துவாங்கி சர்த்திபண்ணி பாயிற்றுப்போவது; அப்படியிருக்கிறவர்களுடைய கந்தமும் பொறுக்க மாட்டாத நித்யசூரிகள், திருவிண்ணகர் பூமியிலேயாகையாலே இங்கே வந்து பொருந்திவர்த்தியாநிற்பர்கள். அப்படிப்பட்ட திருவிண்ணகரிலே நித்யவாசம்பண்ணுகிற வுபகாரகன். ( பாவியேன்மனத்தே ) * மின்னி டைமடவாரில் - அவன்மேல்விழத் தாமிருய்த்தபடியைநினைத்து (பாவி யேன்) என்கிருர். நித்யசூரிகள் தன்பக்கலிலேவந்துமேல்விழ, அத்தை த்தள்ளித்தா'னென்பக்கலிலேவந்து மேல்விழாநிற்கக்கிடீர் நான் "அல் லேன்" என்றது. (மனத்தேயுறைகின்ற) இப்போது நித்யசூரிகளு மங் கவிருப்புங் கிடக்கக்கிடீ'ரென்னெஞ்சிலேபுகுந்து நித்யவாசம்பண்ணிநி ன்ருன். (பரஞ்சுடரோ) தனக்குப்புறம்புண்டான வாஸஸ்த்தாநங்கள்கிட க்க, என்னெஞ்சிலே புகுந்துநின்ற தெனக்குக் கார்யம்செய்தானுயிருக் கையன்றிக்கே, "தன்பேறு" என்று தோற்றும்படி யுஜ்ஜ்வலனுனன். * மின்னிடைமடவாரில் – "இவளையிழக்கிறேமோ" என்றுவந்தவுரு வுதல்தீர, இவளைப்பெற்றபின்பு அத்தாலே "நின்றிலங்குமுடியினுய்" என்கிறபடியே வடிவிலேபிறந்த வேறுபாடிருக்கிறபடி... ... ...........*

## ஜீயர் அரும்பதம்.

ஆரும்பாட்டு (மூவுலகமித்யாதி) "பாவியேன்" என்றத்தைப்பற்ற (நானல் லேனென்னச்செய்தேயென்றது) "மனத்தேயுறைகின்ற" என்றத்தைப்பற்ற ( தன் குணசேஷ்டிதங்களையித்யாதி) "பரஞ்சுடர், திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான்" என் றத்தைப்பற்ற (அத்தாலே யுஜ்ஜ்வலனுயித்யாதி)

அர்த்தாந்தரம் (க்ருதகமித்யாதி) க்ருதகமாவது-அவாந்தரப்ரளயத்திலேய ழிந்து ஸ்ருஷ்டிகாலத்திலே பண்ணப்படுமது. இது கீழேழுலோகமும் மேல்மூன் றுலோகமும். அக்ருதகமாவது-அவாந்தரஸ்ருஷ்டியில் பண்ணப்படாதது. இதுஜந ஸ்தபஸ்ஸத்யலோகங்கள். க்ருதகாக்ருதகமாவது-அவாந்தரப்ரளயத்தில் குடிவாங் குகையாலே க்ருதகமென்றும், க்ருஹங்களுக்கு ஸ்வரூபநாசமில்லாமையாலே. அக் ருதகமென்றும் சொல்லப்படும் மஹர்லோகம். "𑌤𑍍𑌰𑍈𑌲𑍋𑌕𑍍𑌯𑌮𑍇𑌤𑌤𑍍𑌕𑍃𑌤𑌕𑌂 𑌮𑍈𑌤𑍍𑌰𑍇𑌯 𑌪𑌰𑌿𑌪𑌠𑍍𑌯𑌤𑍇 । 𑌜𑌨𑌸𑍍𑌤𑌪𑌸𑍍𑌤𑌥𑌾 𑌸𑌤𑍍𑌯𑌮𑌿𑌤𑌿 𑌚𑌾𑌕𑍃𑌤𑌕𑌂 𑌤𑍍𑌰𑌯𑌮𑍍 । 𑌕𑍃𑌤𑌕𑌾𑌕𑍃𑌤𑌕𑍋 𑌮𑌧𑍍𑌯𑍇 𑌮𑌹𑌰𑍍𑌲𑍋𑌕 𑌇𑌤𑌿 𑌸𑍍𑌮𑍃𑌤𑌃 । 𑌶𑍂𑌨𑍍𑌯𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌕𑌲𑍍𑌪𑌾𑌨𑍍𑌤𑍇 𑌯𑍋𑌽𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌂 𑌨 𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑌤𑌿" ( த்ரைலோக்யமேதத்க்ருதகம்மைத்ரேய பரிபட்யதே । ஜநஸ்தபஸ்ததாஸத்யமிதிசாக்ருதகம்த்ரயம் । க்ருதகாக்ருதகோமத் யே மஹர்லோகஇதிஸ்ம்ருதஃ । ஶூந்யோபவதிகல்பாந்தேயோத்யந்தம்நவிநஶ்யதி )

இதி ஸ்ரீவிஷ்ணுபுராணே. அர்த்தத்வயத்துக்கு மநுகுணமாக "அல்லனாய்" என்ற
துக்குமடைவே யர்த்தத்வயம் (அல்லாதவித்யாதி வாக்யத்வயத்தாலே)

"தண்டமும் தண்மையும்" என்றத்தோடு புநருக்தமாகையாலே, அநுக்ர
ஹநிக்ரஹங்களாயென்றது-அவற்றின்கார்யமான ப்ரீத்யப்ரீதிகளைச்சொல்லுகிறது.

"மேவித்தொழும்" என்றதுக்குபாவம் (இந்த்ராதிகளித்யாதி) பூமியிலே
யாகையாலே யென்றது - பூமியிலேயிருக்கையாலே பூமியுத்தேஶ்யமென்றபடி.

"பாவியேனென்றது - * மின்னிடைமடவாரிலே யிருய்த்தபடியைநினைத்
து" என்பானென்னென்ன (நித்யஸூரிகளித்யாதி) "உறைகின்ற" என்றவர்த்த
மானார்த்தம் (இப்போது நித்யஸூரிகளித்யாதி) கீழ்வாக்ய:விவரணம் (மின்னிடையி
த்யாதி) ........................................................................*

---

# ஏழாம்பாட்டு.

பரஞ்சுடருடம்பாயழுக்குப்பதித்தவுடம்பாய்
கரந்துந்தோன்றியுநின்றுங்கைதவங்கள்செய்தும்விண்ணோர்
சிரங்களால்வணங்குந்திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான்
வரங்கொள்பாதமல்லாலில்லையாவர்க்கும்வன்சரணே.

## ஆறாயிரப்படி.

(பரஞ்சுடர்) நிரவதிகதேஜோமய திவ்யரூபனாய், சமஸ்தஹே
யாஸ்பத சர்வஜகச்சரீரனாய், சமஸ்தஹேயரஹிதனாய், துர்விஜ்ஞேயனா
யாஶ்ரிதார்த்தமாகப் பிறந்தருளியு மவர்களோடு சம்ஶ்லேஷித்து ப்ரதிகூ
லர்க்குக் கைதவம்செய்தும், விண்ணோர் சிரங்களால் வணங்கும் திருவி
ண்ணகர்ச்சேர்ந்த பிரானுடைய திருவடிகளல்ல தொருவர்க்கு மாத்மர
க்ஷகமில்லையென்கிறார்........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரிதாநாஶ்ரிதவிஷயமான வாகாரபேதத்தையுடைய சர்வே
ஶ்வரன்திருவடிகளே சர்வர்க்கும் ப்ரபலாஶ்ரயமென்கிறார்.

பரஞ்சுடருடம்பு - ஆஶ்ரிதாநுபாவ்யமான அப்ராக்ருதவிக்ரஹத்தையும். ஆ
ய், அநாஶ்ரிதர்க்கநுபாவ்யமான. அழுக்கு - ஹேயதையால். பதித்த - பூர்ணமான.
உடம்பு - ஜகதாகாரத்தையும். ஆய் - உடையனாய். கரந்தும் - அநாஶ்ரிதவிஷயத்தி
ல் ப்ரகாசியாதேயும். தோன்றியும் - ஆஶ்ரிதவிஷயத்தில் ப்ரகாசித்தும். நின்றும்-
ப்ரகாசிக்கும்விஷயத்தில் ஸ்த்திரனாயும். கைதவங்கள் செய்தும் - இதரவிஷயத்தி
லஸ்த்திரனாயும். ஆய் - இருப்பானாய். விண்ணோர் - ப்ரஹ்மருத்ராதிகள். ஸ்வாபிம
தசித்த்யர்த்தமாக, சிரங்களால் - தந்தாந்தலைகளாலே. வணங்கும் - வணங்கும்ப
டி. திருவிண்ணகர் - திருவிண்ணகரிலே. சேர்ந்த - சேர்ந்த. பிரான் - சர்வேஶ்வர
னுடைய. வரம் - சமாப்யதிக தரித்ரமான ஶ்ரைஷ்ட்யத்தை. கொள் - உடைய.
பாதம் - திருவடிகள். அல்லால் - ஒழிய. யாவர்க்கும் - சர்வசேதநர்க்கும். வன் -
அபயஸ்த்தலமாம்படி ப்ரபலமான. சரண் - புகலிடம். இல்லை - வேறில்லை.......*

## ஈடு - எழாம்பாட்டு.

எத்தனையேனுமளவுடையார்க்கும் வலியபுகலவனல்லதில்லையெ ன்கிறார்.

(பரஞ்சுடருடம்பாய்) சுத்தசத்த்வமயமான அசாதாரண திவ்யவிக்ரஹத்தையுடையனாய். "தெஜஸாංராஶிமூர்ஜிதம்" (தேஜஸாம்ராஶிமூர்ஜிதம்) (அழுக்குப்பதித்தவுடம்பாய்) குணத்ரயவஶ்யமான ஜகச்சரீரனாய். (கரந்தும்) இவற்றுக் கந்தராத்மாவாய்ப் புக்கு நிற்கச்செய்தே, "யமாத்மாநவேத" (யமாத்மாநவேத) என்று - இவற்றுக்குத்தோன்றாதபடிநின்று, இவற்றின் சத்தையைநோக்கியும். (தோன்றியும்) *காணவாராயென்றென்று கண்ணும் வாயும் துவர்ந்திருப்பார்க்குக்காணலாம்படி ராமக்ருஷ்ணத்யவதாரங்களைப்பண்ணியும். (நின்றும்) நூற்றண்டு பதினோராயிரமாண்டு நின்றும். அவ்விடங்களிலே (கைதவங்கள்செய்தும்) க்ருத்ரிமங்களைப்பண்ணியும். அதாவது - அவதரித்துநிற்கச்செய்தே தன்படிகள் சிசுபாலாதிகளுக்குத்தோற்றாதபடிபண்ணியும், ஆஸ்ரிதர்க்குத் தோற்றும்படி பண்ணியும். (விண்ணோரித்யாதி) ப்ரஹ்மாதிகள் "தலைபடைத்தப்ரயோஜநம்பெற்றோம்" என்றுவணங்கும்படி திருவிண்ணகரிலே நிற்கிறவுபகாரகன். (வரங்கொள்பாதமல்லாலில்லை) எத்தனையேனும் தண்ணியாரும் கிட்டலாம்படி ஶ்ரேஷ்ட்டமான திருவடிகளல்லது. (யாவர்க்குமித்யாதி) எத்தனையேனும் கிழாய் கிழாயற்குமதுவல்லது வலியபுகலில்லை. அவனையொழிந்த சரண்யரடங்கலு மிவனைக்கொண்டு முழுகும்பேர்; இவனைக்கொண்டு கரையேற்றவல்ல வலியபுகலவன் திருவடிகளல்லதில்லை. அடியே பிடித்து ஜீவிக்கில் ஜீவிக்குமத்தனை.................................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. (பரஞ்சுடரித்யாதி) "வரங்கொள்பாதமல்லாலில்லை"இத்யாதியைப்பற்றவவதாரிகை (எத்தனையேனுமித்யாதி)

மேலே "அழுக்குப்பதித்தவுடம்பாய்" என்று - ஹேயமாய் ரஜஸ்தமோமிஶ்ரமான வுடம்பைச்சொல்லுகையாலே, தத்ப்ரதிகோடித்வேந விவக்ஷித் தருளிச்செய்கிறார் (சுத்தஸத்த்வேத்யாதி) நிரவதிகதேஜோரூபமான திருமேனியை யுடையவனென்று சப்தார்த்தம். இதுக்குப்ரமாணம் (தேஜஸாமித்யாதி)

தோன்றாதபடிநிற்கிறவன் தோன்றுகிறதெதுக்காகவென்ன (காணவாராமித்யாதி) அவ்விடங்களிலே - ராமக்ருஷ்ணத்யவதாரங்களிலே. ஆஸ்ரிதர்க்கு-அர்ஜுநாதிகளுக்கு.

வணங்குகிறது தலையாலேயாயிருக்க, "சிரங்களால்" என்று விசேஷித்ததுக்கு பாவம் (ப்ரஹ்மாதிகளித்யாதி)

வரங்கொள் - வரமான. திருவடிகளுக்கு ஶ்ரேஷ்ட்டதையேதென்ன (எத்தனையேனுமித்யாதி) கிழாய்கிழாயற்கும் - பெரியவனுக்கும் பெரியனானவனுக்கும்.

கிழாயன் - பெரியவன். "வன்சரண்" என்றதுக்குபாவம் (அவனையொழிந்தவித்யாதி) ரசோக்தி (அடியேயித்யாதி) திருவடிகளையேபிடித்தென்றும், முதலிலே பிடித்தென்றும்.......................................................*

---

# எட்டாம்பாட்டு.

வன்சரண்சுரர்க்காயசுரர்க்குவெங்கூற்றமுமாய்த்
தன்சரணிழற்கீழுலகம்வைத்தும்வையாதுந்
தென்சரண்டிசைக்குத்திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரா
னென்சரணென்கண்ணனென்னையாளுடையென்னப்பனே.

## ஆறுயிரப்படி.

(வன்சரண்) தன்றிருவடிகளை ப்ராபிக்கைக்கு விரோதியான சமஸ்த பாபங்களையும் போக்கி யாஶ்ரிதரைத் தன்றிருவடிகளின் நிழலிலே வைத்தருளும் ஸ்வபாவனாய், ஆஶ்ரிதவிரோதிகளைத் தன்றிருவடிகளிற்சேராதே யவர்களுக் கதிபயங்கர ம்ருத்யுபூதனாயிருந்த வெம்பெருமான், தென்றிசைக்குப் புகலிடமாகத் திருவிண்ணகரிலே புகுந்தருளியிருந் தெனக்கு ப்ராப்யமா யெனக்குத்ருஷ்டியா யென்னைக்கொண்டு சர்வசேஷவ்ருத்தியுங்கொண்டருளி யெனக்குஸ்வாமியானனென்கிறார்..................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அநுகூல ப்ரதிகூலவிஷயங்களான ஸ்வபாவங்களை யுடைய சர்வேஶ்வரன யாஶ்ரிதபவ்யனன க்ருஷ்ணனெனக் கசாதாரணமான புகலிடமென்கிறார்.

சுரர்க்கு - அநுகூலரானதேவர்களுக்கு. வன் - அப்ரதிஹதமான. சரண்-புகலிடம். ஆய் - ஆய். அசுரர்க்கு - ப்ரதிகூலரான அசுரர்களுக்கு. வெம் - க்ரூரமான. கூற்றமும் - ம்ருத்யுவும். ஆய் - ஆய். உலகம் - தாத்ருஶ விபாகத்தை யுடைய லௌகிகரை. தன் - தன். சரணிழற்கீழ் - பாதச்சாயையிலே. வைத்தும் - ஒதுக்கியும். வையாதும் - ஒதுக்காதும். ஆய் - இருப்பானாய். தென்றிசைக்கு - தெற்குத்திக்குக்கு. சரண் - புகலிடமான. திருவிண்ணகர் - திருவிண்ணகரிலே. சேர்ந்த-சேர்ந்த. பிரான் - சர்வேஶ்வரனாய். என் - என்னையங்கீகரிக்கைக்காக. கண்ணன் - க்ருஷ்ணனாய். என்னை - என்னை. ஆளுடை - அடிமைகொண்ட. என்னப்பன் - ஸ்வாமியானவன். சர்வப்ரகாரத்தாலும், என் - எனக்கு. சரண் - அசாதாரணமான புகலிடம்.......................................................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

எனக்குப் புகலானமாத்ர மன்றிக்கே மற்றுமெல்லாம் திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரானென்கிறார். (எல்லார்க்கும் புகலென்றமாத்ரமன்றிக்கே, எனக்கு விசேஷித்துப் புகலென்கிறாராகவுமாம்.)

(வன்சரண்சுரர்க்காய்) தேவர்களுக்காகத் தன்னை யம்புக்கிலக்காக்கி அவர்களைநோக்கும் வலியரக்ஷகனாய். (அசுரர்க்கு வெங்கூற்றமுமாய்) ஆசுரப்ரக்ருதிகளுக்கு "அந்தகன்தண்ணீர்" என்னும்படி வெவ்வியகூற்றமுமாய். (தன்சரணித்யாதி) தன்னுடைய பாதச்சாயையுள்ளே, அநுகூலரான அர்ஜுநாதிகளையிட்டுக்கொண்டும்; சம்பந்தமொத்திருக்கச்செய்தே, ப்ரதிகூலரான துர்யோதநாதிகளைப் புறம்பிட்டும். (தென்சரண்திசைக்கு) "தக்ஷிணாசாக்ருதா யேந ஶரண்யா புண்யகர்மணா" (தக்ஷிணதிக்க்ருதாயேநஶரண்யாபுண்யகர்மணா) என்கிறபடியே, (தென் - திசைக்கு - சரண்) தெற்குத்திக்குக்குப் புகலிடமானதிருவிண்ணகரிலே கிட்டின வுபகாரகன். (என்சரண்) எனக்குப் புகலிடம். (என்கண்ணன்) எனக்கு பவ்யனானவன். (என்னை யாளுடை) என்னை யடிமைகொள்ள வுரியவன். (என்னப்பன்) எனக்குபகாரகன். உலகமென்பது - உயர்ந்தோர்மாட்டு..................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. (வன்சரணித்யாதி) "என்சரணென்கண்ணன்" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (எனக்குப்புகலானவித்யாதி) கீழ்ப்பாட்டில் - எல்லார்க்கும்புகலென்றார்; இதில் - எனக்குப் புகலானமாத்ரமன்றிக்கே சர்வவிதபந்துவுமென்கிறாரென்றபடி.

தேவர்களுக்கு சரணான ப்ரகாரத்தைக் காட்டாநின்றுகொண்டு சப்தார்த்தம் (தேவர்களுக்காகவித்யாதி)

"வெங்கூற்றம்" என்றதுக்குபாவம் (ஆசுரப்ரக்ருதிகளுக்கித்யாதி) அந்தகன் தண்ணீரென்னும்படியென்றது - ம்ருத்யுவானவன் குளிர்ந்தவனென்னும்படியென்கை.

"தென் - திசைக்கு - சரண்" என்றந்வயம். (ஸப்ரமாணமாக விதக்ஷர்த்தம் (தக்ஷிணேத்யாதி) "தக்ஷிணாசாக்ருதா யேந ஶரண்யா புண்யகர்மணா । தஸ்யைததாஶ்ரமபதம் ப்ரபாவாத் யஸ்ய ராக்ஷஸை:" (தக்ஷிணதிக்க்ருதாயேநஶரண்யாபுண்யகர்மணா। தஸ்யைததாஶ்ரமபதம்ப்ரபாவாத்யஸ்யராக்ஷஸை:) இத்யாரண்யகாண்டே.

"என்னையாளுடை" என்னையாளுடையவனித்யர்த்த:.

"உலகம்" என்றது - அநுகூலரான வர்ஜுநாதிவாசகமாமோவென்ன (உலகமென்பதித்யாதி) உயர்ந்தோர்மாட்டு - பெரியோரிடத்திலே வாசகமாய்க்கொண்டு வர்த்திக்குமென்றபடி..................................*



# ஒன்பதாம்பாட்டு.

என்னப்பனெனக்காயிகுளாயென்னைப்பெற்றவளாய்
பொன்னப்பன்மணியப்பன்முத்தப்பனென்னப்பனுமாய்
மின்னப்பொன்மதிள்சூழ்திருவிண்ணகர்ச்சேர்ந்தவப்பன்
றன்னொப்பாரில்லப்பன்றந்தனன்றனதாணிழலே.

## ஆருயிரப்படி.

(என்னப்பன்) * சுட்டுரைத்த நன்பொன்னொளியையு மத்யுஜ்ஜ்வலமான ரத்நத்தினொளியையுமுடைத்தான திருவுடம்பையுடையனாய், அழகியனாய்த் தன்னொப்பாரின்றியேயிருந்த திருவிண்ணகர்ச்சேர்ந்தவப்பன், தன்னழகாலே யெனக்கு ஸ்வாமியாய், தன்னுடைய சௌசீல்யத்தாலே பெற்றதாயும் வளர்த்ததாயும் பண்ணக்கடவ ஸ்நேஹத்தை யென்பக்கலிலேபண்ணி, ஸ்வவிஸ்லேஷஜநிதமான வென்னுடைய நிரவதிக சந்தாபமெல்லாம் போம்படி யதிசீதளமாய் ம்ருதசஞ்சீவநமான தன்றிருவடிகளின் நிழலை யெனக்குத்தந்தருளினானென்கிறார். ... ..........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், பரஸ்பரவிருத்தாகாரமான பந்துவர்க்கமும் ஸ்ப்ருஹணீய வஸ்துக்களும் தனக்கு ப்ரகாரமாகவுடையனான தன்னுடைய வுபகாரகத்வத்துக்கொப்பில்லாத சர்வேஸ்வரன், தன்னுடைய பாதச்சாயையை யெனக்குத் தந்தருளினானென்கிறார்.

எனக்கு - எனக்கஸாதாரணனாய். என்-சத்தாஹேதுவாயிருந்துள்ள. அப்பன்-பிதா. ஆய்-ஆய். இகுள் - அந்தபும்ஸ்த்வத்துக்கு விருத்தமான ஸ்த்ரீத்வத்தையுடைய செவிலித்தாயானவள். ஆய்-ஆய். என்னைப்பெற்றவளாய்-அவளைப்போலே வளர்த்துவிடுகையன்றிக்கே பெற்றவளான வேறுபாட்டையுடைய நற்றாயாய். பொன்னப்பன்-பொன்போலே தன்னுடைய ஸ்ப்ருஹணீயதையை ப்ரகாசிப்பித்தும். மணியப்பன்-அதிற்காட்டி லௌஜ்ஜ்வல்யத்தாலும் மஹார்ஹதையாலும் வேறுபட்ட ரத்நம்போலே தன்னுடைய தேஜஸ்விதையை ப்ரகாசிப்பித்தும். முத்தப்பன் - அதிற்காட்டில் நீர்மையாலும் குளிர்த்தியாலும் வ்யாவ்ருத்தமான முத்துப்போலே தன்சீதளமான நீர்மையைப்ரகாசிப்பித்தும். என்னப்பனும்-இப்படி பஹுமுகமாக வெனக்குபகாரகனும். ஆய்-ஆய். மின்ன-ஒளிவிடும்படி. பொன் - பொன்னான. மதிள்-மதிளாலே. சூழ்-சூழப்பட்ட. திருவிண்ணகர்-திருவிண்ணகரிலே. சேர்ந்த-வர்த்திக்கிற. அப்பன் - சர்வஸ்வாமியாய். இப்படி சர்வப்ரகாரோபகாரகத்வத்துக்கு, தன்-தனக்கு. ஒப்பாரில் - ஒப்பில்லாத. அப்பன்-மஹோபகாரகனானவன். தன-தன். தாள்-திருவடிகளின். நிழல்-நிழலை. தந்தனன்-எனக்குத்தந்தருளினான் ............*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

எனக்கு சரணமானமாத்ரமல்ல, மற்றுமெல்லா மவனேயென்கிறார். எனக்கு சர்வப்ரகாரத்தாலு முபகாரகனாய், தன் பாதச்சாயையை, "அல்லேன்" என்ன, வலியவெனக்குத் தந்தானென்கிறார்.

(என்னப்பனெனக்காய்) எனக்கசாதாரணனாய் சத்தாஹேதுவாயுள்ளபிதாவாய். க்ஷாமகாலத்திலே ப்ரஜையை விற்றுண்ணும் தமப்பனைப்போலன்றியே, தன்னையழியமாறியு மென்னைநோக்கக்கடவபிதாவாய். (இகுளாய்) இகுளையென்று-தோழிக்குப்பேராய், அத்தைக்குறைத்

து, இருளென்றுகிடக்கிறது. இத்தால் சொல்லிற்றாயிற்று-எனக்கு வ்ருத்தகீர்த்தநம்பண்ணுகைக்குத் தோழியுமாய். (என்னைப்பெற்றவளாய்) வளர்த்துக்கொள்ளியான தாயைப்போலன்றியே, பத்துமாஸம் வயிற்றிலேவைத்து நோக்கிப்பெற்றதாயாய். (பொன்னப்பனித்யாதி) வேறே போக்யமாய்க்கொண்டு உபகாரகமாவன சிலவஸ்துக்களுள; எனக்கவ்வோமுகங்களெல்லாம் தானாய் நின்றுபகரித்தவன். (பொன்னும் மணியும் முத்தும்போலேயெனக்குபகாரகன்.) (மின்னப்பொன்னித்யாதி) மின்னுநின்றுள்ள பொன்மதிளாலே சூழப்பட்ட திருவிண்ணகரிலேநின்றவுபகாரகன். (தன்னொப்பாரில்லப்பன்) சிலர்க்கொன்றை யுபகரிக்குமிடத்தில், தன்னோடொக்க வுபகரிக்கவல்லாரில்லாதபடியான மஹோபகாரகன். இதுக்கு ஜீயரருளிச்செய்யும்படி - "* மின்னிடைமடவாரிலே-அவன்வந்துமேல்விழ, நீயெனக்குவேண்டா என்று நான் தள்ளத்தள்ள; நீயுனக்கு ஹிதமறிந்தாயோ, நானுனக்குவேணுங்காண் என்று தன்னையெனக்குத்தந்தவன்" என்று. (தந்தனன் தனதாள்நிழலே) "உன்னையொழிந்தவெய்யிலே யெனக்கமையும்" என்று நானகலப்புக, "அழித்தாயுன்றிருவடியால்" என்று - தன்னுடைய திருவடிகளாலே யென்மமதையைப்போக்கி, பாதச்சாயையை யெனக்குத்தந்தான். அடிபட்டவாறே, "எனக்கு" என்று வைத்தவற்றையும் போகடுவர்களே ... ...*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (என்னப்பனித்யாதி) "என்னப்பனெனக்காயிகுளாய்" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (எனக்குசரணமித்யாதி) "தந்தனன்தனதாள்நிழல்" என்றத்தைப்பற்ற வவதாரிகாந்தரம் (எனக்கு சர்வப்ரகாரத்தாலுமித்யாதி)

என்னப்பனென்னுதே, "எனக்கு" என்றுவிசேஷித்ததுக்குபாவம் (க்ஷாமகாலத்திலேயித்யாதி) எனக்கேயான வென்னப்பனுயென்று சப்தார்த்தம்.

"இகுளாய்" - இகுளையாயென்றபடி.

"பெற்றவள்" என்றதுக்குவாசனை (வளர்த்துக்கொள்ளியித்யாதி)

(போக்யமாய்க்கொண்டு) சுகத்தைக்கொடுத்து (உபகாரகமாவன) என்று கூட்டுவது.

"தன்னொப்பாரில்லப்பன்" என்கைக்கு - அல்லாதாரிற்காட்டி லிவன்பண்ணின வுபகாரமேதென்ன (இதுக்குஜீயரித்யாதி)

"தந்தனன்" என்கையாலே - வலியவேதந்தானென்கிறார். நிழலுக்குப்ரதிகோடித்வேந (வெய்யிலென்றது) "திருவடிகளாலே மமதையைப்போக்கினான்" என்னுமத்தை ரசோக்தியாக வருளிச்செய்கிறார் (அடிபட்டவாறேயித்யாதி) அடியென்று - திருவடிகளுக்கும், ப்ரஹாரத்துக்கும்பேர்... ... ... ... ... ... *

## பத்தாம்பாட்டு.

நிழல்வெய்யிற்சிறுமைபெருமைகுறுமைநெடுமையுமாய்ச்
சுழல்வனநிற்பனமற்றுமாயவையல்லனுமாய்
மழலைவாய்வண்டுவாழ்திருவிண்ணகர்மன்னுபிரான்
கழல்களன்றிமற்றோர்களைகணிலங்காண்மின்களே.

### ஆறாயிரப்படி.

(நிழல்) சாயாதபால்ப மஹத்தீர்க்க ஹ்ரஸ்வ சராசரங்களை ப்ரகாரமாகவுடையனாய், மதுரமாகப்பாடுகிற வண்டுகள்வாழுகிற திருவிண்ணகரொன்றோடு சம்ஶ்லேஷிக்கப்பெற்ற தேசமாகையாலே "இனி யாத்மாந்தமாக விவ்விடத்தைவிடேன்" என்றெழுந்தருளியிருந்த வெம்பெருமானுடைய திருவடிகளல்லது நமக்கு மற்றொரு கதியில்லை. அவனுடையகடாக்ஷம் பெறுவதற்குமுன் பென்னுடைய சத்தையில்லாமையாலும், அவன்கடாக்ஷித் தருளினவாறே நானுளனாகையாலும் நமக்கவனல்லது கதியில்லை யென்னுமிட மெல்லார்க்கும் ப்ரத்யக்ஷிக்கலா மென்கிறார்..........................................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், இப்படி பரஸ்பரவிருத்தாகாரமான சகலசராசரங்களையும் விபூதியாகவுடைய சர்வேஶ்வரன் திருவடிகளல்லது வேறுரக்ஷகமுடையோ மல்லோம்; இத்தை நிரூபித்துக்கொள்ளுங்கோளென் றுபதேசித்து முடிக்கிறார்.

நிழல் - தாபசாந்திகரமானசாயையும். வெய்யில் - தாபகரமானஆதபமும். சிறுமை - சிறுமைக்கெல்லையான ஆணுத்வமும். பெருமை - பெருமைக்கெல்லையான மஹத்வமும். மத்யமபரிமாணங்களிலுண்டான, குறுமை - ஹ்ரஸ்வத்வமும். நெடுமையும் - தீர்க்கத்வமும். ஆய் - ஆய். சுழல்வனநிற்பன - சராசராத்மகமான. மற்றும் - மற்றுமுள்ளபதார்த்தங்களும். ஆய் - ஆய். இப்படிசர்வசரீரியாகாநிற்கச்செய்தே, அவை - அவற்றினுடையஸ்வபாவத்தை. அல்லனும் - உடையவனல்லாதவனும். ஆய் - ஆய். மழலை - முக்தமான. வாய் - வாக்வ்யவஹாரத்தையுடைய. வண்டு - வண்டுகள். வாழ் - ஸ்வபோக்யலாபத்தாலேவாழும்படியான. திருவிண்ணகர் - திருவிண்ணகரிலே. மன்னு - நித்யவாசம்பண்ணுகிற. பிரான் - சர்வேஶ்வரனுடைய. கழல்கள் - திருவடிகளை. அன்றி - ஒழிய. மற்று - வேறு. ஓர் - ஒரு. களைகண் - ரக்ஷகவஸ்துவை. இலம் - உடையோமல்லோம். காண்மின்கள் - இது நிரூபித்துக் கொள்ளுங்கோள்..........................................................................*

### ஈடு - பத்தாம்பாட்டு.

அவன்திருவடிக ளல்லது மற்று ரக்ஷகமில்லையென்னுமிடத்தை புத்திபண்ணுங்கோளென்கிறார்.

(நிழல் வெய்யில்) சீதஹேதுவான நிழலும், உஷ்ணஹேதுவானவெய்யிலும். (சிறுமைபெருமை) அணுத்வமஹத்த்வங்கள். (குறு

மைநெடுமை ) மத்யமபரிமாணத்திலுண்டான ஹ்ரஸ்வதீர்க்கங்கள். ( சுழல்வனநிற்பன ) ஜங்கமஸ்த்தாவரங்கள். ( மற்றுமாய் ) அநுக்தசமுச்சயம். சொல்லப்படாததெல்லாமாய். ( அவையல்லனுமாய் ) அவற்றுக்கந்தர்யாமியாய் நிற்கச்செய்தே அவற்றின்தோஷம் தட்டாதபடிநிற்குமென்று - கீழே சொல்லிற்றிறே; இனியிங்கென்னென்னில்; அவற்றுக்குவரு மவஸ்த்தைகளையு முடையனல்லனுயென்றபடி. அவையாவன - சேதநகதமாயுள்ள சுகித்வ துஃகித்வாதிகளும், அசேதநகதமான பரிணாமாதிகளும். ( மழலைவாய்வண்டுவாழ் ) பருவத்தி லிளமையாலே இனியபேச்சுக்களை யுடைத்தான வண்டுகள் வர்த்தியாநின்றுள்ள திருவிண்ணகரிலே நித்யவாசம்பண்ணுகிற வுபகாரகன் திருவடிகளையொழிய வேறுரக்ஷகரையுடையோமல்லோம். ( கழல்களன்றிமற்றோர்களைகணிலம் ) "ஊமெகஂஶரணஂவ்ரஜ" ( மாமேகம்ஶரணம்வ்ரஜ ) என்னுமவனன்றிக்கே, திருவடிகள்தானே தஞ்சமென்கை.

( காண்மின்களே ) இது அர்த்தவாதஞ் சொல்லுகிறேனன்று, நீங்களும் பாருங்கோள்........................................................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. ( நிழலித்யாதி ) "கழல்களன்றிமற்றோர்களைகணிலம்" இத்யாதியைப்பற்ற வவதாரிகை ( அவன்திருவடிகளல்லதித்யாதி )

"சிறுமைபெருமை" என்றுசொல்லி, "குறுமைநெடுமை" என்கையாலே ( மத்யமபரிமாணமென்கிறது )

கீழும் "அல்லனாய்" என்றது, இங்கும் "அல்லன் - ஆய்" என்றது, இரண்டுக்கும் பேதமென்னென்னிலென்றபடி. கீழ் - அகர்மவஶ்யதைசொல்லிற்று, இங்கு - தத்கார்ய சுகதுஃகராஹித்யஞ் சொல்லுகிறதென்றபடி.

மன்னுபிரானன்றியென்னாதே, "கழல்களன்றி" என்றதுக்கு பாவம் ( மாமேகமித்யாதி ) அதாவது; திருவடிகளாலே - ததீயரைச்சொல்லி, ஈஶ்வரனன்றிக்கே ததீயாபிமாநமே யுத்தாரகமென்கை.

( பாருங்கோள் ) மநஸ்ஸிலென்றபடி.........................................................*

---

# பதினொன்றாம்பாட்டு.

காண்மின்களுலகீரென்றுகண்முகப்பேநிமிர்ந்
தாளிணையன்றன்னைக்குருகூர்ச்சடகோபன்செ
வாணையாயிரத்துத்திருவிண்ணகர்ப்பத்தும்வ
கோணையின்றிவிண்ணோர்க்கென்றுமாவர்குர[illegible]ளே.

யத்வாகாரத்தாலே லீலாவிபூத்யநுசந்தாநம்பண்ணி ஹ்ருஷ்டராம் நிலையுள்ளது முக்தர்க்காகையாலே, இங்கேயிருந்தேயவர்களநுசந்தாநத்தைப்பண்ணுகிறவிவனை, "சம்சாரத்தே யிருந்துவைத்தே நம்படியொருவனுக்குண்டாவதே!" என்று கொண்டாடியிருப்பர்கள்.... ..............*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (காண்மின்களித்யாதி) "பத்தும்வல்லார் - விண்ணோர்க்கென்றுமாவர்குரவர்கள்" என்கிறபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை (இத்திருவாய்மொழியித்யாதி)

கண்முகப்பேநிமிர்ந்தவென்னாதே, "காண்மின்களுலகீர்" என்றுவிசேஷித்ததுக்கு பாவம் (உங்கள்தலையிலேயித்யாதி) சாடுவாக உக்தார்த்தவிவரணம் (இதொருவித்யாதி) அரபிமாநிகளாகையாலே (இருப்பர்கள்) என்றபடி. அடி-திருவடிகளும், ப்ரஹாரமும்.

இந்தசௌலப்யத்தை - திருவுலகளந்தருளின சௌலப்யத்தை.

ஆணை - ஜகந்நியமநம். "ஆயிரத்து - ஆணை - திருவிண்ணகர்ப்பத்து" என்றவயிப்பது - ஜகந்நியமநத்தை ப்ரதிபாதிக்கிற பத்தென்றபடி.

விவரணம் (கௌரவ்யராவனொன்று) மிறுக்கு - அநுபபத்தி. * ப்ரஸக்தஸ்யஹிப்ரதிஷேதஃ அன்றோ, அநுபபத்திக்கு ப்ரஸக்தி யேதென்ன ; ப்ரஸக்தியை சங்கித்து பரிஹரிக்கிறார் (அஸ்ப்ருஷ்டேத்யாதி) குரவர்கள் - குருக்கள்.........*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

---

(நல்குரவு.)

[illegible]

(ஸம்பத்தாரித்ர்யபாவாத்) நல்குரவும்செல்வும் - ஐஶ்வர்ய தாரித்ரங்களை விபூதியாகவுடையனாகையாலும்; (அஸுகஸுகக்ருதே:) கண்டவின்பம் சுகதுஃகாதிகளைப்பண்ணுகையாலும்; (பத்தநக்ராமபாவாத்) நகரமுநாடு-நகரக்ராமாதிகளை விபூதியாகவுடையனாகையாலும்; (புண்யாபுண்யாதிபாவாத்) புண்ணியம்பாவம்-புண்யபாப ஸம்ஶ்லேஷ விஶ்லேஷாதிகளை யுண்டாக்குகையாலும்; (கபடருஜுதயா) கைதவம்செம்மை-கபடார்ஜவாதிகளை ப்ரவர்த்திப்பிக்கையாலும்; (ஸர்வலோகாதிபாவாத்) மூவுலகங்களுமாயல்லனாய் - லீலாவிபூதி நித்யவிபூதியையுமுடையனாகையாலும்; (திவ்யாதிவ்யாங்கவத்வாத்) பரடம்பாயமுக்குப்பதித்தவுடம்பாய்-அப்ராக்ருத திவ்யவிக்ரஹனாய்க்கொண்டு ப்ராக்ருத ஜகச்சரீரகனாய்க்கொண்டு மிருக்கையாலும்; (ஸாராஸாரகிருஜகணஸ்திருத்வதயா) வன்சரண்சுரர்க்கா யசுரர்க்கு வெங்கூற்றமுமாய் - தேவர்களுக்கு ரக்ஷகனாய்

னுமாய், தைத்யர்களுக்கு சத்ருவுமாகையாலும் ; (சாயாச்சாயாதிபவாத்) நிழல் வெய்யில் - சாயாதபாதிகளை யுண்டாக்குகையாலும்; இவற்றாலே - ஆர்த்தாத், சாயாதபங்களைப்போலே ப்ரியஹிதகரமான "என்னப்பனெனக்காய்" இத்யாதியாலே பூர்வகாதையிற்சொல்லப்படுகிற மாத்ருபித்ருபாவம் ஸங்க்ரஹிக்கப்படுகிறது;இப்படி விருத்தவிபூதிகனுகையாலே திருவிண்ணகர்ப்பெருமானை அகடிதகடனாமுக்தனுக "நல்குரவும்" என்கிறதசகத்திலே யாழ்வாரருளிச்செய்தாரென்கிறுர்.

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

நல்லவலத்தானம்மைச்சேர்த்தோன்முன்னண்ணுரை
வெல்லும்விருத்தவிபூதியனென் - றெல்லையறத்
தானிருந்துவாழ்த்துந்தமிழ்மாறன்சொல்வல்லார்
வானவர்க்குவாய்த்தகுரவர். (ருந)

(நல்லவலத்தால்) இதில் - விருத்தவிபூதியுக்தனுயிருக்கிறபடியைப்பேசின பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறுர். எங்ஙனேயென்னில்; கீழ் "அல்லோம்" என்றிருந்ததம்மை "ஆவோம்" என்னப்பண்ணின வவனுடைய வகடிதகடநாஸாமர்த்யத்தை யநுசந்தித்து விஸ்மிதரானவிவர்க்கு, "இதொன்றுங்கண்டோ நீரிப்படி விஸ்மிதராகிறது, நாட்டில் தன்னில்தான்சேராத பதார்த்தங்களெல்லாவற்றையும் நம்முடனே சேர்த்துக்கொண்டு திருவிண்ணகரிலே நிற்கிறபடிபாரீர்" என்று அவன்தன் விருத்தவிபூதியோகத்தைக்காட்ட, அத்தையநுசந்தித்து ஹ்ருஷ்டராய்ச்செல்லுகிற - * நல்குரவும்செல்விலர்த்தத்தை "நல்லவலத்தால்" இத்யாதியாலே அருளிச்செய்கிறுரென்கை.

(நல்லவலத்தால்நம்மைச்சேர்த்தோன்) அதாவது - லீலோபகரணங்களை [illegible]த்தும் பறித்தும் கழகமேறியும் வழிமறித்தும் சிற்றிலழித்தும் * முற்றத்தூடு [illegible] முறுவல்செய்து வார்த்தைசொல்லியு மிப்படியாயிற் றிவருடலைத்தீர்த்துக்[illegible]ட்டது. இவர் "இதோரகடிதகடநாசாமர்த்யசக்தியிருந்தபடியென்" என்று [illegible] (முன்னண்ணுரைவெல்லும்) என்று - அத்தைமுதலிக்கிறுர். அதாவது- * புருஷ்டி சித்தாபஹாரியாய் * ஸாக்ஷாந்மந்மதமந்மதனுன தன்ஸந்நிதியிலே [illegible]ாம்" என்றிருந்தநம்மை ஸ்த்ரீத்வாபிமாநத்தைக்குலைத்து ஊடுகையைத்[illegible] கூடப்பண்ணினபடியென்கை. முன் நண்ணுராய் - கிட்டாதாராயிருக்கி[illegible] நல்லவலத்தால் - சேர்த்தோனென்றந்வயமாகவுமாம். அன்றிக்கே, முன்[illegible]று - பூர்வசத்ருக்களாய், அவர்களை "நின்றிலங்குமுடியினுய்" இத்யா[illegible]யே வென்றாப்போலே நம்மை நல்லவலத்தால் சேர்த்தோனென்றுகவுமாம் [illegible]டி சேராதத்தைச்சேர்ப்பதே?" என்றிவரீடுபட, "இதொன்றுகண்[illegible]ா [illegible]ர்யப்படுகிறீர், லோகத்தில் பரஸ்பரவிருத்தங்களாயிருக்கிற விபூதி[illegible]பத்[illegible]கொண்டு திருவிண்ணகரிலேநிற்கிறபடி பாரீர்" என்று விருத்தவிபூ[illegible]க்தனு[illegible]றபடியைக்காட்ட (விருத்தவிபூதியனென்று) அதாவது-"நல்குரவு[illegible]ல்வு,கண்டவின்பந் துன்பம்," "நகரமுநாடுகளும்," "புண்ணியம் [illegible]வம்," "[illegible]வம் செம்மை," "மூவுலகங்களுமாயல்லனுய்," "பரஞ்சுடரு

டம்பா யழுக்குப்பதித்தவுடம்பாய்," "வன்சரண்சுரர்க்கா யசுரர்க்குவெங்கூற்றமுமாய்," "நிழல்வெய்யில்" இத்யாதிபாட்டுக்களிலே - "அஜீ:ஸோவ:ைர ஷோஜூ:ெைஹா:" (அக்நி:கோப:ப்ரஸாதஸ்தேஸோம:) என்னும்படியான விருத்தவிபூதிகத்வத்தைப்பரக்கப்பேசி. (எல்லையறத்தானிருந்துவாழ்த்தும்) அதாவது - "பல்வகையும்பரந்தபெருமானென்னையாள்வானை" என்றும், "கண்டுகொள்தற்கரியபெருமானென்னையாள்வான்" என்றும், "திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் புகர்கொள்கீர்த்தியல்லாலில்லை யாவர்க்கும்புண்ணியம்" என்றும், "கண்ணனின்னருளேகண்டுகொண்மின்கள்" என்றும், "திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான்செய்தகாவு" என்றும், "திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் பாவியேன்மனத்தே யுறைகின்றபரஞ்சுடர்" என்றும், "திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் வரங்கொள்பாதமல்லாலில்லை யாவர்க்கும் வன்சரண்" என்றும், "திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரானென்சரணென்கண்ணனென்னையாளுடையென்னப்பன்" என்றும், "என்னப்பனெனக்காய்" என்றுதொடங்கி, "திருவிண்ணகர்ச்சேர்ந்தவப்பன் தன்னொப்பாரில்லப்பன் தந்தனன் தனதாணிழல்" என்றும், "திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் கழல்களன்றி மற்றோர்களைகணிலம்" என்று மிப்படி யிதுக்கென்னச்சமைந்திருந்து நிரவதிகஸ்தோத்ரங்களாலே ஸ்துதித்தருளும். (தமிழ்மாறன்சொல்வல்லார்) சர்வசுலபமான த்ராவிடபாஷைக்கு தேசிகரான வாழ்வார் திவ்யசூக்தியான வித்திருவாய்மொழியை யப்யஸிக்கவல்லார். (வானவர்க்கு வாய்த்தகுரவர்) அவனுடையவிபூதியை ததீயத்வாகாரேண வநுபவிக்கிற நித்யசூரிகளுக் கநுபவவிஷயமான வித்திருவாய்மொழியை யிவர்களிங்கேயிருந்த நுஸந்திக்கையாலே, அவர்களுக் கநுரூபமான வாதரணீயராவர். "திருவிண்ணகர்ப்பத்தும்வல்லார் கோணையின்றி விண்ணோர்க்கென்று மாவர்குரவர்கள்" என்றத்தை யருளிச்செய்தபடி..................(ருங)

ஆறும்பத்தில் - மூன்றுந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக - திருவாய்மொழி - ருங.—பாட்டு - ருஅரு.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஆரம்பத்து.

## நான்காந்திருவாய்மொழி.

### குரவை — ப்ரவேசங்கள்.

### ஆறாயிரப்படி.

(குரவை) இப்படி திருவிண்ணகரி லெம்பெருமானைக்கண்டு, அவனுடைய சர்வநியந்த்ருத்வ சௌசீல்ய சௌந்தர்யாதி கல்யாணகுணங்களை யநுபவித்து நிரதிசய ப்ரீதியுக்தராய் சம்ப்ராந்தரான வாழ்வாரைக்கண் டெம்பெருமான் ப்ரீதனாய் * பிறந்தவாற்றி லிவருடைய விழவெல்லாந்திரும்படி தன்னுடைய திவ்யாவதாரந்தொடங்கித் திருநாட்டி லெழுந்தருளுகை பர்யந்தமாக நடுவுள்ள சர்வதிவ்யசேஷ்டிதங்களையுங் காட்டி யருளக்கண்டநுபவித்து, தததநுபவஜநித நிரவதிக நிர்வ்ருதியாலே, பரிபூர்ண மநோரதனானே னென்கிறார். ..............................*

### பன்னீராயிரப்படி.

நாலாந்திருவாய்மொழியில், கீழ் - விருத்தவிபூதியோகத்தாலே தன்னகடிதகடநாசக்தியைக்காட்டி “பலப்ரதாநசமர்த்தன்” என்கிற ப்ரதிபத்தியைப்பிறப்பித்த சர்வஸ்மாத்பரனுடைய சுகமத்வஸூசநார்த்தமாக; அவனுடையவநந்தசாயித்வத்தையும், ஆஶ்சர்யாகாரவத்தையையும், அதிஶயிதௌஜ்ஜ்வல்யத்தையும், அப்ராக்ருதவிக்ரஹவத்தையையும், அர்த்திகளுக்கபேக்ஷிதகரத்வத்தையும், அந்யாபிமாநநிவர்த்தகத்வத்தையும், அதிசயிதபோக்யாகாரத்தையும், அர்த்தியாயுமபேக்ஷிதந் தலைக்கட்டிக்கொள்ளும்படியையும், அசாதாரணசிஹ்நயோகத்தையும், பராஞ்ஜ்யோதிஸ்ஸ்வரூபவத்தையையுமநுசந்தித்து, ஏவம்ப்ரகாரனான க்ருஷ்ணனுடைய மநோஹாரியான அகிலசேஷ்டிதங்களையு மிங்கேயிருந் தவரதாநுபவம் பண்ணப்பெற்ற வெனக்காரினி நிகராவரென்று ஹ்ருஷ்டராய்க்கொண்டு, அவனுடைய ஸௌபஸதத்வத்தை ப்ரதிபாதித்தருளுகிறார்........................................*

### ஈடு.

இத்திருவாய்மொழியி லாழ்வார் ஸ்ரீவால்மீகிபகவானோடொப்பர். அவனும் ராமாவதாரமல்லது போக்கியறியான், அவனுடைய ப்ரபந்தமு மப்படியே; இவரும் க்ருஷ்ணாவதாரமல்லதறியார், இத்திருவாய்

மொழி - க்ருஷ்ண வ்ருத்தாந்தமொழிய வேறொன்றைச் சொல்லாது. "ஸாவொ நாநு) தூம்வூ தி" (பாவோநாங்யத்ரகச்சதி) என்றுகொண்டு-பரதசையுங்கூட வேண்டேனென்ற திருவடியைப்போலேயாயிற்றிவரும் க்ருஷ்ணவதாரமொழிய வேறொன்றறியாதபடி.

"சேணுயர் வானத்திருக்கும் தேவபிரான்" என்கிறபடியே-கிட்டநின்றநுபவிக்கப்பெற்றிலோமென்கிற விழவுதீர, பூமியிலேயாகப்பெற்றது; "தொல்லருணல்வினையால் சொலக்கூடுங்கொல்" என்றிறே யிவராசைப்பட்டது; அதாவது - நாநீர்வந்து திருநாமம் சொல்லுகையாகிறது சுக்ருதபலமிறே. * பிறந்தவாற்றி லிவர்க்குண்டான விழவெல்லாம் தீரும்படி ஸ்ரீப்ருந்தாவந வ்ருத்தாந்தத்தைக் காட்டிக்கொடுக்கக்கண்டு, அது பூதகாலமாய்த் தோற்றுகையன்றிக்கே சமகாலம்போலே கிட்டநின்றநுபவிக்கிறார்.

* மின்னிடைமடவாரிலே - "அல்லோம்" என்றகன்று முடிந்துபோகப்புக்கதம்மை "ஆவோம்" என்னப்பண்ணிச்சேர விட்டுக்கொண்டபடியை யநுசந்தித்து, இப்படி வல்லாரிவ னல்லதில்லைகிடீ ரென்று தலைக்கட்டுகிறாராயிருக்கிறது. * சன்மம்பலபலவிலும் - இப்படியிருப்பதொருஹர்ஷமுண்டே, அதிலிதுக்குவாசியென்னென்னில்; அங்கு - இதர வ்யாவ்ருத்திமாத்ரத்தாலுண்டானஜ்ஞாநலாபத்தால் வந்தஹர்ஷம்; இங்கு-அவன்தன்குணங்களை நேரேயிவரை நெருக்கியநுபவிப்பிக்க, ஸ்வவசமல்லாதபடி யநுபவித்துஹ்ருஷ்டராய் வாய்விடுகிறார். ...............*

## ஜீயர் அரும்பதம்.

குரவையாய்ச்சியர்ப்ரவேசே, இத்திருவாய்மொழியிலே க்ருஷ்ணகுணங்களிலே யீடுபட்டுப்பேசுகிற விவர்க்கும், க்ருஷ்ணகுணைக ப்ரதிபாதகமான வித்திருவாய்மொழிக்கும் த்ருஷ்டாந்தமாக ஸ்ரீவால்மீகிபகவானையும், ஸ்ரீராமாயணத்தையுமருளிச்செய்கிறார் (இத்திருவாய்மொழியென்றுதொடங்கி, வேறொன்றைச்சொல்லாதென்னுமளவும்) விவரணம் (அவனுமித்யாதி) த்ருஷ்டாந்தாந்தரம் (பாவோநாங்யத்ரோத்யாதி) "ஸ்ரெஹொமெவரமொராஜநு கயிநித்ய்ரஂவுர திஷ்ஷிதஃ। ஹக்திஶுநியதாவீர ஸாவொ நாநு) த்ர மவூ தி" (ஸ்நேஹோமேபரமோராஜந்த்வயிநித்யம்ப்ரதிஷ்ட்டிதஃ। பக்திஶ்சநியதாவீரபாவோநாந்யத்ரகச்சதி) இத்யுத்தரஸ்ரீராமாயணே.

இத்திருவாய்மொழியில் * மாசறுசோதிதொடங்கி, * மின்னிடைமடவாரளவுமுண்டான வ்யஸநங்களெல்லாந்தீர வநுபவிக்கிறாரென்கிறார் (சேணுயரித்யாதி வாக்யத்ரயத்தாலே) பூமியிலேயாகப்பெற்றதென்றது - அவதரிக்கப்பெற்றதென்றபடி. (சுக்ருதபலமிறே) ஆகையாலே ஆசைப்பட்டபடியே திருநாமங்கள் சொல்லப்பெற்றதென்றபடி. பிறந்தவாற்றி லிவர்க்குண்டான விழவெல்லாமெனறது-ஈரித்துநின்றநுபவிக்கமாட்டாத விழவெல்லாமென்றபடி.

* மின்னிடைமடவாரோடிதுக்கு சங்கதியேதென்ன (மின்னிடைமடவாரிலேயித்யாதி) (தலைக்கட்டுகிறுராயிருக்கிறது) * நல்குரவிலே தலைக்கட்டுகிறுராயிருக்கிறதென்றபடி. * மின்னிடைமடவார்க்கு மிதுக்கும் நேரேசங்கதி; * நல்குரவு ப்ராசங்கிகம்.

கீழேயுமிப்படிப்பட்ட ஹர்ஷமுண்டே, இதுக்கு வாசி யேதென்கிற சங்கையையநுவதித்து பரிஹரிக்கிறுர் (சன்மம்பலவித்யாதி) இதரவ்யாவ்ருத்தியாவது- * சொன்னுல்விரோதத்தில் திருந்தாதசம்சாரிகளில் தமக்குண்டானவ்யாவ்ருத்தி.*

---

## நான்காந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

குரவையாய்ச்சியரோடுகோத்ததுங்குன்றமொன்றேந்தியது
முரவுநீர்ப்பொய்கைநாகங்காய்ந்ததுமுட்படமற்றும்பல
வரவிற்பள்ளிப்பிரான்றன்மாயவினைகளையேயலற்றி
யிரவுநன்பகலுந்தவிர்கிலமென்னகுறைவெனக்கே.

### ஆருயிரப்படி.

நாகபர்யங்கசாயியான பரமபுருஷன் ஸ்ரீவசுதேவர் திருமகனுய்வந்துபிறந்தருளி, ப்ரணயிஜநசம்ப்லேஷைகபோகனுகையாலே திருவாய்ப்பாடியிற் பெண்பிள்ளைகளோடே திருக்குரவைகோத்து சம்ப்லேஷித்தருளினபடியையும், ப்ரணயிஜந பரித்ராணர்த்தமாகையாலே தத்ஸம்ப்லேஷத்திற்காட்டிலும் தனக்கு போக்யமான கோவர்த்தநமஹாகிரி சமுத்தரணமும், விஷாநலஜ்வாலாநபிபவநீய மஹாஹ்ரதநிவாஸி காளிய நிரஸநப்ரப்ருத்யாஸ்சர்ய சர்வதிவ்ய சேஷ்டிதங்களையு மநுபவித்து, அவ்வநுபவஜநிதப்ரீதியாலே யப்ரக்ருதிங்கதனு யவற்றையேயலற்றி யிரவுநன்பகலும் நான்தவிர்கிலன் எனக்கினி யென்னகுறை யுண்டென்கிறுர்....*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், அவதாரகந்தமான அநந்தசாயித்வத்தை யுடையனுன க்ருஷ்ணனுடைய ஆஸ்சர்யசேஷ்டிதங்களை ப்ரீதிப்ரேரிதராய்க்கொண்டு சொல்லி அவிச்சிந்நமாக நடக்கப்பெற்றேும், நமக்கென்னகுறை யுண்டென்கிறுர்.

ஆய்ச்சியரோடு - ஆய்ச்சியரோடேகூட. குரவை-திருக்குரவையிலே. கோத்ததும் - எல்லாப்பெண்களும் தன்கைகோத்தாராம்படி வகைமாலைபோலே யிடையிடையே தன்னைக்கலந்து கோத்ததும். இந்தப்பெண்களோட்டை ரசத்துக்கு விலக்காகவந்தமழையைத் தடுக்கைக்காக, ஒன்று - ஒரு. குன்றம் - மலையை. ஏந்தியதும் - எடுத்தேழுநா ளநாயாஸேந தரித்துக்கொண்டு நின்றதும். உரவு-முதிர்ந்த. நீர் - ஜலத்தையுடைத்தான. பொய்கை - பொய்கையில். நாகம் - காளியனை. காய்ந்ததும் - முனிந்து நியமித்தப்ரகாரமும். உட்பட - முதலாக. மற்றும் - மற்றும்.

பல - பலவாய். "நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய" ( நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ) என்கிறபடியே அவதாரார்த்தமாக, அரவில்பள்ளி - கண்வளர்ந்தருளின நாகபர்யங்கத்தை. பிரான்றன் - விட்டுவந்த வுபகாரகனுடைய க்ருஷ்ணனுடைய. மாயம் - ஆச்சர்யங்களான. வினைகளையே - சேஷ்டிதங்களையே. அலற்றி - ப்ரீதிபரவசனாய்க்கொண்டு சொல்லி. நன் - குணகதநத்துக்குறுப்பான நன்மையையுடைய. இரவும்-இரவும். பகலும் - பகலும். தவிர்கிலம் - ஓய்கிறிலோம். நமக்கு - நமக்கு. என்ன - என்ன. குறை - குறைவு. உண்டு - உண்டு.

அநுபாவ்யசங்கோசத்தால் வரும் குறையுண்டோ, அநுபவவிச்சேதத்தால் வரும் குறையுண்டோவென்றுகருத்து. "தவிர்கிலனென்னகுறைவெனக்கு" என்னும் பாடஞ்சொல்லுவர்..............................................................*

## ஈடு - முதற்பாட்டு.

அஹோராத்ரம் க்ருஷ்ணகுணங்களை ப்ரீதிபூர்வகமாக வநுபவிக்கப்பெற்ற வெனக்கினி யொருகுறையில்லையென்கிறார்.

(குரவையாய்ச்சியரோடுகோத்ததும்) * பிறந்தவாறும் என்றாப்போலேதொடங்கி ஓரவதாரம் முன்னாகவிழியாதே, இதிலேயிழிவானென்னென்னில் ; * மின்னிடைமடவாரிலுண்டான தம்முடைய ப்ரணயரோஷத்தைப்போக்கித் தம்மைச்சேரவிட்டுக்கொண்டபடி, திருக்குரவையில் பெண்களோடேகலந்து அவர்களை யநுபவிப்பித்தாப்போலேயிருக்கையாலே, அதுமுன்னாகப்பேசுகிறார். தாமநுஸந்திக்கிலிறே யோரடைவாகவிழிவது, அவனநுபவிப்பித்தபடியே பேசுகிறாராகையாலே; திருக்குரவையிற் பெண்களோடுண்டானகலவியையாயிற் றிவர்க்குமுதலிலே காட்டிக்கொடுத்தது. பஞ்சலக்ஷங் குடியிற் பெண்களெல்லாரோடுங்கலந்த ப்ரீதியுண்டாயிற் றிவரொருவரோடே கலந்தப்ரீதி. தன்செல்லாமையாலே யிடைப்பெண்களுடைய மாலையிலே தன்னை அப்ரதாநனாக்கிக்கொண்டு கோத்ததும். "குரவைபிணைந்தகுழகும்" என்றுசைப்பட்டபடியே யநுபவிக்கிறார். பெண்களுடைய மாலையிலே யிடையீடாகத் தன்னைக்கோக்கிறபோது, "விஜாதீயனொருவன்கலந்தான்" என்று தோற்றுதபடி அவர்களோடே யொருநீராகக் கலந்தபடி. பெண்களும் பெண்களுமிறே கைகோத்துவிளையாடுவார். திருக்குரவையிலிவனையொழியப் பெண்களுக்குச் செல்லாதாப்போலே காணும் * மின்னிடைமடவாரிலாழ்வாரையொழிய இவனுக்குச்செல்லாதமைவிளைந்தபடி. கோக்கை - தொடுக்கை. கைகோத்துக்கொண்டாடும் கூத்திறே - குரவைக்கூத்தாகிறது. ( குன்றமொன்றேந்தியதும் ) ஸ்வர்க்கமென்றுகொண்டொரு போகபூமியாய், அங்கே அப்ஸரஸ்ஸுக்களோடே கழகமிருந்து புண்யபலாநுபவங்கள்பண்ணி சுகப்ரதாநனா யிருப்பா னிந்த்ரனென்றொருவனுண்டிறே ; அவ்வநுபவத்தை பூமியிலே ஒருபருவத்திற் பெண்களோடேகூட ஸ்வைரமாக வநுபவித்திருக்கிற விருப்பைக் கண்டு, அது பொறுக்கமாட்டாமை அசூயைவர்த்தித்து, "நமக்கிட்ட சோற்றை யுண்டா

ன் ” என்ருெரு வ்யாஜமாகக் கல்வர்ஷத்தை வர்ஷிப்பித்தான்; அப்போ து கைக்கெட்டிற்ருெரு மலையையெடுத்து தரித்துக்கொண்டு நின்றபடி. ஒருவனிங்கே யொருநாள் மூக்குப்புதைக்குங் காட்டில், “ நம்முடைய போகம் பகுந்துபோகப் புகாநின்றது ” என்றஞ்சி அவரை உவரை வர விட்டுக் கலக்குமவனிறே. “இப்படி யநுபவிக்கிருன் சர்வேஶ்வரன் ” என்றறியானிறே, இவன் தன்னை மநுஷ்யஸஜாதீயனுக்கி வைத்துக்கொ ண்டிருக்கையாலே. அன்றைக்கல்வர்ஷத்தில் பசுக்களுக்கு மிடையர்க்கு ம்வந்த வாபத்தைத் தீர்த்தாப்போலேயாகாதேயிவர்க்கும் * மின்னிடை மடவாரில்வந்த வாபத்துத் தீர்த்தபடியும். ( ஏந்தியதும் ) பரார்த்தமா கையாலே கைக்கோராபரணம்போலே யாயிற்றது தான் வருத்தமற்றிரு ந்தபடி. பூவேந்திஞப்போலே யிருந்தது. ஏழுவயஸ்ஸிலே யேழுநா ளொருபடிப்பட தரித்துக்கொண்டிறே நின்றது. ( குன்றமொன்றேந்தி யதும் ) “ இப்படி யேழுவயஸ்ஸிலே யேழுநாள் தரித்ததுக்கென்செய் வோம்நாம் ” என்று ஒருவர் நெஞ்சாறல்படாதபடி ஸகோத்ரியாய் நின் றிறே யிவனிவற்றை ரக்ஷித்தது. ( உரவுநீர்) தறைகாணவொண்ணுமை யாலுண்டான ஆழத்தை யுடைத்தான மிடுக்கை யுடைய நீரொன்னுதல்; அன்றியே, காளியன்விஷத்தாலே யொருவர்க்கும் கிட்டவொண்ணுத வ லியென்னுதல்; முதுநீராகையாலே, வலியநீரொன்னுதல். ( விஷத்தா லே பாதகமான வலியென்னுதல். ) உரவு - விஷமென்னுதல். ( நாகங் காய்ந்ததும் ) நாகத்தையோட்டியதும். பாம்படித்து மேலிட்டுக் காணு ம் பெண்களோடே ஜலக்ரீடை பண்ணிற்று. ( உட்படமற்றும்பல ) இ வைமுதலான சேஷ்டிதங்களுக்கோரொண்ணில்லை. * பிறந்தவாற்றில் - ப லஹாநியாலே சொல்லமாட்டிற்றிலர், இங்கு - உகப்புத் தலைமண்டையி ட்டுச் சொல்லமாட்டுகிறிலர். மற்றுமிப்படி பெண்களோட்டைக் கலவி க்கு விரோதிகளான தண்ணீர்த்துரும்பறுத்தவை யநேகங்கள். ( அரவி ற்பள்ளிப்பிரான் ) நாட்டாருறக்கம் தமோகுணாபிபூதமாய் ஸ்வார்த்தமா யிருக்கும், இவனுறக்கம் பிறருடைய ரக்ஷணார்த்தமாயிருக்கும். * உறங் குவான்போல் யோகுசெய்தபெருமானிறே. உறங்கினுகில் பரரக்ஷண த்துக் குடலாயிருக்கும், உணர்ந்திருந்தாஞகிலு மப்படியே, இதென்ன வுபகாரந்தான் !. ( அரவிற்பள்ளிப்பிரான் ) கீழ் - ஒருபாம்போடுண்டா ன சேராமை சொல்லிற்று, இங்கு - ஒருபாம்போ டுண்டான சேர்த்தி சொல்லுகிறது. அங்கு - போகத்தைக் காற்கடைக்கொண்டமை சொல் லிற்று, இங்கு - போகப்ராவண்யம் சொல்லுகிறது. ப்ரதிகூலனுனகாளி யனைப் பறக்கவோட்டினுன், அநுகூலனுனவனைப் படுக்கையாகக்கொண் டான். இவன்ரு னநந்தமுகமாக வநுகூலிக்கும், அவனு மநந்தமுகமாக வடிமைகொள்ளும். * ஆயிரம் பைந்தலைய வனந்தனிறே. ( அரவிற்பள் ளிப்பிரான் ) அவதாரங்களுக்கடி திருப்பாற்கடலாகையாலே அத்தைச் சொல்லுதல்; அன்றியே, “ நாகணைமிசைநம்பிரான்சரணேசரண் ” எ

ன்றத்தை ப்ரத்யபிஜ்ஞை பண்ணுகிறுராதல். ( தன்மாயவினைகளேயேய லற்றி ) அவனுடைய வாஸ்சர்யசேஷ்டிதங்களேயே வாய்விட்டுஸ்தோத் ரம்பண்ணி. ( இரவுநன்பகலும் தவிர்கிலம் ) பகவதநுபவத்துக் குறுப் பாகாதவன்றிறே * சுடர்கொ ளிராப்பகலா யிருப்பது; அநுபவயோக்ய மான காலமாகையாலே - நல்லவிரவும் நல்லபகலுமென்கிறுர். விஸ்லே ஷித்தபோதிறே நெருப்பையுருக்கி யெறட்டினுப்போலே யிருப்பது.

( என்னகுறைவெனக்கே ) " நகாலஸ்தத்ர வைப்ரபு: " ( ந காலஸ்தத்ரவைப்ரபு: ) என்று கொண்டு - பகலு மிரவும் நடையாடாத தொருதேசவிசேஷந்தேடி யநுபவிக்கைக்குப் பட்டைப்பொதி சோறுக ட்டவேண்டும்படி குறைவாளனுயிருந்தேனோ. ஏகாகாரமான வநுபவமி றே யங்குள்ளது, " விஜஹாரபஹூந்ருதூந் " ( விஜஹாரபஹூ ந்ருதூந் ) என்கிறபடியே, அவ்வோகாலங்கள்தோறுமுண்டான வநுப வவிசேஷங்களை புஜிக்கப்பெற்ற வெனக்கொரு குறையுண்டோ. பரத் வாநுபவமிறே யங்குள்ளது, சீலகுணுநுபவமுள்ள திங்கேயிறே........*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு ( குரவையித்யாதி ) அரவிற்பள்ளிப்பிரான்றன்மாயவினைகளை யேயலற்றி " இத்யாதிகளைக்கடாக்ஷித்தவதாரிகை (அஹோராத்ரமித்யாதி)

இதிலே - திருக்குரவையின் வ்ருத்தாந்தத்திலே, கீழ்சங்கைக்குபரிஹாராந்த ரம் (தாமநுசந்திக்கிலிறேயித்யாதி) அவன்றனித்தைமுந்தறவநுபவிப்பிப்பானென் னென்ன (பஞ்சலக்ஷமித்யாதி) "ஆய்ச்சியரோடு" என்றவப்ரதாநே த்ருதீயைக்கு பாவம் ( தன்செல்லாமையாலேயித்யாதி ) ஆய்ச்சியர்க்குண்டான வப்ராதாந்யம் தனக்குண்டாம்படி கோத்தானென்று கருத்து. * பிறந்தவாற்றிலிழவு மிதிலேதீரு கிறதென்கிறுர் (குரவைபிணைந்தவித்யாதி) "கோத்ததும்" என்றதுக்குபாவம் ( பெ ண்களுடையவித்யாதி ) விவரணம் (பெண்களுமித்யாதி) " குரவையாய்ச்சியரோடு கோத்ததும் என்ற பதப்ரயோகத்துக்கு ப்ரயோஜநம் (திருக்குரவையிலித்யாதி)

கீழிற்பதத்தையுங்கூட்டி " குன்றமொன்றேந்தியதும் " என்றதுக்குபாவம் (ஸ்வர்க்கமென்றித்யாதி) " ஒன்று " என்றதுக்குபாவம் ( கைக்கெட்டிற்றித்யாதி ) இந்த்ரனப்படி யஸூயாளுவோவென்ன ( ஒருவனிங்கேயித்யாதி ) மூக்குப்புதைக் கை - ப்ராணுயாமம்பண்ணுகை. அவனாபுவளையென்றது - அப்ஸரஸ்ஸுக்களையெ ன்றபடி. ஸஜாதியரிடத்திலொழிய சர்வேஸ்வரனிடத்திலே யஸூயைபிறக்குமோ வென்ன (இப்படியநுபவிக்கிறுனித்யாதி) அறியமாட்டாமைக்குஹேதுவேதென்ன (இவன்தன்னையித்யாதி) இந்தபதப்ரயோகத்துக்கு ஹார்த்தபாவம் (அன்றைக்கல் வர்ஷத்திலித்யாதி) தரித்தென்னுதே, " ஏந்தியதும் " என்றதுக்குபாவம் ( பரார்த் தமித்யாதி ) "கைக்கோராபரணம்" என்றத்தைவிவரிக்கிறுர் (பூவித்யாதி) வருத்த த்துக்கு ப்ரசக்தியேதென்ன ( ஏழுவயஸ்ஸிலேயித்யாதி ) பரார்த்தமாக தரித்ததி னெல்லையை சாடுவாக வருளிச்செய்கிறுர் ( இப்படியேழித்யாதி ) ஸகோத்ரியாய்- ஸகோத்ரனுயென்றும், ஸஜ்ஞாதிவர்க்கனென்றும். கோத்ரம்-குலமும், பர்வதமும்.

" உரவு " என்று - மிடுக்காய், அத்தைமூன்றுவகையாக வருளிச்செய்கிறுர் (நாகாணவித்யாதிவாக்யத்ரயத்தாலே) முதுநீர் - பழையநீர். அத்தால் - லகுவா

யிராதே பலத்தையுடைத்தாயிருக்குமென்றபடி. அர்த்தாந்தரம் ( விஷமென்னுத லென்று ) உரவுநீர் - விஷமிஸ்ரஜலமென்று த்விதீயார்த்தம். “ குரவையாய்ச்சியரோடு ” என்றத்தோடேகூட்டி ரஸோக்தியாகபாவம் (பாம்படித்தித்யாதி) காளியனை மேலிட்டடித்துக் காணுமென்றபடி.

* பிறந்தவாற்றிற்போலே யிங்குபலஹாநியில்லையே; சேரச்சொல்லாதே, “ மற்றும்பல ” என்கிறதென்னென்ன ( பிறந்தவாற்றிலித்யாதி ) மற்றுமிப்படியே ன்றது - கோவர்த்தநோத்தரணம் காளியமர்த்தநம்போலே பின்னையுமிப்படியென்றபடி. விரோதிகளான தண்ணீர்த்துரும்பறுத்தவையென்றது - தண்ணீர்த்துரும்புபோலே விரோதிகளானவற்றைப்போக்கின வ்யாபாரங்களென்றபடி. உணர்ந்தசமயத்திலொழிய, நித்ராசமயத்திற்செய்கிற உபகாரமேதென்ன (நாட்டாருறக்கமித்யாதிவாக்யத்வயம் ) இவனுறக்கம் பரரக்ஷணார்த்தமா யிருக்குமென்னுமதுக்கு ப்ரமாணம் (உறங்குவானித்யாதி) வ்யாக்யாதாவினீடுபாடு (உறங்கினுணுகிலித்யாதி வாக்யத்ரயமும்) “நாகங்காய்ந்ததும், அரவிற்பள்ளிப்பிரான்” என்றபதத்வயத்தையுங்கூட்டியாவம் (கீழொருபாம்போடித்யாதி வாக்யத்வயத்தாலே) ரஸோக்தியாக பூர்வவாக்யத்வயவிவரணம் (அங்கித்யாதி வாக்யத்வயம்) போகம்-சர்ப்பத்தினுடைய, அநுபவமும். இரண்டும் பாம்பாயிருக்க, இப்படிசெய்கைக்கு ஹேதுவேதென்ன (ப்ரதிகூலனுனவித்யாதிவாக்யத்வயம்) இவனநுகூலிக்கும் ப்ரகாரமேதென்ன (இவன்ருனித்யாதி) இவனிப்படி யநுகூலிக்கையாலே யவனும் பஹுமுகமாகவடிமைகொள்ளுமென்கிருர் (அவனுமித்யாதி) அநந்தமுகமுண்டோவென்ன (ஆயிரம் பைந்தலையவித்யாதி) விஸ்த்ருதமான வாயிரந்தலைகளையுடைய வனந்தனென்றபடி. பெரியாழ்வார்திருமொழி நாலாம்பத்து மூன்ருந்திருமொழி பத்தாம்பாட்டு, “ஆயிரந்தோள்பரப்பி” இத்யாதி. க்ருஷ்ணவதாரமல்லது பேசாதிருக்கிறவிவர் க்ஷீராப்திநாதனைச்சொல்லுவானென்னென்ன (அவதாரங்களுக்கித்யாதி) ப்ரத்யபிஜ்ஞைபண்ணுகிருராதலென்றது - அங்கலாபத்தோடே யநுசந்தித்தவிழவுதீர, இங்கேதரித்துநின்றநுபவிக்கிருனென்றபடி.

அஹோராத்ரங்களுக்கு நன்மையேதென்ன; பகவதநுபவத்துக் குறுப்பாகையால் வந்த நன்மையென்னுமத்தை யந்வயவ்யதிரேகங்களாலே தர்ஶிப்பிக்கிருர் (பகவதித்யாதிவாக்யத்வயத்தாலே) “ சுடர்கொளிராப்பகல் ” என்றதுக்கர்த்தம் ( விஶ்லேஷித்தவித்யாதி ) சுடரென்று - அக்நியாய், “ அக்நியையெறட்டினுப்போலேயிருக்கிறவிராப்பகல் ” என்றிங்கேயிப்படி யருளிச்செய்கையாலே - இதுவுமோரர்த்தமாகக்கண்டுகொள்வது.

பட்டைப்பொதிசோறு - பாக்குப்பட்டையிற்கட்டுகிறசோறு. அதுக்கடியேதென்ன (ஏகாகாரமானவித்யாதி) காலக்ருதபரிணமமில்லாமையாலே யேகாகாரமானவென்றபடி. இரண்டாம்பாவம் ( பரத்வாநுபவமித்யாதி ) “ [illegible] ” (காலம்ஸபசதேதத்ரநகாலஸ்தத்ரவை ப்ரபுః) இதி ஸ்ரீவிஷ்ணுபுராணே. தவிர்கிலம்-ஓவுகிறிலோமென்றபடி.............*

## இரண்டாம்பாட்டு.

கேயத்திங்குழலூதிற்றுநிரைமேய்த்ததுங்கெண்டையொண்கண்
வாசப்பூங்குழற்பின்னைதோள்கண்மணந்ததுமற்றும்பல
மாயக்கோலப்பிரான்றன்செய்கைநினைந்துமனங்குழைந்து
நேயத்தோடுகழிந்தபோதெனக்கெவ்வுலகங்கீகளோ.

## ஆருயிரப்படி.

(கேயத்திங்குழல்) சேதநாசேதந சமஸ்தவஸ்துக்களும் நீராயுருகும்படி குழலூதிக்கொண்டு, * திவத்திலும் பசுநிரைமேய்ப்புகந்து நிரைமேய்த்தருளினபடியையும், பசுமேய்க்க வெழுந்தருளின வாயாஸத்தால் வந்த ப்ரமமும் நப்பின்னைப்பிராட்டியைப் பிரிகையால்வந்த சந்தாபமும் தீருகைக்கு ஸிஸிரோபசாரமாக வவளுடைய நிரதிசய ப்ரேமகர்ப்பாதி சீதளதிவ்யாவலோகநாம்ருதவர்ஷாபிஷிக்தனாய் ததியபுண்யகந்தவாஸிதாநந்த திகந்தராள கபரீபரிமளாநுபவநிரதனாய்க்கொண்டு அவளுடைய நிரதிசய சுகஸ்பர்ஸமான திருத்தோள்களோடே புணர்ந்தது முட்பட மற்றுமுள்ள சர்வதிவ்யசேஷ்டிதங்களையும் நினைந்து மனங்குழைந்திப்படி ஸ்நேஹத்தோடே காலத்தைப்போக்கப்பெற்ற வெனக்குத் திருநாட்டிலேதான் ஸத்ருஸருளரோவென்கிறார்..................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்சர்யமான வாகாரத்தையுடையனான க்ருஷ்ணனுடைய, நினைத்தார்நெஞ்சை நெகிழப்பண்ணும் சேஷ்டிதங்களை ஸஸ்நேஹாநுசந்தாநம்பண்ணிக் காலமெல்லாம்போகாநின்றது; நித்யாநுபவம்பண்ணுகிற விலக்ஷணதேசமெனக்கு சத்ருஸமோவென்கிறார்.

பெண்கள்நெஞ்சு வஸீக்ருதமாகைக்காக, கேயம்-தாழ்ச்சிதோற்றினகேயங்களைவைத்து. தீ-இனிதாம்படி. குழல்-குழல். ஊதிற்றும் - ஊதினதும். அக்குழல்வழியே பெண்கள்வருமோபாதி பசுக்களும்வரும்படி யக்குழலையூதி, நிரை - நிரை. மேய்த்ததும்-மேய்த்ததும். கெண்டை-கெண்டைபோலே. ஒண்-முக்தமான. கண்-கண்ணையுடையளாய். வாசம்-பரிமளப்ரசுரமான. பூ - பூவையுடைத்தான. குழல்-திருக்குழல்களையுடைய. பின்னைதோள்கள் - நப்பின்னைப்பிராட்டி திருத்தோளோடே. மணந்ததும்-சம்ஸ்லேஷித்தவிதுவும். மற்றும்-பின்னையும். பல-ஹ்ருத்யமாய்க்கொண்டு பலவாயிருப்பனவான. மாயக்கோலம்-ஆஸ்சர்யரூபத்தையுடையவனான. பிரான்றன்-க்ருஷ்ணனுடைய. செய்கை - நித்யாநுபாவ்யசேஷ்டிதங்களை. நினைந்து-நினைத்து. மனம்-நெஞ்சு. குழைந்து-நெகிழ்ந்து. நேயத்தோடு - ஸ்நேஹத்தோடே. போது-போதுகள். கழிந்த-போகாநின்றன. எனக்கு-எனக்கு. எ-எந்த. உலகம்-லோகந்தான். நிகர்-ஒப்பு ஆவது.

பரமபதந்தானெப்போவென்று கருத்து.......................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

"தொல்லருணல்வினையாற் சொலக்கூடுங்கொல்" என்று ப்ரார்த்தித்தபடியே பெறுகையாலே திருநாட்டிலேதா னென்னோடொப்பாருண்டோவென்கிறார்.

(கேயத்தீங்குழலூதிற்றும்) கேயமென்று - பாட்டு, தீயென்று- இனிமை; இனிமையையுடைய பாட்டென்றபடி, தான்நினைத்த பெண்களுடைய பேரைவைத்துப் புணர்த்துச் சுவைப்பாட்டாகவைத்தூதிற்

றும். (நிரைமேய்த்ததும்) பெண்களையழைக்கைக்கும் பசுமேய்க்கைக்கு மொன்றேபரிகரம். குழலையூதவே பசுக்கள்வயிறுநிறையும். சக்ரவர்த்தி திருமகனுக்கு வில்லு கைவந்திருக்குமாபோலேயாயிற்றுக் க்ருஷ்ணனுக்குக்குழல் கைவந்திருக்கும்படி. (கெண்டையித்யாதி) கரவதத்தினன்று பிராட்டி "ஊகூாஊஂவாிஷஜெ" (பர்த்தாரம்பரிஷஸ்வஜே) என்றணைத்தாப்போலேயாயிற்றுப் பசுமேய்த்துவந்த ப்ரமமெல்லாம்போம்படி நப்பின்னைப்பிராட்டி முக்தமான வழகியகண்ணாலே குளிரநோக்கி அழகியதிருக்குழலில் பரிமளத்தாலே திருமேனியை வாஸிதமாக்கித் தன்றோளோடே யணைத்ததுவும். (கெண்டையொண்கண்) கெண்டைபோலே யதிமுக்தமாய் அம்ருதத்தை வர்ஷித்தாப்போலே குளிரநோக்குகிறகண்கள். (வாசப்பூங்குழல்) * வாசஞ்செய்பூங்குழலிற்காட்டிலும் பொலிவையுடைத்தான தன்னேற்றமுடைய குழலையுடையவள். (பின்னைதோள்கள் மணந்ததும்) அவளுடையதோள்களுடனே கலந்ததுவும். மணத்தல்-கலத்தல். "தோளி" என்கிறபடியே யிவளுக்கழகுகைவிஞ்சியிருக்குமே. (மற்றும்பல) மற்றைப்பிராட்டிமாரோடுகலந்தபடி. சக்ரவர்த்தி திருமகனுக் கத்யயநம், ஆசார்யசேவை, அஸ்த்ரசஸ்த்ராப்யாஸங்களுண்டாமாபோலே, இவனுக்கெல்லா மிவையேயிறே. (மாயக்கோலப்பிரான்) நப்பின்னைப்பிராட்டியோடுகலந்த வொற்றுமஞ்சளுந்தானுமான அத்யாஸ்சர்யமான ஒப்பனையுடையவுபகாரகன். (மாயக்கோலப்பிரான்) நப்பின்னைப்பிராட்டியோடு கலந்தாப்போலே, அல்லாதபிராட்டிமார், "கொங்கைமேல்குங்குமத்தின் குழம்பழியப்புகுந்தொருநாள் தங்குமேலென்னுவிதங்கும்" என்றிருக்குமவர்களுடைய திருமுலைத்தடத்தில் குங்குமக்குழம்பும் கோயிற்சாந்துமாய் நின்றவழகைச்சொல்லவுமாம். (தன்செய்கைநினைந்து மனங்குழைந்து நேயத்தோடுகழிந்தபோது) அவன்செயல்களை நினைத்தவாறே நெஞ்சு தம்வசமன்றியழியும்படி. "நினைதொறும் - நெஞ்சிடிந்துகும்" என்றிறேயிருப்பது. (நேயத்தோடுகழிந்தபோது) ஸ்மர்த்தவ்யவிஷய ரஸ்யதையாலே ஸ்மரணந்தானினிதாய்க்கழிந்தபோது. நேயம் - நேசம்.

( எனக்கெவ்வுலகம்நிகரே ) ஒருதேசவிசேஷத்தில் தானெனக்கெதிருண்டோ. அநுபவவேளைபோலே ஸ்ம்ருதிவேளையிலும் இனிமையோடே செல்லக்கடவதானு லெனக்கெங்கேயெதிர். ஆகாசவாயனெனக்கெதிரோ. வாய்-இடம். பரமாகாசமென்கிற பரமபதமாகிற விடத்திலுள்ளார் தானெனக்கொப்பரோ. * உலகமென்பது உயர்ந்தோராகையாலே, சூரிகளென்கிறபடி.......................................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (கேயத்தீங்குழலித்யாதி) "நேயத்தோகெழிந்தபோதெனக்கெவ்வுலகம்நிகர்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (தொல்லருளித்யாதி)

பாட்டுக்களைவைத் தினிதாகக்குழலூதினது மென்று சப்தார்த்தம். கேயம்-கேயம். காநமென்றபடி. ஊதுகைக்கு விஷயங்காட்டுகிறுர் ( தான்நினைத்தவித்யாதி ) சுவைப்பாட்டாக - ரஸவத்காநமாக. கீழிற்பதத்தையுங்கூட்டி பதச்சேர்த்திக்குபாவம் (பெண்களையித்யாதி) பெண்களையழைக்கைக்கொழிய, பசுமேய்க்கைக்கும் பரிகரமாகக்கூடுமோவென்ன (குழலையித்யாதி) குழலொழிய வ்யாபாராந்தரமில்லையோவென்ன (சக்ரவர்த்தியித்யாதி)

“ நிரைமேய்த்ததும் ” என்றத்தையுங்கூட்டிபாவம் ( கரவதத்தினித்யாதி ) சப்தநிர்வாஹம் (கெண்டைபோலேயித்யாதி) கெண்டைபோலே யழகியகண்களையும், பரிமளத்தையுடைத்தா யழகிதான குழலையுமுடையு நப்பின்னைப்பிராட்டியுடையதோள்களுடனே சம்ஶ்லேஷித்ததுமென்று சப்தார்த்தம். வாசஞ்செய்கிற குழலென்னுதே, “ வாசந்தானுனகுழல் ” என்கையாலே-பிராட்டி திருக்குழலிற்காட்டிலும் நப்பின்னைப்பிராட்டி திருக்குழலுக்கேற்ற முண்டென்கிறுர் (வாசஞ்செயித்யாதி) வாசம் - பரிமளம். பொலிவு-சம்ருத்தி. பூவென்று - அழகு. அவயவாந்தரங்களிருக்க, “ தோள்கள் ” என்று விசேஷித்ததுக்குபாவம் (தோளியித்யாதி) கைவிஞ்சியிருக்கும்-தோளிலே விஞ்சியிருக்குமென்றும், அதிகமாயிருக்குமென்று மர்த்தத்வயம்.

இவனுக்கு வேறத்யநாதி வ்யாபாரமில்லையோ, இதுவோக்ருஷியென்ன (சக்ரவர்த்தியித்யாதி) “பின்னைதோள்கள்மணந்ததும்” என்றத்தோடேகூட்டி, “மாயக்கோலம்” என்றதுக்குபாவம் (நப்பின்னையித்யாதி) “ மற்றும்பல ” என்றத்தோடேகூட்டி பாவாந்தரம் ( நப்பின்னைப்பிராட்டியோடு கலந்தாப்போலேயித்யாதி )

“நேயம்” என்று - ஸ்நேஹமாய், இனிமையையலக்ஷிக்கிறது. அப்படி நெஞ்சுசிதிலமாமோவென்ன (நினைதொறுமித்யாதி) அநுபவத்தாலுண்டாகக்கடவ ப்ரீதி, ஸ்மரணத்தாலேகூடுமோவென்ன (ஸ்மர்த்தவ்யவிஷயேத்யாதி) நேயத்தோடுகழிந்தபோது - ஸ்நேஹத்தோடே போதுகள் போகாநின்றனவென்று சப்தார்த்தம்.

நித்யாநுபவம்பண்ணுகிற நித்யஸூரிகளைப்பற்றத் தமக்கதிசயமேதென்ன (அநுபவவேளையித்யாதி) எவ்வுலகம்நிகரோ - எந்தலோகந்தானுெப்பாவது. பரமபதந்தானுெப்போவென்று நிஜசப்தார்த்தம்; ஆனுலும், “ உலகம் ” என்று-லோகத்திலுள்ளாரைச்சொல்லி; எனக்கெந்தலோகத்திலுள்ளார்தானுெப்பு, பரமபதத்திலுள்ளவர்கள்தானுெப்பர்களோ வென்றர்த்தங்கண்டுகொள்வது. “ எவ்வுலகம் ” என்றல் - தேசத்தைக்காட்டுமதொழிய, ஸூரிகளைக்காட்டாதேயென்ன; “மஞ்சா꞉க்ரோஶந்தி” ( மஞ்சா꞉க்ரோஶந்தி ) என்கிற ந்யாயத்தாலே காட்டுமென்னுமத்தை ரஸோக்தியாக வருளிச்செய்கிறுர் (ஆகாசேத்யாதி) ஆகாசத்தைப்பார்த்து வாயைத்திறந்துகொண்டிருக்கிறவர்கள். தரித்ரரென்றபடி. “ ஆகாசவாயர் ” என்றதுக்கு வாஸ்தவமான வர்த்தத்தையருளிச்செய்கிறுர் (வாயித்யாதி வாக்யத்வயத்தாலே ( இன்னமொருவழியாலே, “உலகம்” என்றது-ஸூரிகளைக்காட்டுமென்கிறுர் (உலகமென்பதித்யாதி ) உயர்ந்தோர் - உத்க்ருஷ்டர். ஆக, உலகமென்று - லோகத்திலுள்ளாரென்னுதல், பெரியோரென்னுதலென்றபடி.........................................*

## மூன்றாம்பாட்டு.

நிகரின்மல்லரைச்செற்றதுநிரைமேய்த்ததுநீணெடுங்கைச்
சிகரமாகளிறட்டதுமிவைபோல்வனவும்பிறவும்
புகர்கொள்சோதிப்பிரான்றன்செய்கைநினைந்துபுலம்பியென்று
நுகரவைகல்வைகப்பெற்றேனெனக்கென்னினிநோவதுவே.

### ஆறாயிரப்படி.

( நிகரில் ) பசுமேய்த்தருளி விளையாடினாப்போலே யநாயாஸேந செய்தருளின வதிபலபராக்ரமமல்ல கிரிவரஸத்ருஶ நிரவதிகபல குவலயாபீட ப்ரப்ருதி ப்ரதிகூலநிரஸந ஸ்வரூப சர்வதிவ்ய சேஷ்டிதங்களை யநுசந்தித்து, அவ்வநுசந்தாந ப்ரீதியாலே யப்ரக்ருதிங்கதனைய்க்கொண்டலற்றி யநுபவிக்கப்பெற்றவெனக்கினி யொருநோவுமில்லையென்கிறார்.

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், நிரதிஶயௌஜ்ஜ்வல்ய விசிஷ்டனான க்ருஷ்ணனுடைய நித்யாநுபாவ்யசேஷ்டிதங்களை யநுபவிக்கைக்குறுப்பாகக் காலம் நெடுகப்பெற்றேன், எனக்கெதுக்கு நோவுபடவேணுமென்கிறார்.

மிடுக்குக்கு, நிகர் - ஒப்பு. இல் - இல்லாத. மல்லரை - மல்லரை. செற்றதும் - கொன்றதுவும். விரோதிகள் தன்னை "எளியன்" என்று நினைத்திருக்கும்படி, நிரை - பசுவின்பின்னே. மேய்த்ததும் - கோல்கொண்டுபோய் மேய்த்ததுவும். அந்தகோபாலதசையிலே, நீள் - உத்துங்கமாயிருப்பதாய். நெடும் - நெடிய. கை-கையையுமுடைத்தாய். சிகரம் - பர்வதசிகரம்போலே ப்ரபலமாய். மா - ஆகாரத்திற்பிறப்பாலே ஶ்லாக்யமான. களிறு - ஆனையை. அட்டதும் - அழித்ததுவும். இவைபோல்வனவும் - இவைபோலே யநுபாவ்யமுமாய். பிறவும் - மற்றும் பலவாயிருப்பனவுமாய். புகர்கொள்சோதி - அத்யுஜ்ஜ்வலதேஜோரூபனான. பிரான்றன்-க்ருஷ்ணனுடையதான. செய்கை - சேஷ்டிதங்களை. நினைந்து - அநுசந்தித்து. புலம்பி-வாய்விட்டலற்றி. என்றும் - நாடோறும். நுகர - புஜிக்கும்படியாக. வைகல் - காலம். வைக - மிகவும் நெடுக. பெற்றேன் - பெற்றேன். இனி - இனி. எனக்கு- எனக்கு. என் - எதுக்கு. நோவது - நோவவேணும்.

அநுபவகாலமில்லாமல் நோகிறேனோ, அநுபவம் சரசமல்லாமல்நோகிறேனோவென்று கருத்து. ........................................................................*

### ஈடு - மூன்றாம்பாட்டு.

க்ருஷ்ணசேஷ்டிதங்களையே யநுபவித்துக்கொண்டு காலம்போக்கப்பெற்ற வெனக்கு "இன்னதுபெற்றிலேன்" என்று நோவவேண்டுவதில்லையென்கிறார்.

(நிகரில்மல்லரைச்செற்றதும்) மிடுக்குக்கு சத்ருஶமின்றிக்கேயிருக்கும் மல்லரைச்செற்றதும். கவ்யசேவையாலே ம்ருது ஸ்வபாவராயி

நுப்பாரிரண்டுபிள்ளைகளிறே அபக்ஷ்யபக்ஷணங்களாலும் ஶஸ்த்ராஸ்த்ர சிக்ஷைகளாலும் மலைபோலே திண்ணிதான தோளையுடைய மல்லரைப் பொடிபடுத்தினர்கள் ; புழுக்குறித்த தெழுத்தானாப்போலே யிங்ஙனே வாய்த்துக்கொண்டு நிற்கக்கண்டதித்தனை,இல்லையாகில் சிலமுக்தருடைய வ்யாபாரமாகமாட்டாதிறே. “ ந ஸமம் யுத்தமித்யாஹுஃ ” ( நஸமம் யுத்தமித்யாஹுஃ ) என்றுகொண்டு - சர்வருமஞ்சும்படியிறே யவற்றைச்செயல். [ ஏவிற்றுச்செய்வானேன்றெதிர்ந்துவந்தமல்லரை ] ஸ்வதந்த்ரராய்வந்து மேல்விழிலிறே “ முடியாது ” என்று கைவாங்கலாவது, கம்ஸனுக்குப் பரதந்த்ரராய்வருகையாலே இங்குத்தோற்றார்களாகி லவனங்கே தோள்களைக் கழிக்குமாயிற்று ; ஆனபின்பு, “ கோழைகளாய்க் கொலையுண்பதில் புகழோடே முடியவமையும் ” என்றுமேலிட்டார்கள். [ சாவத்தகர்த்தசாந்தணிதோள்சதுரன் ] கூனிசாத்திவிட்ட சாந்துகுறி பழியாமேகாணுமவர்களோடு வ்யாபரித்தது. மல்லரோடேகூட சர்வாவயவங்களும்பொருந்தி வ்யாபரியாநிற்கச்செய்தே, சாத்தினசாந்து குறிபழிந்ததில்லைகாணும். கூனிசாத்திவிட்டவநந்தரத்திலே பெண்கள் கண்ணாலே யிலச்சினையிட்டு விடுகையினாலே யிவனாலழிக்கவும் போகாதிறே. இவர்கள் கண்ணாலே யிலச்சினையிடுகையாவது - அவன்றோளிலேசேலுங்கயலுமிடுகையிறே. இவன் மல்லரோடே யழித்தானாகிலும், “ மற்றெங்கேனுமழித்தான் ” என்றிறே யவர்களிருப்பது. இதழித்துப்போனானாகில், பின்பு பெண்கள்கோஷ்டிக் காளாகானே. ஏன்றெதிர்ந்துவருகையாவது - பொரக்கடவோமென்று நெஞ்சிலேதுணிந்துவருகை. ( நிரைமேய்த்ததும் ) முதற்பிறவிக்கீடாகச்செய்த செயலும், இரண்டாம் பிறவிக்கீடாகச்செய்த செயலும். க்ஷத்ரியஜந்மத்துக் கீடாம்படி மல்லரோடே யுத்தம்பண்ணினான், கோபஜந்மத்துக்கு ஸத்ருஶமாம்படி பசுக்களை மேய்த்தான். பசுமேய்த்தபோதை யாயாசமாகாதே மல்லரோடு பொருதபோதுமுள்ளது. ( நீணெடுங்கைச்சிகரமாகளிறட்டதும் ) மல்லர்க்குத்தப்பிலும் தப்பவொண்ணாதுகிடீரிதுக்கு. ( நீணெடுங்கை ) தூரப்போய்த் தப்பவொண்ணாதபடி கையாலே வளைத்துக்கொள்ளவற்றாயிருக்கை. ( நெடுங்கை ) என்னாநிற்கச்செய்தே, ( நீணெடுங்கை ) என்கிறதிறே- இதின்பெருமை யிருக்கிறபடி. ( சிகரமாகளிறட்டதும் ) ஒருகைவேணுமோ, இதுதன்னைக்காணவமையாதோ. “ ஆனைமாமலை ” என்னக்கடவதிறே. பர்வதசிகரம்போலேயாயிற்றுப் பெருத்திருக்கிறபடி. அட்டதும்-முடித்ததும். ( இவைபோல்வனவும்பிறவும் ) இவைதொடக்கமான கேசிநிரஸநாதிகளும். (புகர்கொள்சோதி) குவலயாபீடநிரஸநத்துக் கநந்தரம் வடிவிற்பிறந்த வொளிபெற்றதேஜஸ்ஸு. (பிரான்) உபகாரசீலன். “ ஸக்யஃ பஶ்யத ” ( ஸக்யஃ பஶ்யத ) என்னும்படி யிருக்குமிறே. [ ஶ்வேதாம்புகணிகாசிதம் ] [ ஸ்வேதாம்புகணிகாசிதம் ] ஆனையோடே

பொருதாலுமிங்ஙனேயோவேர்ப்பது. மூலையாகிறமலையோடே பொருத்
த்தோடு ஆனையாகிறமலையோடே பொருதத்தோடு வாசியில்லைகாணுமி
வனுக்கு. ( தன்செய்கை நினைந்து புலம்பி ) உபகாரசீலனானவனுடைய
சேஷ்டிதங்களை யநுசந்தித்து, அதுள்ளடங்காமை புலம்பி. ( என்றும்
நுகரவைகல்வைகப்பெற்றேன் ) நாடோறும் புஜித்துக்கொண்டு, வைக
லானதுவைகப்பெற்றேன் - காலமானது கழியப்பெற்றேன். வைகலென்
பது - காலம். வைகுகையாவது - கழிகை. அன்றிக்கே, அநுபவிக்கைக்
குப்போரும்படி, காலமானது நெடுகப்பெற்றே னென்றுமாம். அப்போ
து, வைகுகையாவது - நெடுகுகை. ( எனக்கென்னினி நோவதுவே )
“ காலம்நெடுகுவது குறுகுவதாகாதவிடந்தேடி யநுபவிக்கப்பெற்றிலே
ன் ” என்கிற அத்ருப்தியுண்டோவெனக்கென்கிறார். ( எனக்கென்னினி
நோவதுவே ) அவனுக்கு வரும் நோவிறே யிவர்க்கு நோவாவது, அது
கழியப்பெற்றதிறே. இவர்நோவுபோக்கு மவனுக்குவரும்நோவிறே இவ
ர்க்கு நோவாவது, அதுபோகவே யிவர்க்கு நோவு போயிற்றதாமிறே.
உயிருக்குவரும்நோவுடம்புக்கு நோவாமிறே..........................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு. ( நிகரிலித்யாதி ) “நுகரவைகல்வைகப்பெற்றேன்” இத்
யாதியைக் கடாக்ஷித் தவதாரிகை ( க்ருஷ்ணசேஷ்டிதங்களையித்யாதி )

“ நிகரில் ” என்கையாலே - இவர்களை ஜயித்ததாஶ்சர்ய மென்கிறார் ( சவ்
யேத்யாதி ) முக்தரானவர்கள் பொடிபடும்படி யெங்ஙனேயென்ன ( புழுக்குற்
த்ததித்யாதி ) வாய்த்துக்கொண்டு - சித்தித்துக்கொண்டு. வாய்த்ததென்றுசொல்
லவேணுமோ, இவர்கள் நிரசித்தார்களென்னவொண்ணாதோ வென்ன ( இல்லையா
கிலித்யாதி ) ஆகையாலே ( நஸமம்யுத்தம் ) என்று கூட்டுவது. பரதந்த்ரராய் ஒ
ருகையாலுமே தந்நிரசந மகடிதமென்று விவக்ஷித்து, அதுக்குப்ரமாணம் ( ஏவிற்
றித்யாதி ) ஏவினத்தைச் செய்கைக்காக வுத்யோகித்தெதிர்ந்து வந்த மல்லரைக்கு
ற்றுயிராக்கிவிடாதே முடியும்படியாகத் தகர்த்த, சாந்தாலணியப்பட்ட தோளை
டைய சாதுர்யமுடையவனுடையமலை இத்யர்த்த:. பெரியாழ்வார் திருமொழி நா
லாம்பத்து இரண்டாந்திருமொழி ஆறாம்பாட்டு. “ ஏவிற்றுச்செய்வான் ” என்றத
க்கர்த்தம் ( ஸ்வதந்த்ரராயித்யாதி ) “ சாவத்தகர்த்த ” என்றவநந்தரம், “ சாந்த
ணிதோள்சதுரன் ” என்கையாலே - சாந்தழியாமல் பொருதபடியாயிற் றிவனுடை
ய சாமர்த்யமென்று வ்யாக்யாதாவினீடுபாடு ( கூனியித்யாதி ) மேலெழுந்தவா
யாக விவர்களோடே யுத்தம்பண்ணுகையாலே சாந்தழியாதிருந்ததென்றாலோ
ன்ன ( மல்லரோடேயித்யாதி ) குறியழியாமைக்கு ஹேதுவேதென்ன ( கூனிசா
த்திவிட்டவநந்தரத்திலேயித்யாதி ) இலச்சினை- அடையாளம். இலச்சினையிடுவது
வதேதென்ன ( இவர்கள்கண்ணாலேயித்யாதி ) சேலும்கயலுமிடுகையாவது - த
துல்யங்களான கண்களாலே பார்க்கை. ( மல்லயுத்தத்திலழிந்தா லிவர்கள்செய்
தேதென்ன (இவன்மல்லரோடேயித்யாதி) இவர்களிப்படியிருந்தா லிவனுக்கு ஹ
நியேதென்ன ( இதழித்தித்யாதி )

விவரணம் ( க்ஷத்ரியேத்யாதி ) பதச்சேர்த்திக்கு தாத்பர்யாந்தரம் ( ப
மேய்த்தவித்யாதி )

"மிகவும் பெரியகையையுடையவானை" என்றதுக்கு ஹார்த்தபாவம் (மல்லர்க்கித்யாதி) அதுக்குஹேது (தூரப்போயித்யாதி) "வளைத்துக்கொள்ளவற்று" என்னுமதுக்கு சப்தமேதென்ன (நெடுங்கையென்று நிற்கவித்யாதி) "சிகரமாகவிறு" என்றதுக்கு ஹார்த்தபாவம் (ஒருகையித்யாதி) "பர்வதசிகரம்போலே பெருத்திருக்கும்" என்றதுக்கு ப்ரமாணம் (ஆனையித்யாதி)

ஒளிபெற்ற தேஜஸ்ஸென்றது - மிக்கதேஜஸ்ஸென்றபடி. உபகாரசீலனென்றது - புகர்கொள்சோதியை யுபகரித்தவ னென்றபடி. ஆர்க்குபகரித்தானென்ன; மதுரையிற்பெண்களுக் குபகரித்தானென்று விவக்ஷித்து, அவர்களதிலே யீடுபட்டிருந்தமையைச்சொன்ன ப்ரமாணத்தையருளிச்செய்கிறார் (ஸக்யஇத்யாதி) "ஸவ்யஃபஶ்ய தக்ருஷ்ணஸ்ய முகமத்யருணேக்ஷணம் । கஜயுத்தக்ருதாயாஸஸ்வேதாம்புகணிகாசிதம்" (ஸக்யஃபஶ்யதக்ருஷ்ணஸ்யமுகமத்யருணேக்ஷணம் । கஜயுத்தக்ருதாயாஸஸ்வேதாம்புகணிகாசிதம்) இதிபஞ்சமேம்ஶே. "பஶ்யத" என்கையாலே - உபகாரந்தோற்றுகிறது. இங்ஙனேயோவேர்ப்பதென்றது - தங்கள் கலவியாலே வேர்க்கக்கண்டிருக்கையாலே, தங்கள்முலையிலே சம்ஶ்லேஷித்தாப்போலேயோவென்றபடி. வ்யாக்யாதாவி னீடுபாடு (முலையாகிறவித்யாதி) புலம்பி - அக்ரமமாகக்கூப்பிட்டு.

"நிகரில்" இத்யாதியைக் கடாக்ஷித்து பாவாந்தரம் (அவனுக்குவருமித்யாதி) அவனுடையநோவிவரதாமோவென்ன; த்வேதா பரிஹரிக்கிறார் (இவர்நோவித்யாதி வாக்யத்ரயத்தாலே)..............................................*

## நான்காம்பாட்டு.

நோவவாய்ச்சியுரலோடார்க்கவிரங்கிற்றும்வஞ்சப்பெண்ணைச்
சாவப்பாலுண்டதுமூர்சகடமிறச்சாடியதுந்
தேவக்கோலப்பிரான்றன்செய்கைநினைந்துமனங்குழைந்து
மேவக்காலங்கள்கூடினேனெனக்கென்னினிவேண்டுவதே.

### ஆறாயிரப்படி.

(நோவவாய்ச்சி) உரலோடேகட்டிவைக்கலாம்படி யாஶ்ரிதர்க்குப் பரமசுலபனானபடியையும், தத்விரோதிபூதநா ஶகடநிரஸநம் பண்ணினபடியையும், அது தொடக்கமாகவுள்ள திவ்யசேஷ்டிதங்களை ஸ்நேஹத்தோடே யநுபவிக்கப்பெற்ற வெனக்கினி வேண்டுவதுண்டோ வென்கிறார்..............................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், அப்ராக்ருதவிக்ரஹனான க்ருஷ்ணனுடைய பாலசேஷ்டிதங்களை யநுபவிக்கைக்குக் காலங்கூடப்பெற்றேன், எனக்கினி யபேக்ஷிதமுண்டோ வென்கிறார்.

நோவ-நோம்படியாக. ஆய்ச்சி - ஆய்ச்சியானவள். உரலோடு - உரலோடு. ஆர்க்க - இறுகக்கட்ட. இரங்கிற்றும் - அதுக்கீடுபட்டிருந்ததுவும். வஞ்சம் - தாய்

வடிவுகொண்டு வஞ்சகையாய்வந்த. பெண்ணை - பேய்ச்சியை. சாவ - சாம்படியாக. பால் - முலைப்பால். உண்டதும் - அமுதுசெய்ததுவும். ஊர் - அசுராவேசத்தாலே யூர்ந்துவருகிற. சகடம் - சகடமானது. இற - முறியும்படி. சாடியதும்-திருவடிகளாலே பாய்ந்ததுவுமாயுள்ள. தேவக்கோலம் - அப்ராக்ருத விக்ரஹயுக்தனை. பிரான்றன் - க்ருஷ்ணனுடைய. செய்கை - சேஷ்டிதங்களை. நினைந்து - அநுசந்தித்து. மனம் - நெஞ்சு. குழைந்து - நெகிழ்ந்து. மேவ - பொருந்தும்படியாக. காலங்கள் - காலங்கள். கூடினேன் - சித்திக்கப்பெற்றேன். எனக்கு - எனக்கு. என்-எது. இனி - இனி. வேண்டுவது - அபேக்ஷிதம். உண்டு - உண்டு.

நித்யாநுபவமே புருஷார்த்தமென்று கருத்து.................................*

## ஈடு - நான்காம்பாட்டு.

ஆஶ்ரிதபவ்யனை விருப்பிலே ப்ரதிகூலரை மாய்த்த க்ருஷ்ணனை யநுபவிக்கப்பெற்றவெனக் கவாப்தவ்யமுண்டோவென்கிறார்.

(நோவவாய்ச்சி யுரலோடார்க்க விரங்கிற்றும்) ஜீயரிப்பாட்டை யியலருளிச்செய்யப்புக்கால் "நோவ" என்றருளிச்செய்யு மழகுகாணும். நோவவென்கிறார்காணுமாழ்வார் - தன்றிருமேனியிலே கயிறுறுத்தினப்போலே. (ஆய்ச்சியுரலோடார்க்கவிரங்கிற்றும்) ஒரு த்வேஷமுண்டாய்க் கட்டுகிறாளல்லளிறே, ஸ்நேஹகார்யமான கோபமாகையாலே ஸ்நேஹமுள்ளளவளவுமிடைநிற்குமிறே கோபமும். * தாயெடுத்த சிறுகோலுக் குளைந்தோடியிறே, [ விளியாவார்க்கவாப்புண்டு விம்மியழுதான் ] வாய்விட்டழமாட்டாததிறே யிவனை வருத்துகிறது. ( விளியாவார்க்க-கோபித்துக்கட்ட. ) (ஆய்ச்சியுரலோடார்க்க) [ தறியார்ந்தகருங்களிறே போலநின்று தடங்கண்கள்பனிமல்குந் தன்மையானை ] ஒரு மத்தகஜத்தைத் தறியோடே சேர்த்தாப்போலேகாணு மிவன்கட்டுண்டுநின்றநிலை. ஓரபலைகட்டின கட்டவிழ்த்துக்கொண்டு போகமாட்டாதே, நின்றழுகையே ஸ்வபாவமா யிருந்தபடி. "யஷிஃலெக்ஷாஷி" (யதிஶக்நோஷி) என்றுளிறே. ( உரலோடார்க்கவிரங்கிற்றும் ) உரலோடேகட்ட விரங்கிற்றும். துர்யோதநாதிகளுடைய பந்தமாகிலிறே யறுக்கவிரகுசிந்திப்பது. ( இரங்கிற்றும் ) மாநஸபீடையை யநுசந்தித்தபடி. இரக்கம்-ஈடுபாடு. ( வஞ்சப்பெண்ணைச் சாவப்பாலுண்டதும் ) கெட்டேன், பேய்த்தாய் பக்கலிலு மங்ஙனிருந்தானுகி லென்படக்கடவதுதான். ( சாவப்பாலுண்டதும் ) சூர்ப்பநகியைப்போலே அங்கஹாநியைப் பண்ணிவிட்டுப் பூசலைவிளைப்பியாதே முடித்துவிடப் பெற்றபடி. ( பாலுண்டதும் ) யசோதைப்பிராட்டி முலையுண்ணும்போதும் தானுயிர்பெற வுண்ணுமாபோலேகாணு மிவள் முலையுண்கிறபோதும் தானுயிர்பெற முலையுண்டபடி. * பெருமுலையூடுயிரைவற்ற வாங்கியுண்டவாயானிறே. இவன் பிள்ளையாயே முலையுண்டானத்தனை ; வஸ்துஸ்வபாவத்தால் ப்ரதிகூலர் முடிந்திதத்தனையிறே. ( ஊர்சகடமிறச்சாடியதும் ) ப்ரோகர் வேண்டாதபடி

தானேவந்து நலிந்தபடி.. ஒருமநுஷ்யவடிவுகொண்டு வந்து நலியிலிறே பரிஹரிக்கலாவது. இத்தால் சொல்லிற்றாயிற்று - ஸஹாயாந்தர நிரபேக்ஷமாக பாதகத்வத்தி லுறைப்புச்சொன்னபடி. ( இறச்சாடியதும் )"தளர்ந்தும் முறிந்தும் சகடவசுரருடல் வேறுப்பிளந்து" என்றுசொல்லக்கடவதிறே. (சாடியதும்) அநாயாஸேநதிருவடிகளை நிமிர்க்கச்செய்தேயும், ஒருமுக்தனுடைய வ்யாபாரமாகையாலே போரப் பொலியச் சொல்லுகிறார். "பேர்ந்தோர் சாடிறச்செய்ய பாதமொன்றால்செய்த நின்சிறுச்சேவகமும்" என்னக்கடவதிறே. ( தேவக்கோலப்பிரான் ) ப்ராக்ருத ஸஜாதீயனாய்நின்று செய்யவும்பெற்றதில்லையே. அதிபால்யத்திலே செய்த செயலாகையாலே அப்ராக்ருதமா யிருப்பதோ ரொப்பனைபோலேயிருக்கிறபடி.. (அப்ராக்ருதமானவழகை யெனக்குபகரித்தவன். கோலம் - ஒப்பித்தவிக்ரஹம்.) (தன்செய்கைநினைந்து மனங்குழைந்துமேவக்காலங்கள்கூடினேன்) அவனுடைய சேஷ்டிதங்களை யநுசந்தித்து அகவாயுடைகுலைப்பட்டு அநந்யப்ரயோஜநனாய்க்கொண்டு காலம் போக்கப் பெற்றேன். நெஞ்சு நெகிழ்ந்து சேஷ்டிதங்களோடே பொருந்தும்படி காலங்களைக் கூடப்பெற்றேன்.

( எனக்கென்னினிவேண்டுவதே ) இனி அவாப்தவ்ய மொன்றில்லை யென்கிறார்..........................................................*

## ஜீயர்அரும்பதம்.

நாலாம்பாட்டு. (நோவவித்யாதி) "நோவவாச்சி" இத்யாதியையும், "வஞ்சப்பெண்ணை" இத்யாதிகளையும், "எனக்கென்னினிவேண்டுவது" என்றத்தையுங் கடாக்ஷித்தவதாரிகை ( ஆஸ்ரிதேத்யாதி )

ப்ராஸங்கிகம் (ஜீயரித்யாதி) நோவவென்றருளிச்செய்யு மழகுகாணுமென்றது-நோவவென்று ஜீயரீடுபட் டநுசந்திக்கும்போது நன்றாயிருக்கு மென்று நம்பிள்ளை யருளிச்செய்வரென்றபடி. ஜீயரீடுபட்டதுக்கு பாவம் ( நோவவென்கிறாரித்யாதி ) ப்ரியபரையானவள் நோவக்கட்டுவாளென்னென்ன ( ஒரு த்வேஷமித்யாதி ) இடைநிற்குமிறே - ஸத்ருஸமாயிருக்குமிறே. எவ்வளவு ஸ்நேஹமுண்டு, கோபமு மதுக்கொத்திருக்கு மென்றபடி. இத்தால் - கோபாதிசயத்தாலே நோவக்கட்டினாளென்னுதல். தாயார் மெள்ளக் கட்டினாலும் பொறுக்க வொண்ணாமையாலே நோவாயிருக்குமென்னுதல் ; இந்தவர்த்தத்துக்கு ஸூசகம் ( தாயெடுத்த ) என்கிற ப்ரமாணம். ப்ரியபரையான தாய் பரிபவித்தால் பொறுக்க மாட்டாமல் கிந்நனாம் ப்ரகாரத்துக்குத் திருமொழியில் ப்ரமாண த்ரயம் ( தாயெடுத்த, விளியாவார்க்க, தறியார்ந்தவித்யாதி ) உளைந்தோடி-பயப்பட்டோடி. விளியாவார்க்கவாப்புண்டு-அழைத்துக்கட்டக்கட்டுண்டு, விம்மியழுதான் - விக்கியழுதானித்யர்த்தஃ. "விம்மி" என்றதுக்கு பாவம் ( வாய்விட்டித்யாதி ) விம்மியழுதானோவென்ன ( தறியார்ந்தவித்யாதி ) தறியோடே சேர்ந்த கறுத்த வானைபோலே நின்று தடங்கண்களினின் ... நீர் பெருகுகையை ஸ்வபாவமாகவுடையவனித்யர்த்தஃ. "தறியார்ந்த" இத்யாதிக்கர்த்தம் (ஒருமத்தகஜத்தையித்யாதி) "தன்மையானை" என்றதுக்கர்த்தம் ( ஓரபலையித்யாதி ) ( தாயெடுத்தவித்யாதி ) எட்டாம்பத்து மூன்றாந்திருமொழி அஞ்

சாம்பாட்டு, "வாயெடுத்த" இத்யாதி. (விளியாவார்க்கவித்யாதி) ஆரும்பத்து ஏழாந்திருமொழி நாலாம்பாட்டு, "ஒளியாவெண்ணெய்" இத்யாதி. (தறியார்ந்தவித்யாதி) இரண்டாம்பத்து பத்தாந்திருமொழி ஆரும்பாட்டு, "உறியார்ந்த" இத்யாதி. அவிழ்த்துக்கொண்டு போகமாட்டாததுக்கு ப்ரமாணம் (யதிஸக்ரோஷித்யாதி) "யதிஸக்ரோஷிதஸ்ஸத்வமதிசஞ்சலசேஷ்டித:" (யதிஸக்ரோஷிகச்சத்வமதிசஞ்சலசேஷ்டித:) இத்யாதி பஞ்சமேம்ஸே. இரங்குவானென், அவிழ்த்துக்கொண்டு போகவொண்ணுதோவென்ன (தூர்யோதநாதிகளித்யாதி)

"வஞ்சப்பெண்ணை" இத்யாதிக்கு ஹார்த்தபாவம் (கெட்டேன் பேய்த்தாயித்யாதி) அங்ஙனிருந்தானுகிலென்றது - தாய்பக்கல்போலே யிருந்தானுகிலென்றபடி. "சாவ" என்றதுக்குவாஸனை (சூர்ப்பநகியையித்யாதி) "உண்டதும்" என்றதிலே ரஸோக்தி (யசோதையித்யாதி) தாய்முலை யுண்ணும்போது தன்னுயிர்பெறவுண்டான், பேய்முலையுண்ணும்போது அவளுயிரைத் தான்பெறவுண்டானென்றபடி. உயிர்பெற வுண்டதுக்கு ப்ரமாணம் (பெருமுலையித்யாதி) திருமொழி மூன்ருந்திருமொழி முதற்பாட்டு, "முற்றமூத்து" இத்யாதி. பாசுரஸ்ய ஸ்பஷ்டோர்த்த:. இவன் முக்தனுய் முலையுண்டா லவள் முடியக்கூடுமோவென்ன (இவன்பிள்ளையாயேஷித்யாதி)

"ஊர்" என்றதுக்குபாவம் (ப்ரோகரித்யாதி) "சகடம்" என்று - அசேதநமாகச்சொல்லுகையாலே, அபரிஹார்யமான வாபத்தென்கிருர் (ஒருமநுஷ்யவடிவித்யாதி) மநுஷ்யவடி வென்றது - பூதனையைக் கடாக்ஷித்து. "ப்ரோகர்" இத்யாதிவாக்யத்தால் பலிதம் (இத்தாலித்யாதி) இத்தாலென்றது - "ஊர்" என்கிறவித்தாலென்றபடி. முறியச் சாடினத்துக்கு ப்ரமாணம் (தளர்ந்துமித்யாதி) சாடியதும் - உதைத்ததும். "சாடியதும்" என்று - இத்தைப் பெருக்கச்சொல்லுவானென்னென்ன (அநாயாஸேநவித்யாதி) போரப் பொலியச் சொன்னதுக்கு ப்ரமாணம் (பேர்ந்தோரித்யாதி) "சிறுச்சேவகம்" என்றதிலே நோக்கு.

"தேவக்கோலம்" என்றதுக்குபாவம் (ப்ராக்ருதேத்யாதி) அதாவது - ப்ராக்ருத ஸஜாதியனுயிருக்கச்செய்தேயும் வ்யாபார மதிமாநுஷமா யிருக்கிறதென்றபடி. விவரணம் (அதிபால்யத்திலேயித்யாதி) மேவுகை - அநந்ய ப்ரயோஜநனுகை. (உடைகுலைப்பட்டு) குலையென்று - கரையாய், கரையுடையப்பட்டென்றபடி. நெஞ்சுநெகிழ்ந்தென்றபடி. மேவ - அநந்யப்ரயோஜநனுய்ப் போரும்படியாகவென்றபடி.

தேவக்கோலப்பிரான்றன் - அப்ராக்ருதவிக்ரஹயுக்தனு யுபகாரசீலனுனக்ருஷ்ணனுடையவித்யர்த்த:. ..................................................................*

## ஐந்தாம்பாட்டு.

வேண்டித்தேவரிரக்கவந்துபிறந்ததும்வீங்கிருள்வாய்
பூண்டன்றன்னைபுலம்பப்போயங்கோராய்க்குலம்புக்கதுங்
காண்டலின்றிவளர்ந்துகஞ்சனைத்துஞ்சவஞ்சஞ்செய்தது
மீண்டுநானலற்றப்பெற்றேனெனக்கென்னவிகலுளதே.

## ஆறாயிரப்படி.

(வேண்டி) பூபாரநிர்ஹரணார்த்தமாக பூமியிலேவந்து திருவவதாரம்பண்ணி யருளவேணுமென்று தேவர்கள்ர்த்திக்கத் தானசைப்பட்டுக்கொண்டு ஸ்ரீவஸுதேவர் திருமாளிகையிலேவந்து பிறந்தருளினபடியையும், "துராத்மாவானகம்ஸன் காணிற்செய்வதென்" என்று ஸ்ரீவஸுதேவரும் தேவகிப்பிராட்டியும் பயப்பட்டலற்ற அவர்களுடைய பயம்போம்படியாக, அதிபஹுளதமஃபூர்ணமான மத்யராத்ரத்திலே தன்னுடைய சதுர்ப்புஜ திவ்யரூப திரஸ்காரபூர்வகமாகத் திருவாய்ப்பாடியிலே யெழுந்தருளினபடியும், அங்கே கம்ஸப்ரப்ருதி ப்ரதிகூலரறியாதபடி வளர்ந்தருளிக்கஞ்சனைத்துஞ்ச வஞ்சம்செய்ததும், இவையெல்லாவற்றையு மிங்கேயலற்றப்பெற்றேன்; எனக்கினியொரு துஃகமுண்டோ வென்கிறார்.........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அர்த்திதார்த்தகரனை க்ருஷ்ணனுடைய வவதாரப்ரமுக கம்ஸவதபர்யந்தசேஷ்டிதங்களை யிங்கேயநுபவிக்கப்பெற்ற வெனக்கென்ன விரோதமுண்டென்கிறார்.

தேவர்-தேவர்கள். இரக்க-இரக்க. வேண்டி-தன்னிச்சையாலே. வந்து-க்ஷீரார்ணவத்தில் நின்றும்வந்து. பிறந்ததும்-அவதரித்ததுவும். அன்று - அப்போதே. அன்னை-பெற்றதாயாரான தேவகியானவள். பூண்டு-கம்ஸபயத்தாலே யெடுத்தணைத்து. புலம்ப-கூப்பிட. வீங்கு-செறிந்த. இருள்வாய்-இருளிடத்திலே. போய் - போய். அங்கு - கம்ஸவிஷயமானதேசந்தன்னிலே. ஓர் - அவனுக்கஞ்சாமல் மறைத்துவைத்துநோக்கும்படி அத்விதியமான. ஆய்க்குலம்-இடைக்குலத்திலே. புக்கதும்-ப்ரவேசித்ததுவும். காண்டல்-அந்தக்கம்ஸனுடையகாட்சி. இன்றி-இல்லாதபடி. வளர்ந்து-வளர்ந்து. கஞ்சன்-கம்ஸன். துஞ்ச-முடியும்படியாக. வஞ்சம் - வஞ்சனை. செய்ததும்-செய்ததுவும். ஈண்டு-இங்கேயிருந்து. நான்-நான். அலற்ற-வாய்விட்டுச்சொல்ல. பெற்றேன்-பெற்றேன். எனக்கு-எனக்கு. என்ன-என்ன. இகல்-விரோதம். உளது-உண்டு.

உண்டாகில் கம்ஸன்பட்டது படுமென்றுகருத்து.........*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

அவதரித்துக் கம்ஸனையறியாதபடிவளர்ந்து கம்ஸனைமாய்த்தபடியை யின்றிருந்தநுபவிக்கப்பெற்ற வெனக்கோரெதிரில்லையென்கிறார்.

(வேண்டித்தேவரிரக்கவந்துபிறந்ததும்) தேவரிரக்க - வேண்டி-வந்துபிறந்ததும். "எங்களளவறியாதே ஒருவனுக்கு வரங்கொடுத்து அவனையுயரப்பார்த்தோம், எங்களுக்குக்குடியிருப்பரிதாயிற்று" என்று தேவஜாதி கப்படங்கட்டிக்கொண்டுசெல்ல, "பிதரம்ரோசயாமாஸ" (பிதரம்ரோசயாமாஸ) என்கிறபடியே தானர்த்தியாய்வந்துபிறந்ததுவும். [ஸ்வேச்சயா] [ஆத்மமாயயா] என்னும்படியிறே. ஆத்மேச்

சயா என்றபடி. "[illegible]" (மாயாவயுநம்ஜ்ஞாநம்) இரக்கிறவர்களளவுபார்த்தல், தன்னளவுபார்த்தல் செய்கையன்றிக்கே வந்து பிறந்தபடிகாணு மிவளைவருத்துகிறது. தானிரப்பாளனுய்க் காரியஞ்செய்யுமவன், பிறரிரந்தால் பொறுக்கமாட்டானிறே. ( பிறந்ததும்வீங்கிருள்வாய் ) " [illegible] " ( மத்யராத்ரேகிலாதாரேஜாயமானேஜநார்த்தநே ) என்னும்படியிறே. "இவனும் விழுக்காடறியாதே யகப்பட்டுக்கொடுநின்றுன், கம்ஸபயமும் ப்ராப்தமாயிராநின்றது, இருளாலேயிறே நாம்பிழைத்தது, இனி யிவ்விருளை சரணம்புகுமித்தனையிறே" என்று பிள்ளையுறங்காவில்லிதாஸர் பணிப்பராம். * ஊரெல்லாந்துஞ்சியில் கூற்றமானவிருளிவர்க்கிப்போ தாதரத்துக்கு விஷயமாயிற்றிறே. வீங்கிருள்வாய்-பூண்டன்றன்னை புலப்பப்போய் என்றுமாம். " மக்களறுவரைக்கல்லிடைமோத விழந்தவள் " என்கிறபடியே - பெற்றுப்பெற்றிழந்தவளாகையாலே, இவனையுமிழக்கிறேமோ!" என்று விரஹகாதரதையாலே காலைப்பூண்டுகிடந்து கூப்பிடப்போய். பிள்ளைபக்கல் வாத்ஸல்யத்தாலே இவள் கூப்பிட, இவன் முலைச்சுவடறியாமையாலேபோனபடி. வீங்கிருள் – வளருகிறவிருள். (அங்கோராய்க்குலம்புக்கதும்) அவ்வவஸ்த்தையிலே இடையிலேவளருகைக்கோ ரஞ்சினன் புகலிடமுண்டாவதே. (ஆய்க்குலம்) " கம்ஸன்பாதகன் " என்று பயப்படவறியாதவர்கள். " குடிவாயுடன்படவிருந்தானுகிலிருக்கிறுன், இல்லையாகி லுழக்கோலாலே தகர்க்கிறேம் " என்றிருப்பர்கள். (காண்டலின்றிவளர்ந்து) கம்ஸனும் அவன்வரக்காட்டின பாதகவர்க்கமும் காணுதபடி வளரப்பெறுவதே. (கஞ்சனைத்துஞ்ச வஞ்சஞ்செய்ததும்) ஸ்ரீநாரதபகவானறிவித்தபின் பொருபோதுதாழாதேவந்து, அவன்தான் நினைத்தவஞ்சனையை அவன்றன்னோடேபோக்கினதும். கம்ஸன் முடியும்படியாக வஞ்சனைசெய்தது ராமாவதாரம்போலே "செவ்வைப்பூசலல்லதறியேன்" என்றிராமையிறே. ( ஈண்டுநானலற்றப்பெற்றேன் ) தேவகியாரைப்போலே சமகாலத்திலேயிருந்து பயப்படாதே, இப்போது பயங்கெட்டிருந்தநுபவிக்கப்பெற்றேன். ஈண்டு-இப்போது.

(எனக்கென்னவிகலுளதே) கம்ஸன்பட்டபின் பெனக்கு சத்ருக்களுண்டோ. இகல் - சத்ரு. ( எல்லாரும் சேஷபூதராகையாலே தமக்குசத்ருவில்லை. அவனும் நாராயணனுகையாலே அவனுக்கு சத்ருவில்லை. இனி யிவர் சத்ருக்கள் பகவத்விமுகரிறே. ) கம்ஸனைமுடித்தபடியை யின்றிருந்தநுபவிக்கப்பெற்ற வெனக்கினியொரு மிடியில்லையென்கிறுராகவுமாம் ............................................................................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. ( வேண்டியித்யாதி ) " காண்டலின்றிவளர்ந்து " இத்யாத்யுத்தரார்த்தத்தைக் கடாக்ஷித்தவதாரிகை ( அவதரித்தித்யாதி )

தேவர்களிரக்கும் ப்ரகாரத்தைக்காட்டுகிறார் (எங்களளவித்யாதி) கப்படம்-கார்ப்பண்யசூசகபடவிசேஷம், கப்பனையும். “ வேண்டி - வந்து ” - அர்த்தியாய்வந்தித்யர்த்த꞉. “ 𑌪𑌦𑍍𑌮𑌪𑌤𑍍𑌰𑌵𑌿𑌶𑌾𑌲𑌾𑌕𑍍𑌷𑌃𑌕𑍃𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂𑌚𑌤𑍁𑌰𑍍𑌵𑌿𑌧𑌮𑍍।𑌪𑌿𑌤𑌰𑌂𑌰𑍋𑌚𑌯𑌾𑌮𑌾𑌸𑌤𑌦𑌾𑌦𑌶𑌰𑌥𑌂𑌨𑍃𑌪𑌮𑍍 ” ( பத்பசத்ரவிஶாலாக்ஷ꞉ க்ருத்வாத்மாநம்சதுர்விதம் । பிதரம்ரோசயாமாஸததாதஶரதம்ந்ருபம் ) இதிபாலகாண்டே. “ வேண்டி - வந்து ” என்றதுக்கு-இச்சித்துவந்தென்றர்த்தாந்தரம் (ஆத்மமாயயேத்யாதி) இதுக்கர்த்தம் (ஆத்மேச்சயாவென்றபடியென்று) மாயாஶப்தம்-இச்சாவாசகமாமோவென்ன (மாயாவயுநமித்யாதி) “ தேவர் ” என்றதுக்குபாவமாதல், “ வந்துபிறந்ததும் ” என்றதுக்கு ஹார்த்தபாவமாதல் (இரக்கிறவர்களித்யாதி) இரக்கிறவர்களளவாவது - “ ஈஸ்வரோஹம் ” என்றிருக்கிற துர்மாநாதிதோஷம். தன்னளவாவது - தன்பெருமை. இருவரளவும்பாராமல்வந்து பிறக்கைக்கடியேதென்ன (தானிரப்பாளனுமித்யாதி) “ வீங்கிருள்வாய் ” - ப்ரவ்ருத்தமானவிருளிலே. வளருகிறவிருளிலேயோபிறந்தானென்ன (மத்யராத்ர இத்யாதி) “ 𑌮𑌧𑍍𑌯𑌰𑌾𑌤𑍍𑌰𑍇𑌽𑌖𑌿𑌲𑌾𑌧𑌾𑌰𑍇𑌜𑌾𑌯𑌮𑌾𑌨𑍇𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨𑍇 । 𑌮𑌨𑍍𑌦𑌂𑌜𑌗𑌰𑍍𑌜𑍁𑌰𑍍𑌜𑌲𑌦𑌾𑌃𑌪𑍁𑌷𑍍𑌪𑌵𑍃𑌷𑍍𑌟𑌿𑌮𑍁𑌚𑍋𑌦𑍍𑌵𑌿𑌜 ” ( மத்யராத்ரேகிலாதாரேஜாயமாநேஜநார்த்தநே । மந்தம்ஜகர்ஜுர்ஜலதா꞉புஷ்பவ்ருஷ்டிமுசோத்விஜ ) இதிபஞ்சமேம்ஶே த்ருதீயே. இருளென்னுதே, “ வீங்கிருள் ’, என்று - ஶ்லாகித்ததுக்கு சம்வாதம் (இவனுமித்யாதி) இருளை சரணம்புகுமித்தனையென்றது - இருளை யுத்தேஶ்யதாபுத்திபண்ணிவணங்குமத்தனையென்றபடி. * ஊரெல்லாந்துஞ்சியிலே, “ வீங்கிருளினுண்டுளியாய் ” என்று - இருளுக்கஞ்சினபடியையும், இப்போது கொண்டாடுகிறபடியையு மநுசந்தித்து வ்யாக்யாதாவீடுபடுகிறார் (ஊரொல்லாமித்யாதி)

“ வீங்கிருள்வாய் ” என்றத்தை - கீழும்மேலுங்கூட்டுவது. அன்று - பிறந்தவன்று. காலைப்பூண்டுகொண்டு புலம்புகைக்கு ஹேதுவேதென்ன (மக்களறுவரையித்யாதி) பிள்ளைகளறுவரையும் கம்ஸன் கல்லிடைமோத, அவர்களையிழந்த தேவகிப்பிராட்டியுடையவென்றபடி. பெரியாழ்வார்திருமொழி அஞ்சாம்பத்து மூன்றாந்திருமொழி, “துக்கச்சுழலை” இத்யாதி. காலைப்பூண்டு- க்ருஷ்ணனுடையகாலைப்பூண்டு. இவள்கூப்பிடுகிறதுக்குமவன் போனதுக்கும் ஹேதுவேதென்ன ( பிள்ளைபக்கலித்யாதி ) “ ஓர் ” என்றதுக்கு ஹார்த்தபாவமாதல், ஈடுபாடாதல் ( அவ்வவஸ்த்தையிலேயித்யாதி ) அஞ்சினன்புகலிடம் - பயஸ்த்தன்புகுமிடம். பயப்படவறியாமையி னெல்லையைக்காட்டுகிறார் (குடிவாயுடனித்யாதி) குடிவாயுடன்படவிருந்தானுகிலென்றது - குடிமக்களோடொத்திருந்தானுகிலென்றபடி. குடிவாய்-குடிமக்கள். உழக்கோல்-தாத்துக்கோல்.

நாரதபகவான்சொன்னது கம்ஸனோடே.

மிடி-க்லேஶம் ..........................................................................*

---

## ஆறும்பாட்டு.

இகல்கொள்புள்ளைப்பிளந்ததுமிமிலேறுகள்செற்றதுவு
முயர்கொள்சோலைக்குருந்தொசித்ததுமுட்படமற்றும்பல
வகல்கொள்வையமளந்தமாயனென்னப்பன்றன்மாயங்களே
பகலிராப்பரவப்பெற்றேனெனக்கென்னமனப்பரிப்பே.

## ஆறாயிரப்படி.

( இகல்கொள் ) கம்ஸப்ரேரித ப்ரதிகூல விஹங்க விசேஷ துர்த்தம வ்ருஷகுந்த ரூபாசுர நிரஸநப்ரப்ருதி பரமபுருஷ திவ்யசேஷ்டிதங்களை சர்வகாலமு மேத்தப்பெற்ற நா னவாப்த சமஸ்த மநோரத னேனென்கிறார். .........................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், பூர்வாவதாரத்திலே அந்யாபிமாந நிவர்த்தகமான த்ரைவிக்ரமத்தைப்பண்ணின க்ருஷ்ணனுடைய விரோதிநிரஸந வ்யாபாரங்களை அஹோராத்ர விபாகமற அநுபவிக்கப்பெற்றேன், எனக்கென்ன மநோதுஃகமுண்டென்கிறார்.

இகல் - யுத்தத்திலே. கொள் - ஒருப்பட்டுவந்த. புள்ளை - பகாசுரனை. பிளந்ததும் - வாயைக்கிழித்ததுவும். இமில் - செருக்குக்கடியான பிசலையுடைய. ஏறுகள் - ஏறுகளை. செற்றதுவும் - செறுத்துக் கொன்றதுவும். உயர் - உயர்த்தியை. கொள் - உடைத்தாய். சோலை - தழைத்த. குருந்து - குருந்தை. ஒசித்ததும்- முறித்ததுவும். உட்பட - முதலாக. மற்றும் - பின்னும். பல - விரோதிநிரஸநரூபமாய்க்கொண்டு பலவாயுள்ளனவாய். அகல் - விஸ்தாரத்தை. கொள் - உடைய. வையம் - பூமியை. அளந்த - அளந்து மஹாபலியபிமாநத்தை யழித்துக்கொடுத்த. மாயன் - ஆஶ்சர்யபூதனான த்ரிவிக்ரமனாய். என் - அவ்வவதாரத்தோடுண்டான ஐக்யத்தை யெனக்கு ப்ரகாசிப்பித்த. அப்பன்றன்-மஹோபகாரகனான க்ருஷ்ணனுடைய. மாயங்கள் - ஆஶ்சர்யசேஷ்டிதங்களை. பகலிரா - பகலோடிரவோடு வாசியற. பரவ - ஸ்துதிக்க. பெற்றேன் - பெற்றேன். எனக்கு - எனக்கு. என்ன - என்ன. மனப்பரிப்பு - மநோதுஃகம் உண்டு.

பகவதநுபவகாலம் பழுதுபோகிலிறே மநோதுஃகமுள்ளதென்று கருத்து.

## ஈடு - ஆறும்பாட்டு.

க்ருஷ்ணனுடைய ப்ரதிகூல நிரஸந பரம்பரையை யநுபவிக்கப்பெற்ற வெனக்கொரு மநோதுஃகமில்லையென்கிறார்.

( இகல்கொள்புள்ளைப்பிளந்ததும் ) ( இகல் - யுத்தம். ) கேவலம் புள்மாத்ரமாய்வந்து தோற்றுகை யன்றிக்கே, யுத்தோந்முகமாய்க்கொண் டெதிரிட்ட புள்ளை நிரஸித்ததும். அசுராவேசத்தோடே வரச்செய்தேயும் "பாதிக்கவருகிறது" என்று பிறரஞ்சாத வடிவுகொண்டு வந்தபடி. * பள்ளத்தில்மேயும் பறவையுருக்கொண்டுவந்தது. (இமிலேறுகள் செற்றதுவும்) ககுத்தையுடைத்தான வ்ருஷபங்களைச்செற்றதும் ( உயர்கொள்சோலைக் குருந்தொசித்ததும் ) ஓக்கத்தை யுடைத்தாய்ச் சோலைசெய்துநின்ற குருந்தை முறித்ததும். "முக்தராயிருப்பார்க்காகாஷகமாயிருக்கும்" என்று தழைத்துநின்றது. "இனியித்தைமுறித்துக் கார்யங்கொள்வோம்" என்று பொடிபடுத்தினன். (உட்படமற்றும்பல) இப்புடையிலே மற்றுமுண்டான ப்ரதிகூலநிரஸநங்களநேகமிறே. (அகல்கொள்வையமித்யாதி) பரப்பையுடைத்தான பூமியடங்கலுமநாயாசேநவளர்ந்த ஆஶ்சர்யபூதனான வுபகாரகனுடைய வாஶ்சர்ய சேஷ்டிதங்

ளையே. ( பகலிராப்பரவப்பெற்றேன் ) நாட்டாரபிமதவிஷயங்களை புஜிக்கைக்கு. "பகல், இரா" என்று கூறிட்டகால மிரண்டு மிவ்விஷயத்திலே யநுபவிக்கப்பெற்ற வெனக்கு, இரவுப் பகல் புறம்பே விஷயங்களையநுபவிப்பாருடைய மநோதுஃகமுண்டோ. பரிவென்று - துஃகம். அதிலே ஒரு ஒற்றெழுத்தேறினாலு மவ்வர்த்தத்தையே காட்டக்கடவது....*

## ஜீயர் அரும்பதம்.

ஆரும்பாட்டு. ( இகலித்யாதி ) "இகல்கொள்" என்றுதொடங்கி, "மற்றும்பல" என்னுமளவுங்கடாக்ஷித்தவதாரிகை ( க்ருஷ்ணனுடையவித்யாதி ) "எனக்கென்னமனப்பரிப்பு" என்றத்தை ( எனக்கொரு மநோதுஃகமில்லையென்கிறானென்றது )

இகல் - யுத்தம். புள்ளென்னாதே, "இகல்கொள்புள்" என்று விசேஷித்ததுக்கு பாவம் (கேவலமித்யாதி) "புள்" என்றதுக்கு பாவம் ( அசுராவேசேத்யாதி ) அஞ்சாதவடிவுகொண்டுவந்ததுக்கு ப்ரமாணம் (பள்ளத்தில்மேயுமித்யாதி) நீர்த்தாழ்வுகளிலே யிரைதேடித்திரிகிற பகமாகிற பக்ஷியின்வடிவைக்கொண்டித்யர்த்தஃ. பெரியாழ்வார் திருமொழி இரண்டாம்பத்து அஞ்சாந்திருமொழி நாலாம்பாட்டு.

சோலைசெய்து நிற்கைக்கு ஹேதுவேதென்ன (முக்தராயித்யாதி)

"பகலிரா" என்று விசேஷித்ததுக்கு பாவம் ( நாட்டாரித்யாதி ) கூறிடுகையாவது - அபிமதவிஷயங்களுக்குக் கொடுக்கைக் குறுப்பாக வர்த்தார்ஜநம்பண்ணுகைக்குப் பகலையும், அவற்றை யநுபவிக்கைக்கு ராத்ரியையு மவச்சேதிக்கையென்றபடி.........................................................*

---

## ஏழாம்பாட்டு.

---

மனப்பரிப்போடழுக்குமானிடசாதியிற்றான்பிறந்து
தனக்குவேண்டுருக்கொண்டுதான்றனசிற்றத்தினைமுடிக்கும்
புனத்துழாய்முடிமாலைமார்பனென்னப்பன்றன்மாயங்களே
நினைக்குநெஞ்சுடையேனெனக்கினியார்நிகர்நீணிலத்தே.

## ஆறுயிரப்படி.

(மனப்பரிப்போடு) ப்ரணதஜநஸமீஹித நிர்வர்த்தநவிஷய மநோரதனாய்க்கொண்டு, அசேஷதோஷாஸ்பத மநுஷ்யஜாதியிலே ஸ்வாஸாதாரண திவ்யரூபத்தோடே வந்துபிறந்தருளி, ஸ்வாபிமதத்விபுஜசதுர்ப்புஜாதிரூபங்களை யாஸ்த்தாநம்பண்ணிக்கொண்டு விரோதிநிரஸநம்பண்ணிப் பரிபூர்ணமநோரதனாகையாலே அதிபரிமளதுலஸீமாலாலங்க்ருதனாயிருந்த வெம்பெருமானுடைய வாஸ்சர்ய திவ்யசேஷ்டிதங்களையே நினைக்கும்நெஞ்சாகிற மஹாநிதியையுடையனான வென்னோடொக்க இந்தலோகத்தில் தந்யனுண்டோவென்கிறார் ..........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அதிசயித போக்யாகாரனான க்ருஷ்ணனுடைய ஆஶ்ரிதவிரோதி நிரஸநார்த்தமான வவதார வைலக்ஷண்யத்தை யநுசந்திக்கும் நெஞ்சையுடைய வெனக்கு பூமியில் ஸத்ருஸருண்டோவென்கிறார்.

“ ப்ருஶம்பவதிது:கித: ” (ப்ருஶம்பவதிது:கித:) என்கிறபடியே சம்ஸாரிகள் படுகிறது:கத்தைக்கண்டு, பரது:காஸஹிஷ்ணுத்வரூபமான, மனம்-நெஞ்சில். பரிப்போடு-து:கத்தோடே. அழுக்கு-ஹேயமான. மானிடசாதியில் - மநுஷ்ய ஜாதியிலே. தான்-ஹேயப்ரத்யநீகனான தான். பிறந்து - தத்ஸஜாதீயனாய்ப்பிறந்தவிடத்திலும். தனக்கு-தன். வேண்டு-இச்சாநுரூபமான. உரு - அபிமதவிக்ரஹங்களை. கொண்டு-பரிக்ரஹித்து.தான்-ஆஶ்ரிதவாத்ஸல்யத்தையுடையதான். ஆஶ்ரிதவிரோதி நிரஸநத்தாலே,தன-தன். சிற்றத்தினை-சீற்றம்.முடிக்கும்-முடிப்பானுமிருப்பானாய். புனம்-தன்னிலத்தில் நின்றாப்போலே செவ்விபெற்ற. துழாய்மாலை - திருத்துழாய் மாலையையுடைத்தான. முடி-திருமுடியையும். துழாய்மாலை-அந்தத்திருமாலையையுடைத்தான. மார்பன்-திருமார்பையுமுடையனாய். என் - அவ்வழகையெனக்குப்ரகாசிப்பித்த. அப்பன்றன்-உபகாரகனானவனுடைய. மாயங்கள்-ஆஶ்சர்யசேஷ்டிதங்களை. நினைக்கும்-நினைக்கும்படி விதேயமான. நெஞ்சு-நெஞ்சை. உடையேன்-அஸாதாரணமாகவுடையேனான. எனக்கு-எனக்கு. இனி-இனி. நீள்நிலத்து-இந்தமஹாப்ருதிவியில். நிகர்-ஒப்பார். ஆர்-ஆர்.........................................................

## ஈடு-ஏழாம்பாட்டு.

ப்ரதிகூல ராஶிதனை நலியுமது பொறுக்கமாட்டாமை யவதரித்து அவர்களை யழியச்செய்யும் சேஷ்டிதங்களை நினைக்கும் நெஞ்சுடைய வெனக்கு பூமியில் நிகரில்லையென்கிறார்.

(மனப்பரிப்போடழுக்கு மானிடசாதியிற்றான்பிறந்து) நாட்டாரை யழுக்குடம்புகழிக்கும் தான்கிடீர் அழுக்கு மானிடசாதியிலேவந்துபிறந்தான். ப்ரஜை கிணற்றிலேவிழுந்தா லெடுக்கவரும்தாய் நெஞ்சுநொந்துவந் தெடுக்குமாபோலே, “ இவற்றுக் குதவப்பெற்றிலோம் ” என்னும் திருவுள்ளத்தில் தளர்த்தியோடேவந்துபிறக்கை. ( தான் பிறந்து ) ஹேயப்ரத்யநீகனான தானப்ராக்ருத திவ்ய ஸம்ஸ்த்தாநத்தோடே கர்ப்பவாஸம்பண்ணிக்கொண்டவதரித்து. பிறக்கைக்குக்கர்மம்பண்ணிவைத்தவருங்கூட அருவருக்கும் ஜந்மத்திலேகிடீ ரகர்மவஶ்யனான தான்பிறந்தது. இதுக்கடி காருண்யமிறே. (தனக்குவேண்டுருக்கொண்டு) அப்ராக்ருத திவ்யஸம்ஸ்த்தாநத்தை யுடையனாய்க்கொண்டு. அப்படிபிறந்தா லொருபடிப்பட்டிருக்கப்பெற்றோமோ !. “ த்விபுஜோவாசதுர்ப்புஜோவா ” ( த்விபுஜோவாசதுர்ப்புஜோவா ) என்னும்படியிறே பட்டபடி. ஈஶ்வரத்வத்தைக் கைகழியவிட்டபின்பிறே யிவனுக்கிங்கிடங்கொடுத்தது. இவைதா னாஶ்ரிதார்த்தமாகையாலே தனக்கபிமதமாயிருக்கும். ஐச்சமென்றுமாம். (தான்தனசீற்றத்தினைமுடிக்கும்) ஆஶ்ரித

விரோதிபோக்கினுனாயிருக்கையன்றிக்கே தன்சினந்தீர்ந்தானுயிருக்கை; மாதாவானவள், ப்ரஜையை நலிந்தவர்களைத்தான் நலிந்து தன்சினந்தீருமாபோலே. "கொவஸுவஸமெயிவாநு." (கோபஸ்யவஸமேயிவாந்) (புனத்துழாய்முடிமாலைமார்பன்) ஆஶ்ரிதவிரோதிகளைப்போக்கித் திருமஞ்சனம்பண்ணியொப்பித்து, திருமேனியின் ஸ்பர்ஶத்தாலே தன்னிலத்திலே நின்றாப்போலே செவ்விபெற்றிருக்கிற திருத்துழாய்மாலையைத் திருமுடியிலும் திருமார்பிலுமுடையனாய், அவ்வொப்பனையாலேயென்னையெழுதிக்கொண்டான். (தன்மாயங்களே நினைக்குநெஞ்சுடையேன்) "காரணம்பந்தமோக்ஷயோ:" (காரணம்பந்தமோக்ஷயோ:) என்று பொதுவாகையன்றிக்கே, அவனுடைய வாஸ்சர்ய சேஷ்டிதங்களையேயநுசந்திக்கும் நெஞ்சையுடையேன்.

(எனக்கினியார்நிகர் நீணிலத்தே) பூமிபரப்புடைத்தென்ன, எனக்கொப்பாருண்டோ. பரமபதத்தையொன்றாக நினைக்கிறிலர் ; தம்மைப்போலே கவிபாடியடிமைசெய்வாரில்லாமையாலே - சம்ஸாரத்தேயிருந்து கவிபாடியடிமைசெய்யப்பெற்ற வெனக்கு, பூமியிலொ ரொதிருண்டோவென்கிறார்.........................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. (மனப்பரிப்பித்யாதி) "மனப்பரிப்போடழுக்கு" என்று தொடங்கி, "நினைக்கும்நெஞ்சுடையேன்" இத்யாதிகளைக் கடாக்ஷித் தவதாரிகை (ப்ரதிகூலரித்யாதி)

"தான்" என்றதுக்குபாவம் (நாட்டாரையித்யாதி) நாட்டாரை யென்கிறது - "ஹேயமான வுடம்பைக் கழிக்கவேணும்" என்று ப்ரார்த்திக்கிற முமுக்ஷுக்களை. "மனப்பரிப்போடு" என்றதுக்கு ஸத்ருஷ்டாந்தமாக பாவம் ( ப்ரஜையித்யாதி ) இவற்றுக்கென்றது - தனக்கநந்யார்ஹசேஷமாய் வைத்து நோவுபடுகிற விவற்றுக்கென்றபடி. "தான்" என்றதுக்கு - அகர்மவஶ்யனுன தானென் றர்த்தாந்தரம் (பிறக்கைக்கித்யாதி)

"தனக்குவேண்டுருக்கொண்டு" என்றதுக் கிரண்டர்த்தம் - அப்ராக்ருததிவ்ய சம்ஸ்த்தாநத்தை யுடையனாய்க்கொண் டென்னுதல், த்விபுஜனாதல் சதுர்ப்புஜனாதல் வேண்டினபடியாய்க்கொண் டென்னுதல். ஒருபடிப்பட் டிருக்க வில்லையோ வென்ன (த்விபுஜோவேத்யாதி) சதுர்ப்புஜனானவன் த்விபுஜனாகைக் கடியேதென்ன ; ஸம்ஸாரத்தினுடைய கொடுமையென்கிறார் (ஈஶ்வரத்வத்தையித்யாதி) "மனப்பரிப்போடு" இத்யாதிக்கு - "சம்சாரிகளுடைய து:கதர்ஶநத்தால்வந்த மநோது:கத்தோடே, ஹேயமான மநுஷ்யஜாதியிலே, ஹேயப்ரத்யநீகனான தான் தத்ஸஜாதீயனாய்ப்பிறந்து, அவ்விடத்திலும் தன்னிச்சாநுரூபமான வபிமதவிக்ரஹங்களைபரிக்ரஹித்து" என்றுரையிலே சப்தார்த்தம். கைகழியவிட்டவென்றது - ஶ்லேஷம்; கைகளைக்கழியவிட்ட என்றும், கைகழியும்படிவிட்ட என்றும். இதுக்கு - "உபஸம்ஹரஸர்வாத்மந் ரூபமேதச்சதுர்ப்புஜம்" (உபஸம்ஹரஸர்வாத்மந் ரூபமேதச்சதுர்ப்புஜம்) என்றதிலே நோக்கு. "தனசீற்றத்தினை" என்றதுக்குவாஸனை (ஆஶ்ரிதவிரோதியித்யாதி) இதுக்கு த்ருஷ்டாந்தம் (மாதாவானவளித்யா

தி) ஆஶ்ரிதவிரோதிகளைத் தன்விரோதிகளாக நினைத்துச் சீறினவிட முண்டோவென்ன (கோபஸ்யேத்யாதி) "தஸ்ராமாஹாதேஜா ராவணோ நக்ருதவ்ரண: । த்ருஷ்ட்வா ப்லவகஶார்தூலம் கோபஸ்ய வஶமேயிவான்" (ததோராமோமஹாதேஜாராவணோநக்ருதவ்ரணம் । த்ருஷ்ட்வாப்லவகஶார்தூலம் கோபஸ்யவஶமேயிவாந்) இதியுத்தகாண்டே.

"புனத்துழாய் - மாலையை - முடியிலேயும் - மார்பிலேயு முடையவன்" என்றந்வயம். "மாயங்களே" என்ற ஏவகாரார்த்தம் (காரணமித்யாதி). "மந ஏவ மநுஷ்யாணாம் காரணம் பந்தமோக்ஷயோ:" (மநஏவமநுஷ்யாணாம்காரணம்பந்தமோக்ஷயோ:) இத்யாதி.

கீழே, "எனக்கெவ்வுலகம்நிகர்" என்றாரே; இங்கே, "நீணிலத்து" என்பானென்னென்ன (பரமபதத்தையித்யாதி) அதுக்கடி யேதென்ன (தம்மைப் போலே யித்யாதி)......................................................*

## எட்டாம்பாட்டு.

நீணிலத்தொடுவான்வியப்பநிறைபெரும்போர்கள்செய்து
வாணனாயிரந்தோடுணித்ததுமுட்படமற்றும்பல
மாணியாய்நிலங்கொண்டமாயனென்னப்பன்றன்மாயங்களே
காணுநெஞ்சுடையேனெனக்கினியென்னகலக்கமுண்டே.

### ஆறாயிரப்படி.

(நீணிலத்தொடு) பாணவிஜய ப்ரமுகமான க்ருஷ்ணசேஷ்டிதங்களையும், மற்றும் ஸ்ரீவாமநனுடைய வாஶ்சர்யசேஷ்டிதங்களையுமே யநுசந்திக்கும்நெஞ்சுடையேனானவெனக்கினிக்கலக்கமுண்டோவென்கிறார்.

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், அர்த்தியாய் மபேக்ஷிதந்தலைக்கட்டிக்கொள்ளு மவனுடைய பாணயுத்தப்ரமுகசேஷ்டிதங்களை யநுசந்திக்கும் நெஞ்சையுடைய வெனக்கொருகலக்கமுண்டோவென்கிறார்.

நீள்-பெரிய. நிலத்தொடு-பூமியோடே. வான்-ஆகாசமும். வியப்ப-விஸ்மயப்படும்படியாக. நிறை-வாணனொருவனுமே யெதிராயிருக்க, படைத்துணைக்குவந்த தனித்தனியே ப்ரதாநரான ருத்ரசுப்ரஹ்மண்யாதிகளோடேகூட பஹுபரிகரபூர்ணமான. பெரும்போர்கள்-மஹாயுத்தங்களை. செய்து-பண்ணி. வாணன்-பாணனுடைய. ஆயிரந்தோள்-யுத்தகண்டூதிப்ரசுரமான ஆயிரந்தோள்களையும். துணித்ததும்-துணித்ததுவும். உட்பட-முதலாக. மற்றும்-மற்றும். பல-பலவாயுள்ளவையாய். மாணியாய்-அர்த்தியான ப்ரஹ்மசாரியாய். நிலம்-பூமியை. கொண்ட-பரிக்ரஹித்த. மாயன்-க்ருத்ரிமனாய். என்-அந்தக்ருத்ரிமத்தை யெனக்குப்ரகாசிப்பித்த. அப்பன்றன்-உபகாரகனான க்ருஷ்ணனுடையதான. மாயங்கள் - ஆஶ்சர்யசேஷ்டிதங்களை. காணும்-அபரோக்ஷித்தநுபவிக்கும். நெஞ்சு-நெஞ்சை. உடையேன் - உடையேன். இனி-இனி. எனக்கு-எனக்கு. என்ன-என்ன. கலக்கம்-கலக்கம். உண்டு-உண்டு.

அவிதேயசித்தர்க்கிறே ஸ்வரக்ஷணேஸ்வாந்வயாந்யரக்ஷ்யத்வாதிகளாலுள்ள கலக்கமுள்ளது.......................................................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

பாணவிஜயப்ரமுகமான க்ருஷ்ணசேஷ்டிதங்களையே யநுசந்திக்கும் நெஞ்சையுடைய வெனக்கொரு கலக்கமில்லையென்கிறார்.

(நீணிலத்தொடுவான்வியப்ப) பூமியிலுள்ளாரோடு ஸ்வர்க்கத்திலுள்ளாரோடு வாசியற விஸ்மயப்பட. கண்டதுக்கெல்லா மாப்ரசர்யப்படும் மநுஷ்யரோடொக்க, ஒன்றுக்கும் விக்ருதராகாதே தந்தாமைப்போரப்பொலிய நினைத்திருக்கும் தேவர்களும் விஸ்மயப்படும்படி. கும்பிடுவாரோடு கும்பிடுகொள்ளுவாரோடு வாசியறும்படியாக. "வியப்ப" என்று மேலேகிடக்கையாலே, * மஞ்சாஃக்ரோஸந்திபோலே யிருக்கிறது. (நிறைபெரும்போர்கள்செய்து) குறைவற்ற மஹாயுத்தத்தைப்பண்ணி. அதாவது-ஈப்ஸவராபிமாநிகளான ருத்ராதிகளும் கெட்டோடும்படியான போரைச்செய்து. (பஹுபரிகரபூர்ணமான மஹாயுத்தங்களைப்பண்ணி) (வாணனுயிரந்தோள் துணித்ததும்) வகாதவிஷயங்களை யநுவர்த்தித்த தோள்களைக்கழித்தபடி. " இவன்கரபாதையாற்றமாட்டாமல் கண்டார்காலிலெல்லாங் குனிந்துதிரியாநின்றான் " என்றக்கரத்தைக்கழித்துவிட்டான். (வாணனித்யாதி) "கைகழியப்போய் ருத்ரனையாப்ரயித்தானிவன் கரபாதையாற்றாமை" என்று அத்தைப் படைக்கடைத்துவிட்டான். (வாணனித்யாதி) " வாணன் தேவதாந்தர பஜநம்பண்ணுகையிறே யவனுக்கிங்ஙன்கைபிழைப்பாடுவந்தது" என்று நாட்டார் கைவந்தபடி செய்கைக்காகச்செய்தான். " ஈஸ்வராய " என்றிறே தேஹஸம்பத்தியைக் கொடுத்தது. ஈஸ்வரன் கைவந்தபடி செய்யாதவர்களைக் கைமேலேதண்டிக்கை ப்ராப்தமிறே. சர்வேஸ்வரன் தன்னை யாஸ்ரயிக்கைக்காக விவனோடே கைசெய்திறே யடியிலேவிட்டது. " அத்தைமதித்திலன், இவனறக்கைவிஞ்சினான் " என்று தண்டித்துவிட்டான். தேவதாந்தரத்தை யாப்ரயித்துக் கையிலே பலம்பெற்றுவிட்டான். பகவத்ஸமாப்ரயணம் பண்ணுகைக்குக் கைம்முதலில்லாமைவிட்டானன்றே. ( ருத்ரனையாப்ரயித்ததொன்றுமேயிறே யவனைக்கைதப்பிற்று. ) ( உட்படமற்றும்பல ) அவனுக்குப் பெருநிலைநின்றாரையும் முதுகுகாட்டும்படி பண்ணுவித்தபடி. " க்ருஷ்ண க்ருஷ்ண மஹாபாஹோ " ( க்ருஷ்ணக்ருஷ்ணமஹாபாஹோ ) என்று பின்பிறே யவனிவனையுள்ளபடியறிந்தது. (மாணியாய்நிலங்கொண்டமாயன்) பெறில் ஜீவிப்பானாய்ப்பெறாவிடில் முடிவானும்படியாய், இரப்பிலே தழும்பேறின வடிவைக்கொண்டு. இவரவ்வவதாரத்தில் கால்வாங்குகிறாரல்லர்; கண்ணழிவற்ற வழகாலும், வரையாதே யெல்லாரையும் தீண்டுகையாலும், ஆஸ்ரிதவிஷயத்தி லோரத்தாலும், செய்யுமானைத்தொழில்களாலும் க்ருஷ்ணாவதாரத்தோ டொத்திருக்கையாலே

ஸ்ரீவாமநாவதாரத்தை யநுபவிக்கிறார். (நிலங்கொண்டமாயனென்னப்ப ன்) "திருவுலகளக்க" என்றொரு வ்யாஜத்தையிட்டு அளந்துகொண் டது தம்மையென்றிருக்கிறார். (அப்பன்றன்மாயங்களேகாணும் நெஞ்சு டையேன்) "'* முடியானேயிற்கரணங்களையுடைய வாழ்வாராகையா லே, நெஞ்சுதானேநினைக்கவும் வற்றாய்க்காணவும் வற்றாயிருக்கும்' என் று பிள்ளான்பணிக்கும்" என்றருளிச்செய்வர். அதவா, "கட்கண்" என்றும், "உட்கண்" என்றும் சொல்லுகிறபடியே - நெஞ்சுதன்னையு ம் கண்ணாகச்சொல்லக்கடவதிறே, அதாகவுமாம்.

(எனக்கினியென்னகலக்கமுண்டே) "இவ்விஷயத்தைக்காணப் பெற்றிலோம்" என்கிறகலக்கமெனக்குண்டோ. அதவா; தேவதாந்தர ங்களை "ரக்ஷகர்" என்றிருக்கிறகலக்கமும், ஈஶ்வரனுடைய ரக்ஷணத்தி லே யதிசங்கைபண்ணும் கலக்கமும், "தானேதனக்குக்கடவன்" என் னும் கலக்கமுமில்லை ..........................................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. (நீணிலத்தொடித்யாதி) "வாணனையிரந்தோள்துணித்த தும்" இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை (பாணவிஜயேத்யாதி)

(பூமியிலித்யாதி) "ஊூாஃகுரா ஶஷி" (மஞ்சாஃக்ரோஶந்தி) என்று ப்போலே - "நீணிலம், வான்" என்கிறதென்றுகருத்து. அவர்களுக்கு வாசி யே தென்ன (கண்டதுக்கெல்லாமித்யாதி வாக்யத்வயம்) "நிலம், வான்" என்கிற சப்தம் - தேவமநுஷ்யர்களை வசிக்கும்படி யென்னென்ன (வியப்பவித்யாதி) "நி றை" - பரிகரபூர்ணமான.

தலையையறுதே தோள்களைக்கழிப்பானென்னென்ன (வகாதவித்யாதி) வகா தவிஷயங்களை - அப்ராப்தவிஷயங்களை. "அப்ராப்தவிஷயங்களையநுவர்த்திக்கை க்கடி - யுத்தகண்டூதியால்வந்த செருக்கு" என்று அத்தைக் கழித்துவிட்டானென் னுமத்தை ரஸோக்தியாக வருளிச்செய்கிறார் (இவன் கரபாதையித்யாதி) கரம்- இறையும், கையும். "வகாதவிஷயங்களை" இத்யாதிவாக்யத்தை விவரியா நின்று கொண்டு, கரத்தைக்கழித்தது திவ்யாயுதங்களாலே யென்னுமத்தை ரஸோக்தியா கவருளிச்செய்கிறார் (கைகழியப்போயித்யாதி) படையென்று - ஆயுதமும், சேனை யும். படைக்கடைத்துவிட்டான் - திருவாழிக்குச் சிலவிட்டானென்றும், சேனைக் குச்சிலவிட்டானென்றும். அடைத்துவிடுகை-சிலவிடுகை. "அப்ராப்தவிஷயத்தை யாஶ்ரயித்தகைகள்" என்று இவற்றை சேதித்தால் நாட்டார் கைவந்தபடிதொழு கைக் குறுப்பாயிருக்குமென்று செய்தானென்னுமத்தை ரஸோக்தியாக வருளிச்செ ய்கிறார் (வாணனித்யாதி) கைபிழைப்பாடு - கைகளவனைவிட்டுப்போகை. கைவந்த படி-கைக்குத்தகுதியானபடி. கைவந்த தெதுக்காகவென்ன (ஈஶ்வராயேத்யாதி) அப்ராப்தவிஷயத்தைத் தொழுதகைகளை ஈஶ்வரன் சேதிக்கை யபங்யாயமாயிரா தென்னுமத்தை ரஸோக்தியாகவருளிச்செய்கிறார் (ஈஶ்வரனித்யாதி) கைவந்தபடி- சொன்னபடியென்று சாடுவுக்கர்த்தம். கைமேலே - ப்ரத்யக்ஷமாகவென்றும், ஸத் யஃ என்றும்சாடு; கையை சேதிக்கவென்று ஸ்வபாவார்த்தம். "ஶஂஶ்வராய நி வெஷிதம்" (ஈஶ்வராயநிவேதிதம்) என்கிறஶ்லோகார்த்தத்தை ரஸோக்தி

யாக வருளிச்செய்கிறுர் (சர்வேஸ்வரனித்யாதி) கைசெய்தென்றது - கையையிவ ஞேடேகூட்டியென்றும், அலங்கரித்தென்றும். சாஸ்த்ரவஸ்யனன்றிக்கே, யுத்தக ண்டேதியாலேவந்த வஹங்காரமுடையவஞகையாலே இவன்கையைக்கழித்துவிட் டானென்னுமத்தை ரஸோக்தியாகவருளிச்செய்கிறுர் (அத்தைமதித்திலனித்யாதி) கைவிஞ்சிஞன் - கைக்கடங்காதவஞஞனென்றும், கைகளாலே யதிகஞஞனென்று ம். அவன்பண்ணின தேவதாந்தரபஜநத்துக்கு கரச்சேதமே பலமாய்விட்டதென் னுமத்தை ரஸோக்தியாகவருளிச்செய்கிறுர் ( தேவதாந்தரத்தையித்யாதி ) கையி லேபலம்பெற்றுவிட்டான் - ஸத்யஃபலம்பெற்றுவிட்டானென்றும், கரச்சேதமாகி றபலம்பெற்றுவிட்டானென்றும். இக்கைகள் பகவத்ஸமாஸ்ரயணூர்ஹ மல்லாமை விட்டானன்று, கர்வத்தாலேவிட்டானென்னுமத்தையும் ரஸோக்தியாகவருளிச்செ ய்கிறுர் ( பகவத்ஸமாஸ்ரயணமித்யாதி ) கைம்முதலில்லாமை - மூலதநமில்லா மை என்றும், முதலிலே கையில்லாமலென்றும். விட்டானன்றே-கர்வத்தாலேவிட் டானென்றபடி.

பெருநிலே நின்ருரையும் - ஸஹாயமாய் நின்ற ருத்ராதிகளேயும். "ஶஜ்ஞாநாநிவ்ரு ஞ" (ஶங்கராத்ஜ்ஞாநமந்விச்சேத் ) என்னும்படியிருக்கிறவன் சர் வேஸ்வரனுடைதிரிடுவானென்னென்ன ( க்ருஷ்ணக்ருஷ்ணேத்யாதி ) "க்ருஷ்ண க்ருஷ்ண மஹாபாஹோ ஜாநே த்வாம் புருஷோத்தமம் । பரேஶம் பரமாத்மாநமநாதிநிதநம் பரம்" ( க்ருஷ்ணக்ருஷ்ணமஹாபாஹோஜாநேத்வாம்புரு ஷோத்தமம் ၊ பரேஶம்பரமாத்மாநமநாதிநிதநம்பரம் ) இதிருத்ரஃபஞ்சமேம்ஶே த் ரயஸ்த்ரிம்ஶே. "மாணியாய்" என்றதுக்கர்த்தம் ( பெறிலித்யாதி ) க்ருஷ்ணவதா ரஸக்தரானவிவர் வாமநாவதாரத்தே போவானென்னென்ன ( இவரவ்வவதாரத் திலித்யாதி ) அதுக்கடியேதென்ன ( கண்ணழிவற்றவித்யாதி ) நெஞ்சாலே காண க்கூடுமோவென்ன ( முடியானேயிலித்யாதி ) பரிஹாராந்தரம் ( கட்கண்ணென் றுமித்யாதி ) "நெஞ்சென்னுமுட்கண்" என்னக்கடவதிறே.

"என்னகலக்கம்" என்றதுக்கு பாவம் ( இவ்விஷயத்தையித்யாதி ) பாவா ந்தரம் ( அதவேத்யாதி ) முன்னிரண்டுகலக்கமும் - பாணனுக்கு. மூன்ருங்கலக்க ம் - மஹாபலிக்கு.........................................................................*

---

## ஒன்பதாம்பாட்டு.

கலக்கவேழ்கடலேழ்மலேயுலகேழுங்கழியக்கடா
யுலக்கத்தேர்கொடுசென்றமாயமுமுட்படமற்றும்பல
வலக்கையாழியிடக்கைச்சங்கமிவையுடைமால்வண்ணனே
மலக்குநாவுடையேற்குமாறுளதோவிம்மண்ணின்மிசையே.

### ஆருயிரப்படி.

( கலக்க ) வைதிகபுத்ரா நயநார்த்தமாக வெழுந்தருளுகிற படி. யைக் கண்டு ப்ரீத்யதிசயத்தாலே சேதநாசேதந ஸமஸ்த வஸ்துக்களும் க்ஷுபிதமாம்படி, சர்வலோகங்களையுங்கழிய அநாபாஸேநதிருத்தேரைத்

திருநாட்டிலே செல்லக்கடாவியருளின ஆம்சர்யமுட்பட மற்றுமுள்ள சர்வதிவ்யசேஷ்டிதங்களையும், ஆஸ்ரித வாத்ஸல்யைக ஸ்வபாவனுகையா லே தத்விரோதி நிரஸநார்த்தமாக சங்க சக்ராதி சர்வதிவ்யாயுதங்களையு மேந்திக்கொண்டிருக்கிற அழகையும், எம்பெருமானையுங்கூடவீடழிக்கு ம்படி * செவிக்கினிய செஞ்சொல்லா லேத்தப்பெற்ற வென்னேடொப் பாருளரோ இந்தலோகத்திலென்கிருர்...... ............................

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், பரத்வாசாதாரண சிஹ்நயுக்தனுன க்ருஷ்ணனுடைய வைதிகபு த்ராநயந ப்ரமுகமான அதிமாநுஷசேஷ்டிதங்களை ஸ்துதிக்கும் நாவையுடையவெ னக் கிப்பூமியிலெதிராவாரரோென்கிருர்.

ஏழ் - ஏழு. கடல் - கடலையும். ஏழ் - ஏழு. மலை - மலையையும். ஏழ் - ஏழு உலகும் - லோகத்தையும். கலக்க - ஜலஸ்த்தலவிபாகம் தெரியாதபடிபொருந்தும் படியாக. கழிய - அண்டகபாலத்துக்கவ்வருகே போம்படியாக. கடாய் - நடத்தி காரணமான அவ்யக்தபர்யந்தமாக, தேர் - கார்யைகதேசமானதேரை. கொடு-கொ ண்டு. உலக்க - முடிய. சென்ற - சென்ற. மாயமும் - ஆம்சர்யமும். உட்பட - மு தலாக. மற்றும் - மற்றும். பல - வைதிகபுத்ரர்களுடைய ஸஶரீர நயநா விளம்ப கமநரூபமான பலசேஷ்டிதங்களையும். பரத்வசிஹ்நமான, வலக்கை-வலக்கையில் ஆழி - திருவாழியும். இடக்கை-இடக்கையில். சங்கம்-திருச்சங்குமாகிற. இவை இவ்வசாதாரணசிஹ்நங்களையும். உடை - உடைய. மால்வண்ணனை - ம்யாமளவி ரஹயுக்தனை. மலக்கும் - ஹர்ஷப்ரகர்ஷத்தாலே யலமாக்கும்படிபண்ணும். நா-நா வீறு. உடையேற்கு - உடைய வெனக்கு. இ - இந்த. மண்ணின் - பூமியின். மிசை மேலே. மாறு - எதிர். உளதோ - உண்டோ.

ஈம்வரனுக்கு மநோஹாரியான வாக்கையுடையார் வேறுபூமியி லில்லையெ ன்று கருத்து.........................................................................

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

வைதிகபுத்ராநயநம் முதலான அபதாநங்களையுடைய சர்வேம்வ ரனை மலக்கும் நாவீறுடைய வென்னேடொப்பாருண்டோ வென்கிருர்

(கலக்கவேழ்கடலேழ்மலையுலகேழும்கழியக்கடாய்) ஏழ்கடலே ழ்மலையுலகேழும் - கலக்க - கழியக்கடாய். கலக்க-ஒக்க. அதாவது-தே ரைநடத்துகிறபோது நீரோடு மலையோடு தரையோடு வாசியற வொக்க நடத்தினபடி. அன்றிக்கே, (கலக்க-ஏழ்கடல்) என்று கடலுக்குவிசேஷ ணமானபோது, க்ஷோபத்தை யுடைத்தான கடலென்றபடி. அங்ஙனுமி ன்றிக்கே, ஏழ்கடலேழ்மலையுலகேழையும் கழியநடத்துகிறபோது அ ரநடத்தியென்றுமாம். (உலக்கத்தேர்கொடுசென்ற-மாயமும்) கார்யமா னதேரைக்காரணமான மூலப்ரக்ருதியிலே நடத்துகிறவிடத்தில் அழிய தபடி நடத்தின ஆம்சர்யமும். உலக்க-முடிய. ( உட்படமற்றும்பல, வைதிகபுத்ரர்களை யித்தேசத்திநின்றும் கொண்டு போருகையும், பே

ஈசெவ்வியிலே கொடுவந்து கொடுக்கையும், ப்ராதஸ் ஸவநத்துக்குப்பி ன்பு மாத்யந்திநஸவநத்துக்குமுன்பே யிதடங்கச்செய்கையும். (வலக்கை ித்யாதி) இவ்விடத்தை பட்டரருளிச்செய்யாநிற்கச்செய்தே கஞ்சனூ ில் வண்டுவரைப்பெருமாளிருந்தவர், "'மால்வண்ணனை மலக்கு நாவு டையேன்' என்னவமையாதோ, 'வலக்கையாழியிடக்கைச்சங்கமிவையு டை' என்கிறவிதுக்குத்தாத்பர்யமென்" என்ன; "சோளேந்த்ரசிங்கனை ுளுக்காக்கப்பண்ணுகிறேனென்கிறார்காண்" என்றருளிச்செய்தார். சர் ாதிகவஸ்துவுக்கு லக்ஷணமிறே சங்கசக்ரங்கள். "அவாக்யநாதர:" அவாக்யநாதர:) என்கிற சர்வாதிகவஸ்துவை விக்ருதமாக்கும் நாவீறு டையேனென்கிறார். (மால்வண்ணனை) கறுத்த நிறத்தையுடைய சர்வே ்வரனை. (மலக்குநாவுடையேற்கு) இவருக்தியில் கலங்குமாகாதே! ுவன்றான். இவர் கலங்கிச்சொல்லச் சமைந்தாப்போலேயாகாதே அவ னும் கலங்கிக் கேட்கச்சமைந்தபடி. (மாறுளதோ விம்மண்ணின்மிசை ய) பரமபதத்திலநுபவம் வாய்ப்புகு நீராகையாலே அத்தை பொன் ுகநினைத்திருக்கிறிலர். (இனியுண்டாகில் பூமியிலே, அதிலுமில்லையெ ாகிறார்.) (இம்மண்ணின்மிசை-மாறுளதோ) "ஒப்புண்டு, இல்லை" ன்றதிசங்கை பண்ணுகைக்குத்தான் விஷயமுள்ளது நித்யவிபூதியிலே ன்றோ.....................................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. (கலக்கவித்யாதி) பூர்வார்த்தத்தைக் கடாக்ஷித் தவதாரி ்க (வைதிகேத்யாதி) "மலக்குநாவுடையேற்கு" இத்யாதியைப்பற்ற (மலக்கும் ாவீறுடையவித்யாதி)

"ஏழ்கடலேழ்மலையுலகேழையுங் கழியநடத்துகிறபோது - கலக்க - கடாய்" ன்று ப்ரதமத்ருதியார்த்தங்களுக் கன்வயம். ஒக்கநடத்துகையாவது - நீருக்கும்ம ்க்கு மாகாசத்துக்கும் தறைக்கும் வாசிதெரியாதபடி நடத்துகை. கழிய-அதிக்ர ்க்கும்படி. த்விதியார்த்தத்துக்கு; கலக்கத்தை-க்ஷோபத்தை,உடையவென்றபடி.

ப்ரஸங்காதைதிஹ்யம் (இவ்விடத்தையித்யாதி) சோளேந்த்ரசிங்கனென்று- பருமாளுடையவானை. உளுக்காக்க - இருக்கும்படி. அதாவது-ஈஶ்வரனுகிற மத் கஜமானது படிந்துகொடுக்கும்படி பண்ணுகிறேனென்றபடி. "வலக்கையாழி" ித்யாதியாலே - சங்கசக்ர விசிஷ்டனான வாகாரந் தோற்றுமதொழிய, பெருமை சால்லிற்றில்லையேயென்ன (ஸர்வாதிகேத்யாதி) "சோளேந்த்ர" இத்யாதிவா யத்தால் பலிதம் (அவாக்யநாதர இத்யாதி) "மால்" - கறுப்பு. இவருக்திமாத்ரத் ்லே சர்வாதிகன் கலங்குமோவென்ன (இவருக்தியிலித்யாதி) சர்வாதிகன் கலங் ்கைக்கு ஹேது - வ்யாமோஹமென்று விவக்ஷித்து, அதுக்கிவர்தம்மை த்ருஷ்டா ்தமாக்கிக்கொண் டருளிச்செய்கிறார் (இவரித்யாதி)

உபயவிபூதியிலு மொப்பில்லையென்னுதே, "மண்மிசைமாறில்லை" என்பா ானென்னென்ன (பரமபதத்திலித்யாதி) வாய்ப்புகுநீர் - வாயளவுஜலம். அதாவது- ர்மஸ்தகாநுபவமென்றபடி, பரிஹாராந்தரம் (ஒப்புண்டித்யாதி) ஆக, "மண்ணி

ண்மிசை-மாறுளதோ" என்றதுக்கு - பரமபதத்திலநுபவமுங்மஸ்தகமாய், தரித்தி ருந்தநுபவிக்கப் போகாமையாலே யத்தைவிட்டு, தரித்திருந்தநுபவிக்கலான விந்த விபூதியிலெனக்கெதிருண்டோ வென்கிறுரென்று முந்தினபாவம். "இம்மண்ணின் மிசை - மாறுளதோ" என்கையாலே - "எதிருண்டு, இல்லை" என்று சங்கிக்கைக் கு விஷயம் பரமபதத்தி லுண்டானு லுண்டித்தனை யொழிய, இங்கில்லையென்கிரு ரென்றிரண்டாம்பாவம்.

மலக்குநாவுடையேற்கு - அலமாக்கும்படி பண்ணுகிற நாவீறுடையவெனக் கென்று சப்தார்த்தம்........................................................................



## பத்தாம்பாட்டு.

மண்மிசைப்பெரும்பாரநீங்கவோர்பாரதமாபெரும்போர்
பண்ணிமாயங்கள்செய்துசேனையைப்பாழ்படநூற்றிட்டுப்போய்
விண்மிசைத்தனதாமமேபுகமேவியசோதிதன்று
ணண்ணிநான்வணங்கப்பெற்றேனெனக்கார்பிறர்நாயகரே.

### ஆறுயிரப்படி,

(மண்மிசை) பூபாராவதரணார்த்தமாக சுதர்ஸநே பாஸ்கராச் சாதநாதிகளைப்பண்ணியருளி மஹாபாரதயுத்தத்தைப் பண்ணுவித்து சர்வஸேனையையும் நசிப்பித்து ப்ரதிகூலவிஜய ஜநிதநிரதிசய தேஜஃபரி வ்ருதனுய்க்கொண்டு ஸ்வகீய திவ்யபரம வ்யோமத்திலே யெழுந்தருளி னவெம்பெருமானுடைய சர்வதிவ்யாவதாரங்களையும் சர்வதிவ்யசேஷ் டிதங்களையும் சர்வதிவ்யகல்யாணகுணங்களையும் சர்வகாலமு மநுபவிக் கப்பெற்றவென்னில் மேற்பட்டாருண்டோவென்கிறுர்.........................

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், பூபாரநிர்ஹரணார்த்தமாக பாரதசமரத்தைப்பண்ணிப்போய் ஸ் வாஸாதாரணதாமத்தை ப்ரவேசித்த பரஞ்ஜ்யோதிஸ்ஸ்வரூபனான க்ருஷ்ணன்தி ருவடியைக்கிட்டி யநுபவிக்கப்பெற்றேன், எனக்கு வேறுநியாமகருண்டோவென் கிறுர்.

மண்-பூமியின். மிசை-மேலே. பெரு-விஸ்வம்பரையானவளுக்கும் பொறுக் கவரிதாம்படி பெரிதான. பாரம்-பாரம். நீங்க-நீங்கும்படியாக. ஓர் - அத்விதீயமா ன. பாரதம்-பாரதம். ஆ-ஆகிற. பெரு-பெரிய. போர்-யுத்தத்தை. பண்ணி-உண்டா க்கி. மாயங்கள் - சங்கல்பம்குலைந்து ஆயுதமெடுக்கை, பகலையிரவாக்குகை தொ டக்கமான ஆஸ்சர்யசேஷ்டிதங்களை. செய்து - செய்து. சேனையை-எல்லாச்சே னையும். பாழ்பட - பாழ்படும்படிக்கீடாக. நூற்றிட்டு - சூழ்ந்துமுடித்து. தன தனக்கஸாதாரணமான. தாமமே - வாஸஸ்த்தாநத்திலே. போய் - வந்தகாரியப சமைந்தவாறே யெழுந்தருளி. விண்மிசை-பரமாகாசத்திலே. மேவி-சென்று. பு க-ப்ரவேசித்த. சோதிதன்-ஜ்யோதிஸ்ஸ்வரூபனனக்ருஷ்ணனுடைய. தாள்-திருவ டிகளை. நண்ணி-கிட்டி. நான் வணங்க-சேஷவ்ருத்திபண்ண. பெற்றேன் - பெற்றே

ன். எனக்கு-இப்படி கைங்கர்யஸாம்ராஜ்யத்தைப்பெற்று*ஸ்வராட்டானவெனக்கு. பிறர்-வேறு. நாயகர்-நியாமகர். ஆர்-ஆர்.

நான் *அநந்யாதிபதியன்றேவென்று கருத்து..............................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

அபாயபஹுளமான சம்சாரத்திலேவந்தவதரித்து, நிரபாயமாகப்பரமபதத்திலேபோய்ப்புக்கபடியை யநுபவிக்கப்பெற்ற வெனக்கு வேறே சிலநிர்வாஹகர் வேண்டும்படி குறையுடையவனோநானென்கிறார்.

(மண்மிசைப்பெரும்பாரம்நீங்க) "விஶ்வம்பரா" (விஸ்வம்பரா) என்றும், "க்ஷமை, பொறை" என்றும் பேரையுடைத்தாய் - பரிக்கக்கடவதான பூமியாலும் பொறுக்கவொண்ணாதபடியிறே துர்வர்க்கம்திரண்டபடி. த்ரிபாத்விபூதியில் "யத்ர பூர்வே ஸாத்யாஸ் ஸந்தி தேவாঃ" (யத்ரபூர்வேஸாத்யாஸ்ஸந்திதேவாঃ) என்கிறபடியே - கனத்தாருண்டாயிருக்கச்செய்தேயும், பாரமில்லையிறே அஹங்காரஸ்பர்ஶமுடையாரில்லாமையாலே. தங்கள்பரத்தை யவன்றலையிலே வைத்திருக்குமவர்களிறே யவர்கள். (ஓர்பாரதமாபெரும்போர்பண்ணி) அத்விதீயமான மஹாபாரதமாகிற மஹாயுத்தத்தைப்பண்ணி. (மாயங்கள்செய்து) பகலையிரவாக்குவது, "ஆயுதமெடேன்" என்றாயுதமெடுப்பது, எதிரியுடையமர்மத்தைக்காட்டிக் கொடுப்பதானவை தொடக்கமானவற்றைச்செய்து. (சேனையைப்பாழ்படநூற்றிட்டு) சேனை வெறுந்தறையாம்படி மந்த்ரித்து. "யஸ்ய மந்த்ரீ ச கோப்தா ச" (யஸ்யமந்த்ரீசகோப்தாச) என்னக்கடவதிறே. "ஆயுதமெடுக்கவொட்டோம்" என்கையாலே, சூழ்ச்சியாலே யழித்தான். (போய்விண்மிசைத்தனதாமமே புகமேவியசோதிதன்றாள்) ப்ரதிகூலரை நிரசித்ததுக்கு மேலேயன்றோ! இவர்களிருந்த நிலத்திலிராதே பரமபதத்திலேபோய்ப்புகப்பெற்றபடி என்றுகக்கிறார். பொய்யாஸநமிடுவார், பரிபவிப்பாரான விந்நிலத்தைவிட்டு, பரிவரேயான பரமபதத்தேறப்போகப்பெறுவதே!. (வந்தகார்யம் சமைந்தவாறே யெழுந்தருளி, பரமாகாசத்திலே தனக்கஸாதாரணமான வாஸஸ்த்தாநத்திலே சென்று ப்ரவேசித்த ஜ்யோதிஸ் ஸ்வரூபனான க்ருஷ்ணனுடைய திருவடிகளை.) [க்ருத்வா பாராவதரணம்] [க்ருத்வாபாராவதரண] மித்யாதி ப்ருதிவ்யாঃ - பாராவதரணம்-க்ருத்வா-ப்ருதுலோசநঃ மோஹயித்வாஜகத்ஸர்வம். ப்ரதிகூலரை யடங்கலும் முட்க்கோலாலேவிழவிட்டு, அநுகூலரையடங்கலும் கண்ணாலேவிழவிட்டுப்போனான். [கதஸ்ஸ்வம் ஸ்த்தாநமுத்தமம்] [கதஸ்ஸ்வம்ஸ்த்தாநமுத்தமம்] விண்மிசைத்தனதாமமேபுக. [உத்தமம்] கம்ஸாதிகள், துர்யோதநாதிகளால்வரு மச்சமின்றியே, தனக்குப் பரிவரானவர்களிருக்கிற நிலத்திலேபோய்ப்புகப்பெற்றபடி. ஒருதீர்த்தத்திலன்று நாயிறுபோது ஆண்டானு மெம்பாரும் தங்களிலேசந்தித்

து, "'அஹங்காரமமகாரதூஷிதராயிருப்பார் பத்துக்கோடிபேர்நடுவே, அதி சுகுமாரமான திருமேனியைக்கொண்டு பத்துநாளெழுந்தருளி, நிரபாயமாகப்புக்கருளப்பெற்றபடிகண்டதே' என்று, ஒருவரையொருவர் தெண்டனிட்டுத் தழுவிக்கொள்ளாநிற்க, ஜீயர் கண்டேன்" என்றருளிச்செய்வர். ( நண்ணிநான் வணங்கப்பெற்றேன் ) காலயவநன் ஜராஸந்தன் தொடக்கமானாரைப்போலே யெதிரிட்டுக்கிட்டுகையன்றிக்கே, முறையாலேகிட்டப்பெற்றேன். (எனக்கார்பிறர்நாயகரே) அவனுடைய வவதாரந்தொடக்கமாக; நடுவுள்ள அபாயங்களைத்தப்பி, ஆஶ்ரிதரை வாழ்வித்து, தனக்கமர்ந்தநிலத்தேபோய்ப்புக்கபடி யளவுமநுபவிக்கப்பெற்றவெனக்கார்தான் நியாமகரென்கிறார். "பயிலுந்திருவுடையார்யவரேலும்" என்கிறத்தை மறந்தார்போலேயிருந்தது. அவர்களைப் பிறராகநினையாரிறே....................................................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (மண்மிசையித்யாதி) "போய்விண்மிசைத்தனதாமம்" இத்யாதிகளையும், "நண்ணிநான்" இத்யாதிகளையுங்கடாக்ஷித்தவதாரிகை (அபாயபஹுளேத்யாதி)

பாரமென்னாதே " பெரும்பாரம் " என்றதுக்குபாவம் ( விஶ்வம்பரையித்யாதி ) இத்தைப்பற்ற மும்மடங்குத்திரளுண்டாயிருக்கவும் நித்யவிபூதிபொறுத்திருக்கவில்லையோ, அத்தைப்பற்ற விதுக்குபாரமேதென்ன (த்ரிபாத்விபூதியித்யாதி) இத்தால் – இங்கு " பாரம் " என்கிறது – ஜநபாரமல்ல, அஹங்காரஸ்பர்ஶமே பாரமென்றபடி. நித்யசூரிகளுக் கஹங்காரஸ்பர்ஶமில்லையோவென்ன (தங்களித்யாதி) (த்ரிபாத்விபூதி) இத்யாதிவாக்யத்வயமும் – " மண்மிசை " என்று விசேஷித்ததுக்குபாவம். "ஓர்-மா-பாரதப்பெரும்போர்பண்ணி" என்றந்வயிப்பது.

"மாயங்கள்" என்கிற பஹுவசநத்துக்குபாவம் (பகலையித்யாதி) மந்த்ரித்ததுக்குப்ரமாணம் (யஸ்யமந்த்ரீசேத்யாதி) " [Grantha] " (யஸ்யமந்த்ரீசகோப்தாசஸுஹ்ருச்சைவஜநார்த்தநः ) இத்யாதிமஹாபாரதே ராஜஸூயே த்ருதராஷ்ட்ரः. மந்த்ரிக்கிறதென், திருவாழியாலே சம்ஹரிக்கவொண்ணாதோவென்ன (ஆயுதமெடுக்கவித்யாதி) சூழ்ச்சி-உபாயமும், விசாரமும், க்ருத்ரிமமும்.

"போய்" என்று விசேஷித்ததுக்குபாவம் (ப்ரதிகூலரையித்யாதி) அங்கே போனதுக்குகக்கைக்கிங்குப்பொல்லாங்கேதென்ன (பொய்யாஸநமித்யாதி) பூபாரத்தைப்போக்கி ஸ்வஸ்த்தாநத்திலேபோனதுக்கு ப்ரமாணம் ( க்ருத்வேத்யாதி ) " [Grantha] " ( க்ருத்வாபாராவதரணம்ப்ருதிவ்யாःப்ருதுலோசநः। மோஹயித்வாஜகத்ஸர்வம்கதஸ்ஸ்வம்ஸ்த்தாநமுத்தமம் ) இதிமௌஸலபர்வணி. அந்வயிக்கிறார் ( ப்ருதிவ்யாஇத்யாதி ) ஶ்லோகார்த்தம் ( ப்ரதிகூலரையித்யாதி ) அதில் * ஸ்வசப்தார்த்தம் (விண்மிசையித்யாதி) "உத்தமம்" என்றதுக்கர்த்தம் ( கம்ஸாதிகளித்யாதி ) ஸ்வஸ்த்தாநத்திலே போகப்பெற்ற அகப்பாயிருக்கு

மென்னுமதுக்கு சம்வாதம் (ஒருநீர்த்தத்தினன்றித்யாதி) நாயிறுபோது - அஸ்தமிக்கிறபோது. “ வணங்கி - நான் - நண்ண - பெற்றேன் ” என்றந்வயித்துபாவம் (காலயவநேத்யாதி)

“ எனக்கு - பிறர் - ஆர் - நாயகர் ” என்றந்வயமாய்-எனக்கு வேறொருவரார் நியாமகரென்று சப்தார்த்தம். “ எனக்கார்பிறர்நாயகர் ” என்கிறதெத்தாலேயென்ன (அவனுடையவித்யாதி) ததியர்தமக்கு நாயகராயிருக்க, இங்ஙனேசொல்லலாமோவென்ன, த்வேதா பரிஹரிக்கிருர் ( பயிலுமித்யாதி வாக்யத்வயத்தாலே ) அதாவது-இவ்வநுபவஜநிதப்ரீத்யதிசயத்தாலே “ யவரேலும் ” இத்யாதியைமறந்தாரென்றும்; அவர்களை யீஶ்வரஞேபாதியாக நினைத்திருக்குமதொழிய வ்யதிரிக்தராக நினையாராகையாலே, இங்கு, “ பிறர் ” என்கிறது ததியவ்யதிரிக்தரையென்றும் தாத்பர்யத்வயம்.

போய் - இங்குநின்றும்போய். விண்மிசை - பரமாகாசத்திலே. தனதாமமே - தனக்கஸாதாரணஸ்த்தாநத்திலே. புகமேவிய - சென்றுப்ரவேசித்த. சோதி தன்ருள் - ஜ்யோதிஸ்ஸ்வரூபனுன தன்திருவடிகளை இதிசப்தார்த்தঃ..............*

---

# பதிஞென்றும்பாட்டு.

நாயகன்முழுவேழுலகுக்குமாய்முழுவேழுலகுந்தன்
வாயகம்புகவைத்துமிழ்ந்தவையாயவையல்லனுமாங்
கேசவனடியிணைமிசைக்குருகூர்ச்சடகோபன்சொன்ன
தூயவாயிரத்திப்பத்தாற்பத்தராவர்துவளின்றியே.

## ஆருயிரப்படி.

(நாயகன்) கீழிரண்டுதிருவாய்மொழியாலும் சொன்ன வர்த்தத்தை நிகமிக்கிறது.

நிகிலபுவந நிகரஞேத்கிரணநியந்த்ருத்வ நிர்த்தோஷத்வாதிகளாலே யவகதசர்வேஶ்வரத்வத்தையுடையனுய், ப்ரணதபோக்யபூதாஸங்க்யேய திவ்யாவதார திவ்யசேஷ்டிதவிசிஷ்டனுன வெம்பெருமானைச்சொன்ன வாயிரத்துளித்திருவாய்மொழி வல்லவர்களை, இத்திருவாய்மொழிதானே நிகிலப்ரதிபந்தக நிரஸநபூர்வகமாகப்பரமபுருஷ சரணுரவிந்தவிஷயாநந்யப்ரயோஜந நித்யசித்த நிரவதிக பக்தியுக்த ராக்குமென்கிருர்.*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழியின் சம்பந்தத்தாலே பகவதநந்ய பக்தியுக்தராவரென்று பலத்தை யருளிச்செய்கிருர்.

முழுவேழுலகுக்கும் - சமஸ்த லோகங்களுக்கும். நாயகன் - நிர்வாஹகன். ஆய் - ஆய். முழுவேழுலகும் - நிர்வாஹ்யமானலோகத்தை. ப்ரளயங் கொள்ளாதபடி; தன் - தன். வாயகம் - வாய்க்குள்ளே. புக - புக. வைத்து - வைத்து. உமிழ்

ந்து - உமிழ்ந்து. அவற்றுக்கந்தராத்மாவாய்க்கொண்டு, அவையாய் - ததாத்மகனு ய். அவையல்லனும் - தத்கததோஷைரஸம்ஸ்ப்ருஷ்டன். ஆம் - ஆன. கேசவனடி யிணைமிசை - கேசிஹந்தாவாயுள்ள க்ருஷ்ணன் திருவடிகள்விஷயமாக. குருகூர்ச் சடகோபன் - ஆழ்வார். சொன்ன - அருளிச்செய்த. தூய - நிரவத்யமான. ஆயிர த்து - ஆயிரத்து. இப்பத்தால் - அவதாரசரிதப்ரகாசகமானவிப்பத்தால். துவளின் றிப்பத்தராவர் - க்ருஷ்ணன்விஷயத்தி லநந்யப்ரயோஜந பக்தியுக்தராவர்.

துவளின்றி - குற்றமின்றி.

இது - அறுசீராசிரியவிருத்தம்..........................................................*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில் - க்ருஷ்ண சேஷ்டிதங்களைப் பேசின விப்பத்துங் கற் றார், தம்மைப்போலே க்ருஷ்ணபக்தராவரென்கிறார்.

(நாயகனித்யாதி) சகல சேதநாசேதநங்களுக்கும் நியந்தாவாய், ப்ரளயாபத்தில் திருவயிற்றிலேவைத்து ரக்ஷித்து, உள்ளிருந்து நெருக் குப்படாமே வெளிநாடுகாணப் புறப்படவிட்டு, சர்வாவஸ்த்தையிலும் சகலபதார்த்தங்களும் "தான்" என்கிறசொல்லிலே யடங்கும்படி யவற் றை ப்ரகாரதயா சரீரமாகவுடையனாய், இப்படியிருக்கச்செய்தே தத்கத தோஷைரஸம்ஸ்ப்ருஷ்டனை. (கேசவனடியிணைமிசை) கேசிஹந்தாவா ன சர்வேஸ்வரன்றிருவடிகளிலே. "கீழிற்றிருவாய்மொழியிற் சொன்ன சர்வேஶ்வரத்வத்தையும், இத்திருவாய்மொழியிலே - கேசிஹந்தாவான க்ருஷ்ணனுடைய அவதாரத்தையு மநுபாஷித்துத் தலைக்கட்டுகிறது" எ ன்றுசொல்லுவர். "க்ருஷ்ணவஹிவொகா நாழ" (க்ருஷ்ணஏவஹிலோ காநாம்) என்கிறபடியே, க்ருஷ்ணவிஷயமே சொல்லுகிற தென்னுதல். (தூயவாயிரத்திப்பத்தால்பத்தராவர்துவளின்றியே) இப்பத்தையு மப்ய சித்தவர்க ளாழ்வாரைப்போலேயாவர். இப்பத்தையுடைத்தாகையாலே தூய்மை யுடைத்தான ஆயிரமென்னுதல்; அன்றிக்கே, ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு, க்ருஷ்ண வ்ருத்தாந்தத்தைச் சொல்லுகையாலே, தூய்மையையுடைத்தான இப்பத்தென்னுதல். ( துவளின்றியே-பத்தரா வர் ) துவளாவது - குற்றம். அதாவது - அவதாராந்தரங்களிற் போகா தே க்ருஷ்ணவ்ருத்தாந்தத்திலே கால்தாழ்வர்...........................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம். ( நாயகனித்யாதி ) "இப்பத்தால்பத்தராவர்" என்றத்தைக் கடா க்ஷித்தவதாரிகை ( க்ருஷ்ணசேஷ்டிதங்களையித்யாதி )

"முழுவேழுலகுக்கும் - நாயகன் - ஆய்" இத்யந்வயஃ. ஒன்று குறையாத வேழுலகுக்கும் நாயகனாயித்யர்த்தஃ. க்ருஷ்ணாவதாரத்தைச் சொல்லுகிற விடத்தி லே ஸர்வேஸ்வரத்வம் சொல்லுவானென்னென்ன ( கீழிற்றிருவாய்மொழியித்யா தி ) அதாவது-" நாயகன்முழுவேழுலகுக்குமாய் " என்றுதொடங்கி, " அவையல்

லனுமாய்" என்னுமளவும் - * நல்குரவிற்சொன்ன சர்வேஶ்வரத்வத்தையும், "கேசவன்" என்று - * குரவையாய்ச்சியரிற்சொன்ன க்ருஷ்ணவ்ருத்தாந்தத்தையுமநுவதித்துத் தலைக்கட்டுகிற தென்னுதல்; "க்ருஷ்ண ஏவ ஹி லோகாநாமுத்பத்திரபி சாப்யய:" (க்ருஷ்ணஏவஹிலோகாநாமுத்பத்திரபிசாப்யய:) என்று- க்ருஷ்ணனையே சகல ஜகத்ஸர்க்க ஸ்த்திதி சம்ஹாரகர்த்தாவாகச் சொல்லுகையாலே * குரவையாய்ச்சியரிற்சொன்ன க்ருஷ்ணவ்ருத்தாந்தத்தையே யநுபாஷித்துத் தலைக்கட்டுகிறதென்னுதலென்றபடி. க்ருஷ்ணவிஷயமே யென்றது - இப்பாட்டெல்லாம் க்ருஷ்ணவ்ருத்தாந்தத்தையே சொல்லுகிறதென்னுதலென்றபடி.

கூற்றமேதென்ன (அவதாராந்தரோத்யாதி)

"க்ருஷ்ண ஏவ ஹி லோகாநாமுத்பத்திரபி சாப்யய:। க்ருஷ்ணஸ்ய ஹி க்ருதே பூதமிதம் விஶ்வம் சராசரம்" (க்ருஷ்ணஏவஹிலோகாநாமுத்பத்திரபிசாப்யய:।க்ருஷ்ணஸ்யஹிக்ருதேபூதமிதம்விஶ்வம்சராசரம்) இதிராஜஸூயேபீஷ்ம:.*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(குரவையாய்ச்சியரோடு)

ராஸக்ரீடாதிக்ருத்யைர் விவிதமுரலிகாவாதநைர் மல்லபங்கைர் கோபீபந்தார்ஹபாவாத் வ்ரஜஜநமுகைஃ கம்ஸதைத்யாதிபங்கைஃ । ப்ராதுர்பாவைர் விஶேஷைர் அஸுரபுஜவநச்சேதமுக்யைஶ்சரித்ரைர் நாகஸ்தைஸ் ஸ்துத்யவ்ருத்தம் ஹரிரிதி கதயா ஶௌரிகாரோ ப்யவதத் ॥ (௬௫)

(ராஸக்ரீடாதிக்ருத்யைஃ) குரவையாய்ச்சியரோடு கோத்ததுமித்யாதி-கோபிமாரோடே குரவைகோத்ததும், கோவர்த்தநத்தையெடுத்ததும், காளியனைதமித்ததும் முதலான வ்யாபாரங்களாலும்; (விவிதமுரளிகாவாதனைஃ) கேயத்தீங்குழலூதிற்றும் - நாநாவிதமான காநத்தோடேகூடக் குழலையூதினவைசித்ர்யங்களாலும்; (மல்லபங்கைஃ) நிகரில் மல்லரைச்செற்றதும் - மிடுக்கரான மல்லரை மர்த்தித்த சாமர்த்யத்தாலும்; (கோபீபந்தார்ஹபாவாத்) நோவவாய்ச்சியுரலோடார்க்கவிரங்கிற்றும் - யசோதை யுரலோடேகட்டும்படியிருந்த பவ்யதையாலும்; (வ்ரஜஜநமுகை:) வேண்டித்தேவரித்யாதி - தேவர்கள் ப்ரார்த்திக்க, தேவகிக்குத் தநயனாய் வந்து பிறந்து, அந்தக்ஷணத்திலேதானே, அந்தகாரத்தோடேகூடின வர்த்தராத்ரியிலேயவள்புலம்பக் கோகுலத்திலேபோய்க் கம்ஸனறியாதபடி வளர்ந்த ப்ரகாரங்களாலும்; (கம்ஸதைத்யாதிபங்கைஃ) இகல்கொள் புள்ளைப்பிளந்ததுமித்யாதி- கம்ஸஸம்பந்தி பகாஸுர ப்ரப்ருதிகளை நிரஸித்தது முதலான சேஷ்டிதங்களாலும்; (ப்ராதுர்ப்பாவைர்விஶேஷை) மனப்பரிப்போடழுக்கு மானிடசாதியிற்றான்பிறந்து - ஆஶ்ரிதரக்ஷணார்த்தமாக அப்ராக்ருத ஸம்ஸ்த்தாநத்தோடேகூட ப்ராக்ருதமநுஷ்ய ஸஜாதீயனா யவதரித்தருளின ஆஶ்சர்யங்களாலும்; (அஸுரபுஜவநச்சேதமுக்யைஶ்சரித்ரைஃ) நீணிலத்தொடு வான்வியப்பவித்யாதி - மநுஷ்யர்களுக்கும் தேவர்களுக்கும் விஸ்மயாவஹமான பாணாஸுர புஜவநச்சேதந வ்யாபாரத்தாலும்; முக்யசப்தத்தாலே - மேலிரண்டுபாட்டில், "கலக்கவேழ்கடலேழ்மலையுலகேழும்,"

"மண்மிசைப்பெரும்பாரம்நீங்க" இத்யாதியாலே சொல்லப்படுகிற வைதிகபுத்ராநயந பாரதயுத்தகரணங்கள் ஸங்க்ருஹீதங்கள் ; ஏவம்பூதசரித்ரங்களாலே வண்டுவரைப்பெருமா னெல்லாருடைய மநஸ்ஸையு மாகர்ஷியாநிற்கிறுனென்று "குரவையாய்ச்சியர்" என்கிற தசகத்திலே காரிஸூநு வருளிச்செய்தாரென்கிருர்....(சுங)



# திருவாய்மொழிநூற்றந்தாதி.

குரவைமுதலாங்கண்ணன்கோலச்செயல்க
ளிரவுபகலென்னுமலென்றும் - பரவுமனம்
பெற்றேனென்றேகளித்துப்பேசும்பராங்குசன்றன்
சொற்றேனினெஞ்சேதுவள். (நுச)

(குரவைமுதலாம்) இதில் - க்ருஷ்ணனுடைய நிகிலசேஷ்டிதங்களையுமநுபவித்தருளிச்செய்தபடியை யநுவதித்தருளிச்செய்கிருர். அதெங்ஙனேயென்னில்; "மாசறுசோதி" "மானேய்நோக்கு," "பிறந்தவாறு" என்கிற திருவாய்மொழிகளிலே ; "சேணுயர்வானத்திருக்கும்," "நாராயணன்நாமங்களே - தொல்லருணல்வினையால்சொலக்கூடுங்கொல்," "உருக்கியுண்டிடுகின்றநின்றன்னைநாடும் வண்ணஞ்சொல்லாய்" என்று - ஆரஸ்த்தனென்றும், நாமீர்வரத்திருநாமஞ்சொல்லவற்றேயென்றும், தரித்துநின்று குணநுபவம்பண்ண வல்லேனும்படி பண்ணவேணுமென்றும் தாமாசைப்பட்ட வகைகளெல்லாம் ஸித்திக்கும்படி தான் க்ருஷ்ணனுய்வந்தவதரித்துச் செய்தருளின நிகில திவ்யசேஷ்டிதங்களையும், தத்தேதுவான திவ்யகுணங்களையு மநுபவவிஷயமாம்படி காட்டிக்கொடுக்க, அவற்றைக்கட்டடங்க தரித்துநின்று மண்டியநுபவித்து ப்ரீதராய்ச்செல்லுகிற * குரவையாய்ச்சியரிலர்த்தத்தை "குரவைமுதலாம்" இத்யாதியாலே யருளிச்செய்கிருனென்கை.

(குரவைமுதலாங்கண்ணன் கோலச்செயல்கள்) அதாவது - * குரவையாய்ச்சியரோடு கோத்ததும், * கேயத்தீங்குழலூதிற்றும், * நிகரில்மல்லரைச்செற்றதும், * கோவவாய்ச்சியுரலோடார்க்கவிரங்கிற்றும், * வேண்டித்தேவரிரக்கவந்துபிறந்ததும், * இகல்கொள்புள்ளைப்பிளந்ததும், * மனப்பரிப்போடழுக்குமானிடசாதியிற்முன்பிறந்து தனக்கு வேண்டுருக்கொண்டதும், * நீணிலத்தொடுவான்வியப்பநிறைபெரும்போர்கள்செய்து வாணனையாயிரந்தோள்துணித்ததும், * கலக்கவேழ்கடலேழ்மலை யுலகேழுங்கழியக்கடா யுலக்கத்தேர்கொடுசென்றமாயமும், * மண்மிசைப்பெரும்பாரம் நீங்க ஓர்பாரதமாபெரும்போர்பண்ணி மாயங்கள் செய்தது முதலாக வெல்லாவற்றையும் நினைக்கிறது. (குரவைமுதலாங்கண்ணன்கோலச்செயல்களென்று) குரவைமுதலாகக்காட்டினது - திருக்குரவையிலார் வார்த்தையநுபவித்து தரிக்கைக்காக. * வேண்டித்தேவரிரக்கவந்து பிறந்தவ்ருத்தாந்தத்தை முந்தற முன்னங்காட்டாதொழிந்தது - * பிறந்தவாற்றிலே ஆழங்காற்பட்டாறுமாசம் மோஹித்தாப்போலே மோஹிப்பனென்று. (கண்ணன்கோலச்செயல்கள்) ஸ்ரீவால்மீகி "காவ்யம்ராமாயணம்க்ருத்ஸ்நம்" (காவ்யம்ராமாயணம்க்ருத்ஸ்நம்) என்று-ரகுவரசரிதத்தையே முழுது மநுபவித்தாப்போலே, இவரும் க்ருஷ்ணனுடைய நிகிலதிவ்யசேஷ்டிதங்களை யநுபவித்தபடி. * தேவக்கோலப்பிரான்றன் செய்கையிறே. (இரவுபகலென்னுமல்) ராத்ரிபகலென்னுமல், காலநியதியின்றிக்கே. ( என்

றும்பரவுமனம்பெற்றே னென்றேகளித்துப்பேசும் ) சர்வகாலத்திலும் ஸ்துதிக்கும் படியான மநஸ்ஸைப்பெற்றேனென்று ஹர்ஷபாரவஶ்யத்தாலே கர்வித்துப்பேசும். அதாவது - " மாயவினைகளையேயலற்றி யிரவுநன்பகலுந்தவிர்கிலமென்னகுறைவெனக்கே" என்றும், "சேயத்தோடுகழிந்தபோதெனக்கெவ்வுலகம்நிகரோ" என்றும், " நுகரவைகல்வைகப்பெற்றேனெனக்கென்னினிநோவதுவே " என்றும், " மேவக்காலங்கள்கூடினேனெனக்கென்னினிவேண்டுவதே " என்றும், " ஈண்டுநானலற்றப்பெற்றேனெனக்கென்னவிகலுளதே" என்றும், " பகலிராப்பரவப்பெற்றே னெனக்கென்னமனப்பரிப்பே" என்றும், " நினைக்கும்நெஞ்சுடையே னெனக்கினியார்நிகர்நீணிலத்தே " என்றும், " என்னப்பன்றன்மாயங்களேகாணுநெஞ்சுடையேனெனக்கினியென்னகலக்கமுண்டே" என்றும், "மால்வண்ணனைமலக்கு நாவுடையேற்கு மாறுளதோவிம்மண்ணின்மிசையே" என்றும், " நண்ணிநான்வணங்கப்பெற்றேனெனக்கார்பிறர்நாயகரே " என்றும் பேசினவையென்கை. " உருகாமல்தரித்தும் நண்ணிவணங்கப்பலித்தவாறே " என்றிறே நாயனாருமருளிச்செய்தது. ( களித்துப்பேசும்பராங்குசன்றன் ) " வலக்கையாழியிடக்கைச்சங்க மிவையுடைமால்வண்ணனைமலக்குநாவுடையேன் " என்கையாலே - ஸர்வஸ்மாத்பரனை வசீகரிக்கு மங்குசமாயுள்ளவ ரென்கிறத்தைப் பற்றச்சொல்லுகிறது. " கவீஶம்சக்ரஹஸ்தேபசக்ரம் " (கவீஶம்சக்ரஹஸ்தேபசக்ரம்) என்றதிறே. திருநாவுடையபிரான் தாசர்குமாரராகையாலே, அடியறிந்து – பராங்குச னென்கிறார். ( பராங்குசன்றன் சொற்றேனில்நெஞ்சேதுவள் ) "வால்மீகேர்வதநாரவிந்தகளிதம் ராமாயணாக்யம்மது" (வால்மீகேர்வதநாரவிந்தகளிதம் ராமாயணாக்யம்மது ) என்றும், " ஶுகமுகாதம்ருதத்ரவஸம்யுதம்பிபதபாகவதம்ரஸம் " ( ஶுகமுகாதம்ருதத்ரவஸம்யுதம்பிபதபாகவதம்ரஸம் ) என்றும் சொல்லுமாபோலே, * அமுதமென்மொழியாளாகையாலும், " தேனேயின்னமுதே " என்று பேசப்படுமவன்விஷயமாகையாலும் தேன்போலே யினிதாயிறே யித்திருவாய்மொழிதானிருப்பது. மநஸ்ஸே, அல்பஸாரமானவற்றிலேபுக்கலமாவாதே; ஸாரக்ராஹியாய், ஸாரதமமானவிதிலே ஸக்தமாய்ப்போரு. " என்னெஞ்சென்னும் பொன்வண்டு " என்னக்கடவதிறே...........................................................................(ருச)

ஆறும்பத்தில் - நான்காந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக - திருவாய்மொழி - ருச.—பாட்டு - ருகக.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஆரம்பத்து.

## ஐந்தாந்திருவாய்மொழி.

### துவளில் - ப்ரவேஸங்கள்.

### ஆறுயிரப்படி.

(துவளில்) இப்படி யெம்பெருமான் திருவிண்ணகர்தொடக்க மாகவுள்ள திருநகரிகளிலே யெழுந்தருளியிருந்த விருப்பையும், அவ னுடைய திவ்யாவதாரங்களையும், திவ்யசேஷ்டிதங்களையும், சௌந்தர் யாதி சர்வகல்யாணகுணங்களையு மநுசந்தித்த ப்ரீதியையும், அவனோடு பாஹ்ய சம்ஸ்லேஷம்பெறாமையாலே வந்தநிரவதிக வ்யஸநத்தையு மந் யாபதேசத்தாலே யருளிச்செய்கிறார். ஒருபெண்பிள்ளை "திருத்தொலை வில்லிமங்கலத்தி லெம்பெருமானைக்காணவேணும்" என்றுசைப்பட்டுப் பெறாமையாலே யத்யந்தமவஸந்நையாய், அவனுடைய சௌந்தர்யாதி குணங்களையும் திவ்யசிஹ்நங்களையும்திவ்யசேஷ்டிதங்களையும்திருத்தொ லைவில்லி மங்கலத்தையும்சொல்லி யலற்றுகிறபடியைக்கண் டிவளுடை ய திருத்தாயாரும் பந்துக்களும் " இவளையிழக்கிறோம் " என்னும்பயத் தாலே " இவளுக்கவன்பக்கலுள்ள வபிநிவேசத்தை நிவர்த்திப்பிக்கவே ணும்" என்றிவளுடையதோழியையபேக்ஷிக்க, இவளுமவர்களைநோக்கி*

### பன்னீராயிரப்படி.

அஞ்சாந்திருவாய்மொழியில், கீழே - இப்படி க்ருஷ்ணசேஷ்டிதங்களிலே யவகாஹித்தத்யந்தம் ஹ்ருஷ்டரான விவ்வாழ்வாருடைய மாநஸாநுபவம் முதி ர்ந்து பாஹ்யஸம்ஸ்லேஷாபி நிவேஸத்தைப்பிறப்பிக்க, அபிநிவேஸாநுரூபாநுப வாலாபத்தாலே அவஸந்நராய்; பூர்வாநுபூதமான சர்வேஸ்வரனுடைய வஸாதா ரண சிஹ்நயோகத்தையும், விலக்ஷணநுபாவ்யத்வத்தையும், ரக்ஷணார்த்தப்ரவ்ருத் திகளையும், தர்ஸநீயவிக்ரஹயோகத்தையும், ஆபரணௌஜ்ஜ்வல்யாதிகளையும், ஸ்ரீ க்ரஹஸௌந்தர்யத்தையும், உதாரஸ்வபாவத்தையும், ஆதிக்யஸூசகமான அரவிந் தாக்ஷத்வத்தையும், விரோதி நிவர்த்தகத்வத்தையும், வ்யாமோஹாதிசயத்தையு மநுசந்தித்து; ஏவம்வித ஸ்வபாவனானவன்விஷயத்திலே அத்யந்தப்ரவணரான விவருடையநிலைவை, பூர்வாநுபவ ப்ரவர்த்தகரான பரிவர்தாங்களே அவசாத பரி

ஹாரார்த்தமாக நிஷேதிக்கத்தேட, இவருடைய ப்ராக்ருதியறிந்த ஸுஹ்ருத்பூதரானவர்கள், " அடியில் ப்ரவர்த்தகரான நீங்களே நிவர்த்தகராவது விவர்க்கஹ்ருத்யகராராவதேபலம் " என்றுசொல்லி, அதுக்கடியான விவருடைய பகவத்ப்ராவண்யாதிசய விகாரங்களையறிவித்தப்ரகாரத்தை; திருத்தொலைவில்லிமங்கலத்திலே தேவபிரானை யநுபவித்திடுபெட்டாளொரு நாயகியினுடைய வீடுபாட்டைக்கண்டு, அடியிற்கூடக்கொண்டுபோய்த் திருவடிதொழுவித்த தாய்மாரிவளீடுபாடு சமிக்கைக்காக விவள்நினைவை நிஷேதிக்கத்தேட, இவள் நெஞ்சறிந்த தோழியானவள், " அடியிலேயிவளைமூட்டினபோதே யாசையற்று மூட்டினிகோளன்றோ, இனியிவள்பக்கல் சங்கத்தைவிடுங்கோள் " என்றுசொல்லி யிவளுடைய ப்ராவண்யவிகாரப்ரகாரங்களை யறிவித்தபாசுரத்தாலே யருளிச்செய்கிறார்..........................*

ஈடு.

இத்திருவாய்மொழிக்குக்கீழும் மேலுமெல்லாம் - எம்பெருமானைக் கவிபாடினார்; இத்திருவாய்மொழியில்- தம்படிசொல்லுகிறார். சிம்ஹாவலோகநந்யாயத்தாலே * பொய்ந்நின்றஞானந்தொடங்கி யிவ்வளவும்வர தமக்குபகவத்விஷயத்திலுண்டான ப்ராவண்யாதிசயத்தை யந்யாபதேசத்தாலே பேசுகிறார். " இத்திருவாய்மொழி - ஆழ்வார் ப்ரக்ருதிசொல்லுகிறது " என்று நம்முதலிகளெல்லாரும் போரவிரும்பியிருப்பர்கள். பகவத்ப்ரசாதத்தாலே லப்தஜ்ஞாநராய் " யதோவாசோ நிவர்த்தந்தே " (யதோவாசோநிவர்த்தந்தே) என்கிறவிஷயத்தை மறுபாடுருவப்பேசின தாமேவேணுமாகாதே ! தம்படிபேசும்போதும்.

ஸ்ரீஜநகராஜன்றிருமகள் பிறந்தசமயத்திலே ஜ்யோதிர்வித்துக்களையழைத்து, " இவள் ஜீவிக்கும்படிகளென் " என்றுகேட்க, " இவள் ஜீவிக்கும்படிகளி லொருகுறையில்லை, சார்வபௌமனாயிருப்பானொருவனைக் கைப்பிடிக்கவுங்கடவள், இங்ஙனே யிருக்கச்செய்தேயும் வநவாஸரஸ மநுபவிக்கக்கடவள் " என்றார்கள்; அப்படியே யிப்பெண்பிள்ளை பிறந்தபோது இவள் திருத்தாயாருள்ளிட்டார் நிதாநஜ்ஞராயிருப்பாரையழைத்து, " இவள்ஜீவிக்கும்படிகளெங்ஙனே " என்றுகேட்க, " எல்லாம் நன்றாய்த் தலைக்கட்டக்கடவது, ஆனாலுமிவளுக்கோரபம்ருத்யுவுண்டு, அதுதப்பினாளாகில் சுகமேஜீவிக்கும். அதாவது-திருத்தொலைவில்லிமங்கலத்தில் கொடுபோகாதே யொழியப்பெறிலிவளைக்கிடைக்கும்" என்றார்கள். இவள் ஜீவியாதொழியிலும் திருத்தொலைவில்லிமங்கலத்தில்கொடுபோகாதொழியவல்ல குடியன்றே; " இவளங்கேபுக்கு முடியுமவமையும் " என்றிருப்பார் சிலரிறே. பிராட்டி வநவாஸரஸ மநுபவியாதவன்றிறே யிவள் திருத்தொலைவில்லிமங்கலத்தில் புகாதொழியவல்லளாவது. ஸ்ரீநளர் வார்த்தையைநினைப்பது. ( ஸ்ரீவாநரவீரர்கள், " மலையைக்கொண்டு கடலையணைசெய்கை சம்பாவிதமோ " என்ன; ஸ்ரீநளர், "பெருமாள் காடேறவெழுந்தருளுகையும், பிராட்டியை ரக்ஷஸ்ஸபஹரிக்கையும், பெருமாள் சோகிக்கையும் சம்பாவிதமோ; ஏதாகிலும் வருமவை

தப்பாதிறே" என்றார். இது ஸ்ரீராமாயணத்திலுண்டானவிடத்தே கண்டு கொள்வது.) தேஹாத்மாபிமாநிகளாயிருப்பார்க் கெத்தனையேனு மறிவு பிறந்தாலும் "ஸ்த்ரூலோஹம், க்ருஶோஹம்" (ஸ்த்தூலோஹம், க்ருஶோஹம்) என்கிறநிலை மாற்றப்போகாதாப்போலே, இவளையும் சர்வப்ரகாரத்தாலு முகந்தருளின நிலங்களிலேநின்றும் த்ருஷ்டத்தில்குறை சொல்லி மீட்கப்போகாது. க்ஷுத்ரவிஷய ப்ரவணராயிருப்பார் "அதர்மம்" என்றும், "பழி" என்றும், "மேல்நரகம்" என்றும் சொன்னால் மீளார்களிறே. இங்கு குணாதிகவிஷயமாகையாலே யொருகுறைசொல்லி மீட்கப்போகாதே. "குறைசொல்லுவோம்" என்று நினைக்கிலும் குணாதிக்யத்தைச்சொல்லு மத்தனையிறே. அதுபின்னை ப்ராவண்யத்துக்குடலா மத்தனையிறே. பழியுமுண்டாயிடுக, மதிப்புக்கேடும்வருக, ஆனாலு மதுகண்டு மீளமாட்டாத அத்யவசாயமிறே யிவளது. அங்ஙனேயாகிலு மிவர்களிவ்விஷயத்தினின்று மிவளை மீட்கப்பார்க்கிற தென்னென்னில்; "பருவம்நிரம்பாதிருக்கச்செய்தேயும் நம்மளவல்லாத வதிமாத்ரப்ராவண்யமிவளுக்கு விளையாநின்றது, அதிவளையிழக்கவரிற்செய்வதென்" என்னு மச்சமாயிற்றிவர்களுக்கோடுகிறது. இனித்தா னதிமாத்ரப்ராவண்யம் சாதகர்கையிலே கிடக்கக்காண்கையாலே "இவள்சாதகபுத்த்யாப்ரவர்த்திக்கிற்செய்வதென்" என்னும்பயத்தாலே மீட்கவும்பார்ப்பரோ. "இப்ப்ராவண்யம் ஸ்வரூபாதிரேகியாகிலிறே சாதநத்திலந்வயிப்பது" என்றிறேயிருப்பதிவள். "ஸ்வரூபபேதத்துக்கிசைந்தால் ஸ்வரூபாநுரூபமான கார்யங்களுக்கிசையவேண்டாவோ" என்றுகாணுமிவள்கருத்து. சேஷிக்குபாயபாவம் ஸ்வரூபாநுபந்தியானபின்பு, சேஷபூதனுக்கும் ப்ராவண்யம் ஸ்வரூபாநுபந்தியாகக்கடவதிறே.

இனித்தான் கீழ்த்திருவாய்மொழியோ டித்திருவாய்மொழி சங்கதமானபடியென்னென்னில்; க்ருஷ்ணகுணாநுபவத்தைப் பண்ணாநிற்கச்செய்தே, குடிக்கிறதண்ணீர்விக்கி அதுதானே பாரவஶ்யத்தை விளைப்பிக்குமாபோலே, அவ்வநுபவந்தானே ரஸாந்தரத்தேமூட்டத் தமக்குப்பிறந்த அவசாதத்தை யந்யாபதேசத்தாலே பேசுகிறார். அதாவது- * பொய்ந்நின்றஞானந்தொடங்கி யிவ்வளவும்வர - பகவத்விஷயத்தில் பூர்ணாநுபவமின்றிக்கே யிருக்கையாலே தமக்குப்பிறந்த ப்ராவண்யாதிசயத்தை யருளிச்செய்கிறார். அன்றிக்கே, கீழநுபவித்த அநுபவந்தான் மாநஸாநுபவமாத்ரமாய், பாஹ்யஸம்ஶ்லேஷாபேக்ஷைபிறந்து, அது பெருமையால்வந்த கலக்கத்தை யந்யாபதேசத்தாலே பேசுகிறாரென்றுமாம். இப்பெண்பிள்ளை ப்ரக்ருதியறியச்செய்தேயும் தாய்மார்விழுக்காடறியாமையாலே திருத்தொலைவில்லிமங்கலத்திலேகொடுபுக; அவள் "அரவிந்தலோசந" என்பது, "தேவபிரான்" என்பது - நீர்மையைச்சொல்லுவது, மேன்மையைச்சொல்லுவது, ஒப்பனைவாசியறிந்தமைதோற்

றச்சொல்லுவதாய் வாய்வெருவ, இவள்நிலையிருந்தபடியால் “இவளைக் கிடைக்கமாட்டாதாகாதே” என்று தாய்மார் வெறுத்துத் தோழிபா டேவந்து, “இவள்படி யுனக்குத்தெரியாமையில்லை, இவளைமீட்கலாம் விரகுசொல்லவேணும்” என்ன; தோழி, “நீங்களே இவளுக்கு ப்ராவண்யத்தையுண்டாக்கி யிப்போதாக விவளைமீட்க வாசைப்படுகிற வித்தால் ப்ரயோஜநமென், ஏற்கவே பரிஹரிக்கப்பெற்றதில்லை, இனியிவள் பக்கல் நசையறுங்கோள், இவளை நிஷேதிக்கப்பாராதே நீங்களும் சஹகரித்து இவளுஜ்ஜீவிக்கும்படி பண்ணப்பாருங்கோள்” என்கிறாள்.

தாய்மார்கேட்கத் தோழியிறேசொல்லுகிறாள் – பகவத்விஷயத்துக்கு “பழையார் - புதியார்” என்றில்லை, தேசிகர்சொல்ல ஆதரமுடையார் கேட்குமித்தனை. “𑌆𑌚𑌚𑌕𑍍𑌷𑍇𑌽𑌥 𑌸𑌦𑍍𑌭𑌾𑌵𑌂 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑌸𑍍𑌯 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃” (ஆசச்க்ஷேதஸத்பாவம்லக்ஷ்மணஸ்யமஹாத்மந:) என்று-இளையபெருமாள்படியை ஸ்ரீபரதாழ்வானுக்கு ஸ்ரீகுஹப்பெருமாளிறேசொல்லுகிறார். [𑌆𑌚𑌚𑌕𑍍𑌷𑍇] [ஆசசக்ஷே] வாகிந்த்ரியத்துக்கு நிலமல்லாததும் சொல்லலாமாகாதே. [𑌅𑌥] [அத] ஸ்ரீபரதாழ்வான் ஸ்வபாவமறிந்தபின்பு. [𑌸𑌦𑍍𑌭𑌾𑌵𑌂] [ஸத்பாவம்] “𑌬𑌾𑌲𑍍𑌯𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌭𑍃𑌤𑌿𑌸𑍁𑌸𑍍𑌨𑌿𑌗𑍍𑌧𑌃” [பால்யாத்ப்ரப்ருதிஸுஸ்நிக்த:] என்றும், “𑌪𑌰𑌵𑌾𑌨𑌸𑍍𑌮𑌿” [பரவாநஸ்மி] என்றும், சத்தையோடு வ்யாப்தமான ஸ்வபாவத்தைச் சொன்னான். [𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑌸𑍍𑌯 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃] [லக்ஷ்மணஸ்யமஹாத்மந:] கடலைக்கையாலேயிறைக்கத்தொடங்கினான். [𑌭𑌰𑌤𑌾𑌯𑌾𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑌾𑌯] [பரதாயாப்ரமேயாய] “இன்னாரின்னார்க்குபதேசிக்க” என்றில்லையாகாதே. [𑌗𑍁𑌹𑍋 𑌗𑌹𑌨𑌗𑍋𑌚𑌰𑌃] [குஹோகஹநகோசர:] காட்டில் மரங்களில் வாசியறியுமவர் இவர்கள் நிலையறியும்படி நிலவரானார். அன்றிக்கே, ராமவிரஹத்தாலே யொருதூற்றடியிலேகிடந்தவன், தேசிகனைப்பெற்றவாறே தலையெடுத்துப்புறப்பட்டானென்றுமாம்.

(“ப்ராப்யத்வரையினுடைய முறுகுதலுக்கடியான அதிமாத்ர ப்ராவண்யம், ஆஸ்ரயமழியும்படிவருதல், உபாயத்திலே முதலிடுதல்செய்யுமாகி லவத்யகரமாய்முடியும்” என்றுபார்த்து, “இத்தை உபாயாத்யவசாயாநுகுணமாக வமைத்து நடத்தவேணும்” என்றுகருதி; “சம்பந்தஜ்ஞாநத்தோடேசேர்ந்த வுபாயாத்யவசாயம், பார்த்தவிடத்து. முதலிலே ப்ராப்யத்வராசஹிதமாக குணதிகவிஷயத்திலே யவகாஹித்து அத்த்வரைதன்னை யிவ்வவஸ்த்தாபந்நையாக்கினபின்பு, உபாயாத்யவசாயத்தின்கிழித்தை யமைக்கப்போகாது; இனித்தான் ப்ராப்தவிஷய ப்ராவண்யம் ஸ்வரூபமாகையாலே அவத்யகரமன்று, ப்லாக்யமாமித்தனை” என்று தாமநுசந்தித்தருளினார்)..................................*

## ஜீயர் அரும்பதம்.

துவளின்மாமணிப்ரவேஸே, சங்க்ரஹமாக சங்கதியருளிச்செய்கிறார் (இத்திருவாய்மொழிக்கித்யாதிவாக்யத்வயத்தாலே) "சிந்தையாலும்" இத்யாதியையும், "முன்னம்நோற்ற" இத்யாதியையும்,"பின்னைகொல்" இத்யாதியையுங்கடாக்ஷித்து (தம்படிசொல்லுகிறாரென்றது) தம்படியேதென்ன (சிம்ஹாவலோகநேத்யாதி) பொய்ந்நின்றஞானந்தொடங்கி யென்றது- "கைதொழுதவந்நாள்தொடங்கி" என்றத்தைப்பற்ற. தூரப்போகிறஸிம்ஹம், முன்புபோனத்தையெல்லாம் பார்த்துக்கொண்டப்பால் போமாபோலே, கீழ்த்திருவாய்மொழிகளிலுள்ள ப்ராவண்யத்தையிங்கே பேசுகையிறே - சிம்ஹாவலோகநந்யாயமாவது. "தம்படிசொல்லுகிறார்" என்றதுக்கு சம்வாதம் (இத்திருவாய்மொழியித்யாதி) தம்படிகளைத்தாமேசொன்னு லாத்மஸ்லாகையாகாதோவென்ன (பகவத்ப்ரசாதேத்யாதி) அதாவது- "வஞ்ச..." (பங்காஸநமாகாஸே) இத்யாதிப்படியே ஆப்த்யர்த்தமாகச்சொல்லுகையாலே விரோதமில்லையென்றபடி.

"பிரானிருந்தமைகாட்டினீர்" என்று - "திருத்தொலைவில்லிமங்கலத்திலே கொண்டு போனுலிவளுக்கநர்த்தம்வரும்" என்றறிந்திருக்கச்செய்தேயும் நீங்கள் காட்டிக்கொடுத்திகோளென்கிறாளிறே தாய்மாரைப்பார்த்துத் தோழியானவள்; "அங்கேபோனு லிவளுக்கநர்த்தம்வரும்" என்று தாய்மாரொத்தாலேயறிந்தார்களென்ன; அறிந்தமையை சநிதர்ஸநமாகவருளிச்செய்கிறார் (ஸ்ரீஜநகராஜனித்யாதி) இவ்விடத்திலே, "..." (அதசாபிமஹாப்ராஜ்ஞப்ராஹ்மணாநாம்மயாஸ்ருதம் । புராபித்ருக்ருஹேஸத்யம்வஸ்தவ்யம்கிலமேவநே । லக்ஷணிப்யோத்விஜாதிப்யஸ்ஸ்ருத்வாஹம்வசநம்க்ருஹே । வநவாஸக்ருதோத்ஸாஹாநித்யமேவமஹாபல ) இத்யயோத்யாகாண்டோக்த ஸீதாவாக்யமநுஸந்தேயம். இப்படி யறிந்திருக்கச்செய்தே கொண்டு போவானென்னென்ன (இவள்ஜீவியாதொழியிலுமித்யாதி) அக்குடியிலுள்ளார்படியேதென்ன (இவளங்கேபுக்கித்யாதி) குடிஸ்வபாவமன்றிக்கே, தைவகல்பிதமாகையாலும் தவிரவொண்ணுதென்னுமத்தை ஸத்ருஷ்டாந்தமாக வருளிச்செய்கிறார் (பிராட்டியித்யாதி) "..." (கல்பிதமநதிக்ரமணீயம்) என்றதுக்குஸம்வாதம் (ஸ்ரீநளரித்யாதி) "இதுக்கு-பெரியஜீயர்காலந்தொடங்கி சம்ப்ரதாயமில்லை, ஆனாலும் ராமாநுஜம்பிள்ளை யருளிச்செய்வதோரர்த்தமுண்டு" என்றருளிச்செய்வர். அதாவது-சமுத்ரராஜன் தோன்றினவளவிலே, "விஸ்வகர்மாவின்மகனானநளன் சேதுபந்தநத்துக்கென்று கல்பிதனாயிருக்கிறான், அவனைக்கொண்டென்பக்கலிலே சேதுபந்தநம்பண்ணிக்கொள்ளும்" என்றுசொல்லிப்போனவளவிலே, பெருமாள்திருவடிகளிலே நளன்வந்துசேவித்து, "சமுத்ரராஜோக்திஸத்யமே, நான்சேதுபந்தநம்பண்ணவல்லேன்" என்றுசொன்னவார்த்தையை நினைப்பதென்றபடி. அதாவது - "..."

ஹொடியி:” (ஏவமுக்தஸ்ஸமுத்ரேணப்ரத்யுத்தாயரளஸ்ததா। அப்ரவீத்வா நர ஶ்ரேஷ்ட்டோவாக்யம்ராமம்மஹாபல:॥ அஹம்ஸேதும்கரிஷ்யாமி விஸ்தீர்ணம்வ ருணாலயே। பிதஸ்ஸாமர்த்யமாஸாத்யதத்த்வமாஹமஹோததி:) என்றவார்த்தை.

அங்கேகொண்டுபுக்காலும், அவ்விஷயத்துக் கேதேனுமொருகுறைசொல்லி மீட்கவொண்ணாதோவென்ன (தேஹாத்மேத்யாதி, அத்யவஸாயமிறே யிவளதென் னுமளவும்) அதுக்கடியேதென்ன (க்ஷுத்ரவிஷயேத்யாதி) (மீளார்களிறே) க்ஷுத்ரவிஷயங்களினின்று மிதிசேஷ:. த்ருஷ்டத்திற்குறையாவது - ஐஸ்வர்யத்திற்கு றை. த்ருஷ்டத்திற்குறைசொல்லி மீட்கப்போகாவிட்டாலும், விஷயத்திற்குறை சொல்லி மீட்கவொண்ணாதோவென்ன (இங்குகுணதிகேத்யாதி) குணதிகவிஷய மாகிலும் “கடியன்கொடியன்” என்றாப்போலே சிலகுறைகளைச்சொன்னாலோவெ ன்ன (குறைசொல்லுவோமென்றித்யாதி) “அவனென்றேகிடக்கும்” என்றத்தை ப்பற்ற (அதுபின்னையித்யாதி) ப்ராவண்யத்தால் மீட்கப்போகாதமாத்ரமன்றிக்கே, அத்யவஸாயாதிசயத்தாலும் மீட்கப்போகாதென்கிறார் (பழியுமுண்டாயிடுகவித் யாதி)

அங்ஙனேயாகிலுமென்றது-குடிதானே அங்கேகொண்டுபோய் மூட்டுகை யாலும் தைவவசத்தாலு மிவளுடையப்ராவண்யத்தாலு மத்யவஸாயத்தாலு மிப் படி யபரிஹரணீயமாயிருக்கச்செய்தேயுமென்றபடி. ஸ்வாபதேசத்திலே மீட்கப் பார்க்கிறதுக்கு ஹேத்வந்தரம் (இனித்தானித்யாதி) “அதிமாத்ரப்ராவண்யம்ஸ்வ ரூபவிருத்தமாகிற்செய்வதென்” என்கிறபயம் மகளுக்கு மொவ்வாதோவென்ன (இப்ப்ராவண்யமித்யாதி) ஸ்வரூபாதிரேகியென்றது - ததேகரக்ஷ்யத்வரூபஸ்வரூபா திரிக்தமாகிலிறேயென்றபடி. “ஸ்வரூபாதிரேகியன்று” என்றதுக்குக்கருத்தேதெ ன்ன (ஸ்வரூபபேதத்துக்கித்யாதி) ஸ்வரூபபேதத்துக்கென்றது - “அவன்சேஷி, நாம்சேஷபூதர்” என்கிறஸ்வரூபபேதத்துக்கென்றபடி. கார்யங்களுக்கென்றது - ப் ராவண்ய தத்கார்யகைங்கர்யங்களுக்கென்றபடி. இவளுக்கிப்படி கருத்தானாலும், வஸ்துகத்யாஸாதநத்தி லந்வயியாதோவென்ன (சேஷிக்கித்யாதி)

கீழ் - எல்லாத்திருவாய்மொழிகளோடும் சங்கதியருளிச்செய்து, கீழ்த்திரு வாய்மொழியோ டித்திருவாய்மொழிக்கு சங்கதியேதென்று சங்கித்து, அத்தையி ரண்டுவகையாக வருளிச்செய்கிறார் (இனித்தானித்யாதி) இந்தஸங்கதித்வயமும்- அடியிலே யநுசந்தேயம். முந்தினசங்கதி-பட்டர்நிர்வாஹம்; இரண்டாவது-பூர்வர் கள்நிர்வாஹம். ரஸாந்தரத்தேயென்றது - மோஹத்திலேயென்றபடி. அர்ச்சாவதா ரகுணாநுபவத்திலேயென்னுதல்.

“இவளங்கேபுக்கு முடியவமையுமென்றிருப்பார்சிலரிறே” என்கிறவாக்ய த்தோடேயாதல், “இவளைக்கிடைக்குமென்றார்கள்” என்கிறவாக்யத்தோடேயாத ல் (இப்பெண்பிள்ளை) இத்யாதிவாக்யத்துக்குசங்கதி. ஜ்யோதிர்வித்துக்கள் சொன் னபின்பிவர்கள் செய்ததென்னென்ன (இப்பெண்பிள்ளையித்யாதி) “அரவிந்தலோ சந,” “தேவபிரான்” என்றத்தைப்பற்ற (நீர்மை, மேன்மையென்றது) ஒப்பனை வாசியென்றது - “இழைகொள்சோதி” என்றத்தைப்பற்ற. வாய்வெருவவென்ற து - “நாடொறும்வாய்வெரீஇ” என்றத்தைப்பற்ற. நீங்களே யிவளுக்கு ப்ராவண் யத்தையுண்டாக்கியென்றது - “பிரானிருந்தமைகாட்டினீர்” என்றத்தைப்பற்ற. ‘இனி - உமக்காசையில்லை” என்றத்தைப்பற்ற (ஏற்கவேபரிஹரிக்கப்பெற்றதில்லை யென்றதும், நசையறுங்கோளென்றதும்)

மேலிதிலே ஸ்வரூபாநுரூபமானவர்த்தம் சிக்ஷிப்பதாக வதிஷ்ட்டிகை (தா மாரித்யாதி) வயோதிகரான தாய்மார்க்கு பாலையானதோழிபக்கலிலே பகவத்வி

ஷயங்கேட்கலாமோவென்ன (பகவத்விஷயத்துக்கித்யாதி) இவ்வர்த்தத்துக்கநுஷ்ட்டாநங்காட்டுகிருர் (ஆசசக்ஷ இத்யாதி; “ [illegible] ” (ஆசசக்ஷேதஸத்பாவம்லக்ஷ்மணஸ்யமஹாத்மநஃ। பரதாயாப்ரமேயாயகுஹோகஹநகோசரஃ) இத்யயோத்யாகாண்டே. ஸ்லோகத்துக்கர்த்தம் (வாகிந்த்ரியேத்யாதி) “ [illegible] ” (மஹாத்மநஃ) என்கையாலே-நிலமல்லாமைதோற்றுகிறது. ஆங்கீஷதர்த்தத்திலேயாய் (சொல்லலாமாகாதேயென்றது) ஈஷத்சொன்ஞனென்றபடி. “ [illegible] ” (ஸத்பாவம்) ஸத்தயாவ்யாப்தோ பாவஸ்ஸத்பாவஃ. பாவசப்தம் - ஸ்வபாவவாசி. ஸத்தையோடு வ்யாப்தமான ஸ்வபாவமாவது - பெருமாள்பக்கல் ப்ரேமமும் பாரதந்த்ர்யமும். “ [illegible] ” (பால்யாத்ப்ரப்ருதிஸுஸ்நிக்தோ லக்ஷ்மணோலக்ஷ்மிவர்த்தநஃ) இத்யாதி. “ [illegible] ” (பரவாநஸ்மி காகுத்ஸ்த்தத்வயிவர்ஷஸதம்ஸ்த்திதே) இத்யாதி, ஆரண்யகாண்டே...............*

# ஐந்தாந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

துவளின்மாமணிமாடமோங்குதொலைவில்லிமங்கலந்தொழு
மிவளைநீரினியன்னைமீருமக்காசையில்லைவிடுமினோ
தவளவொண்சங்குசக்கரமென்றுந்தாமரைத்தடங்கணென்றுங்
குவளையொண்மலர்க்கண்கணீர்மல்கநின்றுநின்றுகுமிறுமே.

### ஆருயிரப்படி.

நிரவத்ய நிரதிசய விவிதமணிவரநிகரவிரசித சௌதோபேதமான திருத்தொலைவில்லி மங்கலத்தைத் தொழுகையே ஸ்வபார்வமாயிருக்கிறவிவள், அவனுடைய, அதிநிர்மலமாயதிரமணீயமாயிருந்த திருச்சங்கு திருவாழியாகிற திவ்யசிஹ்நங்களையும், புண்டரீகலோசநங்களையும்சொல்லியலற்றி, அத்தாமரைகளின்நிழலிலே வளரக்கடவ குவளைபோலேயிருந்த வழகியகண்கள் நீர்மல்க நின்றுநின்றுருமிரு நிற்கும்; இவளை யாசைப்படவேண்டாவென்கிருள்......................................*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், அரவிந்தலோசந னெழுந்தருளி யிருக்கிற திருத்தொலைவில்லிமங்கலத்தை யநுபவித்து, அவனுடைய அஸாதாரணசிஹ்நங்களிலே யகப்பட்டவிவளை யினி யாசைப்படவேண்டுவதில்லை, விடுங்கோளென்று தாய்மாரைக்குறித்துத் தோழிசொல்லுகிருள்.

துவளில் - நிர்த்தோஷங்களாய். மா-மஹார்க்கங்களான. மணி-மாணிக்கங்களாலே சமைந்த. மாடம்-மாடங்களானவை. ஓங்கு-உயர்ந்திருக்கிற. தொலைவில்லிமங்கலம்-திருத்தொலைவில்லிமங்கலத்தை. தொழும்-தொழாநிற்கிற. இவளை-இவளை. நீர் - அடியிலே கொடுபோய்க்காட்டின நீங்கள். இனி - இவளதிமாத்ர ப்ரவணையானபின்பு. அன்னைமீர்-"பெற்றவர்களான நமக்கு நியமிக்கலாம்" என்றிருக்கிற. உமக்கு-உங்களுக்கு. ஆசை-நியமநத்திலாசைப்படுகை. இல்லை - இல்லை. விடுமின்- "விதேயை" என்றிருக்கிறத்தை விடுங்கோள். அதுக்கடியென்னென்னில், தவளம்-வெளுத்தநிறத்தையுடைத்தாய். ஒண்-தர்ஶநீயமான. சங்கு-திருச்சங்கு. சக்கரம்-திருவாழி. என்றும்-என்றும். தாமரை-தாமரைபோலேயாய். தடம்-அத்யந்த விசாலமான. கண்-திருக்கண்கள். என்றும்-என்றும். அர்த்தோக்தியளவிலே, குவளை- நெய்தலினுடைய. ஒண் - அழகிய. மலர்-பூப்போலேயிருக்கிற. கண்கள் - கண்களானவை. நீர்-நீர். மல்க-விஞ்சும்படி. தளர்த்தியாலே, நின்றுநின்று-ப்ரதிக்ஷணமாத்மதாரணம்பண்ணி நின்று நின்று. குமிறும்-நெஞ்சில்நினைவை வாய்விட்டுச்சொல்லமாட்டாதவார்த்தியாலே யுள்ளே குமிறாநிற்கும்.

"உகும், இறும்" என்று பதவ்யாஸமாய், "த்ரவத்ரவ்யமாய், தளர்ந்துவிழாநிற்கும்" என்றும் சொல்லுவர். தவளவொண் சங்குசக்கரமென்று-வெளுப்பும், ஒண்மையும் ; சங்குக்கும், சக்கரத்துக்கு மடையாகவுமாம். குவளை-நெய்தல்....*

## ஈடு - முதற்பாட்டு.

இவள் ப்ரக்ருதியறியாதே திருத்தொலைவில்லிமங்கலத்தைக் காட்டினபின்பு உங்கள் ஹிதவசநத்துக் கிவள் மீளுமோவென்கிறாள்.

(துவளித்யாதி) "உனக்கிப்போதுதவாதபடி தூரஸ்த்தம்" என்னுதல், "பூதகாலத்திலவதாரங்கள்" என்னுதல், உகந்தருளின நிலங்களிலே உள்ளுநிற்கிறவனளவிலே ப்ரவணையாதல் செய்தாளாய் மீட்க நினைக்கிறீகோளோ. அசலிட்டுத் திருத்தொலைவில்லிமங்கலத்தை விரும்புகிறவிவளை யெங்ஙனேமீட்கும்படி. சரமாவதியிலே நிற்கிற விவளை ப்ரதமாவதியிலே நிற்பார் மீட்கவோ. துவளென்பது - குற்றம். அதின்றிக்கேயிருக்கை. அவ்வூர்ச்சரக்கிலே குற்றமுண்டாகிலன்றோ இவளைமீட்கலாவது. குற்றமுண்டாய்க் கழிந்ததல்ல. ஜீவபரர்களிருவர்க்கு மபஹதபாப்மத்வாதிக ளுண்டா யிருக்கச்செய்தே ஜீவாத்மாவுக்கு ஹேயமுண்டாய் பகவதநுக்ரஹத்தாலே கழியும், பரமாத்மாஹேய ஸம்ஸர்க்கா நர்ஹனாயேயிருக்கும் ; அப்படியேயாயிற்றவ்வூரில் மாடங்களில் ரத்நங்களும். (மாமணி) ஒளியேயல்ல, பெருவிலையனுமாயிருக்கும். (ஓங்கு) அவ்வூரில் மாடங்களின்நிழலிடு திருநகரியளவும் வந்துகாணுமிருப்பது. "இடமணிந்து" என்றுபோலேகாணும் நாயகன் பிரிந்தது. மாளிகையின் நிழற்கீழேயிட்டு வைத்துக்காணும் பிரிந்தது. அவன் பிரிந்தபோது தொடங்கி அவ்வூரையு மவ்வூரில் மாடங்களையு மவற்றில் மாணிக்கங்களையும் பார்த்து, வைத்தகண் வாங்கமாட்டாதே யிருந்தாள்போலேகாணும். (தொலைவில்லிமங்கலம்) துறுப்புக்கூடாக அவ்வூரையன்றோ இவளுகந்தது. (தொழுமிவளை) "கறுத்திருக்கும், வெளுத்திருக்கும்" என்னுமாபோ

லே, தொழுகை நிரூபகமாயிருக்கை. "ப்ராஞ்ஜலிம்ப்ரஹ்வமாஸீநம்" (ப்ராஞ்ஜலிம்ப்ரஹ்வமாஸீநம்) என்னுமாபோலே, "கணபுரங்கைதொழும்பிள்ளை" என்னுமாபோலே. (இவளை) இவளை மீட்கப்பார்ப்பதே, இவள்படியை புத்திபண்ணியன்றோ மீட்பது, (தொழுமிவளை) இவள்படிகைமேலே காணநிற்கச்செய்தே நீங்கள் மீட்கத்தேடுகிறபடியெங்ஙனே. (இவளைநீர்) பழிசொல்லப் பணைக்கிறவளிவள், பழி பரிஹரிக்கப்பார்க்கிறிகோள் நீங்கள். (இனி) தொழுகை தேஹயாத்ரா யாதற்கு முன்னேயன்றோ மீட்கப்பார்ப்பது. (அன்னைமீர்) பகவத்விஷயத்திலே யவகாஹிக்க என்றொன்றில்லையோ, நியந்த்ரு நியாம்யபாவமேயோ வேண்டுவது. பெற்றவர்களென்னு, அசக்யங்களிலே யிழியக்கடவதோ. (உமக்காசையில்லை) ப்ராப்தயெளவனைகளானுர்பக்கல் பெற்றவர்களுக்கு ப்ராப்தியுண்டோ. புக்கவிடத்தே ப்ரவணையாகாநிற்க, பெற்ற ப்ராப்திகொண்டுமீட்கவோ.

(விடுமினோ) இவ்வளவில் நீங்கள் கைவாங்கவமையும்.

பெற்றதாய்மார் "விடுமின்" என்னுங்காட்டில்விடார்களிறே, பின்னையும் நிர்ப்பந்திக்க ; வேண்டா, இவளுக்கோடுகிற ரசத்தைக்கண்டுகொடுநிற்கப் பாருங்கோள் - இவளுடைய வநுபவத்துக்குத் தண்ணீர்த்துரும்பாகாதே இத்தைக்கண்டு கொடுநிற்கவமையுமென்கிறாள். எங்களை "ஆசைப்படவேண்டா, விடுங்கோள்" என்றதென்னென்னில் ; இவள் பேச்சிலும் நினைவிலும் நீங்களாதல் நானாதலுண்டோ ; (உங்களையாதல் என்னையாதல், சொல்லுதல் நினைத்தல் செய்கிறாளோ ;) "த்யக்த்வா புத்ராம்ஸ்ச தாராம்ஸ்ச" (த்யக்த்வாபுத்ராம்ஸ்சதாராம்ப்ரச) என்னும் நிலையன்றோ விவளது (தவளவொண்சங்கு) ஸ்யாமமான திருமேனிக்குப் பரபாகமான வெண்மையையுடைத்தாய், "உண்பதுசொல்லிலுலகளந்தான்வாயமுதம்" என்கிற வழகையுடைத்தான சங்கு. (சக்கரம்)அங்ஙனுமொருவிசேஷணமிட்டுச் சொல்லவொண்ணாத வழகையுடைய சக்கரம். (என்றும்) "இவற்றைக்காணவேணும்" என்னுதல், "இவற்றோடேவரவேணும்" என்னுதல் சொல்லமாட்டுகிறிலள் பலஹாநியாலே. (தாமரைத்தடங்கணென்றும்) அந்தவாழ்வார்க ளளவும் வந்தலையெறிகிற திருக்கண்கள். தாமரையை யொருவகைக்கொப்பாகச்சொல்லலாய், போக்தாக்களளவன்றிக்கே யிருக்கிற திருக்கண்கள். (என்றும்-என்றும்) ஒருமலையெடுத்தாப்போலே, சொல்லுக்குச்சொல்லுத் தளர்ந்து நடுநடுவே விச்சேதித்தாயிற்றுச் சொல்லுவது. திவ்யாயுதங்களையும் கண்ணழகையுங் காட்டியாகாதே யிவளைத்தோற்பித்தது. (குவலையித்யாதி) இக்கண்களைக்கண்டால் * தாமரைத்தடங்கணன்றோ நீர்மல்கவடுப்பது. கண்ணும் கண்ணநீருமா யிவளிருக்கிற விருப்பைக் கண்டுகொண்டிருக்கவன்றோ உங்களுக்கடுப்பது. [ஆஹ்லாதஸீதநேத்ராம்பு] [ஆஹ்லாதஸீதநேத்ராம்புः] இத்யாதி ஸதாதர்ஸநத்துக்கொருதேசந் தேடிப்போகவே

ண்டாகாணும். குவளைப்பூப்போலே யழகியகண்கள் நீர்மல்க. அவள் தன்னுடைய ஸ்த்ரீத்வத்தைக் காற்கடைக்கொள்ள, நீங்களெங்ஙனே மீட்கப்பார்க்கும்படி. கண்ணநீர்பாய்கையாவது - ஸ்த்ரீத்வமழிகையிறே. (நின்றுநின்றுகுமிறுமே) பேச்சுப்போய்க்கண்ணநீராய், கண்ணநீர்போய்த் தடுமாறுகிற அவஸ்த்தையிலே மீட்கப்போமோ. ராஜகோஷ்டியிலே "உரும், இறும்" என்று சிலர் பொருள் சொல்ல, விக்ரமசிங்கனென்பானொருவன், "அங்ஙனல்ல, கன்றைக்கடக்கக் கட்டிவைத்தால் முலைக்கண் கடுத்துப் பசுவலமந்துபடுமாபோலே, உள்ளோடுகிறக்லேஶம்வாய்விடமாட்டாதே நோவுபடுகிற இவளுக்கிதுவார்த்தையோ" என்றான். பெருவெள்ளத்தில் சுழிக்குமாபோலே, அகவாயிலுள்ளது வெளியிடமாட்டாள்; உள்ளேநின்று சுழிக்கிறபடி. தொலைவில்லிமங்கலந்தொழுமென்கையாலே - காயிகவ்யாபாரம் சொல்லிற்று, தவளவொண்சங்குசக்கரமென்றும் தாமரைத்தடங்கணென்றும் என்று சொல்லுகையாலே-வாசிகவ்யாபாரம் சொல்லிற்று, குமிறு மென்கையாலே - மாநஸவ்யாபாரம் சொல்லிற்று.......................................................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு. (துவளிலித்யாதி) "உமக்காசையில்லைவிடுமினோ" என்றதிலே நோக்காக வவதாரிகை (இவள்ப்ரக்ருதியித்யாதி)

"தொலைவில்லிமங்கலம்தொழுமிவளை" என்றுவைத்து,"உமக்காசையில்லை" என்ற தோழியுடைய ஹார்த்தபாவம் (உனக்கிப்போதித்யாதிவாக்யத்வயம்) அதாவது-பரத்வத்திலே ப்ரவணையானாளாகில் "உனக்கிப்போதுதவாதபடிதூரஸ்த்தம்" என்று மீட்கலாம், அவதாரத்திலே ப்ரவணையானாளாகில் "பூதகாலத்திலேயுள்ளதொன்று" என்று மீட்கலாம், அங்குநிற்கிற வெம்பெருமானிடத்திலே ப்ரவணையானாளாகில் "ப்ரத்யக்ஷவிஷயம்பரிச்சிந்நம்" என்றுமீட்கலாம்; இவற்றையெல்லாம் பஹிர்ந்தளமாக்கித் திருத்தொலைவில்லிமங்கலத்திலே ப்ரவணையானவிவளை மீட்கவிரகுண்டோவென்றபடி. அசலிட்டு - தேவபிரானையும் புறம்பாக்கி யென்னுதல்; அவனுக்கசலாகவிட்டு - ததியமென்றென்னுதல். "தொலைவில்லிமங்கலந்தொழுமிவளை - நீர்" என்றுகூட்டி ஹார்த்தபாவம் (சரமாவதியித்யாதி) "குற்றமில்" என்கிறவளுடைய ஹார்த்தபாவம் (அவ்வூரித்யாதி) "இல்" என்று-அத்யந்தாபாவத்தைச்சொல்லுகிறதென்கிறார் (குற்றமுண்டாயித்யாதி) உக்தத்துக்கு த்ருஷ்டாந்தம் (ஜீவபரர்களித்யாதி) "துவளில்" என்கையாலே - ஒளியுண்டென்று சித்தம். ஒக்கத்தின் சரமாவதி (அவ்வூரிலித்யாதி) இத்தால் பலித்தபாவம் (இடமணித்தென்றித்யாதி) விவரணம் (மாளிகையித்யாதி) கிழெல்லாவற்றையுங் கடாக்ஷித்து, "தொழும்" என்றவர்த்தமாநத்துக்குபாவம் (அவன்பிரிந்தவித்யாதி) "தொலைவில்லிமங்கலந்தொழுமிவளை-ஆசையில்லை" என்றதுக்கு ஹார்த்தபாவம் (துறப்பித்யாதி) துறப்புக்கூடு - தூற்றுப்பொலி. அதாவது - இன்னாரினியா ரென்னாதே அவ்வூரிலெல்லாரையும் விரும்பினளென்றபடி. "தொழுமிவளை" என்று விசேஷித்ததுக்குபாவம் (கரு:திருக்குமித்யாதி) இதுக்கு த்ருஷ்டாந்த த்வயம் (ப்ராஞ்ஜலிமித்யாதி)

"[illegible]

[illegible]" ( இத்யேவமுக்தோமாத்ரோதம்ராமோப்ராதரமப்ரவீத் | ப்ராஞ்ஜலிம்ப்ரஹ்வமாஸீநமபிவீக்ஷ்யஸ்மயந்நிவ ) இத்யயோத்யாகாண்டே. திருமொழி (கணபுரமித்யாதி) பூர்வமேவார்த்தோ லிகிதஃ. "தொழுமிவளை-ஆசையில்லை" என்றதுக்கு ஹார்த்தபாவம் ( இவளையித்யாதிவாக்யத்ரயத்தாலே ) அதில் சாடு (இவள்படியித்யாதிவாக்யத்வயம்) படி - சரீரமும், ப்ரகாரமும். கைமேலே - ப்ரத்யக்ஷமாகவென்று சாடு.

"இவளை நீர்" என்றதற்கு ஹார்த்தபாவம் ( பழிசொல்லவித்யாதிவாக்யத்வயம் ) "தொழுமிவளை - இனி" என்றுகூட்டி பாவம் ( தொழுகைதேஹயாத்ராயித்யாதி ) "தொழுமிவளை - அன்னைமீர்" என்றுகூட்டிபாவம் ( பகவத்விஷயத்திலேயித்யாதி ) அவகாஹிக்கவென்றென்றில்லையோ வென்றது - அவகாஹித்தாரை மீட்கப்போகாதெனகிற தொன்றில்லையோவென்றபடி. ஆனாலும், பெற்றவெங்கள் வார்த்தை கேட்கவேண்டாவோவென்ன (பெற்றவர்களென்னுவித்யாதி) என்று-என்றமாத்ரத்திலே. "உமக்காசையில்லை" என்றதுக்கு பாவம் ( ப்ராப்தயௌவனைகளித்யாதி ) ப்ராப்தியில்லையோவென்ன ( புக்கவிடத்தேயித்யாதி )

மேலுக்கவதாரிகை ( பெற்றதாய்மாரித்யாதி, கண்டுகொடுநிற்க வமையுமென்கிறாளென்னுமளவும் ) விவரணம் ( இவளுடையவித்யாதி ) அவதாரிகாந்தரம் ( எங்களையித்யாதிவாக்யத்வயம் ) "[illegible]" (த்யக்த்வாபுத்ராம்ஶ்சதாராம்ஶ்சராகவம்ஶரணங்கதஃ) இத்யாதிவிஶேஷணஃ. (உண்பதுசொல்லிலித்யாதி)நாய்ச்சியார்திருமொழி. ஸ்பஷ்டோர்த்தஃ."தாமரை" என்றுசொல்லிவைத்து, "தடங்கண்" என்கையாலே - இது ஸ்த்தூலோபமானமென்கிறார் (தாமரையையித்யாதி) இது - சப்தார்த்தமும். திவ்யாயுதங்களையும் திருக்கண்களையும் வர்ணிக்கிறதுக்கு பாவம் (திவ்யாயுதங்களையுமித்யாதி)

"குவளையொண்மலர்" என்கிற விசேஷணத்துக்கு பாவம் (இக்கண்களையித்யாதி) முந்தினவவதாரிகைக்குச்சேர "கண்கணீர்மல்க" என்றதுக்குபாவம் ( கண்ணுங்கண்ணநீருமித்யாதி ) இவ்வாகாரம் தர்ஶநீயமாயிருக்குமோவென்ன (ஆஹ்லாதேத்யாதி) "[illegible]" ( ஆஹ்லாதஶீதநேத்ராம்புஃ புளகீக்ருதகாத்ரவாந் | ஸதாபரகுணாவிஷ்டோ த்ரஷ்டவ்யஸ்ஸர்வதேஹிபிஃ ) இதி ஸ்ரீவிஷ்ணுதத்வே. ஶ்லோகத்துக்குபாவம் (ஸதாதர்ஶநத்துக்கித்யாதி) இரண்டாமவதாரிகைக்குச் சேரபாவம் ( அவள்தன்னுடையவித்யாதி ) காற்கடைக்கொண்டபடி யெங்ஙனேயென்ன ( கண்ணநீரித்யாதி ) "நின்று நின்று" என்றதுக்கு பாவம் ( பேச்சுப்போயித்யாதி ) "தடுமாறுகிறவவஸ்தை" என்றதுக்கு ஸம்வாதம் (ராஜகோஷ்டியிலேயித்யாதி) "உகும், இறும்" என்றபக்ஷத்திலே சப்தார்த்தம்; உகும் - உக்கிப்போகாநின்றாள், இறும் - மறியாநின்றாளென்று. குமிறுகையாவதேதென்ன (பெருவெள்ளத்திலித்யாதி) குமிறும்-உள்ளேநின்றுசுழியாநிற்குமென்றபடி. "நின்றுநின்று" - ப்ரதிக்ஷணமாதோரணம்பண்ணிநின்று. "உகும், இறும்" என்றதுக்கு - "த்ரவத்ரவ்யமாய்த் தளர்ந்துவிழாநிற்கும்" என்றுமாயில் சப்தார்த்தம். "சிந்தையாலும்" இத்யாதிக்குச்சேர, கரணத்ரயமுமங்கேப்ரவணமானபடி சொல்லுகிறதென்கிறார் (தொலைவில்லிமியித்யாதிவாக்யத்ரயத்தாலே)

அன்னைமீர், நீர் - தவளவொண்சங்கென்று தொடங்கி, குமிறும்; ஆகையாலே - துவளிலென்று தொடங்கி, விடுமினோ இத்யந்வயஃ..............................*

# இரண்டாம்பாட்டு.

குமிறுமோசைவிழவொலித்தொலைவில்லிமங்கலங்கொண்டுபுக்
கமுதமென்மொழியாளைநீருமக்காசையின்றியகற்றினீர்
திமிர்கொண்டாலொத்துநிற்குமற்றிவடேவதேவபிரானென்றே
நிமியும்வாயொடுகண்கணீர்மல்கநெக்கொசிந்துகரையுமே.

## ஆறாயிரப்படி.

(குமிறும்) கம்பீர விவிதமங்களவாத்ய ப்ரமுதித ஜநகோஷத்தை யுடைத்தான மஹோத்ஸவம் செல்லாநிற்கத் திருத்தொலைவில்லிமங்கலத்திலேகொண்டுபுக்கிகோள்; அன்றுதொடங்கி விரஹவ்யஸநத்தாலே சித்ரார்ப்பிதையைப்போலே யொருசேஷ்டிதக்ஷமையன்றியேநின்று, அதிமதுர ஸ்வரமாக, தேவதேவபிரானென்றே சொல்லிச்சொல்லிக்கொண்டழுது நெக்கொசிந்து நீராயுருகாநிற்கும்; ஆதலாலங்கேகொண்டுபுக்கு வலியவிழந்திகோள், இனியிவளை யாசைப்பட்டால் கிடைக்குமோ வென்கிறாள்.............................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நித்யசூரிகளுக் கநுபாவ்யனான தேவபிரா னெழுந்தருளியிருக்கிற திருத்தொலைவில்லிமங்கலத்திலே மஹோத்ஸவத்திலே கொண்டுபுக்கு இவளையகலும்படி பண்ணினிகோளென்கிறாள்.

குமிறும்-கம்பீரமான. ஓசை-நாநாவிதகோஷத்தையுடைய. விழவொலி-உத்ஸவகோலாஹலத்தையுடைத்தான. தொலைவில்லிமங்கலம்-திருத்தொலைவில்லிமங்கலத்திலே.கொண்டு-கொண்டு.புக்கு-புக்கு. அமுதம்-அம்ருதம்போலேசரஸமாய்.மென்-ம்ருதுவான. மொழியாளை-பாஷணத்தையுடையவிவளை. நீர்-இவள்வார்த்தையினிமையறிந்துபோந்தநீங்கள். உமக்கு-உங்களுக்கு. ஆசை-அபிலாசை. இன்றி-இல்லாமையாலே. அகற்றினீர்-உங்களோடுறவற்றகலும்படிபண்ணினிகோள். இவளுறவறுதியறிந்தபடியென்னென்னில்; இவள்-இவள். திமிர்கொண்டாலொத்து - திமிர்கொண்டாப்போலேயாய். நிற்கும்-பேசாதேநில்லாநிற்கும். மற்று - மற்று. இவள் வார்த்தைசொல்லில், தேவர்-தேவர்களான நித்யசூரிகளுக்கும். தேவர் - தேவர்களான விஷ்வக்ஸேநாதிகளுக்கும். பிரான்-தன்னையநுபவிப்பித்துக்கொண்டிருக்கிற மஹோபகாரகன். என்றே-என்கிற அர்த்தோக்திமாத்ரத்திலே. நிமியும் - நெளிந்த. வாயொடு-வாயையுடையளாய். கண்கள்-கண்கள். நீர்-நீர். மல்க-மல்கும்படியாக, நெக்கு - கட்டுக்குலைந்து. ஒசிந்து-தளர்ந்து. கரையும்-நீர்ப்பண்டமாகாநின்றாள்.

நிமிதல் - நெளிதல் ...........................................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

அவ்வூரில் கொடுபுகவேண்டினால், திருநாளிலே கொடுபுகுவாருண்டோவென்கிறாள்.

(குமிறுமோசைவிழவொலி) "தெஷாம்வ-ணுாஹவொஷோ
யுழம்லீரஉயுாவ்ந: । அயொயுாம்வ-ருயாஉாவஸ-ருாநாஉாந-
நாஜிதஃ" ( தேஷாம்புண்யாஹகோஷோதகம்பீரமதுரஸ்வநஃ । அயோ
த்யாம்பூரயாமாஸதூர்யநாதாநுநாதிதஃ ) என்று, ஓத்துச்சொல்லுவார்,
சங்கீர்த்தநம்பண்ணுவார், பாடுவார், இயல்விண்ணப்பம்செய்வாராய், எ
ழுத்தும் சொல்லும் பொருளும் தெரியாதபடி விரவிக்கொண்டெழுகிற
த்வநியையுடைய திருநாளிலாரவாரம். பாவியேன், இத்த்வநி செவிப்
பட்டால் கொண்டுமீளவன்றோ வடுப்பது. "இவ்விடம்பிள்ளைகொல்லி"
என்று கூப்பிடுமாபோலேகாணும் த்வநியிருக்கிறது. அவ்வூரும் திருநா
ளும் அங்குள்ளார் படுகிறதுங்கண்டுவைத்திவளைக்கொண்டுபுகுவாருண்
டோ. (கொண்டுபுக்கு) இவளறியாதிருக்க நீங்களேகொண்டுபுக்கு. (அ
முதமென்மொழியாளை இவள்மொழி, கேட்டார்க்கு நித்யத்வத்தைக்
கொடுக்குமே. இவ்வினியபேச்சைக்கேளாதபடி பாக்யஹீநைகளாவதே
நீங்கள். அதாவது - அவ்வூரிலேபுக்க பின்பிவர்களுடன் வார்த்தைசொ
ல்லத்தவிர்ந்தாளாயிற்று. "உயுாாஉயுாாஓாவா" ( மதுராமதுரா
லாபா ) என்னும்படிகாணுமிருப்பது. இதுகேட்க வாசைப்பட்டிருக்கு
மவன் பெற்றுப்போனன். (மென்மொழி) அம்ருதத்தில் வ்யாவ்ருத்தி.
ஸ்ரவணயோக்யமாயிராதே அம்ருதம்; வேணுமாகில் ரஸ்யதைக்கொரு
சொல்லுக்கு நிற்கிறது, மார்த்தவமிதுக்கேயுண்டித்தனை. (நீருமக்காசை
யின்றி யகற்றினீர்) இவள்பேச்சுக்கேட்டுப்போருகிற நீங்களே யுங்களு
க்கிவள் வழிப்படாதபடிபண்ணினிகோள்.

(திமிர்கொண்டாலொத்துநிற்கும்) "ஸ்தெஹ்வாஸி" (ஸ்தப்தோ
ஸி) என்னுமாபோலே, அநுபாவ்யவிஷயத்தை யநுபவிக்கவும்மாட்
டாதே ஸ்திமிதையாய் நில்லாநின்றாள். "ஸ்தெஹ்வாஸுஃத" (ஸ்தப்
தோஸ்யுத) என்கிறபடியே, பரிபூர்ணஜ்ஞாநனைப்போலே யிராநின்றா
ளென்றுமாம்.

(மற்றிவள்) இவளிதுக்குமேலேவார்த்தைசொல்லில். ( தேவதே
வபிரானென்றே ) இங்கேகண்டாலும் * அயர்வறுமமரர்களதிபதியிங்கே
வந்து சுலபனானனென்றாயிற்றிவள் புத்திபண்ணுவது. நாயகனுடைய
மேன்மைக்குத்தோற்று வார்த்தைசொல்லுகிற விவளைமீட்கப்போமோ.
(என்றேநிமியும்) "அப்பெரியவனிப்படி சுலபனாய் சீலவானவதே!"
என்று, அந்தசீலவத்தையைச்சொல்லப்புக்குத் தலைக்கட்டமாட்டாதே
உதடுநெளிக்கும். உதடுநெளிக்கிறவாயோடே கண்கள்நீர்மல்க. ( நெக்
கு ) சிதிலையுமாய். ( ஒசிந்து ) பரவசையாய். ( கரையும் ) நீராகாநின்
றாள். ( நெக்கொசிந்துகரையுமே ) பெருவெள்ளத்தில் கரையானது நெ
கிழ்ந்து ஒட்டுவிட்டொசிந்து பொசிந்து அவயவியாகாதபடி கரைந்து
போமாபோலே, ஓரவயவியாக்கிக்காணவொண்ணாதபடி கரைந்துபோ
காநின்றாள்..................................................................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. (குமிறுமித்யாதி) "குமிறுமோசைவிழவொலி" இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை (அவ்வூரிலித்யாதி)

குமிறுமோசையுண்டாகைக்கடியேதென்ன (தேஷாமித்யாதி) "𑌤𑌷𑌾𑌂 𑌪𑍁𑌣𑍍𑌯𑌾𑌹𑌘𑍋𑌷𑍋𑌽𑌥 𑌗𑌮𑍍𑌭𑍀𑌰𑌮𑌧𑍁𑌰𑌸𑍍𑌵𑌨𑌃 । 𑌅𑌯𑍋𑌧𑍍𑌯𑌾𑌂 𑌪𑍂𑌰𑌯𑌾𑌮𑌾𑌸 𑌤𑍂𑌰𑍍𑌯𑌨𑌾𑌦𑌾𑌨𑍁𑌨𑌾𑌦𑌿𑌤𑌃" (தேஷாம்புண்யாஹகோஷாதகம்பீரமதுரஸ்வர꞉ அயோத்யாம்பூரயாமாஸதூர்யநாதாநுநாதித꞉) இத்யயோத்யாகாண்டே. "குமிறும்" என்றதுக்கர்த்தம் (எழுத்துமித்யாதி) "கொண்டுபுக்கு" என்றதுக்குபாவம் (பாவியேனித்யாதி) "குமிறுமோசை" என்றதுக்குபாவம் (இவ்விடமித்யாதி) "கொண்டுபுக்கு" என்னுமளவாக பதப்ரயோகத்துக்கு பலித்தபாவம் (அவ்வூருமித்யாதி)

அம்ருதத்தினுடைய, நித்யத்வப்ராதத்வம், போக்யத்வமாகிற வாகாரத்வயத்தையும்பற்ற பாவத்வயம் (இவள்மொழியித்யாதிவாக்யத்வயத்தாலே) திருவாய்மொழியைக்கேட்டார்க்கு புநராவ்ருத்தியில்லாத ஸ்த்தாநமுண்டாமென்று - ஸ்வாபதேசம். (அதாவதவ்வூரிலே) இத்யாதிவாக்யத்துக்குபாவம் - தொலைவில்லிமங்கலத்திலே கொடுபுகுகையாலே யங்கே ப்ரவணையாய் இவர்களோடே வார்த்தைசொல்லத்தவிர்ந்தாளாகையாலே, அம்ருதமான விவள்பேச்சைக்கேட்டுக்கொண்டிராதே அங்கே கொடுபுக்கு இவள்பேச்சை யிழந்திகோளிறேயென்கிருளென்றபடி. வார்த்தை போக்யமாயிருக்குமோவென்ன (மதுரேத்யாதி) "𑌮𑌧𑍁𑌰𑌾 𑌮𑌧𑍁𑌰𑌾𑌲𑌾𑌪𑌾 𑌕𑌿𑌮𑌾𑌹 𑌮𑌮 𑌭𑌾𑌮𑌿𑌨𑍀" (மதுராமதுராலாபாகிமாஹமமபாமிநீ) இத்யாதி, சுந்தரகாண்டே ராம꞉. (நீருமக்காசையின்றி) என்கையாலே ப்ரதிகோடித்வேந பாவம் (இதுகேட்கவித்யாதி) வ்யாவ்ருத்தி யெத்தாலேயென்ன (ஶ்ரவணேத்யாதி) மொழியாகையாலே ஶ்ரவணயோக்யமா யிருக்குமிதென்றபடி.

"𑌸𑍍𑌤𑌬𑍍𑌧𑍋𑌽𑌸𑌿" (ஸ்தப்தோஸி) என்கிற லௌகிக பரிபாஷையாலே கீழ்பாவ மருளிச்செய்து, ஶ்ருத்யுபஜீவநேநார்த்தாந்தரம் (ஸ்தப்தோஸ்யுதேத்யாதி) அன்றிக்கே, "𑌸𑍍𑌤𑌬𑍍𑌧𑍋𑌽𑌸𑍍𑌯𑍁𑌤" (ஸ்தப்தோஸ்யுத) என்கிறஶ்ருதிக்கே யிரண்டர்த்தமாய், அதாவது - "𑌯𑌤𑍍𑌰 𑌨𑌾𑌨𑍍𑌯𑌤𑍍𑌪𑌶𑍍𑌯𑌤𑌿" (யத்ரநாந்யத்பஶ்யதி) என்கிறபடியே அநுபவத்தால் ஸ்தப்ததையாதல், ஜ்ஞாநபூர்த்தியாலே பரபரப்பற்றிருக்கிற ஸ்தப்ததையாதல். இந்தவிரண்டர்த்தத்தையு மருளிச்செய்கிருர் (ஸ்தப்தோஸி என்னுமாபோலே யித்யாதி வாக்யத்வயத்தாலே)

நம்முடைய புத்த்யதீநமா யிருக்கிறவனை - "தேவதேவபிரான்" என்கிறதென்னென்ன (இங்கேகண்டாலுமித்யாதி) "தேவதேவபிரான்" என்றவனுடைய ஹார்த்தபாவம் (நாயகனுடையவித்யாதி) "நெக்கு, ஒசிந்து, கரையும்" என்ற மூன்றையும் த்ருஷ்டாந்தத்திலே காட்டுகிருர் (பெருவெள்ளத்திலித்யாதி)

திமிர்கொண்டாலொன்றுதொடங்கி, ஆசையின்றி யகற்றினீரித்யந்வய꞉. ...*

---

# மூன்றாம்பாட்டு.

---

களைகொள்பைம்பொழிற்றண்பணைத்தொலைவில்லிமங்கலங்கொண்டுபுக்
குளைகொளின்மொழியாளைநீருமக்காசையின்றியகற்றினீர்

திரைகொள்பௌவத்துச்சேர்ந்ததுந்திசைஞாலந்தாவியளந்தது
நிரைகண்மேய்த்ததுமேபிதற்றிநெடுங்கண்ணீர்மல்கநிற்குமே.

## ஆறுயிரப்படி.

(கரைகொள்) அதிமநோஹர சுமநோபராபி ராமாதி சீதள விடப விராஜித வகுள சம்பகாதி தருநிகர பரிவ்ருத பர்யந்தத்தை யுடைத்தான தொலைவில்லிமங்கலத்திலே கொண்டுபுக்க வன்றுதொடங்கி, அவனைப் பிரிந்த வ்யஸநத்தாலே யப்ரக்ருதிங்கதை யாய்க்கொண்டு; அத்யந்த மதுரமான சொற்களாலே, திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினபடியும், இந்தலோகத்தை யளந்தருளினபடியும், பசுமேய்த் தருளினபடியும் முதலாகவுள்ள திவ்யசேஷ்டிதங்களையே யலற்றித் தன்னுடைய திருக்கண்கள் பரட்புமாறும்படி நீர்மல்கி நிற்கும். ஆதலால், அங்கே கொண்டுபுக்கு இவளை வலிய விழந்திகோளென்கிறாள்..................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ரக்ஷணார்த்தமான ப்ரவ்ருத்திகளையுடைய சர்வேஶ்வரன் வர்த்திக்கிற சோலையையும் கழனியையுமுடைய தேசத்தைக் காட்டினிகோ ளென்கிறாள்.

கரை-திருப்பொருநற்கரையை. கொள்-விழுங்கும்படியான. பை - பரந்த. பொழில்-பொழிலையும். தண் - குளிர்ந்த. பணை - நீர்நிலத்தையுமுடைய. தொலைவில்லிமங்கலம் - திருத்தொலைவில்லிமங்கலத்திலே. கொண்டு - கொண்டு. புக்கு- புக்கு. உரைகொள் - லோகமெல்லாங் கொண்டாடும்படியான. இன் - இனிய. மொழியாளை - மொழியையுடையவளை. நீர் - இவள்வார்த்தை வாசியறியும் நீங்கள். உமக்கு - உங்களுக்கு. ஆசை - அதிலாசை. இன்றி - இன்றியே. அகற்றினீர்-தூரஸ்த்தையாம்படி பண்ணினிகோள். அதுவென்னென்னில்; அர்த்திகள் கூக்குரல் கேட்கும்படி, திரை - ஸ்வஸ்பர்ஶத்தாலே கிளம்பினதிரையை. கொள் - உடைய. பௌவத்து-கடலிலே. சேர்ந்ததும் - அவளுஶ்ரீதரக்ஷணார்த்தமாகக் கண்வளர்ந்தருளினபடியையும். திசை - திக்குக்களோடுகூடின. ஞாலம் - பூமியை. அநாயாஸேந, தாவி - கவட்டித்து, அளந்ததும் - அளந்துகொண் டநர்யார்ஹமாக்கினபடியையும். நிரைகள்-பசுத்திரள்களை. மேய்த்ததுமே - மேய்த்தபவ்யதையையுமே. பிதற்றி-பரவசையாய்க்கொண்டு பிதற்றி. தன்னுடைய, நெடு - நெடிய. கண்-கண்கள். நீர் - நீர். மல்க-மல்கும்படி. நிற்கும் - ஸ்தப்தையாகாநிற்கும்..................................*

## ஈடு - மூன்றும்பாட்டு.

திருநாளிலே தான் கொண்டுபோகவேண்டினால், திருச்சோலையிலிட்டுக் கொடு புகுவாருண்டோவென்கிறாள்.

(கரைகொள்பைம்பொழில்) திருப்பொருநற்கரையைப் பொழில் விழுங்கியிருக்கை. கரையைப் பொழில்கொண்டாப்போலே, இவளை குணங்கொண்டபடி. அத்திருச்சோலையை யுங்களுடைய ஹிதவசநத்தாலே பேர்த்துக்கொடுபோ மன்றன்றே இவள் நிலையை யுங்களால் பே

க்கலாவது. பரந்த பொழிலையும் குளிர்ந்த நீர்நிலங்களையுமுடைய திருத்தொலைவில்லிமங்கலத்திலே கொடுபுக்கு. ( உரைகொளின் மொழியாளை ) "வாஙெமெயெவஜ்ய—ாழ" ( பாட்யேகேயேசமதுரம் ) என்னும் ஸ்ரீராமாயணம் குத்துண்ணும்படியான பேச்சென்னுதல்; அர்த்தத்திலிழியவேண்டாதே, "உரையேயமையும்" என்னும்படியான பேச்சென்னுதல். (பரவ்யூஹவிபவங்களையு மிங்கேயநுபவிக்கும்படியிறே யிவளவகாஹித்தது.) "இதோருரையே! - பேச்சே!" என்று நாட்டார் கொண்டாடும்படியானபேச்சென்னுதல். அப்பேச்சில் வாசியறிந் தநுபவிக்கமாட்டாதே, நீங்களே யாசையின்றி யகற்றினிகோள். ( உரைகொளின்மொழி ) மாற்றுமுரையு மற்றபேச்சென்னுதல் ; உரை—அடைவு சொல். ( உமக்காசையின்றியகற்றினீர் ) அவ்வூரிலே கொடுபுகுகையும், இவள்பக்கல் நசையறுகையென்றும்-பர்யாயம். ஆயிட்டு, "இவளைவேண்டா" என்றன்றோ கொடுபுக்கதென்கிறாள்.

(திரைகொளித்யாதி) ஸ்வஸந்நிதாநத்தாலே கிளராநின்றுள்ள திரைகளையுடைத்தான திருப்பாற்கடலிலே, ப்ரஹ்மாதிகள் கூக்குரல்கேட்கும்படியாகக் கண்வளர்ந்தருளினதுவும். இவர்களார்த்திகேட்ட பின்பு இந்த்ராதிகளுக்குக் குடியிருப்புப் பண்ணிக்கொடுக்க அடியிட்டபடியும். (திசைஞாலம்தாவியளந்ததும்) திக்குக்களோடே கூடின பூமியை யிரப்பாளனாயிரந்து, அநாயாஸேந வளர்ந்தளந்தபடியும். (திசைஞாலம்தாவியளந்ததும்) "இந்த்ராதிகளைரக்ஷிக்கவேணும்" என்றாசையோடேகாணும் பூமியையளந்தது. ஆசை-திக்கு. "இவன்திருவடிகளாலே நம்மை ஸ்பர்ஶிக்கவேணும்" என்றாசைப்பட்டுக்காணும் கிடக்கிறது பூமி. படிகை - உடைத்தாகை. பூமியினுடைய ஆசையாவது - திக்குப்பட்டிறேயிருப்பது. அவ்வளவன்றிக்கே, அறிவுகேட்டுக்குத் தலையான பசுக்களோடே சேர்ந்து வர்த்தித்தபடியுமேசொல்லி யடைவுகெடக்கூப்பிட்டு.(நெடுங்கண்ணீர்மல்க) இக்கண்ணில் பரப்படங்கலும் பரப்புமாற ஜலதந்த்வமுண்டாவதே!. (நிற்குமே) பிதற்றவும் க்ஷமையன்றிக்கே, "கண்ணநீர் மல்குகை ஸ்வஸ்த்ததசை" என்னும்படி ஸ்தப்தையாய் நில்லாநின்றாள்.

## ஜீயர் அரும்பதம்.

*மூன்றாம்பாட்டு. ( கரைகொளித்யாதி ) "கரைகொள் பைம்பொழிற்றண்பணை" இத்யாதியைக்கடாக்ஷித் தவதாரிகை (திருநாளிலேயித்யாதி)*

*"கரைகொள்" என்கிறவிடத்திலே, கொள்கை - க்ரஹிக்கையாய், க்ரஸிக்கையைச்சொல்லுகிறது. பதப்ரயோகத்துக்கு ஹார்த்தபாவம் (கரையையித்யாதி) பணை - நீர்நிலங்கள். குணங்கொண்டபடியென்றது - "திரைகள் மேய்த்சதுமேபிதற்றி" என்றதனைப்பற்ற. "பொழில்" என்றதிலே நோக்காக ஹார்த்தபாவாந்தரம் (அத்திருச்சோலையையித்யாதி)*

*"உரைகொள்" என்றதுக்சஞ்சார்நம். முந்தினதுக்கு, உரை - ஸ்ரீமத்ராமாயணம், கொள்கை - ஜயிக்கை ; இத்தை யருளிச்செய்கிறார் ( ஸ்ரீராமாயணம் குத்து*

ண்ணும்படியானவென்று ) இரண்டாவது ( அர்த்தத்திலித்யாதி ) அதாவது-உக்தி யே நெஞ்சை யபஹரிக்கும்படியான வென்றபடி. உரை-உக்தி. மூன்ருவது(இதோ ருரையேயித்யாதி) அதாவது-லௌகிகஶ்லாகோக்தியை யுடையவென்றபடி. உரை-லௌகிகருடைய ஶ்லாகோக்தி ; கொள்கை - உடைத்தாகை. நாலாவது ( மாற்று மித்யாதி ) உரையென்று - மாற்று ; கொள்கை - ஜயிக்கை. அஞ்சாமர்த்தம் (உரை அடைவுசொல்லென்று) அதாவது - இப்பாட்டில் “கரை,உரை,திரை,நிரை” என்று ப்போலே சொன்னவை. கொள்கை - உடைத்தாகை. நாங்களகற்றினோமோவென் ன (அவ்வூரிலேயித்யாதி) ஆயிட்டு - ஆனபின்பு.

மேலுக்கவதாரிகை (இவர்களார்த்தியித்யாதி) சப்தார்த்தம் (திக்குக்களோ டேயித்யாதி) “திசை” என்றதிலே ரசோக்தி ( இந்த்ராதிகளை யித்யாதி ) ஆசை யோடேயென்றது - ஶ்லேஷம். இன்னமு மொருவழியாலே ரசோக்தி ( இவனித் யாதி ) திக்குப்பட்டிறே - அடைவுபட்டிறே இத்யர்த்தஃ. ஸ்வபாவார்த்தம் - திக்கை யுடைத்தாகை. “ நெடு ” என்றதுக்கு பாவம் (இக்கண்ணிலித்யாதி)

திரைகொளென்றுதொடங்கி, அகற்றினீரித்யந்வயஃ. பௌவம்-கடல். ‘‘பா 𑌠𑍍𑌯𑍇 𑌗𑍇𑌯𑍇 𑌚 𑌮𑌧𑍁𑌰𑌂 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑍈𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌭𑌿𑌰𑌨𑍍𑌵𑌿𑌤𑌮𑍍 । 𑌜𑌾𑌤𑌿𑌭𑌿𑌸𑍍𑌸𑌪𑍍𑌤𑌭𑌿𑌰𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍀𑌲𑌯𑌸𑌮𑌨𑍍𑌵𑌿𑌤𑌮𑍍 ” ( பாட்யேகேயேசமதுரம்ப்ரமாணைஸ்த்ரிபிரந்விதம்। ஜாதிபிஸ்ஸப்தபிர்யுக்தம்தந்த்ரீலயஸமந்விதம் ) இதிபாலகாண்டே.................*

---

## நான்காம்பாட்டு.

நிற்குநான்மறைவாணர்வாழ்தொலைவில்லிமங்கலங்கண்டபி
னற்கமொன்றுமறவுருள்மலிந்தாள்கண்டீரிவளன்னைமீர்
கற்குங்கல்வியெல்லாங்கருங்கடல்வண்ணன்கண்ணபிரானென்றே
யொற்கமொன்றுமிலளுகந்துகந்துண்மகிழ்ந்துகுழையுமே.

### ஆருயிரப்படி.

(நிற்கும்) அபௌருஷேய நிர்த்தோஷாசேஷ வேதவேதார்த்த ப்ரவர்த்தகரான திவ்யஜநங்கள் வேதவேத்யமான பகவத்ஸ்வரூபரூப கு ணவிபூதிகளை சாக்ஷாத்கரித்துக்கொண்டு வாழுகிற திருத்தொலைவில்லி மங்கலத்தைக்கண்டபின், ஸ்த்ரீத்வ ப்ரயுக்தமான மர்யாதையைக்கடந் து ஒருவர்க்கும் விதேயையன்றியே, சொல்லும்சொல்லெல்லாம், கரு ங்கடல்வண்ணன் கண்ணபிரானென்றே எப்போதும்சொல்லி யொருப்போ ராந்தியுமின்றியே யவன்றிருநாமங்களைச் சொல்லச்சொல்ல மேல்மேல் வந்த ப்ரீதி பரம்பரையாலே அத்யந்தமவஸந்நையாகாநின்ருள்; இப்ப டி யவன்றிறத்தி லபிநிவிஷ்டையான விவளையென்னுல் நிவர்த்திப்பிக்க வொண்ணுதென்கிருள் ..........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், தர்ஸநீய விக்ரஹவிசிஷ்டனை க்ருஷ்ணனுடைய விலக்ஷணபுருஷாவாஸமான திருத்தொலைவில்லிமங்கலத்தைக்கண்டபின் பொருவர்க்கடங்காதபடி கைவிஞ்சினளென்கிருள்.

நிற்கும் - நித்யமாய். நால் - நாலுவகைப்பட்ட. மறை - வேதங்களுக்கு. வாணர்-நிர்வாஹகரானவர்கள். வாழ்-பகவதநுபவத்தாலேவாழாநிற்கிற. தொலைவில்லிமங்கலம்-திருத்தொலைவில்லிமங்கலத்தை. கண்டபின்-கண்டபின்பு. அற-மிகவும். அற்கம்-அடக்கம். ஒன்றும்-ஒன்றும். உருள்-உறுகிறிலள். இவள்-இவள். மலிந்தாள்-கைகழியவிஞ்சினள். இவளிப்படியாம்படி, அன்னைமீர் - பெற்றுவளர்த்தநீங்கள். கண்டீர்-கண்டிகோளிறே. கற்கும்-இவளப்யஸிக்கும். கல்வி-வார்த்தை. எல்லாம்-எல்லாம். கரு-ஶ்யாமளமான. கடல்-கடல்போலேயிருக்கிற. வண்ணன்-வடிவையுடையவனாய். கண்ணன்-ஆஶ்ரிதபவ்யனானக்ருஷ்ணனாகிற. பிரான் - மஹோபகாரகன். என்றே-என்று அவனுடைய ரூபவைலக்ஷண்யத்தையு மாத்மகுணத்தையும்சொல்லி. ஒன்றும்-ஒருப்ரகாரத்தாலும். ஒற்கம்-ஒடுக்கம். இலள்-இலளாய்க்கொண்டு. உகந்துகந்து-அந்தகுணாநுசந்தாநத்தாலே மேன்மேலுமுகந்து. அத்தாலே, உள் - நெஞ்சிலே. மகிழ்ந்து - ஆஹ்லாதம்மிக்கு. குழையும் - அதடியாக சிதிலையாகாநிற்கும்.

அற்கம்-அல்குதலாய், அடங்குதலென்றபடி. ஒற்கம்-ஒல்குதலாய், ஒடுங்குதலென்றபடி .........................................................................*

## ஈடு - நான்காம்பாட்டு.

அவ்வூரையு மங்குள்ள ஸ்ரீவைஷ்ணவர்களையும் யாதொருநாள் கண்டாள், அன்றுதொடங்கித் தடைநிற்கைதவிர்ந்தாளென்கிருள்.

(நிற்கும்நான்மறை) நித்யமானநாலுவேதங்கள். நித்யத்வமாவது - பூர்வ பூர்வோச்சாரண க்ரமத்தைப்பற்ற உத்தரோத்தரோச்சார்யமாணத்வம். ஆகையாலே நித்யமானவேதம். அபௌருஷேயமாகையாலே நிர்த்தோஷமாயிருக்குமிறே. (வாணர்) வ்யாஸபதம் செலுத்தவல்லராயிருப்பர்கள். (வாழ்) வேதார்த்தபூதனைக் கண்ணாலேகண்டு வாழாநிற்பர்கள். (வாழ்தொலைவில்லிமங்கலம்) வேததாத்பர்யபூதனைக்கண்டு நித்யாநுபவம்பண்ணுகிறவூர். “ 𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌾𑌦𑍍𑌯𑍋𑌗𑌮𑌾𑌸𑍀𑌤 ” ( ஸ்வாத்யாயாத்யோகமாஸீத ) என்னுமளவன்றியே, “ 𑌯𑍋𑌗𑌾𑌤𑍍𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌮𑌾𑌮𑌨𑍇𑌤𑍍 ” (யோகாத்ஸ்வாத்யாயமாமநேத்) என்று, ஆரூடயோகராயிருக்குமவர்கள். (கண்டபின்) அவ்வூரில் வைஷ்ணவர்களு மவனுமானசேர்த்தியைக் காட்டிக்கொடுத்துக் கெடுத்திகோள். ( அற்கமொன்றுமறவுருள் ) அற்கம் - அல்குதல். அதாவது - அடக்கம். நஞ்சொல்வழிவந்திருக்கு மிருப்புத்தவிர்ந்தாள். ( தாயார்சொல்வழிவருமத்தை யொன்றையுமறவிட்டாள். )

(மலிந்தாள்) நம்மால் ஹிதஞ்சொல்லி மீட்கவொண்ணுதபடிமிக்காள். மீட்கைக்கு யோக்யதையுமில்லாதபடி யானாள். (மலிந்தாள்கண்

டரிவள்) இவளுடைய பகவத்ப்ராவண்யமெனக்குத்தெரியாதபடி விஞ் சினுள்கிடிகோள். (அன்னைமீர்) மீட்கத்தேடுகிறவுங்களோடு, இவள்கரு த்தறிந்தேனுகச்சொல்லுகிற என்னோடு வாசியில்லை தெரியாமைக்கு. நித்யஸூரிகள் யாத்ரை சம்சாரிகளுக்குத் தெரியிலன்றே நமக்கிவளளவு தெரிவது.

( கற்குமித்யாதி ) சொல்லும்சொல்லெல்லாம் திருநாமமேயாய், அதுதன்னிலும் வடிவழகுக்கு மாஶ்ரிதபாரதந்த்ர்யத்துக்கும் வாசகமான திருநாமங்களையே சொல்லாநின்றாள். "க்ருஷ்ணனுகிலாஶ்ரிதபவ்யன்" என்று ப்ரஸித்தமிறே. (பிரான்) அவ்வடிவழகைத்தாழநின்றென்னைய நுபவிப்பித்தவுபகாரகன். ( என்றேயொற்கமொன்றுமிலள் ) திருநாம ங்களையிடைவிடாதே சொல்லாநின்றால் இளைப்பொன்றுமின்றிக்கேயிரா நின்றாள். "விரஹதௌர்ப்பல்யத்தாலே திருநாமத்தை முட்டச்சொல் லமாட்டாள்" என்றிராநிற்கச்செய்தே, வருத்தமறச்சொல்லாநின்றாள். திருநாமந்தான் தரிப்பைக்கொடுத்துச்சொல்லுவிக்கும்போலேகாணும்; * பாடியிளைப்பிலமிறே. ஒற்கம்-மிடி. இளைப்பின்றிக்கேயென்னுதல்; அ ன்றிக்கே, ஒற்கமாகிறது - ஒடுக்கமாய், தாய்மார்முன்பே யிப்படிசொல் லாநின்றோமே" என்னும் லஜ்ஜையின்றிக்கேயென்னுதல். ( உகந்துகந் து ) திருநாமத்வாரா அவன் சௌந்தர்ய ஶீலாதிகளை யநுசந்தித்து மே ன்மேலன ப்ரீதையாகாநின்றாள். (உள்மகிழ்ந்துகுழையுமே) அந்தஃகர ணப்ரீத்யதிசயத்தாலே ஆஶ்ரயமழியாநிற்கும் ........................ ..*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு ( கிற்குமித்யாதி ) " கிற்கும்நான்மறை " என்றுதொடங்கி " அற்கமொன்றுமறவுறுள் " என்னுமளவுங் கடாக்ஷித்தவதாரிகை ( அவ்வூரையு மித்யாதி )

" கிற்கும் " என்கிறவர்த்தமாநத்துக்கர்த்தம் (நித்யமானவித்யாதி) சப்த ம் த்ரிக்ஷணவஸ்த்தாயியாயிருக்க, நித்யமாகக்கூடுமோவென்ன; ஆநுபூர்வீநித்யத் வமே நித்யத்வமென்கிறார் (நித்யத்வமித்யாதி) த்ரிக்ஷணவஸ்த்தாயித்வமாவது-உ த்பந்நமாகையும், அநந்தரக்ஷணத்திலே யிருக்கையும் அநந்தரம் நஷ்டமாகையும். ஆநுபூர்வீநித்யத்வமாவது-உபாத்யாயன்முன்னே யுச்சரிக்க, பச்சாத் ஓதுகிறவர்க ளுச்சரிக்கிறவடைவு தப்பாமல்வருகை. நித்யத்வத்தால்பலிதம் ( அபௌருஷேய மித்யாதி ) ( நிர்த்தோஷமாயிருக்கும் ) பௌருஷேயத்வமடியாகவந்த ராகத்வே ஷாதிகளின்றிக்கேயிருக்கு மித்யர்த்தஃ. வாழ்ச்சியைக்காட்டுகிறார் ( ஸ்வாத்யாயா தித்யாதி ) " 𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌾𑌦𑍍𑌯𑍋𑌗𑌮𑌾𑌸𑍀𑌤 𑌯𑍋𑌗𑌾𑌤𑍍𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌮𑌾𑌮𑌨𑍇𑌤𑍍। 𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌯𑍋𑌗𑌸𑌮𑍍𑌪𑌤𑍍𑌤𑍍𑌯𑌾 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌤𑍇 " (ஸ்வாத்யாயாத்யோகமா ஸீதயோகாத்ஸ்வாத்யாயமாமநேத் । ஸ்வாத்யாயயோகஸம்பத்த்யா பரமாத்மாப்ர காஶதே) இதிஷஷ்ட்டேம்ஶே ஷஷ்ட்டேத்யாயே. அஸ்யார்த்தஃ - ஸ்வகீயஶாகா த்யயநாத், யோகம் - தத்ப்ரதிபாத்யபரமாத்மத்யாநம், ஆஸீத-குர்யாத்; யோகஃ-த்

யாநம். "யோகஸ்ஸந்நஹநோபாயத்யாநஸங்கதியுக்திஷு" (யோகஸ்ஸந்நஹநோபாயத்யாநஸங்கதியுக்திஷு) இத்யமரஃ. (யோகாத்ஸ்வாத்யாயமாமநேத்) யோகவைபவாதநிதஸாகாந்தரார்த்தஞ்ச, ஆமநேத்-சாக்ஷாத்க்ருத்யமநநம்குர்யாதிதி. "கண்டபினற்கமொன்றுமறவுருள்" என்றதுக்குஹார்த்தபாவம் (அவ்வூரிலித்யாதி) "அற்கத்தையேகதேசமும் மிகவுமடையாள்" என்னுமதுக்குநியாமகம் (நம்சொல்வழியித்யாதி)

"அற்கமொன்றுமறவுருள்" என்றதுக்கும் "மலிந்தாள்" என்றதுக்கும் வாசியேதென்ன (மீட்கைக்கித்யாதி) பாவாந்தரம் (இவளுடையவித்யாதி) ஆறுனுமெங்களிற்காட்டி லந்தரங்கையன்றோநீ, உனக்குத்தெரியாமை யுண்டோவென்ன; கீழிற்பதத்தையுங்கடாக்ஷித்து, "அன்னைமீர்" என்கிறதுக்குபாவம் (மீட்கத்தேடுகிறவித்யாதி) தெரியாமையின்சரமாவதி (நித்யசூரிகளித்யாதி)

கற்கை-சொல்லுகை. "கண்ணன்" என்றால் - ஆஶ்ரிதபாரதந்த்ர்ய வாசகமாமோவென்ன (க்ருஷ்ணனுகிலித்யாதி) "என்றேயொற்கமொன்றுமிலள்" என்றதுக்குபாவம் (திருநாமங்களையித்யாதி) "என்றே" என்றவவதாரணார்த்தம் (இடைவிடாதேயென்று) இளைக்கைக்கு ப்ரஸக்தியேதென்ன (விரஹேத்யாதி) வருத்தமறச்சொல்லுகைக்கு ஹேதுவேதென்ன (திருநாமந்தானித்யாதி) எங்கேகண்டோமென்ன (பாடியித்யாதி) "மிடி" என்றதின்விவரணம் (இளைப்பின்றிக்கேயென்னுதலென்று)

உகப்புவருகைக்குஹேதுவேதென்ன (திருநாமத்வாரேத்யாதி) "உகந்துகந்து" என்றத்தையநுவதிக்கிறது - "உள்மகிழ்ந்து" என்று.

என்றேயொற்கமொன்றுமிலள் - சொல்லியேயொருப்ரகாரத்தாலு மொடுக்கமிலளாய்க்கொண்டு. உகந்துகந்து - மேன்மேலுமுகந்து..........................*

---

# ஐந்தாம்பாட்டு.

குழையும்வாண்முகத்தேழையைத்தொலைவில்லிமங்கலங்கொண்டுபுக்
கிழைகொள்சோதிச்செந்தாமரைக்கட்பிரானிருந்தமைகாட்டினீர்
மழைபெய்தாலொக்குங்கண்ணநீரினொடன்றுதொட்டுமையாந்திவ
ளுழையுஞ்சிந்தையளன்னைமீர்தொழுமத்திசையுற்றுநோக்கியே.

## ஆறுயிரப்படி.

(குழையும்) நிரவதிகசௌந்தர்ய சௌகுமார்ய சாரஜந்மபூமியான திருமுகத்தையுடையளாய், பண்டெம்பெருமான்றிறத்தி லதிசபலையாயிருந்த இவளைத் திருத்தொலைவில்லிமங்கலத்திலேகொண்டுபுக்கு; தன்னுடைய திவ்யபூஷணங்களினுடைய நிரவதிகதேஜஸ்ஸின் வெள்ளமெல்லாம் தன்னுள்ளே யடங்கும்படி பெருகுகிற நிரவதிகமான ஜ்யோதிஸ்ஸின்வெள்ளத்திலே, பரிபூர்ணமா யலர்ந்ததொரு தாமரைத்தடாகத்தினுடைய குளிர்த்தியையு மழகையுமுடைத்தான திருக்கண்களை யுடையனாயிருந்த வெம்பெருமானெழுந்தருளியிருந்த விருப்பைக்காட்டினீர்;

அன்றுதொடங்கி, மழைபெய்தாலொக்குங் கண்ணநீரோடுமயங்கி, அக்கண்களையே நினைத்து அந்ததிக்கைநோக்கித் தொழாநிற்கும்; இனி யிவளை யாசைப்பட்டால் கிடைக்குமோ வென்கிறாள்........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், திருத்தொலைவில்லிமங்கலத்திலேயிருக்கிற அரவிந்தலோசநனுடைய வொப்பனையழகைக்காட்டினீர், அன்றுதொடக்கமாக விவள் விக்ருதையாகாநின்றாளென்கிறாள்.

குழையும்-ஸ்வாபாவிகமான மார்த்தவத்தையுடையளாய். வாள்-ஒளிவிடுகிற. முகத்து-முகத்தையுடையளாய். ஏழையை-அநுபூதவிஷயத்திலே யாழங்காற்படும் சாபலத்தையுடையவிவளை. தொலைவில்லிமங்கலம்-திருத்தொலைவில்லிமங்கலத்திலே. கொண்டு-கொண்டு. புக்கு-புக்கு. இழைகொள்-திவ்யாபரணங்களோரத்தாலுள்ள. சோதி-ஔஜ்ஜ்வல்யத்தையுடையனாய். செம்-சிவந்த. தாமரை - தாமரைபோலும். கண்-கண்ணையுமுடையனாய். பிரான்-அவ்வழகை ஆஶ்ரிதர்க்கநுபவிப்பிக்கிறவுபகாரகன். இருந்தமை-இருந்தபடியை. காட்டினீர்-காட்டினீர். அன்னைமீர், அன்றுதொட்டு - அன்றுதொடங்கி. இவள்-இவள். மழைபெய்தாலொக்கும்-மழைபெய்தாப்போலேயிருக்கிற. கண்ணநீரினொடு-கண்ணநீரோடே. மையாந்து-மயங்கி. நுழையும்-அவனழகிலேயுட்புக்க. சிந்தையள் - நெஞ்சையுடையளாய். அ-அவனிருந்த. திசை-திக்கை. உற்று-செறிய. நோக்கி-நோக்கி. தொழும்-அஞ்சலிபண்ணுகிற்கும்.

மையாத்தல்-மயங்குதல். ...... ..........................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

இவள்ஸ்வபாவத்தை யறிந்துவைத்து, தேவபிரானுடையவழகைக்காட்டிக் கெடுத்திகோளென்கிறாள். அன்றியே, அவ்வூரில் வர்த்திப்பார்படியைக் காட்டினால், அவர்கள் ஜீவநத்தையு மிவளுக்குக் காட்டிக்கொடுக்கவேணுமோ வென்கிறாளென்றுமாம்.

(குழையுமித்யாதி) ஒரு ஸம்ஶ்லேஷம் வேண்டாதே ஸ்வபாவஸித்தமான மார்த்தவத்தாலே நையும்ஸ்வபாவையாய், "உகந்துகந்துண்மகிழ்ந்துகுழையும்" என்கிற பகவதநுபவத்தாலே ஒளியையுடைத்தான முகத்தை யுடையவளாய், "கிடையாது" என்றாலும் மீளமாட்டாத சாபலத்தை யுடையவளை. (தொலைவில்லிமங்கலங்கொண்டுபுக்கு) பகவத்பரிக்ரஹமான தேசத்திலே கொடுபுகத் தவிராதபின்பு, ஶ்ரீவைகுண்டத்திலே மேன்மையைக்காட்டவன்றோ வடுப்பது; நீர்மைக் கெல்லை நிலமானவிடத்தே கொடுபுகுவாருண்டோ. வாள்-ஒளி. (இழைகொள்சோதி) ஆபரணங்களினுடைய வொளியையுடைத்தா யிருக்குமென்னுதல், வேறோராபரணம் வேண்டாதே தானே யாபரணமான தேஜஸ்ஸென்னுதல், ஆபரணவொளி தன்னுள்ளே யடங்கும்படியான ஸ்வாபாவிகமான புகரென்னுதல். (செந்தாமரைக்கட்பிரான்) விகாஸாதிகளுக்குத்தாமரையை யொப்பாகச் சொல்லலாயிருக்கிற திருக்கண்கள். அகவாயில் தண்

ணளிக்கு ப்ரகாசகமான திருக்கண்கள். (பிரான்) "ஹ்ருநாழ" (பக்தா நாம்) என்கிறவடிவு. (இருந்தமைகாட்டினீர்) நீங்கள் கெடுத்திகோள். இவளறியாத விசேஷங்களும் நீங்களே காட்டிக் கொடுத்துக் கெடுத்தி கோள். (இருந்தமை) இருப்பில்வீறு அங்கே பர்யவஸிதம்போலே. நின்றாகில் "நிலையாரநின்றான்" என்பர்கள், இருந்தானாகில் "இருந் தமைகாட்டினீர்" என்பர்கள், கிடந்தானாகில் "கிடந்ததோர்கிடக்கை" என்பர்கள். அவன் ஸ்வபாவத்தைக் காட்டினிகோளென்றுமாம். (காட் டினீர்) நோக்கிருந்தபடி கண்டாயே, முறுவலிருந்தபடி கண்டாயே யெ ன்று.

இப்போததுக்கு வந்ததென்னென்னில் (மழைபெய்தாலொக்கு ம்கண்ணநீரினொடு) கண்டவநந்தரம் வர்ஷதாரைபோலே கண்ணநீர்வெ ள்ளமிடுகிறபடிபாரிகோள். ஆளவந்தார் மணக்கால்நம்பிபக்கலிலே யெ ம்பெருமானைக் கேட்டவநந்தரம், "உபாயமிதுக்குமேலில்லை, இவ்விஷ யத்தை யிப்போதே சாக்ஷாத்கரிக்க விரகில்லையோ?" என்றாராம். அப் படி கண்டவநந்தரம் கண்ணநீர் வெள்ளமிடப்புக்கதத்தனை. "ஏழை" என்றவிடத்தை மூதலிக்கிறாள். (அன்றுதொட்டு) நீங்கள் காட்டின வன்றுதொடங்கி. (மையாந்து) மயங்கி. "குழையும்" என்கிறவிடத் தை மூதலிக்கிறாள். (இவள்நுழையும்சிந்தையள்) அவன் குணங்களி லே யுட்புகாநின்ற நெஞ்சையுடையவள். ஸ்வரூபத்தையு மாத்மகுணத் தையுமொழிய வடிவழகிலே யிடங்கொள்ளாநின்றாள். அங்கே சுழித்து நின்று, "இதொருவடிவழகே!, இதோரொப்பனையே!, இதொருகண் ணழகே!" என்றிடங்கொள்ளாநின்றாள். (அன்னைமீர்) இவளை மீட் கப்பார்க்கிறவளவிறே யுங்களது.

(தொழும்) "[grantha text]" (ஏகஸ்த்தஹ்ருதயாநாநம்ராமமேவாநுபஶ்யதி) என்கிறபடியே, அத்தி க்கை மறுபாடுருவப்பார்த்துத் தொழாநிற்கும். இவள்தொழிலு மொரு திக்குப்பட்டல்லதிராதுகாணும்..................................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. (குழையுமித்யாதி) "குழையும் வாண்முகத்தேழையை" என்கிறதிலே நோக்காக வவதாரிகை (இவள்ஸ்வபாவத்தையித்யாதி) கீழ்ப்பாட் டிலர்த்தத்தை யநுவதித்துக்கொண்டு, "இழைகொள்சோதிச் செந்தாமரைக்கட்பி ரான்" என்றதிலே நோக்காக வவதாரிகாந்தரம் (அன்றியேயித்யாதி)

விஶ்லேஷதசையில் முகத்திலே யொளியுண்டாகைக்கு ஹேது சொல்லுகி றது (உகந்துகந்தித்யாதி) "தொலைவில்லிமங்கலங் கொண்டுபுக்கு" என்றதுக்கு ஹார்த்தபாவம் (பகவத்பரிக்ரஹமித்யாதி)

இழைகொள் சோதியான விக்ரஹத்தை யுடையனாய், செந்தாமரைபோலே யிருக்கிற திருக்கண்களையுடையராயிருந்த விக்ரஹத்தை யநுபவிப்பித்த வுபகாரக

னென்று சப்தார்த்தம். "இழைகொள்சோதி" என்றதுக்கு மூன்றர்த்தம். முந்தின து - இழைகளினுடைய சோதியைக்கொண்டிருக்கிற விக்ரஹத்தையுடையவென்று; இப்போது, "இழை - சோதி - கொள்" என்றந்வயம்; கொள்கை-உடைத்தாகை; "இழைகொள்சோதி" என்கையாலே - விக்ரஹமர்த்தஸித்தம். இரண்டாவது- இழையாகையைக்கொண்டிருக்கிற தேஜஸ்ஸையுடைய விக்ரஹமென்று. மூன்றுவது; இழையென்று - ஆபரணகாந்தியாய், கொள்கை - க்ரஸிக்கையாய், ஆபரணகாந்தியை க்ரஸிக்கிற தேஜஸ்ஸையுடைய விக்ரஹமென்று; இப்பக்ஷத்தில், இழையென்று - ஆபரணகாந்தியை லக்ஷிக்கிறது. "செம்" என்றதுக்குபாவம் ( அகவாயிலித்யாதி ) அவ்வடிவை யாஶ்ரிதர்க்காக்கிக்கொண்டிருக்கை - உபகாரமாவதென்று விவக்ஷித்து (பக்தாநாமித்யாதி) "நீங்கள்கெடுத்திகோள்" என்கைக்கு, நாங்களென் செய்தோமென்ன (இவளறியாதவித்யாதி) விஷயங்களென்றது - விசேஷங்களென்றதாய்; விக்ரஹஸௌந்தர்யம், கண்ணழகுமுதலான ப்ரகாரங்களைச்சொல்லுகிறது. "இருந்தமை" என்றது - இருந்தப்ரகாரம். இருப்பிலழகையென்றபடி. "இருந்தமை" என்றத்தால் பலிதம் ( இருப்பில்வீறித்யாதி ) "இருந்தவ்மகாட்டினீர்" என்கிறதென், மற்றை யவஸ்த்தைகளும் போக்யமாயிராதோவென்ன (நின்றுகுகிலித்யாதி) "இருந்தமை" என்றதுக்கர்த்தாந்தரம் ( அவன் ஸ்வபாவத்தையித்யாதி ) "இருந்தமை" என்று - இருப்பழகாதல், ஸ்வபாவமாதல்.

கண்டவநந்தரம் கண்ணநீர் வெள்ளமிடுகிறதுக் கைதிஹ்யம் (ஆளவந்தாரித்யாதி) (விரகில்லையோவென்றுராம்) என்றவநந்தரம், மணக்கால்நம்பி "விரகுண்டு"என்று கோயிலிலே கூட்டிக்கொண்டெழுந்தருளிப் பெரியபெருமாள் திருவடிகளைக்காட்டிக்கொடுக்க, கண்டவநந்தரம் கண்ணும் கண்ணநீருமாயிருந்தாரென்று ப்ரசித்தமிறே என்றிவ்வளவு மத்யாஹரிப்பது. எம்பெருமானைக்கேட்டவென்றது-சரமஶ்லோகத்தையென்றபடி.

"இருந்தமை" என்றதின் ஸ்வபாவபரமான வர்த்தத்தைக்கடாக்ஷித்துபாவம் (அவன்குணங்களிலேயித்யாதி) இருந்தமை - அழகென்றவர்த்தத்தைக்கடாக்ஷித்துபாவம் (ஸ்வரூபத்தையுமித்யாதி) இடங்கொள்ளும் ப்ரகாரத்தைக்காட்டுகிறார் (அங்கேசுழித்தித்யாதி) "இருந்தமை" என்கையாலே - (வடிவழகு) "இழைகொள்சோதி" என்கையாலே - (ஒப்பனை) "செந்தாமரைக்கண்" என்கையாலே - (கண்ணழகு) இவளுடைய பாவபந்தத்தையறியாதே ( இவளைமீட்கப்பார்க்கிறவளவிறேயுங்களது ) என்றபடி.

"அத்திசையுற்றுநோக்கி - தொழும்" என்றந்வயித்தர்த்தம் ( ஏகஸ்த்தேத்யாதி) "𑌨𑍈𑌷𑌾 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑍍𑌯𑍋 𑌨𑍇𑌮𑌾𑌨𑍍 𑌪𑍁𑌷𑍍𑌪𑌫𑌲𑌦𑍍𑌰𑍁𑌮𑌾𑌨𑍍। 𑌏𑌕𑌸𑍍𑌥𑌹𑍃𑌦𑌯𑌾 𑌨𑍂𑌨𑌂 𑌰𑌾𑌮𑌮𑍇𑌵𑌾𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌤𑌿" (நைஷாபஶ்யதிராக்ஷஸ்யோ நேமாந்புஷ்பபலத்ருமாந் । ஏகஸ்த்தஹ்ருதயாநூநம்ராமமேவாநுபஶ்யதி) இதிஸுந்தரகாண்டே. ரஸோக்தி. (இவளித்யாதி) திக்குப்பட்டல்லது - அடைவுபட்டல்லதென்றும், திக்கையுடைத்தல்லதென்று மர்த்தத்வயம்.

அன்னைமீர், குழையுமென்றுதொடங்கி, காட்டினீர்; அன்றுதொட்டு - இவள்-மழைபெய்தாலொக்கும் கண்ணநீரினொடு, மையாந்து-நுழையும் சிந்தையளாய்-அத்திசையுற்றுநோக்கி-தொழுமித்யந்வய: ........................................*

# ஆறாம்பாட்டு.

நோக்கும்பக்கமெல்லாங்கரும்பொடுசெந்நெலோங்குசெந்தாமரை
வாய்க்குந்தண்பொருநல்வடகரைவண்டொலைவில்லிமங்கல
நோக்குமேலத்திசையல்லான்மறுநோக்கிலள்வைகனுடொறும்
வாய்க்கொள்வாசகமுமணிவண்ணனுமமேயிவளன்னைமீர்.

## ஆறாயிரப்படி.

(நோக்கும்) அம்ருதரஸௌகநிர்ப்பரேக்ஷுகாண்ட, கநகஸத்ருஸபரிணதசாலி, ஸமுச்ச்ரித ஸமுத்புல்ல மகரந்தபூர பரிபூர்ணாரவிந்தபரிவ்ருதமான பொருநல் வடகரை வண்டொலைவில்லிமங்கலத்திலேகொண்டுபுக்க வன்றுதொடங்கி, கண்களாலத்திக்கல்லது காணுள்; வாயால் மணிவண்ணன் நாமமல்லது சொல்லாள்; இனியிவளை நிவர்த்திப்பிக்க முடியுமோவென்கிருள் .......................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சம்ருத்தமான திருத்தொலைவில்லிமங்கலத்தைக்கண்டால் வேறொன்றும் காணமாட்டாதே, எப்போதுமிவள் வாய்விடும் சொல்லெல்லாம் ஸுக்ரஹ சௌந்தர்யனுனவனுடைய திருநாமங்களேயா யிராநின்றதென்கிருள்.

நோக்கும்பக்கமெல்லாம்-பார்த்தபார்த்தவிடமெல்லாம். கரும்பொடு-கரும்போடுகூடின. செந்நெல்-செந்நெலும். ஓங்கு-அவற்றுக்கு நிழல்செய்யும்படியோங்கின. செந்தாமரை-செந்தாமரையும். வாய்க்கும்-சம்ருத்தமாம்படியான. தண்-குளிர்ந்த. பொருநல்வடகரை - திருப்பொருநல்வடகரையிலே. வண் - நகரசம்பத்துக்களால் குறைவற்றிருக்கிற. தொலைவில்லிமங்கலம் - திருத்தொலைவில்லிமங்கலத்தை. தன்னரதியாலேயொன்றும் பார்க்கமாட்டாதவள், நோக்குமேல்-பார்த்தாளாகில். அ-அந்த. திசை-திக்கு. அல்லால்-ஒழிய. மறுநோக்கிலள்-வேறொன்றும்பார்க்கிறிலள். இவள் த்ருஷ்டிவ்யாபாரமேயன்றியே, வைகல்-எல்லாக்காலத்திலும். நாடொறும்-ஒருநாளொழியாமல். இவள்-இவள். வாய் - வாக்கிலே. கொள் - கொள்ளும். வாசகமும் - வாசகசப்தங்களும். அன்னைமீர் - இவளையிப்படியாக்கினவன்னைமீர். மணி-தனக்குமுடிந்தாளலாம்படி சுக்ரஹமான நீலரத்நம்போலும். வண்ணன் - வடிவழகையுடையவனுடைய. நாமமே-சௌலப்ய சௌந்தர்யாதி ப்ரகாசகங்களான நாமங்களேயாய். இராநின்றன-இராநின்றன .......................................*

## ஈடு - ஆறாம்பாட்டு.

தௌர்ப்பல்யத்தாலே முதலிலே பார்க்கமாட்டாள், பார்த்தாளாகில் மற்றோரிடமும் பாராளென்கிருள்.

(நோக்கும்பக்கமெல்லாம்) பார்த்தபார்த்தவிடமெல்லாம். "திருப்பொருநல், நோக்கும்பக்கமெல்லாம்" என்று பாடுவாருமுண்டு. (கரும்பித்யாதி) கரும்பும், அத்தோடேகூட இசலிவளருகிற செந்நெலும், இரண்டுக்கும் நிழல்செய்கிற செந்தாமரையும். (வாய்க்கும்) சம

ருத்தமாமென்னுதல், இட்டதெல்லாம் சதசாகமாகப்பணைக்குமென்னுதல். (அதாவது-பஹுவாகவுண்டென்னுதல், ஒன்றுநூறுமென்னுதல்.) (தண்பொருநலித்யாதி) ப்ரமஹரமான திருப்பொருநல் வடகரையிலேயான வைஸ்வர்யத்தையுடைய தொலைவில்லிமங்கலம். (நோக்குமேல்) முதலிலேநோக்க சக்தையல்லள், வருந்திப்பார்த்தாளாகில் லத்திக்கையொழிய முகமெடுத்துப்பார்க்கிறிலள். (வைகல்நாடோறும்) கழிகிறநாள்தோறும். (வாய்க்கொள்வாசகமும்) வாயாலேசொல்லுகிறசொலவும். (மணிவண்ணன்நாமமே) வடிவழகுக்கு வாசகமானவற்றையே சொல்லாநின்றாள். குணவிஷயமாதல், விபூதிவிஷயமாதலன்றிக்கே, வடிவழகுக்குத்தோற்றமை தோற்றச்சொல்லாநின்றாள். இவள்நிலையெது, நம்நிலையெது. உங்களது ஸ்வரூபஜ்ஞாநம், இவளதுரூபஜ்ஞாநம்......*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு (நோக்குமித்யாதி) "நோக்குமேலத்திசையல்லால் மறுநோக்கிலள்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (தெளர்ப்பல்யத்தாதேயித்யாதி) (பார்க்கமாட்டாள்) என்னுமளவும் - "நோக்குமேல்" என்கிறயதிசப்தார்த்தம்.

ஊரை (பார்த்தபார்த்தவிடமெல்லாம்) என்றபடி. அர்த்தாந்தரம் (திருப்பொருனலித்யாதி) இப்போது * நோக்குகை - ப்ரவஹிக்கை. பொருனல்-தாம்ரபர்ணி. பாடுவாருமுண்டென்றது - திருப்பொருனலுக்கு விசேஷணமாக்கிச்சொல்லுவாருமுண்டென்றபடி. சம்ருத்தமாமென்னுதலென்றது - கரும்புமுதலானவை சம்ருத்தமாமென்றபடி. (இட்டதெல்லாம்) இத்யாதிக்கு சப்தநிர்வாஹம் - ஒன்றுபத்தாக வாய்க்குமென்று. "வண்மை" - (ஐஸ்வர்யம்)

"நாமமே" என்கிற ஏவகாரார்த்தம் (குணவிஷயமாதலித்யாதி) "இவள், அன்னைமீர்" என்றதுக்குபாவம் (இவள்நிலையெதித்யாதி) விவரணம் (உங்களித்யாதி)

அன்னைமீர், இவள் - நோக்குமேல், நோக்கும்பக்கமென்றுதொடங்கி, தொலைவில்லிமங்கலத்தையுடைய - அத்திசையல்லால் மறுநோக்கிலள்; வைகநாடொறுமித்யாரப்ய, மணிவண்ணன் நாமமே இத்யந்வயஃ...............................*

---

## ஏழாம்பாட்டு.

அன்னைமீரணிமாமயிற்சிறுமானிவணம்மைக்கைவலிந்
தென்னவார்த்தையுங்கேட்குறுடொலைவில்லிமங்கலமென்றல்லால்
முன்னநோற்றவிதிகொலோமுகில்வண்ணன்மாயங்கொலோவவன்
சின்னமுந்திருநாமமுமிவள்வாயனகடிருந்தவே.

## ஆறாயிரப்படி.

(அன்னைமீர்) நிரதிசய சௌந்தர்யமய சிகிநீ ப்ரக்ரியையாலே, பாலஹரிண முக்த விலோசனையாயிருந்த விச்சிறுப் பெண்பிள்ளை, நம்முடைய விதி நிஷேதாதிலங்கிநியாய்க்கொண்டு தொலைவில்லிமங்கலமெ

ன்னும் சொல்லல்லது மற்றொரு சொல்லும் கேளாள் ; வேதங்களும் வேதவித்க்ரேஸரரான ஸநகாதிகளு மேத்தினுப்போலே விசதமா யத்யுஜ்ஜ்வலமாம்படி அவனுடைய திவ்யசிஹ்நங்களையும் சௌந்தர்யாதி சகல குணங்களையு மதிமதுரமான சொற்களாலே சொல்லாநிற்கும். இப்படி யிவளுக்குத் தேவபிரான்றிருவடிகளிலுண்டான வபிநிவேசம், ஜந்மாந்தரக்ருத பரமபுருஷாநுபவஹேது மஹாபாக்யத்தாலே வந்ததோ !, அன்றியே அவனுடைய நிரவதிக சௌந்தர்யத்தைக் காண்கையாலே வந்ததோ ! என்று விஸ்மிதையாய், இப்படி யபிநிவிஷ்டையான விவளெனக்குங்கூட விதேயையல்லளென்கிறாள்.................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், மஹோதாரனான சர்வேஶ்வர னிவளுக்குப்பண்ணின வதிசயமிருந்தபடி - வேறொரு வார்த்தையுங்கேளாதே, அவனுடைய திவ்யசிஹ்நங்களும் திருநாமங்களும் தாம் திருந்தும்படி யிவள் வாக்விஷயமாயிற்றென்கிறாள்.

அன்னைமீர் - பெற்றுவளர்த்த தாய்மாரே. அணி - அழகிய. மா - நிறத்தையுடைத்தான. மயில் - மயில்போலே அபிரூபையாய். சிறு - முக்தமான. மான்-மான்போலேயிருக்கிற. இவள் - இச்சிறுப்பெண்பிள்ளை. நம்மை - நம்மை. கைவலிந்து - கைவிஞ்சி. தொலைவில்லிமங்கலம் - திருத்தொலைவில்லிமங்கலம். என்று - என்று. அல்லால் - ஒழிய. என்ன - ஏதேனுமொரு. வார்த்தையும்-வார்த்தையும். கேட்க-கேட்க. உறாள் - உறுகிறிலள். இதுதான், முன்னம் - முன்பு. நோற்ற - பண்ணின. விதிகொலோ - பாக்யமோ. முகில் - உதாரஸ்வபாவமான முகில்போலே யிருக்கிற. வண்ணன் - வடிவையுடையவன்பண்ணின. மாயங்கொலோ - ஆஶ்சர்யமோ. அவன் - அவனுடைய. சின்னமும் - அசாதாரணமான சிஹ்நங்களும். திருநாமமும் - ஔதார்யாதிவாசகமான திருநாமங்களும். திருந்த - திருத்தம்பெறும்படி. இவள்வாயனகள் - இவள்வாயன ஆகாநின்றன.................................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

அவன் சின்னமும் திருநாமமும் இவள்சொல்லப்புக்கவாறே நிறம்பெற்றனவென்கிறாள்.

( அன்னைமீர் ) இவள்பருவமிது ; நமக்கவ்வருகேபோன ஆஶ்சர்யத்தைப்பாரீகோள். "மௌத்ரேய" ( மைத்ரேய ) என்னுமாபோலே, ( அன்னைமீரென்கிறாள், சந்தோஷத்தாலே. ) (அணிமாமயில்சிறுமான்) அழகிய நிறத்தையுடைய பெண்பிள்ளை. அழகியதாய் ஶ்லாக்யமான மயில்போலே யிருக்கிறபெண்பிள்ளையென்னுதல். (சிறுமானிவள் நம்மைக்கைவலிந்து) நாம்கற்பித்ததிருநாமங்களையும் சொப்பனச்சொல்லமாட்டாதவள் நமக்கெட்டாதபடியானாள். (கைவலிந்து) கைகடந்து. ( எனவார்த்தையும் கேட்குறாள் ) தன் நினைவை நான் சொல்லிலும், மீட்கநினைத்துச் சொல்லுகிறேனென்று, என்வார்த்தையும் கேட்கத்தவிர்

ந்தாள்; திருத்தொலைவில்லிமங்கலமென்னில் நான்சொன்ன வார்த்தை யுங்கேட்கும். எனவார்த்தை - என்னுடையவார்த்தை.

(முன்னம்நோற்றவிதிகொலோ) ஒக்கப் பிறந்து வளர்ந்தோம், பின்பிது சாதிக்கக்கண்டிலோம். முன்பேபண்ணிவைத்த சுக்ருதபலமோ விது. "வியிவி-ுயா நழ" (விதிர்விதாநம்) என்னக்கடவதிறே. இவளாலே யநுஷ்டிதமான தர்மத்துக்கு இத்தனைபலம் கனக்க வுண்டாகமாட்டாது, இது சித்ததர்மபலமாகவேணும்; ஆகையால் (முகில்வண்ணன் மாயங்கொலோ) படாத்தை விழவிட்டு வடிவைக் காட்டினானோ. அதில் ஸம்ஶயம் - இத்தலையாலே சாதித்ததோ ரசேதநக்ரியைக்கு இத்தனை கனத்த பலமுண்டாகமாட்டாதென்று. இதில் ஸம்ஶயம் - இப்படியிதுக்கு முன்பொரு வ்யக்தியில் பலிக்கக் காணாமையாலே.

(அவன்சின்னமித்யாதி) "தவளவொண்சங்குசக்கரம்" என்பதான சிஹ்நங்களும், "அரவிந்தலோசநன், தேவபிரான்" என்பதான திருநாமங்களும். (இவள்வாயனகள்திருந்தவே) பண்டே திருந்தியிருக்கிறவை யிவள் சொல்லப்புக்கவாறே யுயிர்பெற்றிராநின்றது. ((திருந்தவே-இவள்வாயனகள்) நிறம்பெறும்படி யிவள்வாயனவாயின.) பட்டர் "அழகியமணவாளப்பெருமாள்" என்றால் திருநாமம் நிறம்பெறுமாபோலேயும், சோமாசியாண்டான் "எம்பெருமானார்" என்றால் திருநாமம் நிறம் பெறுமாபோலேயும், அநந்தாழ்வான் "திருவேங்கடமுடையான்" என்றால் திருநாமம் நிறம்பெறுமாபோலேயும். "யெஙு யாகீதி-ுதாமு-ணாஃ" (யேத்வயாகீர்த்திதாகுணாஃ) என்னுமாபோலே.*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (அன்னைமீரித்யாதி) "அவன் சின்னமுந்திருநாமமு மிவள்வாயனகள்திருந்தவே" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (அவன்சின்னமுமித்யாதி)

"சிறுமானிவள், எனவார்த்தையுங்கேட்குறாள்" என்றுகூட்டிபாவம் (இவள்பருவமித்யாதி) பாட்டுத்தோறும் "அன்னைமீர்" என்கிறதுக்குபாவம் (மைத்ரேயேத்யாதி) முந்தினவர்த்தத்துக்கு, "அணி" என்று - அழகாய், "மாமை" என்று - நிறமாய், "இல்" என்று - இருப்பிடமாய், (அழகியநிறத்தையுடைய) என்றபடி. த்விதியார்த்தத்துக்கு, அணியெனறு - அழகாய், மாவென்று - ஶ்லாக்யமாய், மயிலென்று - மயில்போலேயிருக்கிறவளென்றாய், அழகியதாய் ஶ்லாக்யமான மயில்போலேயிருக்கிற வலகபாரத்தையுடையவளென்றபடி. "சிறுமான்" - முக்தமான மான்பேடைபோலேயிருக்கிற பெண்பிள்ளை. "இவள்பருவம்" இத்யாதிவாக்ய விவரணம் (நாம்கற்பித்தவித்யாதி) சொப்பன-நன்றாக.

"எனவார்த்தையும்" என்கிறசப்தத்துக்குபாவம் (தன்னினைவையித்யாதி) "கேட்குறாள்" - கேட்கவுறுகிறிலள். கேட்கை தவிர்ந்தாளென்றபடி. எல்லாமப்படியோவென்ன (திருத்தொலைவில்லிமங்கலமித்யாதி)

இப்போது செய்த சுக்ருதமானாலோவென்ன (ஒக்கப்பிறந்தித்யாதி) "விதி" என்றால் - சுக்ருதவாசகமாமோவென்ன (விதிர்விதாநமித்யாதி) மேலிற்பத

த்துக் கவதாரிகை (இவளாலேயித்யாதி) ஈஸ்வரனென்றுதே, "முகில்வண்ணன்" என்றதுக்கு பாவம் (பிடாத்தையித்யாதி) படாத்தை - பச்சைவடத்தை. "மாயங்கொலோ" - ஆஸ்சர்யமோ. "முகில்வண்ணன் மாயமே" என்று நிஸ்சயிக்கவேண்டியிருக்க, உபயத்திலும் ஸம்ஸயிப்பானேன்னென்ன (அதில்ஸம்ஸயமித்யாதி) வ்யக்தி - வஸ்து.

அவன் சின்னமுந் திருநாமமு மெங்கே சொன்னுளென்ன (தவளமித்யாதி) "இவள்வாயனகள்" என்றது - இவள்வாயிலே யானவைகளாய்க்கொண்டென்றபடி. "திருந்த" - நிறம்பெற்றன. முன்பே திருந்தி யிருக்கவில்லையோவென்ன(பண்டேயித்யாதி) அதாவது - ப்ராவண்யத்தாலே சொன்னவை நிறம்பெற்றிருக்குமென்றபடி. "ப்ராவண்யத்தாலே சொன்னவை நிறம்பெற்றிருக்கும்" என்றதுக்கு சம்வாதம் (பட்டரித்யாதி) இது வால்மீகிபகவான் பக்கலிலுங் காணலாமென்கிறுர் (யேத்வயேத்யாதி) கதிதாஃ என்னுதே, "கீர்த்திதாஃ" என்கையாலே - குணங்கள் நிறம்பெற்றனவென்று தோற்றுகிறது.

அன்னைமீரொன்று தொடங்கி, கைவலிந்து - தொலைவில்லி மங்கலமென்றல்லால் - எனவார்த்தையுங் கேட்குருள்; அவன் சின்னமுந்திருநாமமு மிவள்வாயனகளாய்க்கொண்டு திருந்த; முன்னம் நோற்றவிதிகொலோ, முகில்வண்ணன் மாயங்கொலோவித்யந்வயஃ.........................................................

## எட்டாம்பாட்டு.

திருந்துவேதமும்வேள்வியுந்திருமாமகளிருந்தாமலிந்
திருந்துவாழ்பொருநல்வடகரைவண்டொலைவில்லிமங்கலங்
கருந்தடங்கண்ணிகைதொழுதவந்நாடொடங்கியிந்நாடொறு
மிருந்திருந்தரவிந்தலோசநவென்றென்றேநைந்திரங்குமே.

### ஆறுயிரப்படி.

(திருந்து) அவிப்லுத ஸ்வரவர்ணக்ரமமான சர்வவேதங்களாலும் ஸம்ஸ்துயமானனுய், தத்ஸமாராதந வேஷாநபிஸம்ஹித பலாநுஷ்டித நித்யநைமித்திகாதி சர்வ கர்மங்களாலே சமாராத்யனுமாய்க்கொண்டு, லக்ஷ்மீ பூமி நீளா நாயகனுன பரமபுருஷன் திருநாட்டிலே யெழுந்தருளியிருக்கிற விருப்பிற்காட்டில் சம்ருத்தனு யெழுந்தருளி யிருந்து வாழ்கிற பொருநல் வடகரை வண்டொலைவில்லிமங்கலத்திலே, *இமைகொள்சோதிச்செந்தாமரைக்கட்பிரானிருந்தமையை யலர்ந்ததொருநெய்தல் தடாகம்போலே யிருந்த திருக்கண்களாலேகண்டு கைதொழுதவந்நாள்தொட்ங்கி யிந்நாடொறும், இருந்திருந்தக்கண்களையேநினைத்து, அரவிந்தலோசந, அரவிந்தலோசந, என்றென்றே சொல்லிநைந்து தளராநிற்குமென்கிருள். ..............................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், திருத்தொலைவில்லிமங்கலம் திருவடிதொழுத வன்றுதொடங்கியென்றும் அரவிந்தலோசநனென்கிற திருநாமத்தையேசொல்லி சிதிலையாகாநின்றாளென்கிறாள்.

திருந்து - பகவத்ஸ்வரூப ரூபகுணவிபூதி ப்ரதிபாதநத்தில் திருத்தமுடைத்தான. வேதமும்-வேதமும். வேள்வியும்-அந்தவேதப்ரதிபாத்யமாய் பகவதாராதநரூபமான யாகாதிகர்மங்களும். மா-அதுக்கநுரூபசம்பதபிவர்த்தகையான. திருமகளிரும்-லக்ஷ்மியுமாகிற. தாம்-தாங்கள். மலிந்து-பகவத்ஸம்ச்லேஷத்தாலே அபிவ்ருத்தியையுடையராய். இருந்து-ப்ரதிஷ்டிதராயிருந்து. வாழ் - வாழுகிற. பொருநல்வடகரை-திருப்பொருநல்வடகரையில். வண், தொலைவில்லிமங்கலம் - திருத்தொலைவில்லிமங்கலத்தை. கரு-கருகி. தடம்-பெருத்த. கண்ணி - கண்ணையுடையவள். கைதொழுத-கைதொழுத. அந்நாள்தொடங்கி-அந்நாள்தொடங்கி. இ-இவ்வருகுண்டான. நாடொறும்-நாள்தோறும். இருந்திருந்து-அரதியாலே 'தரித்திருக்கமாட்டாதவள் வருந்தியிருந்திருந்து. அரவிந்தலோசந-அரவிந்தலோசநனே!. என்றென்றே-என்று ஸம்போதித்துத் தன்னாற்றாமையாலே பலகாலுமழைத்தே. நைந்து-சிதிலையாய். இரங்கும்-நெஞ்சழியாநின்றாள்.

தாமென்று - ஈச்வரன்றன்னைச் சொல்லவுமாம் ........ ..................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

. அவ்வூரைத்தொழுதவன்றுதொடங்கி யின்றளவுமுண்டான விவளுடைய சைதில்யத்தைச் சொல்லுகிறாள்.

(திருந்துவேதமும்) வேதம் கட்டளைப்பட்டது அவ்வூரிலுள்ளார் பரிக்ரஹித்தபின்பாயிற்று. “[illegible]” (ஸ்வரூபம்ஜ்ஞாநமாத்ரம்) என்கிற ச்ருதிகள், ஜ்ஞாத்ருத்வச்ருதிகள், பேதாபேதச்ருதிகள், ஸகுணச்ருதிகள், நிர்க்குணச்ருதிகள், இவையடங்க விஷயவிபாகத்தாலே பொருங்க விட்டிருக்குமவர்கள். (வேள்வியும்) வைதிகசமாராதநமும். கற்றகல்வி அநுஷ்டாநசேஷமாயிருக்கிறபடி. ( திருமாமகளிருந்தாம் ) ஆராதகருடைய பௌஷ்கல்ய மிருக்கிறபடி. (திருமாமகளிரும்) ஸம்பத்தும். ( (தாம்) வேதமும், வைதிகக்ரியையும், ஸ்ரீவைஷ்ணவ ஸம்பதபிவர்த்தகையான லக்ஷ்மியுமாகிறதாங்கள் பகவத்ஸம்ச்லேஷத்தாலே அபிவ்ருத்தியுடையராய் ப்ரதிஷ்டிதராயிருந்து வாழுகிற. ) அன்றிக்கே, ஆராத்யரான பிராட்டியுமவனுமாகவுமாம். தாம்-தான். ப்ரமாண ப்ரமேய ப்ரமாதாக்கள் குறைவற்று வர்த்திக்கிறதேசம். ( ப்ரமாதாக்கள்-அர்த்தாத்ஸித்தம். ) (மலிந்திருந்து) பரமபதத்திலுள்வெதுப்போடேபோலேயாகாதே யிருப்பது. (பொருநல்வடகரை) விரஜைக்கக்கரையென்னுமாபோலே. (கருந்தடங்கண்ணி) கண்ணழகுக்கு * அஸிதேக்ஷணையோடொக்கும். ( தடங்கண்ணி ) அவளிற்காட்டில் வ்யாவ்ருத்தி. அவனை யநுபவிக்கையால்வந்ததிறே யவளுக்கு, அவளிற்காட்டி லேற்றமுண்டிறே அம்மிதுநத்தை யநுபவிக்கையாலே யிவள் கண்ணுக்கு.

தொழும்போதும் வடிவழகியராயிருப்பார் தொழவேணுமாகாதே. (கைதொழுதவந்நாள்தொடங்கி) திருவடிதொழுதவன்றுதொடங்கி யின்றளவும் வரவென்னுதல், தன்சத்தையுண்டானவன்றுதொடங்கி யின்றளவும் வரவென்னுதல். "𑌅𑌸𑌨𑍍𑌨𑍇𑌵," "அன்று நான்பிறந்திலேன்," இதிறே முன்புத்தை நிலை. அவன்கையிலுமன்றிக்கே, பிறர்கையிலுமன்றிக்கே, தன்கையதாயிருந்தபடி யென்று!ன் தன்ஸத்தை. * தொழுதெழுவிறே. (இருந்திருந் தரவிந்தலோசநவென்றென்றே) ஒருகால் "அரவிந்தலோசந" என்னும்போது, நடுவேபதின்கால் பட்டைப்பொதிசோறவிழ்க்கவேணும். (என்றென்றே) "தௌர்ப்பல்யத்தாலேசொல்லமாட்டாளோ" என்றிருக்கச்செய்தே, சொல்லித்தலைக்கட்டாநின்றுள். அவனரவிந்தலோசநன், இவள் கருந்தடங்கண்ணி, இருவருமொருமுகத்திலேகாணு மகப்பட்டது. ( நைந்திரங்குமே ) சிதிலையாயழியாநின்றுள். சரீரத்தளவுமன்றிக்கே, நெஞ்சும் சிதிலமாகாநின்றது. இரக்கம்-ஈடுபாடு......................................................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. ( திருந்தித்யாதி ) "தொலைவில்லிமங்கலம் - கைதொழுதவன்னுள் தொடங்கி" இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை (அவ்வூரையித்யாதி)

கட்டளைப்பட்ட ப்ரகாரத்தைக்காட்டுகிருர் (ஸ்வரூபம்ஜ்ஞாநமாத்ரமித்யாதி) ஸ்வரூபம் ஜ்ஞாநமாத்ரமென்கிற ஶ்ருதிகளாவன - "𑌸𑌤𑍍𑌯𑌂𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌨𑌨𑍍𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮," ( ஸத்யம்ஜ்ஞாநமநந்தம்ப்ரஹ்ம, ) "𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮" ( விஜ்ஞாநம் ப்ரஹ்ம ) இத்யாதிகள். ஜ்ஞாத்ருத்வஶ்ருதிகளாவன - "𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌃 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌤𑍍" (யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்) இத்யாதிக்ள். "𑌦𑍍𑌵𑌾 𑌸𑍁𑌪𑌰𑍍𑌣𑌾" (த்வாஸுபர்ணு) "𑌨𑌿𑌤𑍍𑌯𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌨𑌾𑌂" (நித்யோநித்யாநாம்) "𑌪𑌤𑌿𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍍𑌯" (பதிம்விஶ்வஸ்ய) இத்யாதிகள் - பேதஶ்ருதிகள். "𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌸𑌿" (தத்த்வமஸி) "𑌸𑌰𑍍𑌵𑌂 𑌖𑌲𑍍𑌵𑌿𑌦𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮" (ஸர்வம்கல்விதம்ப்ரஹ்ம) இத்யாதிகள் - அபேதஶ்ருதிகள். "𑌸𑍋𑌽𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍𑌕𑌾𑌮𑌾𑌨𑍍" ( ஸோஶ்நுதேஸர்வாந்காமாந் ) "𑌅𑌪𑌹𑌤𑌪𑌾𑌪𑍍𑌮𑌾" (அபஹதபாப்மா) இத்யாதிகள் - ஸகுணஶ்ருதிகள். "𑌨𑌿𑌷𑍍𑌕𑌲𑌂 𑌨𑌿𑌷𑍍𑌕𑍍𑌰𑌿𑌯𑌂" (நிஷ்களம்நிஷ்க்ரியம் ) "𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌂" (நிர்க்குணம் ) "𑌨𑌿𑌰𑌞𑍍𑌜𑌨𑌂" ( நிரஞ்ஜநம் ) இத்யாதிகள் - நிர்க்குணஶ்ருதிகள். ( இவையடங்க விஷயவிபாகத்தாலே யாருங்கவிட்டிருக்கை ) ஆவது; ஜ்ஞாநமாத்ரமென்றது - "𑌤𑌦𑍍𑌗𑍁𑌣𑌸𑌾𑌰𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌤𑍁 𑌤𑌦𑍍𑌵𑍍𑌯𑌪𑌦𑍇𑌶𑌃" ( தத்குணஸாரத்வாத்துதத்வ்யபதேஶ: ) என்கிறபடியே ஞாநப்ராசுர்யத்தைப்பற்றவும், ஸ்வரூபம் ஸ்வயம்ப்ரகாஶமென்று தோற்றுகைக் ௺ம், ஜ்ஞாத்ருத்வத்தை நிஷேதிக்கவந்த தன்றென்றும்;பேதாபேதஶ்ருதிகளில்,பே ஶ்ருதியே-பரமார்த்தம், அபேதம்சொல்லுகிறது - சரீராத்மபாவ சம்பந்தந்தோற்றுகைக்காகச் சொன்னதித்தனையென்றும்; சகுண நிர்க்குணஶ்ருதிகளில் வைத்துக்கொண்டு, சகுணஶ்ருதியே - பரமார்த்தம், நிர்க்குணமென்கிறது - ப்ரஹ்மத்து ப்ராக்ருதஹேயகுணங்களில்லாமையைப்பற்றச் சொன்னவித்தனை, கல்யாண

குணங்களை நிஷேதிக்கவந்ததன்றென்றும், இப்படி விஷயவிபாகத்தாலே நிச்சயி த்திருக்கை. " திருந்துவேதமும் " என்றத்தோடே, " வேள்வியும் " என்றதுக்குச ங்கதி (கற்றகல்வியித்யாதி) " வேள்வியும் " என்றத்தோடே, " திருமாமகளிரும் " என்றதுக்குசங்கதி ( ஆராதகரித்யாதி ) மந்த்ரங்களைக்கொண்டு வைதிகஸமாராதந ம்பண்ணும்போது ஐச்வர்யம் குறைவறவுண்டாயிருக்கவேணுமே, அத்தைச்சொல் லுகிறதென்று கருத்து. "திருமாமகளிருந்தாம்" என்றதுக்கு; திருமாமகளிரென்று- சம்பத்தாய், அத்தையுடையதாங்களும் - ப்ராஹ்மணருமென்று சப்தார்த்தம். த்வி தீயார்த்தத்துக்கு, திருமாமகளிரும், தாம் - தாமும். ஈச்வரனுமென்று சப்தார்த்த ம். "மலிந்திருந்து" என்றதுக்கு பாவம் (ப்ரமாணேத்யாதி) ப்ரமாணம் - வேதம். முந்தினவர்த்தத்தில், ப்ரமேயம் - வேள்வி; ப்ரமாதாக்கள் - ப்ராஹ்மணர். த்விதீ யார்த்தத்துக்கு, ப்ரமேயம் - ஶ்ரிய:பதி; "வேள்வி" என்றபோதே, தத்கர்த்ருத்வே ந ப்ரமாதாக்களு மர்த்தசித்தர். இரண்டாமர்த்தத்திலே, " திருமாமகளிருந்தாம் மலிந்திருந்து " என்று - இங்கே மலிவுசொன்னதுக்குபாவம் ( பரமபதத்திலித்யா தி ) மலிந்திருந்து - மிக்கிருந்து, வாழ்-வர்த்திக்கிற, தொலைவில்லிமங்கலமென்று சப்தார்த்தம். "திருந்துவேதம்" இத்யாதிக்கு - " கட்டளைப்பட்டவேதமும், வேள் வியும் - வைதிகசமாராதநமும், திருமாமகளிரும் - ஐச்வர்யமுமான, தாம் - இவை யெல்லாம், மலிந்திருந்து " என்றுமுந்தினவர்த்தத்தில் சப்தார்த்தம் சொல்லுவா ருமுண்டு.

வ்யாவ்ருத்தியை சஹேதுகமாகக்காட்டுகிறார் ( அவளையநுபவிக்கையாலித் யாதி ) "கருந்தடங்கண்ணி" என்று - அவயவவைலக்ஷண்யத்தைச்சொல்லி, " கை தொழுத " என்றதுக்குபாவம் ( தொழும்போதுமித்யாதி ) திருவடித்தொழுதவன் று தொடங்கியென்றது - அவ்வூரிலவனைத் திருவடித்தொழுதவன்று தொடங்கியெ ன்றபடி. சத்தையுண்டானவன்று தொடங்கியென்றது - மயர்வறமதிநலம்பெற்ற வன்றுதொடங்கியென்றபடி. இப்போதைக்கு, " தொலைவில்லிமங்கலம் - கைதொ ழுதவந்நாள்தொடங்கி " என்றதுசேரும்படி யெங்ஙனேயென்னில் ; இவள் சொ ற்கற்கை யென்றும், தொலைவில்லிமங்கலந் தொழுகையென்றும், இரண்டில்லை யாகையாலே, பால்யமேதொடங்கி இவளுக்குத் திருத்தொலைவில்லிமங்கலத்தில் ப் ராவண்யம் சத்தாப்ரயுக்தமென்று கண்டுகொள்வது. ஜ்ஞாநமில்லாதபோது சத் தையில்லையோவென்ன (அஸந்நேவேத்யாதி) (அன்றுநான்பிறந்திலேன்) பகவத்வி ஷயத்தில் ருசிபிறப்பதற்குமுன்பு நான்பிறந்திலேன். அஜ்ஞா யஸத்ஸமனாய்ப் போந்தேனென்றபடி. திருச்சந்தவிருத்தம் அறுபத்துநாலாம்பாட்டு. " நாகிஞ் சுவுதஶேஷிதுவ " ( நாகிஞ்சித்குர்வதஶ்ஶேஷத்வம் ) என்கிறபடியே, தொ ழுகையாகிற கிஞ்சித்காரத்தை விவக்ஷித்தருளிச்செய்கிறார் ( அவன்கையிலுமித்யா தி ) இத்தால் - தொழுகையாகிற கிஞ்சித்காரத்தாலே சத்தாசித்தியென்றபடி. அப் படிதொழுகை சத்தாஹேதுவாயிருக்குமோவென்ன (தொழுதெழுவிறையென்று

"இருந்திருந்து" என்றதுக்குபாவம் (ஒருகாலித்யாதி) பட்டைப்பொதிசோ று - பாக்குப்பட்டையிற் கட்டினசோறு. " என்றே " என்கிற வவதாரணார்த்த ( தௌர்ப்பல்யத்தாலேயித்யாதி ) ஒருமுகத்திலேயென்றது - பரஸ்பரம் கண்ணி லேயென்றபடி. * நைவுக்கும், * இரங்குகைக்கும் பேதமேதென்ன ( சரீரத்தளர் மித்யாதி ) ......................................................................

# ஒன்பதாம்பாட்டு.

இரங்கிநாடொறும்வாய்வெரீஇயிவள்கண்ணநீர்களலமர
மரங்களுமிரங்கும்வகைமணிவண்ணவோவென்றுகூவுமால்
துரங்கம்வாய்பிளந்தானுறைதொலைவில்லிமங்கலமென்றுதன்
கரங்கள்கூப்பித்தொழுமவ்வூர்த்திருநாமங்கற்றதற்பின்னையே.

## ஆறாயிரப்படி.

(இரங்கி) இவளைத் திருத்தொலைவில்லிமங்கலத்திலே கொண்டு புக்கு அவ்வூர்த்திருநாமத்தை நீங்கள் கற்பிக்கக்கற்றதற்பின், விஶ்லேஷ வ்யஸநத்தாலே அத்யந்தமவஸந்நையாய், நாடோறு மவன்றிருநாமத்தையே வாய்வெருவி, அசேதநமான மரங்களுங்கூட விரங்கும்படி மஹார்த்தியோடே, மணிவண்ணவோ! என்றுகூப்பிட்டழைத்து, துரங்கம் வாய்பிளந்தான் தன்ப்ரமமெல்லாம்போம்படி யெழுந்தருளியிருந்த தொலைவில்லிமங்கலமென்றுசொல்லி, தன்கைகளைக் கூப்பித்தொழாநிற்கும், ஆதலால், அவ்வூரிலேகொண்டுபுக்கு அவ்வூர்த்திருநாமத்தைக்கற்பித்துக் கெடுத்திகோளென்கிறாள் ... ............ ................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவனுடைய ஸௌந்தர்யாதிவாசகமான திருநாமத்தைச்சொல்லிக்கூப்பிட்டு, விரோதிநிவர்த்தகனானவன் வர்த்திக்கிற திருத்தொலைவில்லிமங்கலத்தைச்சொல்லி யஞ்சலிபண்ணாநின்றாளென்கிறாள்.

இவள்-இவள். நாடொறும்-நாடோறும். இரங்கி-நெஞ்சழிந்து. வாய்வெரீஇ-ப்ரவசையாய்க்கொண்டு வாஸநையாலேவாய்வெருவி. கண்ணநீர்கள் - கண்ணநீர்கள். அலமர-பாய்ந்தலமாக்கும்படியாக. மரங்களும் - அசேதநமானமரங்களும். இரங்கும்வகை - இரங்கும்படி. மணி - நீலரத்நம்போலே தர்ஶநீயமான. வண்ணவோ-வடிவையுடையவனே!. என்று-என்று. கூவும்-கூப்பிட்டழையாநின்றாள். அவ்வளவேயன்றியே, துரங்கம்-குதிரையாய்வந்தகேசியின். வாய்-வாயை. பிளந்தான்-பிளந்தக்ருஷ்ணன். உறை-வர்த்திக்கிற. தொலைவில்லிமங்கலம்-திருத்தொலைவில்லிமங்கலம். என்று-என்று. அவ்வூர்த்திருநாமம் - அவ்வூர்த்திருநாமம். கற்றதற்பின்னை-கற்றபின்பு. அவ்வூரைநோக்கி, தன்-தன். கரங்கள்-கைகளை. கூப்பி-கூப்பி. தொழும் - தொழாநிற்கும்..............................................................................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

இவள் மநோவாக்காயங்கள் முதலிலேதொடங்கி யவன்பக்கலிலே ப்ரவணமாயிற்றினவென்கிறாள்.

(இரங்கி) நெஞ்சழிந்து, (வாய்வெரீஇ) அடியற்றபேச்சாயிற்றது. "விஸிந்த்யவாசாப்ருவதீதமேவ" (விசிந்த்யவாசாப்ருவதீதமேவ) என்னுமாபோலே - மநஸ்ஸஹகாரமின்றிக்கேயிருக்கை. (நா

டொறும்) * மயர்வறமதிநலமருளப்பெற்றவன்றே அறிவுகேடும் குடிபு குந்ததுகாணும். பக்திரூபாபந்நஜ்ஞாநமிறேபெற்றது. (இவள்கண்ணநீர் களலமர) கண்கள் வாய்வெருவுகிறபடி. நாடொறும் வாய்வெரீஇயென்றது - * பொய்ந்நின்றஞானந்தொடங்கி யிவ்வளவும் வரக்கூப்பிட்ட கூப்பீட்டையிறே. (மரங்களுமிரங்கும்வகை) சேதநாசேதநவிபாகமற அழியும்படிகாணு மிவள் வாய்விட்டுக்கூப்பிடும்படி. எம்பாரை "மரங்களுமிரங்கக்கூடுமோ" என்றுகேட்க, "இதருளிச்செய்த வன்றுதொடங்கி யெத்தனைபாவசுத்தியில்லாதார்வாயிலே புக்கதென்றுதெரியாது; இங்ஙனேயிருக்கச்செய்தே, யமநியமாதி க்ரமத்தாலே பதஞ்செய்யப்பார்த்தாலும் சுக்கான்பருக்கைபோலே நெகிழாதேயிருக்கிற நெஞ்சுகளு மின்றுநெகிழ்கிறபடிகண்டால் சமகாலத்தில் மரங்களிரங்கச்சொல்லவேணுமோ" என்றருளிச்செய்தார். "மரங்கணின்று மதுதாரைகள்பாயும் மலர்கள்வீழும் வளர்கொம்புகள்தாழும்" என்று, அவதாரத்தில் திருக்குழலோசையிற்பட்டதெல்லா மிவ்வார்த்தநாதத்திலே படுமாயிற்று; "அபி வ்ருக்ஷா: பரிம்லாநா:" (அபிவ்ருக்ஷா:பரிம்லாநா:) என்று, ராமவிஶ்லேஷத்தில் பட்டதெல்லா மிவள்பேச்சில்படாநின்றன. பகவத்குணங்களிலும் குணநிஷ்டர்பாசுர மழிக்கும்போலே. (மணிவண்ணவோவென்றுகூவுமால்) இவளையே! தான் நீங்கள் மீட்கப்பார்க்கிறது. வடிவழகைச்சொல்லியன்றோ கூப்பிடுகிறது.

(துரங்கமித்யாதி) பண்டுபகரித்தவனிப்போ துபகரிக்கைக்குவந்திருக்கிறதேசம். கேசிவாயை அநாயாஸேந கிழித்தவன்வர்த்திக்கிறவிடம். (தொலைவில்லிமங்கலமென்று தன்கரங்கள்கூப்பித்தொழும்) (அத்தலைப்பித்தலையாவதே! என்கிறாள்.) தன்னூரின்பேரைச்சொல்ல வேல்லாரும் கையெடுக்கும்படி பிறந்தவள்கிடீர் தானவனூரைச்சொல்லித்தொழுகிறாள். இக்கைகண்டார் தொழுமத்தனையென்றுபோலேகாணு மிவளிருப்பது. தான்தொழுவது ஸ்த்ரீத்வத்துக்குப்போராதிறே. இதுதானென்றுதொடங்கியென்னில் (அவ்வூர்த்திருநாமம் கற்றதற்பின்னையே) இவள்சொற்கற்றபின்பு. திருநகரியிலுள்ளார் சொற்கற்பது "திருத்தொலைவில்லிமங்கலம்" என்றுபோலேகாணும். இவள்பேச்சுக்கற்கையென்றும், திருநாமம் சொல்லுகையென்றும் - இரண்டில்லை. கோயிலிலுள்ளார் "கோயில்" என்றும், "பெருமாள்" என்றும் கற்குமாபோலே. தோழி, தன்வாயாலே "திருத்தொலைவில்லிமங்கலம்" என்றால் இவள்சொல்லினிமைபிறவாமையாலே - அவ்வூரென்கிறாள்காணும். என்றான், முன்புசொன்னானேயென்னில்; அதப்படியிராமலிறே - அவ்வூரென்கிறது ...

## ஜீயர் அரும்பதம்.

(இன்பத்தம்பாடு) (இரக்கமித்யாதி) "இரக்கி, கூவுமால், கரங்கள்கூப்பித்தொழும், திருநாமங்கற்றதற்பின்னை" என்கிறபதங்களைக்கொண்டுதொகுத்தவதாரிகை (இவள்மநோவாக்காயங்களித்யாதி)

நெஞ்சழிந்தால் வாய்வெருவக்கூடுமோவென்ன (அடியற்றவித்யாதி) இதுக்குத்ருஷ்டாந்தம் (விசிந்த்யேத்யாதி) "ராமேதி ராமேதி ஸதைவ புத்த்யா விசிந்த்ய வாசா ப்ருவதீ ததேவ । தஸ்யாநுரூபாஞ்ச கதாம் ததர்த்தாம் ததைவ பஶ்யாமி ததா ஶ்ருணோமி" (ராமேதிராமேதிஸதைவபுத்த்யாவிசிந்த்யவாசாப்ருவதிதமேவ । தஸ்யாநுரூபாஞ்சகதாம்ததர்த்தாம்ததைவபஶ்யாமிததாஶ்ருணோமி ) இதிஸுந்தரகாண்டேஸீதா. "ப்ருவதீ" (ப்ருவதீ) என்கிற பதத்தாலே - வாக்காலேயென்னுமது சித்தமாயிருக்க, "வாசா" (வாசா) என்று விசேஷிக்கையாலே மநஸ்ஸஹகாரமில்லையென்றபடி. விசிந்த்யவர்த்தமாநா, வாசைவப்ருவதி, நதுவக்து மிச்சயேதி ஸ்லோ தாத்பர்யம். "வாசாப்ருவதீ" (வாசாப்ருவதி) என்றமாத்ரமே யிவ்விடத்திலேவேண்டுவது. "நாடொறும்" என்கிறதுக்கவதியேதென்ன (மயர்வறவித்யாதி) அப்போதறிவுகேடு குடிபுகுருகைக்கு ஹேதுவேதென்ன (பக்திரூபேத்யாதி) "வாய்வெரீஇ" என்றத்தோடேகூட்டி "இவள்கண்ணநீர்கள்" இத்யாதிக்குபாவம் (கண்களித்யாதி) "அலமர" என்றது - சம்ருத்தமாகவென்றபடி. கீழ், "மயர்வறமதிநலம்" இத்யாதிவாக்யத்தாலே - "நாடொறும்-இரங்கி" என்று கூட்டியருளிச்செய்து; "நாடொறும் - வாய்வெரீஇ" என்று மேலேகூட்டிபாவம் (நாடொறும்வாய்வெரீஇ யென்றதித்யாதி) ஆக, "நாடொறும்" என்றத்தை - கீழும்மேலுங்கூட்டுவது.

மரங்களிரங்கக்கூடுமோவென்ன (சேதநாசேதநேத்யாதி) "மரங்களும்" என்றசப்தம் - சேதநனை சமுச்சயிக்கிறது. இதுக்கு சம்வாதம் (எம்பாரையித்யாதி) மரங்களழியக்கண்டவிடமுண்டோவென்ன; இரண்டுதாஹரணம் (மரங்கணின்றுமித்யாதிவாக்யத்வயத்தாலே) பெரியாழ்வார்திருமொழி. ஸ்பஷ்டோர்த்தঃ. கீழ்-சாம்யஞ்சொல்லி, ஆதிக்யம்சொல்லுகிறுர் (பகவத்குணங்களிலுமித்யாதி) "வ்ருக்ஷாঃபரிம்லாநாঃ" (வ்ருக்ஷாঃபரிம்லாநாঃ) என்றவிடத்திற்போலே சாரீரமான வாட்டமன்றிக்கே, "இரங்கும்" என்று - மநஸ்ஸைதில்யம் சொல்லுகையாலே, வாசியுண்டென்று கருத்து. "மணிவண்ணவோ" என்றதுக்கு ஹார்த்தபாவம் (இவளையேயித்யாதி) விவரணம் (வடிவழகையித்யாதி)

"கேசிவாயைக்கிழித்தவன் வர்த்திக்கிற தொலைவில்லிமங்கலம்" என்றதுக்கு பாவம் (பண்டித்யாதி) கரங்களென்னுதே, "தன்கரங்கள்" என்றுவிசேஷித்ததுக்கு பாவத்வயம் (தன்னூரின்பேரை யித்யாதிவாக்யத்வயத்தாலே) அதாவது-தன்னூரின்பேரைச் சொல்ல எல்லாரும் கையெடுக்கும்படி பிறந்தவள்கிடீர்! தான் "தொலைவில்லிமங்கலம்" என்று அவனூரைச்சொல்லித் தொழுகிறுளென்னுதல்; தன் கையழகைக்கண்டுபட்டு அவன்தொழும்படி யிருக்கக்கடவ விவள்கிடீ! யிப்போதவனைத் தொழுகிறுளென்னுதல். தான் தொழுதால் குற்றமோவென்ன (தான்தொழுவதித்யாதி)

"கற்றதற்பின்னையே" என்றதுக்கர்த்தம் (இவள்சொற்கற்றபின்பென்று) சொற்கற்றபின்பென்றர்த்தமானுல், "அவ்வூர்" என்று விசேஷிப்பானென்னென்ன (திருநகரியிலுள்ளாரித்யாதி) சொற்கற்றே திருநாமங்கற்கவேண்டாவோவென்ன (இவள்பேச்சித்யாதி) அன்றிக்கே, கீழ்வாக்யத்தால் பலிதமாதல். உக்தத்துக்கு த்ருஷ்டாந்தம் (கோயிலிலித்யாதி) திருத்தொலைவில்லிமங்கலமென்னுதே. "அவ்வூர்" என்கிறதென்னென்ன (தோழியித்யாதி)

அவ்வூர்த்திருநாமங்கற்றதற்பின்னை - இரங்கியென்று தொடங்கி, கரங்கள் கூப்பித்தொழுமென்றந்வயம்.......................................*

# பத்தாம்பாட்டு.

பின்னைகொனிலமாமகள்கொறிருமகள்கொல்பிறந்திட்டா
ளென்னமாயங்கொலோவிவணெடுமாலென்றேநின்றுகூவுமால்
முன்னிவந்தவனின்றிருந்துறையுந்தொலைவில்லிமங்கலஞ்
சென்னியால்வணங்குமவ்வூர்த்திருநாமங்கேட்பதுசிந்தையே.

## ஆறாயிரப்படி.

(பின்னைகொல்) நீங்களிவளைத் திருத்தொலைவில்லிமங்கலத்திலே கொண்டுபுக்கவன்றுதொடங்கி, அவனுடைய நிரவதிகமான வாத்ஸல்யாதி குணங்களையே சொல்லிக் கூப்பிட்டு, தன்னோடு சம்ச்லேஷிக்கைக் கேற்கத் தானவதாரம் பண்ணுவதற்குமுன்னே எம்பெருமான் பலவடிவுகளைக்கொண்டு நின்றிருந்துறைகிற திருத்தொலைவில்லிமங்கலத்தைச் சென்னியால்வணங்கி, அவ்வூர்த்திருநாமத்தையென்றே ! கேட்பதென்று சிந்தியாநிற்கும் ; இப்படி யெம்பெருமான்பக்கலுண்டான அபிநிவேசவெள்ளத்திலே யழுந்திக் கிடக்கிற விவள், நப்பின்னைப் பிராட்டியோ !, பூமிப்பிராட்டியோ !, பெரியபிராட்டியோ !, அன்று, இவள்தானென்று சொல்லலாமித்தனை ; ஏவம்விதமான ப்ரேமாதிசயம்கண்டு மறியோம், இதென்னவாஸ்சர்யமென்று விஸ்மிதையாய்க்கொண்டு ; இப்படி யபிநிவிஷ்டையான விவளை யென்னாலும் நிவர்த்திப்பிக்கமுடியாதென்று சொல்லி முடிக்கிருள்.......................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவனுடைய வதிசயித வ்யாமோஹத்தைச் சொல்லிக் கூப்பிடாநின்றுகொண்டு ; அவ்வூரைநோக்கி வணங்குவது, அவ்வூரின்பேரைப் பிறர்சொல்லக் கேட்க வாசைப்படுவதாகாநின்ருள் ; இவளுடைய வதிப்ராவண்யமிருந்தபடியால் இவள் ஸ்ரீபூமிநீளைகளிலே அந்யதமையோ வென்றதிசங்கைபண்ணுகிருள்.

பின்னைகொல் - நிரதிசயபோக்யபூதையான நப்பின்னைப்பிராட்டியோ. நிலம் - பூமிக்கு நிர்வாஹிகையாய். மா - ஶ்லாக்யையான. மகள்கொல் - ஸ்ரீபூமிப்பிராட்டியோ. திருமகள்கொல் - அவனுக்கு நிரதிசய ஸம்பத்ரூபையானலக்ஷ்மியோ. பிறந்திட்டாள் - இப்படி பிறந்திருக்கிறவள். இது, என்ன-என்ன. மாயங்கொலோ- ஆஸ்சர்யமோ. இவள் - இவள். நெடுமாலென்றே - அவன் வ்யாமோஹாதிசயத்தைச்சொல்லி. நின்று - நின்று. கூவும் - அழையா நின்ருள். அவ்வளவே யன்றிக்கே, அந்த வ்யாமோஹமடியாக, அவன் - அவன். முன்னி - முற்பாடனாய். வந்து - வந்து. நின்றிருந்து - நிற்பதிருப்பதாய். உறையும் - நித்யவாசம்பண்ணுகிற. தொலைவில்லிமங்கலம் - திருத்தொலைவில்லிமங்கலத்தை. சென்னியால் - தலையாலே. வண

ங்கும் - வணங்காநிற்கும். தான் சொல்லுமதிலும், அவ்வூர்த்திருநாமம் - அவ்வூர்த் திருநாமத்தை. கேட்பதே - பிறர்சொல்லக்கேட்கையே. சிந்தை - நினைவாய். இராநின்றாள் - இராநின்றாள்.........................................................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

அவனுலல்லது செல்லாத இவளுடைய ப்ராவண்யாதிசயத்தைக்கண்டு, பிராட்டிமாரிலே யொருத்தியோ! வென்று சங்கிக்கிருள்.

( பின்னைகொல் ) பின்னை பிறந்திட்டாளோ; அங்ஙனன்றியே, ஸ்ரீபூமிப்பிராட்டி பிறந்திட்டாளோ; அன்றிக்கே, எல்லார்க்கு மிவ்வேற்றங்களைக்கொடுக்கும் பிராட்டிதானே பிறந்திட்டாளோ; சர்வேச்வரனுடைய சம்பத்தாயிருக்குமவள் பிறந்திட்டாளோ, அஸ்ஸம்பத்துவிளையும் பூமியாயிருக்குமவள் பிறந்தாளோ?, அவ்விளை பூமியினுடைய பலரூபமா யிருக்குமவள் பிறந்தாளோ. அங்ங னன்றிக்கே, ( பிறந்திட்டாளோ ) அவர்களுக் கிவள்படி யில்லாமையாலே அவர்களொப்பன்று; லோகமெல்லாம் வாழுகைக் கிவளொருத்தி பிறந்தாளோ வென்றுமாம். " விஷ்ணுநாஸத்ருஶோவீர்யே " ( விஷ்ணுநாஸத்ருஶோவீர்யே ) என்றாப்போலே, நாய்ச்சிமார்பக்கலிலேயு மோரோவகைக் கொப்புச்சொல்லலா யிருக்கையாலே கதிர்பொறுக்குகிருள். " உபமாநமஶேஷாணாம் ஸாதூநாம்யஸ்ஸதாபவத் " (உபமாநமஶேஷாணாம்ஸாதூநாம்யஸ்ஸதாபவத்) என்கிறபடியே, இவளையெல்லார்க்கு மொப்பாகச்சொல்லலாய் இவர்க்கொப்பாவா ரொருவருமில்லைகாணும்.

( என்னமாயங்கொலோ ) பகவத்விபூதியில் கூடாததில்லையாகாதே!. இதென்னஆச்சர்யந்தான். (இவள்நெடுமாலென்றேநின்றுகூவும்) தன்பிச்சைக் காற்கடைக்கொண்டு, அவன் பிச்சைச் சொல்லிக்கூப்பிடாநின்றாள். ( ஆல் ) ஆச்சர்யத்திலே, அசை.

( முன்னியித்யாதி ) தன்னுடைய வ்யாமோஹத்துக் கவன் க்ருஷிபண்ணினபடி. முற்பாடனுய்வந்து அவன் நிற்பதிருப்பதாய்க்கொண்டு நித்யவாஸம்பண்ணுகிறவூர். பசியன், சோறுதாழ்த்தால் படுமாபோலே. (சென்னியால்வணங்கும்) * தன்கரங்கள் கூப்பித்தொழுகையும் ப்ராப்யமானபடி. இருந்தவிடத்தேயிருந்து தலைசாய்க்கும்படியானுள்.

( அவ்வூரித்யாதி ) அவ்வூர்த் திருநாமங்கேட்கச் செவிதாழ்க்கையிலே யிவளுக்கு மநோரதம். இவள், அவ்வூரொன்கிறது - பெண்பிள்ளை சொன்னாப்போலே யிராமை. ஆனாலொருகால் சொன்னாளேயென்னில், "அதுவறைமுறுகலாகையிறே பின்பு தவிர்ந்தது" என்றருளிச்செய்வர்.*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. ( பின்னைகொலித்யாதி ) " பின்னைகொல் " இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை ( அவனுலல்லதித்யாதி )

"பிறந்திட்டாள்" என்றத்தை - மூன்றுபேரிடத்திலுமந்வயித்தர்த்தம் (பின்னைபிறந்திட்டாளோவென்று தொடங்கி) இவ்வேற்றங்களையென்றது-இவளுக்குண்டான வேற்றங்களையென்றபடி. கீழ்வாக்யத்தை யொருவிசேஷந்தோற்ற வ்யுத்க்ரமமாகவிவரிக்கிறார் (சர்வேஶ்வரனுடையவித்யாதி) கீழே - மூன்றுபிராட்டிமாரிடத்திலும் "பிறந்திட்டாள்" என்றத்தை யந்வயித் தருளிச்செய்து; அங்ஙனன்றிக்கே, "பிறந்திட்டாள்" என்றத்தை - ப்ரத்யேகபதமாக்கி யர்த்தாந்தரம் (அங்ஙனன்றிக்கேயித்யாதி) முந்தின வர்த்தத்தில், மூவரையு மொப்பாகச் சொல்லுவானென்னென்ன (விஷ்ணுநேத்யாதி) "ஓரோவகைக்கு" என்கிறதென், ஸர்வதா ஸாம்யம் சொன்னாலோவென்ன (உபமாநமித்யாதி) இது - இரண்டாமர்த்தத்துக் கநுகுணம்.

த்விதீயார்த்தத்திலே, தோழியினீடுபாடு (பகவத்விபூதியிலித்யாதி) அதாவது - அதிவிலக்ஷணையான விவளிந்த விபூதியிலே திருவவதரிக்கையாலே, பகவத்விபூதியி லிதென்னவாஶ்சர்யமென்று கருத்து. மாயம் - ஆஶ்சர்யம்.

உறையுமென்னாதே, "நின்றிருந்து" என்று விசேஷிக்கிறதுக்குபாவம் (பசியனித்யாதி) இத்தால் - நிற்பதிருப்பதாகிற விரண்டையு மேகஸ்தலத்திலே செய்தானென்கையாலே, ஈஶ்வரனுக் காழ்வாரை யநுபவிக்கையி லுண்டான விடாயெல்லாந் தோற்றுகிறதென்றபடி. ப்ரார்த்யமானபடியென்றது - கையெடுத்துத்தொழுகைக்கும் பலமில்லாதே போயிற்றென்றபடி.

செவிதாழ்க்கையிலே யிவளுக்கு மநோரதமென்றது - பலஹாநியாலேகேட்கை தானும் ப்ரார்த்யமாய்விட்டதென்றபடி. வறைமுறுகல்-கருகிப்போகை. அஸாரமென்றபடி.

இவள் நெடுமாலென்றே நின்றுகூவும்; முன்னிவந்தவனித்யாரப்ய, கேட்பதுகிந்தை; பின்னைகொலென்றுதொடங்கி, பிறந்திட்டாள்; என்னமாயங்கொலோ என்றந்வயம். "𑌧𑌰𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌸𑌤𑍍𑌯𑌶𑍌𑌚𑌾𑌦𑌿𑌗𑍁𑌣𑌾𑌨𑌾𑌮𑌾𑌕𑌰𑌸𑍍𑌤𑌥𑌾 । 𑌉𑌪𑌮𑌾𑌨𑌮𑌶𑍇𑌷𑌾𑌣𑌾𑌂" (தர்மாத்மாஸத்யஶௌசாதிகுணாநாமாகரஸ்ததா। உபமாநமஶேஷாணாம்) இத்யாதி, ப்ரதமேம்ஶே பஞ்சதஶே..............................*

## பதினொன்றாம்பாட்டு.

சிந்தையாலுஞ்சொல்லாலுஞ்செய்கையினாலுந்தேவபிரானையே
தந்தைதாயென்றடைந்தவண்குருகூரவர்சடகோபன்
முந்தையாயிரத்துள்ளிவைதொலைவில்லிமங்கலத்தைச்சொன்ன
செந்தமிழ்பத்தும்வல்லாரடிமைசெய்வார்திருமாலுக்கே.

### ஆறாயிரப்படி.

(சிந்தையாலும்) வாங்மநஃகாயவ்ருத்திகளாலே தேவபிரானையே தந்தைதாயென்றடைந்த குருகூர்ச்சடகோபன் சொன்ன சகலவேதஸாரபூதமான ஆயிரந் திருவாய்மொழியிலும் ஸாரபூதமான இத்திருவாய்மொழியை வல்லார், எம்பெருமானுக்கும் பிராட்டிக்கு மபிமத சர்வசேஷவ்ருத்தியும் பண்ணுவாரென்கிறார்.......................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழியை யப்யஸிக்கவல்லவர்கள் ஸ்ரீயஃபதிக்குநித்யகைங்கர்யபரராவர்களென்று பலத்தை யருளிச்செய்கிறார்.

தேவபிரானையே - தேவபிரானையே. ஹிதபரத்வத்தாலும் ப்ரியபரத்வத்தாலும், தந்தை - தந்தையும். தாய் - தாயும். என்று - என்றறுதியிட்டு. இத்திருவாய்மொழியிற்சொன்ன கணக்கிலே, சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும் - கரணத்ரயத்தாலும். அடைந்த - ஆஸ்ரயித்தவராய். வண் - "அன்னையாயத்தனாய்" என்கிற ஸ்ரீமதுரகவிகளைப்போலே தம்மைப்பற்றியிருக்கிற. குருகூரவர் - திருநகரியிலுள்ளார்க்கு நிர்வாஹகரான. சடகோபன் - ஆழ்வார். முந்தை-பழையதான வேதார்த்தத்துக்கு ப்ரகாஸகமான. ஆயிரத்துள் - ஆயிரந்திருவாய்மொழியிலும் வைத்துக்கொண்டு. தொலைவில்லிமங்கலத்தை - திருத்தொலைவில்லிமங்கலத்தைப்பற்ற. சொன்ன - அருளிச்செய்த. செம் - அர்த்தப்ரகாசநத்திலார்ஜவத்தையுடைய. தமிழ் - தமிழான. இவைபத்தும் - இப்பத்தையும். வல்லார் - அப்யஸிக்கவல்லவர்கள். திருமாலுக்கு - ஸ்ரீயஃபதியான சர்வேஸ்வரனுக்கு. அடிமைசெய்வார் - அடிமைசெய்யுமவர்கள். ஆவர் - ஆவர்.

இது - எழுசீராசிரியவிருத்தம்..........................................................*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில் - இத்திருவாய்மொழியிற் கருத்தை வ்யக்தமாக்காநின்றுகொண்டு, இத்தைக் கற்றவர்க ளிதுக்கநுரூபமான கைங்கர்யத்தைப் பண்ணப்பெறுவரென்கிறார்.

( சிந்தையாலுமித்யாதி ) மநோவாக்காயங்கள் மூன்று மொருபடிப்பட அவன்பக்கலிலே ப்ரவணமாயிருக்கிறபடி. "இரங்கி" என்றும், "மணிவண்ணவோ" என்றும், "தன்கரங்கள் கூப்பித்தொழும்" என்றும், மூன்றாலும்- இவர்க்குண்டான ப்ராவண்யாதிசயமிறே இத்திருவாய்மொழியிற் சொல்லிற்று. ( தேவபிரானித்யாதி ) * அயர்வறுமமரர்களுக் கதிபதியாயிருந்துவைத்துத் திருத்தொலைவில்லி மங்கலத்திலே சுலபனாயிருந்தவனே சர்வவிதபந்துவுமென் றறுதியிட்டபடியே பற்றுவதும் செய்தவர். (வண்குருகூரவர்சடகோபன்) அவனே யிவர்க்கு சர்வவிதபந்துவுமானாப்போலே, அவ்வூரிலுள்ளார் ஆழ்வாரையே யெல்லா வுறவுமுறையாகப்பற்றி யாயிற்றிருப்பது. "அன்னையாயத்தனையென்னையாண்டிடும்தன்மையான்" என்றும், "[Grantha] " (மாதாபிதாயுவதயஸ்தநயாவிபூதிஸ்ஸர்வம்) என்றும்சொல்லுகிறபடியே யிருப்பர்கள். (முந்தையாயிரம்) பழையதான வேதார்த்தத்தை யருளிச்செய்கையாலே. சர்வேஸ்வர னிதரசஜாதீயனாயவதரித்தாப்போலே, வேதமும் தமிழாய் வந்திவர்பக்கலிலே யவதரித்தபடி. (செந்தமிழ்) செவ்வியதமிழ். பசுந்தமிழ். அர்த்தத்தைவிசதமாகக்காட்டுவது. இத்தையப்யஸிக்கவல்லார் ஸ்ரீயஃபதிக்கடிமை செய்யப்பெறுவர்.

பெருமாளும் பிராட்டியும் சேரவிருக்க இளையபெருமாளடிமைசெய்தாப்போலே, விசிஷ்டவேஷத்திலே யடிமைசெய்யப்பெறுவர் ..........*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (சிந்தையாலுமித்யாதி) "பத்தும்வல்லாரடிமைசெய்வரீர் திருமாலுக்கு" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (இத்திருவாய்மொழியிலித்யாதி) கருத்தையென்றது - கரணத்ரயப்ராவண்யத்தை. இது - "சிந்தையாலும்" இத்யாதியைக்கடாக்ஷித்து.

"சிந்தையாலும்" இத்யாதியாலே - கரணகார்யங்களையிட்டு, கரணங்களைலக்ஷிக்கிறது. உக்தத்தையன்றோ நிகமிப்பது, கரணத்ரயப்ராவண்யம் கீழுக்ததமோவென்ன (இரங்கியித்யாதி)

"வண்குருகூர்" என்று - * மஞ்சாக்ரோசந்திபோலே, குருகூரிலுள்ளாரைச்சொல்லுகிறது. "அவர்" என்கிறதச்சப்தம் - ப்ரக்ருதபராமர்சியாகையாலே, கீழுக்தமான தந்தைதாயைச்சொல்லுகிறது. வண்மை - அழகு. ஆக, வண்குருகூரிலுள்ளார்க்கு, அவர்சடகோபன் - தந்தைதாயான சடகோபனென்று சப்தநிர்வாஹம் விவக்ஷித்தருளிச்செய்கிறார் (அவனேயிவர்க்கித்யாதி) அப்படியிருப்பர்களோவென்ன (அன்னையாயித்யாதி) மாதாவும்பிதாவும் என்னையடிமைகொள்ளுமாசார்யனுமாகையே ஸ்வபாவமாகவுடையவரித்யர்த்தஃ.

தாமிப்போதருளிச்செய்ததாயிருக்க, "முந்தையாயிரம்" என்கிறதென்னென்ன (பழையதானவித்யாதி) பரிஹாராந்தரம் (சர்வேஶ்வரனித்யாதி) "பழையதானவேதார்த்தத்துக்கு ப்ரகாசகமானவாயிரம்" என்றுமாயில் சப்தார்த்தம்.

சத்ருஷ்டாந்தமாக விவரணம் (பெருமாளுமித்யாதி)......................*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(துவளில்மாமணிமாடம்.)

ஶங்காச்சக்ராத் ததீஶத்ரிதஶஸாரதயா ஸிந்துஶாயித்வபூம்நா த
த்வச்சோதாரபாவாதருணஸரஸிஜாக்ஷத்வசிஹ்நைஶ்ச தேவ: । தேவீஸம்ஶ்லே
ஷபாவாதிஸௌந்தர்யாத் ஶ்ரேஷ்டதிவ்யப்ரபாவாத் ஸ்வஸ்யஸம்ப்ராப்யபாவாத் ஸர்வ
விஶ்வாதிஸம்ரக்ஷணகரணதயா வாஞ்சநீய: (கூச)

(ஶங்காச்சக்ராத்) தவளவொண்சங்குசக்கரமென்றும் - அழகியதிருவாழி திருச்சங்குகளாலும்; (ததீசத்ரிதஶஸாரதயா) தேவதேவபிரானென்றே - தேவதேவத்வத்தாலும்; (ஸிந்துஶாயித்வபூம்நா) திரைகொள்பௌவத்துச்சேர்ந்ததும் - திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினவைபவத்தாலும்; (தத்வச்சோதாரபாவாத்) கருங்கடல்வண்ணன் - கடலுக்கு சத்ருஶமான வௌதார்யாதிஶயத்தாலும் (அருணஸரஸிஜாக்ஷத்வ) செந்தாமரைக்கட்பிரான் - புண்டரீகாக்ஷத்வத்தாலும்; (சிஹ்நைச்தேவஃ) அவன்சின்னமுந் திருநாமமும் - திவ்யசிஹ்நத்தாலும்; சிஹ்நை

ங் என்கிற வித்தாலேதானே - "சின்னமுந்திருநாமமும்" என்று ஸஹபடிதமாய், பூர்வகாதையிலே "மணிவண்ணனுமமே" என்று சொல்லப்படுகிற திருநாமமும் ஸங்க்ருஹீதமாயிற்றென்று திருவுள்ளம்; (தேவீபிஸ்ஸேவ்யபாவாத்) திருமாமகளிருந்தாம் - ஸ்ரீபூமி நீளைகளாலே சேவிக்கப்படுகையாலும்; திருமாமகளிரென்றது - மற்றைப்பிராட்டிகளுக்கு முபலக்ஷணமென்று திருவுள்ளம்; (அதிஸௌலபதயா) அரங்கம்வாய்பிளந்தானுறை - க்ருஷ்ணனாய்வந்துபிறந்த சௌலப்யத்தாலும்; (ஸ்வேஷ்வதிஸ்நிக்தபாவாத்) நெடுமாலென்றேநின்று-ஆஶ்ரிதரிடத்தி லத்யந்தம் ஸ்நிக்ததையாலும், தொலைவில்லிமங்கலத்தெம்பெருமான், தன்னிடத்திலாஸக்தரானவர்களை யிதரஜநங்களோடே விகடிப்பியாநிற்கிறனென்று "தவளில்மாமணிமாடம்" என்கிறதஶகத்திலே ஸூரிஶ்ரேஷ்டரானசடகோபரருளிச்செய்தாரென்கிறர். ௬௪



# திருவாய்மொழிநூற்றந்தாதி.

துவளறுசீர்மால்திறத்துத்தொன்னலத்தாலுந்  
துவளறுதன்சீலமெல்லாஞ்சொன்னான் - துவளறவே  
முன்னமனுபவத்தின்மூழ்கிநின்றமாறனதில்  
மன்னுமுவப்பால்வந்தமால். (௫௫)

(துவளறுசீர்) இதில் - பகவத்விஷயத்தில் ப்ராவண்யத்தை யருளிச்செய்தபடியை யநுவதித்தருளிச்செய்கிறர். அதெங்ஙனேயென்னில்; கீழ் - தம்முடைய த்ருஷ்ணையாலே க்ருஷ்ணகுணசேஷ்டிதங்களை மண்டியநுபவிக்கப்புக்கவிடத்தில், குடிக்கின்றதண்ணீர்விக்கி பாரவஶ்யத்தைவிளைக்குமாபோலே அவைசைதில்யத்தைவிளைக்க, அத்தாலேகலங்கி, அடியேபிடித்துத் தமக்கு பகவத்விஷயத்தில் கரணத்ரயத்திலுமுண்டான ப்ராவண்யாதிசயத்தை அந்யாபதேசத்தாலே யருளிச்செய்கிற * துவளில்மாமணிமாடத்திலர்த்தத்தை "துவளறுசீர்" என்றுதொடங்கி யருளிச்செய்கிறனென்கை.

(துவளறுசீர்) துவளறவேமுன்னமனுபவத்தில் மூழ்கிநின்றமாறனதில் மன்னுமுவப்பால்வந்தமால் - துவளறுசீர்மால் திறத்துத்தொன்னலத்தால் நாளுந்துவளறுதன் சீலமெல்லாம்சொன்னான் என்றந்வயம். (துவளறவே) * மயர்வறமதிநலம்பெறுகையாலேயென்னுதல், அந்யபரதையாகிற குற்றமறுகையாலேயென்னுதல். (முன்னமனுபவத்தில்மூழ்கிநின்றமாறன்) முந்தறமுன்னம் * பொய்ந்நின்றஞானந் தொடங்கி இவ்வளவுமநுபவத்திலே யவகாஹித்தவாழ்வார். அதாவது - "நிகரில வன்புகழ்பாடியிளைப்பிலம் பகலுமிரவும்படிந்துகுடைந்தே" என்றும், "பரமன்பவித்திரன் சீர்செடியார்நோய்கள்கெடப்படிந்துகுடைந்தாடி அடியேன் வாய்மடுத்துப்பருகிக்களித்தேனே" என்றும், "சிரீதரன்செய்யதாமரைக்கண்ணனென்றென்றிராப்பகல்வாய்வெரீஇ" என்றும், "துயரமில்சீர்க்கண்ணன்மாயன்புகழ்துற்றயான்" என்றும், "வீவில்சீரன்மலர்க்கண்ணன் விண்ணோர்பெருமான்றன்னை வீவில்காலமிசைமாலைகளேத்திமேவப்பெற்றேன்" என்றும், "தக்ககீர்த்தித்திருக்குறுங்குடிநம்பியைநான்கண்டபின்" என்றும், "புகர்கொள்சோதிப்பிரான்றன்செய்கைநினைந்துபுலம்பியென்றும் நுகரவைகல்வைகப்பெற்றேன்" என்று மிப்படியாயிற்று

* அந்நாள்தொடங்கி யிந்நாடொறும் * இணையடிக்கே அன்புசூட்டி, அன்பு *பாலே போல் சீரில்பழுத்தபடி. இப்படிகுணநுபவத்தாலே தமக்கு * மாறும் * நிகருமின்றி நித்யமதமுதிதராய் * மாலேயேறி. (துவளறுசீர்மால்திறத்துத் தொன்னலத்தால்) ஆஶ்ரிதர்க்கநுபாவ்யமாகையாலே குற்றமற்று - ஹேயப்ரத்யநீகமான கல்யாணகுண யுக்தனான சர்வேஶ்வரன்விஷயத்தில் ஸ்வாபாவிகபக்தியாலே. (நாளுந்துவளறுதன்சீலமெல்லாம்சொன்னான்) நாள்தோறும் தாமவ்விஷயத்தில் ப்ராவண்யத்தையுற்றிருக்கிற தம்முடையஸ்வபாவமெல்லா மருளிச்செய்தார். "𑌰𑌾𑌮𑍇𑌤𑌿𑌰𑌾𑌮𑍇𑌤𑌿𑌸𑌦𑍈𑌵𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾𑌵𑌿𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌵𑌾𑌚𑌾𑌬𑍍𑌰𑍁𑌵𑌤𑍀" (ராமேதிராமேதிஸதைவபுத்த்யாவிசிந்த்யவாசாப்ருவதீ) என்றும், "𑌏𑌕𑌸𑍍𑌥𑌹𑍃𑌦𑌯𑌾𑌨𑍂𑌨𑌂𑌰𑌾𑌮𑌮𑍇𑌵𑌾𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌤𑌿" (ஏகஸ்த்தஹ்ருதயாநூநம்ராமமேவாநுபஶ்யதி) என்றும்சொல்லுமாபோலே. அதாவது - "தாமரைத்தடங்கணென்றும் குவளையொண்மலர்க்கண்கணீர்மல்க நின்றுநின்றுகுமிறுமே" என்றும், "தேவதேவபிரானென்றே நிமியும்வாயொடுகண்கணீர்மல்க நெக்கொசிந்துகரையுமே" என்றும், "நிரைகள்மேய்த்ததுமேபிதற்றிநெடுங்கண்ணீர்மல்கநிற்குமே" என்றும், "கண்ணபிரானென்றேயொற்கமொன்றுமில ளுகந்துகந்துண்மகிழ்ந்துகுழையுமே" என்றும், "அன்றுதொட்டுமையாந்திவள்நுழையும் சிந்தையளன்னைமீர் தொழுமத்திசையுற்றுநோக்கியே" என்றும், "வைகல்நாடொறும்வாய்க்கொள்வாசகமும் மணிவண்ணனுமமேயிவளன்னைமீர்" என்றும், "அவன்சின்னமுந் திருநாமமுமிவள்வாயனகள்திருந்தவே" என்றும், "இருந்திருந்தரவிந்தலோசநவென்றென்றேநைந்திரங்குமே" என்றும், "தொலைவில்லிமங்கலமென்று தன்கரங்கள்கூப்பித்தொழு மவ்வூர்த்திருநாமம் கற்றதற்பின்னையே" என்றும், "தொலைவில்லிமங்கலம் சென்னியால் வணங்குமவ்வூர்த்திருநாமம் கேட்பதுசிந்தையே" என்றும், "சிந்தையாலும்சொல்லாலும் செய்கையினாலும் தேவபிரானையே தந்தைதாயென்றடைந்தவண்குருகூரவர்சடகோபன்" என்றும் - இப்படி தமக்கு த்ரிவிதகரணத்தாலுமுண்டான ப்ராவண்ய ஸ்வபாவத்தையெல்லா மருளிச்செய்தாரென்கை. "இத்திருவாய்மொழி - ஆழ்வார் ப்ரக்ருதிசொல்லுகிறதென்று நம்முதலிகளெல்லாரும் போரவிரும்பியிருப்பர்கள்" என்றிறே ஈட்டிலேயருளிச்செய்தது.........................*

ஆறும்பத்தில் - ஐந்தாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக - திருவாய்மொழி - ௫௫.—பாட்டு - ௬௦௭.

ஸ்ரீ

# திருவாய்மொழி.

ஆரம்பத்து.

## ஆறந்திருவாய்மொழி.

மாலுக்கு - ப்ரவேஶங்கள்.

### ஆறுயிரப்படி.

( மாலுக்கு ) இப்படி * மரங்களுமிரங்கும்வகை " மணிவண்ணவோ " என்றுகூப்பிட்டு மவனைக்காணப்பெறுமையாலே மோஹதசாபந்நையாய், ஆத்மாத்மீயங்களையிழந் தத்யந்தமவஸந்நையான விவளைக்கண்டு திருத்தாயாரிவளிலு மதிமாத்ரவ்யஸநாபிபூதையாய்க்கொண்டு, எம்பெருமானுடைய குணசேஷ்டிதங்களுக்குத்தோற் றிவளிழந்தவற்றைச்சொல்லி யலற்றுகிறாள் ..............................................*

### பன்னீராயிரப்படி.

ஆறுந்திருவாய்மொழியில், இப்படிகரணத்ரயத்தாலும் பகவத்விஷயத்திலே ப்ரவணரானவிவர்; ப்ராவண்யஜநகனானவவனுடைய வாஶ்ரிதவ்யாமோஹப்ரகாஶகமான வாகாரவிசேஷங்களையும், அவர்களுக்கு போக்யமான வாயுதாதிபூர்த்தியையும், ரக்ஷணப்ரகாரத்தையும், சர்வப்ரகாரரக்ஷகோபகாரகத்வாதிசயத்தையும், ப்ரமாணப்ரதாநாதி ரக்ஷணப்ரகாரத்தையும், ஆகர்ஷகமான வவயவசோபையையும், அவயவசோபையோடுகூடின வாபரணசோபையையும், விரோதிநிரஸநஸ்வபாவத்தையும், அபேக்ஷிதசித்தியால்வந்த அத்யந்தோச்ச்ராயத்தையும், சேஷித்வபோக்யத்வாதியுக்தமான சர்வாத்மபாவத்தையு மநுசந்தித்து, ஏவம்விதஸ்வபாவனான சர்வேஶ்வரன்விஷயத்தில் தமக்குப்பிறந்த நிரவதிகப்ராவண்யக்ருதமான பாரவஶ்யாதிசயத்தாலே, ஆத்மீயபதார்த்தங்களெல்லா மவனிட்டவழக்காம்படி யவற்றில் ஸ்வாம்யநிவ்ருத்தி தமக்குப்பிறந்தபடியைக்கண்ட பரிவர் வித்தராய்ச்சொன்னபாசுரத்தை; நாயகன்பிரிவாற்றுத நாயகியினுடைய ஆபரணசோபையோடு ஆபிரூப்யத்தோடு ஆத்மகுணத்தோடு வாசியற அழிந்துவருகிறபடியைக்கண்ட செவிலியிரங்கின பாசுரத்தாலே யருளிச்செய்கிறார் ..................................*

### ஈடு.

கீழிவளுக்குப்பிறந்ததசைமுற்றி வ்யஸநமதிசயிக்கையாலே மோஹங்கதையாய்க்கிடக்க, அதுகண்டு ஆற்றாளாய் இவளுடையதோழியும்

மோஹிக்க, இத்தசையிலு மிவளைஜீவிப்பிக்க விரகுகளை மநோரதிக்கை யாலே தரித்திருக்கிற திருத்தாயார் இவளுடையவலயாதிகள் காணக் காண சிதிலமாகிறபடியைக்கண்டு, அவற்றைத் தனித்தனியே சொல்லி க்கூப்பிடுகிறுள். ஓரோநகரபத்தநாதிகள் வேவப்புக்கால், " ஒருமாடம் முறிந்தது, மாளிகைமுறிந்தது" என்பாரைப்போலே ( விரஹாக்நியா லே தன்மகளிழந்தவற்றைச்சொல்லுகிறுள்) கீழ்த்திருவாய்மொழியில்- அலாபதசையாய், "கிடையாது" என்றாலும் விடமாட்டாதபடி தம்மு டைய மநோவாக்காயங்க ளவ்விஷயத்திலே யதிப்ரவணமானபடிசொல் லிற்று; இதில் - அந்த அலாபத்தால்வந்த பாரவஶ்யத்தைச்சொல்லுகி றது. " நெடுமாலென்றேநின்றுகூவுமால் " என்று - தன்வ்யாமோஹத் தைக்காட்டியாயிற் றிவளையிப்படிவிளைத்தது; பெரியவன்தாழநின்றால் பொறுக்கலாயிராதிறே. [𑌰𑌾𑌘𑌵𑍇𑌣𑌾𑌭𑌯𑍇 𑌦𑌤𑍍𑌤𑍇] [ராகவேணு பயேதத்தே ஸந்நத:] என்று இவன்தறைப்படும்படியிறே யவன்வ்யா மோஹமிருப்பது.

(த்வராநுகுணமான வநுபவாலாபத்தாலே ஆற்றாமைமுறுகி, கீ ழ்ச்சொன்னதசைகலங்கி; சம்பந்தஜ்ஞாநமும் தரிப்புக்குறுப்பாகையன் றிக்கே தளர்த்திக்குறுப்பாய்விட; உபாயாத்யவஸாய மித்தனையும் கலங் காமலிருந்து; ப்ராப்யாலாபநிபந்தநமான பாரவஶ்யத்தாலே,* ஏறாளுமி றையோனில் - தாம் "வேண்டா" என்றுபேக்ஷித்த வாத்மாத்மீயங்களெ ல்லாம், தன்னடையேயழிந்து செல்லுகிறபடியை யநுஸந்திக்கிறார் .... *

## ஜீயர் அரும்பதம்.

மாலுக்குப்ரவேஶ, கீழ் - தோழிவார்த்தையாயிருக்க, இதில் - தாய்வார்த் தையாகைக்கு ஹேதுவேதென்கிற சங்கையிலேசங்கதி (கீழிவளுக்கித்யாதி) இது க்குத்ருஷ்டாந்தம் (ஓரோநகரமித்யாதி) (சிதிலமாகிறபடியைக்கண்டு) என்றவநந்த ரம், (ஓரோநகரபத்தநாதிகள்) இத்யாதிவாக்யத்தை யநுசந்திப்பது. நகரம் - ராஜ தாநி. பத்தநம் - பேட்டை. " வேவப்புக்கால் " என்றதுக்கநுகுணமாக, விரஹாக் நியாலே தன்மகளிழந்தவற்றைச் சொல்லுகிறாளென்று தார்ஷ்டாந்திகம் கண்டு கொள்வது.

கீழ்த்திருவாய்மொழியுமிதுவும் - விஶ்லேஷமாயிருக்க, ஊதிற்காட்டிலிதுக் குவாசியேதென்ன ( கீழ்த்திருவாய்மொழியிலித்யாதி ) இதுக்குஹேதுவேதென்ன ( நெடுமாலித்யாதி ) அவன்வ்யாமோஹங்கண்டா லிவளுக்கிப்படி யீடுபடவேணு மோவென்ன (பெரியவனித்யாதி) இத்தை ஸத்ருஷ்டாந்தமாகக்காட்டுகிறார் ( ராக வேணேத்யாதி ) " 𑌰𑌾𑌘𑌵𑍇𑌣𑌾𑌭𑌯𑍇 𑌦𑌤𑍍𑌤𑍇 𑌸𑌨𑍍𑌨𑌤𑍋 𑌰𑌾𑌵𑌣𑌾𑌨𑍁𑌜𑌃 । 𑌵𑌿𑌭𑍀𑌷𑌣𑍋 𑌮𑌹𑌾𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑍋 𑌭𑍂𑌮𑌿𑌂 𑌸𑌮𑌵𑌲𑍋𑌕𑌯𑌨𑍍 " ( ராகவேணுபயேதத்தே ஸந்நதோராவணாநுஜ: । விபீஷணோமஹாப்ராஜ்ஞோபூமிம்ஸமவலோகயந் ) ... *

# ஆறாந் திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

மாலுக்குவையமளந்தமணாளற்கு
நீலக்கருநிறமேகநியாயற்குக்
கோலச்செந்தாமரைக்கண்ணற்கென்கொங்கல
ரேலக்குழலியிழந்ததுசங்கே.

### ஆறாயிரப்படி.

எம்பெருமானுடைய வாஶ்ரித வாத்ஸல்யத்துக்கும், ஆஶ்ரிதார்த்தமான த்ரைலோக்யவிக்ரமணரூப திவ்யசேஷ்டிதத்துக்கும், ஸ்நிக்தமாயதிகம்பீரமாய் வார்ஷிகமான காளமேகத்தினுடைய நிறத்தையும் குளிர்த்தியையும் பெருமையையு மழகையுமுடைத்தான திருமேனிக்கும்,மேகத்திலே அழகியதொரு தாமரைத்தடாகம்போலேயிருந்த திருக்கண்களுக்கும்தோற்று, அந்தநிரவதிகசௌந்தர்யத்தையுடையனான வெம்பெருமானையுங்கூடத் தோற்பிக்கும் திருக்குழலழகையுடையளான வென்பெண்பிள்ளை, தன்னுடைய சங்கிழந்தாளென்கிறாள் ........ ............*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், வ்யாமோஹகார்யமான வ்யாபாராதிகளையுடையவனுக்கு நிரதிசயபோக்யமான வேஷத்தையுடையபெண்பிள்ளை வளையிழந்தாளென்கிறாள்.

மாலுக்கு - ஆஶ்ரித வ்யாமோஹநிரூபிதஸ்வரூபனாய். அந்தவ்யாமோஹமடியாக, வையம்-பூமியை. அளந்த-வேறொருவரபிமாநியாதபடியளந் தநந்யார்ஹமாக்கி. மணாளற்கு-அவ்வபதாந ப்ரகாசநத்தாலே தனக்குபோக்தாவாய். அந்தபோக வ்யாமோஹமடியாக, நீலம்-ஸ்நிக்தமாய். கரு-கறுத்த. நிறம் - நிறத்தையுடைத்தான. மேகநியாயற்கு - மேகத்தோடு ஸமாநந்யாயமான வாகாரத்தையுடையனாய். அந்தவ்யாமோஹப்ரகாசகமாய், கோலம்-தர்ஶநீயாகாரமாய். செம் - சிவந்த. தாமரை-தாமரைபோலும். கண்ணற்கு - கண்ணையுடையனானவனுக்கு. என்-என்னுடைய. கொங்கு-தேனையுடைத்தாயுள்ள. அலர்-மலரையுடைத்தாய். ஏலம் - ஏலம்போலே ஸ்ரமஹரகந்தமான. குழலி-குழலையுடையவள். இழந்தது - இழந்தது. சங்கு-சங்குவளை.

பதந்தோறும், அவனுக்கவனுக்கென்கிறது - தனித்தனியே யகப்படுத்துந்துறையென்கைக்காக. இப்படிமேலும்காண்பது......................................*

### ஈடு - முதற்பாட்டு.

இவள், ஸ்ரீவாமநப்ராதுர்ப்பாவத்தில் குணசேஷ்டிதங்களிலேயகப்பட்டு வளையிழந்தாளென்கிறாள்.

(மாலுக்கு) * மின்னிடைமடவாரிலே - நீயெனக்குவேண்டாவென்ன, நீயெனக்குவேணுமென்று தடுமாறிநின்றநிலையைக்காட்டியாயிற்று

வளை யிப்பாடுபடுத்திற்று. சர்வேஸ்வரனை வுத்கர்ஷந்தோற்ற நின்றுனு கி லிப்பாடுபடாள்கிடீர். (வ்யாமோஹத்தையுடையவனுக்கு) (வையமளந்தமணாளற்கு) உதவாதாரையுங்கூட விடமாட்டாத வ்யாமோஹம். "அழித்தாயுன்றிருவடியால்" என்று - இவளையும் தன்காற்கீழேயிட்டுக் கொண்டானிறே. அச்செயலுக்கெழுதிக்கொடுத்தா ளிவளொருத்தியுமேயிறே; " மூவடிமண்கொண்டளந்தமன்னன் சரிதைக்கே மாலாகிப் பொன்பயந்தேன் " என்கிறாள். அவனிரந்து மண்பெற்றான், இவளுகந்துபொன்பெற்றாள். உகப்பாலேபெறுமதுரைபெற்றிருக்குமே. (மணாளன்) போக்தா. (நீலக்கருநிறமேகநியாயற்கு) செய்த்துக்கறுத்தநிறத்தையுடைய மேகஸ்வபாவற்கு. நியாயம்-ஸமம். ஒப்பு. ப்ரயோஜந நிரபேக்ஷமாகக் கொடுக்கையும், கொடுக்கப்பெறாதபோது உடம்புவெளுக்கையும். வ்யாமோஹமின்றியே யொழிந்தாலும் விடவொண்ணாதவடிவுமௌதார்யமுமிருக்கிறபடி. (நீலக்கருநிறமேகநியாயற்கு) மஹாபலியை வடிவைக்காட்டி யபஹரித்தாப்போலே காணுமிவளையும் வடிவைக்காட்டியபஹரித்தபடி. இவள் பிச்சேறுகைக்கிட்டமையிருக்கிறபடி. * மைப்படிமேனியிறே. ( கோலச்செந்தாமரைக்கண்ணற்கு ) தர்ஸநீயமாய், வாத்ஸல்யத்தாலே சிவந்து, விகாஸாதிகளையுடைத்தான திருக்கண்களையுடையவனுக்கு. " தாமரைத்தடங்கண்விழிகளி னகவலைப்படுப்பான் " என்று - கண்ணாலேயாயிற் றகப்படுத்திக்கொண்டது. விசேஷணந்தோறும், அவனுக்கென்று - தனித்தனியே யகப்பட்டதுறைகளைச்சொல்லுகிறாள். (மாலித்யாதி) தன்மகள்மேல் பட்டவம்புகளையெண்ணுகிறாள், இதொருகுத்து, இதொருவெட்டு, இதோரம்பு என்று. (என்கொங்கலரேலக்குழலி) மதுஸ்யந்தியா நின்றுள்ள பூவையுடைத்தாய், நறுநாற்றத்தையுடைத்தான குழலையுடைய வென்பெண்பிள்ளை. கொங்கென்பது-தேன். அலரென்பது-பூ. ஏலம்-நறுநாற்றம். இவள்மயிர்முடி யொன்றுக்குந்தோற்றுக் குமிழிநீருண்ணுமவன்கிடீ ! ரிவளையழித்தான். பங்களப்படைகொண்டு, தனிவீரம் செய்வாரை யழிக்குமாபோலே. (இழந்ததுசங்கே) இவள்மயிர்முடிகண்டு அவனிழக்கக்கடவத்தை இவளிழந்தாள். சங்கு - வளை. ................................................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (மாலுக்கித்யாதி) "வையமளந்தமணாளற்கு, இழந்ததுசங்கு" என்கிறபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (இவள் ஸ்ரீவாமநேத்யாதி)

" மாலுக்கு " - வ்யாமுக்தனுக்கு. அந்த வ்யாமோஹந்தானேதென்ன (மின்னிடையித்யாதி) வ்யதிரேகித்துபாவம் (சர்வேஸ்வரனைவித்யாதி)

. " வையமளந்த " என்றதுக்குபாவம் (உதவாதாரையுமித்யாதி வாக்யத்வயம்) அதாவது - விமுகரான சேதநரையும் விடமாட்டாதே திருவுலகளந்தருளி யவர்களை சேஷமாக்கிக்கொண்டாப்போலே, ப்ரணயரோஷத்தாலே விமுகையானவிவ

ளையும் "அழித்தாயுன்திருவடியால்" என்று அந்தமறத்தைமாற்றித் தனக்குசேஷமாக்கிக்கொண்டானென்றபடி. "மணாளற்கு" என்றதுக்குபாவம் (அச்செயலுக்கித்யாதி) மணாளன் - நாயகன். அப்படி யெழுதிக்கொடுத்திருப்பளோவென்ன (மூவடியித்யாதி) மஹாபலிபக்கலிலே மூவடிமண்ணிரந்துகொண்டளந்த மன்னனுடைய செயலுக்கே வ்யாமுக்தையாய் விவர்ணையானேனித்யர்த்தः. திருமொழி ஒன்பதாம்பத்து நாலாந்திருமொழி இரண்டாம்பாட்டு, "முன்னங்குறளுருவாய்" இத்யாதி. இப்பாசுரத்துக்கு ரசோக்தியாகபாவம் (அவனிரந்தித்யாதி வாக்யத்வயத்தாலே) உரைபெற்றிருக்கையாவது, உரையென்று - மாற்றாய், மாற்றேறியிருக்குமென்னுதல்; உரையென்று - கொண்டாட்டச்சொல்லாய், லௌகிகருடையகொண்டாட்டத்தையுடைத்தாயிருக்குமென்னுதல்.

"நியாயம்" என்று - ஸ்வபாவமாக வருளிச்செய்து, அர்த்தாந்தரம் (நியாயம் சமமொப்பென்று) ஸ்வபாவமானபோது, மேகம்போன்ற ஔதார்யாதிகளையுடையவர்க்கென்றும்; ஒப்பானபோது, மேகம்போன்றவடிவை யுடையவர்க்கென்று மர்த்தங்கண்டுகொள்வது. மேகஸ்வபாவமேதென்ன (ப்ரயோஜநேத்யாதி) நெய்த்து - பளபளத்து. "மாலுக்கு" என்றபதத்திலேநோக்காக வர்த்தத்வயத்தையுங்கூட்டிபாவம் (வ்யாமோஹமின்றியேயித்யாதி) "வையமளந்தமணாளற்கு" என்றதோடே "நீலக்கருநிறம்" இத்யாதியைக்கூட்டிபாவம் (மஹாபலியையித்யாதி) "நீலக்கருநிறம்" என்றவிசேஷணத்துக்குபாவம் (இவள்பிச்சேறுகைக்கித்யாதி) திருமேனி கறுத்திருக்குமோவென்ன (மைப்படிமேனிபிறேயென்று) அஞ்சநத்தின்வடிவுபோலேயிருக்கிற திருமேனியித்யர்த்தः.

கண்ணைச்சொன்னதுக்குபாவம் (தாமரையித்யாதி) ஓரிடத்திலே, "அவனுக்கு" என்னவமைந்திருக்க, ப்ரதிபதம் ஷஷ்ட்யந்தமாகச்சொன்னதுக்குபாவம் (விசேஷணந்தோறுமித்யாதி) அதாவது - "மாலுக்கு" என்றுதொடங்கி - வ்யாமோஹகுணத்திலும், சேஷ்டிதத்திலும், விக்ரஹத்திலும், கண்ணழகிலும் தனித்தனியே யகப்பட்டதுறைகளைச்சொல்லுகிறாளென்றபடி. "மாலுக்கு" என்றுதொடங்கி, "கோலச்செந்தாமரைக்கண்ணற்கு" என்னுமளவாக விவற்றைசரங்களாகரூபிக்கிறார் (தன்மகள்மேலித்யாதி) ரீத்யந்தரேண ரூபணம் (இதொருகுத்தித்யாதி) அம்பென்றது - கண்ணை. இரண்டாலும் - குணசேஷ்டிதங்க ளீடுபடுத்துமென்றபடி.

நறுநாற்றம்-சுகந்தம். "மாலுக்கு" என்றுதொடங்கி - குணம், சேஷ்டிதம், வடிவழகு, அவயவசௌந்தர்யம், என்றநேகத்தைச்சொல்லி; "ஏலக்குழலி" என்று-இவளுக்கொன்றுசொன்னதுக்குபாவம் (இவள் மயிர்முடி யித்யாதிவாக்யத்வயத்தாலே) பங்களப்படை - கூளப்படையான கூட்டுப்படை. பங்களப்படையென்றது - "மாலுக்கு" இத்யாதியாற்சொன்னகுணாதிகளை. தனிவீரம்செய்வாளென்றது - * கொங்கலரேலக்குழலியை. (தனிவீரம் செய்வாளை - பங்களப்படைகொண்டு - அழிக்குமாபோலே) என்றந்வயிப்பது.

"கொங்கலர்" இத்யாதி விசேஷணங்களுக்குபாவம் (இவள்மயிர்முடிகண்டித்யாதி) .........................................................................*

## இரண்டாம்பாட்டு.

சங்குவில்வாடண்டுசக்கரக்கையற்குச்
செங்கனிவாய்ச்செய்யதாமரைக்கண்ணற்குக்
கொங்கலர்தண்ணந்துழாய்முடியானுக்கென்
மங்கையிழந்ததுமாமைநிறமே.

### ஆறுயிரப்படி.

( சங்கு ) அளந்தருளுகிறபோது வளர்ந்த ரதாங்க ஶங்க ஶார்ங்காதி திவ்யாயுதங்களை யேந்தினவழகுக்கும், ஸ்வசரண நளிநயுகளஸம்ஸ்பர்ஶோஜ்ஜீவிதமான சர்வாத்மாக்களையுங்கண்ட ஹர்ஷத்தாலே புதுக்கணித்த திருப்பவளத்துக்கும் திருக்கண்களுக்கும், த்ரைலோக்யவிக்ரமணயாஸ ஜநிதப்ரமாபநோதநார்த்தமாக, * அயர்வறுமமரர்களதிபரிமளதுலஸீ மாலைகளைக்கொண் டொப்பித்தருளின வழகுக்கும்தோற்று, என்மங்கைமாமை நிறமிழந்தாளென்கிறாள் .........................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், போக்யமான வாயுதாதிபூர்த்திகளையுடையவனுக்குத் தன்னிறத்தையிழந்தாளென்கிறாள்.

சங்கு வில் வாள் தண்டு சக்கரம் - த்ரிவிக்ரமாபதாநத்தி லுச்ச்ரிதமாய்த் தோன்றின ஸ்ரீபஞ்சாயுதத்தையுடைய. கையற்கு - திருக்கையை யுடையனாய். தாத்காலிகபோக்தாக்களுக் கநுபாவ்யமாய், செம்-சிவந்த. கனி - கனிபோலேயிருக்கிற. வாய்-திருவதரத்தையும். செய்ய-சிவந்த. தாமரை - தாமரைபோலும். கண்ணற்கு-கண்ணையுமுடையனாய். கொங்கலர்-பரிமளவிகாஸியாய். தண்-ஶ்ரமஹரமாய். அம் - தர்ஶநீயமான. துழாய்-திருத்துழாயாலே யலங்க்ருதமான. முடியானுக்கு-திருமுடியையுடையனானவனுக்கு. என்மங்கை - அவனீடுபடும்பருவத்தையுடைய வென்பெண்பிள்ளை. இழந்தது-இழந்தது. மாமைநிறம் - பெண்மைக்கஸாதாரணமான மாமைநிறத்தை.

கொங்கு-தேனுதல், பரிமளமாதல் ...........................................*

### ஈடு - இரண்டாம்பாட்டு.

திருவுலகளந்தருளினபோதை திவ்யாயுதாதிகளி லழகிலேயகப்பட்டுத் தன்னுடைய வழகியநிறத்தை யிழந்தாளென்கிறாள்.

(சங்கித்யாதி) ஸ்ரீபஞ்சாயுதங்களின்சேர்த்தி யழகிலேயாயிற்றிவளீடுபட்டது. இவளுடைய ஓராபரணம் வாங்குகைக்கெத்தனையாபரணம்பூண்டுகாட்டினான். கைக்குமேலேந்துங்காட்டிக்காணு மிவளுடையவாபரணம் வாங்கிற்று. ஆபரணகோடியிலு மாயுதகோடியிலுமிருபடைமெய்க்காட்டிறே யிவைதான். (செங்கனிவாய்ச்செய்ய தாமரைக்கண்ணற்கு) கையிலே யொன்றைதரித்துக்காட்டி யாகர்ஷிக்கவேண்டியிருந்த

தோ, ஸ்மிதமும் நோக்குமமையாதோ! நலிகைக்கு. (கொங்கலரித்யாதி) மதுஸ்யந்தியான திருத்துழாய்மாலையை, ஆதிராஜ்யஸூசகமான திருவபிஷேகத்திலேயுடையவனுக்கு. வைத்தவளயத்தைக்காட்டிக்காணுமிவள் நிறத்தையபகரித்தது. ஆபரணசோபை!, அவயவசோபை!, ஒப்பனையழகு!, எத்தனைசெய்யவேணுமிவள் நிறங்கொள்ளுகைக்கு. (என்மங்கை) தன்பருவத்தாலே யிவற்றையடையத் தோற்பிக்குமவள்கிடீர்! நிறமிழந்தாள். மாமைநிறம்-அழகியநிறம். மாமை - அழகு. அழகியநிறத்தையிழந்தாள்......................................................................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (சங்கித்யாதி) மேலிற்பாட்டுக்கள்தோறும் - ஓரோவவதாரங்கள் சொல்லுகையாலே, ததநுகுணமாக, இப்பாட்டையும் - கீழிற்பாட்டிலவதாரத்தோடேசேர்த்து, “ சங்கு வில்வாள் ” இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (திருவுலகித்யாதி)

பலிதம் (இவளுடையவித்யாதி) ஓராபரணமென்றது - * மாமைநிறத்தை. சாடு (கைக்குமேலித்யாதி) கைக்குமேலேந்துங்காட்டியென்றதுக்கு - திருக்கைகளிலிருக்கிற பஞ்சாயுதங்களைக்காட்டியென்று ஸ்வபாவார்த்தம்;குறடுகிறியாடுகிறவளவிலே அஞ்சுக்கிலக்கா யொருபருக்கையிருந்தால், “ கைமேலேயஞ்சுபோட்டுவெட்டுகிறேன் ” என்றேட்டமோடி அப்படியேபோகட்டு அத்தைவாங்குகையென்று சாடுவுக்கர்த்தம். இவற்றுக்காயுதத்வமொழிய ஆபரணத்வமுண்டோவென்ன (ஆபரணகோடியிலுமித்யாதி) இருபடைமெய்க்காட்டு - உபயகோட்யந்வய:. உபயஸேனையிலு மாள்காட்டுகையென்று சப்தார்த்தம்.

அலருகை - ப்ரவஹிக்கை.

“ சங்கு வில்வாள் ” என்றுதொடங்கி மூன்றுக்கும் பேதகதா பூர்வகமாக பாவம் (ஆபரணசோபையித்யாதி) ......................................................................*



# மூன்றாம்பாட்டு.

நிறங்கரியானுக்குநீடுலகுண்ட
திறங்கிளர்வாய்ச்சிறுக்கள்வரவற்குக்
கறங்கியசக்கரக்கையவனுக்கென்
பிறங்கிருங்கூந்தலிழந்ததுபீடே.

## ஆறாயிரப்படி.

( நிறங்கரியானுக்கு ) சர்வலோகங்களையு மமுது செய்தருளின சுவடு காணலாயிருந்த திருப்பவளத்தி லழகுக்கும், சகலஜந மநோநயநஹாரியான வந்தச் சிறிய வடிவு தனக்கும், திருவடிவினுடைய நீலவநம்போலே யிருந்த நிறத்துக்கும், ப்ரணத பரித்ராண தத்விரோதி நிரஸநங்களிலே யெப்போதும் ஸத்வரமான திருவாழியை யேந்தின திருக்கையி

னழகுக்குந்தோற்று, நீலரத்நங்களுடைய வொளிகள் திரண்டாப்போ
லே விளங்குகிற திருக்குழலை யுடையவளான வென்பெண்பிள்ளை, தன்
பெருமையை யிழந்தாளென்கிறாள். ........................ ...... ..........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், வடதளசாயித்வப்ரமுக ரக்ஷணப்ரகாரத்தை யுடையவனுக்குத்
தன் பெருமையை யிழந்தாளென்கிறாள்.

வடதளத்திலே கண்வளரும்போது, கரிய-ஶ்யாமளமான. நிறத்தானுக்கு-
வடிவையுடையனுய். நீடுலகு - மஹாலோகங்களை. உண்ட - அமுதுசெய்த. திறம்-
ப்ரகாரம். கிளர் - தோற்றுகிற. வாய் - திருப்பவளத்தை யுடையனுய்க்கொண்டு.
சிறு - சிறுவடிவிலே. கள்வரவற்கு - பெரியலோகத்தை மறைத்து வைத்தவனுய்.
இப்படி ப்ரளயாபத்தில் ரக்ஷித்தாப்போலே, ப்ரளயங்கழிந்து வெளிநாடு கண்டவ
ளவிலும், கறங்கிய - ஜகத்விரோதிகளை யழிக்கையி லுண்டான வுத்யோகத்தாலே
சுழன்றுவருகிற. சக்கரம் - திருவாழியையுடைய. கையவனுக்கு - கையை யுடைய
வனுக்கு. என்பிறங்கிருங்கூந்தல் - வளர்ந்து கதிர்த்த மயிர்முடியை யுடைய வென்
பெண்பிள்ளை. இழந்தது - இழந்தது. பீடு - பெருமை.

பீடென்று - பெருமையாய், மதிப்பைச்சொல்லுகிறது.........................*

## ஈடு - மூன்றும்பாட்டு.

வடதளசாயிபடிகளிலே யகப்பட்டு இவள் தன்பெருமையையிழ
ந்தாளென்கிறாள்.

( நிறங்கரியானுக்கு ) "இழந்ததுமாமைநிறம்" என்றாள், அந்
நிறமு மவன்பக்கலிலே கிடக்கையாலே யிரட்டித்துக் காட்டிற்று வடிவு.
தன்னிறத்துக்குமேலே யொருநிறமுண்டாயிற்று. "நீலக்கருநிறமேகநி
யாயற்கு" என்னவேண்டாவாயிற்று நிறத்துக்கொப்பாகமாட்டாமையா
லே. நெய்த்துக்குளிர்ந்து ஶ்ரமஹரமான வடிவு தன்னையே சொல்லுகி
றாள். (நீடுலகித்யாதி) பரப்பையுடைத்தான பூமியைத் திருவயிற்றிலே
வைத்த ப்ரகாரத்தைக் கோட்சொல்லாநின்ற திருவதரத்தையுடைய. கி
ளருகை - சொல்லுகை. "வையமேழுங்கண்டாள் பிள்ளைவாயுளே" எ
ன்னக்கடவதிறே. ரக்ஷகத்வப்ரகாசகமான திருவதரம். ( சிறுக்கள்வரவ
ற்கு ) சிறுவயிற்றிலே பெரியலோகங்களை வைத்து, பரிச்சேதிக்க வொ
ண்ணாத சேஷ்டிதத்தை யுடையவனுக்கு (நீடுலகுண்டதிறங் கிளர்வாய்)
வேறொருவர் வாயால் கேட்கவேண்டாதே, இவன் வாயாலே சொல்லக்
கேட்கலானபடி. ( சிறுக்கள்வரவற்கு ) வடிவில் சிறுமையும், ரக்ஷகத்வ
த்தில் பாரிப்புமிருக்கிறபடி. தன்னுடையரக்ஷகத்வத்தையு மகடிதகடநா
சாமர்த்யத்தையுங் காட்டியாயிற்றிவளையகப்படுத்திற்று. ( கறங்கியசக்கர
க்கையவனுக்கு ) கறங்குகை - சுழலுகை. விரோதிநிரஸநத்வராயாலே
யெப்போதும் சுழலாநின்றுள்ள திருவாழியைத் திருக்கையிலே யுடைய
வனுக்கு. தான் ரக்ஷகனனவளவன்றியே, பரிகரமும் ரக்ஷணத்திலேயுத

யுக்தமாயிருக்கிறபடி. அவன் கைப்பிடித்தாரெல்லாரும் ரக்ஷண த்வரை யுடையராயிறே யிருப்பது. ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வானும்; "ஒருவினையுண்டாகவற்றே! நாம் வாய்க்கரையிலேயிருந் தோசையைவிளைத்து வினைதீர்க்க" என்று ப்ரார்த்தியாநிற்கும். (என்பிறங்கிருங்கூந்தல்) சுற்றுடைத்தாயொழுகு நீண்ட மயிர்முடியையுடையவள். மிகவும் பெரிய குழலையுடையவளென்றுமாம். இருமை - பெருமை. இங்குப்பெருமையாவது - நீட்சி. பிறங்குதல் - மிகுதி. கூந்தலென்கிறது - மயிர். "ஐம்பால்கூந்தல்குழல்" என்றிவை - பர்யாயம். எதிர்த்தலையைத்தோற்பிக்கும் குழலையுடையவள்கிடீர் தன்பெருமையிழந்தாள். பீடு-பெருமை. "யஸ்ய ஸா ஜநகாத்மஜா - அப்ரமேயம் ஹி தத்தேஜ:" (யஸ்யஸா ஜநகாத்மஜா - அப்ரமேயம்ஹிதத்தேஜ:) என்று - அவனுக்கும் பெருமையைக்கொடுக்கும் பெருமையைக்கிடீர் இவளிழந்தது................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு. (நிறமித்யாதி) "பீடிலகுண்ட" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (வடதளேத்யாதி)

"நிறங்கரியானுக்கு" என்றதுக்குபாவம் (இழந்ததித்யாதி) அதாவது; கீழே "நீலக்கருநிறமேகனியாயற்கு" என்று - மேகத்தை யொப்பாகச்சொல்லிப் பார்த்தால், அதொப்பாகமாட்டாமையாலே மேகத்தைவிட்டு, "நிறங்கரியான்" என்று - "நீலக்கருநிறம்" என்றத்தையே சொல்லுகிறானென்றபடி. இரட்டித்துக்காட்டுகையாலே யொப்பில்லையென்றபடி. விவரணம் (தன்னிறத்துக்கித்யாதி) இதுக்கு நியாமகமேதென்ன (நீலக்கருநிறமித்யாதி) அதுக்கு ஹேதுவேதென்ன (நிறத்துக்கித்யாதி) தாத்பர்யஸித்தார்த்தம் (நெய்த்தித்யாதி)

திருவதரத்தாலே - திருவாயைச் சொல்லுகிறது. அப்படி கோட்சொல்லுமோவென்ன (வையமேழுமித்யாதி) இத்தால்பலிதம் (ரக்ஷகத்வேத்யாதி) சிறியவனாயிருக்கச்செய்தே களவேதென்ன; பாலனாயிருக்கச்செய்தே யபரிச்சிந்நமான வதிமாநுஷசேஷ்டிதங்களை யுடையனாகை யென்கிறார் (சிறுவயிற்றிலேயித்யாதி) ரஸோக்தி (வேறொருவரித்யாதி) பலிதமாதல், தாத்பர்யாந்தரமாதல் (வடிவிலித்யாதி) ரக்ஷகத்வத்தில் பாரிப்புமென்றது- "பீடிலகுண்ட" என்றத்தைப்பற்ற.

"கறங்கிய" என்கிறவிசேஷணத்துக்குபாவம் (தான்ரக்ஷகனானவித்யாதி) அல்லாதாரிலிவனுக்குண்டான வ்யாவ்ருத்தியை யருளிச்செய்கிறார் (அவன்கைப்பிடித்தாரித்யாதி) அதாவது - அல்லாதாரொருவனுக் கொன்றைக் கொடுக்கப்புக்கால் பரிகரங்கள் விக்நம்பண்ணுவர்களிறே, இவனுக்கங்ஙனில்லை யென்றபடி. ஆனால், ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வானுக்கு ரக்ஷணத்வரை காணுமேயென்ன (ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வானுமித்யாதி)

முந்தினவர்த்தத்தில், பிறங்குதல் - சுற்றுடைமை; சுற்றுடைமையாவது - உருட்சி; இருமை - ஒழுகுநீட்சி. த்விதீயார்த்தத்துக்கு, பிறங்குதல் - மிகுதி; இருமை - பெருமை. "கூந்தல் - மயிர்" என்றதுக்கு நிகண்டு (ஐம்பாலித்யாதி) குழலை வர்ணித்ததுக்குபாவம் (எதிர்த்தலையையித்யாதி) ஈடுபாடு (யஸ்யேத்யாதி)*

## நான்காம்பாட்டு.

பீடுடைநான்முகனைப்படைத்தானுக்கு
மாடுடைவையமளந்தமணாளற்கு
நாடுடைமன்னர்க்குத்தூதுசெல்நம்பிக்கென்
பாடுடையல்குலிழந்ததுபண்பே.

### ஆறாயிரப்படி.

(பீடுடை) நிகிலஜந்து ஜாதாபேக்ஷிதாசேஷ புருஷார்த்த சாதநபூத கரணகளேபராத் யுபகரண நிர்மாணநுகுண ஜ்ஞாந சக்தி யுக்த சதுர்முக ஸ்ருஷ்டிஹேதுபூத காருண்யத்துக்கும், குணவதகுணவிபாகமின்றிக்கே சர்வாத்மாக்களும் தன்றிருவடிகளை ஸம்ஸ்பர்ஸித்து நின்ற நின்றவிடங்களிலே கண்டு தந்யராம்படி இந்த லோகத்தை யளந்தருளின ஸௌசீல்யகுணத்துக்கும், சர்வப்ரகார சமாஸ்ரிதரான பாண்டவர்கள் சார்வபௌமராம்படி யவர்களுக்கு தூத்யம்பண்ணி யதுவே தனக்கேற்றமாயிருக்கிற ஆஸ்ரிதவாத்ஸல்யத்துக்குந்தோற்று, என்பாடுடையல்குல், தன் சீர்மையை யிழந்தா ளென்கிறாள். .........................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஸ்ரஷ்ட்ருத்வாதிகளான சர்வப்ரஜாரோபகாரகத்வத்தை யுடையவனுக்குத் தன்னுடைய வஸாதாரணஸ்வபாவத்தை யிழந்தாளென்கிறாள்.

பீடு - ஸ்ரஷ்ட்ருத்வாநுரூபமான ஜ்ஞாநாதிகுண வைபவத்தை. உடை - உடைய. நான்முகனை - சதுர்முகனை. படைத்தானுக்கு - ஸ்ருஷ்டித்தவனாய். மாடுடை - வசுமதியான. வையம் - பூமியை. அளந்த - அளந்த வபதாநத்தாலே. மணாளற்கு - தன்னை யநந்யார்ஹையாக்கும் போக்தாவாய். நாடு - நாட்டுக்கு. உடை-கடவ. மன்னர்க்கு - ராஜாக்களான பாண்டவர்களுக்கு. தூது - தூதக்ருத்யத்தை. செய் - அநுஷ்டித்து. நம்பிக்கு-அத்தாலே பரிபூர்ணனானவனுக்கு. என்பாடுடையல்குல் - விஸ்தாரத்தையுடைத்தான வல்குலையுடைய வென்பெண்பிள்ளை. இழந்தது - இழந்தது. பண்பு - தன்னஸாதாரணஸ்வபாவம்.

மாடு - தநம். பாடு - பரப்பு. பண்பு - ஸ்வபாவம். .........................*

### ஈடு - நான்காம்பாட்டு.

சதுர்முக ஸ்ரஷ்டாவான மேன்மையைப் பாராதே ஆஸ்ரிதார்த்தமான மஹாகுணத்தையுடையவனுக்கு இவள் சீர்மையை யிழந்தாளென்கிறாள்.

(பீடுடையித்யாதி) சதுர்த்தசபுவநத்தையும் ஸ்ருஷ்டிக்கவல்ல பெருமையை யுடைய சதுர்முகனை ஸ்ருஷ்டித்தவனுக்கு. பீடு — பெருமை. (மாடித்யாதி) மாடு — தநம். வசுமதியான பூமியென்னுதல்; மாடென்று - இடமுடைமையாய், பரப்பையுடைய பூமியென்னுதல். திருவுலகளந்தருளின க்ருத்ரிமசேஷ்டிதத்தாலே தன்னை யநந்யார்ஹமாக்கினவற்கு. (நாடித்யாதி) நாடுடைய ராஜாக்களான பாண்டவர்களுக்குத்

தூதுபோய் அத்தாலே பூர்ணனானவனுக்கு. பகவதபிப்ராயத்தாலே, அவர்களை - நாடுடைமன்னரென்கிறார்காணும், "இருக்கைக்கொரு குறிச்சியுங்கொடோம்" என்று ராஜ்யம்பண்ணுகிறார்கள் துர்யோதநாதிகளாயிருக்க "[illegible]" (அபிஷிச்யசலங்காயாம்) இத்யாதிவத். (நம்பிக்கு) * இன்னார் தூதனென நின்றசெயலாலே யிட்டசட்டை பீறும்படியிருக்கை. அடியிலே ஜகத்தையுண்டாக்கி, அபஹரித்தாருண்டாகிலெல்லைநடந்து மீட்டுக்கொண்டு, அத்தை யாஸ்ரிதர்க்காக்குகைக்கிழிதொழில்செய்த இந்நீர்மையையுங்காட்டி இவள் நீர்மையை யபஹரித்தான். (என்பாடுடையல்குல்) இடமுடைத்தான நிதம்பப்ரதேசத்தையுடையவள். பாடு - இடம். "[illegible]," (பும்பாவம்மநஸாயயு:,) ஸஜாதீயரையழிக்கும் வடிவழகு. அவன் * பும்ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரியானைப்போலே. பண்பு - நீர்மை........................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு. (பீடுடையித்யாதி) "பீடுடைநான்முகன்" இத்யாதிகளைக்கடாக்ஷித்தவதாரிகை (சதுர்முகேத்யாதி)

சதுர்முகனுக்குப் பீடேதென்ன (சதுர்த்தசேத்யாதி)

"மணாளற்கு" என்றதுக்கர்த்தம் (அநங்யார்யமாக்கினவற்கென்றது)

நாடுடைமன்னர் துர்யோதநாதிகளாயிருக்க, இவர்களை "நாடுடைமன்னர்" என்கிறதென்னென்ன (பகவதபிப்ராயத்தாலேயித்யாதி) குறிச்சி-குப்பம். ஆஸ்ரிதகார்யம் செய்தத்தாலே பூர்ணனாயிருக்குமோ வென்ன (அபிஷிச்யேத்யாதி) "[illegible]" (க்ருதக்ருத்ய:) என்றதிலேநோக்கு. "தூதுசெல்" என்றவநந்தரம், "நம்பி" என்றதுக்குபாவம் (இன்னாரித்யாதி) இன்னாருடைய தூதனென்னும்படிநின்றவித்யர்த்த:.

"பீடுடை" இத்யாதி பதத்ரயத்துக்கும்பாவம் (அடியிலேயித்யாதி)

அல்குலைக்கொண்டாடுகிறதுக்கு பாவம் (பும்பாவமித்யாதி) ஸஜாதீயரையழிக்கக்கூடுமோ வென்ன (அவனித்யாதி) "[illegible] । [illegible]" (பாஞ்சால்யா:பத்மபத்ராக்ஷ்யாஸ் ஸ்நாயந்த்யாஜகநம்கநம் । யாஸ் ஸ்த்ரியோத்ருஷ்டவத்யஸ்தா: பும்பாவம்மநஸாயயு:) இதி மஹாபாரதே. பண்பு- (நீர்மை) அஸாதாரணஸ்வபாவ இத்யர்த்த:..........................................*

---

## ஐந்தாம்பாட்டு.

பண்புடைவேதம்பயந்தபரனுக்கு
மண்புரைவையமிடந்தவராகற்குத்
தெண்புனற்பள்ளியெந்தேவபிரானுக்கென்
கண்புனைகோதையிழந்ததுகற்பே.

## ஆறாயிரப்படி.

(பண்புடை) தன்னுடைய ஸ்வரூபரூபகுண ப்ரதிபாதகமாகையாலே தன்னிலும் சீரியதானவேதங்களை ப்ரஹ்மாதி தேவர்களுக்குக் கொடுத்த பரமௌதார்யத்துக்கும், பூமிப்பிராட்டியை யெடுத்தருளியவளோடே சம்ஶ்லேஷித்தருளின ஸ்ரீவராஹமான திருவடிவிலழகுக்கும்; திருநாட்டிலேயெழுந்தருளியிருக்கிற விருப்பைக்கண்டநுபவிக்கிற * அயர்வறுமமரர்களையுங்கூடத்தோற்பித் தடிமையாக்கவல்ல, திருப்பாற்கடலிலே பிராட்டியோடேகூடக் கண்வளர்ந்தருளுகிற வழகுக்குந் தோற்று, தர்ஶநீயமான திருக்குழலையுடைய வென்பெண்பிள்ளை, தன்னுடைய கற்பிழந்தாளென்கிறாள் ........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், வேதப்ரதாநாதியான ரக்ஷணப்ரகாரத்தையுடையவனுக்குக்கற்பிழந்தாளென்கிறாள்.

பண்பு-பகவத்ஸ்வரூபாதிகளை யதாவத்ப்ரகாசிப்பிக்கும் ஸ்வபாவத்தை. உடை-உடைய. வேதம்-வேதத்தை. பயந்த-ப்ரஹ்மாதிகளுக்குண்டாக்கிக்கொடுப்பானாய்.பரனுக்கு-தத்ப்ரதிபாத்யனான்பரனாய். மண்-மண்ணின். புரை-மிகுதியையுடைய. வையம்-பூமியை. இடந்த-இடந்தெடுத்த. வராகற்கு-வராஹவேஷத்தையுடையனாய். தெண்-தெளிந்த. புனல்-புனலையுடைத்தான ஏகார்ணவத்திலே. பள்ளி-ஜகத்ரக்ஷணசிந்தைபண்ணிக்கிடப்பானாய். அந்தரக்ஷணசிந்தையாலே, எம் - எம்போல்வாரோடு. தேவர்-ப்ரஹ்மாதிகளோடுவாசியற. பிரானுக்கு - உபகாரகனானவனுக்கு. என்கண்புனைகோதை-கண்டார்கண்களைப்புனைந்துகொள்ளும் மாலையழகையுடைய வென்பெண்பிள்ளை. இழந்தது-இழந்தது. கற்பு-தன்னறிவுடைமை.

கற்பு-அறிவுடைமை........................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

வேதப்ரதாநம் முதலான வுபகாரங்களைப்பண்ணினவனுக் கென்மகள் கற்பிழந்தாளென்கிறாள்.

( பண்புடைவேதம் ) ஈஶ்வரனையுள்ளபடியேகாட்டித்தரும் நீர்மையையுடையவேதம். (பயந்த) சுப்தப்ரபுத்தந்யாயத்தாலே ப்ரஹ்மாவையோதுவிக்கை. (பரனுக்கு) " யொஹ்ரூஹ்மாணம் விஷ்யாதி பூர்வம் யொவை வெஷாம்ஶ்ச ப்ரஹிணொதி தஸ்மை " ( யோப்ரஹ்மாணம்விததாதிபூர்வம்யோவைவேதாம்ஶ்சப்ரஹிணோதிதஸ்மை ) என்கிறபடியே-ப்ரஹ்மாவுக்கு வேதசக்ஷுஸ்ஸைக்கொடுக்கையாலும், வேதைக ஸமதிகம்யனாகையாலும் சர்வஸ்மாத்பரனானவனுக்கு. அறிவிழந்தார்க்கறிவு கொடுக்குமவன்கிடீர்! இவளறிவையழித்தான். (மண்புரைவையம்) மண்மிக்கபூமி. ( இடந்தவராகற்கு ) மண்ணோடு விண்ணோடு வாசியற, தன்முகேந ரக்ஷித்தபடி. பிறருடைய ஸ்வரூபஸித்த்யர்த்தமாகத் தன்னையழிய

மாறுமவன். அழிவுக்கிட்டவடிவுக் காலத்திவழிக்கவேண்டும்படியிறேயி ருப்பது. "மானமிலாப்பன்றியாம்தேசு" என்னக்கடவதிறே. மண்மிகு திசொல்லிற்று - எடுக்கையிலருமை தோற்றுகைக்காக. (வராகற்கு) அ ல்லாத ரக்ஷணம்போலன்றியே முக்யமான ரக்ஷணமிதிறே யெல்லார்க் குமேற. "எயிற்றிடைமண்கொண்ட வெந்தையிராப்பகலோதுவித்தெ ன்னைப்பயிற்றிப்பணிசெய்யக்கொண்டான்" என்று - இவளோட்டையா ர்க்கு ஜ்ஞாநப்ரதாநம்பண்ணினவ னிவளையறிவழித்தான். (தெண்புனற் பள்ளி) தெளிந்தபுனலையுடைய ஏகார்ணவத்தைப்படுக்கையாகவுடைய வன். அழிந்தஜகத்தைஸ்ருஷ்டித்து, ஸ்ருஷ்டரான சேதநர்க்கறிவுகொடு க்கக் கிடக்கிறவனுக்கு. சத்தையேபிடித்துண்டாக்கி யறிவுகொடுக்கக்க டவவன்கிடீ!ருண்டானவறிவை வாங்கிக்கொள்ளுகிறுன். (எம்தேவ பிரானுக்கு) ப்ரஹ்மேஸாநாதிகளுக்கு முபகாரகனானவனுக்கு. "ஈஶ்வ ரோஹம்" என்றிருந்தாளாகி லறிவிழக்கவேண்டாகிடீர். (என்கண்பு ணைகோதை) கண்டார்கண்கள் பிணிப்புண்கையாலே, அவற்றையாபர ணமாகவுடைய மயிர்முடியையுடையவள். அதாவது - வைத்தகண்வாங் கவொண்ணுதிருக்கை. கண்களுக்குவிஷயம் தலையாய்விட்டது. (இழந்த துகற்பே) சர்வர்க்கும் ஜ்ஞாநப்ரதனான தனக்குங்கூட அறிவுகொடுக்கு மிவளறிவைக்கிடீ! ரிழந்தது. "ஜஹிஜ்ஞாநாஜயஜ்ஞாணாழ" (அபிஜ்ஞா ராஜதர்மாணும்) கற்பு - கல்வி. அதாவது - ஜ்ஞாநம் .................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (பண்பித்யாதி) "பண்புடைவேதம்" இத்யாதிபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை (வேதப்ரதாநமித்யாதி) "கீழ்ப்பாட்டிலே - 'யொஹ்ஸ ஹாணம்விதஉயாதிவஉவஉழ" (யோப்ரஹ்மாணம்விததாதிபூர்வம்) என்றத் தையும், இப்பாட்டிலே - 'யொவெவெவஉாஂஶ்வஹிணொதிதஸெஜ' (யோவைவேதாம்ஶ்சப்ரஹிணோதிதஸ்மை) என்றத்தையுஞ்சொல்லுகிறது" என் றருளிச்செய்வர்.

வேதத்துக்குப்பண்பேதென்ன (ஈஶ்வரனையித்யாதி) பயந்த-ஸ்ருஷ்டித்த. "உண்டாக்கிக்கொடுத்த" என்றுமையில்சப்தார்த்தம். நித்யமானவேதத்தைப்பயக் கையாவதேதென்ன (சுப்தப்ரபுத்தேத்யாதி) "பண்புடைவேதம்" என்றத்தைப்பற் ற (வேதைகஸமதிகம்யனுகையாலுமென்றது) "பண்புடைவேதம்பயந்தபரனுக்கு- கற்பிழந்தாள்" என்றதாயாருடைய ஹார்த்தபாவம் (அறிவிழந்தார்க்கித்யாதி)

"புரை" என்று - மிகுதி. மண்மிகுகையாவது - அதிகடிநமாயிருக்கை. கீழ்ப்பதத்தையுங்கூட்டி "இடந்தவராகற்கு" என்றதுக்கு ரஸோக்தி (மண் ணேடித்யாதி) மண்ணை, தன்முகேந ரக்ஷிக்கையாவது - திருவயிற்றிலேவைத் து ரக்ஷிக்கை. விண்ணை, தந்முகேந ரக்ஷிக்கையாவது - ஹம்ஸமுகேநவேதோ பதேசம்பண்ணி ரக்ஷிக்கை. ஜுகுப்ஸநீயமாய் விரூபமான வராஹவேஷத்துக் குக் கற்பிழக்கக்கூடுமோ!வென்ன (பிறருடையவித்யாதி) குணத்துக்கீடுபட்டா ளென்றபடி. குணத்துக்கேயன்றிக்கே, அழகுக்கு மீடுபட்டாளென்கிறுர். (அழிவுக்

தஃ” (ஸம்ஸ்காரோப்ரதிஸஞ்சரோஷு நிதநத்ஸர்க்கேஷு தத்ஸ்மாரிதம் ரூபநாம சதத்தர்ஹநிவஹேவ்யாக்ருத்யரங்காஸ்பத । ஸூப்தோத்புத்தவிரிஞ்சபூர்வஜநதாமத்யாப்யதத்தத்திதம்ஸாஸந்நஸ்ம்ருதகர்த்ருகார்வஹஸி யத்வேதாஃப்ரமாணம்தஃ) என்கிற ஸ்ரீரங்கராஜஸ்தவஶ்லோகமநுசந்தேயம் ............................................*

---

# ஆறும்பாட்டு.

---

கற்பகக்காவனநற்பலதோளற்குப்
பொற்சுடர்க்குன்றன்னபூந்தண்முடியற்கு
நற்பலதாமரைநாண்மலர்க்கையற்கென்
விற்புருவக்கொடிதோற்றதுமெய்யே.

## ஆறாயிரப்படி.

(கற்பகக்காவன) திருப்பாற்கடலிலே பிராட்டிபோடே சம்ஶ்லேஷித்தருளுகையாலே யொருகற்பகச்சோலை தழைத்தாப்போலேயிருக்கிற திருத்தோள்களி லழகுக்கும், கற்பகச்சோலையிலே யொருதாமரைக்காடலர்ந்தாப்போலேயிருந்த திருக்கைகளினழகுக்கும், நிரதிசய தேஜோமய கநககிரிவர சத்ருஶமான திருவபிஷேகத்தி லழகுக்கும், ஸ்ரீசார்ங்கம்வளைந்தாப்போலேயிருந்த திருப்புருவத்தையுடையளான விவள், தன்றிருமேனிதோற்றாளென்கிறாள்......................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆகர்ஷகமான அவயவசோபையையுடையவனுக்குத் தன்னுடைய ஸ்வாதீந சரீரத்தையிழந்தாளென்கிறாள்.

கற்பகக்காவன - கற்பகச்சோலைபோலேயாய். நல்-அதிலும்விலக்ஷணமாய். பல-பலவான. தோளற்கு - தோள்களையுடையவனாய். சுடர்-சுடரையுடைத்தான. பொற்குன்றன்ன - பொற்குன்றையொத்திருப்பதாய். பூ-தர்ஶநீயமாய். தண்-அநுகூலமான. முடியற்கு-திருவபிஷேகத்தையுடையவனாய். நல்-அழகியதாய். பல-பலவாய். தாமரை-தாமரையின். நாண்மலர்-புதுமலர்போலேயிருக்கிற. கையற்கு-கைகளையுடையனானவனுக்கு. என்விற்புருவக்கொடி - வில்போலேயிருக்கிற புருவத்தையுடையவளாய்க் கொடிபோலே மெல்லியளானவென்பெண்பிள்ளை. தோற்றது-இழந்தது. மெய்-தனக்கு விதேயமான சரீரத்தை.

அவிதேயசரீரையானாளென்று கருத்து ......................................*

## ஈடு - ஆறும்பாட்டு.

ஏகார்ணவசாயியானவனுடைய அவயவசௌந்தர்யத்திலே யகப்பட்டு இவள் தன்னுடைய மெய்யிழந்தாளென்கிறாள்.

(கற்பகக்காவித்யாதி) தன்னவயவங்களைக்காட்டி யிவளவயவியைக்கொண்டான். கற்பகச்சோலைபோலேயாய், அவ்வளவன்றியே விலக்ஷ

ணமான பலதிருத்தோள்களையுடையவனுக்கு. (பொற்சுடரித்யாதி) ஒளியையுடைய பொன்மலைபோலேயாய் தர்ஶநீயமாய்த் திருமுடிக்கநுரூபமான திருவபிஷேகத்தையுடையவனுக்கு. பூவென்று-மாலைகளாலேயலங்க்ருதமென்றுமாம். இது - சர்வாபரணங்களுக்கு முபலக்ஷணம். (நற்பலவித்யாதி) நன்றாய்ப்பலவாய்ச் செவ்வித்தாமரைப்பூப்போலேயிருக்கிற திருக்கைகளையுடையவனுக்கு. (என்விற்புருவக்கொடி) வில்போலேயிருக்கிற புருவத்தையுடைய வென்பெண். (கொடிபோலேயிருக்கிறவள்) ப்ரஹ்மாஸ்த்ரத்தைக்கொண்டு பட்டுக்கிடப்பாரைப்போலே, விஜயஹேதுவான பரிகரத்தைக்கொண்டு கிடீர்! தோற்றது. (தோற்றதுமெய்யே) "ஊர்த்வம்மாஸாந்நஜீவிஷ்யே" (ஊர்த்வம்மாஸாந்நஜீவிஷ்யே) என்னப்பண்ணும்வடிவைக்காட்டி, "நஜீவேயம்க்ஷணமபி" (நஜீவேயம் க்ஷணமபி) என்னப்பண்ணும்வடிவைக்கிடீர்! கொண்டது. அவிதேய சரீரையானாளென்றுகருத்து ......................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆரும்பாட்டு (கற்பகமித்யாதி) இதில் - தனியேயவதாரம் சொல்லாமையாலே, கீழிற்பாட்டிற்சொன்ன ஏகார்ணவசாயியைச்சொல்லுகிறதென்று விவக்ஷித்து, "கற்பகக்காவன" இத்யாதிகளைக்கடாக்ஷித்தவதாரிகை (ஏகார்ணவேத்யாதி)

"நற்பலதோளற்கு - தோற்றதுமெய்யே" என்றதுக்கு பாவம் (தன்னவயவங்களையித்யாதி)

"சுடர் - பொன் - குன்றன்ன" என்றந்வயித்தர்த்தம் (ஒளியையுடையவித்யாதி) "தண்" என்று - குளிர்த்தியாய், அத்தாலே - அநுரூபதையைச் சொல்லுகிறது.

"நற்பல - நாள் - தாமரை - மலர்" என்றந்வயம். நாண்மலர் - சத்யோவிகாசியானபுஷ்பம்.

"விற்புருவக்கொடி" என்றவிடத்திலே - "யத்ப்ரூபங்கா: ப்ரமாணம்" (யத்ப்ரூபங்கா:ப்ரமாணம்) இத்யாத்யநுசந்தேயம். "விற்புருவக்கொடிதோற்றது" என்றதுக்குஹார்த்தபாவம் (ப்ரஹ்மாஸ்த்ரத்தையித்யாதி) "மெய்யே-தோற்றது" என்கிற ஏவகாரத்துக்குபாவம் (ஊர்த்வம்மாஸாதித்யாதி)......................*

---

## ஏழாம்பாட்டு.

---

மெய்யமர்பல்கலனன்கணிந்தானுக்குப்
பையரவினணைப்பள்ளியினானுக்குக்
கையொடுகால்செய்யகண்ணபிரானுக்கென்
றையலிழந்ததுதன்னுடைச்சாயே.

## ஆறாயிரப்படி.

(மெய்யமர்) அவனுடைய திருமேனியில் தேஜஸ்ஸூத்தாப் போலேயிருந்த அஸங்க்யேயமான திருவணிகலன்களாலே யொப்பித்த ருளினவழகுக்கும், திருப்பாற்கடலிலே நிரதிசயசுகஸ்பர்ஶமான திருவ ரவணையிலே கண்வளர்ந்தருளுகிற வழகுக்கும், அந்தத்திருவணிகலன்க ளுடைய நிரவதிகமான தேஜஸ்ஸையும் திருவநந்தாழ்வானுடைய பணு மணிகளில் நிரவதிகமான தேஜஸ்ஸையும் விஞ்சிப்புறப்படாநின்ற வொ ளியையுடைய திருக்கைகள் திருவடிகள் திருக்கண்களிலழகுக்கு மிவள் தோற்று, தன்னொளியிழந்தாளென்கிறாள் ................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அநந்தசாயியினுடைய ஆபரணசோபையிலு மவயவசோபையி லும் தன்சமுதாயசோபையை யிழந்தாளென்கிறாள்.

மெய் - திருமேனியோடு. அமர்-பொருந்தின. பல்-அஸங்க்யேயமான. கல ன்-ஆபரணங்களை. நன்கு-தர்ஶநீயமாம்படி. அணிந்தானுக்கு-சாத்தினவனாய். பை-விரிகிறபணங்களையுடைய. அரவினணை-திருவரவணையிலே. பள்ளியினானுக்கு-கண்வ ளர்ந்தருளுகிறவனாய். கையொடு - திருக்கைகளோடேகூட. கால் - திருவடிகளும். செய்ய-சிவந்திருப்பானாய். கண்ணன்-ஆஶ்ரிதபவ்யனான. பிரானுக்கு - உபகாரகனுக் கு. என் - என்னுடைய. தையல் - விலக்ஷணஸ்வரூபையானபெண்பிள்ளை. இழந்த து-இழந்தது. தன்னுடை-தனக்கஸாதாரணமான. சாய்-சமுதாயசோபை .........*

## ஈடு - ஏழாம்பாட்டு.

க்ஷீரார்ணவசாயியுடைய ஆபரணசோபாதிகளிலே யகப்பட்டு இவள் லாவண்யத்தையிழந்தாளென்கிறாள்.

(மெய்யமர்பல்கலன்) திருமேனியிலே பூத்தாப்போலே பொருந் தியிருந்துள்ள கிரீடாதிநூபுராந்தமான ஆபரணங்கள். (நன்கணிந்தானு க்கு) பூணவல்லபடியாலேவந்தவழகு. (பையரவித்யாதி) ஸ்வஸ்பர்ஶத் தாலே விகசிதமானபணங்களையுடையனாய்; நாற்றம், மென்மை, குளி ர்த்தி, இவற்றை ப்ரக்ருதியாகவுடையவனைப் படுக்கையாகவுடையனாய், அதிலே கண்வளர்ந்தருளுகிறவனுக்கு. இதுவுமோ ராபரணவிசேஷம் போலேகாணும். அநந்தமுகமான ஆபரணமிறே. கீழ்ச்சொன்ன வொ ப்பனைநிறம்பெறும்படுக்கையிறே. (கையித்யாதி) திருமேனிக்கு பரபாக மான சிவப்பையுடைய திருக்கைகளையும், திருவடிகளையுமுடையனாய் உ பகாரசீலனான க்ருஷ்ணனுக்கு. திருவநந்தாழ்வானோட்டைச்சேர்த்தியா லேயாயிற்று அவயவங்கள் தொடக்கமானவை பூர்ணமாயிற்று. (என் தையலித்யாதி) என்பெண்பிள்ளையிழந்தது, மாணிக்கத்தினொளிபோ லே தனக்கு நிறங்கொடுக்கும் லாவண்யத்தை. கழற்றிப் பூணுமாபரண த்தைக்காட்டி, கழற்றவொண்ணாத ஆபரணத்தைக் கைக்கொண்டான். தையலென்பது - பெண்பேர். சாய்-லாவண்யம்..........................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (மெய்யித்யாதி) "பையரவினணைப்பள்ளியினானுக்கு, மெய்யமர்பல்கலன்" இத்யாதிகளைக்கடாக்ஷித்தவதாரிகை (க்ஷீரார்ணவேத்யாதி)

திருமேனியோடே பொருந்தியிருக்கிற வநேகாபரணங்களை நன்றாகச்சாத்தினவனுக்கென்று சப்தார்த்தம். அணிகை-சாத்துகை. "நன்று" என்றதுக்குபாவம் (பூணவல்லவித்யாதி)

" அரவின் " அரவையென்றபடி. " அணை " என்றதுக்கர்த்தம் (படுக்கையாகவுடையனுடையென்றது) "பல்கலன்" என்றவநந்தரம் திருவநந்தாழ்வானைச்சொன்னதுக்குபாவம் (இதுவுமித்யாதி) ரஸோக்தி (அநந்தமுகமானவித்யாதி) அநந்தரூபமானவென்றும், பஹுரூபமானவென்றும். தாத்பர்யாந்தரம் (கீழ்ச்சொன்னவித்யாதி)

" செய்ய - கையொடு, செய்ய - கால் " என்றன்வயம். "பள்ளியினானுக்கு" என்றத்தோடேகூட்டி பதச்சேர்த்திக்குபாவம் (திருவநந்தாழ்வானுடைய) ([illegible] டக்கமானவை) என்ற ஆக்ஷேபத்தாலே - "[illegible]" [illegible] ற்றுகிற சௌலப்யாதிகுணங்களைச்சொல்லுகிறது.

"பல்கலன்" என்றத்தைக்கடாக்ஷித்துபாவம் (முற்றிப்பூணுமித்யாதி) ...*

---

## எட்டாம்பாட்டு.

சாயக்குருந்தமொசித்ததமியற்கு
மாயச்சகடமுதைத்தமனாளற்குப்
பேயைப்பிணம்படப்பாலுண்பிரானுக்கென்
வாசக்குழலியிழந்ததுமாண்பே.

### ஆறாயிரப்படி.

(சாயக்குருந்தம்) திருப்பாற்கடலினின்றும் ஸ்ரீவசுதேவர் திருமாளிகையிலேவந்து திருவவதாரம்பண்ணியருளி க்ருத்ரிமசகடபூதநாகுந்தாத்யசுரநிரஸநாயாஸ ஸ்வேதகணிகாலங்க்ருதமான திருமுகத்திலழகுக்குத்தோற்று, தன்னழகிழந்தாளென்கிறாள் .........................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், விரோதிநிரஸந ஸ்வபாவனானவனுக்குத் தன் ஸ்த்ரீத்வவைலக்ஷண்யத்தை யிழந்தாளென்கிறாள்.

குருந்தம்-அசுராவிஷ்டமான குருந்து. சாய-வேரோடேசாயும்படி. ஒசித்த-முறித்த. தமியற்கு-அஸஹாயவீரனாய். சகடம்-சகடம். மாய-மாயும்படியாக. உதைத்த-உதைத்து. மனாளற்கு-அத்தாலேதன்னை யநந்யார்ஹையாக்கிக்கொண்டபோக்தாவானவனாய். பேயை-பூதனையாகிறபேயை. பிணம்-பிணமாய். பட - விழும்படியாக. பால்-முலைப்பாலை. உண்-அமுதுசெய்த. பிரானுக்கு-மஹோபகாரகனானவனுக்கு. என்வாசக்குழலி-பரிமளோத்தரமான குழலையுடையவென்பெண்பிள்ளை. இழந்தது-இழந்தது. மாண்பு-மாட்சிமை. அதாவது - ஸ்த்ரீத்வவைலக்ஷண்யம்.

மாயச்சகடமென்றது - க்ருத்ரிமசகடமென்றுமாம்.........................*

## ௬ - எட்டாம்பாட்டு.

க்ருஷ்ணனுடைய விரோதிநிரஸநத்துக்குத்தோற்று இவள் தன்னுடைய ஸ்த்ரீத்வத்தையிழந்தாளென்கிறாள்.

(சாயக்குருந்தமொசித்ததமியற்கு) அசுராவேசத்தாலே தழைத்துப்பூத்துநிற்கிற குருந்தத்தை வேரோடே சாய்ந்துவிழும்படிமுறித்த தனியற்கு நம்பிமூத்தபிரானையொழியவே தனிவீரஞ்செய்தவற்கு. தானத்தனிமையிலேயென்றுதவக்காணுமிவளுக்குநினைவு. (மாயச்சகடமுதைத்தபெருமாற்கு) க்ருத்ரிமசகடமென்னுதல், "தளர்ந்தும்முறிந்தும் சகடவசுரருடல் வேறாப்பிளந்தவீய" என்கிறபடியே சகடமுருமாயும்படியென்னுதல். (பெருமாற்கு) ஸ்ரீஜநகராஜன்திருமகளுக்கு தநுர்ப்பங்கம் போலே, இவ்வபதாநத்தைக்காட்டியாயிற்றிவளை யநந்யார்ஹையாக்கிற்று. (பேயைப்பிணம்படப்பாலுண்பிரானுக்கு) சூர்ப்பணகாவைப்போலே யோரநர்த்தத்தைவிளைக்க உயிரோடேவிடாதே, பூதனையைப்பிணமாய்விழும்படி முலையுண்ணவல்ல மஹோபகாரகனுக்கு. (என்வாசக்குழலி) நைஸர்க்கிகபரிமளமான குழலையுடையவென்பெண்பிள்ளை. அவனை "ஸுகந்தோ" (ஸுகந்த:) என்றுசொல்லுகைக்கடியித்தலையையிட்டு வாசஞ்செய்பூங்குழலாளிறே. (இழந்ததுமாண்பே) தன்பும்ஸ்த்வ ப்ரயுக்தமான செயல்களையெல்லாங்காட்டி, இவளுடைய ஸ்த்ரீத்வத்தைக்கொண்டான். மாண்பு—மாட்சிமை. ஸ்த்ரீத்வம், அழகு, என்றுஞ்சொல்லும்மாண்பை..........................................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (சாயவித்யாதி) "சாயக்குருந்தமொசித்த" இத்யாதிகளைக் கடாக்ஷித்தவதாரிகை (க்ருஷ்ணனுடையவித்யாதி)

சாயக்குருந்தமென்றது - சாயையையுடைய குருந்தென்றும், குருந்தம் சாயவென்றும்; அர்த்தத்வயத்தையும் தந்த்ரேணவருளிச்செய்கிறார் (அசுராவேசேத்யாதி) "தமியற்கு" - (தனியற்கு) துணையில்லாதவற்கென்றபடி. "தமியற்கு" என்றதுக்குபாவம் (நம்பிமூத்தவித்யாதி) "தமியற்கு" என்கிறவளுடைய ஹார்த்தபாவம் (தானத்தனிமையிலேயித்யாதி) நரகயுத்தத்தில் சத்யபாமையைப்போலே. த்விதீயார்த்தத்துக்கு - சகடம், மாய - நசிக்கும்படி இத்யர்த்த:.

"பிணம்பட" என்றதுக்குபாவம் (சூர்ப்பணகாவையித்யாதி)

"கொங்கலரோலக்குழலி" என்றாப்போலேசொல்லாதே, கேவலம் "வாசக்குழலி" என்றதுக்குபாவமாதல்; "வாசக்குழலி" என்று நிரூபகமாகச்சொன்னதுக்குபாவமாதல் (நைசர்க்கிகேத்யாதி) "வாசக்குழலி" என்றதுக்குபலிதத்தை ரசோக்தியாகவருளிச்செய்கிறார் (அவனையித்யாதி) இத்தலையையென்று ஶ்லேஷம். அவனுக்கு பரிமளத்தையுண்டாக்குமோவென்ன (வாசஞ்செயித்யாதி) செயல்களையென்றது - "சாயக்குருந்தமொசித்த" இத்யாதிகளைக்கடாக்ஷித்து ............*

## ஒன்பதாம்பாட்டு.

மாண்பமைகோலத்தெம்மாயக்குறளற்குச்
சேண்சுடர்க்குன்றன்னசெஞ்சுடர்மூர்த்திக்குக்
காண்பெருந்தோற்றத்தெங்காகுத்தநம்பிக்கென்
பூண்புனைமென்முலைதோற்றதுபொற்பே.

### ஆறாயிரப்படி.

(மாண்பமை) "கொள்வனுன் – மூவடிதா" என்றிரக்கிறசமயத்திலே நிரவதிகசௌந்தர்யநிவாஸபூதமாய சேஷஜநமநோநயநஹாரியாயத்யாஶ்சர்யமான திருவடிவினழகுக்கும், அளந்தருளுகைக்காகத் தாமரைக்காடலர்ந்ததொரு மாணிக்கமலைபோலே வளர்ந்தருளின வப்போதையழகுக்கும், "ஜந்மராமஸ்யஸுமஹத்" (ஜந்மராமஸ்யஸுமஹத்) என்னும்படி திவ்யமானஜந்மத்தையுடையனான தஶரதாத்மஜனுடைய ஸௌஶீல்யசாமர்த்யாதி கல்யாணகுணங்களுக்குந்தோற்று, அஸங்க்யேய திவ்யபூஷணாலங்க்ருதையான இவள், தன்னுடைய லாவண்யமிழந்தாளென்கிறாள்... ... ...................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், அபேக்ஷிதஸித்தியால்வந்த அத்யந்தோச்ச்ராயத்தையுடைய வாமநாத்யவதாரங்களையுடையவனுக்குத் தன்னழகிழந்தாளென்கிறாள்.

மாண்பு-அழகு. அமை-அமைந்த. கோலம்-வடிவையுடையனாய். அத்தாலே, எம்மாயம்-அபேக்ஷிதஸித்த்யர்த்தமாக வெங்களோடு மஹாபலியோடு வாசியறவஞ்சித்த. குறளற்கு-வாமநனாய். சேண்-அபேக்ஷிதஸித்தியாலேஉயர்ந்து. சுடர்-தேஜோமயமான. குன்றன்ன-மலைபோலே. செம்-சிவந்த. சுடர்-ஒளியையுடைத்தான. மூர்த்திக்கு-விக்ரஹத்தையுடையனாய். காண்-சர்வலோகதர்ஶநீயமான. பெரு-அபரிச்சிந்நமாஹாத்ம்யத்தையுடைய. தோற்றம்-ஆவிர்ப்பாவத்தையுடையனாய். எம்-எம்போல்வார்க்கநுபாவ்யனும்படி. காகுத்தன் - சக்ரவர்த்திதிருமகனான. நம்பிக்கு-பூர்த்தியையுடையவனுக்கு. என்பூண்புனைமென்முலை-ஆபரணங்களையணிவதாய், விரஹாஸஹமான மென்மையையுடைத்தான முலையையுடைய வென்பெண்பிள்ளை. தோற்றது-இழந்தது. பொற்பு-அழகு.

பொற்பு - அழகு...................................................................*

### ஈடு - ஒன்பதாம்பாட்டு.

ஸ்ரீவாமநாத்யநேகாவதாரங்களிலே யகப்பட்டு இவள் தன்னழகையிழந்தாளென்கிறாள்.

(மாண்பித்யாதி) அழகுசமைந்த வொப்பனையையுடையனாய், ஆஶ்சர்யமானவேஷத்தையுடைய ஸ்ரீவாமநனுக்கு. மாண்பு-அழகு. மா

யமென்று - வஞ்சநையாகவுமாம். (சேண்சுடரித்யாதி) அடியிலே நீர் வார்த்துக்கொடுத்தவாறே வளர்ந்தபடி. ஓங்கிப்புகரையுடைய மலைபோலே யழகியவொளியையுடைய வடிவையுடையவனுக்கு. (காண்பெருந் தோற்றத்து) தோற்றம்-அழகு. கண்ணுக்கினியதாய பரிச்சேத்யபோக்யமானசந்நிவேசத்தையுடையவனென்னுதல். "ஜந்மராமஸ்யஸுமஹத்" (ஜந்மராமஸ்யஸுமஹத்) என்கிற அவதாரமஹத்வமாதல். (எங்காகுத் தநம்பிக்கு) குணபூர்ணனன சக்ரவர்த்தித்திருமகனுக்கு. "தயரதற்குமகன்றன்னையன்றிமற்றிலேன்" என்னுமவரிறே. "குணாநாமாகரோமஹாந்" (குணநாமாகரோமஹாந்) (என்பூண்புனைமென்முலை) ஆபரணத்தாலே யலங்க்ருதமாய், விரஹஸஹமன்றிக்கேயிருந்துள்ளமுலையையுடையவள். (தோற்றதுபொற்பே) பொற்பென்று - அழகு. "பூண்புனைமென்முலை" என்கையாலே, ஒப்பனையால்வந்தவழகையிழந்தாள். "மலராள்தனத்துள்ளான்" என்கிறபடியே அவனைத் தன்முலையழகாலே புறம்பொன்றறியாதபடிபண்ணி புஜிக்குமவள்கிடீர்! தோற்றாளென்கை.

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (மாண்பமையித்யாதி) "மாயக்குறளற்கு" இத்யாதிகளைக்கடாக்ஷித்தவதாரிகை (ஸ்ரீவாமநாதித்யாதி)

வேஷமென்று - விக்ரஹம். அழகுசமைந்தவொப்பனையாவது-திருயஜ்ஞோபவீதம், க்ருஷ்ணாஜிநம், மௌஞ்சிதொடக்கமானவை.

அடியிலே - முந்தறவென்றும், வேரிலேயென்றும். "செம்" என்று-அழகு.

"தோற்றம்" என்று - அழகாய், ததாஸ்ரயமான விக்ரஹத்தைலக்ஷிக்கிறது; "காண்" - காணப்படுமதாய், அதாவது-தர்ஸநீயமாய், அத்தால்பலிதம் (கண்ணுக்கினியதாயென்று) "தோற்றம்" என்கிறவழகாலேபலிதம். போக்யத்வம். "தோற்றம்" என்றதுக்கு - அவதாரமாகவர்த்தாந்தரம் (ஜந்மராமஸ்யேத்யாதி) "ஜந்மராமஸ்யஸுமஹத்வீர்யம் ஸர்வாநுகூலதா । லோகஸ்யப்ரியதாக்ஷாந்திஸ்ஸௌம்யதா ஸத்யஶீலதா" (ஜந்மராமஸ்யஸுமஹத்வீர்யம் ஸர்வாநுகூலதாம் । லோகஸ்யப்ரியதாம்க்ஷாந்திம் ஸௌம்யதாம் ஸத்யஶீலதாம்" இதிபாலகாண்டே. தர்ஸநீயமாய பரிச்சிந்நமாஹாத்ம்யத்தையுடைத்தான வாவிர்ப்பாவத்தையுடைய வென்றிரண்டாமர்த்தம். அவதாரமஹத்வமாவது - "ஸஹிதேவைருதீர்ணஸ்ய," (ஸஹிதேவைருதீர்ணஸ்ய) "அஜோபிஸந்நவ்யயாத்மா" (அஜோபிஸந்நவ்யயாத்மா) இத்யாத்யுக்தமஹத்வமென்றபடி. (குணபூர்ணனன) என்றவிடத்திலே - "ஆந்ருஶம்ஸ்யமநுக்ரோஶஶ்ஶ்ருதம் ஶீலம் தமஶ்ஶம: । ராகவம் ஶோபயந்த்யேதே ஷட்குணா: புருஷோத்தமம்" (ஆந்ருஶம்ஸ்யமநுக்ரோஶ: க்ஷமாஸத்யம்தமஶ்ஶம: । ராகவம்ஶோபயந்த்யேதேஷட்குணா: புருஷோத்தமம்) என்றதநுசந்தேயம். "எம்" என்றதுக்குபாவம் (தயரதற்கித்யாதி) "குணபூர்ணன்" என்னுமதுக்குப்ரமாணம் (குணநாமித்யாதி) "யாத-

நாதிவதெவெலெவெந்ரா ம—ணா நாவோகஸெரோஉஹாநு" (தாதுநாமிவஸைலேந்த்ரோகுணாமாகரோமஹாந்) இதிவாலிநம்ப்ரதிதாரா.

இப்ப - "அழகையிழந்தாள்" என்றுசொல்லியிருக்க, இங்கேயும்சொன்னால் புநருக்தமன்றோவென்ன (பூண்புனையித்யாதி) "பூண்புனைமென்முலை" என்றுவிசேஷிக்கிறவளுடையஹார்த்தபாவம் (மலராளித்யாதி) "உள்ளான்" என்றதுக்கர்த்தம் (புறம்பொன்றறியாதபடி யித்யாதி) தனம் - ஸ்தநம். இதுமூன்றுந்திருவந்தாதி. பூண்-ஆபரணம். புனைகை - சாத்துகை.........................................*

---

## பத்தாம்பாட்டு.

---

பொற்பமைநீண்முடிபூந்தண்டுழாயற்கு
மற்பொருதோளுடைமாயப்பிரானுக்கு
நிற்பனபல்லுருவாய்நிற்குமாயற்கென்
கற்புடையாட்டியிழந்ததுகட்டே.

### ஆறுயிரப்படி.

(பொற்பமை) * அயர்வறுமமரர்களும் ஸ்ரீமாலாகாரனும் குப்ஜையும் தன்னுடையதிவ்யாகார ஸத்ருஶமான திவ்யமால்யாநுலேபநங்களைக்கொண் டொப்பித்தருளப்பண்ணின வழகுக்கும், அவ்வழகுகுறியழியாதபடி மற்பொருத சாதுர்யத்துக்கும்; அவனுடைய, ஸ்த்தாவரஜங்கமாத்மகமான சர்வஜந்துஜாதத்துக்கு மாத்மதயா வ்யவஸ்த்திதனயிருந்த வீப்ஶவரத்வத்துக்குந்தோற்று, ஸ்த்ரீத்வாதி சகலமைங்களகுணவாஸபூதையான வென்பெண்பிள்ளை, தன்னையும் தன்னுடைமையையும் கட்டடங்கவிழந்தாளென்கிறாள் ..........................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், சேஷித்வபோக்யத்வ சிஹ்நங்களையுடையனாய், விரோதிநிவர்த்தகனாய், சர்வஶரீரியானவனுக்குத் தன்மர்யாதையை யிழந்தாளென்கிறாள்.

பொற்பு-அழகு. அமை-அமைந்து. நீள்-உயர்ந்த. முடி - அபிஷேகத்தையும். பூ-தர்ஶநீயமாய். தண்-ஶ்ரமஹரமான. துழாயற்கு-திருத்துழாயையுமுடையனாய். அந்தப்பரத்வபோக்யத்வங்களோடேவந்து, மல் - ப்ரபலரானமல்லரோடே. பொருதோளுடை - தோளிற்சாந்தழியாதபடிபொருத. மாயம் - ஆஶ்சர்யபூதனாய். பிரானுக்கு-ஸ்ரீமதுரையிற்பெண்களுக்கவ்வழகையுபகரித்தவனாய். நிற்பன - ப்ரமணஸித்தஸ்த்தைர்யத்தையுடைத்தாய். பல்-பஹுவிதமான. உரு - பதார்த்தங்களை ஆய்-சரீரமாகவுடையவனாய். நிற்கும்-தத்கததோஷைரஸம்ஸ்புருஷ்டனாய்நிற்கும். மாயற்கு-ஆஶ்சர்யத்தையுடையனானவனுக்கு. என்கற்புடையாட்டி - அறிவுடையளாயிருக்கிறவென்பெண்பிள்ளை. இழந்தது-இழந்தது. கட்டு-ஸ்த்ரீத்வமர்யாதை.

கட்டு-மர்யாதை. கட்டடங்கவென்றுமாம்.........................................

## ௯ - பத்தாம்பாட்டு.

பரத்வமென்ன, அவதாரமென்ன, ஜகதாகாரதையென்ன, இவற்றையடங்கக்காட்டி யிவளுடைய தெல்லாவற்றையுங் கொண்டானென்கிருள்.

(பொற்பமையித்யாதி) அழகுசமைந்திருப்பதாய் ஆதிராஜ்யப்ரகாசகமான திருவபிஷேகத்தின்மேலே, ஐஶ்வர்யசூசகமான திருத்துழாய்மாலையை யுடையவனுக்கு. (பூந்தண்டுழாய்) ஸ்வஸ்பர்ஶத்தாலே பூத்து ப்ரமஹரமாயிருக்கை. (மற்பொருவித்யாதி) வந்தவதரித்து மல்பொருதோளையுடையனுயிருக்கை. (மாயப்பிரானுக்கு) சாத்தினசாந்தழியாதபடி மல்பொருதவாஶ்சர்யம். (பிரானுக்கு) ஸ்ரீமதுரையிற்பெண்களுக்கழகை யுபகரிக்கை. * சாவத்தகர்த்த சாந்தணிதோள்சதுரனிறே. மற்றுமாஶ்சர்யமான வுபகாரங்களைப்பண்ணினவனுக்கென்றுமாம். (நிற்பனவித்யாதி) ஸ்த்தாவரஜங்கமாத்மகமான சகலபதார்த்தங்களுக்கு மந்தர்யாமியாய் நிற்கச்செய்தே, தத்கததோஷை ரஸம்ஸ்ப்ருஷ்டனுய் நிற்கிறவாஶ்சர்யபூதனுக்கு. (என்கற்புடையாட்டி) மிக்கவறிவையுடையவென்மகள். "* தத்தஸ்யஸத்ருஶம்பவேத்" (தத்தஸ்யஸத்ருஶம்பவேத்) என்றிருக்குமறிவிறே. (இழந்ததுகட்டே) தனக்குள்ளவற்றை நேராகக்காட்டி யிவள்பக்கலுள்ளவற்றை நேராகக்கொண்டான்; கட்டு-கட்டடங்க. கட்டென்று - மர்யாதையாய், லோகமர்யாதையை யிழந்தாளென்றுமாம் ................................................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (பொற்பித்யாதி) "பொற்பமைநீண்முடி" இத்யாதியாலே-பரத்வம், "மற்பொருதோளுடை" இத்யாதியாலே-அவதாரம், "நிற்பனபல்லுருவாய் நிற்கும்" என்று - ஜகதாகாரதை.

ஐஶ்வர்யசூசகமான - ஈஶ்வரத்வசூசகமான. (ஐஶ்வர்யசூசகமான) என்றவிடத்திலே - "வக்ஷஸ்ஸ்த்தல்யாம்துளஸி" (வக்ஷஸ்ஸ்த்தல்யாம்துளஸி) இத்யாத்யநுசந்தேயம். "தழைக்கும்துழாய்மார்பன்" என்றத்தைப்பற்ற (ஸ்வஸ்பர்ஶத்தாலே யித்யாதி)

"மல்" என்று - மல்லரைச்சொல்லுகிறது. சாந்தழியாதேபொருதானென்ன (சாவத்தகர்த்தவித்யாதி) சாம்படிநெருக்கின, சாந்தாலேயணியப்பட்ட தோளையுடைய சதுரனித்யர்த்தஃ. மற்றுமாஶ்சர்யமான வுபகாரங்களையென்றது-கம்ஸவதாத்யுபகாரங்களை.

"பல்லுரு" என்று - ஜங்கமங்களைச்சொல்லுகிறது.

"கற்புடை" என்கிறமதுப்பு - பூமாவிலேயாக்கி, (மிக்கவறிவு) என்கிருர். அந்தவறிவேதென்ன (தத்தஸ்யேத்யாதி) "பொற்பமைநீண்முடி" இத்யாதிகளைக்கடாக்ஷித்துபாவம் (தனக்குள்ளவற்றையித்யாதி) "கட்டு" என்று - கட்டடங்கவென்னுதல், லோகமர்யாதையென்னுதல் ...........................................*

# பதினொன்றாம்பாட்டு.

கட்டெழிற்சோலைநல்வேங்கடவாணனைக்
கட்டெழிற்றென்குருகூர்ச்சடகோபன்சொற்
கட்டெழிலாயிரத்திப்பத்தும்வல்லவர்
கட்டெழில்வானவர்போகமுண்பாரே.

## ஆறாயிரப்படி.

( கட்டெழில் ) பரமபுருஷசேஷதைக ரதித்வலக்ஷ்மீஸமாப்ருத திவ்யநகரநிலயவகுளதரஸமீரிதமான வாணீஸஹஸ்ரத்திலும்வைத்துக் கொண்டு, கார்த்ஸ்ந்யேந ரமணீயமானசோலைகளாலே யலங்க்ருதமான திருமலையிலே நின்றருளின திருவேங்கடமுடையானுடைய கல்யாணகுணசேஷ்டிதங்களையே ப்ரதிபாதிக்கையாலே சாகல்யேந கல்யாணமான வித்திருவாய்மொழியைவல்லார், * அயர்வறுமமரர்களுடைய கல்யாணமான சம்பத்தை யடங்க வநுபவிக்கப்பெறுவர்களென்கிறார்..........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழியை யப்யஸிக்கவல்லவர்கள் நித்யசூரிகளுடைய போகத்தை புஜிப்பர்களென்று பலத்தையருளிச்செய்கிறார்.

கட்டு-செறிவினுடைய. எழில்-அழகையுடைத்தாயுள்ள. சோலை-சோலையையுடைத்தாய். நல்-பகவத்சௌலப்யாதி ப்ரகாஶகமானநன்மையையுடைய. வேங்கடம்-திருமலைக்கு. வாணனை-நிர்வாஹகனானவனை. கட்டெழில் அரணழகையுடைத்தாய். தென்-தர்ஶநீயமான. குருகூர்-திருநகரிக்குநிர்வாஹகரான. சடகோபன்-ஆழ்வார். சொல்-அருளிச்செய்த. கட்டெழில்-தொடையழகையுடைத்தான. ஆயிரத்து-ஆயிரத்து. இப்பத்தும்-இப்பத்தையும். வல்லவர்-அப்யஸிக்கவல்லவர்கள், கட்டெழில்-ஸ்வச்சந்தாயத்தமான வகுப்பழகையுடைத்தான. வானவர்-நித்யசூரிகளுடைய. போகம்-போகத்தை. உண்பார்-அநுபவிக்கப்பெறுவர்.

நாலடியிலும் கட்டடங்கவெழிலென்றுமாம். இது-கலிவிருத்தம்... ... ...*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில் - இத்திருவாய்மொழிவல்லவர்கள் நித்யசூரிகள் போகத்தை புஜிக்கப்பெறுவரென்கிறார்.

(கட்டெழிலித்யாதி) கடியென்கிறவித்தை - கட்டென்றுவலித்த தாய், பரிமளத்தையுடைத்தான நல்லசோலை. (நல்வேங்கடம்) சேஷசேஷிகளிருவர்க்கு முத்தேப்யமானதிருமலை. (வாணனை)நிர்வாஹகனை. திருவேங்கடமுடையானையாயிற்றுக் கவிபாடிற்று. " திருவேங்கடத்தென்னை யென்னப்பனெம்பெருமானுளனாக - என்னாவிலின்கவியானொருவர்க்கும் கொடுக்கிலேன் " என்றிருக்குமவரிறே. ( கட்டெழில்தென்கு

கூர் ) கட்டென்று - அரண். அரணையுடைய திருநகரி. ( கட்டெழிலாயிரம் ) கட்டென்று - தொடை. அழகியதொடையையுடைத்தாகை. ( கட்டெழில்வானவர் ) ( பெரியராய் ) கட்டடங்கநல்லரான நித்யஸூரிகள். போகவிசேஷணமாகவுமாம். ஸம்ஸாரத்தில் போகங்கள் கர்மநிபந்தநமாகையாலே அல்பமாயஸ்த்திரமாயிருக்குமிறே, ஸ்வரூபாநுரூபமாகையாலே ஸம்ருத்தமாய் நித்யமாயிருக்கை. நாலடியிலும், கட்டென்கிறசப்தம் - ஸாகல்யபரமாகவுமாம். நீர்மைக்கெல்லையான திருமலை ஆஶ்ரயணீயஸ்த்தலம், மேன்மைக்கெல்லையான பரமபத மநுபவஸ்த்தாநம்; * ஒன்றியாக்கைபுகாமை யுய்யக்கொள்வான் நின்றவேங்கடமிறே... ... ... ...*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் ( கட்டெழிலித்யாதி ) " இப்பத்தும்வல்லவர் கட்டெழில்வானவர் போகமுண்பார்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (இத்திருவாய்மொழியித்யாதி)

நன்மையேதென்ன ( சேஷசேஷிகளித்யாதி ) கைங்கர்யம்பண்ணுகைக்கேகாந்தமான நிலமாகையாலே சேஷபூதனுக்குத்தேஶ்யம், இவனையடிமைகொள்ளுகைக் கேகாந்தமான நிலமாகையாலே சேஷிக்குத்தேஶ்யமென்றபடி. திருவேங்கடமுடையானையோ கவிபாடினுரென்ன (திருவேங்கடத்தித்யாதி)

கட்டெழில்தென்குருகூர் - அரணழகையுடைத்தாய் தர்ஶநீயமான திருநகரியென்று சப்தார்த்தம்.

"எழில் - கட்டு - ஆயிரம்" என்றந்வயிப்பது.

கட்டடங்கநல்லரானவென்றது - தாரதம்யமில்லாதே யெல்லாரும் ஸமராயிருப்பரென்றபடி. போகத்துக்கு விசேஷணமானபோது, கட்டடங்கநன்றானவென்றும், அதாவது - ஸம்ருத்தமாய் நித்யமுமானவென்றபடி. ஸாகல்யபரமென்றது- கட்டடங்கவென்றபடி. " திருவேங்கடமுடையானைச்சொன்னவிப்பத்தும் வல்லவர்வானவர்போகமுண்பார்" என்றத்தால்பலிதம் ( நீர்மைக்கெல்லையித்யாதி ) திருமலையாஶ்ரயணீயஸ்த்தலமோவென்ன (ஒன்றியாக்கையித்யாதி) துர்விவேசமாம்படி யசித்தோடே ஸம்ஸ்ருஷ்டனாய் தேவாதி சரீரப்ரவேஶம்பண்ணுதபடி யுஜ்ஜீவிப்பிக்கைக்காக வவஸரப்ரதிக்ஷனாய் நிற்கிறதிருமலை இத்யர்த்த: .......................*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

( மாலுக்குவையம். )

[illegible]



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஆறும்பத்து.

## ஏழாந்திருவாய்மொழி.

### உண்ணுஞ்சோறு - ப்ரவேசங்கள்.

### ஆறாயிரப்படி.

(உண்ணுஞ்சோறு) இப்படி யெம்பெருமானைப்பிரிந்த வ்யஸநத்தாலே அத்யந்த மவஸந்நையாய் மோஹதசாபந்நையான பிராட்டி, தத்விஷய நிரவதிகாபிநிவேச ப்ரேரிதையாய்க்கொண்டு திருக்கோளூரிலே யெழுந்தருள, திருத்தாயா ரிவளுடைய நிரவதிக வ்யஸநத்தாலே யத்யந்தமவஸந்நையா யப்ராக்ருதிங்கதையாகையாலே யிவளெழுந்தருளுகிற சமயத்தி லவற்றை யநுசந்திக்கக்ஷமையன்றியே, பின்னை நெடும்போதுகூட ப்ரபுத்தையா யிவளைக்காணாமையாலே, இவளை யிழந்தேனென்கிறாள்.

### பன்னீராயிரப்படி.

ஏழாந்திருவாய்மொழியில், கீழ் - ஆத்மாத்மீய ஸ்வபாவங்களெல்லாம் ததீநமாம்படி அவற்றில் தமக்கு ஸ்வாம்யநிவ்ருத்தி பிறந்தபடியை யநுசந்தித்தருளினவர், அத்தலையில் தமக்குப்பிறந்த ப்ராவண்யாதிசயத்தாலே அதித்வரிதசித்தராய், ஸ்ரிய:பதியான சர்வேஸ்வரன் விஷயமாகத் தமக்கு த்வராபிறக்கைக்கடியான; அவனுடைய தாரக போஷக போக்யத்வாத்யாகாரத்தையும், சர்வலோக ப்ரசித்தமான நாமாதி யோகத்தையும், அத்திருநாமத்தினுடைய சர்வோபயோக யோக்யதையையும், ஐஸ்வர்யாதி சயத்தையும், அத்யந்த விலக்ஷணமான போகஸ்த்தாநவத்தையையும், ஆகர்ஷகமான வவயவசோபையையும், அநவதிக வ்யாமோஹத்தையும், அதிசயித போக்யையான லக்ஷ்மீவிஷயத்தி லபிமத தமத்வத்தையும், ஆஸ்ரித சௌலப்யத்தையும், அகில ஜகத்ஸ்வாமித்வத்தையு மநுசந்தித்து, தமக்குப்பிறந்த த்வராதிசயத்தாலே அவனை ப்ராபிக்கையிலே யுத்யோகித்து நடந்த விவருடைய வவஸ்த்தையை யநுசந்தித்துப் பரிவரானவர்க ளீடுபட்ட ப்ரகாரத்தை; நாயகனான சர்வேஸ்வரனைப் பிரிந்தாற்றாமையாலே அத்யந்தத்வராவிஷ்டையாய்க்கொண்டு அவனிருந்த திருக்கோளூரைநோக்கி அபிசாரிகாவ்ருத்தியைப் பண்ணிக்கைகழிந்ததலைவியைப்பற்ற நற்றாயிரங்கின பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்....*

### ஈடு.

கீழ்த்திருவாய்மொழியிலே - மோஹித்துக்கிடக்கிற தன் மகளுடைய வவசாதத்தைக்கண்ட திருத்தாயாரானவள், " அதுபோயிற்றது,

இதுபோயிற்றது " என்று அவன் திருநாமத்தைச்சொல்லிக் கூப்பிட்டு இவள்தானும் மோஹித்தாள்; திருநாம ப்ரஸங்கத்தாலே பெண்பிள்ளை யுணர்ந்தெழுந்திருந்து புறப்பட்டுத் திருக்கோளூரேறப்போனாள்; திருத்தாயாரும் வாசனையாலே யுணர்ந்து படுக்கையைப்பார்த்தாள், வெறும்படுக்கையாய்க்கிடந்தது; இனி யிவள் என் வயிற்றிற்பிறப்பாலும், தன் ப்ரக்ருதியாலும், இங்கிருந்தநாள் தேஹயாத்ரை யிருந்தபடியாலு மிவள் திருக்கோளூரேறப் புறப்பட்டுப்போனாள் என்றறுதியிடுகிறாள். வலயாதிகளெல்லா மிழந்தாளாகி லிவள் தன்னை நமக்கிழக்க வேண்டாவிறே யென்றிருந்தாள் - கீழ்த்திருவாய்மொழியில்; இத்திருவாய்மொழியில் - இவள் தன்னையு மிழந்தோமென்று கூப்பிடுகிறாள். ஆளவந்தார் கோஷ்டியிலே " * உண்ணுஞ்சோற்றிற் பிராட்டிக்கோ * கள்வன் கொல்லிற் பிராட்டிக்கோ? அஞ்சவேண்டுவது " என்று கேட்க, " இருவராய்ப் போனவர்களுக்கு வயிறெரியவேணுமோ, தனிவழியே போனவளுக்கன்றோ வயிறெரிய வேண்டுவது " என்றிருந்த முதலிகள்சொல்ல, " அங்ஙனன்று காணுங்கோள், இருவராய்ப் போனவர்களாகையாலே யிருவர்க்கு மஞ்சவேணும், தனியே போனவளுக்கொரு பயமுண்டோ" என்றருளிச்செய்தார். அதுக்கடி - இருவரு மிருவர்க்கு மூமத்தங்காயாய், கடித்தது மூர்ந்தது மறியார்கள்; இவளங்கே புக்கல்லது தரியாளென்று கருத்து. " * அள்ளலம்பூங்கழனி யணியாலிபுகுவர்கொலோ!, அன்றியே லங்காத்வாரத்திலே புகுவர்கொலோ! " என்றிறே அங்கு வயிறுபிடி. ஆனாலும், எங்கேனும்போகிலு மிருவராயல்ல திராதங்கு, " தனியேபோன விவளென்படுகிறாளோ " என்று மிகவும் நொந்து கூப்பிடுகிறா ளிவளுடைய திருத்தாயார்.

" அற்பசாரங்களவை சுவைத்தகன்றொழிந்தேன்" என்கிறபடியே-" பகவத்கோஷ்டிக்கினி ஆளாகமாட்டாராகாதே! " என்னும்படி சப்தாதிகளிலே கைகழிந்த விவர்,"சம்சாரிகளுக்கினி ஆளாகமாட்டார்" என்னும்படி * நாட்டாரோடியல்வொழிந்து * கொள்ள மாளாவின்ப வெள்ளத்தை புஜிக்கக் கைகழிந்தபடி சொல்லுகிறது. நரகாவஹமான விஷயத்தைப்பற்றிப் பிறரறியாமே போகக்கடவ விவர், ஸ்வரூபாநுரூபமான விஷயத்தைப்பற்றிப் பிறரறியாமே போம்படியாய் விழுந்தது. க்ஷுத்ரவிஷயத்தைப்பற்றிப் பழிக்கஞ்சாதே போகக்கடவவிவர், குணாதிகவிஷயத்தைப்பற்றிப் பழிக்கஞ்சாதபடியானார். " என்னுடைமை புக்க விடத்திலே நானும்போய்ப் புக்கல்லதுநில்லேன் " என்கிறாள், " லக்ஷ்மணே நகதாம்கதிம் " (லக்ஷ்மணே நகதாம்கதிம்) என்கிறபடியே.

[ஸூஹ்ருஜ்ஜநவஸிதஞ்ஜு] [ஸர்வாந்போகாந் பரித்யஜ்ய] தான் பண்டு விரும்பியிருக்கு மவற்றோடு பெற்றவர்களோடுவாசியறப் பொகட்டுப்போனாள். [வஸிதஞ்ஜு] [பரித்யஜ்ய] " நீண்டு மிவற்றிலே

நசைபண்ணும்" என்று தோற்றுதபடிவிட்டாள். [ஹர்த்ருஸ்நேஹபலா
த்க்ருதா] [பர்த்ருஸ்நேஹபலாத்க்ருதா] ஒருவிஷயத்தில் ஸ்நேஹமான
தெல்லாவற்றையும் விடப்பண்ணுமாகாதே; ஸ்வவசத்தாலே போனாள
ன்றுகிடீர். [அசிந்தயித்வா து:கானி] [அசிந்தயித்வாதுஃகாநி] விட்டவற்
றை நினையாவிட்டால், போய்ப்புகுகிறவிடத்தில் மிறுக்கைத்தான் நினை
யாநின்றாளோ. இவள் பெருமாளையொழியத் தன்னைக்காணிலிறே து:
கானுசந்தானம் பண்ணவல்லளாவது. [ப்ரவிஷ்டா நிர்ஜநம் வநம்] [ப்ரவி
ஷ்டாநிர்ஜநம்வநம்] "போகத்துக்கேகாந்தஸ்த்தலம்" என்னுமதுவே
கிடீ! ரிவள் நெஞ்சில்பட்டது. [புத்ரத்வய விஹீநம் தத்] [புத்ரத்வயவி
ஹீநம்தத்] சக்ரவர்த்தி, பிள்ளைகளிருவரையும் தேடிப்போர நொந்தான்.
[ஸ்நுஷயா ச விவர்ஜிதம்] [ஸ்நுஷயாசவிவர்ஜிதம்] "மீண்டு மிவ்விட
த்தை விரும்புவர்கள்" என்று நினையாதபடி குழைசரக்கறுத்துக்கொ
ண்டு போனபடி. [அபஶ்யத் பவநம் ராஜா நஷ்டசந்த்ரமிவாம்பரம்][அபஶ்ய
த்பவநம்ராஜா நஷ்டசந்த்ரமிவாம்பரம்] நிலவோடும் நக்ஷத்ரதாராகண
ங்களோடுங்கூட சந்த்ரன் குடிவாங்கின ஆகாசம்போலே கிடந்தது.
அப்படியேயாயிற் றித்திருமாளிகை கிடக்கிறது. "நல்லதோர் தாமரை
ப்பொய்கை" இத்யாதிப்படியேயாயிற் றிவள் திருமாளிகை கிடக்கிறது.
திருத்தாயாரு மிம்மாளிகையைக்கண்டு வெறுத்து; போகக்கடவதாகத்
துணிந்தாலென்னையுங் கூட்டிக்கொண்டுபோனாலாகாதோ, தனிவழியே
போவதே!, நான் கூடப்போகவிட்டா லவனுடனே கூடப்போகவும்
பெறுதொழிவதே!, இவள்தானெங்ஙனே போகிறாளோ!, நாடடங்கவா
ழ்வித்துக்கொண்டு போகிறாளோ!, அங்கே புக்காலென்படுகிறாளோ!,
வழியிலுள்ளாரொன் சொல்லுகிறார்களோ!, அங்கே புக்காலவ்வூரிற் சோ
லைகளையும் அங்குள்ள நீர் நிலங்களையு மவன் குணங்களையுங்கண் டுகக்கி
றாளோ, கண்டு சிதிலையாகிறாளோ!, இதெல்லாம் தானங்கேசென்று பு
க்காலிறே! என்றாப்போலே மநோரதித்துக்கொண்டு; தன்னைப்பார்த்த
ல், எங்களைப்பார்த்தல் செய்யாதே, இத்தையெல்லாம் கடலிலே கவிழ்
த்துப்போவதே! என்று திருத்தாயா ரின்னாதாகிறாள்.. ...................*

## ஜீயர் அரும்பதம்.

உண்ணுஞ்சோறு ப்ரவேஶே, கீழிற்றிருவாய்மொழியிலே - ஸ்வதசையைத்
திருத்தாயார் பேசும்படி மோஹங்கதையானவள், இத்திருவாய்மொழியில் - சந்நி
ஹிதையான திருத்தாயாரறியாதே திருக்கோளூரேறப்போனபடி யெங்ஙனே?,
மோஹங்கதையானவளுணர்ந்தே போகவேணுமே, அந்த வுணர்த்திக்குத்தான் ஹே
துவேது? என்கிற சங்கையிலே யருளிச்செய்கிறார் (கீழிற்றிருவாய்மொழியிலே யி
த்யாதி) (திருநாம ப்ரஸங்கத்தாலே) என்கிற விடத்திலே - "ஸாராமஸங்கீர்த்தந
வீதஶோகா" (ஸாராமஸங்கீர்த்தநவீதஶோகா) இத்யாத்யநுசந்தேயம். மோ
ஹித்த திருத்தாயாருணருகைக்கு ஹேதுவேதென்ன (திருத்தாயாருமித்யாதி)

" விரோணஸஂஜ்ஞாஂப்ரதிலப்யஸைவ " (சிரோணஸம்ஜ்ஞாம்ப்ரதிலப்யசைவ) என்கிறபடியே வாஸனையாலே யென்றபடி. திருக்கோளூரேறப்போனமையை யென்கொண்டறுதியிடுகிருளென்ன (இனியிவளித்யாதி) " என்னிளமான் " என்றத்தைப்பற்ற (என் வயிற்றிற்பிறப்பாலுமென்றது) "என்" என்றது - திருக்கோளூரிலே யதிப்ரவணையான வென்னுடைய வென்றபடி. தன் ப்ரக்ருதியாலுமென்றது- " இளமான் " என்ற விடத்தில், இளமையாலே - மார்த்தவத்தைச்சொல்லி, அத்தாலே - தூரப்போகமாட்டாத ம்ருதுப்ரக்ருதியாலு மென்றபடி. தேஹயாத்ரையிருந்தபடியாலுமென்றது - " உண்ணும்சோறு " இத்யாதியைக்கடாக்ஷித்து. அறுதியிடுகிருளென்றது - " திண்ணம் " என்றத்தைப்பற்ற.

கீழ்திருவாய்மொழியிலு மாற்ருமையுண்டே, அதிலிதுக்கு வாசியேதென்ன (வலயாதிகளித்யாதி) இத்திருத்தாயாருக்கு மகளைப்பிரிந்த துஃகமும் தனிவழி போன துஃகமு மிரண்டு முண்டாகையாலே, அதில் பிரிவால்வந்த துஃகத்தைக் கீழேருளிச்செய்து, தனிவழி போகையாலேவந்த துஃகத்துக்கு சூசகசம்வாதம் (ஆளவந்தாரித்யாதி) ஊமத்தங்காயயென்றது - ஊமத்தங்காயானது ப்ராந்திஜநக மாமாபோலே, அந்யோந்ய வைலக்ஷண்யங்களாலே யொருவர்க்கொருவர் ப்ராந்திஜநகராயென்றபடி; "அகலகில்லேனிறையும்," "பித்தர்பனிமலர்மேல் பாவைக்கு" என்னக்கடவதிறே. அங்கே புக்கல்லது தரியாளென்றது - " திண்ணம் " என்றத்தைப்பற்ற - " இருவருங்கூடப்போகையாலே இருவர்க்கு மஞ்சவேணும் " என்னுமதுக்குத் திருமொழியில் சூசகசப்தமேதென்ன (அள்ளலமித்யாதி) "கொலோ" என்றது - ஸம்ஶயத்திலே. இங்குத்தையில் ப்ரகரணத்துக்குச்சேர முதலிகள் நிர்வாஹத்தை யங்கீகரித்தருளிச்செய்கிருர் (ஆனுலுமித்யாதி) (அள்ளலம்பூங்கழனியணியாலிபுகுவர்கொலோ) அருச்சேரு யழகியதாய்ப் பூவையுடைத்தான கழனியையுடைய வழகிய திருவாலியிலே புகுவர்களோவென்றபடி. திருமொழி மூன்ரும்பத்து ஏழாந்திருமொழி, " கள்வன்கொல் " இத்யாதி.

இத்திருவாய்மொழியில் தாயார்முதலான பந்துக்களையும் போகோபகரணங்களையும் விட்டுப்போனதுக்கு ஸ்வாபதேசம் ( அற்பசாரங்களித்யாதிவாக்யத்ரயத்தாலே ) விஷயாநுபவத்துக்கு அல்பத்வம், நரகாவஹத்வம், குணஹீநத்வம், என்ருப்போலே மூன்றுதோஷங்களுண்டாகையாலே, அதில்ப்ரதமம், இவற்றினுடைய வல்பத்வத்தையும் பகவத்விஷயத்தினுடைய வபரிமிதத்வத்தையு மருளிச்செய்கிருர் ( அற்பசாரங்களித்யாதி) அத்யல்பமான சாரத்தையுடைத்தான நாநாவிதக்ஷுத்ரவிஷயங்களை யநுபவித்து அதடியாக வுன்னைவிட்டுப்போனே னித்யர்த்தஃ. அநந்தரம், இவற்றினுடைய நரகாவஹத்வத்தையும் பகவத்விஷயத்தினுடைய ஸ்வரூபாநுரூபதையையுமருளிச்செய்கிருர் (நரகாவஹமானவித்யாதி) அநந்தரம், இவற்றினுடைய குணஹீநதையையும் பகவத்விஷயத்தினுடைய குணாதிக்யத்தையு மருளிச்செய்கிருர் (க்ஷுத்ரவிஷயத்தையித்யாதி) என்று மூன்றுவாக்யத்துக்கும் பேதங்கண்டுகொள்வது. (கொள்ளமாளாவின்பவெள்ளம், அநுபவிக்க வெல்லைகாணவொண்ணுத வாநந்தசமுத்ரமித்யர்த்தஃ. க்ஷுத்ரவிஷயத்தையென்றது - குணஹீநவிஷயத்தையென்றபடி.

பெண்பிள்ளைவிட்டுப்போனுளாகி லினியிவள்செய்வதேதென்ன (என்னுடைமையித்யாதி) உடைமையென்றது - மகளை. புக்கல்லது நில்லேனென்றது - " செல்லவைத்தனள் " என்றதினிரண்டாமர்த்தத்தைப்பற்ற. பெருமாள் " இளையபெருமாள்போன வழியேபோவேன் " என்ருப்போலே என்றிதுக்கு த்ருஷ்டாந்தம்

(லக்ஷ்மணேநேத்யாதி) "ப்ரவேஸ்ய ஸம்பாராந் மாபூத்காலாத்யயோ யதா। அத்யைவாஹம் கமிஷ்யாமி லக்ஷ்மணேந கதாம் கதிம்" (ப்ரவேஸ்யத ஸம்பாராந் மாபூத்காலாத்யயோயதா । அத்யைவாஹம்கமிஷ்யாமிலக்ஷ்மணேநக தாம்கதிம் ) இத்யுத்தரஸ்ரீராமாயணே.

தாயார்முதலானவற்றைவிட்டுப்போனதுக்குத்ருஷ்டாந்தம் ( சர்வாநித்யாதி ) "ஸர்வாந் போகாந் பரித்யஜ்ய பர்த்ருஸ்நேஹபலாத்க்ருதா। அசிந்தயித்வா து:காநி ப்ரவிஷ்டா நிர்ஜநம் வநம்" ( ஸர்வாந்போகாந்பரித்யஜ்யபர்த்ருஸ்நேஹபலாத்க்ருதா। அசிந்தயித்வாது:காநிப்ரவிஷ்டாநிர்ஜநம்வநம்" இதி ஸுந்தரகாண்டேஹநூமான். ✽ சர்வசப்தத்துக்கு சங்கோசமில்லாமையாலே பாவம் (தான்பண்டித்யாதி) உபசர்க்கார்த்தம் (மீண்டுமித்யாதி) இப்படி சவாஸநமாகவிடுகைக்கடி யருளிச்செய்கிறார் (ஒருவிஷயத்திலித்யாதி) "பலாத்க்ருதா" ( பலாத்க்ருதா ) என்றதுக்கர்த்தம் (ஸ்வவஸத்தாலேயித்யாதி) மிறுக்கை - து:கத்தை. நினையாமைக்கு ஹேதுவேதென்ன (இவள்பெருமாளையித்யாதி) "நிர்ஜநம்" ( நிர்ஜநம் ) என்கிறது - ஹேதுகர்ப்பவிசேஷணமென்று விவக்ஷித்தர்த்தம் ( போகத்தும்கித்யாதி)

இவள் புறப்பட்டுப்போனபின்பு திருமாளிகை யெப்படியிருந்ததென்ன; த்ருஷ்டாந்தம் ( புத்ரத்வயேத்யாதி ) "புத்ரத்வய விஹீநம் தத் ஸ்நுஷயா ச விவர்ஜிதம்। அபஸ்யத் பவநம் ராஜா நஷ்டசந்த்ரமிவாம்பரம்" ( புத்ரத்வயவிஹீநம்தத் ஸ்நுஷயாசவிவர்ஜிதம்। அபஸ்யத்பவநம்ராஜாநஷ்டசந்த்ரமிவாம்பரம் ) இத்யயோத்யாகாண்டே. இஸ்ஸ்லோகத்துக்கெல்லாம்பாவம் (சக்ரவர்த்திரித்யாதி) "ஸ்நுஷயா ச விவர்ஜிதம்" ( ஸ்நுஷயாசவிவர்ஜிதம் ) என்றதுக்குபாவம் (மீண்டுமித்யாதி) குழைசரக்கறுத்துக்கொண்டுபோனபடியென்றது- ரக்ஷ்யவர்க்கத்தையுங்கூடக் கூட்டிக்கொண்டுபோனபடியென்கை. அதாவது - பைநெகிழ்ந்தகயிறெல்லாங்கட்டிப் பண்டங்களையெடுத்துக்கொண்டுபோம் செட்டிகளைப்போலே, தங்களுக்கு ரக்ஷ்யவர்க்கமானபிராட்டியையுங் கூட்டிக்கொண்டுபோனார்களென்றபடி. குழைசரக்கு - ரக்ஷ்யவர்க்கம். அறுத்துக்கொண்டுபோகையாவது - கூடக்கொண்டுபோகை. தார்ஷ்டாந்திக த்ரயாநுகுணமாக த்ருஷ்டாந்தத்ரயம் ( நிலவோடித்யாதி ) பிராட்டிஸ்த்தாநேநிலவு, இளையபெருமாள் ஸ்த்தாநேநக்ஷத்ரதாரகணங்கள், ராமசந்த்ரனிறே. த்ருஷ்டாந்தாந்தரம் (நல்லதோரித்யாதி) பெரியாழ்வார்திருமொழி மூன்றும்பத்து எட்டாந்திருமொழி முதற்பாட்டு. இதுக்கர்த்தம்- அழகியதொரு தாமரைப்பொய்கையானது; நாட்பூவின்மேலே யதுக்குவிருத்தமானபனியானது மிகவும்சொரிய அத்தாலே யல்லியும்தாதும் செவ்விகெட்டுதிர்ந்தழகழிந்தாப்போலே யிராநின்றது க்ருஹமானது. ஜநசஞ்சாரமற்று வெளியாய்க்கிடவாநின்றதென்கை. ஆலென்றதும், ஓவென்றதும் - விஷாதாதிசயஸூசகம். "எம்மையொன்றும்நினைத்திலள்" என்றத்தைப்பற்ற (போகக்கடவதாகத்துணிந்தாலித்யாதி) "இதெல்லாங்கிடக்க" என்றத்தைப்பற்ற ( தனிவழியேபோவதேயென்றது ) "அவன்கிடந்த" என்றத்தைப்பற்ற (நான்கூடவித்யாதி) "ஒல்கியொல்கி" இத்யாதியைப்பற்ற ( இவள்தானெங்ஙனேயித்யாதி ) "ஊருநாடும்" இத்யாதியைப்பற்ற (நாடடங்கவித்யாதி) "கோவைவாய்துடிப்ப" என்றத்தைப்பற்ற ( அங்கேபுக்காலித்யாதி ) "கொல்லையென்பர்கொலோ" இத்யாதியைப்பற்ற (வழியிலுள்ளாரித்யாதி) "பூவியல்பொழிலும்" இத்யாதியைப்பற்ற ( அவ்வூரில்சோலைகளையுமித்

யாதி ) அவன் குணங்களையுமென்றது - " அவன்சீர் " என்றத்தைப்பற்ற. " எங்ஙனேயுகக்குங்கொல், " " நின்றுநின்றுநையும் " என்றத்தைப்பற்ற (உகக்கிறளோ, சிதிலையாகிறளோவென்றது) "செல்லுங்கொல்" என்றத்தைப்பற்ற ( இதெல்லாந்தானித்யாதி ) " இதெல்லாங்கிடக்க " என்றதினிரண்டாமர்த்தத்தைப்பற்ற (தனனைப்பார்த்தலெங்களைப்பார்த்தலென்றது) அதாவது - தன்மார்த்தவத்தைப்பார்த்தல், எங்கள்விஸ்லேஷபீருத்வத்தைப்பார்த்தலென்றபடி. " * ஊரும்நாடுமுலகமுந் தன்னைப்போ லவனுடையபேருந்தார்களுமே பிதற்றப்பண்ணிக்கொண்டிருக்கிறவள்போனாள் " என்கையாலே ( இத்தையெல்லாம் கடலிலேகவிழ்த்து) என்கிறார்..*

---

# ஏழாந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

---

உண்ணுஞ்சோறுபருகுநீர்தின்னும்வெற்றிலையுமெல்லாங்
கண்ணனெம்பெருமானென்றென்றேகண்கணீர்மல்கி
மண்ணினுள்ளவன்சீர்வளமிக்கவனூர்வினவித்
திண்ணமென்னிளமான்புகுமூர்திருக்கோளூரே.

### ஆறாயிரப்படி.

லோகசித்தமான தாரக போஷக போக்யங்களை இவள் " புஜிக்கவேணும் " என்றுகொண்டு சொன்ன லத்தையறியாதே, எனக்குதாரகமும் போஷகமும் போக்யமும் கண்ணனெம்பெருமானென்றென்றே சொல்லி, அவனைப் பெருமையாலே கண்கள் நீர்மல்கியிருந்த வென்னுடைய பெண்பிள்ளை, பூமியிலெங்குத்தையிலும் பகவத் குணங்கள் ஸம்ருத்தமாக விவனை வளர்த்துக்கிடக்கிற திருக்கோளூரிலே அதிமாத்ராஸக்த மாநஸையாகையாலே, அவ்வூரை வினவி வினவித் தனக்கதுவே பாதேயமாகக்கொண்டு திருக்கோளூரிலே போய்ப்புகும் ; இதிலொரு சந்தேஹமில்லை. அங்ஙனே கண்கள் நீர்மல்க விருந்த விருப்பையாகிலுங் கண்டிருக்கப் பெறுகிறிலேன், இழந்தேனென் றலற்றுகிறாள்............*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், தாரகபோஷக போக்யாதிகளெல்லாம் தானேயாயிருக்கிற க்ருஷ்ணன்வர்த்திக்கிற திருக்கோளூரேயிவள்சென்று புகுமூரென்றறுதியிடுகிறாள்.

உண்ணும்-தாரகத்வேந உண்டுகொண்டு நிற்கவேண்டும்படியான. சோறும்-சோறும். பருகும்-த்ருஷ்ணாசாந்திகரமாய்க்கொண்டு போஷகமாகையாலே பாநம்பண்ணி நிற்கவேண்டும்படியான. நீர் - தண்ணீரும். தின்னும் - ப்ரீதிஹேதுவாய்க்கொண்டு போக்யமாகையாலே தின்னக்கடவ. வெற்றிலையும்-வெற்றிலையும். எல்லாம் - இப்படி தாரகாதிகளுக்குறுப்பானவஸ்துக்களெல்லாம். கண்ணன் - "வாஸுதேவஸ்ஸர்வம்" (வாஸுதேவஸ்ஸர்வம்) என்கிறபடியே வசுதேவதநயனான க்ருஷ்ணனாய். எம் - எனக்கு. பெருமான் - ஸ்வாமியானவன். என்றென்றே - என்றெ

ன்று பலகாலுமாவர்த்தித்து. அவனுடைய அஸந்நிதாநத்தாலே, கண்கள் - கண்கள். நீர்கள் - நீர். மல்கி - மல்கி. மண்ணினுள் - அவனாஶ்ரித ஸந்நிதாநார்த்தமாகவந்தபூமியிலே அவன் - அவனுடைய. சீர் - சௌலப்ய சௌந்தர்ய சௌஶீல்யாதிகுணங்களையும். வளம் - ப்ரணயித்வசம்பத்தியால். மிக்கவன் - பரிபூர்ணனானவனுடைய. ஊர் - ஊரையும். வினவி - தானநுசந்திக்கும்ளவன்றியே, ப்ரணயபாரவஶ்யத்தாலே, அநபிஜ்ஞரையைப்போலே ஸந்நிஹிதரையும்வினவி வழிக்குதாரகமாக வுசாவாநின்றுகொண்டு. என் - என் பெண்பிள்ளையாகையாலும். இளம் - முக்தமான. மான் - மான்போலே பேதைப்பருவமாகையாலும். வேறோரிடத்தில் தூரப்போகவல்லளல்லள்; அவள்போய், புகும் - புகும். ஊர் - ஊர். திருக்கோளூரோ - திருக்கோளூரோ. இது, திண்ணம் - நிஶ்சிதம்.......................................................*

## ஈடு - முதற்பாட்டு.

தன்வயிற்றிற்பிறப்பாலும், இவள் தன் ஸ்வபாவத்தாலு மிவளிங்குநின்றும்போய்ப் புகுமூர் திருக்கோளூரென்றத்யவஸிக்கிறாள்.

( உண்ணுஞ்சோறுபருகுநீர் தின்னும்வெற்றிலையுமெல்லாங்கண்ணன் ) இவளவ்வருகே யொருவாய்ப்புகுநீர் தேடிப்போனாளே. இங்கிருந்தநா ளந்நபாநாதிகளாலே தரித்து, அங்கேபுக்கு அவனாலேதரிக்கப்போனாளோ. "அஹமந்நம் - அஹமந்நாதஃ" (அஹமந்நம்-அஹமந்நாதஃ) என்றிருப்பார்க்கு மவ்வருகு போகவேணுமோ. "சோறு, தண்ணீர்,வெற்றிலை" என்னவமையாதோ, "உண்ணுஞ்சோறு" என்றுப்போலேயிருக்கிற விசேஷணங்களுக்குக் கருத்தென்னென்னில் ; "வேட்டபொழுதிலவையவைபோலுமே - தோட்டார்கதுப்பினாடோள்" என்று அவனும்சொன்னானிறே ; ( அதாவது - அபேக்ஷையுடையபோதி லந்த வந்த சோறு தண்ணீர் வெற்றிலைபோலாகுமிறே தோடுபொருந்தினகதுப்பையுடையவள் தோளின் ஸம்ஶ்லேஷம் ; ) அப்படியே. இவைதானேஅநபிமதமுமாயிருக்கு மோரோவவஸ்த்தைகளிலே ; அதுக்காக, அபிமதசமயத்தி லிவைதான் யாதொருபடியிருக்கும் அப்படியேயாயிற் றிவர்க்கெப்போதும் பகவத்விஷயமென்கைக்காக. தாரகபோஷக போக்யங்களெல்லாம். (எல்லாம்கண்ணன்) "வாஸுதேவஸ்ஸர்வம்" (வாஸுதேவஸ்ஸர்வம்) என்றுகொண்டு எல்லாம் க்ருஷ்ணனென் றிருக்குமத்தனை. உண்ணுஞ்சோறென்கையாலே - அல்லாதது உண்டுசமையும் சோறென்கையும், இதுமாறாதே புஜிக்கும் சோறென்னுமதுவும் தோற்றுகிறது. "கண்ணாணி, லோவாத்தொழில்சார்ங்கன் தொல்சீரைநன்னெஞ்சே, யோவாதவூணாகவுண்" என்னக்கடவதிறே. மாறாதேபுஜிக்கலாவதும், மாளாததுமிதிறே; "அப்பொழுதைக்கப்பொழுதென்னாராவமுதம்" என்றும், "கொள்ளமாளாவின்பவெள்ளம்" என்றுமிறேயிருப்பது. ( எம்பெருமான் ) இவற்றிலாகாததொன்றில்லைகிடீர், இவையெல்லாம்வகுத்தவனேயாயிருக்கை. இவள் சந்நிதியே யமையுங்கிடீ ! ரெங்களுக்கு. ( என்

றென்றே ) இதொழிய வேறொன்றை "தாரகம்" என்றிருக்கிலிறே மற்றொன்றைச்சொல்லுவது. இது தன்னையே மாறுதேசொல்லி. ஒருகாலித்தைச்சொல்லிப் பின் பூணுறக்கத்தாலே போதுபோக்கலாம்விஷயமன்றே. (கண்கள்நீர்கள்மல்கி) இவர்களுடைய உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும்வெற்றிலையுமெல்லா மிருக்கிறபடி. இவள்முகத்தாலேகாணு மிவர்களுக்கு ஜீவநம். தன்ஜீவநத்துக்குப் போகிறவ ளெங்கள் ஜீவநத்தைக்கொண்டுபோகவேணுமோ. ஒருவன் பகவத்குணவித்தனாய்க் கண்ணுங் கண்ணநீருமாயிருக்க, அவனைக் கண்டுகொண்டிருக்கவாகாதேயடுப்பது. "அழுநீர்துளும்பவலமருகின்றனவாழியரோ" என்று – சேதநராகில் மங்களாசாஸநம்பண்ணக்கடவது. நஞ்சீயர், "பிள்ளைதிருநறையூ ரரையரோடே மூன்று திருவாய்மொழிகேட்டேன், அதிலெனக்கொரு வார்த்தைகளும் போகாது; ஒரு திருவாய்மொழியை ப்ரஸ்தாவியா அவர்சிதிலராய்க் கண்ணுங்கண்ணநீருமா யிருக்குமிருப்பை நினைத்திருப்பன்" என்றருளிச்செய்வர். [ ஆஹ்லாதஶீதநேத்ராம்பு ] [ஆஹ்லாதஶீதநேத்ராம்புః] விரஹத்தாலே கொதித்துப்புறப்படும் சோகாஶ்ருபோலன்றிக்கே, பகவதநுபவஜநிதமான ஹர்ஷப்ரகர்ஷத்தாலே குளிர்ந்த கண்ணீரை யுடையனாவது. [ புலகீக்ருதகாத்ரவாந் ] [புலகிக்ருதகாத்ரவாங்] உடம்படைய மயிரெறிந்திருப்பது. [ பரகுணாவிஷ்டः ] [பரகுணாவிஷ்டः] பகவத்குணாவிஷ்டனாவது, தைவாவிஷ்டனைப்போலே. அவன் [ ஸர்வதேஹிபிः-த்ரஷ்டவ்யः ] [ஸர்வதேஹிபிः - த்ரஷ்டவ்யः] அவன் தேஹபரிக்ரஹம்பண்ணினாரெல்லார்க்கும் த்ரஷ்டவ்யன். தேஹபரிக்ரஹம்பண்ணினதுக்கு ப்ரயோஜந மிவனைக்காண்கையாயிற்று. [ ஸதா-த்ரஷ்டவ்யः] [ஸதா–த்ரஷ்டவ்யः] ஸதா தர்ஶநம் பண்ணுகைக் கொரு தேசவிசேஷம் தேடிப்போக வேணுமோ. அநந்தாழ்வான் சோழகுலாந்தகனிலே க்ருஷிபண்ணியிருக்கிறு னொரு ஸ்ரீவைஷ்ணவனைக்கண்டு, "உம்முடைய வூரேது" என்றுகேட்க, "என்னூர் திருக்கோளூர்" என்ன, "அங்குநின்றும்போந்ததென்" என்ன, "தேஹயாத்ரைநடவாமேபோந்தேன்" என்ன, "அவ்வூரில் கழுதையைமேய்த்து ஜீவிக்கமாட்டிற்றிலையோ, நிலைநின்றஜீவநத்தைவிட்டுப் போந்தாயாகாதே" என்றானும். (கண்ணனெம்பெருமானென்றென்றே கண்கணீர்கள்மல்கி) இந்த பாவநாப்ரகர்ஷத்தாலே பெற்றுப்போலேயிருந்து ஆநந்தாஶ்ரு புறப்படுகிறபடி யாகவுமாம்; இவ்வநுசந்தாநத்தாலே கண்ணீர்மல்கியென்னவுமாம். (மண்ணினுளித்யாதி) மண்ணினுள் - புகுமூர்திருக்கோளூரோ. விண்ணிலோரூர் விசேஷிக்கவேண்டும்படியாயிராதிறே. (அவன்சீர்வளம் மிக்கவனூர்) அவனுடைய கல்யாணகுணங்களையும் நிரவதிகசம்பத்தை யுடையவனுடையவூரையும். [ ஸோஶ்நுதே ஸர்வாந்காமாந்ஸஹ ப்ரஹ்மணா ] [ ஸோஶ்நுதேஸர்வாங்காமாங்ஸஹப்ரஹ்மணா ] என்று அவனோடே அவன்குணங்க

ளோடு வாசியற ப்ராப்யமாகிறவோபாதி அவன்விரும்பினதேசமும் ப்ரா ப்யாந்தர்க்கதமாகக்கடவதிறே. ( அவன் சீர் ) அவன் கல்யாணகுணங்க ள். அவையாகிறன - அவன்தன்திறத்தில் தாழநிற்கும் நிலைகள். ( வளம் மிக்கவனூர் ) பரமபதம் கலவிருக்கையோபாதி; உகந்த விஷயத்தைப் பெறுமிடமிறே ஊராகிறது. * கிம்கார்யம்ஸீதயாமமவிறே. பரமபதத்தி ற்காட்டிலு மாஶ்ரிதரிருந்தவிடமிறே ஊராகிறதும், அவன்திருவுள்ளத்து க்குப் பொருந்தியிருப்பதும். ( வளம்மிக்கவன் ) ப்ரணயதாரையில் வித க்தனென்றுமாம். இப்போது வைதக்த்யமாவது - தானிருந்தவிடத்தே யிவள்வரும்படி யித்தலையை யழித்தபடி. (வினவி) “ திருக்கோளூரெத் தனையிடம்போரும்” என்று எதிரே வந்தாரைக்கேட்டு, அவர்கள் “ இ ன்னதனை யிடம்போரும்” என்ன, அதுதானே வழிக்குபாதேயமாகப் போகை. “ வாமெயஂவுஂணரீகாக்ஷ” ( பாதேயம்புண்டரீகாக்ஷ )இத் யாதி. பூவலரும்போதைச்செவ்விபோலே “ திருக்கோளூரெத்தனையிட ம்போரும்” என்றுகேட்கும்போதைத் திருப்பவளத்தில் செவ்வி காண ப்பெற்றிலேனென்றுகாணும் திருத்தாயார் தான்நோவுபடுகிறது. ( என் னிளமான்புகுமூர் திருக்கோளூரே) என்வயிற்றிற் பிறப்பாலும், இவள் ப்ரக்ருதியாலு மவ்வூரிலல்லது புகாளென்கிறாளாயிற்று. தாய் வழிகொ ண்டே ஸ்வபாவங்களறுதியிடலாமாகாதே. பெருமாளைக்கண்டல்லது த ரிக்கமாட்டாதானாய் வருகிற ஸ்ரீபரதாழ்வானைக்கண்டு வைத்தேயும், த்ரி காலஜ்ஞனான ருஷியுங்கூட, [ கூஜிஊஉ-ஷொவுஜஸி ] [ கச்சிந்நதுஷ் டோவ்ரஜஸி ] என்று தாயாரையிட்டு வழக்குப் பேசுவித்துக்கொண்டு அவரைக் காடேறப் போகவிட்டாயாகில், இன்னம் “பெருமாளிருக்கில் கீழ்வயிற்றில் கழலையாகிறது” என்று அங்குப்போய் நலியத் தேடுகிறா யல்லையிறே என்றானிறே; அவன்படிகள் காணநிற்கச்செய்தேயும் மாத் ருசம்பந்தங்கொண்டு சங்கித்தானிறே. பதார்த்த ஸ்வபாவங்களைக் கொ ண்டு பத்தும்பத்தாக நிமித்தங்களை யறியக்கடவரா யிருப்பர்க ளாயிற்று வேடர்; இங்ஙனே யிருக்கச்செய்தேயும், தம்மெல்லையிலே யிவன்வந்து புகுந்ததுக்கு ஹ்ருஷ்டராய் “ அடிச்சேரியிலேவந்துபுகுவதே ! ” என் பது, “ ஆனாலும், ராஜாக்களாயிருப்பார் வன்னியர்பற்றிலேபுகுரும்போ து கேள்விகொண்டன்றோ புகுருவது” என்றாப்போலே யிருக்கவெளி றும் காழ்ப்புமாகச்சொல்லி, தாய்வழியைநினைத் தசிர்த்தாரிறே ஸ்ரீகுஹ ப்பெருமாளும். அப்படியே யிவளும் தன்வயிற்றிற்பிறந்த சுத்தியே ஹே துவாக “ திருக்கோளூரிலேபுகும்” என்றறுதியிடுகிறாள். ராமாஸ்த்ரமி லக்குத்தப்புமோ !, என்மகள் புகுமூரதுவேயென்கிறாள். ( இளமான் ) இப்பருவத்தி லிவளைத் தலைக்கறுக்கும்போது அவ்வூரிலவனேயாகவேண் டாவோ. ( என்னிளமான் ) க்ரமப்ராப்தி பற்றாதவள். தன் மார்த்தவம் பாராதே பதறிக்கொண்டுபோனாள். ( புகுமூர் ) காட்டுத்தீயிலே யகப்ப ட்டவன் பொய்கையும் பொழிலுந் தேடிப் புகுமாபோலே, சம்சாரமா

கிற பாலைநிலத்தில் காட்டுத்தீயிலே யகப்பட்டவனுக்கு உகந்தருளின நிலங்களானவை பொய்கையும் பொழிலும்போலேயிறே. புகுமூரென்கையாலே - புக்கார்போகுமூரன்றென்கை. எம்பெருமானார் தெற்கேயெழுந்தருளாநிற்க, எதிரே வருகிறாளொரு பெண்பிள்ளையைக் கண்டு "எங்குநின்றும்" என்ன, "திருக்கோளூரில்நின்றும்" என்ன, "அவ்வூரில்புக்கபெண்களும் போகக்கடவராயிருப்பர்களோ" என்றருளிச்செய்தார். (என்னிளமான் - மண்ணினுள் - புகுமூர் திருக்கோளூரே - இது திண்ணம்) இவள்போய்ப்புகுமூர் திருக்கோளூரே, இது நிஶ்சயம். இவ்வூரில் பிள்ளைகளைக் காணு விட்டால், கோயிலுக் குள்ளே தேடு மத்தனையிறே.......................................................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (உண்ணுஞ்சோறித்யாதி) "திண்ணமென்னிளமான்" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (தன்வயிற்றிலித்யாதி) "என்னிளமான்" என்றத்தைப்பற்ற (தன்வயிற்றிற்பிறப்பாலுமென்றது) இவள்தன்ஸ்வபாவத்தாலுமென்றது- "இளமான்" என்றவிடத்தில் இளமையாலே - மார்த்தவத்தைச்சொல்லி, அத்தாலே - தூரப்போகமாட்டாதபடியான ம்ருதுஸ்வபாவத்தாலு மென்னுதல்; "உண்ணுஞ்சோறு" இத்யாதியைப்பற்றவாதல்.

"திருக்கோளூரேறப்போனாள்" என்றுசொல்லுகிற திருத்தாயார், "உண்ணுஞ்சோறு" இத்யாதியாலே-இவளுடைய தேஹயாத்ரையைச்சொல்லுகிறதுக்கு பாவம் (இவளவ்வருகேயித்யாதி) வாய்ப்புகுநீர்-உந்மஸ்தகாநுபவம். போனாளேயென்றது - போனாளோவென்றபடி. விவரணம் (இங்கிருந்தநாளித்யாதிவாக்யத்வயம்) அஹமந்நாதஃ என்றிருப்பார்க்குமென்றது - "ஊஹமநாஃ" (அஹமந்நாதஃ) என்கிறஶ்ருதியில்சொல்லுகிற நித்யஸூரிகளநுபவமிங்கே யுண்டாயிருப்பார்க்குமென்றபடி. அஹமந்நமென்கையாலே - ஈஶ்வரனுக்கு நித்யஸூரிகளிடத்திலாதரம்சொல்லுகிறது; அஹமந்நாதஃ என்கையாலே - நித்யஸூரிகளுக்கவனிடத்திலுண்டானவாதரம்சொல்லுகிறது. (வேட்டபொழுதிலித்யாதி) ஆசைப்பட்டவேளையி லந்தவந்தவஸ்துக்கள் போக்யமாமாபோலே, பூப்பொருந்தின வலகபாரத்தையுடையவளுடைய தோளோட்டை சம்ஶ்லேஷம் போக்யமாமென்றபடி. தோடு - பூ. ஆர்தல்-பொருந்துதல். கதுப்பு-அளகபாரம். ஆர்தல்-அலர்தலாகவுமாம். அன்றிக்கே, தோடென்றது-தாடங்கமாய், ஆர்தல் - பொருந்துதலாய், கதுப்பென்று கபோலமாதல். அப்படியேயென்றது-அந்தத்தமிழன் சொன்னபடியேயென்றபடி. "உண்ணும்" இத்யாதிவிசேஷணங்களுக்கு ப்ரயோஜநம் (இவைதானேயநபிமதமித்யாதி) "சோறு, நீர், வெற்றிலை" என்றதுக்குபாவம் (தாரகேத்யாதி) "எல்லாங்கண்ணன்" என்றதுக்குசம்வாதம் (வாசுதேவ இத்யாதி) "உண்ணும்" இத்யாதிவர்த்தமாநநிர்தேசத்துக்கர்த்தம் (உண்ணுஞ்சோறென்கையாலேயித்யாதி) உண்டுசமையும்சோறென்றது - மாளுகையாலும், தெகுட்டுகையாலுமுண்டுசமையுமென்றபடி. உண்டுசமையுமென்றது - உண்டுசெலவழியுமென்றபடி. இதுமாறுதேபுஜிக்கும்சோறென்றது - மாளாமையாலும், தெகுட்டாமையாலு மிதுமாறுதேபுஜிக்கும் சோறென்றபடி. பகவதநுபவ மப்படிமாறுதேபுஜிக்கும் சோறாயிருக்குமோவென்ன (கணைநாணிலித்யாதி) ஆஶ்ரிதவிரோதி நிரசநார்த்தமாகத் திருச்சரங்கள் நாணில்நின்றுமொ

# ஆறாம்பாட்டு.

இன்றெனக்குதவாதகன்றவிளமானினிப்போய்த்
தென்றிசைத்திலதமனையதிருக்கோளூர்க்கே
சென்றுதன்றிருமாறிருக்கண்ணுஞ்செவ்வாயுங்கண்டு
நின்றுநின்றுநையுநெடுங்கண்கள்பனிமல்கவே.

## ஆறாயிரப்படி.

(இன்றெனக்கு) இன்றுதன்னைப்பிரிந்து வ்யசநப்படுகிற வெனக்குத் துணையாகாதே யென்னைப்பொகட்டுப்போன வென்னிளமானினிப்போய்த் தென்றிசைத்திலதமனைய திருக்கோளூர்க்கே சென்று அவன் கோயிலுள்ளேபோய், தனக்குப்பிராட்டியோடுள்ள ஸம்ஶ்லேஷத்தாலே புதுக்கணித்த திருக்கண்களையும் திருப்பவளத்தையுங்கண்டு நிரவதிகப்ரீதியாலே விகஸிதமான விவளுடையகண்களையு மானந்தஜமான கண்ணநீரையு மானந்தாகதமான ஶைதில்ய பரம்பரையையும் காணப்பெற்றிலேனென்கிறாள் ..........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவனுடைய திவ்யாவயவஶோபையை யநுபவித்து ஹர்ஷத்தாலே ஶிதிலையாமிறேயென்கிறாள்.

எனக்கு-தன்னைப்பிரிந்துநோவுபடுகிறவெனக்கு. இன்று-இப்போது. உதவாது-உதவாதே. அகன்ற-கைகழியப்போன. இளமான்- சிறுப்பெண்பிள்ளையானவள். போய்-வருந்திவழிநடந்துபோய். தென்திசை-தெற்குத்திக்குக்கு. திலதமனைய-திலகம்போலேயலங்காரமான. திருக்கோளூர்க்கே-திருக்கோளூரிலே. சென்று-ப்ரவேசித்து. இனி - இனி-புக்கபின்பு. தன்-ஸ்வாபிமதஸம்ஶ்லேஷத்தைத் தனக்குப்ரகாசிப்பித்துத் தன்னையுற்றாரோடுறவறுத்த. திருமால்-ஸ்ரீமானுடைய. திரு-ஸாதராபிவீக்ஷணம்பண்ணுகிற. கண்ணும்-கண்களையும். செம்-ஸாநுநயமான ஸ்வாகதாதிவசநத்தாலே யுஜ்ஜ்வலரூபமான. வாயும் - அதரத்தையும். கண்டு-கண்டு. தன்னுடைய, நெடு-நெடிதான. கண்கள்-கண்களானவை. பனிமல்க - ஆநந்தாஶ்ருபூர்ணமாம்படி ஹர்ஷாதிசயத்தாலே. நின்றுநின்று-ப்ரதிக்ஷணம். நையும்-ஶிதிலையாகாநிற்குமிறே

## ஈடு - ஆறாம்பாட்டு.

அவனுடைய ஸ்நேஹபஹுமானவீக்ஷிதாதிகளைக்கண்டு ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஶிதிலையாகக்கடவளாகாதே யென்கிறாள். இவள்தானுகப்பதங்கேபுக்குத் தரித்துநிற்கவல்லளானாலிறே. "எங்ஙனேயுகக்குங்கொல்" என்றாள் கீழிற்பாட்டில், இங்ஙனேயுகக்குமென்கிறாள் - இப்பாட்டில். மகள் காணப்புகுகிறவிஷயத்தை யநுஸந்திப்பது, தன்மகள்படியை யநுசந்திப்பதாய்த் திருத்தாயார்படுகிறபாடென்றான்.

(இன்றெனக்குதவாதகன்ற) பிள்ளைபெற்றுவளர்க்கிறது ஆபத்துக்குதவுகைக்கன்றோ; தன்னைபிரிந்த வித்தனிமைக்கு மித்தசைக்கும் மேற்பட வெனக்கோராபத்துண்டோ, இன்றெனக்குதவாதொழிவதே. [illegible] [அதோநுகிம் துஃகதரம்ஸோஹமிக்ஷ்வாகுநந்தநம் । இமாமவஸ்த்தாமாபந்நோநேகபஸ்யாமிராகவம்] நான்நெடுங்காலங்கூடிவருந்தித் தம்மைப்பெற்றது, தம்மைப்பிரிந்து நானிவ்வவஸ்த்தையை ப்ராபித்த விற்றைக்கன்றோ; இன்று தம்மைநான்காணுதொழிவதே என்றானிறே. (எனக்குதவாது) சக்ரவர்த்தியில் தனக்குண்டானவாசி. "நின்றுதூங்குகின்றேன்" என்னுமாபோலே. அல்லாததாய்மாரைப்போலேயோ நான் தனக்கிருப்பது. தன்னுகப்பே யெனக்குகப்பாகவிருக்குமவளன்றோநான். இவளுடைய வபிமதவிஷயத்துக்கு கட்கையும்தானேயிறே, "பிரானிருந்தமைகாட்டினீர்" என்று. [அன்னையுமத்தனுமென்றடியோமுக்கிரங்கிற்றிலள்] பிள்ளைகாள்!, பொகடநினைப்பார்பழியிட்டுப்போகவேணுமோ. அடியாரை நியாமகரொன்னவேணுமோ!. வழிக்குத்துணையாவாரை நிவாரகரொன்றுபொகடுவதே!. (அகன்ற) இப்படிகைகழியப்போவதே!. ஒருதேசத்தேநின்று தானுதவாதொழியப்பெற்றேனே. (இளமான்) "பொகட்டதுதாயையிறே" என்றறிந்துமீளமாட்டாத பருவங்கிடீர். இவளைநான் வெறுக்கிறதென், பருவமதுவானால் செய்யலாவதுண்டோ. (இனிப்போய்) உறவுமுறையாரில் தாய்க்குமேற்பட்டாரில்லையிறே, இப்படி தாயுங்கூடப் புறம்பாம்படி யவன்பக்கலிலேபிறந்த பாவபந்தத்துக்குமேலே "அவ்வருகேயொன்றுண்டு" என்றுபோனாளோ. வந்தேறியைக்கைவிட்டால், ஸ்வதஸ்ஸித்தமானதுக்குச்செய்யவேண்டுவதொன்றுண்டோ. (தென்திசையித்யாதி) "தெற்குத்திக்கு" என்றுகொண்டு ஆரியர்களிகழ்ந்த ம்லேச்சபூமியிறே; இங்ஙனேயிருக்கச்செய்தே, ஓராபரணந்தானே யெல்லாவாபரணங்களுக்கும் நிறங்கொடுக்கவற்றாமாபோலே, திருக்கோளூருண்டாகையாலே திக்காக ஸ்லாக்யமானபடி. "[illegible]" (தக்ஷிணாதிக்க்ருதாயேநஸரண்யாபுண்யகர்மணா) என்னுமாபோலே. (திருக்கோளூர்க்கேசென்று) திருத்தாயார்க்கரிதாய்த்தோற்றுகிறபடி. அவளுக்கு, வழிப்போக்கோடு, ஊரில்புகுதியோடு, அவன்றன்னைக்காணுமதோடு வாசியற எல்லாமுத்தேஸ்யமாயிருக்குமிறே. அர்ச்சிராதிகதியோடு, பரமபதத்தோடு, அங்குப்புக்கால் * சதாதர்ஸநம்பண்ணுமவனோடு வாசியற ப்ராப்யாந்தர்க்கதமாகக்கடவதிறே. (தன்றிருமால்) "[illegible]" (ஸர்வேஷாமேவலோகாநாம்பிதாமாதாசமாதவः) இங்குவிட்டவுறவெல்லா மங்கேயுண்டாயிருக்கிறபடி. அவனுடைய ப்ராப்யவேஷந்தான் லக்ஷ்மீபதியாயாகாதேயிரு

ப்பது. விசிஷ்டவேஷத்திலல்லது ப்ரதிபத்திபண்ணவறியாள். (திருக்க ண்ணும்செவ்வாயுங்கண்டு) "இவள்முற்படும்படி நாம்பிற்பாடராவதே!" என்று பொறைகொள்ளுகைக்குக் குளிரநோக்குகிறநோக்கும், சிலசொ ல்லப்புக்குத்தடுமாறுகிற திருப்பவளமுமிருக்கிறபடி. அவனுடைய *கோ வைவாய்துடிப்ப மழைக்கண்களிருக்கிறபடி. (நின்றுநின்றுநையும்) நாட் செல்லநாட்செல்ல இற்றிற்றுவிழும். கண்டால் முன்புத்தைப்பிரிவை நி னைக்கவறியாள், எதிர்த்தலைபடுகிறது கண்டிடுபடுகிறபடி. "காணுங்காற் காணேன் தவறாயகாணுக்கால் । காணேன்தவறல்லவை" என்றிறேயிரு ப்பது. (அதாவது - நாயகனானவுன்னைக்காணும்போது தப்பானதுகண் டறியேன், காணாதபோது தப்பல்லாததுகண்டறியேன்.) (நெடுங்கண் கள்பனிமல்கவே) இக்கண்ணில் பரப்படங்கலும் பரப்புமாறும்படி ஜல தத்வமுண்டாவதே!. (நின்றுநின்றுநையும்) மாறாதே சிதிலையாகாநின் றாள். கிண்ணகத்திலிளகினகரைபோலே புடைகுலைப்படுகிறபடி. (நெடு ங்கண்கள் பனிமல்கவே) நெஞ்சுக்குசைதில்யம்போலேகாணும் கண்ணு க்குக்கண்ணநீர். காணப்புகக்கொண்டு கண்ணநீர் பகைகொண்டாடாநி ன்றது. ஆநந்தாப்ஸ்ருவோடு சோகாப்ஸ்ருவோடு வாசியில்லையிறே, விலக் குமதெல்லாம் பாதகமாகக்கடவது. "த்ரஷ்டவ்ய:" (த்ரஷ்டவ்ய:) என் னும்விஷயத்தை நானநுபவிக்கப்பெற்றிலேன் ..........................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு (இன்றித்யாதி) கீழே, "எங்ஙனேபுகக்குங்கொல்" என்றத் தோடேசேரவவதாரிகாத்வய மருளிச்செய்கிறார். முந்தினதுக்கு, (இவள்தானுகப் பது) இத்யாதிவாக்யாநந்தரம், (அவனுடையஸ்நேஹ) இத்யாதிவாக்ய மநுசந்தே யம். இரண்டாவது (எங்ஙனேயுகக்குங்கொலென்றாலித்யாதி) அவதாரிகாத்வயமு ம் - "தன்திருமால்திருக்கண்ணும்" இத்யாதியைக்கடாக்ஷித்து. பாட்டுக்களில் பூ ர்வோத்தரார்த்தங்களிலே தாயாரினுடைய ஸ்வபாவங்களையநுசந்தித்து, வ்யாக் தாவினிடுபாடு (மகள்காணவித்யாதி)

இன்றெனக்குதவாதகன்ற - தன்னைப்பிரிந்துநோவுபடுகிற வித்தசையில் து ணையின்றிக்கேயிருக்கிற வெனக்குதவாதே யென்கைகழியப்போனவென்று சப்தா ர்த்தம். இதுக்குஹார்த்தபாவம் (பிள்ளைபெற்றித்யாதிவாக்யத்ரயமும்) உனக்காபத் தேதென்ன (தன்னைப்பிரிந்தவித்யாதி) "தன்னைப்பிரிந்தவித்தனிமைக்கு மித்தசை க்கு முதவவன்றோ தன்னைப்பெற்றது" என்கை வ்யாஹதமன்றோ வென்ன; கலக் கமப்படி சொல்லுவிக்குமென்கைக்கு சம்வாதம் (அதோநுகிமித்யாதி) "அதோ நுகிம் து:கதரம் ஸோஹமிக்ஷ்வாகுநந்தந । இமாமவஸ்தாமாபந்நோ நேஹ பஶ்யாமி ராகவம்" (அதோநுகிம்து:கதரம்ஸோஹமிக்ஷ்வாகுநந்தநம் । இமா மவஸ்த்தாமாபந்நோநேஹபஶ்யாமிராஹவம்) இதிதஶரதப்ரலாப:. இஸ்ஸ்லோகா ர்த்தம் (நானித்யாதி) சக்ரவர்த்தியிலிவளுக்கு வாசியாவது - அவன்பிரிந்தவுடனே முடிந்தான், இவள்முடியவும்பெறாதே தரிக்கவும்பெறாதேயிருக்கை. இதுக்குத்ருஷ் டாந்தம் (நின்றித்யாதி) நாய்ச்சியார்திருமொழி ஒன்பதாந்திருமொழி ஒன்பதாம்

பாட்டு, "கோங்கலரும்பொழில்" இத்யாதி. ( கோங்கலரும்பொழில் மாலிருஞ்சோலையில் கொன்றைகள்மேல் ) கோங்கலராநின்றுள்ள சோலையையுடைய திருமாலிருஞ்சோலைமலையில் கொன்றைகளின்மேலே; ( தூங்குபொன்மாலைகளோடுடனாய் நின்றுதூங்குகின்றேன் ) நாலாநின்றுள்ள ஸ்ப்ருஹணீயமான மாலைகளோடே சத்ருசையாய் நின்றுதடுமாறுநின்றேன். கோங்கு-தேனும், பரிமளமும். அலருகை-ப்ரவஹிக்கையும், விகஸிக்கையுமென்று சப்தார்த்தம். இதுக்குதாத்பர்யம்-கொன்றைமாலையாகையாலே அழகர்க்குமாகாது, அதுதான் திருமலையிலுள்ளதாகையாலே சைவரையும் பறிக்கவொட்டார்கள்; ஆக, இரண்டிடத்துக்குமாகாதே கிடந்து நாலுமாபோலே, நானும் தம்மோட்டை சம்பந்தமேஹேதுவாக பந்துக்களுக்கு மாகாதே தாமுமங்கீகரிக்கப்பெறுதே நடுவேநின்று தடுமாறுநின்றேனென்ற வாண்டாளைப்போலே, இவளும் தன்னோடேகூட விருக்கவும்பெறுதே முடியவும்பெறுதே நோவுபடாநின்றேனென்கிறுளென்றபடி. "எனக்கு" என்றதுக்கு-கீழ், சக்ரவர்த்தியில் வ்யாவ்ருத்தியாகவருளிச்செய்து; இங்கே - அல்லாததாய்மாரில் வ்யாவ்ருத்தியாக வர்த்தாந்தரம் (அல்லாததாய்மாரையித்யாதி) அவர்களைப்பற்றவிசேஷமேதென்ன (தன்னுகப்பேயித்யாதி; இதுக்குநியாமகமேதென்ன ( இவளுடையவித்யாதி ) இதுக்குப்ரமாணம் (பிரானித்யாதி) இப்படி கடகையாயிருக்கச்செய்தே தனக்குதவாதேபோவானென்னென்ன; "தாய்தமப்பனால் நம்முடைய வபிமத விஷயத்துக்கு ப்ரதிபந்தகரன்றே" என்னுமதிசங்கையாலே போனாளென்னுமதுக்குசம்வாதம் (அன்னையுமித்யாதி) இதுக்குபாவம் ( பிள்ளைகாளித்யாதி ) பிள்ளைகாளென்றது - வார்த்தைப்பாடு. "அடியோமுக்கு" என்றதுக்குபாவம் ( அடியாரையித்யாதி ) ஏதத்விவரணம் (வழிக்குத்துணையித்யாதி) அடியோமான வெங்களுக்குத் தாயும்தந்தையுமென்று பேரிட்டிரங்கிற்றிலளிதிசப்தார்த்தः. திருமொழிமூன்றும்பத்து ஏழாந்திருமொழி ஏழாம்பாட்டு. "அகன்ற" என்கிறபதத்துக்கர்த்தம் ( இப்படியித்யாதி ) அதாவது - நாமிருக்கிறவூரிலேயிராதே தூரதேசத்திலேபோவதேயென்றபடி. தூரத்திலேபோனதுக்கு க்லேசிக்கிறதென், இருக்கிறவூரிலே யுதவாதிருந்தால் நல்லதோவென்ன; அதுநல்லதன்றேவென்கிறுள் (ஒருதேசத்தேயித்யாதி) ஏகதேசஸ்த்தையானல் மீளவருமென்றுதரித்திருக்கலாம், அதுவில்லாதபடி தேசாந்தரஸ்த்தையானுளென்றபடி. மகளென்னுதே, " இளமான் " என்றதுக்குபாவம் (பொகட்டதித்யாதி) பலிதம் (இவளைநாமித்யாதி)

"அகன்று - இனிப்போய்" என்கிறவளுடைய ஹார்த்தபாவம் ( உறவுமுறையாரித்யாதி ) பாவபந்தமுண்டானாலு மநுபவகைங்கர்யங்களுக்காகப்போகவேண்டாவோவென்ன ( வந்தேறியையித்யாதி ) வந்தேறியை - ஔபாதிகபந்துக்களான தாய்முதலானாரை. "திலதமனைய" என்றதுக்குபாவம் (தெற்குத்திக்கென்றித்யாதி) இதுக்குத்ருஷ்டாந்தம் (தக்ஷிணுதிகித்யாதி) போயென்னுதே, " சென்று " என்கிறதுக்குபாவம் (திருத்தாயார்க்கித்யாதி) திருத்தாயார்க்கரிதாய்த்தோற்றினால், போகிறபெண்ணுக்கு மரிதாயிராதோவென்ன (அவளுக்கித்யாதி) வழியேதொடங்கியுத்தேஶ்யமாயிருக்குமென்றபடி. வழியேதொடங்கி யுத்தேஶ்யமாகக்கூடுமோவென்ன (அர்ச்சிராதீத்யாதி)

" திருமால் " என்று - அவளையும்சொன்னதுக்குபாவம் ( இங்குவிட்டவித்யாதி ) கீழே - "அகன்ற" என்றபதத்தோடேகூட்டி பாவமருளிச்செய்து, "கண்டு" என்கிறபதத்தைக்கடாக்ஷித்து தாத்பர்யாந்தரம் (அவனுடையவித்யாதி) அவனை ப்ராப்யனானலாகாதோ, "லக்ஷ்மீபதியாய்" என்கிறநிர்ப்பந்தமேதென்ன ( விசிஷ்

டேத்யாதி ) திருக்கண்ணும் செவ்வாயுங்கண்டால் சிதிலையாகவேணுமோவென்ன ( இவள்முற்படும்படியித்யாதி ) இத்தால் - இவள்பக்கலவனுக்குண்டான வ்யாமோஹாதிசயந்தோற்றுகிறதென்கிறார் (அவனுடையவித்யாதி)

வீப்ஸைக்கர்த்தம் ( நாட்செல்லவித்யாதி ) விட்டுப்போனவனைக்கண்டால் வெறுக்குமதொழிய, ஈடுபடக்கூடுமோவென்ன (கண்டாலித்யாதி) "பிரிந்தவனைக் கண்டபோ தவன்தோஷம்தோற்றாது" என்கைக்குக்குறள் (காணுங்காலித்யாதி) "காணுங்கால் - தவராய - காணேன், காணுக்கால் - தவரல்லவை - காணேன்" என்றந்வயம். இதுக்கர்த்தம் - அவனைக்கண்டால் தோஷமானவைகாணேன். காணுவிட்டால் தோஷமல்லாதவைகாணேனென்று. தவறு-குற்றம், "நெடுங்கண்கள்" என்றுவைத்து, "பனிமல்க" என்றதுக்குபாவம் (இக்கண்ணிலித்யாதி) "ஜலதத்வமுண்டாவதே" என்கைக்கிவளறிந்தபடியென்னென்னில்; இவள்ப்ரக்ருதியையிட்டு ஸித்தவத்கரிக்கிறாளென்றுகருத்து. வர்த்தமாநார்த்தம் ( மாறுதேயித்யாதி ) இதுக்குத்ருஷ்டாந்தம் (கிண்ணகத்திலித்யாதி) "நையும்" என்றத்தையுங்கூட்டி பதச்சேர்த்திக்குபாவம் (நெஞ்சுக்கித்யாதி) "கண்டு - பனிமல்க" என்றபதச்சேர்த்திக்குபாவம் (காணப்புகக்கொண்டித்யாதி) ஆநந்தாஸ்ருநல்லதன்றே, அத்தை "பகை" என்னலாமோவென்ன (ஆநந்தாஸ்ருவோடித்யாதி) "கண்டு" என்றுதொடங்கி - 'இவள்படிகளைச்சொல்லுகிற தாயாருடைய ஹார்த்தபாவம் ( த்ரஷ்டவ்ய இத்யாதி )..........................................................................*

## ஏழாம்பாட்டு.

மல்குநீர்க்கண்ணொடுமையலுற்றமனத்தனளா
யல்லுநன்பகலுநெடுமாலென்றழைத்தினிப்போய்ச்
செல்வமல்கியவன்கிடந்ததிருக்கோளூர்க்கே,
யொல்கியொல்கிநடந்தெங்ஙனேபுகுங்கொலோசிந்தே.

### ஆறாயிரப்படி.

(மல்குநீர்) எம்பெருமானைக்கண்டு ஸம்ஶ்லேஷிக்கைக்காக கல்பதமான வருமந்தகாலமெல்லா மவனோடு ஸம்ஶ்லேஷிக்கப் பெறுமையாலே கண்ணநீர்மல்கி, நெடுமால் நெடுமாலென்றழைத்து, இனியிவள் தன்னுடைய விரஹவ்யஸநத்தாலும் ஸௌகுமார்யத்தாலு மதிமாத்ர மவஸந்நையாய் பரிம்லாநையாய்க்கொண்டு, செல்வம்மல்கி யவன்கிடந்த திருக்கோளூர்க்கே நடந்துபோய்ப் புகும்படியைக் காணப்பெற்றிலேனென்கிறாள்.....................................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், இவள்காண்கைக்கு முகக்கைக்குமடியான வதிசயித வ்யாமோஹத்தை யுடையவனை வாய்புலற்றிக்கொண்டு வருந்திநடந்துபோ யெங்ஙனே யவ்வூரிலே புகுவதென்கிறாள்.

மல்கு-விரஹத்தாலேமிக்க. நீர்-நீரையுடைத்தான. கண்ணொடு - கண்களோடே. மையல்-ப்ரமத்தை. உற்ற-அடைந்த. மனத்தனளாய்-நெஞ்சையுடையளாய். இப்படி பாஹ்யாப்யந்தரகரணங்க ளவிதேயமாயிருக்க, ப்ராவண்யவாஸநாதிசயத்தாலே, நன்-அவனைச்சொல்லுகைக்குறுப்பான நன்மையையுடைய. அல்லும்-இரவும். பகலும்-பகலும். நெடுமால் - அதிசயிதவ்யாமோஹத்தையுடையவனே. என்று-என்று. அழைத்து-கூப்பிட்டு. இனி-அவ்வார்த்திக்குமேலே. ஒல்கி-ஒடுங்கி. ஒல்கி-அசைந்து. நடந்து-நடந்து. ஒசிந்து-தளர்ந்து. போய்-போய். செல்வமல்கி-அபிவ்ருத்தைஶ்வர்யனாய்க்கொண்டு. அவன்-அவன். கிடந்த-கண்வளர்ந்தருளின. திருக்கோளூர்க்கே-திருக்கோளூர்க்கே. எங்ஙனே-எங்ஙனே. புகுங்கொல்-புகக்கடவளோ.

ஒசிவு-தளர்த்தி. ஒல்குதல்-ஒடுக்கமாய், அசைதல் ...... .......................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

இவள் ப்ரக்ருதிமார்த்தவத்தையும் பிரிவில்வந்த சைதில்யத்தையுமநுசந்தித்து; இவையெல்லா மவ்வளவும் செல்லப்போகவல்லளானாளிறேயென்கிறாள். நாமிலையகலப்படுக்கிறோ மத்தனையொழிய, இவள் போய்முடிய, புகாநின்றாளோ.

(மல்குநீர்க்கண்ணொடு மையலுற்றமனத்தனளாய்) "என்றேனும் கட்கண்ணாற்காணாதவவ்வுருவை நெஞ்சென்னு முட்கண்ணேற்காணும்" என்னுமிரண்டுமொழிய விவளெங்ஙனேபோனபடி. கண், மல்குநீர்க்கண்ணாயிற்று; மனம், மையலுற்றமனமாயிற்று; அகவாயுமிருண்டு புறவாயுமிருண்டிருக்க, இவளெங்ஙனேபோனபடி. கண்ணநீராலே கண்தோற்றாது, ப்ரேமாந்தையாகையாலே நெஞ்சிருண்டுதோற்றாது. (மல்குநீர்க்கண்ணொடுமையலுற்றமனத்தனளாய்) இரண்டுக்குமிரண்டும் நிரூபகமாயிருக்கிறபடி. (மையலுற்றமனத்தனளாய் - நெடுமாலென்றழைத்து) நெஞ்சொழியவோதான் கூப்பிட்டது. (அல்லுநன்பகலும்) பகவத்விஷயத்திலே யவகாஹித்துக் கூப்பிடுகிற காலமாகையாலே - நல்லிரவும்நன்பகலுமென்கிறாள். நாட்டார் க்ஷுத்ரவிஷயங்களை யாசைப்பட்டுக்கூப்பிடாநிற்க, "எல்லாங்கண்ணன்" என்று கூப்பிடுகிறாளிறே. (நெடுமாலென்றழைத்து) அவன்தன்பக்கல் பிச்சேறியிருக்கும்படியைச்சொல்லிக்கூப்பிட்டு. (இனிப்போய்) அவன்தன்பக்கல்பண்ணும் வ்யாமோஹத்தைச்சொல்லிக்கூப்பிடு மிதுக்குமேலே தன் வ்யாமோஹங்காட்டப்போனாளே. கண்ணுந்தோற்றாதே நெஞ்சும் பறியுண்டிருக்கு மிதுக்குமேலே இனிப்போய் வேறேயொன்றுண்டோ வநுபவிப்பது. (செல்வம்மல்கி யவன்கிடந்ததிருக்கோளூர்க்கே) எதிரே பாதிவழிவந்து முகத்திலேவிழித்து உடம்பிலே யணைத்துக்கொண்டு போகாதேயொழிந்தது ஐஶ்வர்யச்செருக்கிறே. ஐஶ்வர்யத்தால்வந்த செருக்கன்றாகி லிவ்வரவவனன்றோவருவான். வழியேபிடித்து வாழ்ந்துகொண்டுபோகலாயிருக்க, செருக்காலே இழந்தானென்கிறாள். (செல்வம்மல்கியவன்கிடந்த) "ஸமயாத்போதிதஶ்ஶ்ரீமாந்" (ஸமயாபோதிதஶ்ஶ்ரீமாந்) என்கிறபடி

யே, அழகுமிக்குக்கிடந்த வென்னவுமாம். ( அவன்கிடந்த ) “ ஸ⁻வ ஸ⁻ஷ்ட: ” (ஸ⁻கஸ⁻ப்த:) என்றகிடையழகுகாணவாயிற் றிவளாசைப் பட்டுப்போயிற்று. “ கிடந்ததோர்கிடக்கை ” என்னக்கடவதிறே. (அவ ன்கிடந்த) அவன்வரவுபார்த் திவளிருக்கையன்றிக்கே, இவள்வரவுபார் த்து அவன்கிடக்கும்படியாவதே. ( ஒல்கியொல்கிநடந்து ) ஓரடியிலே பத்தடியிட வேண்டும்படியாயிருக்கை. (ஒசிந்து) துவண்டு. (ஒல்கியொ ல்கிநடந்து - ஒசிந்து - எங்ஙனேபுகுங்கொல்) ஒடுங்கியொடுங்கிநடந்து, அதுபொறுமல் துவண்டு, எங்ஙனே புகக்கடவளோ!. (நடந்தெங்ஙனே புகுங்கொல்) நடந்திலளாகில் போய்ப்புகலாமென்றிருக்கிருள்காணும். *அன்னமென்னடைப்பூங்குழலியாகையாலே, இவ்வன்னநடைகொண்டு புகமாட்டாளென்றிருக்கிருள்.......................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (மல்குநீரித்யாதி) “ ஒல்கியொல்கிநடந்து-ஒசிந்து ” என்கை யாலே (ப்ரக்ருதிமார்த்தவம்) “ மல்குநீர்க்கண்ணொடுமையலுற்றமனத்தனளாய் ” என்கையாலே (பிரிவில்வந்தசைதில்யம்) இவையெல்லாமென்றது - கீழிற்பாட்டிற் சொன்ன வறுபவாதிகள். “எங்ஙனேபுகுங்கொல்” என்றத்தைப்பற்ற (அவ்வளவும் செல்லவித்யாதி (போகவல்லளானலிறே - நாமிலேயகலப்படுக்கிறே மத்தனையொ ழியவிவள் - முடிய - போய் - புகாநின்றுளோ - என்கிருள்) என்றந்வயிப்பது. அ ன்றிக்கே, கீழ்வாக்யவிவரணமாதல் (நாமிலேயகலவித்யாதி) (முடிய-போய்-புகாநி ன்றுளோ) என்றந்வயிப்பது.

“மல்குநீர்க்கண்” என்றும், “ மையலுற்றமனம் ” என்றும் விசேஷித்ததுக் குஹார்த்தபாவம் (என்றேனுமித்யாதி) அதாவது - ஒருவற்குப்போம்போது பாஹ் யசக்ஷுஸ்ஸாலேயாத லாந்தரசக்ஷுஸ்ஸாலேயாதல் போகவேணும், இவையிரண்டு மிவளுக்குப்போகவொண்ணுதபடி பரவசமானபின்பிவளெங்ஙனேபோகப்புகுகிறு ளென்றுகருத்து (என்றேனும்) ஒருநாளும்; (கட்கண்ணுல் காணுதவவ்வுருவை) பா ஹ்யசக்ஷுஸ்ஸால் காணவொண்ணுத வந்தத்திருமேனியை; ( நெஞ்சென்னுமுட்க ண் ) நெஞ்சாகிற வாந்தரத்ருஷ்டியானது; ( உணர்ந்து ) அவன்படிகளையறிந்து. (காணுமேல்) சாக்ஷாத்கரிக்குமாகிலித்யர்த்த:. பெரியதிருவந்தாதி யிருபத்தெட்டா ம்பாட்டு, “ அன்றேநங்கண் ” இத்யாதி. இரண்டும்போகவொண்ணுமைக்கு விலக் கேதென்ன (கண்மல்குநீரித்யாதி) விவரணம் (அகவாயுமித்யாதி) உபயமுமிருளு கைக்கு ஹேதுவேதென்ன (கண்ணநீராலேயித்யாதி) இப்படியிருக்குமது காதாசித் கமோவென்ன (இரண்டுக்குமித்யாதி)

மநஸ்ஸு ப்ராந்தியையடைந்தா லழைக்கக்கூடுமோவென்ன (நெஞ்சொழி யவித்யாதி) விஸ்லேஷித்துக்கூப்பிடுகிற வஹோராத்ரங்களுக்கு நன்மையேதென்ன (பகவத்விஷயத்திலேயித்யாதி) அப்படிநல்லநாளோவென்ன ( நாட்டாரித்யாதி ) “மல்குநீர்” இத்யாதியோடேகூட்டி, “ இனி ” என்றதுக்கு பாவாந்தரம் ( கண்ணுந் தோற்றுதேயித்யாதி )

“ அவன்-செல்வம்மல்கி-கிடந்த ” என்கிறவெறுப்பால்வந்த ஹார்த்தபாவ ம் (எதிரேயித்யாதி) “செருக்கு” என்றதுக்கு நியாமகமேதென்ன ( ஐஶ்வர்யத்தா

வித்யாதி) "எதிரேபாதிவழி" இத்யாதிவாக்யவிவரணம் (வழியேபிடித்தித்யாதி) "செல்வம்" என்றதுக்கு - அழகாகவர்த்தாந்தரம் (சமயேத்யாதி) "வாயஸோத தஸ்தேந பலவத்க்லிஶ்யமாநயா । ஸமயாபோதித ஶ்ரீமாந் ஸுகஸுப்த: பரந்தப:" (வாயஸேநததஸ்தேநபலவத்க்லிஶ்யமாநயா । ஸமயாபோதித ஶ்ரீமாந் ஸுகஸுப்தஃபரந்தபஃ) இதி ஹநுமந்தம் ப்ரதிஸீதா. "செல்வம்" என்றதின் த்விதீயார்த்தத்துக்குச்சேரபாவம் (ஸுகஸுப்த இத்யாதி) அவன்கிடக்கையாகர்ஷகமாயிருக்குமோவென்ன (கிடந்ததோர்கிடக்கையித்யாதி) "செல்வம்" என்றதின் மூந்தினவர்த்தத்துக்குச்சேரபாவம் (அவன்வரவித்யாதி)

வீப்ஸையாலேபலித்ததாத்பர்யம் (ஓரடியிலேயித்யாதி) "நடந்தெங்ஙனேபுகுங்கொல்" என்கிறவிடத்தில் வ்யதிரேகஸித்தமானபாவம் (நடந்திலளாகிலித்யாதி) நடந்திலளாகில் போய்ப்புகலாமென்றது - நடவாதபோதெப்படி புகப்போகாதோ, அப்படியே நடந்தாலும் போய்ப்புகுரமாட்டாளென்றபடி. நடந்தால் போகமாட்டாளோவென்ன (அன்னமென்னடையித்யாதி) அன்னம்போன்ற ம்ருதுவான நடையையுடையவளாய், தர்ஶநீயமான குழலையுடையவளென்றபடி. திருமொழி பதினோராம்பத்து இரண்டாந்திருமொழி அஞ்சாம்பாட்டு, "அன்னைமுனிவதும்" இத்யாதி......................................................................................*



## எட்டாம்பாட்டு.

ஒசிந்தநுண்ணிடைமேற்கையைவைத்துநொந்துநொந்து
கசிந்தநெஞ்சினளாய்க்கண்ணநீர்துளும்பச்செல்லுங்கொ
லொசிந்தவொண்மலராள்கொழுநன்றிருக்கோளூர்க்கே
கசிந்தநெஞ்சினளாயெம்மைநீத்தவெங்காரிகையே.

### ஆறாயிரப்படி.

(ஒசிந்த) வண்டாலேதுகையுண்ட பூமாலைபோலே யெம்பெருமானோடுள்ள கலவியாலே யொசிந்ததிருமேனியையுடைய பிராட்டியோடே திருக்கோளூரிலே அவன் கண்வளர்ந்தருளுகிறபடியைக் காணவேணுமென்னு மாசையாலே யென்னைப்பொகட்டுப்போன வென்காரிகை, வ்யஸநத்தாலே மெலிந்தநுண்ணிடைமேலே ப்ரமாதிசயத்தாலே கையைவைத்து நொந்துநொந்து கண்ணீர்துளும்ப, அவ்வபிநிவேசமே துணையாக வவ்வூரிலேபுக்கு முடியவல்லளேயோவென்கிறாள்... ... ...*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், நிரதிசயபோக்யபூதையான லக்ஷ்மிக்கு நித்யாபிமதனானவனுடைய வூரிலே சக்தையாயென்னைவிட்டவள், தத்ஸங்கமே தாரகமாக வங்கேசென்று புகவல்லளோவென்கிறாள்.

ஒசிந்த - * ரஸிகப்ரமரோப புக்தையான புஷ்பாவளிபோலே போகத்தாலேதுவண்ட. ஒண்-வைலக்ஷண்யத்தையுடைய, மலராள்-பத்மவாஸிநிக்கு. கொழு

நன்-அபிமததமனான நாயகனுடைய. திருக்கோளூர்க்கே-திருக்கோளூர்க்கே. கசிந்த நெஞ்சினளாய்-ஆர்த்ரசித்தையாய். எம்மை-என்னை. நீத்த-விட்ட. எங்காரிகை - அபிரூபையான வென்பெண்பிள்ளை. ஒசிந்த-பண்டே தளர்ந்த. நுண்-மெல்லிய. இடைமேல்-இடையின்மேலே. தன்னிளைப்பாலே, கையை-கையை. வைத்து-வைத்து. அதுதானேயடியாக, நொந்துநொந்து-மேன்மேலும்நொந்து. கசிந்தநெஞ்சினளாய்-நெஞ்சிலீரப்பாடே துணையாகவுடையளாய். கண்ணநீர்-கண்ணநீர். துளும்ப - அலையும்படி. செல்லுங்கொல்-சென்றுவிடக்கூடுமோ...... ............... ...............*

## ஈடு - எட்டாம்பாட்டு.

திருக்கோளூரில் சங்கத்தாலே பென்னைப்பொகட்டுப்போன வென்பெண்பிள்ளை, அஸ்ஸங்கமே துணையாகப்போய்ப் புகவல்லளேயோவென்கிறாள்.

(ஒசிந்தவித்யாதி) இவள் நடவாதேயிருந்தாலும், நினைத்தால் வயிறெரியவேண்டும்படிகிடீ ரிடையிருப்பது. (நுண்ணிடைமேல்கையை வைத்து) நடுவொன்றில்லையென் றறிகிறிலள். தன்கையைவைக்கவும் பொறுதிறே தன்னிடைதான், " மின்னையும் வஞ்சியையும்வென்றிலங்குமிடையாள் " என்று - அவன்கூடப்போகச்செய்தேயு மஞ்சவேண்டும்படியானவிடையிறே. ஒசிந்து - துவண்டு, நுண்ணிதாய் நேரிதானவிடை. பலசொல்லியென், நடுவொன்றில்லையென்கை. அதாவது—"இற்றது, முறிந்ததிப்போதுபின்னை " என்று பயப்படவேண்டும்படியாயிருக்கை. (ஒசிந்தநுண்ணிடைமேல்கையைவைத்து) இப்படி விழுக்காடறியாதாருண்டோ!. நாயகன்கைவைக்கப்பொறுக்குமத்தனைபோக்கித் தன் கைவைக்கப்பொறுக்குமோ; * தொடுங்காலொசியுமிடையிறே. அடியே பிடித்துக்கரோபத்ரவம் கனத்திறேயிருப்பது.(கையைவைத்து) மலையை வைத்தென்னுமாபோலே. (நொந்துநொந்து) கைவாங்கமாட்டாள், நோவாதிருக்கமாட்டாள். ஸஹஜசத்ருக்களோடேகூடி ஜீவித்துக்கிடக்கலாம், வந்தேறிகள்கீழ் பிழைக்கவொண்ணாதிறே. (நொந்துநொந்து) மிகவும்நொந்து, முதலிலே அபாவத்திலே நிலையான இடையிலே ஸ்தநபாரங்கொண்டாற்றவொண்ணாதிருக்க, வந்தேறியான கைகொண்டுபொறுக்கவொண்ணுமோ. (கசிந்தநெஞ்சினளாய்) இடையினுடைய நொய்மைசொல்லி, நெஞ்சோதான் சாலப்பருத்திருக்கிறது. நெஞ்சிலீரமிருக்கிறபடி. (கண்ணநீர்துளும்ப) இதுதனக்கு மூற்றிறேயது. (செல்லுங்கொல்) இனி சர்வதாமீளாளிறே. வழியில் மிறுக்குக்கள் கழித்துப்புகவல்லளோ. (ஒசிந்தவித்யாதி) பிரிந்தார் துவட்சிசொல்லுகைக்கு, கலந்தாரோதான் துவளாதேயிருக்கிறார். வண்டாலே ஆத்தசாரமாயிருக்கிறபூப்போலேகாணும் நித்யசம்ஶ்லேஷத்தாலே துவண்டிருக்கும்படி. ஒண்மலராள் கொழுநனுண்டு - அவளுடையவல்லபன், அவனுடைய திருக்கோளூர்க்கே (கசிந்தநெஞ்சினளாய்) ஸஸ்நேஹமான மநஸ்ஸையு

டையளாய். பற்றுகைக்கவ்வூரோயாகவமையும், விடுகைக்குத்தாயாகவமையும். (ஒண்மலராள்கொழுநன் திருக்கோளூர்க்கே கசிந்தநெஞ்சினளாய்) அவனுடைய ப்ரணயித்வத்திலே யகப்பட்டவளினிமீளப்புகுகிறளோ. ஒண்மலராள்கொழுநனென்று - அவனுக்கேற்றமிருக்கிறபடி. * திருமகளார்தனிக்கேள்வனென்னும் பெருமையுடையபிரானர். ( எம்மைநீத்தவெங்காரிகையே) அவளுக்கிங்குள்ள மமகாரங்கழியக்கழிய, அதுதானே ஹேதுவாகாநின்றது திருத்தாயார்க்குப்பற்றுகைக்கு. பகவத்விஷயத்திலே யவகாஹிக்கையும், வ்யதிரிக்தங்களைவிடுகைக்கெல்லை யிவ்வளவாகையும், இப்படிவிட்டால் பின்பவர்கள் தாங்களே யுத்தேஶ்யமென்னு மிடமுஞ்சொல்லுகிறது. புறம்புள்ளவற்றை விடப்பண்ணுவித்துக்கொண்ட விஷயத்தில் ஜ்ஞாநலாபமிறே யிவளுக்குவேண்டுவது, இவள் சம்பந்தமேயிறே திருத்தாயார்க்குவேண்டுவது. கசிந்தநெஞ்சினளா யெம்மைநீத்தவெங்காரிகை - ஒசிந்தவொண்மலராள் கொழுநன்திருக்கோளூர்க்கே - கசிந்தநெஞ்சினளாய்க் கண்ணநீர்துளும்பச்செல்லுங்கொல். இவளென்னைவிடும்படி பண்ணிக்கொண்டவிஷயத்தில் ப்ராவண்யமானது அவ்வூரில் ப்ரவேசத்தையும்பண்ணிக்கொடுக்கவற்றே. எம்மைநீத்தவென்று - நிஶ்சயித்தாள், செல்லுங்கொலென்று - சம்சயியாநின்றாள்; ப்ரேமமிரண்டையும் பண்ணிக்கொடுக்குமிறே. பாரவஶ்யத்தை விளைத்து இடையிலேபொகடிலும்பொகடும்; அன்றிக்கே, கொண்டுபோய்ப்பொகடிலும்பொகடுமிறே ......... ..............................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு ( ஒசிந்தவித்யாதி ) " ஒசிந்தவொண்மலராள்கொழுநன் " இத்யாரப்ய, "எங்காரிகை" என்னுமளவும்கடாக்ஷித்து (திருக்கோளூரில் சங்கத்தாலேயித்யாதி) "கசிந்தநெஞ்சினளாய்க் கண்ணநீர்துளும்பச்செல்லுங்கொல்" என்றத்தைக்கடாக்ஷித்து (அஸ்ஸங்கமேதுணையாகவித்யாதி)

" துவண்டநுண்ணியவிடை " என்கிறவளுடைய ஹார்த்தபாவம் (இவள்நடவாதேயித்யாதி) நுண்ணிமையைச்சொல்லுகிறவளுடைய ஹார்த்தபாவம் (நடுவொன்றில்லையித்யாதி) இத்தால்பலிதம் (தன்கையையித்யாதி) "அதுக்குஹேதுவேதென்ன (மின்னையுமித்யாதி) மின்னையும் வஞ்சிக்கொம்பையும் தோற்பித்து விளங்காநின்ற விடையையுடையவளென்றபடி. திருமொழி, " அன்னையும் " இத்யாதி. விசேஷணத்வயோபாதானத்துக்குபாவம் (பலசொல்லியித்யாதி) ஆறுலொன்றுமில்லையோவென்ன (அதாவதித்யாதி) (இப்போதுபின்னை-இற்றது, முறிந்தது) என்றவயிப்பது. "கையைவைத்து" என்றதுக்குபாவம் ( இப்படியித்யாதி ) விழுக்காடு-மேல்வரும்கார்யம். அப்படிதன்கை பொறுதிருக்குமோவென்ன ( தொடுங்காலித்யாதி) தொடுமளவில் முறியுமிடை இத்யர்த்தஃ. திருவிருத்தம், " கொடுங்காற்சிலையர் " என்கிறபாட்டு. இதுக்குசாடு (அடியேபிடித்தித்யாதி) * பொய்ந்நின்றஞான

மேபிடித்தென்றபடி; கரம்-பகுதியும். "வைத்து" என்றதுக்குபாவம் (மலையயித்யாதி) வீப்ஸைக்குபாவம் (கைவாங்கவித்யாதி) மாட்டாமைக்கு ஹேதுவேதென்ன (ஸஹஜேத்யாதி) ஏதத்விவரணம் (முதலிலேயித்யாதி) ஒசிந்த-துவண்ட. நுண்ணிடைமேல்-ஸூக்ஷ்மமானவிடையின்மேலே இத்யர்த்தஃ.

கசிந்தநெஞ்சினளாய்-ஆர்த்ரமானநெஞ்சையுடையளாயித்யர்த்தஃ. "கசிந்த" என்று-நெஞ்சினுடைய வார்த்ரதையைச்சொல்லுகிறவளுடையஹார்த்தபாவம் (இடையினுடையவித்யாதி) நொய்மை - ஸௌக்ஷ்ம்யம். காயபலமில்லையென்கைக்கு, மநோபலமுண்டாயிருக்கிறதோவென்றபடி. "நொந்துநொந்து" என்றும், "கசிந்த நெஞ்சினள்" என்றும் - காயபலமும், மநோபலமுமில்லையென்கிறது. "கசிந்த" என்றதுக்கர்த்தம் (நெஞ்சிலீரமித்யாதி) கசிவு-ஈரம். இதுதனக்கும் - கண்ணநீர்தனக்கும். அது - மநஸ்ஸு. மீளுகை ப்ரார்த்யமாயிருக்க, "செல்லுங்கொல்" என்கிறதென்னென்ன (இனி சர்வதேத்யாதி) கசிந்தநெஞ்சினளாகையாலே மீளாளென்றபடி.

ஒசிந்தவொண்மலராள்கொழுநன் - துவண்டிருப்பாளாய், அழகியதாமரைப்பூவை யிருப்பிடமாகவுடையளான பெரியபிராட்டியாருக்கு வல்லபனானவனுடையவென்றுசப்தார்த்தம். பிராட்டியினுடைய துவட்சிசொல்லுகிறதுக்குபாவம் (பிரிந்தாரித்யாதி) "வஹுஷாவஸேவாஸிகஹுஉரொவஸுகூா" (புஷ்பாவளீவாஸிகப்ரமரோபயுக்தா)என்றத்தை யுட்கொண்டருளிச்செய்கிறார் (வண்டாலேயித்யாதி) "திருக்கோளூர்க்கேகசிந்த நெஞ்சினளாயெம்மைநீத்த" என்கிறபதங்களால் பலித்தபாவமாதல், "திருக்கோளூர்க்கே" என்கிறவவதாரணத்துக்கு பாவமாதல் (பற்றுகைக்கித்யாதி) அதாவது-ப்ராவண்யத்துக்கவதி ததீயபர்யந்தம்செல்லுகை, விரக்திக்கவதி தாயாரையும் விடுகையென்றபடி. "ஒண்மலராள்கொழுநன்" என்றதுக்கிரண்டுபாவம். ப்ரணயித்வமாகமுந்தினது (அவனுடையவித்யாதி) சர்வாதிகத்வமாக விரண்டாம்பாவம் (ஒண்மலராளித்யாதி) இவளுக்குநிர்வாஹகனுகையேற்றமோவென்ன (திருமகளாரித்யாதி) நீத்த-விட்ட. அவள் தன்னைவிடாநிற்க, இவள் "என்னுடையவள்" என்னக்கூடுமோவென்ன (அவளுக்கித்யாதி) "கசிந்த நெஞ்சினளாய், எம்மைநீத்த, எங்காரிகை" என்கிற பதத்ரயத்துக்கும் ஸ்வாபதேசம் (பகவத்விஷயத்திலேயித்யாதி) உத்தேஶ்யர் - விடப்பட்டவர்களுக் குத்தேஶ்யரென்றபடி. "விடப்பட்டவர்களுக்கு விட்டவர்களுத்தேஶ்யர்" என்னுநின்றீர்; அவர்களுக்கு பகவத்ஜ்ஞாநலாபம்வேண்டாவோவென்ன; அதுமகளுக்கே, தாயார்க்கிவள் சம்பந்தமேவேண்டுவதென்கிறார் (புறம்புள்ளவற்றை யித்யாதிவாக்யத்வயத்தாலே) "கசிந்தநெஞ்சினளாய்" என்றத்விருக்திக்கு ப்ரயோஜநங்காட்டுவதாக வந்வயங்காட்டுகிறார் (கசிந்தநெஞ்சினளாயித்யாதி) இந்தவந்வயத்தால் - மாத்ருத்யாகத்துக்கொருகசிவும், திருக்கோளூரில் ப்ரவேசத்துக்கொரு கசிவுமென்று தத்விருக்திக்கு ப்ரயோஜநமருளிச்செய்கிறார் (இவளென்னையித்யாதி) த்யாகத்தை நிச்சயித்து ப்ரவேசத்தை சம்சயிக்கிறதுக்கு பரிஹாரமருளிச்செய்வராக வதுதன்னையநுபாஷிக்கிறார் (எம்மைநீத்தவித்யாதி) (சம்சயியாநின்றாள்) இதுக்குஹேதுவேதென்னி லென்றுகூட்டுவது. பரிஹாரம் (ப்ரேமமித்யாதி) "இரண்டையும்" என்றதைவையென்ன (பாரவஶ்யத்தையித்யாதி)........................................................

———❧———

# ஒன்பதாம்பாட்டு.

காரியநல்லனகளவைகாணிலென்கண்ணனுக்கென்
றீரியாயிருப்பாளிதெல்லாங்கிடக்கவினிப்போய்ச்
சேரிபல்பழிதூஉயிரைப்பத்திருக்கோளூர்க்கே
நேரிழைநடந்தாளெம்மையொன்றுநினைத்திலளே.

## ஆறாயிரப்படி.

(காரியம்) அதிமநோஹரமான போக்யவஸ்துக்களைக்காணில் இவையெல்லாமென் கண்ணனுக்கென்று சொல்லாநிற்கு மிப்பெண்பிள்ளை, தனக்காகநாங்கள் கொண்டுவந்த போக்யபதார்த்தங்களையு மெங்களையு மொருத்ருணமாக நினையாதேபோகட்டு, லோகமெல்லாம் "இவள்தனியேபோனளே" என்றுபழிசொல்லி யிரைக்கும்படியாகத் திருக்கோளூரிலே போனளென்கிருள் ..................... ..................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நல்லதுகண்டால் தனக்கு சுலபனனக்ருஷ்ணனுக்கென்றிருக்குமவள், ஊரார்சொல்லும் பழியை மதியாதேபோனளென்கிருள்.

நல்லனகள்-நன்றாய். காரியம்-செய்திப்பாட்டையுடைத்தான. அவை-பதார்த்தங்களானவற்றை. காணில்-காணில். என்-எனக்குபவ்யனன. கண்ணனுக்கு-க்ருஷ்ணனுக்கு. என்று-என்று. ஈரியாய்-ஆர்த்ரஸ்வபாவையாய். இருப்பாள்-இருப்பாளாய். நேர்-மெல்லிய. இழை-ஆபரணத்தையுடையளானவிவள். இது-ததர்த்தமாகத்தான் சங்கல்பித்தவிவ்விபூதி. எல்லாம்-எல்லாம். கிடக்க-கிடக்க. இனி - பின்னையும். போய்-விட்டுப்போய். சேரி-சேரியிலுள்ளார். பல்-பலவகையும். பழி-பழி. தூஉய்-தூற்றி. இரைப்ப-கோஷியாநிற்க. திருக்கோளூர்க்கே - திருக்கோளூர்க்கே. நடந்தாள்-நடந்துசென்ருள். எம்மை - என்னையும். ஒன்றும் - ஒருபடியும். நினைத்திலள்-நினைத்திலள்.

ஊராராகவும் நினைத்திலள். உடன்பாடையாகவும் நினைத்திலளென்றுகருத்து.

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

அவன்பக்கலிலே யத்யந்தப்ரவணையாயிருக்கிறவிவள், சேரியிலுள்ளார்சொல்லும்பழியே பாதேயமாகத் திருக்கோளூர்க்கே போனளென்கிருள்.

(காரியம்நல்லனகளவைகாணில்) முதலிலேகாண்பதில்லை; பதார்த்தங்களில் நல்லதுகாணில், தன்னையெனக்காகவோக்கிவைத்த க்ருஷ்ணனுக்கென்னப்புக்கு, அந்தப்ரஸ்தாவத்திலே நெஞ்சுநெகிழா, பின்பதுதானும் மாட்டாதேயிருக்கும். "த்ருஷ்ட்வா ஃபலம்வா புஷ்பம்வா" (த்ருஷ்ட்வாபலம்வாபுஷ்பம்வா) என்று அவன்சொல்லுமவையெல்லா மிவ

ள்சொல்லுகிறபடி. நல்லதுகண்டால் " அவனுக்கு " என்றிருக்குமதுக்குமேலே யவ்வருகேயொன்று தேடிப்போனளே. இவளுக்காகத் திருக்கோளூரிலேவந்து, தன்னை யிவளுக்கோக்கிவைத்தபடி. ( இதெல்லாங்கிடக்க ) " ஸவ-ௗாநுஹொஹாமாநுவரித்யஜ " ( ஸர்வாந்போகாந்பரித்யஜ்ய ) என்னுமாபோலே. "உண்ணுஞ்சோறுபருகுநீர் தின்னும்வெற்றிலையுமெல்லாங்கண்ணன்" என்றும், * ஊரும்நாடு முலகமுந்தன்னைப்போலவனுடைய பேருந்தார்களுமே பிதற்றக் கற்புவானிடறியும், * பூவைபைங்கிளிகள் பந்துதூதை பூம்புட்டில்கள் யாவையும் திருமால் திருநாமங்களே கூவியெழுந்தும், * காரியம்நல்லன களவைகாணிலென் கண்ணனுக்கென்றீரியாயிருக்கு மிதெல்லாங்கிடக்க - இந்தநிரவதிகசம்பத்துக்கிடக்க. (இனிப்போய்) "தனக்கு" என்கிற ப்ரதிபத்திமாத்ரத்திலேயுண்டறுக்கமாட்டா தவனுக்கொன்றுகொடுத்துக் குறைதீரப்போனளே. "தெ-ஹ-ௗயிஷ்டாழ" (தே-பூயிஷ்ட்டாம்)என்றிறே யவனிருப்பது. அவன்படியைநினைத்தா லிவளுக்கிங்கேயிருக்கவமையாதோ.(சேரிபல்பழிதூயிைப்ப)பொகடும்வழித்துணைபெற்றவாறே போனளத்தனை. ஒருவரிருவரன்றே. இனியொருவர் சொல்லிற்றொருவர் சொல்லார்களிறே.(பல்பழிதூயிைப்ப) தன்னையவனுக்காக்கிவைத்தாள்,பின்னையதுதானும் மாட்டிற்றிலள்,புறப்பட்டுப்போனள், தாயைப்பார்த்திலள்,ஊரார்பழிபார்த்திலள், இத்தனையும்செய்தா லவன்றானெதிரேவரப்பெற்றதில்லை என்றிப்புடைகளிலே யொருகோடியிறே சொல்லுவது. "அலரொழிலாருயிர்நிற்கும்"என்று வழிக்கு தாரகமாமிறே.(நேரிழைநடந்தாள்) கடைப்பணிக்கூட்டங்கண்டுகொண்டு பின்னேபோகவாகாதே தானிவளாசைப்படுகிறது. (நடந்தாள்) தன்பெண்பிள்ளையேயாகிலும், "திருக்கோளூரிலேபோக" என்றுநாலடிபுறப்பட்ட விவளையிங்ஙனல்லது சொல்லவொண்ணுதிறே. தன்மகளை யெங்ஙனே! கனக்க நினைத்திருக்கிறுள்தான். வயிற்றிற்பிறக்கவுமாம், சிஷ்யர்களாகவுமாம், பகவத்விஷயத்தில் ப்ரத்யாஸந்நருத்தேஸ்யராமத்தனை. ஒருநாள் நம்பிள்ளையை ஜீயர், கோஷ்ட்டியிலேவைத்துப்போரக்கொண்டாடியருளி, " 'தன் சிஷ்யனைத்தான் கொண்டாடாநின்றான்' என்றிராதேகிடிகோள், ' கணபுரங்கைதொழும்பிள்ளையைப் பிள்ளையென்றெண்ணப்பெறுவரோ' என்று பண்டுசொன்னருமுண்டுகிடிகோள் " என்றருளிச்செய்தார். அம்முணியாழ்வான், தன் சிஷ்யனைத்தான் தெண்டனிடாநிற்குமாம்; " இதுவென் " என்றுகேட்க, "அல்லாதவைஷ்ணவர்களை வ்ருத்தத்தாலே யறியவேணும், இவர்கள் நானறிய வைஷ்ணவர்களென்றுதரிப்பன்" என்றான்.

( எம்மையொன்றும்நினைத்திலளே ) வழிக்குத்துணையாகத்தான் கொடுபோகாவிட்டால், ஸ்மரிக்கத்தானகாதோ. ( ஒன்றும் நினைத்திலளே) எதிர்கொள்வாரிலே சிலராகவாதல், வழித்துணையாவாரிலே சில

ராகவாதல், ஏதேனுமோராகாரத்தாலே தான் நினைக்கலாகாதோ. "அத்தலையில் நினைவே கார்யகரமாவது" என்றிருக்கிருள். பகவதாஸத்தியுடையாருடைய வபிமாநமே யுத்தேஸ்யம் ................................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு ( காரியமித்யாதி ) "கண்ணனுக்கென்றீரியாயிருப்பாள், சேரிபல்பழிதூயினாப்ப" இத்யாதிகளைக்கடாக்ஷித்தவதாரிகை ( அவன்பக்கலிலேயித்யாதி )

க்ரியத இதிகார்யமென்று, கார்யசப்தத்தாலே-பதார்த்தங்களைச்சொல்லுகிறது. நல்லனகளவைகாணில் - நன்றானவற்றைக்காணிலென்றபடி. ஓக்கிவைக்கை-ஆக்கிவைக்கை. அவன்சொல்லுமவையெல்லாம்-அவன்தன்னைப்பிரிந்து சொல்லுமவையெல்லா மென்றபடி. "[Grantha] ஹாரம் । [Grantha] " ( த்ருஷ்ட்வாபலம்வாபுஷ்பம்வாயத்வாங்யத்ஸ்த்ரீமநோஹரம் । பஹுஶோஹாப்ரியேத்யேவம்ஸ்வஸம்ஸ்த்வாமபிபாஷதே ) இதிஸீதாம் ப்ரதிஹநுமான். "இனி" என்றத்தைக்கடாக்ஷித்துபாவம் (நல்லதுகண்டாலித்யாதி) "என்கண்ணன்" என்கைக்கு அவன்செய்தவுபகாரமேதென்ன (இவளுக்காகவித்யாதி)

"இதெல்லாங்கிடக்க" என்றதுக்கிரண்டர்த்தம். முந்தினது ( சர்வான்போகாநித்யாதி) அதாவது - "[Grantha]" ( ஸர்வாந்போகாந்பரித்யஜ்ய ) என்னுமாபோலே லீலோபகரண போகோபகரணங்கள் முதலான ப்ரக்ருதி ப்ராக்ருதங்களெல்லாங்கிடக்கவென்றபடி. "உண்ணுஞ்சோறு" என்றுதொடங்கி கீழிற்பாட்டுக்களிற்சொன்ன பகவத்ப்ராவண்யமெல்லாங்கிடக்க வென்றிரண்டாமர்த்தம் (உண்ணுஞ்சோறித்யாதி) முந்தினவர்த்தத்துக்கு, "எல்லாம்" என்று-அநுக்தமானவற்றைச்சொல்லுகிறது. "கிடக்க" என்றதுக்குபாவம் (இந்தநிரவதிகேத்யாதி) "நல்லதுகண்டாலவனுக்கென்றிருக்கு மதுக்குமேலே" என்னுநின்றுய்; இம்மாத்ரமே யமையுமோ, அவற்றைக்கொடுக்க வேண்டாவோவென்ன (தனக்கென்கிறவித்யாதி) உண்டறுக்கமாட்டாதவனுக்கு - த்ருப்தனுய், "இவனுக்கொன்றும் செய்யப்பெற்றிலோம்" என்றிழவுபட்டிருக்குமவனுக்கென்றபடி. "இப்படியவனிருக்கும்" என்னுமதுக்குப்ரமாணம் (தேபூயிஷ்ட்டாமித்யாதி) இத்தால்பலிதம் (அவன்படியையித்யாதி)

"நடந்தாள்" என்றத்தையுங்கூட்டிபாவம் ( பொகடுமித்யாதி ) அதாவது-பழிதூவுகை, இவள் "மறப்பேன்" என்றவன்றும் மறக்கவொண்ணுதபடி யவனைஸ்மரிக்கைக்கு ஹேதுவாகையாலே இதிவளுக்கு வழித்துணையாய்ப்போகைக்குஹேதுவாயிற்றென்றுகருத்து. பொகடும் - கொடுபோய்விடும். "சேரி" என்றதுக்குபாவம் (ஒருவரிருவரித்யாதி) சேரி - ஊராகவென்றபடி. "பல்பழி" என்றதுக்குபாவம் (இனியொருவரித்யாதி) ஒருவர்சொல்லிற்றொருவர் சொல்லாமையைக்காட்டுகிருர் ( தன்னையவனுக்கித்யாதி ) பழிவழிச்குத்துணையோவென்ன (அலரொழிலித்யாதி) அலர்-பழி, எழில்-கிளம்பினுல்.

நேரிழை-ஶ்லாக்யமான வாபரணத்தையுடையவளித்யர்த்தஃ. "நேரிழை" என்று - ஆபரணத்தைவர்ணித்ததுக்குக்கருத்தேதென்ன ( கடைப்பணியித்யாதி )

கடைப்பணிக்கூட்டம்-ஆபரணங்களினுடைய நுனிகூடினவிடம். பணி-ஆபரணம். கடை-நுனி. பிடரியில்கொக்கு வாய்முதலான பூஷணங்களென்னுதல். தன்மகளை, போனுளென்னுதே "நடந்தாள்" என்று கௌரவித்துச்சொல்லுவானென்னென்ன (தன்பெண்பிள்ளையித்யாதி) தாயாரானவள் தன்மகளையுத்தேஸ்யதாபுத்திபண்ணிக்கொண்டாடுகிறபடியை யநுசந்தித்து வ்யாக்யாதாவினீடுபாடு ( தன்மகளையித்யாதி ) எல்லாமானுலும், தன்மகளைத்தான் கொண்டாடலாமோவென்ன (வயிற்றிலித்யாதி) சிஷ்யர்களை பகவத்சம்பந்தங்கொண் டுத்தேஸ்யதாபுத்திபண்ணிக் கொண்டாடுமதுக் கைதிஹ்யத்வயம் (ஒருநாளித்யாதி)

" நினைத்திலள் " என்றதுக்குபாவம் (வழிக்குத்துணையாகவித்யாதி) " ஒன்றும் " என்றதுக்குபாவம் ( எதிர்கொள்வாரிலேயித்யாதி ) வழித்துணையாவார்-பழிசொல்லுவார். அவள் நினைத்தால் தனக்குப்ரயோஜநமேதென்ன ( அத்தலையிலித்யாதி ) இது - ஸ்வாபதேசம். இத்தால் பலிதமாதல், விவரணமாதல் ( பகவதாசத்தியித்யாதி ) ..........................................................................*



## பத்தாம்பாட்டு.

நினைக்கிலேன்றெய்வங்காணெடுங்கணிளமானினிப்போ
யனைத்துலகுமுடையவரவிந்தலோசநனைத்
தினைத்தனையும்விடாளவன்சேர்திருக்கோளூர்க்கே
மனைக்குவான்பழியுநினையாள்செல்லவைத்தனளே.

### ஆறுயிரப்படி.

(நினைக்கிலேன்) தன்திருக்கண்களினழகாலே சர்வலோகங்களையும் தோற்பித் தடிமையாக்கிக்கொண்டிருக்கிறவனுடைய திருக்கண்களைக்கண்டல்லதொரு க்ஷணமாத்ரமும் தரிக்கமாட்டாதிருக்கிற நெடுங்கணிளமான், இனி இது குடிப்பழி என்னுமிடமொன்றும் நினையாதே, அவன்சேர் திருக்கோளூர்க்கேபோய்ப்புக்காள்; இவளைப்பிரிந்த வ்யஸநாதிசயம் நினைக்கவும் கூடுகிறதில்லையென்றுசொல்லி, பின்னையும் தன் செயலறுதியாலே தெய்வங்காளென்று கூப்பிடுகிருள் ..................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், அகிலஜகத்ஸ்வாமியான அரவிந்தலோசநனை யேகதேஸமும்விடாளாகக்கொண்டு குடிப்பழியும்பாராதே யவ்வூரிலேபுக்குவிட்டாளென்கிருள்.

தெய்வங்காள்-தெய்வங்காள். நினைக்கிலேன் - இவளுடைய வதிப்ரவ்ருத்தி நினைக்கமாட்டுகிறிலேன். நெடு-அவன்பெருமையையெல்லாம் தன்னகவாயிலேயாக்கும்படிபெரிய. கண்-கண்ணையுடையளாய். பருவத்தைப்பார்த்தால், இளம்-முக்தமான. மான்-மான்போலேயிருக்கிறவிவள். இனி-தன்கண்ணழகு தனக்குண்டாயிருக்கப்பின்னையும். போய்-போய். அனைத்துலகும்-சர்வலோகத்துக்கும். உடைய - ஸ்வாமியானமைக்குத் தகுதியான. அரவிந்தலோசநனை - அரவிந்தலோசநனை. தினை

த்தனையும்-சிறிதுபோதும். விடாள்-விடாளாய்க்கொண்டு. அவன் - அவன். சேர்-வர்த்திக்கிற. திருக்கோளூர்க்கே-திருக்கோளூர்க்கே. செல்லவைத்தனள் - சடக்கெனச் சென்றாள். தான்செல்லுகை, மனைக்கு-குடிக்கு. வான்-மிக்க. பழி - பழியென்றும். நினையாள்-நினைக்கிறிலள்.

செல்லவைத்தனளென்று-லோகோக்தியாலே, கடுகச்சென்றாளென்றுகருத்து.

## ஈடு - பத்தாம்பாட்டு.

இக்குடிக்குவரும் பெரும்பழியைநினையாதே, திருக்கோளூரிலே புக்கு அவனையொருகாலும் விடுகிறிலளென்கிறாள்.

( நினைக்கிலேன் ) கடலைக்கரைகாணவொண்ணாதிறே. தன்னைப் பொகட்டுப்போனபடி, வழியில் மிறுக்குக்கள், அங்குப்புக்காலிவள் படும்பாடுகளநேகங்களிறே. (தெய்வங்காள்) இத்தை "கொல்லை" என்பார் முகம்பார்த்துச் சொல்லவொண்ணாதே. பழிசொல்லாமையையும், சிறையுறவுபோலே தன்னோடொக்க வுறங்காமையையும்பார்த்துச்சொல்லுகிறாள். (தெய்வங்காள்-நினைக்கிலேன்) செயலற்றுக் கைவாங்கிச்சொல்லுகிறவார்த்தையிறே.

(நெடுங்கணிளமானினிப்போய்) விழுக்காடறியாமையாலே புறப்பட்டுப்போனாளத்தனைகிடீர். இக்கண்ணுக்கிலக்கானவர்கள், சர்ப்பயாகத்தில் சர்ப்பங்கள் சுருண்டுவந்துவிழுமாபோலே தந்தாம் முதன்மையோடேவந்து விழவேணுங்கிடீர். (இனிப்போய்) ஆர்செய்பக்கடவத்தை யார்தான்செய்கிறார். கண்படைப்பாளுந்தானாய்ப் புறப்பட்டுப்போவாளுந்தானாவதே!. இத்தலை ப்ரவர்த்தியாமைக்கு ஸ்வரூபமேயமையுமாகாதே. ( அனைத்துலகுமுடைய வரவிந்தலோசநனை ) இவ்வளவேகிட ரவன்கண்ணுக்குத்தோற்றிருப்பது. ஒருபயவிபூதிமாத்ரங்கிடீ! ரவன் கண்ணுக்கீடுபட்டிருப்பது, அவன்றன்னையும் தோற்பிக்கும்கண்ணிறேயிவளது. அனைத்துலகுமுடைய வரவிந்தலோசநன், இவள்நெடுங்கணிளமான் - அவன், தானும் தன்விபூதியு மிவள்கண்ணிலே யொருமூலையிலே யடங்கும்படியாயிருக்கை. கண்ணிலல்லாதபரப்பு மிவள்பருவமும் குமர்கிடந்துபோமத்தனை. (தினைத்தனையும்விடாள்) நெகிழ்த்தனைக்கவும்பொறாள். இங்கிருந்துபட்ட க்லேசத்தாலே "நின்னைப்பிரியேன்" என்றுசொல்லவும் நெஞ்சுகொடாள். காரியப்பாட்டாலே பிரியிலும் நெஞ்சொழிந்துகேட்கவேணுமே.

(மனைக்கு வான்பழியும்நினையாள்) மனைக்கு வலியபழியும்நினைக்கிறிலள். அபிமதஸாதநமல்லாதவளவேயன்று, "விரோதி" என்றிருக்கிறாள். "இத்தலையாலே செல்லுமதுபழி" என்றே யிருந்தபடிபாரீர். [ஸ்வவாதகஸீதஸ்ஸஹவஶ்ஸாவெநஸாரத] [அதபாதகபீதஸ்த்வம்ஸர்வபாவேநபாரத] அடுத்தடுத்து ராஜஸூயமேபண்ணிப்போந்தவனுக்கொ

ருதடவற் பொய்க்காக நரகதர்ஶநம்பண்ணுமளவாய் நின்றவனையிறே பி ப்படியுபதேசிக்கிறது. சத்கர்மத்தோ டஸத்கர்மத்தோடு வாசியறவிரோ தியாய், க்ருஷ்ணனேயபாஶ்ரயம் என்னுமிடத்தைத் தோற்றுவிக்கிறது. [விஶ்ருக்தாநந்யஸமாரம்பः] [விமுக்தாந்யஸமாரம்பः] அசேதநக்ரியைகளை ப்பற்றிக்கொண்டு நாலாதேகொள். [நாராயணபராபவ] [நாராயண பரோபவ] உனக்குவகுத்தவன்றன்னையே பற்றப்பார்.

(செல்லவைத்தனளே) போகையிலே நெஞ்சைவைத்தாளென் னுதல், நமக்குமெல்லாங்காண வங்கேயானுளென்னுதல். அதாவது-தா னங்கே செல்லவொருப்பட்டாளென்னுதல், தான்மீளாதபடி புகுகை யாலே நாமங்கே செல்லும்படிவைத்தாளென்னுதல்.....................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (நினைக்கிலேனித்யாதி) "மனைக்குவான்பழியும் நினையாள், திருக்கோளூர்க்கே-போய்-அரவிந்தலோசனனைத் தினைத்தனையும்விடாள்" என்கிற பதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (இக்குடிக்கித்யாதி)

நினைக்கவொண்ணுமைக்கடி-இவள்படி யபரிச்சிந்நமாகையென்கிறுர் (கட லையித்யாதி) காணவொண்ணுமைக்கிவள் வ்யாபாரங்கள் கடல்போலே யபரிச்சி ந்நமோவென்ன (தன்னைப்பொகட்டித்யாதி) அநந்யதேவதையானவிவள் "தெய்வ ங்காள்" என்று - இவற்றைப்பார்த்துச்சொல்லுகிற தென்னென்ன (இத்தைக்கொ ல்லையித்யாதி) இவற்றைப்பார்த்துச்சொல்லுகைக்கு ஹேதுவேதென்ன (பழிசொ ல்லாமையுமித்யாதி) கதிசூந்யதையாலே சொல்லுகிறுளென்று பரிஹாராந்தரம் (செயலற்றித்யாதி)

"இளமான்" என்றதுக்குபாவம் (விழுக்காடித்யாதி) விழுக்காடு - மேல்வரு மது. "அனைத்துலகுமுடைய" என்றத்தைக்கடாக்ஷித்து "நெடுங்கண்" என்றதுக்கு பாவம் (இக்கண்ணுக்கித்யாதி) சர்ப்பயாகம்பண்ணினவன்-ஜநமேஜயன். "இனி" என்கையாலே - இவளுக்குப்போக ப்ராப்தியில்லை, அவனுக்கே ப்ராப்தியென்றுபா வமருளிச்செய்கிறுர் (ஆர்செய்யவித்யாதி) "ஆர்செய்யக்கடவத்தை" என்கிறதெ ன், இவளுக்குப்போக ப்ராப்தியில்லையோவென்ன (கண்படைப்பாளுமித்யாதி) "இ னிப்போய்" என்றதுக்குஸ்வாபதேஶம் (இத்தலையித்யாதி) ஸ்வரூபமென்றது - ஸ்வ ரூபஜ்ஞாநமென்றபடி. அதாவது - "நெடுங்கண்" என்கையாலே - ஸ்வயத்நநிவர்த் தகாத்யந்த பாரதந்த்ர்யஜ்ஞாநத்தைச் சொல்லுகிறதென்றபடி.

இவள்கண்ணழகிலே ஜகத்விசிஷ்டனீடுபட்டிருக்குமென்று விவக்ஷித்து, அ வன்கண்ணழகை லக்ஷரிக்கிறுர் (இவ்வளவேயித்யாதி) இத்தைவிவரிக்கிறுர் (ஒரு பயேத்யாதி) இவள்கண்ணுக்கேற்றமேதென்ன (அவன்றன்னையுமித்யாதி) அவன்க ண்ணில் குறைத்தலையு மிவள்கண்ணிலேற்றத்தையும் பதங்களிலே யேறிட்டுக்காட் டுகிறுர் (அவனனைத்துலகுமித்யாதி) "நெடுங்கண்" என்றதுக்குவாஸநை (அவன்தா னுமித்யாதி) ஒருமூலையிலே யடங்கினுல், மற்றையிடமோவென்ன (கண்ணில்லா தவித்யாதி) (குமர்கிடந்துபோமென்றது) குமரொன்று - குமரியாய், குமரிபோலே யநுபவயோக்யமல்லாதேபோமென்றபடி. "தினைத்தனையும்" என்றதுக்குபாவத் வயம் (நெகிழ்த்தணைக்கவு மித்யாதிவாக்யத்வயமும்) தினைத்தனையும் - அத்யல்பகா

லமும், விடாளென்றபடி. " சிறிதுபோதம்விடாள் " என்றுரையில்சப்தார்த்தம். நெஞ்சுகொடுத்தால்தோஷமேதென்ன (காரியப்பாட்டாலேயித்யாதி) அதாவது - கார்யவஶாத் பிரியப்பார்த்தாலும், "பிரிவுஹிதம்" என்றிவள்நெஞ்சிலே படுத்தியே பிரியவேண்டுகையாலே, அநுபவத்தைவிட்டு அத்தைக்கேளாளென்றபடி. காரியப்பாடு-கார்யவசம்.

மனைக்குவலியபழியாவது - குடிக்குவருகிற வலியபழியென்றபடி. "பழியும்" என்றசப்தார்த்தம் (அபிமதேத்யாதி) வ்யாக்யாதாவினீடுபாடு (இத்தலையாலேயித்யாதி ) " ஸ்வயத்நம்ஸ்வரூபவிருத்தம் " (ஸ்வயத்நம்ஸ்வரூபவிருத்தம்) என்றதுக்குப்ரமாணம் (அதபாதகேத்யாதி) " அத பாதகபீதஸ்த்வம் ஸர்வபாவேந பாரத । விமுக்தாந்யஸமாரம்போ நாராயணபரோ பவ " (அதபாதகபீதஸ்த்வம் ஸர்வபாவேநபாரத । விமுக்தாந்யஸமாரம்போநாராயணபரோபவ ) இதி மஹாபாரதே தர்மஸூநும்ப்ரதிதர்மதேவதா. பாதகமென்றால் - நிஷித்தத்தைச்சொல்லுமதொழிய, உபாயாந்தரத்தைச்சொல்லுமோவென்ன; இங்கு, பாதகமென்கிறது - ஸ்வயத்நரூபமான வுபாயாந்தரங்களையே, நிஷித்தத்தையல்ல என்னுமதுக்குபபத்தி யருளிச்செய்கிறார் (அடுத்தடுத்தித்யாதி) தடவற்பொய் - ஆபாஸமானபொய். ஆனால், புண்யபீதோத என்னாதே, " பாதகபீதஃ " (பாதகபீதஃ) என்பானென்னென்ன (சத்கர்மத்தோடித்யாதி) அதஶப்தம் - ப்ரஶ்நார்த்தத்திலேயாய், பாதகபீதோத-பாதகபீதஶ்சேத் என்றபடி.

தானங்கேபோகையிலே தன்னெஞ்சைவைத்தாளென்னுதல், நாமங்கேசெல்லும்படி தன்னெஞ்சையங்கேவைத்தாளென்னுதலென்றபடி.

முந்தினவர்த்தத்திலே, நெடுங்கணிளமானினிப்போய் - மனைக்குவான்பழியுநினையாதாளாய்க்கொண்டு - அனைத்துலகுமுடைய வரவிந்தலோசநனைத் தினைத்தனையும்விடாதே யிருக்கவேணுமென்று அவன்சேர்திருக்கோளூர்க்கே - தான்செல்லவொருப்பட்டாள், தெய்வங்காள் - நினைக்கிலேனித்யந்வயஃ. த்விதீயார்த்தத்திலே, நெடுங்கணிளமானினி - அவன்சேர்திருக்கோளூர்க்கே, மனைக்குவான்பழியும் நினையாதவளாய்க்கொண்டு - போய், மீளுகைக்கு யோக்யதையுங்கூடவில்லாதபடி யனைத்துலகுமுடைய வரவிந்தலோசநனைத் தினைத்தனையும்விடாள்; நாமங்கேசெல்லும்படிவைத்தாள், தெய்வங்காள்-நினைக்கிலேனித்யந்வயஃ. "பழியும்" என்றசப்தத்தாலே - அபிமதசாதநமல்லாத வளவேயன்றென்று சொன்னதிருத்தாயாரோ, "தினைத்தனையும்விடாள்" என்று-அபிமதசித்தியைச்சொல்லும்போது, ஸ்வவசநவ்யாஹதியன்றோவென்னில்; "முந்தறவிவள் போகிறபோது ஸ்வயத்நநிவர்த்தநார்த்தமாகச்சொன்னாளேயாகிலும், அவன்குணத்தைப்பார்த்து ' அபிமதசித்திதப்பாது ' என்றிருக்குமவளாகையாலே யிங்ஙனேசொல்லக்குறையில்லை" என்று பரிஹரித்தருளுவர் ..................................................................*

---

## பதினொன்றாம்பாட்டு.

வைத்தமாநிதியாமதுசூதனையேயலற்றிக்
கொத்தலர்பொழில்சூழ்குருகூர்ச்சடகோபன்சொன்ன
பத்துநூற்றுளிப்பத்தவன்சேர்திருக்கோளூர்க்கே
சித்தம்வைத்துரைப்பார்திகழ்பொன்னுலகாள்வாரோ.

## ஆறாயிரப்படி.

(வைத்தமாநிதி) ஆழ்வார், விப்லேஷமாகிற வாபத்துக்குத்தம க்கு வைப்பாகவைத்த மஹாநிதியாயிருந்த வெம்பெருமானையே யலற் றிச்சொன்ன வித்திருவாய்மொழியை, திருக்கோளூர்க்கே ப்ரவணமான மநஸ்ஸையுடையராய்க்கொண்டு சொல்லுவாரிட்டவழக்காம் திருநா டென்கிறார் ..................... .............................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழியை ஸஹ்ருதயமாகச் சொல்லவல்லவர்கள், பரமபதத்துக்கு நிர்வாஹகராவரென்று பலத்தை யருளிச்செய்கிறார்.

வைத்த - சேமித்துவைத்த. மாநிதியாம் - மஹாநிதிபோலே நிரதிசய ப்ரா ப்யபூதனாய். மதுசூதனை - போகப்ரதிபந்தகவிரோதிநிரசநசீலனானவனை. அலற்றி- அலாபநிபந்தநமான ஆர்த்தியாலேயலற்றி. கொத்து-பூங்கொத்து. அலர்-அலருகி ற. பொழில்-சோலையாலே. சூழ்-சூழப்பட்ட. குருகூர்-திருநகரிக்கு நிர்வாஹகரா ன. சடகோபன்-ஆழ்வார். சொன்ன-அருளிச்செய்த. பத்து-ஓரோவர்த்தவிசேஷ ங்களுக்கு வாசகமானபத்தான. நூற்றுள்-நூற்றினுள்ளும். இப்பத்து-ப்ராப்யத்ம ராப்ரகாசகமானவிப்பத்தை. அவன்-அவன். சேர் - வர்த்திக்கிற. திருக்கோளூர்க் கே-திருக்கோளூர்க்கே. சித்தம்-நெஞ்சை. வைத்து-வைத்து. உரைப்பார் - சொல்ல வல்லார். திகழ்-பகவதநுபவௌஜ்ஜ்வல்யத்தையுடைத்தாய். பொன் - ஶ்லாக்யமா ன. உலகு-பரமபதத்தை. ஆள்வார்-தாங்கள்நினைத்தபடி நிர்வஹிக்கப்பெறுவர்கள்.

இது - கலித்துறை......................................... ...... ......................

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில்-இப்பத்தும்கற்றா ரிட்டவழக்குத் திருநாடென்கிறார்.

(வைத்தமாநிதியாம் இவள், தனிவழிப்போகைக்கும் தாயாரை விடுகைக்கும் ஹேதுவிருக்கிறபடி. தநம் சஞ்சிதமாயிருக்க, எடுத்தழித் துக்கெடுத்து ஜீவியாதே யாறியிருப்பாரில்லையே. (வைத்தமாநிதி) "எ ய்ப்பினில் வைப்பினைக்காசினைமணியை" என்கிறபடியே - தளர்ந்தா தாவளமாய், எய்ப்பினில்வைப்பாய் - "உண்டு" என்னவுயிர் நிற்கும்ப டியாய், உடையவன்காலிலே யெல்லாரும் விழும்படியாய், உடையவனு க்கறவிட்டு ஜீவிக்கலாய், "அறவிட்டுஜீவித்தான்" என்றேசாதபடியுமா ய், அவன்றனக்குப் பெருமதிப்பைக்கொடுப்பதுமாய், உடையவனு க்கொன்றுக்கும் கரையவேண்டாதபடியாய், எல்லாம் தன்னைக்கொண்டே கொள்ளலாய் - எல்லாரஸங்களும் போகங்களும் தன்னைக்கொண்டே கொள்ளலாய், ஏவமாதிகுணங்களை யுடைத்தாயிருக்கையைப்பற்ற - நிதி யென்கிறது. மாநிதியென்றது - மஹார்க்கமான நிதியென்றபடியாய், ... த்தால் - தன்னைக்கொண்டே யெல்லாங்கொள்ளாநின்றால் தனக்கொரு குறையற்றிருக்கை. அல்லாதநிதிமாண்டுநிற்குமே. (மதுசூதனையலற் றி) இந்நிதியைக்காத்தூட்டுவதும் தானேயென்கிறது. உத்தேஶ்யமானது தானே விரோதியையும்போக்கி யநுபவிப்பிக்கவற்றாயிருக்கை. (கொ த்தலர்பொழில்) " ஸர்வஞ்சகுஶலம் ... " (ஸர்வஞ்சகுஶலம்க ஹே) என்னுமாபோலே. ஸ்ரீபரதாழ்வான் பெருமாள்பக்கலிலே செ

சைவைக்கவைக்க, அத்தைக்கண்டு "அவர்வரவணித்து" என்று திருவ யோத்யை தளிரும் முறியுமானாப்போலே, விரஹத்தையநுசந்திக்க க்ஷ மரல்லாதபடி யவன்பக்கலிலே யேகாக்ரசித்தராகையாலே பிறந்ததேற் றத்தாலே திருநகரியும் தளிரும் முறியுமானபடி. இத்தலையிலே யித்தனை த்வரையுண்டானு லத்தலையில் பலத்துக்குக்கண்ணழிவுண்டோ. "அபி வ்ருக்ஷா:" (அபிவ்ருக்ஷா:) என்கைதவிர்ந்து, "அகாலபலிநோவ்ருக்ஷா:" (அகாலபலிநோவ்ருக்ஷா:) என்னும்படியாயிற்று. (பத்துநூற்றுளிப்பத் து) கடலிலம்ருதம்போலே, ஆயிரத்திலும் வைத்துக்கொண்டிப்பத்து. (அவன்சேரித்யாதி) அவன்பொருந்திவர்த்திக்கிற திருக்கோளூர்க்கேநெ ஞ்சைவைத்து. (உரைப்பார்) சொல்லுவார். (திகழ்பொன்னுலகாள்வா ரே) ஒருத்திகூப்பிட, ஒருத்திதனியேபோகையன்றிக்கே, நித்யாநுபவம் பண்ணலாம் நிலத்திலே புகப்பெறுவர். தனிவழிபோகாதே, அர்ச்சிரா திகணம்சேவிக்க விலக்ஷணமான தேசத்தேபோய்ப்புகப்பெறுவர் ...*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (வைத்தமாநிதியித்யாதி) "இப்பத்து, சித்தம்வைத்துரைப்பார்" இ த்யாதிகளைக்கடாக்ஷித்தவதாரிகை (நிகமத்திலிப்பத்துமித்யாதி)

இப்போது "வைத்தமாநிதி" என்று - அவனுடைய போக்யதையைச்சொல் லுகிறதுக்குபாவம் (இவள்தனிவழியித்யாதி) நிதியிருந்தாலிப்படி போகவேணுமோ வென்ன (தநமித்யாதி) இவனை "நிதி" என்கைக்கு ஹேதுவேதென்ன (எய்ப்பினிலி த்யாதி) இளைத்தவேளையில் நிதியாயிருக்குமவனை; காசினை - பொன்போலே ஸ்ப்ரு ஹணீயனானவனை; மணியை - ரத்நம்போலே ஶ்லாக்யனானவனை இத்யர்த்த:. எய் ப்பு-இளைப்பு. காசு-பொன். திருமொழி, "பேய்முலைத்தலைநஞ்சுண்ட" இத்யாதி. த ளர்ந்தார் தாவளமாகையாலே யெய்ப்பினில்வைப்பாயென்றபடி. தளர்ந்தார்தாவ ளமாய்-ஆபந்நர்க்கு ரக்ஷகமாய். ஆதாரமாயென்றுமாம். "அஸ்திப்ரஹ்மேதிசேத்வேத" (அஸ்திப்ரஹ்மேதிசேத்வேத) இத்யாதியைப்பற்ற (உண்டென்னவித்யாதி) அதாவது - "தநமுண்டு" என்றால் போனப்ராணனும் வருமாபோலே, "ஈஶ்வரனு ளன்" என்றால் நஷ்டப்ராயமான வாத்மசத்தையும் தரிக்கும்படியாயென்றபடி. "ஸர்வேஸ்மைதேவாபலிமாவஹந்தி" (ஸர்வேஸ்மைதேவாபலிமாவஹந்தி) "த்ரவந்திதைத்யா:ப்ரணமந்திதேவதா:" (த்ரவந்திதைத்யா:ப்ரணமந்திதே வதா:) இத்யாதியைப்பற்ற (உடையவன்காலிலேயித்யாதி) அறவிட்டு ஜீவிக்கலா மென்றது - இவனீஶ்வரனையுபதேசிக்க, உபதேசபாத்ரபூதனான சிஷ்யனுபகாரஸ்ம் ருதியாலே யதாசக்திசமர்ப்பிக்க, அத்தை ஸ்வீகரித்து ஜீவிக்கலாயென்றபடி. அற விட்டு ஜீவிக்கையாவது-விற்றுஜீவிக்கை. இவ்விடத்திலே - "க்ருஷேஶ்ஶிஷ்யஸ்யஸம்ப்ரீத்யாஸாத்விகாநாம்ப்ரஸாதத: । லப்தம்வித்தம்ஸதாம்பத்யம்லுப்தைரந்யத்துக்ருஹ்யதே" (க்ருஷேஶ்ஶிஷ்யஸ்யஸம்ப்ரீத்யாஸாத்விகா நாம்ப்ரஸாதத: । லப்தம்வித்தம்ஸதாம்பத்யம்லுப்தைரந்யத்துக்ருஹ்யதே) என் றதநுஸந்தேயம். அறவிட்டு ஜீவித்தானென்றேசாத்தபடியுமாயென்றது - புத்ராதிக ளைவிற்று ஜீவித்தால் நிந்திப்பர்கள், நிதியைவிற்றுஜீவித்தால் நிந்திப்பாரில்லையே; அப்படியே, தங்களாதரத்தாலே சிஷ்யர்கள் சமர்ப்பித்தத்தை வாங்கிஜீவித்தால்

நிந்தியாதபடியாயிருக்குமென்கை. “ [illegible] ” ( ப்ரபுரஹ மங்யந்ருணும் ) இத்யாதியைப்பற்ற ( அவன்றனக்குப்பெருமதிப்பையித்யாதி ) அதாவது - நிதியுடையவனுக்கொருவர்க்கு மஞ்சாதபடியது பெருமதிப்பைக்கொடுக்குமாபோலே, சர்வேஶ்வரனை யாஶ்ரயித்தவர்களுக்கு யமாதிகளுக்கு மஞ்சவேண்டாதபடியான பெருமதிப்பைப்பண்ணிக்கொடுக்குமதா யிருக்குமென்றபடி. “ [illegible] ” ( க்ருதக்ருத்யாஃப்ரதீக்ஷந்தே ) “ [illegible] ” ( கிமஹம்ஸாதுநாகரவம்கிமஹம்பாபமகரவமிதி ) இத்யாதியைப்பற்ற (ஒன்றுக்குங்கரையவித்யாதி) இந்நிதியையுடையவனுக்கு, “நன்மையைச்செய்தோமில்லை, தீமையைச்செய்துவிட்டோம்” என்றுபயப்பட்வேண்டாதபடி யிருக்குமென்றபடி. “ [illegible] ” ( ஸர்வகந்தஸ் ஸர்வரஸஃ ) என்றத்தைப்பற்ற (எல்லாம்தன்னையித்யாதி) ஏதத்விவரணம் (எல்லாரஸங்களுமித்யாதி) “ [illegible] ” (பூதாதிர்நிதிரவ்யயஃ) என்றத்தைப்பற்ற (தனக்கொருகுறை யற்றிருக்கையென்றது) (மஹார்க்கம்) என்றதுக்கு-அக்ஷயத்வத்திலேநோக்கு. காத்தூட்டுவதுமென்றது - விரோதிவாராமல் காத்துபுஜிப்பிக்குமதுமென்றபடி. விவரணம் (உத்தேஶ்யமானதித்யாதி) இத்தால் - ப்ராப்யமானது தானேப்ராபகமுமென்றபடி.

கொத்தாக விகஸியாநின்ற பொழிலென்று சப்தார்த்தம். தாம்விஶ்லேஷத்தாலே துஃகியாநிற்க, சோலை யிப்படியாகக்கூடுமோவென்ன; த்ருஷ்டாந்தங்காட்டுகிறார் (சர்வஞ்சேத்யாதி) இவர்க்காற்றாமையுண்டானு லவன் வரவணித்தாகவேணுமோவென்ன (இத்தலையிலேயித்யாதி) அதாவது - * யாதானும்பற்றி நீங்குகிறவனாறுகூலித்தால் * எதிர்சூழல்புக்குத் திரிகிறவனுக்குக் கண்ணழிவுண்டோவென்றபடி. அத்தலையில் பலத்துக்கென்றது - அத்தலையால் வருகிறபலத்துக்கென்றபடி. கண்ணழிவு - விளம்பமும், குறையும். அவன்வரவணித்தானால் கொத்தலர்பொழிலாகிறதுக்குப்ரமாணம் (அபிவ்ருக்ஷாஇத்யாதி)

“திகழ்” என்றதுக்குபாவம் (ஒருத்தியித்யாதி) விவரணம் (தனிவழியித்யாதி) (ஸர்வஞ்சகுஶலம் க்ருஹேயென்று) வருகிறவிடத்துக்கெல்லா மிவ்விடத்தில் பரிஹரித்தாப்போலே பரிஹாரங்கண்டுகொள்வது. “ [illegible] । [illegible] ” ( பங்கதிக்தஸ்துஜடிலோபரதஸ்த்வாம்ப்ரதீக்ஷதே । பாதுகேதேபுரஸ்க்ருத்யஸர்வஞ்சகுஶலம்க்ருஹே ) இதிப்ரதிப்ரயாணே ராமம்ப்ரதிபரத்வாஜஃ... ...

---

## த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

( உண்ணுஞ்சோறு. )

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

(பாரம்பாத்பவ்யபாவாத்) கண்ணனெம்பெருமானென்றென்றே - பரத்வத்தோடேகூட க்ருஷ்ணனாய்வந்தவதரித்துப் படைத்த ஸௌலப்யத்தாலும்; (ஸ்ரகபிஹிதிமுகை:) பேருந்தார்களுமேபிதற்றி - திருநாமகீர்த்தநத்தாலும், திருமாலையினுடைய வுக்தியாலும்; (ஸ்ரீமதைஸ்வர்யபூம்நா) இத்தாலே-நாலுபாட்டிலர்த்தம் தந்த்ரேண ஸங்க்ரஹிக்கப்படுகிறது; யாவையுந்திருமால், செல்வமல்கியவன்கிடந்த, இனித்தன்றிருமால் திருக்கோளூரில், தன்றிருமால் திருக்கண்ணும் செவ்வாயுங்கண்டு - ஸ்ரீய:பதித்வத்தாலும், அத்தாலுண்டான வைஸ்வர்ய ஸம்ருத்தியாலும், பிராட்டியோடே பொருந்தியிருக்கையாலே நித்யவஸந்தமாகச்செல்லுகிற தருவாடிகாதடாகாதிரம்யதையாலும், தத்ஸம்ஸ்லேஷத்தாலே புதுக்கணித்ததிருக்கண்களமுதலான திவ்யாவயவசோபையாலும்; (ஸ்நேஹித்வாத்) நெடுமாலென்றழைத்தினிப்போய் - ஆஸ்ரிதர்பக்கல் வ்யாமுக்ததையாலும்; (ஆபிரூப்யாத்) ஒசிந்தவொண்மலராள்கொழுநன் - * வேரிமாறாத பூமேலிருப்பாளுக் கநுரூபமான சௌகுமார்யாதியாலும்; (ஸ்ரிதபரவஶதா) என்கண்ணனுக்கென் நீரியாயிருப்பாள் - ஆஸ்ரிதபரதந்த்ரதையாலும்; (ஸர்வலோகேஶதாத்யை:) அனைத்துலகுமுடைய வரவிந்தலோசனனை - ஸர்வஸ்வாமிதையாலும்; ஆதிசப்தத்தாலே - அத்தைக்கோட்சொல்லுகிற வரவிந்தலோசநத்வம் ஸங்க்ருஹீதமாகிறது; இப்படிகளாலே, திருக்கோளூரெம்பெருமானாஸ்ரிதருக்கு விஸ்லேஷசமயத்தி லபவாதபீதியில்லாதபடி தைர்யாதிகளை யுண்டாக்காநிற்கிறனென்று "உண்ணுஞ்சோறு" என்கிறதஶகத்திலே, சர்வஜநோஜ்ஜீவநார்த்தமாக வேதங்களை த்ரமிடபாஷாரூபமாக ஸங்க்ரஹித்தஶடகோபருபபாதித்தருளினானென்கிறார்..........................................................(௯௯)

---

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

உண்ணுஞ்சோறாதியொருமூன்றுமெம்பெருமான்
கண்ணனென்றேநீர்மல்கிக்கண்ணிணைகள் - மண்ணுலகில்
மன்னுதிருக்கோளூரில்மாயன்பாற்போமாறன்
பொன்னடியேநந்தமக்குப்பொன். (௫௭)

(உண்ணுஞ்சோறாதி) இதில் - திருக்கோளூரேறப்போனபடியை யருளிச்செய்தத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். அதெங்ஙனேயென்னில்; திருத்தாயார் "மாலுக்குவையமளந்தமணாளற்கு" என்றுதொடங்கி "பொற்பமைநீண்முடிப்பூந்தண்டுழாயற்கு" என்று - ஆபாதமௌலி பர்யந்த பர்யவஸிதங்களான வவன்றிருநாமங்களைச்சொல்லிக்கூப்பிட்டுப் பரவசையாய்க்கிடந்துறங்க, ம்ருதசஞ்சீவிநியான க்ருஷ்ணன்றிருநாமத்தைக்கேட்டுப் பெண்பிள்ளை யுணர்ந்தெழுந்திருந்து அவனிருக்கிற திருக்கோளூரேறப்போக, அநந்தரம் திருத்தாயாருணர்ந்துபடுக்கையில் பெண்பிள்ளையைக் காணப்பெறாமையாலே, "தன்வயிற்றிற்பிறப்பாலு மிவள்தன்ஸ்வபாவத்தாலும் திருக்கோளூரேறப்போனாள்" என்று சோகிக்கிறவந்தத்திருத்தாயார் பாசுரத்தாலே ஸ்வதசையை யருளிச்செய்கிற * உண்ணுஞ்சோற்றிலர்த்தத்தை "உண்ணுஞ்சோறாதி" இத்யாதியாலே யருளிச்செய்கிறானென்கை.

(உண்ணுஞ்சோறுதியொருமூன்றுமெம்பெருமான் கண்ணனென்றேநீர்மல்கிக்கண்ணிணைகள்) "உண்ணுஞ்சோறுபருகுநீர் தின்னும்வெற்றிலையுமெல்லாங்கண்ணன்" என்கிறமுதற்பாட்டுப்ரதாநமாய் அத்தைப்பின்சென்றருளிச்செய்தபடி. (உண்ணுஞ்சோறுதியொருமூன்றும்) அந்நாதியான தாரகாதித்ரயமும். (ஒருமூன்றும்) அத்விதீயமாயிருக்கிறமூன்றும். (எம்பெருமான்கண்ணனென்றே) எனக்குஸ்வாமியான க்ருஷ்ணனென்றேயநுசந்தித்து. (நீர்மல்கிக்கண்ணிணைகள்) பாவநாப்ரகர்ஷத்தாலே கண்ணிணைகள் நீராலேநிறைந்து. க்ருஷ்ணத்ருஷ்ணை க்ருஷ்ணாநுபவத்தாலேயிறே சமிப்பது. (மண்ணுலகில் - திருக்கோளூரில் - மன்னு - மாயன்பால் போமாறன்) இவ்விபூதியிலே திருக்கோளூரிலே நித்யவாசம்பண்ணுகிற, சௌந்தர்யசீலாதிகளா லாஸ்சர்யபூதனானவைத்தமாநிதிபால்போமாழ்வார். * இறந்தால் தங்குமூர் விண்ணூராகையாலே விசேஷிக்கவேண்டா, நாட்டார்பொருந்தியிருக்குமூரிவர்க்கு நெருப்பாயிருக்கையாலே "மண்ணினுள் - புகுமூர்திருக்கோளூர்" என்றுவிசேஷிக்கவேண்டுவது. "ஸர்வாந்தேஹாந்பவித்ரஜ" (ஸர்வாந்போகாந்பரித்யஜ்ய) இத்யாதிவத், தானுகந்தவூரிறே யிவர்க்குமண்ணினுள்புகுமூர். * திருக்கோளூரில் பூவியல்பொழிலும் தடமுமவன்கோயிலுங்கண்டாலிறே யிவராவியுள்குளிருவது. "பாலைகடந்தபொன்னே - கண்ணன்வெஃகாவுது - எப்பாலைக்கும் சேமத்ததே" என்னக்கடவதிறே. மன்னுதிருக்கோளூரில் மாயன்பால்போகையாவது - "ஊரும்நாடுமுலகமுந்தன்னைப்போ லவனுடையபேருந்தார்களுமேபிதற்றப்போருங்கொல்" என்றும், "திருமால்திருநாமங்களே கூவியெழுமென்பாவைபோய்" என்றும், "செல்வமல்கியவன்கிடந்ததிருக்கோளூர்க்கே மெல்லிடைநுடங்கவிளமான் செல்லமேவினள்" என்றும், "ஆவியுள்குளிர வெங்ஙனேயுகக்குங்கொல்" என்றும், "தென்றிசைத்திலதமனைய திருக்கோளூர்க்கேசென்று" என்றும், "செல்வமல்கியவன்கிடந்த திருக்கோளூர்க்கே யொல்கியொல்கிநடந்து" என்றும், "கசிந்தநெஞ்சினளாய்க்கண்ணநீர்துளும்பச்செல்லுங்கொல்" என்றும், "என்கண்ணனுக்கென்றீரியாயிருப்பா ளிதெல்லாங்கிடக்க வினிப்போய்" என்றும், "திருக்கோளூர்க்கே நேரிழைநடந்தாள்" என்றும், * மனைக்குவான்பழியும் நினையாள் செல்லவைத்தபடியாயிற்று. இத்தால் - வழியிலுள்ளவர்களையும் வாழ்வித்து அவனையும் வாழ்வித்துத் தானும் வாழும்படிபோனாளென்றதாயிற்று. இப்படி யெல்லாரையும் வாழ்வித்துக்கொண்டு வைத்தமாநிதியைநாடி நடந்துபோம்மாறன், (பொன்னடியேநந்தமக்குப்பொன்) அவர்க்குவைத்தமாநிதி யவனடியாயிருக்கும், நமக்குவைத்தமாநிதி ஆழ்வாரடியாயிருக்கும். "கைம்முதலிழந்தாருண்ணும் நிதியினுபத்ஸகத்வம் புகுமூரிலே ஸம்ருத்தம்" என்றிறே ஆசார்யஹ்ருதயத்திலே யருளிச்செய்தது.................................................................. (௫௭)

ஆறும்பத்தில் - ஏழாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக - திருவாய்மொழி ௫௭.—பாட்டு - ௬௨௯.

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஆறும்பத்து.

## எட்டாந்திருவாய்மொழி.

### பொன்னுலகு - ப்ரவேஶங்கள்.

### ஆறுயிரப்படி.

( பொன்னுலகாளீரோ ) திருக்கோளூரிலே போய்ப்புக்கெம்பெருமானோடு சம்ஶ்லேஷித்ததெல்லாம் மநோரதமாத்ரமாய், பழையபடியே யெம்பெருமானைக் காணப்பெறாமையாலே தத்விரஹமஸஹமாநராய், அந்யாபதேசத்தாலே, ஒருபிராட்டியாய் அவனைக்குறித்து தூதப்ரேஷணம்பண்ணுகிறார்; இப்படி திருக்கோளூரிலே யெழுந்தருளின பிராட்டியோடுள்ள சிரகால சம்ஶ்லேஷ ஜநிதாநவதிகாநந்த மஹார்ணவாந்தர்நிமக்நனான வெம்பெருமான், அந்த வாநந்தவெள்ளம் தனக்கஸாத்ம்யமானவாறே அது ஸாத்மிக்கைக்காக விஶ்லேஷித்து நெடுங்காலமெழுந்தருளாதிருந்தவாறே, தத்விஶ்லேஷத்தாலே யத்யந்த மவஸந்நையான பிராட்டி, தன்னுடைய வாற்றாமையாலே யவனைக்குறித்துச் சில பக்ஷிகளைத் தூதாகவிடுகிறாளென்றுமாம். "திருக்கோளூரிலேபோய்ப் புகவேணும்" என்று புறப்பட்ட விப்பிராட்டி, தன்னுடைய வவசாதத்தாலே பின்னைப்போக க்ஷமையன்றியே, அங்கே யுத்யாநத்திலேயிருந் தெம்பெருமானைக்குறித்து தூதப்ரேஷணம்பண்ணுகிறாளென்றுமாம்............*

### பன்னீராயிரப்படி.

எட்டாந்திருவாய்மொழியில், கீழே - ப்ராப்யவிஷயத்தி லதித்வரிதரானவிவர்க்கு, த்வராநுரூபமான ப்ரவ்ருத்தியில் யோக்யதையில்லாமையாலே கடகமுகத்தாலே ப்ராபிக்கையிலே யபேக்ஷைபிறந்து; கடகாநுரூபமான வவனுடைய ஸ்ரஷ்ட்ருத்வாத்யாகாரத்தையும், அநுபாவ்யமான வசாதாரணசிஹ்நத்தையும், ஆஶ்ரிதவிரோதிநிவர்த்தநத்தையும், அதிசயித புருஷாநுபாவ்யமான போக்யதா வைலக்ஷண்யத்தையும், ஔதார்யஸ்வபாவத்தையும், அத்யந்தபவ்யதையையும், அபிருபனா யகிலாத்மபூதனானவனுடைய வநிஷ்டநிவர்த்தகத்வத்தையும், ஸர்வாதிகத்வத்தையும், அந்தப்பரத்வத்தோடு கூடின சௌலப்யாதிசயத்தையும், உபயப்ரகாசகமான ஶ்ரியஃபதித்வத்தையு மநுசந்தித்து, "ஏவம்விதஸ்வபாவனானசர்வேஶ்வரனை

கடிப்பித்த மஹோபகாரத்தின் ப்ரீத்யதிசயத்தாலே ஐஹிகாமுஷ்மிக சகலபதார்த்தங்களும் கடகருக்கு சமர்ப்பணீயம்" என்கிற வதிசயிதாதரத்தை; நாயகனான வீரவரனைப் பிரிந் தாற்றாமையாலே தூதுவிடத்தேடின நாயகி, தூதுபோகிற பக்ஷிகளைக்குறித்து ப்ரத்யுபகார ப்ரதர்ஶநம் பண்ணின பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.................................................................................*

ரு டு,

கீழ்த்திருவாய்மொழியிரண்டும் - மோஹமுமுணர்த்தியுமாய், இதில் - தூதப்ரேஷணமாயிறே யிருக்கிறது ; * மயர்வறமதிநலமருளப்பெற்றவிவர்க்கு, "𑌮𑌰𑌣𑌾𑌯𑌾𑌰𑍍𑌥𑌸𑌮𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌃" (மரணாயார்த்தஸம்பத்திঃ) என்னும் மோஹமில்லையே ; இனி யிவர்க்கு மோஹமாவது - பாஹ்யபதார்த்தாநுசந்தாந க்ஷமரன்றிக்கே விஷயங்களினின்று மந்தঃகரணம் நிவ்ருத்தமாய் மநஸ்ஸுக்கவனே விஷயமாய் அவன் குணங்களையே யநுபவிக்கை. அதாவது - சரீரியானவனே ஜ்ஞாநத்துக்கு விஷயமாய்த் தன்னை மறக்கை. கீழ் - "𑌅𑌹𑌂𑌮𑌨𑍁𑌰𑌭𑌵𑌮𑍍" ( அஹம்மநுரபவம் ) என்றும், "𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑍍𑌵𑌾𑌦𑌨𑌨𑍍𑌤𑌸𑍍𑌯" (ஸர்வகத்வாதநந்தஸ்ய) என்றும் சொல்லுகிற நிலைபோலே. உணர்த்தியாவது - "𑌪𑍍𑌰𑌹𑍍𑌲𑌾𑌦𑍋𑌽𑌸𑍍𑌮𑍀𑌤𑌿𑌸𑌸𑍍𑌮𑌾𑌰"(ப்ரஹ்லாதோஸ்மீதிஸஸ்மார) என்கிற ஸ்ரீப்ரஹ்லாதனைப்போலே தம்மையுமுணர க்ஷமராய் ஜகத்வ்ருத்தாந்தத்தையு மநுசந்திக்க க்ஷமராகை. நிர்க்குணமான விஷயத்திலேயன்றே யிவரவகாஹித்தது, குணாதிகவிஷயத்திலேயிறே சேஷிபக்கலிலே யநுசந்தாநமானால் சேஷபூதனான தன்னையும் காணுமிறே.

கீழ் - நெடும்போ தவன் குணங்களை யநுசந்திக்கையாலே தரித்து பலஹாநிநீங்கிபாஹ்யபதார்த்தாநுசந்தாநக்ஷமரானார்; அவ்வளவிலே, இவர் தரித்தவாறே பழையஅலாபமே தலையெடுத்து ஒருபிராட்டிதசையை ப்ராப்தராய் அந்யாபதேசத்தாலே பேசுகிறார். கீழ்த்திருவாய்மொழியில் திருத்தாயார் "எங்ஙனேபுகுங்கொல்" என்று நொந்ததுவே பலித்து ; தன் சாபலத்தாலே புறப்பட்டாள் முடியப்போய்ப்புகமாட்டாமை தன்னுடைய நகரோபவநத்திலே விழுந்து கிடந்து, அவ்வளவிலுமவன் வரக்காணாமையாலே, கண்டபக்ஷிகளைத் தூதுவிடுகிறாள். ("'செல்லவைத்தனளே' என்றது - செல்லுகையிலே யொருப்பட்டாளென்றதாய், முட்டப்போகாமல் கிடந்து ஐகரஸ்யம் பற்றாசாகத்தூதுவிடுகிறாள்" என்று பட்டர்.) தனிவழியே புறப்பட்டுப் போம்படியாய் விழுந்த இவளுக்குத் தூதுபோவாரில்லையே, உண்டானாலு மிவள் தனக்கு முன்னே யீடுபட்டுக்கிடப்பர்களே, இனித் தன்பரிசரத்தில் வர்த்திக்கிற பக்ஷிகளுக்குமேற்படக் கால்நடைதந்துபோகவல்லாரில்லையே, இவ்வளவில்நீங்களென்தசையை யறிவிக்கவேணுமென்று அவற்றின்காலிலேவிழுகிறாள்,

* அஞ்சிறையமடநாராயில் – என்னை நினைத்தானத்தனை, தன்னை மறந்தானென்றுள். இத்தலையிலபராதம் பாராதே, அத்தலையிலபராதஸஹத்வம் பற்றாசாக அபராத ஸஹத்வத்தைப் பார்த்துவருவதென் றுள் விட்டாள்.

* வைகல்பூங்கழிவாயில்-இருவரையு மவ்வூரில் போக்யதை மறக்கப்பண்ணிற்றென்றுள் ; விசேஷஜ்ஞனுகையாலே ஆர்த்தியை யறிவிக்க வருமென்று ஆர்த்தரக்ஷணம் பற்றாசாகத்தூதுவிட்டாள். இத்திருவாய்மொழியில்–வாராமைக் கடிபரப்பனுகையென்று பார்த்தாள் ; "தன்மன்னுநீள்கழல்மேல் தண்டுழாய்நமக்கன்றிநல்கான்" என்கிறபடியே அசாதாரணமானதன்றிறே வடிவு, ஆஶ்ரிதரோ டேகரஸனுகையிறே யென்று பார்த்து ஐகரஸ்யம் பற்றாசாகத் தூதுவிடுகிருள். "பலபாட்டுக்களிலும் "இதுவோதக்கவாறு" என்கையாலே –"ஆந்ருஶம்ஸ்யம் பற்றாசாகத்தூதுவிடுகிருள்" என்று பிள்ளான்பணிக்கும்படி.

" 'ஹுஞாநாநா-நூஷாநுஹொமாநுவவ-நுகாஊஸ-ஹ்ரவீ-ஸஊாஉா உஶதஹூாஹம்' (புஞ்ஜாநாமாநுஷாந்போகாந்ஸர்வகாமஸம்ருத்திநீ- ஸமாத்வாதஶதத்ராஹம்) என்கிறபடியே - பன்னிரண்டாண்டு தண்ணீர்த்துரும்பறக்கலந்து பிரிந்த பிராட்டியைப்போலே, அங்கேபுக்கு நெடுங்காலமவனை யநுபவித்துப் பிரிந்து தூதுவிடுகிருள்" என்று பிள்ளான். "புறப்பட்டவள் முடியப்போகமாட்டாதே நகரோபவநத்திலே கிடந்து தூதுவிடுகிருள்" என்று பட்டருளிச்செய்யும்படி. [ ஜீவஹீம்ஊாமயஶா ாாஊஸ்லூம்ஹாவயதிகீதிஜஊாநு ] [ ஜீவந்திம்மாம்யதாராமஸ்ஸம்பாவயதிகீர்த்திமாந் ] பரபரிபவம்பொறுத குடிப்பிறப்புடையவரிறே, அதிலே தமக்குவந்த அவத்யம் பரிஹரிக்கச்சொல்லவேண்டாவே. கடலையணைசெய்து ராவணுதிகளை நிரஸித்துத் தாம்வரக்கொள்ள, இத்தலை வெறுந்தறையாய்க்கிடவாமே செய்ய நினைத்தாராகில், ஏற்கவே பரிஹரித்துத் தம்புகழை நோக்கிக்கொள்ளச்சொல்லென்று சொன்னுளிறே; அப்படியேயிவளும் தன் தசையை யறிவித்துவிடுகிருளா யிருக்கிறது. .................*

## ஜீயர் அரும்பதம்.

பொன்னுலகாளீர் ப்ரவேசே, ஆழ்வாருடைய மோஹப்ரபோதாவஸ்த்தைகள் நாட்டாருடைய மோஹப்ரபோதாவஸ்த்தைகளிற்காட்டில் வ்யாவ்ருத்தமென்கைக் குறுப்பாக வதிஷ்ட்டிகை (கீழிற்றிருவாய்மொழியித்யாதி) ஜ்ஞாநாதிகரானவிவர்க்கு ஜாக்ரத்ஸ்வப்ந ஸுஷுப்தி சஹபடிதமான மோஹங் கூடுமோ வென்ன (மயர்வறவித்யாதி) இவரது ஜாக்ரதாதி ஸஹபடிதமான மோஹமன்றென்றபடி. புருஷனுக்கு ஜாக்ரத் ஸ்வப்ந ஸுஷுப்தி மூர்ச்சா மரணங்களென்றஞ்சவஸ்த்தையுண்டு ; அதில், ஜாக்ரத்தசையாவது - பாஹ்யேந்த்ரியங்களு மந்தஃகரணமும் ஸ்வஸ்வவிஷயங்களை க்ரஹிக்கிறதசை. ஸ்வப்நாவஸ்த்தையாவது – பாஹ்யேந்த்ரியங்களடங்கி மநஸ்ஸுமாத்ரம் சஞ்சரித்து, இந்த சரீரத்தோ டொத்த சரீராந்தரங்களை

யும் பகல்காண்கிற விஷயங்களோடு துல்யங்களானவிஷயங்களையு மீஶ்வரன் ஸ்ருஷ்டிக்க, அதடியாக வபிஷேக சிரஶ்சேதபர்யந்தம் காண்கை. ஸுஷுப்தியாவது-பாஹ்யேந்த்ரியங்களும் மநஸ்ஸுமடங்கி உச்வாஸநிஶ்வாஸங்களாலே ப்ராணன் மாத்ரம் சஞ்சரித்து, ஜாக்ரத்தசையிலே ஸ்வஸ்வவிஷயங்களிலே யிந்த்ரியங்கள் வ்யாவ்ருத்தங்களாகையால் வந்தவிளைப்பெல்லா மாறும்படி புரீதத்தென்கிற நாடியிலே பரமாத்மாவின் ஸ்வரூபத்திலே சேர்ந்து, அவனாலே ஆப்யாயிதனாகை. மூர்ச்சையாவது - ஸூக்ஷ்மப்ராணதேஹசம்பந்தாவஸ்த்திதி. மரணமாவது - சர்வப்ராணதேஹசம்பந்தோபரதி. "ஈத்ருசமான மரணத்துக்குப் பாதியவஸ்த்தையாயிருக்கும்மூர்ச்சை" என்று வேதாந்தத்திலே சொன்னத்தையுட்கொண்டு (மரணார்த்தசம்பத்திஃ) என்கிறார். இவருடைய மோஹலக்ஷணத்தை யருளிச்செய்கிறார் (இனியிவர்க்கித்யாதி) * மாலுக்குவையத்திலும், * உண்ணுஞ்சோற்றிலுமுண்டானமோஹத்தையு முணர்த்தியையும் ஸத்ருஷ்டாந்தமாகக் காட்டுகிறார் (கீழஹமித்யாதி வாக்யத்வயத்தாலே) கீழ் - * மாலுக்குவையத்தில். (உணர்த்தியாவது) * உண்ணுஞ்சோற்றிலுணர்த்தியாவ தென்றபடி. "தமெஸத்தூஶ்ய நூஷிவாஜமெவஃ வுாதிபெடெக அஹம் மநுரஹவம் ஸுய்ஶூ" (தத்தைதத்பஶ்யந்ருஷிர்வாமதேவஃ ப்ரதிபேதேஅஹம்மநுரபவம்ஸூர்யஶ்ச) இதி ப்ருஹதாரண்யகே சதுர்த்தே ப்ராஹ்மணே. "யத்ரஸவ்வம் யதஸ்ஸவ்வம் யஸ்ஸவ்வம் ஸவ்வதஶ்யஃ। ஸவ்வமகாதநந்தஸ்ய ஸவ்வாஹமவஸ்திதஃ। மத்தஸ்ஸவ்வமஹம் ஸவ்வம் மயி ஸவ்வம் ஸநாதநெ" (யத்ரஸர்வம்யதஸ்ஸர்வம்யஸ்ஸர்வம்ஸர்வதஶ்சயஃ। ஸர்வகத்வாதநந்தஸ்ய ஸஏவாஹமவஸ்த்திதஃ। மத்தஸ்ஸர்வமஹம்ஸர்வம் மயிஸர்வம்ஸநாதநே) இத்யாதி, "த்ருஷ்வாஸவஜமஜூஹியொ மம நாத்ருவமுக்ஷணம்। ப்ரஹ்லாதொஸ்மீதிஸஸ்மாரபுநராத்மாநமாத்மநா" (த்ருஷ்ட்வாஸசஜகத்பூயோ ககநாத்யுபலக்ஷணம்। ப்ரஹ்லாதோஸ்மீதிஸஸ்மார புநராத்மாநமாத்மநா) இத்யாதிச ப்ரதமேம்ஶே. * மாலுக்குவையத்திலே - விஷயம் நிரவதிகபோக்யமாகையாலும் தாமும் நிரவதிக ப்ரேமயுக்தராகையாலு மேகாக்ரமானவநுபவம்செல்லாநிற்க, * உண்ணுஞ்சோற்றில் தம்மையுணர்ந்தநுசந்திக்கக்கூடுமோவென்ன (நிர்க்குணமான வித்யாதிவாக்யத்ரயம்) அதாவது - அவனுடைய சேஷித்வமும் குணமாகையாலே, அத்தை யநுசந்தித்தால் சேஷித்வப்ரதிசம்பந்தித்வேந சேஷபூதரான தம்மையுங் காணலாமென்றபடி.

இப்படி - கீழிற்றிருவாய்மொழிகளுக்கு ஸ்வாபதேசமருளிச்செய்து, இத்திருவாய்மொழிக்கு சங்க்ராஹசங்கதி (அவ்வளவிலேயித்யாதி) அவ்வளவிலேயென்றது - தம்மையும் ஜகத்வ்ருத்தாந்தத்தையு மநுசந்திக்க க்ஷமரானவளவிலே யென்றபடி.

விஸ்தரஸங்கதி (கீழிற்றிருவாய்மொழியிலித்யாதி) ஒரு கார்யத்துக்குப் போவார் தம் சக்தியறிந்து புறப்படுமத்தனையொழிய, ஸாஹஸத்தாலே புறப்படக்கடவதோவென்ன (தன்சாபலத்தாலேயித்யாதி) பக்ஷிகளைத் தூதுவிடுகிறதென், வேறுசிலரில்லையோவென்ன (தனிவழியேயித்யாதி) "மங்கைமார்முன்பு" என்று மேல் சொல்லுகிற தோழிமாரில்லையோவென்ன (உண்டாகிலுமித்யாதி) இவ்வளவில் - தோழிமாருமுதவாததசையில்.

கீழேயிருகால் தூதுவிட்டாளே, அதுக்குமிதுக்கும் வாசியேதென்ன ( அஞ்சிறைமித்யாதி ) என்னை - ஸாபராதையான வென்னை. தன்னை - அபராதஸஹனை தன்னை. அவன் மறக்கைக்கு ஹேது நம்முடையவபராதமென்று - கீழே சொல்லி, வருகைக்கு ஹேது அபராதஸஹத்வமென்கிறார் ( இத்தலையிலித்யாதி ) * வைகல்பூங்கழிவாய் ப்ரவேசத்திலே “ ஆர்த்தரக்ஷணத்திலேயொருப்பட் டித்தலையை மறந்தான் ” என்றார் ; இங்கே ( போக்யதை மறக்கப்பண்ணிற்று ) என்கிறார் ; இதுவுமொரு நிர்வாஹமென்று கண்டுகொள்வது. போக்யதைக்கு சப்தம் - “சிறந்தசெல்வம் ” என்று. இருவரையுமென்றது - பிரிந்தால் தரித்திருக்கப் போகாத வைலக்ஷண்யத்தையுடைய தன்னையும், “ ந வஸீதா ” (நசஸீதா) என்று பிரிந்தால் தரித்திருக்கவொண்ணாத வார்த்தியையுடைய வென்னையு மென்றபடி. “ நஜீவேயம்க்ஷணமபி ” (நஜீவேயம்க்ஷணமபி ) என்னும் தன்னையு மென்னுதல். மறந்தானாகில் வருகைக்குப் பற்றுசேதென்ன ( விசேஷஜ்ஞனித்யாதி ) விசேஷஜ்ஞனாகையாலேயென்றது - ஸ்வவைலக்ஷண்யத்தையு மிவளார்த்தியையுமறியு மவனாகையாலேயென்றபடி. பரப்பனாகையென்றது - “முன்னுலகங்களெல்லாம்படைத்த” என்றத்தைப்பற்ற. வருகைக்குப் பற்றுசேதென்ன ( தன்மன்னுநீளித்யாதி ) (அஸாதாரணமானதன்றிறே) “ நதேரூபம்-பக்தாநாம் ” (நதேரூபம்-பக்தாநாம்) அன்றோ வென்றபடி. விவரணம் (ஆஶ்ரிதரோடித்யாதி) “ஐகரஸ்யம்பற்றுசாகத்தூதுவிடுகிறாள் ” என்று பட்டர் நிர்வாஹமென்று கருத்து.

நிர்வாஹாந்தரம் ( பலவித்யாதி )

அங்கேபுக்கு - திருக்கோளூரிலேபுக்கு. “ தினைத்தனையும்விடாள் ” என்றத்தைப்பற்ற (நெடுங்காலமவனையநுபவித்தென்றது) “ கீழ்த்திருவாய்மொழியில் ” இத்யாதிவாக்யத்திலே - முடியப்போகமாட்டாளென்றருளிச்செய்திருக்க, (புறப்பட்டவள் முடியப்போகமாட்டாதே) இத்யாதிவாக்யத்திலு மிதுதன்னையே யருளிச்செய்கிறது - பிள்ளான்நிர்வாஹத்திலும் பட்டர்நிர்வாஹமே முக்யமென்றுதோற்றுகைக்காக. சம்ஶ்லேஷமுண்டானு லொருதிருவாய்மொழி யருளிச்செய்வர், அதுகாணாமையாலே பட்டர்நிர்வாஹமே யித்திருவாய்மொழிக்கு முக்யமென்னுமிடம் சம்ப்ரதிபந்நம்.

பிள்ளான் நிர்வாஹத்திலே, ஆந்ருசம்ஸ்யம் பற்றுசாகத் தூதுவிட்டாருண்டோவென்ன (ஜீவந்தீமித்யாதி) “ ஜீவந்தீம்மாம்யதாராம ஸம்பாவயதிகீர்த்திமாந் । தத்ததாஹநுமந்வாச்யோவாசாதர்மமவாப்நுஹி ” ( ஜீவந்தீம்மாம்யதாராமஸ்ஸம்பாவயதிகீர்த்திமாந் । தத்ததாஹநுமந்வாச்யோவாசாதர்மமவாப்நுஹி ) இதிஸீதா. இதுக்குபாவம் (பரபரிபவமித்யாதி) இதுக்கு - “கீர்த்திமாந்” என்றதிலேநோக்கு. “ஜீவந்தீம்” என்கிறதுக்குபாவம் ( கடலையித்யாதி ) பிள்ளான்நிர்வாஹத்துக்கு, “ தினைத்தனையும்விடாள் ” என்றதிருத்தாயார் மநோரதமேபலித்தங்கேபுக்கநுபவித்தாளென்றுகருத்து. “ எங்ஙனேபுகுங்கொல் ” என்றத்தைப்பற்ற-பட்டர்நிர்வாஹம்; “செல்லவைத்தனள்” என்றதுக்கு - செல்லவொருப்பட்டாளென்றர்த்தம் விவக்ஷிதம். பட்டர்க்கு ஹ்ருதயம் - முடிகிறபாட்டிலே சம்ஶ்லேஷமுண்டானால், * ஆடியாடியில் முடிவிலே சம்ஶ்லேஷந்தோற்றச்சொல்லி, * அந்தாமத்தன்பிலே யத்தைவிசதீகரித்தாப்போலே, மேலிற்திருவாய்மொழியிலே விசதீகரிப்பர்; அதில்லாமையாலே சம்ஶ்லேஷமில்லையென்று...............................*

# எட்டாந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

பொன்னுலகாளீரோபுவனிமுழுதாளீரோ
நன்னலப்புள்ளினங்காள்வினையாட்டியேனுனிரந்தேன்
முன்னுலகங்களெல்லாம்படைத்தமுகில்வண்ணன்கண்ண
னென்னலங்கொண்டபிரான்றனக்கென்னிலைமையுரைத்தே.

### ஆறாயிரப்படி.

மத்ஸம்ஶ்லேஷைக தாரக போஷக போக்யனாய் மதநீந ஸ்வரூப ரூப விபவைஶ்வர்யனாய்க்கொண் டென்னோடு சம்ஶ்லேஷித்து, விஶ்லேஷிக்கிறு னென்னுடைய சர்வஸ்வத்தையு மபஹரித்துக்கொண் டென்னைத்தோற்பித்துத் தனக்கடிமையாக்கிக்கொண்ட வெம்பெருமான்றன்னைப்பிரிந்து நான் படுகிற வ்யஸநத்தைச் சென்று சொல்லவேணுமென்று புள்ளினங்களைக்குறித்துச் சொல்ல ; அவை பின்னையும் போகாதிருந்தவாறே, “அவன் நம்முடையவபேக்ஷிதஞ்செய்யாதொழியிற்செய்வதென்” என்று போகாதிருந்தனவாகக் கொண்டு ; அவன் பரமகாருணிகனுகையாலு மாஶ்ரிதவத்ஸலனுகையாலும் நம்மபேக்ஷிதஞ் செய்தருளும், ஆதலாலென்னுடைய தசையைச் சொல்லவேணுமென்று சொல்லி; அவற்றின்பக்கலுள்ளப்ரீத்யதிசயத்தாலே, திருநாட்டையும் லீலோபகரணமான வண்டங்களையு மடங்க விவைசெய்கிற வுபகாரத்துக்குக் கைம்மாறுகக்கொடுத்து, பின்னையும் நிரூபித்து, “இவைசெய்கிற மஹோபகாரத்துக்குக் கைம்மாறுகப் போராது” என்று பார்த்து; பரமதயாளுக்களான வுங்களுடைய நிரவதிகதயையாலே, து:கஸாகரநிமக்நையான வென்னுடையதசையைச் சென்று சொல்லவேணுமென்றுப்ரார்த்திக்கிறுள்.*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், தன்னுடைய காரணத்வாதி ஸ்வபாவங்களைக்காட்டி யென்னை வசீகரித்துக்கொண்டவனுக் கென்னுடைய வவஸ்த்தையைச்சொல்லி, அதுக்குப்பரிசிலாக வுபயவிபூதியும் நீங்களிட்டவழக்காம்படி நிர்வஹிக்கவேணுமென்று சிலபுள்ளினங்களைச்சொல்லுகிறுள்.

நன்னலம் - அர்த்தித்தார்க்குக் காரியஞ்செய்கைக்கடியான விலக்ஷணஸ்நேஹாதியுக்தங்களாய். புள்ளினங்காள் - ப்ரவ்ருத்தி ஹேதுவான பக்ஷத்வயாந்வயத்தையுடைய புள்ளினங்காள். வினையாட்டியேன் - பிரிந்து தூதுவிடுகைக் கடியான பாபத்தையுடைய. நான் - நான். இரந்தேன் - அவன்விஷயத்திலாஶ்ரிதர்பண்ணும் ப்ரார்த்தனையை யுங்கள்பக்கலிலே பண்ணினேன். எதுக்காகவென்னில், முன்-ப்ரதமத்திலே. உலகங்கள் - லோகத்தை. எல்லாம் - எல்லாம். படைத்த - ஸ்ருஷ்டித்து. ஸ்ருஷ்டமான லோகத்துக்கு ரக்ஷகமாய், முகில் - காளமேகநிபமான. வண்

ணன் - திருமேனியையுடையனாய். கண்ணன் - ஆஶ்ரிதர்க்கு சுலபனாய். அந்தவாகாரங்களாலே, என் - என்னுடைய. நலம் - விலக்ஷணாகாரங்களையடங்க. கொண்ட - ஸ்வாதீநமாக்கிக்கொண்ட. பிரான்றனக்கு - உபகாரகனுக்கு. என் - என்னுடைய. நிலைமை - அவஸ்தையை. உரைத்து - சொல்லி. அதடியாகச் சேர்ந்திருக்கிறநாங்களிருவரும் பரிசிலாகத் தந்த, பொன் - நித்யஸ்ப்ருஹணீயமான. உலகு-பரமபதத்தையும். ஆளீரோ, புவனி - பூம்யுபலக்ஷிதமான. முழுது - சகல லீலாவிபூதியையும். ஆளீரோ - ஆளுங்கோள்.

பின்பிவ்விபூதித்வயமும் நீங்களிட்ட வழக்கன்றோவென்று கருத்து. இனங்காளென்றது - சங்கபாஹுள்யமும் கார்யோபயுக்தமென்றிருந்தபடி..............*

## ஈடு - முதற்பாட்டு.

சிலபுள்ளினங்களைக்குறித்து, எம்பெருமானுக் கென்தசையையறிவித்துவிபூதித்வயத்தையும் நான்தரநீங்களாளவேணுமென்றிரக்கிறாள்.

(பொன்னுலகாளீரோ) ஈஶ்வரவிபூதியானது விஶ்லேஷதசையிலவனையும் தன்னையும் சேர்த்தார்க்குப் பரிசிலாகக்கண்டதென்றிருக்கிறாள். உபயவிபூதியு மொருமிதுநத்துக்கு சேஷமிறே. அவ்வவஸ்தைபிறந்தால் சொல்லலாமிறே. சர்வேஶ்வரனிருக்க, இவ்விட மராஜகமாய்க்கிடக்கிறதென்றிருக்கிறாள். ப்ரக்ருதிசம்பந்தமற்று ஒருதேசவிசேஷத்திலேபோ யநுபவிக்குமத்தை யிங்கேயிருந்தேகொடுக்கிறாள். ப்ரக்ருதியோடே கொடுப்பாரும், ப்ரக்ருதிசம்பந்தத்தை யறுத்துக்கொடுப்பாருமாயிருக்கிறபடி. ஒருவரையொருவர்பிரிந்து துழாவுகிறசமயத்திலேகொடுக்கையிருவர்க்கு மொக்கும். சேர்க்கைக்காக வுடம்பிழப்பாரும், உடம்போடேகூடிநின்று சேரவிடுவாருமாயாகாதே யிவர்களிருப்பது. ( பொன்னுலகாளீரோ புவனிமுழுதாளீரோ ) உங்கள்விபூதியும் நான்பட்டது படவேணுமோ. அபிமதனைப்பிரிந்து கடகரைத்தேடித்திரிகிறவிவள், கடிப்பிப்பார்க் குபயவிபூதியையும் கொடுக்கிறாளிறே அவனை நினைத்திருந்தகனம். கலந்தபோது தன்னையும்தன்னுடைமையையு மிவளுக்காக்கா, பிரிந்தபோது மாறுவானொருபுல்லியனோடன்றே யிவள்கலந்தது. தன்னஸந்நிதியிலுமிவள் தானிப்படி யுபயவிபூதியையு மிஷ்டவிநியோகார்ஹமாக்கும்படியிறே யவன்தன்னையும் தன்னுடைமையையு மிவளுக்காக்கிவைத்தபடி.. அருளாளப்பெருமா ளெம்பெருமானார் நோவிலே பிள்ளை யுறங்காவில்லிதாசரைக்கொண்டு ஆழ்வான்புக, " ஆழ்வான்பண்ணின நெஞ்சாறலாறுவது ஆளவந்தார் ஸ்ரீபாதத்தேறப்போனாலிறே " என்ற வார்த்தையைநினைப்பது. ( அதாவது-ஆழ்வான் பெருமாள்திருவடிகளிலே யொருவார்த்தை விண்ணப்பம்செய்தாராகி லபிமதஸித்தியாமென்கை. ) ( பொன்னுலகாளீரோ புவனிமுழுதாளீரோ ) ஒருவில்லெருதுகளோபாதி, உபயவிபூதியும்தன்னைச்சேர்ப்பார்க்கென்றிருக்கிறாள். (அதாவது - வில்லெருதுகளை நிரஸிக்கை யவர்களுடைய சம்ஶ்லேஷத்துக்கு

ஹேதுவானாப்போலே, இவை யுபயவிபூதியுமாளுகை யவனுடன்சம்ப்லேஷத்துக்கே ஹேதுவென்றாளென்றபடி. ) ( ஆளீரோ ) ஸ்வத்வமொருவர்பண்ணிக்கொடுக்க வேண்டாதிருக்கிறபடி. "𑌦𑌤𑍍𑌤𑌮𑌸𑍍𑌯𑌾𑌭𑌯𑌂 𑌮𑌯𑌾" (தத்தமஸ்யாபயம்மயா) என்றாரிறே பெருமாள்; அப்படியேயவற்றுக்கும் "தூதுபோக" என்று முகங்காட்டினபோதே கொடுத்தற்றது. அவன்கார்யஞ்செய்கிற இவற்றுக்கவனை யறிவித்துக்கொடுக்கவேண்டாவிறே. இவள்தானு மவன்கார்யமிறே செய்கிறது - இவைதூதுபோகவே தானுளளாம், தானுளளாகவே சவிபூதிகனான வெம்பெருமானுளனும். இனியிவள், தன்படுக்கைப்பற்றிறே கொடுக்கிறதும். (ஆளீரோ) உங்கள்கார்யமே செய்யவொண்ணாது, என்கார்யமும் செய்யவேணும். இவள்கார்யம் செய்கையாவது - இவற்றையாளுகையிறே. "இவள்தானுபயவிபூதியையுங்கொடாநின்றாளாகில், அவன்வந்தால் தானுமவனுமெங்கேயிருப்பது" என்ன; "இக்குருவிகாட்டினவிடத்தே" என்றநந்தாழ்வான்வார்த்தை. ( பொன்னுலகாளீரோ புவனிமுழுதாளீரோ ) கைப்பட்டத்தைக்கொடுத்திறே மற்றொன்றுதேடிக்கொடுப்பது. தனக்காக்கினவடைவே கொடுக்கிறாள். நித்யவிபூதியைக்கொடுத்திறே லீலாவிபூதியைக்கொடுத்தது. "அயர்வறுமமரர்களதிபதி" என்றபின்பிறே "இலனதுடையனிது" என்று - லீலாவிபூதியோகஞ்சொல்லிற்று. இங்கேயிருந்தாலும் ஜ்ஞானம்பிறந்தா லணித்தாய்த்தோற்றுவதவ்விடமிறே, "அக்கரையென்னுமனத்தக்கடலுளழுந்தி யுன்பேரருளா லிக்கரையேறியிளைத்து" என்று - அதிக்கரையாகவும், இதக்கரையாகவும் சொல்லாநின்றார்களிறே. "மாகவைகுந்தங்காண்பதற்கென் மனமேகமெண்ணும்" என்றிறேயிருப்பது. ப்ராப்திதசையிலும் முற்பட்டிருப்ப தவ்விடமேயிறே, ததீயத்வாகாரத்தாலேயொருகாலுத்தேச்யமாமதிறேயிவ்விடம். "𑌨𑍋𑌪𑌜𑌨𑌂 𑌸𑍍𑌮𑌰𑌨𑍍𑌨𑌿𑌦𑌂 𑌶𑌰𑍀𑌰𑌮𑍍" (நோபஜநம்ஸ்மரந்நிதம்ஶரீரம்) என்னாநிற்கச்செய்தேயும், அவனுடைய வைச்வர்யத்திற்குறை யநுபவிக்கவொண்ணாதென்று ததீயத்வாகாரேண வொருகாலுபாதேயப்ரதிபத்தியுண்டித்தனையிறே. இல்லையாகில், புவனிமுழுதாளீரோவென்று - ஆகாராந்தரப்ரதிபத்தியுண்டாகில், கட்டடங்க வுத்தேச்யமாய்த் தோற்றுதிறே. ( பொன்னுலகாளீரோ புவனிமுழுதாளீரோ ) அடிமைக்கடைத்தேற்றலாயிறே யிவ்விடந்தானிருப்பது, அவ்விட மடிமையாலல்லது செல்லாதவிடமாயிறேயிருப்பது. தூதுபோனாரது பரமபதம், அதுடையாரது லீலாவிபூதி. (புவனிமுழுதாளீரோ) உத்தேச்யமான நித்யவிபூதியைக் கொடுத்தவள், த்யாஜ்யமான லீலாவிபூதியைக் கொடுப்பானென்னென்னில்; இவைபண்ணுகிற வுபகாரத்தைநினைத்து, "இன்னதுகொடுப்போம்" என்றறியாமல்கலங்கி. பண்டுகலங்கினாரு மிப்படியே செய்தார்கள், "𑌅𑌪𑌾𑌰𑌾𑌵𑌰𑍍𑌤𑌿𑌨𑌾𑌂 𑌯𑌾𑌚𑌯𑌾𑌚 𑌭𑍂𑌮𑌿𑌪𑍍𑌰𑌦𑌾𑌯𑌿𑌨𑌾𑌂" ( அபாராவர்த்திநாம் யாசயாசபூமிப்ரதாயிநாம் ) என்னுசொன்னார்கள். ப்ரீதியளவுபட்டிருக்

கிலிறே தெளிந்திருப்பது. "ஹிரண்யம்வாஸுவர்ணம்வாரத்நாநிவிவிதாநிவா ।ராஜ்யம்வாத்ரிஷுலோகேஷு நைததர்ஹதிபாஷிதம்" (ஹிரண்யம்வாஸுவர்ணம்வாரத்நாநிவிவிதாநிவா । ராஜ்யம்வாத்ரிஷுலோகேஷு நைததர்ஹதிபாஷிதம்) என்று கலங்கினளிறே. இருவரும்கொடுக்கலாம்படி யொருமிதுநத்துக்கு சேஷமாயிறே யுபயவிபூதியுமிருப்பது.

(நன்னலப்புள்ளினங்காள்) அவனிலு முங்களுக்குண்டான நீர்மையி லேற்றமிருந்தபடியென். இவ்வளவி லாளிட்டழைக்கும்படி கடக்கவிராதே, நீங்கள் முன்னம் கிட்டநின்று முகங்காட்டப் பெறுவதே. உங்கள்படி யிருந்தபடிகண்டேனுக்கு, சர்வஸ்வத்தையு மெனக்குத் தந்து தூதுபோம்படியாயிருந்ததீ. "அவனுக்கு குணங்களிலேற்ற மாஶ்ரயத்தாலே" என்றிருந்தோம், அதுங்கள்பக்கலிலே யாகாதேயென்கிருள். உங்கள் நீர்மை யறியாதே, என்செல்லாமையாலே "அத்தைக்கொள், இத்தைக்கொள்" என்று நலிந்தேனிறே. "குணாஸ்த்வய்யேவஶோபநா:" (குணாஸ்த்வய்யேவஶோபநாஃ) என்னுமவனும் புறம்பாணுங்களைப்பார்க்க. "உங்கள்தரத்துக் கிதோ ரறுகும் தாளிப்பூவுமிறே" என்பராம் பிள்ளையமுதனார். உங்களுக்கு நான் சிலசெய்தேனோ, வெறுமுங்கள் நீர்மையாலே செய்த தத்தனையிறே. பாண்டவர்களுக்குத் தூதுபோன க்ருஷ்ணனையும், ஆளவந்தார்க்குப் பச்சையிட்ட மணக்கால்நம்பியையும்போலே யிருந்ததீ யுங்கள்படி. (நன்னலப்புள்ளினங்காள்) அழகிய நீர்மையையுடைய புள்ளினங்காளென்னுதல், மிக்க ஸ்நேஹத்தையுடைய புள்ளினங்காளென்னுதல். "இருவருமான சேர்த்தியொழிய வேறுமொன்றைத்தரவோ" என்று சிரித்திருந்தன; "ஆர்த்தப்ரஸமயாப்ராப்தாதேவராஜ்யாதயோகுணா: । ஹதஶத்ரும்விஜயிநம்ராமம்பஶ்யாமிஸுஸ்திதம்." (அர்த்ததப்ரசமயாப்ராப்தாதேவராஜ்யாதயோகுணாஃஹதஶத்ரும்விஜயிநம்ராமம்பஶ்யாமிஸுஸ்த்திதம்.) (பெருமாள்விஜயிகளாய்க்கொண்டிருக்கப் பார்த்தவர்களுக்கு தேவராஜ்யாதி நன்மைகள் தன்னடையேவந்ததிறே.) (நன்னலம்) [அஹஞ்சரகுவம்ஶஸ்சேத்யாதி] "நஜீவேயம்க்ஷணமபி" (நஜீவேயம்க்ஷணமபி) என்றிருக்கிற நானும், என்னையொழிய ஜீவியாதபடியிருக்கிற பிள்ளை பரதனும், இருவர்க்கு முஜ்ஜீவநஹேதுவான பிள்ளையும். [வைதேஹ்யா:] [வைதேஹ்யாஃ] இவையெல்லாம் தருமென்கைக்காக. [யுஷ்மத:பரிரக்ஷிதா:] [தர்மதஃபரிரக்ஷிதாஃ] நீ செய்ததுக்கொரு ப்ரத்யுபகாரம்பண்ணலாமோ, வெறுமறவனைகையாலே செய்தாயத்தனை. "உனக்கென்செய்கேன்" என்று காலதத்த்வமுள்ளதனையு முழைக்கும்படியிறே நீசெய்தது. (புள்) இந்நீர்மையிலேற்றமுடைய வுங்களுக்கே கமநசாதநமான பக்ஷபாதமுண்டாகப் பெறுவதே. "பிரிந்தாரைச்சேர்க்கை திர்யக்குக்களின் கார்யம்" என்றிரு

க்கிருள் ராமாவதாரத்தில் வாசனையாலே. (இனங்காள்) “ நகஃஸ்ரிஹூாவ ராயஶ்தி ” (நகஸ்ம்சிந்நாபராத்யதி) என்பாருங்கூடவுண்டாயிருக்கிறபடி. (இனங்காள்) உடலுமுயிருங்கூடக் கிடக்கப் பெறுவதே. ‘ ஃஜு தஜ்ஷ ஜிஷ்ராமி ” ( அக்ரதஸ்தேகமிஷ்யாமி ) என்று முன்னடப்பாருங் கூடவிருக்கப்பெற்றபடி. (இனங்காள்) “ திக்ஷுஸவ்ஹாஸமாநூர்ஜெ ” ( திக்ஷுஸர்வாஸுமார்க்கந்தே ) என்று, எல்லாதிக்கிலும் போகவிடலாம்படி திரள விருக்கிறபடியென்றும். (வினையாட்டியேன்) கைப்புகுந்தவனைக் கைகழியவிட் டுங்கள்காலிலே விழும்படியான பாபத்தைப் பண்ணினேன். உங்களுக்கு குணங்கள் ஸ்வரூபமானுப்போலேயிறே யெனக்கு பாக்யஹாநி ஸ்வரூபமானபடி. (நான்) “ யாநதஃபரிரக்ஷிதாஃ ” ( தர்மதஃபரிரக்ஷிதாஃ ) என்றிருப்பானவன்கிடீர். ஸ்ரீஜநகராஜன் றிருமகளான வேண்டப்பாட்டோடேயாகாதே ! தான்தூதுவிடுகிறதிவள். (நானிரந்தேன்) அத்தலையித்தலையானபடி. (இரந்தேன்) கீழே - அவன்றிருவடிகளிலே நாலுப்ரயோகம் சரணம்புக்கார், இப்போது - ததீயர்பக்கலிலே ப்ரபத்திபண்ணுகிருர். அதுதப்பிலுமிதுதப்பாதிறே, இதுக்கு வேறுவிலக்கடியில்லையே. * ப்ரார்த்தநாமதியிறே-சரணுகதியாகிறது. அவ்யபிசாரியான வுபாயத்தைப்பற்றுகிருள். (இனங்காள்-இரந்தேன்) மிதுநமாயிருப்பார்க் கிரந்தார் வாசி தெரியுமிறே. சரணுகதர்க்குத் தன்னுயிரைக் கொடுக்குமவையே. நன்னலப்புள்ளினங்களன்றியே படுகொலைக்காரர்க்கு மிரங்கவேண்டும்படியிறே யென்னுடையதசை. (நன்னலப்புள்ளினங்காள்-இரந்தேன்) சரண்யதை குறைவற்றிருந்தபடியென்றுன். ( நானிரந்தேன் ) அவனிறே “ ஸுஃரீவஂஶரணஂமதஃ ” ( ஸுக்ரீவம்ஶரணம் கதஃ ) என்று – திர்யக்கின்காலிலே முற்படவிழுந்தான், பின்பிறேயிவள் “ தயாகுருதயாஂமயி ” (ததாகுருதயாம்மயி) என்றது. ( வினையாட்டியேன் நானிரந்தேன் ) எல்லாங்கொடுத்தாலு மவற்றுக்கொன்றும்செய்ததாகத்தோற்றுதே பல்காட்டுகிருள். அவர்கள்பண்ணுகிற வுபகாரமளவுபட்டிருக்கிலிறே சத்ருஶமாக வொன்று தேடிக்கொடுக்கலாவது. எல்லாங்கொடுத்தாலும், “ க்ருத்ஸ்நாம்வாப்ருதிவீம்தத்யாந்நதத்துல்யம்கதஞ்சந ” (க்ருத்ஸ்நாம்வாப்ருதிவீம்தத்யாந்நதத்துல்யம்கதஞ்சந) என்று, “ செய்ததுபோராது ” என்னுமிதுவேயிறே நெஞ்சில் பட்டுக்கிடப்பது. “ தஸ்மைநத்ருஹ்யேத் ” (தஸ்மைநத்ருஹ்யேத்) என்னுமளவில்நிற்குமதன்றே, “ க்ருதமஸ்யஜாநந். ” (க்ருதமஸ்யஜாநந்.)

அங்குநின்றும் மீண்டாலிறே யதுதான் வேண்டுவது ; ( அவன் செய்தவுபகாரத்திளின்றும்மீண்டாலிறே த்ரோஹநிஷேதம்சொல்லவேண்டுவது. ) இதெல்லாம் சொல்லவேணுமோ, அவன்றன் வரும் ஸ்வபாவனுகிலன்றே நாங்களறிவிப்ப தென்னில் ; என் பாக்யஹாநியாலே

யிழந்தேனத்தனைபோக்கி, அவன்படியைப்பார்த்தா லிழக்கவேணுமோ வென்கிருள் (முன்னுலகமித்யாதி) அழிந்தவற்றையடியேபிடித்துண்டாக்குமவன்கிடீர். இத்தலையுமழிந்திறே கிடக்கிறது. ஆர்பிரிவுக்குச்சிளைத்துத்தளர்ந்து தூதுவிட, இவற்றையுண்டாக்கிற்று; வெறும்தன்க்ருபையாலே செய்தானித்தனையிறே. பண்டிவனுக் கார்த்தரக்ஷணம்பண்ணுகைக்குத் தூதுவிடவேண்டாகிடீர். (முன்னுலகங்களெல்லாம்படைத்த முகில்வண்ணன்) ஜலஸ்த்தலவிபாகம்பாராதே "பஹுஸ்யாம்" (பஹுஸ்யாம்) என்கிற சங்கல்பஜ்ஞாநத்தாலே யேற்கவேயிவற்றையுண்டாக்கினவன். (முகில்வண்ணன்) தரமிட்டாலும் விடவொண்ணுதவடிவு. தன்பேறுகக்கொடுக்கு மவனென்றுமாம். (முகில்வண்ணன்கண்ணன்) ஜகத்காரணத்வத்துக்கு மவதாரத்துக்குமடியான ஔதார்யாதிகுணங்களைச்சொல்லுகிறது. அன்றிக்கே, அப்ராக்ருததிவ்யஸம்ஸ்த்தாநத்தோடேவந் தவதரித்தபடியைச்சொல்லிற்றுகவுமாம். (என்னலங்கொண்டபிரான்) இதொருபழங்கிணறு கண்வாங்குகிறதென், என்னை சர்வஸ்வாபஹாரம்பண்ணின வுபகாரகன். உங்கள் காலிலேவிழும்படிபண்ணினவன். இப்போதகலவிருந்ததொழிய, பண்டுசெய்தவையெல்லாம் சாலநன்றுகிடீர். எங்களோடு கலப்பதுக்குமுன்பு போரநீர்மையுடையான், இப்போது வடிவழகேகிடீருள்ளது. (முகில்வண்ணன்-என்னலங்கொண்ட) அம்மேகம்வர்ஷிக்குமிடமாகாதே, முகக்குமிடமானேன். (தனக்கென்னிலைமை) அவன்வருவானுனும், நாங்கள்சொல்லுவதேதென்னில்; என்னிலைமையென்று - தன்வடிவைக்காட்டுகிருள். "ஏஹிபஶ்யஶரீராணி" (ஏஹிபஶ்யஶரீராணி) என்னுமாபோலே. என்னைக்கண்டநீங்களே பாசுரமிட்டுச்சொல்லுமத்தனை. ஜகத்காரணத்வம், அவதாரம், தன்பக்கல் பண்ணினவிசேஷகடாக்ஷம், இவையெல்லாம் கண்ணழிவறச்சொன்னுள், அவன்குணங்களிலே யவகாஹித்த தன்படிதன்னுலும் பேசப்போகிறதில்லை; * தனக்குந்தன்றன்மை யறிவரியானைப்போலே. (உரைத்து) தனக்குங்கூட நிலமல்லாததன்படியை யிவைபாசுரமிட்டுச்சொல்ல வற்றுகக்கொண்டிருக்கிருள். கரைமேலே நிற்கையாலே யவற்றுக்குச்சொல்லலாமிறே. "உரைத்து, கொண்டுவாருங்கோள்" என்றுதொழிவானென்னென்னில்; "ஈஶ்வரக்ருத்யம்நமக்குபரமோ" என்றிருக்கையாலே. இவனுக்குப்பணிகுறையை யறிவிக்கையிறே, மேலுள்ளதெல்லா மவன்பணியிறே. (என்னிலைமையுரைத்து - பொன்னுலகாளீரோ) ஆர்த்தநாதம் கேளாதபடி பண்ணிஜீவிக்கப்பாருங்கோள். சக்ரவர்த்தி பெருமாளை முடிசூட்டப்பாரித்தபோது, ருஷிகள் ராக்ஷஸராலே நோவுபடுகையாலே ராஜ்யம் திருவுள்ளத்தில் பொருந்தாமை புறப்பட்டுப்போனரிறே; அப்படியே ஸ்த்ரீவதமு மார்த்த த்வநியுங்கேட்டால் இவை யுபயவிபூதியையு மாளமாட்டாதென்றிருக்கிருள் ... .........*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (பொன்னுலகித்யாதி) "புள்ளினங்காள், பிரான்றனக்கென் னிலைமையுரைத்து-பொன்னுலகாளீரோ" என்கிறபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (சிலவித்யாதி)

ஈஸ்வரனதானவிபூதியைக்கொடுக்கைக் கிவளுக்கு ப்ராப்தியுண்டோவென் ன; த்ரேதாபரிஹரிக்கிறுர். அதில் முந்தினது (ஈஸ்வரவிபூதியானதித்யாதி) இரண் டாவது (உபயவிபூதியுமித்யாதி) மூன்றும்பரிஹாரம் - (அபிமதனைப்பிரிந்து) இத் யாதிமேல்வாக்யத்திலேகண்டுகொள்வது. பரிசில் - உபஹாரம். "[Grantha]" (அஸ்யாமமசஸேஷம்ஹிவிபூதிருபயாத்மிகா) என்று மிதுநசேஷமானுல் பிராட்டிக்குக்கொடுக்கலாமொழிய விவருக்குக்கொடுக்க லாமோவென்ன (அவ்வவஸ்த்தையித்யாதி) அவ்வவஸ்த்தை-பிராட்டிதசை. "ஆளீ ரோ" என்றதுக்குபாவம் (சர்வேஸ்வரனித்யாதி) "பொன்னுலகு" என்கிறபதத்து க்குவாஸநை (ப்ரக்ருதிசம்பந்தமித்யாதி) இங்கேயிருந்தேயென்றது - இங்கேயிருக் கச்செய்தேயுமென்றபடி. இப்படி யிவளைப்போலே பெரியவுடையார்க்கும் பெரு மாள்கொடுத்தாரொன்று விவக்ஷித்து, அவரிலிவளுக்கு வாசியருளிச்செய்கிறுராதல்; கீழ்வாக்யத்தால் பலிதமாதல் (ப்ரக்ருதியோடேயித்யாதி) ப்ரக்ருதியோடேகொடு ப்பாருமென்றது-ஆழ்வாரை. ப்ரக்ருதிசம்பந்தத்தை யறுத்துக்கொடுப்பாருமென்ற து - "[Grantha]" (அபராவர்த்திநாம்யாச) என்றுகொடுத்தபெரு மானை. கொடுக்கிறதில் வாசியுண்டானவோபாதி, கொடுக்கும் காலத்துக்கும்வாசி யுண்டோவென்ன (ஒருவனையித்யாதி) காலத்துக்குவாசியில்லையென்றபடி. இத்தா ல் - பெருமாளோடே சாம்யமுண்டென்றுகருத்து. இவர்களிப்படிகொடுக்கைக்கு ஹேதுவேதென்ன (சேர்க்கைக்காகவித்யாதி) துழாவுகிற - தடுமாறுகிற. இவர்கள்- பக்ஷிகளும், பெரியவுடையாரும். இத்தால்-பெரியவுடையார் சேர்க்கைக்காகவுடம் பை யிழக்கையாலே யத்தையறுத்துக்கொடுத்தார், இவையுடம்போடேநின்று சேர விடுகையாலே யத்தோடேகொடுக்கிறுளென்றபடி. "ஆளீரோ" என்கிறஸ்வரத்து க்குபாவம் (உங்கள்விபூதியுமித்யாதி) ஈஸ்வரவிபூதியைக்கொடுக்கைக் கிவளுக்கு ப்ராப்தியேதென்கிற சங்கைக்கு மூன்றும்பரிஹாரம் (அபிமதனையித்யாதி) நினைத் திருந்தகனமாவது-கலந்தபோதுதன்னையும் தன்னுடைமையையும்கொடுத் தத்தைநி னைத்தகனமென்றபடி. "[Grantha]" (விவாஹகா லேரதிஸம்ப்ரயோகே) என்று போகதசையிற்சொன்னத்தைக்கொண்டு கொடுக்க லாமோவென்ன (கலந்தபோதித்யாதி) புல்லியன் - க்ஷுத்ரன். ஆனுலுமவன் ஸந்நி திவேண்டாவோவென்ன (தன்னஸந்நிதியிலுமித்யாதி) தன்னையும் தன்னுடைமை யையு மிவரிட்டவழக்காக்கி யிவர்க்கு பரதந்த்ரனுயிருக்கையாலே, இவர்க்குக்கொ டுக்கலாமென்னுமத்தை ஐதிஹ்யமுகத்தாலே தர்ஸிப்பிக்கிறுராதல்; இப்ப்ரஸங்கத் திலே, ஆசார்யனுக்கு மோக்ஷப்ரதத்வ முண்டென்கைக் கைதிஹ்யமாதல் ( அருளா ளப்பெருமாளித்யாதி ) ஆழ்வான்பண்ணின நெஞ்சாறலென்றது - ஆழ்வான் பரம பதப்ரதாந சக்தராயிருக்க, இவ்வவஸ்த்தையைக் கண்டுகொண்டிருந்தத்தால்வந்த நெஞ்சாறலென்றபடி. நெஞ்சாறல் - மநோதுःகம். ஸ்வாசார்யரான வெம்பெருமா னாரிங்கே யெழுந்தருளியிருக்கையாலே, (ஆளவந்தார்ஸ்ரீபாதத்தேறப்போனுலிறே' என்றது. "ஈஸ்வரவிபூதியானது" இத்யாதிமுந்தின பரிஹாரவாக்யவிவரணம் (கு ருவில்லெருதித்யாதி) அதாவது-வில்லுமெருதும் பிராட்டிக்கும் நப்பின்னைப்பிராட்

டிக்கும் கந்யாசுல்கமானுப்போலே, விபூதித்வயமும் சேர்ப்பார்க்கு சுல்கமென்றிருக்கிருளென்றபடி. "ஆளீரோ" என்கைக்கு, நீயெங்களுக்குத் தந்தாயோவென்ன (ஸ்வத்வமித்யாதி) இது - "ஆளீரோ" என்றபூதநிர்த்தேசக்துக்குபாவம். அதுக்கு ஹேதுவேதென்ன (தத்தமஸ்யேத்யாதி) அதாவது - "𑌰𑌾𑌘𑌵𑌂 𑌶𑌰𑌣𑌂 𑌗𑌤𑌃" (ராகவம்ஶரணம்கதஃ) என்றபோதே பெருமாளபயங்கொடுத்தாரொன்றபடி. "ஒரு மிதுநத்துக்குசேஷம்" என்றத்விதீயபரிஹாரத்திலே, அவனுக்கும் சேஷமாகையாலே யவனுக்கறிவியாதே கொடுக்கலாமோவென்ன (அவன்கார்யமித்யாதி) ஸ்வார்த்தமாகவன்ரே தூதுபோகச்சொல்லுகிறது, அவன்கார்யமோவிதுவென்ன (இவள் தானுமித்யாதி) அதெப்படியென்ன (இவைதூதித்யாதி) (தானுளளாகவே) இத்யாதிக்கு சம்வாதமாக - "𑌮𑌯𑌿 𑌜𑍀𑌵𑌿𑌤𑌮𑌾𑌯𑌤𑍍𑌤𑌂 𑌰𑌾𑌘𑌵𑌸𑍍𑌯 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃" (மயிஜீவிதமாயத்தம்ராகவஸ்யமஹாத்மநஃ) இத்யாத்யநுஸந்தேயம். "அபிமதனைப்பிரிந்து" இத்யாதி த்ருதீயபரிஹாரவிவரணமாதல்; ஏதத்வாக்யோபஜீவநேந அவனுக்கறிவியாதே கொடுக்கலாமோவென்கிற சங்கைக்கு பரிஹாராந்தரமாதல் (இனியிவள் தன்படுக்கையித்யாதி) "என்றிவர் மூவராளுமுலகமும்மூன்றே" என்றத்தைப்பற்ற (படுக்கைப்பற்றென்றது) "உங்கள்விபூதியும்" இத்யாதிவாக்யத்தால் பலிதமாதல், "ஆளீர்" என்கிறவிதுக்கு ஹார்த்தபாவமாதல் (உங்கள்கார்யமித்யாதி)

முந்தற, தானிருந்தலீலாவிபூதியைக்கொடாதே, முற்பட "பொன்னுலகாளீரோ"என்பானென்னென்ன (கைப்பட்டத்தையித்யாதி) இந்தஹஸ்தகதத்வத்தை த்ரோதாகாட்டுகிருர். முந்தினது (தனக்காக்கினவித்யாதி) ஆக்கினவடைவேதென்ன (நித்யவிபூதியையித்யாதி) இதுக்கு சூசகசப்தம் (அயர்வறுமித்யாதி) இரண்டாம் ப்ரகாரம் (இங்கேயிருந்தாலுமித்யாதி) அப்படி யவ்விடமணித்தாய்த்தோற்றிற்ரேவென்ன (அக்கரையென்னுமித்யாதி) சம்சாரமென்கிற வநர்த்தாவஹமான சமுத்ரத்துக்குள்ளே யழுந்திதறைப்பட்டு, உன்னுடையநிரவதிகக்ருபையாலே பரமபதமாகிற விக்கரையிலேயேறி ப்ராப்திகிடையாமையாலே யிளைத்திருந்தேனித்யர்த்தஃ. பெரியாழ்வார்திருமொழி. அப்படி யணித்தாய்த்தோற்றுகைக்கு ஹேதுவேதென்ன (மாகவைகுந்தமித்யாதி) அதாவது-ப்ராப்யத்வரையாலே யெப்போதுமவ்விடத்தையே நினைத்துக்கொண்டிருக்கையாலே யதணித்தாய்த்தோற்றுமென்றபடி.மூன்ரும் ப்ரகாரம் (ப்ராப்திதசையிலுமித்யாதி) ப்ராப்திதசையிலிவ்விடமுத்தேஶ்யமன்ரேவென்ன (ததீயத்வாகாரத்தாலேயித்யாதி) "ஒருகால்" என்கிறதென், சர்வதா உத்தேஶ்யமானுலோவெளன (நோபஜநமித்யாதி) "𑌤𑌦𑍀𑌯𑌤𑍍𑌵𑌾𑌕𑌾𑌰𑍇𑌣𑍋𑌦𑍍𑌦𑍇𑌶𑍍𑌯𑌂" (ததியத்வாகாரேணோத்தேஶ்யம்) என்கிறதென், வஸ்துதஃ உத்தேஶ்யமென்ருலோவென்ன (இல்லையாகிலித்யாதி) கட்டடங்கவென்றது - "முழுது" என்றத்தைப்பற்றி. ஆக, இப்படி ப்ரகாரத்ரயத்தாலும் ஹஸ்தகதமானத்தை முந்தறக் கொடுக்கிருளென்ருெரு பரிஹாரமருளிச்செய்து, பரிஹாராநதரம் (அடிமைக்கித்யாதி) அடைத்தேற்றல் - மேட்டுமடையும், விரோதியும், ஆகந்துகமும். முந்தற நித்யவிபூதியைக்கொடுப்பானென்னென்கிற சங்கைக்கு த்ருதீயபரிஹாரம் (தூதுபோனாரித்யாதி) அதாவது - ப்ரதாநத்தைக்கொடுத்தா லப்ரதாநம் தன்னடையேததீநமாமென்றபடி. அன்றிக்கே, (தனக்காக்கினவடைவே) இத்யாதிவாக்யந்தொடங்கி, (தூதுபோனாது பரமபதம்) இத்யாதிவாக்யத்தோடே - அஞ்சுபரிஹாரமாதல். இப்படி கலங்கிக்கொடுத்தபேருண்டோவென்ன; உதாஹரணத்வயம் (பண்டித்யாதி) இப்படி கலங்குகைக்கு ஹேதுவேதென்ன (ப்ரீதியித்யாதி) "𑌤𑍍𑌰𑌿𑌷𑍁 𑌲𑍋𑌕𑍇𑌷𑍁 𑌰𑌾𑌜𑍍𑌯𑌂" (த்ரிஷுலோகேஷு - ராஜ்யம்) என்றதிலே - ஹிரண்

யாதிக ளந்தர்ப்பூதமாயிருக்க, பிரித்துச்சொன்னது - கலக்கத்தின்கார்யமென்றப டி. (அபராவர்த்திநாமிதி) "யாமதியஜ ஶீலா நாஶாஹிதாஜெஸ்யாமதி ஷ வராவதிநா௦யாவயாவஷஞிவஷாயிநாஃ ஶயாகூ௦ஊஶநஜாதொ தா மஜஹொகாநநதஶாஹ" (யாகதிர்யஜ்ஞஶீலாநா மாஹிதாக்நேஶ்சயாகதிஃ। அபராவர்த்திநாம்யாசயாசபூமிப்ரதாயிநாம்। மயாத்வம்ஸமநுஜ்ஞாதோகச்சலோ காநநுத்தமாந்) இதிஜடாயுஷம்ப்ரதிராமஃ. "ஹிரணு௦வாஸவணு௦வாஶ நாநிவிவியாநிவா। ராஜு௦வாதிஷுலொகெஷுதெநதஷஹஹுதிஹ ஷிதஃ" (ஹிரண்யம்வாஸுவர்ணம்வாரத்நாநிவிவிதாநிவா। ராஜ்யம்வாத்ரிஷு லோகேஷுநைததர்ஹதிபாஷிதம்) இதிராவணவதாநந்தரம் ராமவிஜயம்விஜ்ஞாப் யஸ்த்திதம் ஹநுமந்தம்ப்ரதிஸீதா. "திஷுலொகெஷு-ராஜு௦வா" (த்ரி ஷுலோகேஷு-ராஜ்யம்வா) என்று - த்ரைலோக்யத்தையும் கொடுக்கைக்கு, இவ ளுக்கு ப்ராப்தியுண்டோவென்ன (இருவருமித்யாதி) இருவருமென்று - சக்ரவர்த்தி திருமகனும், ஸ்ரீஜநகராஜன்திருமகளும்.

"நலம்" என்றதுக்குநாலர்த்தம் - க்ருபையாதல், ஔதார்யமாதல், குணஸ முதாயமாதல், ஸ்நேஹமாதல். க்ருபாபக்ஷத்திலே, "நல்" என்கிறபதத்தாலே - ஈ ஶ்வரக்ருபையை வ்யாவர்த்திக்கிறதென்கிறார் (அவனிலித்யாதி) அவன்க்ருபையை ப்பற்ற வெங்கள்க்ருபைக்கேற்றமேதென்ன (இவ்வளவிலித்யாதி) ஆளிட்டழைக்கு ம்படியென்றது - இளையபெருமாளையிட்டு மஹாராஜனை யழைப்பித்தாப்போலே யழைப்பிக்கும்படி யிராதேயென்றபடி. ஔதார்யபக்ஷத்தை யருளிச்செய்கிறார் (உங்கள்படியித்யாதி) குணஸமுதாயபக்ஷத்திலே, "நல்" என்று-ஈஶ்வரகுணத்தை யும் திருவடிகுணத்தையும் வ்யாவர்த்திக்கிறதென்கிறார் (அவனுக்குகுணங்களிலித் யாதியாலும், குணஸ்த்வய்யேவேத்யாதியாலும்) "தெஜஃக்ஷமாயுதிஶ்ஸ்தைர்யம் விநீதத்வம்நய௦ஶயஃ। ஷதெதவாநெஷவஹொமாணாஸ்ஷேயு வமொஹநாஃ" (தேஜஃக்ஷமாத்யுதிஸ்ஸ்தைர்யம் விநீதத்வம்நஸம்ஶயஃ। ஏதே சாங்யேசபஹவோகுணாஸ்த்வய்யேவஶோபநாஃ) இதிராவணவதாநந்தரம்மாருதிம் ப்ரதிஸீதா. ஆஶ்ரயத்தாலேயென்றது - ஈஶ்வரனுஶ்ரயமாகையாலே யென்றபடி. க்ருபாபரமான முந்தினவர்த்தவிவரணம் (உங்கள்நீர்மையித்யாதி) "உபயவிபூதி யையுமாளீர்" என்கிறது நல்லதன்றே, நலிவோவென்ன (உங்கள்தரத்துக்கித்யா தி) அறுகு - அறுகம்புல்லு. தாளிப்பூ - நீத்தாளிப்பூ. ஏதத்விவரணம் (உங்களுக்கி த்யாதி) ஸ்நேஹபக்ஷத்தை யருளிச்செய்கிறார் (பாண்டவர்களுக்கித்யாதி) "அயமஸ்மி" (அயமஸ்மி) என்று பாண்டவர்களுக்குத்தூதுபோனது ஸ்நேஹகார்யமி றே. க்ருபாஸ்நேஹபக்ஷங்களை விவரிக்கிறார் (அழகியவித்யாதிவாக்யத்வயத்தாலே) ஸ்நேஹபக்ஷத்தில், "நன்னலம்" என்றபதத்துக்கவதாரிகை (இருவருமானவித்யா தி) அப்படி யிருவருமானசேர்த்தியே யுத்தேஶ்யமாய், "வேறொன்றுவேண்டா" என்று சொன்னபேருண்டோவென்ன (அர்த்ததஶ்சேத்யாதி) "அுதஸ்ஶயா ஷாஹெவராஜுாஷயொமாணாஃ। ஹதஶதுஷுவிஜயிந௦ராம௦ வ ஶுாமிஸஷிதஃ" (அர்த்ததஶ்சமயாப்ராப்தாதேவராஜ்யாதயோகுணாஃ। ஹத ஶத்ரும்விஜயிநம்ராமம்பஶ்யாமிஸுஸ்த்திதம்) இதிஸீதாம்ப்ரதிமாருதிஃ. க்ருபா பக்ஷத்திலே, இப்படி ஶ்லாகித்தபேருண்டோவென்ன (அஹம்சேத்யாதி) "அஹ௦ெ

[illegible] ( அஹம்சரகுவம்ஶஸ்சலக்ஷ்மணஸ்சமஹாபல| வைதேஹ்யா தர்ஶநோநாத்யதர்மதஃபரிரக்ஷிதாஃ ) இதியுத்தகாண்டே ஹநுமந்தம் ப்ரதிராமஃ இதுக்கர்த்தம் (ரஜீவேயமித்யாதி) ரகுவம்ஶஸ்ச என்றது-பரதாழ்வானை. ( இவையெல்லாம் தகுமென்றது ) இவளுண்டாகில் தாங்களுண்டாய் இல்லையாகி லில்லாதபடியான வைலக்ஷண்யத்தை யுடையவளென்றுதோற்றுகிறது-வைதேஹ்யாஃ என்கையாலே யென்றபடி. அறவன்-தார்மிகன். உழைக்கும்படி.-தடுமாறும்படி. இஶ்ஶ்லோகத்தில் " [illegible] " (தர்மதஃபரிரக்ஷிதாஃ) என்றதுவேண்டுவது. "புள்" என்றதுக்குபாவம் (இந்நீர்மையிலித்யாதி) வார்த்தைசொல்லமாட்டாததிர்யக்குக்கள் சேர்க்கக்கூடுமோவென்ன (பிரிந்தாரையித்யாதி) "இனம்" என்று - மிதுநமென்னுதல், சமூஹமென்னுதல். மிதுநமென்றபக்ஷத்திலே - தனக்குபுருஷகாரமுண்டென்று பாவமாதல், தன்னைப்போலே விஶ்லேஷித்திருக்கையன்றிக்கே பரஸ்பரம் சம்ஶ்லேஷித்திருக்கப்பெறுவதே யென்று பாவமாதல். இந்தபாவத்வயத்தையு மருளிச்செய்கிறார் (நகஶ்சிதித்யாதிவாக்யத்வயத்தாலே) விவரணம் (அக்ரத இத்யாதி) " [illegible] " (பாபாநாம்வாஶுபாநாம் வா வதார்ஹாணாம்ப்லவங்கம | கார்யம்கருணமார்யேணநகஶ்சிந்நாபராத்யதி) இதியுத்தகாண்டே ஹநுமந்தம் ப்ரதிஸீதா. ' [illegible] ( யதித்வம் ப்ரஸ்த்திதோதுர்க்கம் வநமத்யைவராகவ | அக்ரதஸ்தேகமிஷ்யாமிம்ருத்நந்திகுஶகண்டகாந் ) இத்யயோத்யாகாண்டே ராமம்ப்ரஸீதா. சமூஹபக்ஷத்தையருளிச்செய்கிறார் (திக்ஷுஸர்வாஸ்வித்யாதி) "[illegible] " ( யாம்கபீநாம்ஸஹஸ்ராணிஸுபஹூந்யயுதாநிச | திக்ஷுஸர்வாஸுமார்க்கந்தேஸேயமாஸாதிதாமயா ) இதி ஸுந்தரகாண்டே ஹநுமாந்.

" இரந்தேன் " என்றத்தைக்கடாக்ஷித்துபாவம் ( கைப்பு குந்தவனையித்யாதி ) "நன்னலம்" என்றத்தைக்கடாக்ஷித்துபாவம் ( உங்களுக்கித்யாதி ) " நான் " என்றதுக்கு வ்யாவர்த்யம் ( தர்மதஇத்யாதி ) " நான் " என்று - தன்னைப்போரப்பொலிய வபிமாநிக்கிறது ஸ்ரீஜநகராஜன்திருமகளான பெருமையை நினைத்தன்றோவென்று வ்யாக்யாதாவினீடுபாடு (ஸ்ரீஜநகராஜனித்யாதி) " [illegible] " ( தர்மதஃபரிரக்ஷிதாஃ ) இத்யாதிவாக்யவிவரணம் ( அத்தலையித்யாதி ) " இரந்தேன் " என்றதுக்குஸ்வாபதேஶம் (கீழேயித்யாதி) அத்தைப்பற்ற விதுக்கு வாசியேதென்ன ( அதுதப்பிலுமித்யாதி ) " [illegible] " (ஸித்திர்ப்பவதிவாநேதிஸம்ஶயோச்யுதஸேவிநாம் | நஸம்ஶயோத்ரதத்பக்தபரிசர்யாரதாத்மநாம்) இத்யாத்யநுஸந்தேயம். தப்பாமைக்குஹேதுவேதென்ன ( இதுக்கித்யாதி ) அதாவது - பகவத்விஷயத்துக்கு ஸ்வாதந்த்ர்யமாகிற விலக்கடியுண்டு, ததியவிஷயத்துக்கதில்லையென்றபடி. விலக்கடி-ப்ரதிபந்தகம். "இரந்தேன்" என்றால்-ப்ரபத்திவாசகமாமோவென்ன ( ப்ரார்த்தநாமதியித்யாதி ) " [illegible]

[illegible] ( அஹமஸ்ம்யபராதாநாமாலயோகிஞ்சநோகதி: । த்வமேவோபாயபூதோமேபவேதிப்ரார்த்தநாமதி:। ஸரணாகதிரித்யுக்தாஸாதேவேஸ்மிந்ப்ரயுஜ்யதாம் ) இதி பகவச்சாஸ்த்ரே. பக்த்யாதிகளைவிட்டு ப்ரபத்தியிலேயிழிகைக்கடி - ப்ரபத்தியமோகமாயிருக்கையாலே யென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் ( அவ்யபிசாரியானவித்யாதி ) “இனங்காள்” என்று - மிதுநத்தை சம்போதித்து, “இரங்கேன்” என்கிறவளுடைய ஹார்த்தபாவம் (மிதுநமாயித்யாதி) “தெரியும்” என்கைக்கு நியாமகமேதென்ன ( ஸரணாகதர்க்கித்யாதி ) இவ்விடத்திலே - “[illegible]” ( ஸஹிதம்ப்ரதிஜக்ராஹபார்யாஹர்த்தாரமாகதம் । கபோதோவாநரஸ்ரேஷ்ட்டகிம்புநர்மத்விதோஜந: ) என்றதுவும், “[illegible]” ( ஸ்ரூயதேஹிகபோதேநஸத்ருஸ்ஸரணமாகத: । அர்ச்சிதஸ்சயதாந்யாயம்ஸ்வைஸ்சமாம்ஸைர்நிமந்த்ரித: ) என்றதுவுமநுஸந்தேயம். “நன்னலப்புள்ளினங்காள் இரங்கேன்” என்னவமைந்திருக்க, “வினையாட்டியேன்” என்று - தன் தைந்யத்தைச்சொல்லுகிறவளுடையஹார்த்தபாவம் (நன்னலப்புள்ளித்யாதி, இவள் ப்ரபத்திபண்ணுகைக்கு, இவர்கள் தான்ப்ரபத்தவ்யரோவென்ன (ஸரண்யதையித்யாதி) (ஸரண்யதைகுறைவற்றிருந்தபடியென்றது) “நலம்” என்று - வாத்ஸல்யாதிகளையும், “புள்” என்றசிறகாலே - ஜ்ஞாநாதிகளையும், “இனம்” என்று - புருஷகாரத்தையும் நினைத்து. “இனங்காள்” என்று - * ஸ்ரீமத்பதார்த்தத்தையும், “நன்னலப்புள்” என்று - * நாராயணபதார்த்தத்தையும், “இரங்கேன்” என்று - “[illegible]” (ஸரணம், ப்ரபத்யே) என்றபதத்வயார்த்தத்தையும், “நான்” என்று - உத்தமனாலே யாக்ஷிப்தனான வதிகாரியையும் சொல்லுகிறது. “அத்தலை யித்தலையானபடி” என்றதின்விவரணம் ( அவனிறேயித்யாதி ) “[illegible]” ( பிதாயஸ்யபுராஹ்யாஸீச்சரண்யோதர்மவத்ஸல: । தஸ்யபுத்ரஸ்ஸரண்யஸ்ய ஸுக்ரீவம்ஸரணம்கத: ) இத்யாதி கிஷ்கிந்தாகாண்டே. “[illegible]” ( யதாதம்புருஷவ்யாக்ரம் காத்ரைஸ்ஸோகாபிகர்ஸிதை: । ஸம்ஸ்ப்ருஸேயம்ஸகாமாஹம்ததாகுருதயாம்மயி ) இதி ஸுந்தரகாண்டே ஹநுமந்தம்ப்ரதிஸீதா. “பொன்னுலகாளீரோபுவனிமுழுதாளீரோ” என்றவநந்தரம், “வினையாட்டியேன்” என்று - தன்தைந்யத்தைச் சொல்லுகையாலே பலிதமானதோரர்த்தவிசேஷம் ( எல்லாங்கொடுத்தாலுமித்யாதி ) பல்காட்டுகிறதென், ஸத்ருஸப்ரத்யுபகாரம்பண்ணுகிறதுக்கென்னென்ன (அவர்களித்யாதி) இவ்விடத்திலே - “[illegible]” (ப்ரஹ்மவித்யாப்ரதாநஸ்யதேவைரபிநஸக்யதே।ப்ரதிப்ரதாநமதவாதத்யாச்சக்திதஆதராத்) என்றதநுசந்தேயம். இத்தால்-அவர்கள்பக்கலிவளுக்குண்டான க்ருதஜ்ஞதைப்ரகாஸிக்கிறதென்னுமத்தை ப்ரமாணபூர்வகமாக வருளிச்செய்கிறார் ( எல்லாங்கொடுத்தாலுமி

த்யாதி) "[illegible]" (யோதத்யாத்பகவத்ஜ்ஞாநம்குர்யாத்தர்மோபதேசநம் । க்ருத்ஸ்நாம்வாப்ருதிவீம்தத்யாந்நதத்துல்யம்கதஞ்சந.) இத்தால்பலிதம் (தஸ்மைநத்ருஹ்யேதித்யாதி) ஆசார்யத்ரோஹாபாவமேபோராது, உபகாரஸ்ம்ருதியும் வேணுமென்றபடி. "[illegible]" (யஸ்மாத்தர்மாநாசிநோதிஸ ஆசார்யஸ்தஸ்மைநத்ருஹ்யேத்கதாசநஸஹிதவித்யாதஸ்தம்ஜநயதிதச்ச்ரேஷ்ட்டம்ஜந்ம) இத்யாத்யாபஸ்தம்பதர்மே. "[illegible]" (யஆஸ்த்ருணத்யவிததேநகர்ணவதுஃகம்குர்வந்கம்ருதம் ஸம்ப்ரயச்சந் । தம்மந்யேதஃபிதரம்மாதரஞ்சதஸ்மைநத்ருஹ்யேத்க்ருதமஸ்யஜாநந்) இத்யுத்யோகபர்வணி த்ருதராஷ்ட்ரம் ப்ரதிஸநத்ஸுஜாதஃ.

"முன்னுலகங்களெல்லாம்" என்றதுக்கவதாரிகை (அங்குநின்றுமித்யாதி) மீண்டாலிறேயென்றது - போனகார்யம்செய்து நாங்களங்குநின்றும் மீண்டாலிறேயென்றபடி. "அவன்படியைப்பார்த்தால்" என்கைக்கு, அவன்படியேதென்ன (அழிந்தவற்றையித்யாதி) "உலகம்" என்றதுக்குபாவம் (ஆர்பிரிவுக்கித்யாதி) "முன்" என்றதுக்குபாவம் (பண்டிவனுக்கித்யாதி) "எல்லாம்" என்றதுக்குபாவம் (ஜலஸ்த்தலேத்யாதி) "வண்ணம்" என்றதுக்கு - வடிவாகவிவக்ஷித்தர்த்தம் (தரமிட்டாலுமித்யாதி) தரமிட்டாலுமென்றது - தாரதம்யம்பமிட்டுரக்ஷித்தாலுமென்றபடி. வண்ணமென்று - ஸ்வபாவமாகவிவக்ஷித்து; ஔதார்யபரமாகவர்த்தாந்தரம் (தன்பேறுகவித்யாதி) வண்ணமென்று - ஔதார்யத்தைச்சொன்ன பக்ஷத்துக்குச்சேர, "முன்னுலகங்களெல்லாம்படைத்த" என்றத்தோடுகூட்டி "கண்ணன்" என்றதுக்குபாவம் (ஜகத்காரணத்வத்துக்குமித்யாதி) இத்தால் - "படைத்த" என்றதுக்குஹேதுசொல்லிற்றாயிற்று. ஔதார்யஞ்சொன்னது - குணங்களுக்கெல்லாமுபலக்ஷணம். "முன்" என்றது - முற்பாடனென்னுதல், முன்பெல்லாமென்னுதல். "வண்ணன்" என்றதுக்கு - வடிவென்றவர்த்தத்துக்குச்சேர, "கண்ணன்" என்றதுக்கர்த்தம் (அன்றிக்கேஅப்ராக்ருதேத்யாதி)

"அவன்வரும்" என்கிறதுக்கு, ஜகத்ஸ்ருஷ்டிபண்ணினானென்று முன்புத்தைகதையைச்சொல்லவேணுமோ; என்னைத்தனக்காக்கினதேபோராதோ "அவன்வரும்" என்றுநிச்சயிக்கைக்கென்கிறாள் (இதொருபழங்கிணறித்யாதி) கண்வாங்குகை-தூரொடுக்கை. அவனைப்பிரிந்துக்லேசிக்கிறதசையில் "உபகாரகன்" என்கிறவளுடையபாவத்தை த்வேதாவருளிச்செய்கிறார் (உங்கள்காலிலேயித்யாதிவாக்யத்வயத்தாலே) அதாவது; லோகத்திலுள்ளார்தன்னை மறந்துண்டுடுத்துத்திரியாநிற்க, எனக்குத்தன்பக்கல் ப்ராவண்யத்தையுண்டாக்கி யுங்கள்காலிலேவிழப்பண்ணினவுபகாரகனென்று - முந்தினபாவம். இப்போதகலவிருந்தானேயாகிலும், ஜகத்ஸ்ருஷ்டிபண்ணியவதரித்தென்னை வசீகரித்தென்னோடே கலந்திப்படியநேகமுபகாரங்களைப்பண்ணினவனென்று - இரண்டாம்பாவமென்று பேதங்கண்டுகொள்வ

து. "இப்போதகலவிருந்த" இத்யாதிவாக்யவிவரணம் ( எங்களோடித்யாதிவாக்யத்வயமும் ) கலப்பதுக்குமுன்பென்றது - கலந்துபிரிந்ததுக்கு முன்பென்றபடி. ஔதார்யபரமானவர்த்தத்தை யுட்கொண்டுவெறுப்பாகபாவம் (அம்மேகமித்யாதி)

வடிவைக்காட்டினபேருண்டோவென்ன ( ஏஹீத்யாதி ) "ஏஹி பஶ்ய ஶரீராணி முநீநாம் பாவிதாத்மநாம்" ( ஏஹிபஶ்யஶரீராணிமுநீநாம்பாவிதாத்மநாம் ) இத்யாதி "அவனுக்குநாங்களென்சொல்ல" என்றுகேட்டவற்றுக்கு வடிவைக்காட்டினது பரிஹாரமாமோவென்ன ( என்னைக்கண்டவித்யாதி ) "நீங்களேபாசுரமிட்டுச்சொல்லுமத்தனை" என்கிறதென், தனக்குப்பாசுரமிட்டுச்சொல்லவொண்ணதோவென்ன ( ஜகத்காரணத்வமித்யாதி ) "முன்னுலகங்களெல்லாம்" இத்யாதியைப்பற்ற ( ஜகத்காரணத்வமித்யாதிகள் ) தன்னாலும்பேசப்போகாதத்தையிவற்றுக்குலாக்கக்கூடுமோவென்ன ( தனக்குங்கூடவித்யாதி ) அதாவது-இவளுடைய ப்ரதிபத்திவிசேஷ மிருக்கிறபடியென்றுகருத்து. பரிஹாராந்தாம் (கரைமேலேயித்யாதி ) அதாவது-தன்னைப்போலே யவகாஹியாமையாலே சொல்லலாமென்றபடி. ஆனாலிவனுக்குச்செய்யவடுப்பதேதென்ன; ஸ்வாபதேசம் ( இவனுக்கித்யாதி ) "என்னிலைமையுரைத்து - பொன்னுலகாளீரோ" என்று - கார்யம்செய்துசமைந்தால் கைக்கூலிகொடுப்பாரைப்போலே கூலிகொடுக்கிறுளோவென்ன ( ஆர்தநாதமித்யாதி ) ஆர்தநாதங்கேட்டாலாறமட்டாதோவென்ன; ஸத்ருஷ்டாந்தமாகவருளிச்செய்கிறுர் ( சக்ரவர்த்தியித்யாதி )

[யஶ்சாஶ்ருணோதி] [யஆஸ்த்ருணோதி] இத்யாதிஸநத்ஸுஜாதவசநத்துக்கர்த்தம்; யஃ-ஆசார்ய , அவிததேந-மந்த்ரேண, அதுஃகம்குர்வந், அம்ருதம்ஸம்ப்ரயச்சந்-அநிஷ்டநிவ்ருத்திம், இஷ்டப்ராப்திஞ்சகுர்வாணஸ்ஸந், கர்ணவாஸ்த்ருணோதி-ஸதுபதே சத்தாலேகர்ணங்களைப்பரப்புகிறுன், தஸ்மைநத்ருஹ்யேத்;அவ்வளவன்றிக்கே, க்ருதமஸ்யஜாநந் - க்ருதஜ்ஞனாயிருக்கவும் வேணுமென்றபடி. நன்னலப்புள்ளினங்காளித்யாரப்ய, உரைத்து- பொன்னுலகாளீரோபுவனிமுழுதாளீரோவித்யந்வயஃ. என்னலம் - என்னுடையவிலக்ஷணகாரங்கள். என்னிலைமை - என்னவஸ்த்தையை.



## இரண்டாம்பாட்டு.

மையமர்வாணெடுங்கண்மங்கைமார்முன்பென்கையிருந்து
நெய்யமரின்னடிசினிச்சல்பாலொடுமேவீரோ
கையமர்சக்கரத்தென்கனிவாய்ப்பெருமானைக்கண்டு
மெய்யமர்காதல்சொல்லிக்கிளிகாள்விரைந்தோடிவந்தே.

### ஆறாயிரப்படி.

(மையமர்) ஒருதாமரையிலே யொருதாமரை பூத்தாப்போலே திருக்கையும் திருவாழியும் சேர்ந்திருக்கிற வழகாலும், திருவாழியைக்கண்டப்ரீதியாலே புதுக்கணித்த திருப்பவளத்தினழகாலுமென்னை யடிமையாக்கினவனுடைய வழகைக்கண்டு நீங்கள் ஸம்ருத்தராய்; பின்னை, அவளுக்குன்பக்கலுள்ள ஸ்நேஹம் மெய்யான ஸ்நேஹமென்று அவனுக்குச்

சொல்லி, அவனருளிச்செய்யும் வார்த்தைகளை, நான் முடிவதற்குமுன்னே விரைந்தோடிவந்தெனக்குச் சொல்லி யென்னைதரிப்பித்து; என்னுடைய தோழிமாரெல்லாருமுங்களுடைய ஸம்ருத்தியைக் கண்டாசைப்படும்படி யென்கையிலேயிருந்து, அவன்றிருநாமங்களை நான் கற்பிக்கக்கற்றுவாழிகோளென்று தன் கிளிகளை நோக்கிச்சொல்லுகிறாள். ... ......*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அநுபாவ்ய சிஹ்நயுக்தனானவனுக் கென்னுற்றாமையை யறிவித்துவந்தென் தோழிமாரெதிரே நானுங்களைப்பண்ணுமாதரத்தை யங்கீகரிக்கவேணுமென்று, சிலகிளிகளைப்பார்த்துச் சொல்லுகிறாள்.

கிளிகாள் - வடிவழகாலும் வார்த்தையினினிமையாலுமிரண்டுதலைக்கு மாதரணீயமான கிளிகாள். கையமர்சக்கரம் - கையுந்திருவாழியுமான சேர்த்தியையுடையனாய். கனி - பக்வபலம்போலே போக்யமான. வாய் - அதரசோபையையுடையனாய். என்பெருமானை - என்னையடிமைகொண்ட ஸ்வாமியானவனை. கண்டு - முற்பாடு காணப்பேறுடைய நீங்கள்கண்டு. * குணம்பாடி யாவிகாத்திருக்குமளவன்றியே, மெய் - உடம்போடே. அமர் - செறியவேண்டும். காதல் - அபிநிவேசத்தை. சொல்லி - சொல்லி. அவனுதரித்தானென்று கூடவரநினையாதே, விரைந்து - சத்வரசித்தராய். ஓடிவந்து - சடக்கெனவந்து. உங்கள் வார்த்தைக்கநந்தரமவன் வரவுறுதியாகையாலே யென் புதுக்கணிப்புக்கண்டு தங்களையொப்பித்து நிற்கையாலே, மை - மை. அமர் - பொருந்தி. வாள் - ஒளியையுடைத்தான. நெடு - நெடிய. கண் - கண்ணையுடையராய். மங்கைமார்முன்பு - பருவத்தாலுமொத்திருக்கிற தோழிமார் ஸந்நிதியிலே. அவர்கள் தாங்களாதரிக்கக் கண்டிருக்கையன்றிக்கே, அவன் கையாலேபிடித்த, என்-என். கை - கையுங்களுக்குப்பாதபீடமாம்படி. இருந்து - இருந்து. நெய் - நெய்யோடே. அமர் - சேர்ந்த. இன் - மதுரமான. அடிசில் - அடிசிலை. பாலொடு - பாலோடுங்கூட. நிச்சல் - நித்யமாக. மேவீர் - ஸ்வீகரிக்கவேணும்.............................................................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

சிலகிளிகளைக்குறித்து, என்னுற்றாமையை யவனுக்கறிவித்துவந்து, நானுமென் தோழிமாருங்கொண்டாட அத்தை யங்கீகரிக்கவேணுமென்கிறாள். ( மையமரித்யாதி ) முதற்பாட்டில் - அவன்பதங்கொடுத்தாள்; அதுக்குமேலே யொருபதந்தேடிக் கொடுக்கிறாள் - இப்பாட்டில். அவன்பதமாகிறது - உபயவிபூதியையுங் கொடுக்கையிறே, அதுக்குமேலான பதமாகிறது - அவனாலேவிரும்பப்படும் தன்னைக்கொடுக்கை. தன்னைக்கொடுக்குமிடத்திலும் " பின்னை முன்னே " என்னாதே, எல்லாருங்காணக்கைமேலேயிறே கொடுக்கப்புகுகிறது.

( மையமர்வாணெடுங்கண் மங்கைமார்முன்பென் கையிருந்து ) அவன்பாடுதரம்பெற்றாரைக்கொண்டாடுவாரைப்போலேயோ ! என்பாடுதரம்பெற்றாரைக்கொண் டாடுவாரிருப்பது. அந்தஃபுரத்தில் வர்த்திப்பாரெல்லாரு மொருபடிப்பட்டிருக்கிறபடி. ஒருகண்பார்வையாயிருக்கி

றபடி. " தம்மையேநாளும் வணங்கித்தொழுவார்க்குத் தம்மையேயொ க்கவருள்செய்வர் " என்கிறபடியே, இவளும் தன்னோடு சர்வதாஸாம்ய ங்கொடுத்துவைத்தபடி. ( மையமர் ) " அஸிதேக்ஷணா, " ( அஸிதே க்ஷணு ) " கருந்தடங்கண்ணி " என்று சொல்லுகிற வேற்றமெல்லா மி வர்களுக்குமுண்டிறே. தன்னைப்போலே ஸ்வாபாவிகமான கண்ணில்கறு ப்பைச்சொல்லிற்றுதல்; அன்றிக்கே, மங்களார்த்தமாகவிடும் மையைச் சொல்லிற்றுதல். இவளலாபத்திலிவர்கள் மையெழுதியிருக்கக்கூடாதி றே; நீங்கள்வந்தா லிவர்கள் கண்களிருக்கும்படிபாரிகோள். வாள்-ஒளி. அதுவுமழிந்திறேகிடக்கிறது. இவள்வடிவு புகரழிந்துகிடக்க, இவர்கள் கண்களிலொளியுண்டாகக்கூடாதே. ( நெடுங்கண் ) கண்ணில் பரப்பட ங்கலும் ஸப்ரயோஜநமாவதப்போதாகாதே. இல்லையாகில் தலைச்சுமை யோபாதியாமிறே, " காணாதார் கண்ணென்றும் கண்ணல்ல " என்கிற படியே. ( மையமர்வாணெடுங்கண் ) உங்கள்வரவால்வந்த ப்ரீதியாலே " அவன்வரவுதப்பாது " என்றுநானலங்கரிக்க, அத்தாலேயலங்கரித்து ஒளியையுடைத்தாய்ப் பெருத்திருந்துள்ள கண்களையுடையவர்க ளென் னுதல். ( மங்கைமார் ) அவனுக்கு * தன்னோராயிரம்பிள்ளைகளைப்போ லே இவளுக்குத்தன்பருவத்தில் தோழிமாருண்டாயிருக்கிறபடி. ( மங் கைமார் ) முக்தர்பஞ்சவிம்ஶதிவார்ஷிகரா யிருக்குமாபோலே. (மங்கை மார்முன்பு ) பின்பிருக்கவொட்டார்களே! . ( மங்கைமார் ) ஒருவரிருவ ரன்றே. எல்லாரும்தனித்தனியே " என்முன்பே, என்முன்பே " என் பர்களே! . " ஹநூமந்தம்மஹாத்மாநம்பரிவார்யோபதஸ்திரே " (ஹ நூமந்தம்மஹாத்மாநம்பரிவார்யோபதஸ்த்திரே) என்றேலக்கமாகவிரு ந்து திருவடியைக்கொண்டாடினப்போலே. [ஹநூமந்தம்] [மஹாத்மாந ம் ] நாலுபேர்சூழவிருந்துகொண்டாடினொன்கிற விதுதான்தரமோவி வனுக்கு. [ உபாயநாநிப்ரதாயாஸ்மை பலமூலாநிச ] [ உபா யநாந்யுபாதாயமூலாநிசபலாநிச] என்றுபலமூலாதிகளைக்கொடுத்து ஸம் ப்ரமித்தார்களிறேமுதலிகள் ; அப்படியே, நெய்யமரின்னடிசிலென்று- இங்குமெல்லா முண்டாயிருக்கிறபடி. * பேஜிரேவிபுலாநநா: உண்டிறே யங்கு, இங்குமையமர்வாணெடுங்கணெல்லார்க்கு முண்டாயிருக்கிறபடி. (என்கையிருந்து ) " ஏகம்து:கம்ஸுகஞ்சநௌ " (ஏகம்துஃகம்ஸுக ஞ்சநௌ) என்று, ஸமாநஸுகதுஃகைகளாயிருந்தார்களே யாகிலும், ப சித்தாரேயுண்ணவேணுமிறே; அப்படியே யவர்களோலக்கமிருக்குமத் தனை, இருப்பிடமென்கையாகவேணும். அவன்றிருமுடிக்காபரணமான வென்னுடையகைகையயுங்களுக்குப் பாதபீடமாக்குகிறேன். " தௌபாஹுலதாம்ஸ்கந்தே " ( ததௌபாஹுலதாம்ஸ்கந்தே ) என்னுமாபோ லே - அவனுக்கு சர்வஸ்வதாநம்பண்ணும்கை. பர்யங்கவித்யையிற்சொ ல்லும் படுக்கையிலிருப்புப்போலுமன்றுகாதே யிவள்கையிலிருப்பு. இ

வள் “ அஞ்ணிமிகுதாமனைக்கை ” என்னுமதவனுக்குமுண்டிறே. மெய்ய மர்காதல்சொல்லிக் கிளிகாள் விரைந்தோடிவந்து – என்கையிருந்து நெ ய்யமரின்னடிசில் நிச்சல்பாலொடுமேவீரோ என்கிருள். அதுவென், போகிறபோதே லாலநம்பண்ணி விட்டாலோவென்னில்; அதுக்குக்கை முதலுண்டாகவேணுமே, “ காலெஸ்ரலோகாஹிகஸிஃலெதை ” (காத் ரைப்ஃஸ்லோகாபிகர்ஸிதைஃ) என்றும், * இட்டகாலிட்டகையளாயுமிறேயி வள்கிடக்கிறது ; இனித்தான்கொண்டாடுகைக் கோலக்கமிருப்பாரும் வேணுமே, “ எம்பின்முன்னவனுக்குமாய்வராலோ ” என்றிறே யவர்க ளுங்கிடக்கிறது. ( நெய்யமரித்யாதி ) “ஷைஷஸவஸூதஸு” (ஏஷ ஸர்வஸ்வபூதஸ்து) என்று கொடுக்கைக்குடலில்லையேயிவளுக்கு. நெய் யோடேகூடின இனியவடிசிலை நாள்தோறும் பாலோடேகூடநான்தர, அத்தைஸ்வீகரித்துநீங்களென்னை யுஜ்ஜீவிப்பிக்கவேணும். “ உண்ணுஞ் சோறுபருகுநீர் தின்னும்வெற்றிலையுமெல்லாங்கண்ணன் ” என்றிருக்க க்கடவவிவள், இவையுகப்பதுதேடி யிடுகிருளிறே. இத்தால்சொல்லிற் ருயிற்றென்னென்னில்–பகவத்விஷயத்தி லுபகாரகராயிருப்பார்க்கு, “உ ண்பதிலொருகை பகுந்திட்டோமாகில் செய்யலாவதுண்டோ” என்று கைவாங்குமதல்ல; அவர்கள்விரும்பினவையேதேடியிடவேணுமென்னு மிடம் சொல்லிற்று. “ யதஂநஃபுருஷோஹவதி ” (யதந்நஃபுருஷோப வதி) என்னலாவதவன்பக்கல். (நிச்சல்) சேர்ப்பதொருநாளே, இவர்களு க்குப்பின்பநுபவம் நித்யமாயிருக்கிறபடி. “ அத்ரபரத்ராவிநித்யம் யதீயசரணௌஶரணம்மதீயம் ” ( அத்ரபரத்ரசாபிநித்யம்யதீயசரணௌஶர ணம்மதீயம் ) என்னுமாபோலே. ( கையமர்சக்கரத்தென் கனிவாய்ப் பெருமானைக்கண்டு) உண்டாரையுண்ணப்பண்ணுவிக்கத்தேடுகிருளிறே. இத்தால்சொல்லிற்று-இவர்க்குமுன்னேயிவருடைய அபிமதமிவரைப்ப ற்றிஞர்க்கு முற்பட்டிருக்கிறபடி; “ வேருகவேத்தியிருப்பாரை வெல்லு மேமற்றவரைச்சாத்தி யிருப்பார்தவம் ” ( கையமர்சக்கரம் ) * எப்போ தும் கைகழலாநேமியானுயிருக்கை. ( என்கனிவாய் ) கையுந்திருவாழியு மானவழகைக் காட்டுவது, முறுவலைக் காட்டுவதாய், என்னையநந்யார் ஹையாக்கினவன். பிரிந்துபோகிறபோது, “ இவள்சத்தை கிடக்கவே ணும்” என்றுபண்ணினஸ்மிதத்துக்காயிற்றுத்தோற்றது.(என்கனிவாய்) திருவாழிக்கு முற்றூட்டாயிற்றுத்திருக்கை, தமக்குமுற்றூட்டுத்திருப்ப வளம். அவன்ஜீவநத்தைநித்யமாக்கிஞன்,என்ஜீவநத்தைக்காதாசித்கமா க்கிஞன். அவனுக்கேகையடைப்பாயிற்றே. கைமேலேயிடுமே. (கண்டு) எனக்குப்போலே ஸ்ம்ருதிவிஷயமாமளவன்றிறே யுங்களுக்கு. இவற்றி ன்கண்ணாலேகாணுதல், இவற்றைக்காணுதலிறே யிவளுக்கு ; * தாம்ஸ்ப் ருஷ்ட்வாவாதல், * சந்த்ரோத்ருஷ்டிஸமாகமஃஆதல்-தொட்டாரைத்தொ டுதல், கண்டாரைக் காணுதலிறேயிவளுக்கு. ( மெய்யமர்காதல்சொல்

வி ) திருமேனியிலே யணையவேண்டும்படியான காதலென்னுதல், என்னுடம்போ டணையவேண்டும்படியான காதலென்னவுமாம் “ மாமெதெ லோகாஹிகஸிஹிலெதெ: । ஸஹஸ்ரஸெயதா ” (காத்ரைஃஃஸோகாபிகர்ஸிதை:।ஸம்ஸ்ப்ருஸேயம்) என்னக்கடவதிறே. “நம்ஸத்தைகிடக்கக்கிடக்குமிறே” என்றுதல், “ குணஜ்ஞாநத்தாலே தரித்திருக்கிருள் ” என்றுதல் நினைத்திருக்குமதல்லவென்று சொல்லுங்கோள். அங்ஙனேயும் தரித்திருந்தாருண்டிறே; மாயாசிரஸ்ஸைக்காட்டினவன்றும்பிராட்டி, லௌகிகரோடொக்கக்கண்ணநீர் விழவிட்டு, “ அதுவேயாகிலு மவருளராகில ல்லது நம்ஸத்தைகிடவாது ” என்றுதன்னைக்கொண்டறுதியிட்டுதரித்திருந்தாளிறே. [ அநந்யாராகவேணாஹம் பாஸ்கரேணப்ரபாயதா ] [ அநந்யாராகவேணுஹம் பாஸ்கரோணப்ரபாயதா ] இறே– ஆதித்யனுண்டாகிலல்லது ப்ரபையுமில்லையிறே. இங்ஙனேயிருக்கச்செய்தே ஒருஹேதுக்களாலேவரும் சங்கோசவிகாஸங்களேயிறேயுள்ளது. த்ரவ்யமாயிருக்கச்செய்தேயும் ப்ரகாரமாமாகாரமுண்டே. அப்படியேயன்றிறேயிங்கு, உடம்பிலேயணைந்து பிரிந்தார்க்குடம்பை யணைத்தல்லது நிற்கவொண்ணுதிறே. (மெய்யமர்காதல் ) “ தம்மைப்போலேபொய்யுமாய் நிலைநில்லாதகாதலன்றெங்களதென்று சொல்லுங்கோள் ” என்று பிள்ளான்பணிக்கும். அன்றிக்கேமெய்யமர்காதல் - ஆத்மாநுபந்தியானகாதல். மெய்யென்று - ஆத்மாவாய், ஆத்மாவோடேபொருந்தினகாதலென்றுமாம். “ மெய்ம்மையேமிகவுணர்ந்து ” என்கிறவிடத்தில், மெய்யென்கிறது – ஆத்மாவையிறே. சத்யமானகாதலென்றபடி. ( சொல்லி ) தந்தாமுக்கில்லாதவை பிறர்வாயிலேகேட்டறியுமித்தனையிறே. தமக்குண்டாகி லிப்படிதூதுவிடப்பார்த்திராரோ. காட்சிக்குமேலேயோரேற்றம் போலேகாணும் தன்தசையையவனுக்கறிவிக்கை. ( கிளிகாள்விரைந்தோடிவந்தே ) பிராட்டியைக்கண்டுமீண்டவநந்தரம் முதலிகள்வந்து பெருமாளையுகப்பித்தாப்போலவும், பெருமாள்மீண்டெழுந் தருளுகிறபோது திருவடிமுன்னேவந்து ஸ்ரீபரதாழ்வானையுகப்பித்தாப்போலவும், நீங்கள் முன்னேவரவேணும். (கிளிகாள்விரைந்தோடிவந்தே) அறிவித்துக்கூடவரவிராதேகிடிகோள். திருவடிபிராட்டியைத் தேடிப்போகிறபோது பண்ணினஅபிஸந்திகளெல்லா மிக்கரையிலேகழித்துப்பின்புலங்கையிலே போய்ப்புக்கெங்குந்தேடியவளைக்கண்டு, அநந்தரம் ‘‘இக்காட்சியால்ப்ரயோஜநமுள்ள தவ்வாப்ரயமுள்ளபோதே சென்றறிவிக்கிலிறே’’ என்றெருநாளேவந்தானிறே;அதுக்கடி-போகிறபோதிவராற்றுமையைக்காண்கையாலே,‘‘நாம்வருமளவு மிவரைக்கிடைக்கையரிது” என்றிருந்தான்; பெருமாள்தாமும், ‘‘பிள்ளாய், நீயிருக்கிறபோதைத் தரிப்புக்கொண்டு, நீபோனு மிப்படியிருப்பனென்றிராதேகிடாய்; என்னளவறிந்துகார்யஞ்செய்’’ என்றுரிறே. (விரைந்தோடிவந்தே) நீங்கள்முற்படவந்தப்ரீதி

ஸாத்மித்தால், பின்பவன்வரவாகவேணும். அவனுடனேகூடவரில் வாய்ப்புகுநீராய் உங்களைக்கொண்டாடவொண்ணாது, ஆனபின்பு, நான்முறைகெடாம லநுபவிக்கும்படிவாருங்கோள். உபகாரகரானவுங்கள்காலிலே முற்படவிழுந்தபின் பவன்காலிலேவிழும்படி பண்ணுங்கோள். ஆகையிறே நம்முதலிகள் குருபரம்பரைமுன்னாக த்வயாநுஸந்தாநம்பண்ணுகிறது. இனித்தான் சிஷ்யனுக் காசார்யாநுவர்த்தநம்பண்ணலாவது அவன் தேஹபரிக்ரஹம்பண்ணியிருக்கிறநாளிலேயிறே, பின்புள்ளதெல்லாம் பகவதநுபவத்திலே யந்வயிக்குமிறேயிருவர்க்கும். அவன் "எனக்கு" என்னும்நாளிலேயிறே இவன் "உனக்கு" என்று கொடுக்கலாவது.*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (மையமரித்யாதி) "கிளிகாள், மெய்யமர்காதல்சொல்லி - வந்து - மங்கைமார்முன்பு" என்றுதொடங்கி "மேவீரோ" என்கிறபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (சிலகிளிகளையித்யாதி) "பொன்னுலகாளீரோ" இத்யாதியைப்பற்றவிப்பாட்டுக்கோரேற்றமருளிச்செய்கிறார் (முதற்பாட்டிலித்யாதி) அவன்பதமாவது - உபயவிபூதிநாதத்வம், "மங்கைமார்முன்பு" என்றதுக்குபாவம் (தன்னையித்யாதி)

அவன்பாடுதாம்பெற்றார் - திருவடி, அவனைக்கொண்டாடினபேர் - விருபரானவாநரங்களென்றபடி. என்பாடுதாம்பெற்றாரைக் கொண்டாடுவாரிருப்பதென்றது - இவள் * அஸிதேக்ஷணையாகையாலேயிவளோடு ஸாம்யாபந்நராயிருப்பர்களென்றபடி. தன்பாடுதாம்பெற்றாரைக்கொண்டாடுவார்க்கு வாசியேதென்ன (அந்தஃபுரத்திலித்யாதி) ஒருபடிப்பட்டதின்விவரணம் (ஒருகண் பார்வையித்யாதி) சாடுவுக்கு, எல்லாருமொருகண்ணாலேபார்க்கலாம்படியிருப்பர்களென்று; ஸ்வாபாவிகமானவர்த்தம், எல்லாருமஸிதேக்ஷணைகளென்று. எல்லார்கண்ணுமிவள்கண்ணைப்போலே யிருக்கக்கூடுமோவென்ன (தம்மையேநாளுமித்யாதி) திருமொழி. தம்மையேயொக்கவருள்செய்வர் - தம்மோடுஸாம்யாபத்தியைக் கொடுப்பரென்றபடி. தனக்குண்டாயேஸாம்யாபத்திகொடுக்கவேணுமேயென்ன (அஸிதேக்ஷணேத்யாதி) "மை" என்று - கறுப்பாதல், அஞ்சநமாதல். த்விதீயார்த்தத்தில், இவள் தளர்ந்திருக்கவிவர்களுக்கிவ்வாகாரங்கூடுமோவென்ன (இவளலாபத்திலித்யாதி) அழிந்துகிடப்பானென்னென்ன (இவள்வடிவித்யாதி) மையுமொளியுமிவர்கள்வந்தாலுண்டாகலாம், தைர்க்யமுண்டாமென்கிறதுகூடாதேயென்ன (கண்ணில்பரப்படங்கலுமித்யாதி) அப்போதாகாதேயென்றது - தூதுபோய்த்திரும்பிவந்த வுங்களைக்கண்டபோதாகாதேயென்றபடி. இல்லையாகிலென்றது - இவர்கள் வாராவிட்டாலென்றபடி. அப்படிதலைச்சுமையாமோவென்ன (காணாதாரித்யாதி) பகவத்பாகவதர்களைக்காணாதபோதுகண்படைத்ததுக்கு ப்ரயோஜநமில்லையென்றபடி. கண்டாமேயென்று - க்ஷேபோக்தி. திருமொழிபதினோராம்பத்து, "நீணகம்சுற்றி" இத்யாதி. "நீங்கள்வந்தால்" இத்யாதிவாக்யவிவரணம் (உங்கள்வரவால்வந்தவித்யாதி) பஹுவசநார்த்தம் (அவனுக்கித்யாதி) "மங்கை" என்று - பருவம்சொன்னதுக்குபாவம் (முக்தரித்யாதி) "முன்பு" என்றதுக்குவ்யாவர்த்யம் (பின்பிருக்கவித்யாதி) "மங்கைமார்முன்பு" என்ற பஹுவசநத்தோடேகூட்டிபாவம்

ஈடு - இரண்டாம்பாட்டு.

கூட்டக்கடவீர், அதுக்கொருகுறையில்லை, ஆனாலும்ப்ரதிபந்தகங்கள் கனத்திராநின்றதேயென்ன; உன்கையில் திருவாழியிருக்க, நீயிங்ஙனே சொல்லலாமோவென்கிறார்.

(கூறுயித்யாதி) நீ *கைகழலாநேமியானாயிருக்கிறதுக்கு மென்ப்ரதிபந்தகம் கிடக்கைக்குமென்ன சேர்த்தியுண்டு. அப்ரதிஹதமானசக்தியையுடைத்தான திவ்யாயுதங்களானவை யிவனுடைய சகலபாபங்களையும்போக்கியுத்தரிப்பிக்கக்கடவதாயிருக்கும். அவனாலே வருமவையும் பரிஹரிக்கவற்றாயிருக்கும்- [ரக்ஷந்திஸகலாப] [ரக்ஷந்திஸகலாபத்ப்ய:] இறே, சகலசப்தத்துக்குள்ளே யிவனுமுண்டே. இனித்தான், பாபங்கள் "ஸம்ஸாரேஷு நராதமாந் । க்ஷிபாமி" (ஸம்ஸாரேஷு நராதமாந் । க்ஷிபாமி) என்கிறபடியே இவன்பக்கல் தோஷங்கண்டவவன்நிக்ரஹத்தாலேவருமவையிறே; அங்ஙனேவருமவையும் பரிஹரிக்கக்கடவதாயிருக்குமிவை. அதுக்கடி-அவனடியில் பண்ணினவநுக்ரஹத்தையே நினைத்திருக்கையாலே. இனித்தான் "இவற்றின்தோஷங்கண்டுநாமௌபாதிகமாகச் சீறினபோதும் நீங்கள்கைவிடாதே, நாமடியிற்பண்ணின ஸ்வாபாவிகமான நம்முடைய ப்ரஸாதத்தைப்பார்த்து நீங்கள்ரக்ஷியுங்கோள்" என்று அவன்பக்கலிலே பெற்றுடையராயிருப்பர்களிறே. *அருளார் திருச்சக்கரமிறே. பண்டே அவனைக்கைகண்டிருக்குமிறே. அவனருள் மறுத்தபோதுமிங்குத்தை யருள்மாறாதேயிறேயிருப்பது. ஆகையாலே, அவன்ப்ரஸாதம்பெற்றவர்கள் திருவாழியில் கூர்மையையிறே தங்களுக்குத்தஞ்சமாக நினைத்திருப்பது.(கூறாய்நீறாய்நிலனாகி)திருச்சரம்போலே "ஸிநம்பிநம்" (சிந்நம்பிந்நம்) என்கிறபரும்பணிக்கு விட்டுக்கொடாததிருவாழி. திருச்சரத்துக்கொரு குணஸ்பர்சமுண்டென்கிறரித்தைப்பற்ற. முற்படவிருதுண்டமாக்கிப்பின்னைநீறாக்கிப்பின்னைஅதுகாணவொண்ணாதபடி வெறுந்தரையாக்கும். (ஆகி) ஆக்கியென்னுதல், ஆம்படியென்னுதல். (கொடுவல்லசுரர்) சிறுகைக்குஹேதுவிருக்கிறபடி. க்ரூரமான செயல்களைச்செய்யக்கடவராய், ஒருவரால்வெல்லவொண்ணாதபடி வலியையுடையரானவசுரர். (குலமெல்லாம்) ஒருவன்செய்ததப்பேஜாதியாகமுடிக்கவேண்டும்படி யிருக்கையாலே. ஒருவரையும் தப்பாமல்கோலிமுடித்தபடி. அநுகூலரோடு ப்ரதிகூலரோடுவாசியற இவன்வளைவிலகப்படாதாரில்லை. "வளைவாய்த்திருச்சக்கரத்தெங்கள் வானவனார்" என்று - அவன்வளைவிலேயகப்பட்டுப் பின்பிறேமேல்போயிற்று. கூறாய்நீறாய் நிலனாகைக்குப்பண்ணின வ்யாபாரமேதென்னில் (சீறுவெரியும்) இவைமுடிந்துபோகச்செய்தேயும் கொண்டகுதைமாறாதே, இளைபெரும்பாம்புபோலே ஜ்வலியாநிற்கும். (திருநேமிவலவா) நீவலவருகேதிருவாழியைத்தரித்திருக்க, நான்க்லேசத்தைத்தரித்திருப்பதே. (தெய்வக்கோ

மானே) இப்படி யாஶ்ரிதர்க்காக வந்து படுகிறவன் ஆளில்லாதவனல்ல கிடீர், * அயர்வறுமமரர்களதிபதிகிடீர். அங்குக் கையுந் திருவாழியுமா னவழகை யநுபவிப்பாரேயிறே யுள்ளது, இருதுண்டமாகவிடுகைக் காளுள்ளதிங்கேயிறே. இரண்டுவிபூதியையு மாளுவது திருவாழியாலே காணும், "அகல்விசும்பும்நிலனுமிருளார்வினைகெடச் செங்கோல்நடாவுதிர்" என்கிறபடியே. அழகாலே யங்குள்ளாரை யாளும், கூர்மையாலேயி ங்குள்ளாரையாளும். அங்குக் கூர்மை குமரிருக்கும், இங்கழகு குமரிருக்கும். அங்குள்ளார்க்குக் கைமேலே ஜீவநமாயிருக்கும், இங்குள்ளார்க்கு விரோதியைப்போக்கிப் பின்னையாயிற்று ஜீவநமிடுவது. அங்குள்ளாரவன்கையே பார்த்திருக்கையாலே; இவர்களுக்கதில்லையே. என், நாமிப்போ தஸந்நிஹிதரன்றோ வென்னில் ( சேறார்சுனையித்யாதி ) சேறுகளார்ந்திருந்துள்ள சுனைகளிலே தாமரைகளானவை செந்தீப்போலேமலராநிற்கும். எண்ணெயாலே யெரியும் விளக்கொழிய, நீராலே யெரியும் விளக்குக்கண் டநுபவிக்கக் காணு மிவராசைப்படுகிறது. நீரிலே நெருப்பெழுந்தாப்போலேயிறே யிருக்கிறது. ( ஆறாவன்பிலடியேன் ) இவர்க்கு நிரூபக மிருக்கிறபடி. சுனைகளில் நீர்வற்றிலாயிற் றிவருடையவன்பு வற்றுவது. * மயர்வறம்திநலமருள அதடியாக வந்த வன்பிறே. ஊற்றுடைத்தே. க்ரமப்ராப்தி பற்றாதபடியான ப்ரேமமிறே. ( உன்னடிசேர்வண்ணமருளாயே ) உன்றிருவடிகளிலே சேர்ந் தடிமைசெய்யும்படி பெண்பக்கலிலே க்ருபைபண்ணி யருளவேணும். நீ திருமலையிலே நிற்கிற நிலைக்கு ப்ரயோஜநம்பெறப் பாராய். என்னன்புக் கிரையிடப் பாராய்....*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. ( கூறாயித்யாதி ) "திருநேமிவலவா" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை ( கூடக்கடவீரித்யாதி )

"கூறாய் நீறாய்" என்று தொடங்கி, "திருநேமிவலவா" என்னுமளவுக்கும் பாவம் ( நீகைகழலாவித்யாதி ) நேமி - திருவாழி. திவ்யாயுதங்கள் விரோதியைப்போக்கி ரக்ஷிக்குமோவென்ன; "அவ்யாஹதாநி" ( அவ்யாஹதாநி ) என்கிற ஶ்லோகத்தை யுட்கொண் டருளிச்செய்கிறார் ( அப்ரதிஹதமானவித்யாதி ) பிறரால் வரு மாபத்தையே யன்றிக்கே, அவனால் வரு மாபத்தையும் போக்குமென்கிறார் ( அவனாலேயித்யாதி ) "அவனாலேவருமவற்றையும்" என்றதுக்கு சப்தமேதென்ன ( ரக்ஷந்தீத்யாதி ) "அவ்யாஹதாநி க்ருஷ்ணஸ்ய சக்ராதீந்யாயுதாநி த்வாம் ரக்ஷந்து ஸகலாபத்ப்யோ யேந விஷ்ணுருபாஸித:" ( அவ்யாஹதாநி க்ருஷ்ணஸ்ய சக்ராதீந்யாயுதாநிதம்। ரக்ஷந்திஸகலாபத்ப்யோ யேநவிஷ்ணுருபாஸிதः ) இதி ஶ்ரீவிஷ்ணுதர்மே ஸப்ததிதமேத்யாயே. சர்வபூத ஸுஹ்ருத்தானவனு பத்தைப் பண்ணலாமோவென்ன ( இனித்தான் பாபங்களித்யாதி ) இனித்தானென்றது - வார்த்தைப்பாடு. அவனால்வருமாபத்தையு மிவை பரிஹரிக்கைக்கடியேதென்ன ( அதுக்கடியித்யாதி ) பண்ணின வநுக்ரஹமென்றது - "அஸிதவிஶேஷிதாந்" ( அசிதவிசேஷிதாந் ) இத்யாதிப்படியே அடியிலே சேதநரிடத்தில் பண்

ணின ஸ்வாபாவிக க்ருபையென்றபடி. பரிஹாராந்தரம் (இனித்தானிவற்றினித்யாதி) அதாவது - அடியிலே சொல்லிவைக்குமே, அத்தைக்கொண்டு ரக்ஷிப்பீர்களென்றபடி. "நாம் சீறினபோதும் நீங்கள் கைவிடாதே ரக்ஷியுங்கோள்" என்றதுக்கு ப்ரமாணம் - "ஶ்ரீலக்ஷ்மீபுருஷகாரத்வே நித்யஸூரிபராமர்ஷிபி: | மமாபிசமதம்ஹ்யேதந் நாந்யதாலக்ஷணம் பவேத்" (லக்ஷ்மீ:புருஷகாரத்வே நித்தி ஷ்டாபரமர்ஷிபி: | மமாபிசமதம்ஹ்யேதந் நாந்யதாலக்ஷணம் பவேத்) என்றது. இதில் பிராட்டிக்கு புருஷகாரத்வஞ் சொன்னது - நித்யசூரிகளுக்குமுபலக்ஷணம். மமாபிசமத மென்கையாலே - அவன் முன்னே சொல்லிவைத்தது சித்தம். அவன் சீறினபோதும் ரக்ஷிக்கும்படி யிவற்றுக்கு க்ருபை விஞ்சியிருக்குமோவென்ன (அருளாரித்யாதி) அருளால் பூர்ணமான திருவாழி யித்யர்த்த:. திருவிருத்தம். அவனிவர்கள் பக்கல் பண்ணின வநுக்ரஹத்தை யிவையறிந்தபடியென் னென்ன; சாடு (பண்டேயித்யாதி) "அருளார்" என்றதுக்குபாவம் (அவனருளித்யாதி) பலிதம் (ஆகையாலேயித்யாதி) "கூறுய், நீறுய்" என்கிற பதத்வயத்தாலே - திருச்சரங்களைப்பற்ற விவற்றுக்கு வ்யாவ்ருத்தியுண்டென்கிறுர். (திருச்சரம்போலே யித்யாதி) திருச்சரத்துக்குப் பரும்பணி பருகைக்கடியேதென்ன; ரசோக்தி (திருச்சரத்துக்கித்யாதி) குணமென்று - நாணுக்கும், க்ருபாகுணத்துக்கும் பேர். திருவாழியைப்பற்ற க்ருபாகுண முண்டாகையாலே ஸ்ரீசார்ங்கம் "ஶிஞ்ஜம் ஶிஞ்ஜ" (சிஞ்ஜம் பிஞ்ஜம்) இத்யாதிப்படியே பர்யாயேண ஹிம்சித்த தென்றபடி. பரும்பணிக்கு விட்டுக்கொடாத ப்ரகாரத்தை விசதீகரிக்கிறுர் (முற்படவித்யாதி) இவர்கள் பலத்தையும் க்ரௌர்யத்தையு மருளிச்செய்கைக்கு ப்ரயோஜந மருளிச்செய்கிறுர் (சீறுகைக்கித்யாதி) குலமெல்லாம் நிரசிக்கைக்கு ஹேதுவருளிச்செய்கிறுர் (ஒருவன்செய்தவித்யாதி) "திரு" என்று - அழகைச் சொல்லுகையாலே, அநுகூலரும்; "நேமி" என்கையாலே - ப்ரதிகூலரு மகப்படுவாரென்கிறுர் (அநுகூலரோடித்யாதி) அநுகூலர் திருவாழிக்ககப்படுவர்களோவென்ன (வளைவாயித்யாதி) வளைந்தவாயுடைத்தான திருவாழியையுடையவெங்கள் ஸ்ரீவைகுண்டநாதருடைய வித்யர்த்த:. திருவிருத்தம் எழுபதாம்பாட்டு. (மேல்போயிற்று) "வானவனூர்முடிமேல்" என்று - மேலேபோயீடுபட்டதென்றபடி. "சீறு" என்றது-சீறியென்றபடி. "எரியும்" என்கிறவர்த்தமானுர்த்தம் (இவைமுடிந்தித்யாதி) குதை-உத்யோகம். "நீகைகழலாநேமியானுய்" இத்யாதியா லடியிற்சொன்னவர்த்தம் "திருநேமிவலவா" என்றபதத்தைநோக்கிச் சொன்னுமென்னுமிடந்தோற்ற வருளிச்செய்கிறுர் (நீவலவருகேயித்யாதி)

இப்போது "தெய்வக்கோமான்" என்றதுக்கு ப்ரயோஜநம் (இப்படியித்யாதி) திருநேமிவலவனை வாகாரத்தை நித்யசூரிகளை யநுபவிப்பிக்குமவனே என்றர்த்தாந்தரம்விவக்ஷித்து, ஆனாலங்கு விரோதியில்லையோவென்ன (அங்குக்கையுமித்யாதி) பலிதம் (இரண்டுவிபூதியையுமித்யாதி) இதுக்கு ப்ரமாணம் அகல்விசும்புமித்யாதி) (அருளார்திருச்சக்கரத்தாலித்யாதி) க்ருபையால் பரிபூர்ணனுன திருவாழியாலே. (அகல்விசும்பும்நிலனும்) பரந்தவாகாசமும் பூமியும். (இருளார்வினைகெடச் செங்கோல்நடாவுதிர்) மோஹாந்தகார ஸஹசரிதமான விபரீதவ்ருத்தங்கள்போம்படி சங்கல்பரூபமான வாஜ்ஞையை நடத்தாநிற்புதிரித்யர்த்த:. ஆனும்ப்ரகாரத்தைக்காட்டுகிறுர் (அழகாலேயித்யாதி) விவரணம்(அங்குக்கூர்மையித்யாதி) ரஸோக்தி (அங்குள்ளார்க்கித்யாதி) இவ்விரண்டுக்கும் ஹேதுவேதென்ன (அங்குள்ளாரவனித்யாதி) அவன்கைபார்த்திருக்கையாலேயென்றது - அவன்கையுந்திருவாழியு

மான வ்ழகைப்பார்த்திருக்கையாலே யென்றபடி; தம்முடைய யத்நத்தைவிட்டு அவன் கைபார்த்திருக்கையாலே யென்றும்.

"சேறுர்சுனைத்தாமரை செந்தீமலரும்'' என்கிறவருடையபாவம் (எண்ணெ யாலித்யாதி) "சுனைகளிலே தாமரைசெந்தீமலரும்" என்றதிலே ரஸோக்தி (நீரிலே யித்யாதி) அன்றிக்கே, நீராலேயெரியும் விளக்குமுண்டோவென்ன (நீரிலேநெருப் பித்யாதி)

ஆருவன்பிலடியேன் - ஆருதவன்பிலேயானவடியேன். அன்புடையவடியே னென்றபடி. இப்படி விசேஷிக்கிறதுக்குபாவம் (இவர்க்கித்யாதி) "சேறுர்சுனைத் தாமரை" என்றவநந்தரம் "ஆருவன்பில்" என்றபதச்சேர்த்திக்குபாவம் (சுனைக ளிலித்யாதி) அன்புவற்றுமைக்கு ஹேதுவேதென்ன (மயர்வறவித்யாதி) "சுனை" என்கிறபதத்தோடே சேர்த்தியாகச்சொல்லுகைக்கு, சுனைவற்றுதோவென்ன (ஊ ற்றுடைத்தே) என்கிறுர். "ஆருவன்பு'' என்றதுக்கு - நித்யமானவன்பென்று கிழ ருளிச்செய்து, "மெய்யமர்காதல்" என்கிறபடியே அவனை யநுபவித்தாலொழிய வாருதவன்பென்றர்த்தாந்தரம் (க்ரமப்ராப்தியித்யாதி) "திருவேங்கடத்தானே" என்றத்தோடேகூட்டிபாவம் (நீதிருமலையிலேயித்யாதி) "ஆருவன்பில்" என்றத் தோடேகூட்டிபாவம் (என்னன்புக்கித்யாதி)

கொடுவல்லசுரர்குலமெல்லாம் - கூறுய் நீறுய் நிலனும்படி - சீறியெரியாநி ன்றுள்ள திருநேமியென்றுதொடங்கி, அருளாயென்றந்வயம் ....................*

---

## மூன்றும்பாட்டு.

வண்ணமருள்கொளணிமேகவண்ணுமாயவம்மானே
யெண்ணம்புகுந்துதித்திக்குமமுதேயிமையோரதிபதியே
தெண்ணலருவிமணிபொன்முத்தலைக்குந்திருவேங்கடத்தானே
யண்ணலேயுன்னடிசேரவடியேற்காவாவென்னுயே.

### ஆறுயிரப்படி.

( வண்ணமருள்கொள் ) நிர்ஹேதுகமாகச்செய்யக்கடவதோவெ ன்னில் ;

உன்னேடு ஸம்ஶ்லேஷிக்கைக்கு * அயர்வறுமமரர்களுளராயிரு க்கச்செய்தே கேவல க்ருபையாலே நிரதிசய ரமணீய நீலமேக ஸத்ருஶா ம்ப்சர்யபூத திவ்யரூப விசிஷ்டனுய்க்கொண் டென்னெஞ்சு நிறையப்புகு ந்தெனக்கினியையானுப்போலே, இன்னமுன்க்ருபையாலே,ஸுப்ரஸந்ந ரமணீய ஸலிலஸரித்தரங்க பரம்பராநீதமான விமலருசி விவிதமணிகநக மௌக்திக நிகரங்களாலே விராஜமாநமான திருமலையிலே நின்றருளின வுன்திருவடிகளிலே, பிரானே, என்னைச்சேர்த்தருளவேணுமென்கிறுர்*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், உன்னுடைய ரூபத்தாலும் குணத்தாலு மினிமையாலும் சூரிகளுக் குத்துங்காநுபாவ்யனு யிருக்கிற நீ, அபேக்ஷா நிரபேக்ஷமாகத் திருமலையிலே யாஸ்ரயணீயனுய்வந்தவோபாதி அடியோங்களுக்கிரங்கி யருளவேணு மென்கிருர்.

வண்ணம் - நிறத்தில். மருள் - பிச்சு. கொள் - ஏறும்படியான. அணி-அழகையுடைத்தாயுள்ள. மேகம் - மேகம்போன்ற. வண்ணு-வடிவையுடையனுய். மாயம் - ஆஸ்சர்யாவஹமானகுணங்களால். அம்மானே - சர்வாதிகனுய். புஜிக்கவொட்டாதபடி, எண்ணம்-நெஞ்சுக்குள்ளே. புகுந்து - புகுந்து. தித்திக்கும்-ரஸிக்கும். அமுதே - அம்ருதமாய். இந்த விக்ரஹகுண ஸாரஸ்யங்களை, இமையோர் - நித்யசூரிகளுக் கநுபவிப்பிக்கும். அதிபதியே - மேன்மையையுடையனுய். தெள் - தெளிந்து. நல் - தர்ஸநீயமான. அருவி - அருவிகள். மணி - மணியையும். பொன்-பொன்னையும். முத்து - முத்தையும். அலைக்கும் - அலைக்கும். திருவேங்கடத்தானே - திருமலையிலே ஸந்நிஹிதனுய். அண்ணலே-அஸாதாரண சேஷித்வத்தை ப்ரகாசிப்பித்துக்கொண்டு நிற்கிறவனே. உன் - உன்னுடைய. அடி - ப்ராப்தமானதிருவடிகளை. சேர - சேரும்படி. அடியோர்க்கு - சேஷபூதரான வெங்களுக்கு. ஆ ஆ - ஐயோ! ஐயோ!. என்னுய் - என்றிரங்கியருளவேணும்.

வண்ணமருளென்று - உதாரஸ்வபாவமென்றுமாம்.........................*

## ஈடு - மூன்றும்பாட்டு.

" அருளாய் " என்றீர், இங்ஙனே நினைத்தபோதாக வருளப்போமோவென்ன; வ்யதிரிக்தவிஷயங்களில் போகாதபடியான ஜ்ஞாநலாபத்தைப்பண்ணித்தந்த வுனக்கு, ப்ராப்திபண்ணித்தருகை பெரியபணியோவென்கிருர். என்னுல் வந்த குறையறுத்த வுனக்கு, உன்னுல் வரும் குறையறுக்கை பெரியபணியோ.

(வண்ணமித்யாதி) வண்ணமானது - ப்ரகாரமானது, அருள்கொண்டிருப்பதாய், தர்ஸநீயமான மேகம்போன்ற வடிவையுடையவனே. அன்றிக்கே, வண்ணமானது - வடிவானது, கண்டார்நெஞ்சை யிருளப்பண்ணக்கடவதா யிருக்கையென்றுமாம்; * மைப்படிமேனியிறே. அங்ஙனுமன்றிக்கே மேகத்தினுடைய வகவாய் கல்லென்னும்படியாயிற்றுத் திருமேனியிலுண்டான ப்ரஸாதாதிசய மிருக்கிறபடி. (மாயவம்மானே) வெறும் வடிவழகே யன்றிக்கே, ஆஸ்சர்யமான குணசேஷ்டிதங்களால் பெரியனுனவனே. ( எண்ணம்புகுந்துதித்திக்குமமுதே ) விலக்ஷண ஜந்மத்தே பிறந்தொரு சாதநாநுஷ்ட்டாநம்பண்ணி அத்தாலே பெற்று புஜிக்கும்போ தினிதாகையன்றிக்கே, இன்னுர்க்கென்றன்றிக்கே மநோரதமாத்ரத்திலேதானே வந்து புகுந்து போக்யமாகை. * உள்ளுந்தோறுந்தித்திக்குமமுதிறே. ( இமையோரதிபதியே ) மதுவ்ரதம்போலே யிவ்வம்ருதமே ஜீவநமாகவிருக்கு மவர்கள். (தெண்ணலருவியித்யாதி) தெளிந்து நன்றுன வருவிகளானவை, விலக்ஷணமான மாணிக்கங்களையும் பொன்களையும் முத்துக்களையும் கொழித்தெறட்டுகிற திருமலையிலே நின்றருளு

கிற சர்வேஶ்வரனே. ( அண்ணலே ) திருமலையிலே வந்து நின்று என க்குன் சேஷித்வத்தை யுதறிப்படுத்தவனே. இமையோ ரதிபதியா யிருந் துவைத்து - வண்ணமருள்கொ ளணிமேகவண்ணனாய் மாயவம்மானாய்- தெண்ணலருவி மணிபொன் முத்தலைக்கும் திருவேங்கடத்தானாய் அண் ணலாய்க்கொண்டு - எண்ணம்புகுந்து தித்திக்குமமுதேயென்கிறார்.

( உன்னடிசேரவடியேற்காவாவென்னாயே ) கிட்டி நின்று முறை யை யறிவித்த நீ, ப்ராப்தியையும் பண்ணித்தாராய். உன்றிருவடிகளை ப் ராபிக்கும்படி, அநந்யகதியான வெனக்கு ஐயோ ! ஐயோ ! என்று த யையைப்பண்ணாய். உன்னடி யன்றோ. ப்ராபகமுமாய் ப்ராப்யமுமாய் போக்யமுமான திருவடிகளைச் சேரும்படி க்ருபைபண்ணியருளாய். ...*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு (வண்ணமித்யாதி) “ எண்ணம்புகுந்துதித்திக்கு மமுதே ” என்றத்தைப்பற்ற வருளிச்செய்கிறார் ( வ்யதிரிக்தேத்யாதி ) ஜ்ஞாநலாபத்தைப்ப ண்ணித்தந்தவென்றது - “ அண்ணலே ” என்றத்தைப்பற்ற. விவரணம் ( என்னாவி த்யாதி )

முந்தினவர்த்தம்; “வண்ணம்” என்று - ஸ்வபாவமாய், கொள்கை - உடை த்தாகையாய், க்ருபையோடேகூடின ஸ்வபாவத்தையுடைத்தாய் தர்ஶநீயமான மேகம்போன்ற வடிவையுடையவனேயென்று. “அருள்கொள்-வண்ணம்” என்று- * மேகத்துக்கு விசேஷணமாதல், க்ருபையோடேகூடின ஸ்வபாவத்தையுடைய னாயென்று அவனுக்குவிசேஷணமாதல். த்விதீயார்த்தத்துக்கு, “ வண்ணம் ” என் று-வடிவாய், வடிவாலே, மருளை - ப்ராந்தியை விளைக்கக்கடவதாய், தர்ஶநீயமா ன மேஹம்போன்ற வடிவையுடையவனே யென்றபடி. “மருள்கொள்-வண்ணம்” என்றந்வயிப்பது. இப்போதும், * மேகத்துக்குவிசேஷணமாதல்; எம்பெருமானுக் கு விசேஷணமாதல். மருட்சியைக்கொள்ளுகையாவது - கொள்ளும்படி பண்ணு கை. இதுக்குப்ரமாணம் (மைப்படியித்யாதி) கண்ணார்நெஞ்சிலேமையல் படியும்ப டியான மேனியென்றபடி. அன்றிக்கே, கறுப்புமாத்ரத்துக்கு ப்ரமாணமாதல். த் ருதீயார்த்தத்துக்கு, க்ருபாஸ்வபாவத்தையுடைத்தாய் தர்ஶநீயமான மேகம்போ ன்றவடிவையுடையவனென்றபடி. இப்போது, “அருள்கொள்-வண்ணம்” என்றது- திருமேனிக்குவிசேஷணம். “ அருள்கொள்-வண்ணம் ” என்று-திருமேனியின் ப்ர ஸாதாதிசயஞ்சொல்லுகையாலே, மேகத்தினகவாய் கல்லென்னும்படி யிருக்குமெ ன்றது சித்தம்.

“ எண்ணம் ” என்று - மநோரதமாத்ரத்திலே யென்றபடி. “ எண்ணம்பு குந்து தித்திக்குமமுது ” என்கையாலே - தேவர்க ளம்ருதத்தில் வ்யாவ்ருத்திய ருளிச்செய்கிறார் (விலக்ஷணேத்யாதி) இன்னாருடைய வெண்ணத்திலேயென்று வி சேஷியாதே சாமாந்யேந சொல்லுகையாலே யருளிச்செய்கிறார் (இன்னார்க்கென் றன்றிக்கேயித்யாதி) அப்படி மநோரதமாத்ரத்திலே போக்யமாயிருக்குமோவெ ன்ன (உள்ளுந்தோறுமித்யாதி) நினைக்குந்தோறுமித்யர்த்தஃ.

“ தித்திக்குமமுதே ” என்றவநந்தரம் “ இமையோரதிபதி ” என்றதுக்கு பாவம் ( மதுவ்ரதம்போலேயித்யாதி )

"நல்" என்கிறத்தை - மாணிக்யாதிகளோடுங்கூட்டி (விலக்ஷணமானமாணிக்கங்களையும்) என்கிறார்.

"திருவேங்கடத்தானே - அண்ணலே" என்றதுக்கு தாத்பர்யாந்தரம் (திருமலையிலேயித்யாதி) உதறிப்படுத்தவனென்றது - நிஸ்ஸம்ஸயமாக்கினவனென்றபடி. ஸ்த்திரீகரித்தவனென்றபடி. அவதாரிகையிலே யருளிச்செய்ததுக்குச்சேர வந்வயங்காட்டுகிறார் (இமையோரதிபதியாயித்யாதி) "அண்ணலே, உன்னடிசேர" என்றதுக்குபாவம் (கிட்டிநின்றித்யாதி) சப்தார்த்தம் (உன்திருவடிகளையித்யாதி) (உன்னடியன்றே) என்றதின் விவரணம் (ப்ராபகமுமாயித்யாதி) ப்ராப்யமுமாயென்றது - ப்ராப்தமுமாயென்றபடி.........................................*



# நான்காம்பாட்டு.

ஆவாவென்றுதுலகத்தையலைக்குமசுரர்வாணுண்மேற்
றீவாய்வாளிமழைபொழிந்தசிலையாதிருமாமகள்கேள்வா
தேவாசுரர்கள்முனிக்கணங்கள்விரும்புந்திருவேங்கடத்தானே
பூவார்கழல்களருவினையேன்பொருந்துமாறுபுணராயே.

## ஆறாயிரப்படி.

(ஆவாவென்றுது) நிர்க்ருணரான வஸுரராலே யுபத்ருதமான லோகத்தினுடைய வ்யஸநம் பொறுக்கமாட்டாமை, அவ்வசுரருடல் ஶராக்நியாலே தக்தமாம்படி யவர்கள் ப்ராணங்கள்மேலே ஶரவர்ஷத்தை வர்ஷித்துலோகத்தை நிருபத்ரவமாக்கினாப்போலே, நித்யசித்தபுருஷர்களுக்கும் ஸ்ப்ருஹணீயமான திருமலையிலே பிராட்டியோடே கூடநின்றருளின வுன்னுடைய நிரவதிகபோக்யமான திருவடிகளைச் சேருகைக்கு எனக்கென்னவே யபூர்வமாயிருப்பதோருபாயத்தைப்பரிகல்பித்து, அவ்வுபாயத்தாலே யென்னைச்சேர்த்தருளி, அடியேனுடைய சமஸ்த துஃகத்தையும்போக்கி யருளவேணுமென்று ப்ரார்த்திக்கிறார்..................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஜகத்துக்கு விரோதிகளானவை யழியச்செய்யும் ஸ்ரீமத்தையையுடையநீ, உன்நிரதிசயபோக்யமான திருவடிகளை நான்கிட்டும்படி பண்ணி யருளவேணுமென்கிறார்.

உலகத்தை - லோகத்தை. ஆஆ - ஐயோ!ஐயோ!. என்றுது - என்றிரங்காதே. அலைக்கும் - நலிந்தலைக்குமவர்களான. அசுரர் - ஆசுரப்ரக்ருதிகளுடைய. வாணுள்மேல் - ப்ராணன்விஷயமாக. தீவாய் - அக்நிமுகமான. வாளி - அம்புகளை. மழை - மழைபோலே. பொழிந்த - சொரிகிற. சிலையா - ஸ்ரீசார்ங்கத்தையுடையையாய். திருமாமகள் - அந்தவிரோதிநிரஸநத்தாலே ஹ்ருஷ்டையாய் வீரபத்நி

யாயுள்ளலக்ஷ்மிக்கு. கேள்வா - அநுரூபநாயகனாய். தேவா-அத்தாலேயுஜ்ஜ்வலரூபனாய். இந்தவிரோதிநிரஸநம்பற்றுசாக, சுரர்கள் - தேவர்களும். முனி - ருஷிகளும். கணங்கள் - திரள்திரளாக, விரும்பும் - ஆதரிக்கும்படியான. திருவேங்கடத்தானே - திருமலையிலேவர்த்திக்கிறவனே. பூ - அவர்களிட்டபூவாலே. ஆர் - நிறைந்த. கழல்கள் - திருவடிகளை. அரு - அநுபவயோக்யனாய் வைத்துஇழக்கும்படிதுஸ்தரமான. வினையேன் - பாபத்தையுடையேனானநான். பொருந்தும் - கிட்டும். ஆறு - ப்ரகாரம். புணராய் - கற்பித்தருளவேணும்.

புணர்த்தல்-கிட்டுவித்தலாய், சேர்த்துக்கொண்டருளவேணுமென்றுமாம்.*

## ஈடு - நான்காம்பாட்டு.

உன்னை ப்ராபிக்கைக் குறுப்பாக நீகண்டு வைத்தசாதநங்களொன்றுக்கொன்று முடலாகிறனவில்லை; ஆனபின்பு, தேவரைநான் ப்ராபிக்கைக்கு எனக்கென்னத்தனியேயொருசாதநங்கண்டுதரவேணுமென்கிறார்.

நம்பிள்ளை ஜீயரையொருநாள் "'பஞ்சமோபாயமென்று கொண்டொன்றுண்டு' என்றுசொல்லாநின்றார்கள், நாட்டிலேயுமங்ஙனேயிருப்பதொன்றுண்டோ" என்றுகேட்டருள, "நானறிகிறிலேன்; இனி சதுர்த்தோபாயந்தான் பகவானேயாயிருக்க, வ்யோமாதீதஞ்சொல்லுவாரைப்போலே 'அவனுக்குமவ்வருகேயொன்றுண்டு' என்கையிறே, அதுநான்கேட்டறியேன்" என்றருளிச்செய்தார். "ஆனால், 'ஆவா' என்கிறபாட்டருளிச்செய்யும்போது, 'எனக்குத்தனியே யொருசாதநங்கண்டுதரவேணுமென்கிறார்' என்றருளிச்செய்கையா யிருக்குமே" என்ன; "அதுவோ!, அதுன்ப்ரதிபத்தியில் குற்றங்காண்; அதுக்கிங்ஙனேகாண் பொருள்-நீயுமுளையாயிருக்க நானிங்ஙனேயிழப்பதேயென்கிறார்காண்" என்றருளிச்செய்தார். [ஸாஹம்கேஶக்ரஹம்ப்ராப்தா-த்வயிஜீவத்யபிப்ரபோ] [ஸாஹம்கேஶக்ரஹம்ப்ராப்தா-த்வயிஜீவத்யபிப்ரபோ] நீயுமுளையாயிருக்க, என்மயிரைப்பிடித்துச் சிலர்நலியும்படி நான்பரிபூதையாவதே. உன்சத்தைக்கு மென்பரிபவத்துக்கு மென்ன சேர்த்தியுண்டு. [ப்ரபோ] [ப்ரபோ] நீயுமென்னொடொக்க ஸ்த்ரீயாயாகில்நானுறியிருக்கலாயிற்றே, நீபரிப்ருடனாயிருக்கச்செய்தே நான்நோவுபடுவதே!. நஞ்சீயர் ஸ்ரீபாதத்திலே யாஶ்ரயித்தானொருவன், "எம்பெருமானேயுபாயமாகில் ப்ரபத்திகொண்டிங்குச் செய்கிறதொன்றுங்கண்டிலேன்" என்ன; செவியைப்புதைத்து, "நாதமுநிகள்தொடங்கியிவ்வளவும் வரநம்மாசார்யர்கள் பரமரஹஸ்யமாக வுபதேசித்து ஓராண் வழியாய்க் கொண்டுபோந்தவித்தை, இதின்சீர்மையறியாத வுனக்கு மஹாபாபி யேனித்தை வெளியிடுவதே!" என்றுதிருமுடியிலே யடித்துக்கொண்டு திருப்பள்ளியறையிலேபுக்கருளினார். திவ்யமங்களவிக்ரஹமும் விக்ரஹகுணங்களும் திவ்யாத்மஸ்வரூபமும் ஸ்வரூபகுணங்களும் நித்யமுக்தர்க்கு ப்ரா

ப்யமானுப்போலே, முமுக்ஷுவாய்ப்ரபந்நனை விவ்வதிகாரிக்கு த்வயசரீரமே ப்ராப்யமாயிருக்குமிறே.

(ஆவாவென்னுது) ஈப்ஸ்வரனுக்கு ப்ரியஞ்செய்கையாகிறது - அவன் விபூதியிலே க்ருபைபண்ணுகையிறே. நஞ்சீயர் "ஒருவனுக்குப்பரா நர்த்தமஸஹ்யமாயிருந்ததாகில், 'நமக்குபகவத்ஸம்பந்தமுண்டு' என்றறுதியிடலாம்; 'அதுப்ராப்தம்' என்றிருந்தானுகில், 'நமக்குபகவத்ஸம்பந்தமில்லை' என்றுதனக்கே கைவாங்கவமையும்" என்றருளிச்செய்தார். பிறராகிறுராரொன்னில், ஸ்வவ்யதிரிக்தர். ஆனுல்ப்ரதிகூலர் பக்கலிலும் க்ருபையைப்பண்ணவோவென்னில்; அப்படியேயன்றோவிவர்களுக்குமதம். "துர்வாஸனைகழிந் தநுகூலராகப் பெற்றிலோம்" என்றிருக்கவன்றோவேடுப்பது. அவன் "யதிவாராவணஸ்ஸ்வயம்" (யதிவாராவணஸ்ஸ்வயம்) என்றுல், அவன்விபூதியிலுள்ள விவனுக்கித்தனையும் வேண்டாவோ. ஆனுல், "நண்ணுவசுரர்நலிவெய்த" என்கிறவிடத்திலதெங்ஙனே சங்கதமாகிறபடியென்னில்; அதுக்கென், நண்ணுமைநிலைநின்றவன்று வத்யனுகிறுன். அக்நீஷோமீயஹிம்ஸையோபாதி அதுதானே ஹிதமாகக்கடவதிறே. இவனுடைய தண்ணியசரீரத்தைப்போக்கி நல்வழியேபோக்குகிறுனிறே. (ஆவாவென்னுது (லகத்தையலைக்கும்)) "ஐயோ, ஐயோ" என்னவேண்டியிருக்க, அதுக்குமேலேநலியாநிற்பர்கள். ஒருவனேடேஸாத்ரவம்பண்ணிறைகில், "அர்த்தகாமநிமித்தமாகவிறே யிது வந்தது, இருவரும்சபலர்" என்றிறேயிருக்கலாவது; அங்ஙனன்றிக்கே, உலகத்தைஅலைப்பர்களாயிற்று. தன்னேடொக்க வுண்டுடுத்துத் திரிகிறவிதுவே ஹேதுவாகநலியாநிற்பர்களாயிற்று. (அசுரர்) அதுக்கடி-அவர்களாசுர ப்ரக்ருதிகளாகையாலே. (வாணுள்மேல்) இவர்கள்வீரக்கோலத்தால் வந்தவொப்பனை குறியழியாதே யிருக்க, உயிரிலேநலிகை. அதாவது - இவர்கள்ஜீவநஹேதுவான காலத்தைநலிகை. (தீவாய்வாளி) பெருமாள்தொடுத்து விடும்போதாயிற்று "அம்பு" என்றறியலாவது; படும்போதுநெருப்புப்பட்டாப்போலே யிருக்கை. ஸ்ரீசார்ங்கத்தில் நாணியைக்கழிந்தபோதே, காலாக்நிகவடுவிட்டாப்போலே யெரிந்துகொண்டு செல்லாநிற்கும். குணஹீநமானுலிருக்கும்படியிறேயிது. [தீப்தபாவகஸங்காஸை:] [தீப்தபாவகஸங்காஸை:] படும்போதிருக்கும்படி. [ஸிதை:] [ஸிதை:] பட்டமைதெரியாதேதொளையுருவி அவ்வருகேவிழக்காணுமித்தனை. [காஞ்சநபூஷணை:] [காஞ்சநபூஷணை:] இவற்றுக்காகாரத்வயமுண்டாயிருக்கிறபடி. "சரங்களாண்ட தண்டாமரைக்கண்ணனுக்கன்றியென் மனந்தாழ்ந்துநில்லாது" என்கிறபடியே, அநுகூலர்க்ககப்படுகைக்கு மதுதானேயாயிருக்கிறபடி. [நதாவிச்சாமீத்யாதி] [நத்வாமிச்சாமீத்யாதி] இவ்வழகுக்கிலக்காய் வாழ்ந்துபோகலாயிருக்க, எதிரிட்டுமுடிந்துபோக நானிச்சிக்கிறிலேன். நீயெண்ணியிருக்கிறதுநானறி

கிறிலேனிறே. இருத்திப்பிடித்தவில்லும், தெரித்துப்பிடித்தபகழியுமாய்க்கொண்டு நிற்கும்போது அபிராமராயிறேயிருப்பது; அவ்வழகைக்கண்டநுபவிக்கமாட்டாதே,தண்ணீர்குடிக்கக்கல்லினவேரியிலே தலைகீழதாக விழுந்துமுடிவாரைப்போலே, * தயரதன்பெற்ற மரதகமணித்தடத்தையெதிரிட்டுமுடிந்துபோகநான்காணமாட்டுகிறிலேன். (வாளிமழைபொழிந்தசிலையா) "ஶரவர்ஷம்வவர்ஷஹ" (ஶரவர்ஷம்வவர்ஷஹ) என்கிறபடியே. பாட்டம்பாட்டமாகவர்ஷித்தபடி. (திருமாமகள்கேள்வா) விரோதிகளைப்போக்கினதுகண்டுகந்தணைக்குமவளைச்சொல்லுகிறது. "பர்த்தாரம் பரிஷஸ்வஜே" (பர்த்தாரம்பரிஷஸ்வஜே) என்னுமவள். [தம் த்ருஷ்ட்வா][தம் த்ருஷ்ட்வா] வெறும்புறத்திலே யாலத்திவழிக்கவேண்டும்படியான வழகையுடையவனை, எதிரிகளைவென்ற வீரக்கோலத்தோடே கண்டாள். [ஶத்ருஹந்தாரம்][ஶத்ருஹந்தாரம்] தந்திருமேனியிலே யொருவாட்டம் வாராமே, அவர்களைக்குற்றுயிராக்கி விடுவதுஞ்செய்யாதே, துண்டித்தடுக்கினவனை. முன்பு திருவயோத்யையிலிருந்த நாள், "இவர்வேட்டைக்குப்போனவிடத்தே யின்னபடியுமின்னபடியும்பொருதார், இன்னபுலியைக்குத்தினர், இன்னசிம்ஹத்தைக்குத்தினர்" என்றுப்போலேபந்துக்கள் சொல்லக்கேட்கு மத்தனையிறே; இங்குப் பூசலுக்குப்புகுகிறபோதே பிடித்துமேலுள்ள வ்யாபாரங்க ளடங்கலுங்கண்டாள். [மஹர்ஷீணாம்ஸுகாவஹம்][மஹர்ஷீணாம்ஸுகாவஹம்] ருஷிகளுடையவிரோதிகளைப்போக்கி, அவர்களுக்குக் குடியிருப்புப்பண்ணிக்கொடுத்தவனை. தங்கள்தபோபலத்தாலே வெல்லலாயிருக்க. தங்கள்பரத்தைப்பெருமாள் தலையிலே பொகட்டுமுறையுணர்ந்து கொண்டிருக்குமவர்களுக்கு. [கர்ப்பபூதாஸ்தபோதநா:] [கர்ப்பபூதாஸ்தபோதநா:] தந்தாம்கைம்முதலழியமாறுதே யிருக்குமவர்கள். தபோதநராயிருக்கச்செய்தே கர்ப்பபூதராயிருப்பர்கள். தந்தாமுக்கென்னவியற்றியுண்டாயிருக்கச்செய்தே; கர்ப்பாவஸ்த்தையில் ஜநநியறிந்து ரக்ஷிக்குமத்தனையிறே, அப்படியே அவனேயறிந்து ரக்ஷிக்கவிருக்குமவர்கள். அநுகூலரக்ஷணமும் ப்ரதிகூலநிரஸநமுமிவளுக்கு ப்ரியமாகச்செய்யுமவையிறே. [பபூவ] [பபூவ] பதினாலாயிரம் முருட்டுராக்ஷஸரோடேதனியேநின்று பொருகிறவித்தைக்கண்டஞ்சி, "இதென்னாய்விளையுமோ" என்றுசத்தையழிந்துகிடந்தாள்; இப்போதுளளானாள். "ப்ரஸத்தாயாம்"(பூஸத்தாயாம்) [ஹ்ருஷ்டா] [ஹ்ருஷ்டா] சத்தையுண்டானாலுண்டாமதுவுமுண்டாயிற்று. [வைதேஹீ] [வைதேஹீ] உபாத்யாயர்கள் பெண்பிள்ளைகளுக்குச் செவியேற்றுலேயோத்துப் போயிருக்குமாபோலே, வீரவாசியறியுங்குடியிலேபிறந்தவளிறே, ஒருவில்லுமுறித்த விதுக்குகந்தென்னைக்கொடுத்த வெங்களையர், பதினாலாயிரம்பேரைத் தனியேநின்றுமுடித்தவித்தைக்க

ண்டாலென்படுகிறுர்தான். [ஸ தூாரஃ][பர்த்தாரம்] முன்பு, இவர்சுகுமாரராகையாலே “ குழைசரக்கு ” என்றும், “ ஐயர்நம்மையிவர்க்குநீர்வார்த்துக்கொடுக்கையாலே நாமிவர்க்குசேஷம் ” என்றுமணைத்தாளத்தனை; “ ஆண்பிள்ளை ” என்றணைத்ததிப்போது. [வரிஷஜெ][பரிஷஸ்வஜே] ராவணஸமராய், அவன்மதித்த வீரத்தையுடையரா யிருப்பார்பதினலாயிரம்பேரும்[விட்டவம்புகளடங்கலுமிவர்மேலேபட்டு, கண்டவிடமெல்லாம் யுத்தவடுவாயிறே திருமேனிகிடக்கிறது; அவ்வோவிடங்கள்தோறும் திருமுலைத்தடத்தாலே வேதுகொண்டாள். திருமாமகள்கேள்வா) உனக்குசக்திவைகல்யமுண்டா யிழக்கிறேனே, புருஷகாரமில்லாமலிழக்கிறேனே. (தேவா) இவளணைத்தபின்பு திருமேனியிற்பிறந்தபுகர். அன்றியே, விரோதிகளைப்போக்குகையாலே வடிவிலேபிறந்த காந்தியைச்சொல்லவுமாம். (“ நம்முடைய விரோதிகளைப் போக்கினவன்வர்த்திக்கிறதேசம் ” என்று, தேவர்களும் ருஷிகளும் தங்களபிமதங் கிடைக்குமென்றுதரிக்கிற திருமலை.) ( சுரர்களித்யாதி ) அநுகூலரடையத்திரண்டு படுகாடுகிடக்கும்தேசம். (பூவார்கழல்கள்) பூவாலல்லது செல்லாததிருவடிகளென்னுதல், பூவோடொத்ததிருவடிகளென்னுதல். (அருவினையேன்) அவன்ப்ரதிபந்தகங்கள் போக்கவல்லனுயிருப்பது, எனக்காசைகரைபுரண்டிருப்பது, திருவடிகள் நிரதிசயபோக்யமாயிருப்பது; இங்ஙனேயிருக்கச்செய்தே, கிட்டியநுப விக்கப்பெறுதபாபத்தைப் பண்ணினேன். (பொருந்துமாறுபுணராயே) அசோகவநிகையிலே யிருந்தபிராட்டியோபாதிகாணும் தம்மைநினைத்திருக்கிறது. ( புணராயே ) உன்னைக்கிட்டும் வழிகல்பிக்கவேணு மென்னுதல், நான்கிட்டும்படிப்பண்ணவேணுமென்னுதல்.........................................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (ஆவாவித்யாதி) “ பொருந்துமாறுபுணராய் ” என்றதிலேநோக்காகவவதாரிகை (உன்னையித்யாதி) (தனியேயொருசாதநங்கண்டுதரவேணும்) என்றதுக்குக்கருத்து - நான்பண்ணினபாபத்துக்கு நீ ஸ்ருஷ்டித்தநரகங்கள்போராது, எனக்கென்ன வொருநரகம் கல்பிக்கவேணுமென்றுல் - கல்பிக்கவேணுமென்று ப்ரார்த்திக்கிறதன்றே, பரமதயாளுவாய் சக்திமானுன நீயத்தைப்போக்கவேணுமென்று கருத்தாமாப்போலே, ஸித்தோபாயமான நீயேரக்ஷிக்கவேணுமென்று. ஒன்றுமுடலாகிறனவில்லையென்கையாலே - கர்மஜ்ஞாநாதிகள்போலே சித்தோபாயமுமுடலன்றென்று தோற்றினும், சித்தோபாயமானநீயே யவிளம்பேந செய்யவேணுமென்று பதற்றஞ்சொல்லுகிறது. இந்தப்ரஸங்கத்திலே, “ சதூர்த்தோபாயமான வீஶ்வரனையொழிய வேறுபாயமில்லை ” என்கைக்கு சம்வாதமாக வைதிஹ்யம் (நம்பிள்ளையித்யாதி) (வ்யோமாதீதஞ்சொல்லுவாரைப்போலேயென்றது) வ்யோமசப்தத்தாலே - “ தத்ராவிஃஹாஂமநஃ ” ( தத்ராபிதஹராம்ககம் ) என்கிறபடியே நாராயணனைச்சொல்லி, “ தஸ்மிந்யதஃ ” ( தஸ்மிந்யதந்தஃ ) என்கிறபடியே யவனுக்கந்தர்யாமி - ருத்ரனென்றுசொல்லுவாரைப்போலே

யென்றபடி. இப்படிசொல்லுகிறவர்கள் - பாசுபதர். "ஈஶ்வரவ்யதிரிக்தோபாயமில்லையென்றால், ஆசார்யாபிமாநத்தை - பஞ்சமோபாயமென்கிறத்தோடு விரோதியாதோ" என்றுகேட்க; "வ்யூஹவாஸுதேவனை பரவாஸுதேவரோடே யந்தர்ப்பூதமாக்கி த்ரிவ்யூஹமென்கிறுப்போலே, ஆசார்யாபிமாநம் ஸ்வதந்த்ரோபாயமாகிலும் 'ஆசார்யனைப் பற்றுகை, காலைப்பிடித்துக் காரியங்கொள்ளுமோபாதி' என்று சித்தோபாயாந்தர்ப்பூதமாகையாலே, ஆசார்யாபிமாநம் சித்தோபாயாநந்யமே; அஞ்சாமுபாயமென்கிறது - கார்யகரத்வத்தி னமோகத்வத்தைப்பற்ற" என்றருளிச்செய்வர். ஆசார்யனுக்கு கடகத்வம் பிராட்டி ப்ரத்யாசத்தியாலே யானுப்போலே, உபாயத்வமும் பகவத் ப்ரத்யாசத்தியாலேயிறே. ப்ரதிபத்தியில் குற்றங்காணென்றது - அதுக்கு தாத்பர்ய மறியாய்கா ணென்றபடி. "நீயுமுனையாயிருக்க நானிங்ஙனே யிழப்பதே" என்று வெறுக்கிறு ரித்தனைபோக்கி, வேறொருபாயங்கண்டு தரவேணுமென்று கேட்கிறானென்றென்றபடி. அவனை யப்படி வெறுத்தபேறுண்டோவென்ன (ஸாஹமித்யாதி) "ஸாஹம்கேஶக்ரஹம்ப்ராப்தா பரிக்லிஷ்டாஸபாம்கதா । பஶ்யதாம்பாண்டுபுத்ராணாம் த்வயிஜீவத்யபி ப்ரபோ" (ஸாஹம்கேஶக்ரஹம்ப்ராப்தா பரிக்லிஷ்டாஸபாம்கதா| பஶ்யதாம்பாண்டுபுத்ராணாம் த்வயிஜீவத்யபி ப்ரபோ) இதி மஹாபாரதே. "த்வயிஜீவதிஸத்யபி - ஸாஹம்கேஶக்ரஹம்ப்ராப்தா" (த்வயிஜீவதிஸத்யபி - ஸாஹம்கேஶக்ரஹம்ப்ராப்தா) என்றந்வயித்து பாவம் (நீயுமித்யாதி) விவரணம் (நீபரிப்ருடனித்யாதி) சதுர்த்தோபாயமீஶ்வரனென்றுர் - கீழ்; ஆனால் ப்ரபத்திகொண்டு கார்யமில்லையோவென்கிற சங்கையை பரிஹரிக்கைக்காக வோனைதிஹ்யம் (நஞ்சீயரித்யாதி) அவர் கேட்டதுக்கு பரிஹாரமேதென்ன (திவ்யமங்களேத்யாதி) இத்தால் - உபாயம் சித்தமானாலும் ஸ்வீகாரம்வேண்டுகையாலே ப்ரதம தசையிலே யதிகாரிவிசேஷணமாய், உத்தரோத்தரதசையில் ப்ராப்யமாயிருக்குமென்றதாயிற்று. திருப்பள்ளியறையிலே புக்கதுக்குக் கருத்து - துःகிதனானவ னுப்தபந்து சமீபத்திலே போமாப்போலே போனுனென்றுதல், இவனுக்கு நல்லபுத்தியை ப்ரார்த்திக்கைக்காகவாதல். திருப்பள்ளியறை - பெருமாளது.

"ஆவாவென்றது" என்றதென்னென்ன (ஈஶ்வரனுக்கித்யாதி) ஈஶ்வரப்ரீத்யர்த்தமாகவன்றிக்கே, பகவத்ஸம்பந்தமுண்டாம்போதும் "ஆவா" என்னவேணுமென்னுமத்தை யாப்தசம்வாதத்தாலே தர்சிப்பிக்கிறுர் (நஞ்சீயரித்யாதி) (பராநர்த்தம்) என்கிறவிடத்தில், பரசப்த மாரைச் சொல்லுகிறதென்ன (பிறராகிறுரித்யாதி) ஆனால், ப்ராதிகூல்யம் வர்த்தியாதோவென்ன (துர்வாசனையித்யாதி) ப்ரதிகூலனுக்கும் ஹிதசிந்தை பண்ணுகைக்கு ஹேதுவேதென்ன (அவன்யதிவேத்யாதி) "விபீஷணோவாஸுக்ரீவயதிவாராவணஸ்ஸ்வயம்" (விபீஷணோவாஸுக்ரீவயதிவாராவணஸ்ஸ்வயம்) இத்யாதி. இங்கே - "யச்சீலஸ்ஸ்வாமீ தச்சீலோதாஸः" (யச்சீலஸ்ஸ்வாமீ தச்சீலோதாஸः) என்ற தநுஸந்தேயம். நிலைநின்றுலும் ஹிம்ஸை த்யாஜ்யமன்றோவென்ன (அக்நீஷோமீயேத்யாதி) அக்நீஷோமீயஹிம்சையில் "நவாஉவேதந்ம்ரியஸே" (நவாஉவேதந்ம்ரியஸே) இத்யாதிப்படியே- அப்பசுவுக்கு ஸ்வர்க்கங்கொடுத்து ஹிதஞ்செய்தாப்போலே, இவனுமவனுக்கு ஹிதஞ்செய்தானுவனென்றபடி. நரிஷ்யஸி - நக்ஷீயஸே இத்யர்த்தः. ஹிதமாம்ப்ரகா

ரமேதென்ன (இவனுடையவித்யாதி) மேலேயுங் கூட்டிக்கொண்டு பாவம் (ஐயோ வித்யாதி) "உலகத்தை" என்றதுக்கு பாவம் (ஒருவனோடேயித்யாதி வாக்யத்வயம்) அர்த்தகாமாதிநிமித்தமன்றாகில் நலிகைக்குஹேதுவேதென்ன (தன்னோடொக்கவித்யாதி) "வாணாள்மேல்" என்கிறதுக்கு வாசனை (இவர்களித்யாதிவாக்யத்வயத்தாலே) வாணாள் - ஆயுஸ்ஸு. "வாணாள்மேல்" என்கையாலே - சரீர முருவழியாதிருந்தமை தோற்றுகிறது. ஜீவநஹேதுவான காலத்தையென்றது - ஆயுஸ்ஸையென்றபடி.

"தீவாய்" என்றதுக்கும், "வாளி" என்றதுக்கும்வாசனை (பெருமாளித்யாதி) விவரணம் (ஸ்ரீரங்கத்திலித்யாதி) கவடுவிட்டாப்போலே - கிளைவிட்டாப்போலே. சாடு (குணஹீநமித்யாதி) "தீவாய்வாளி" என்றதுக்குப்ரமாணம் (தீப்தேத்யாதி) "தீப்தபாவகஸங்காஶைஶ்ஶிதைஃகாஞ்சநபூஷணைஃ। நத்வாமிச்சாம்யஹம்த்ரஷ்டும்ராமேணநிஹதம்ஶரைஃ" (தீப்தபாவகஸங்காஶைஶ்ஶிதைஃகாஞ்சநபூஷணைஃ। நத்வாமிச்சாம்யஹம்த்ரஷ்டும்ராமேணநிஹதம்ஶரைஃ) இதியுத்தகாண்டே ராவணம்ப்ரதிவிபீஷணஃ. (படும்போது) அக்நிகல்பமாய் (இருக்கும்படி) என்றுகூட்டுவது. க்ரௌர்யத்தினெல்லையை யருளிச்செய்கிறார் (பட்டமையித்யாதி) ஆகாரத்வயமாவது - "ஶிதைஃ" என்கையாலே ஆயுதத்வமும், "காஞ்சநபூஷணைஃ" (காஞ்சநபூஷணைஃ) என்கையாலே போக்யத்வமும். போக்யத்வமார்க்கென்ன (சரங்களாண்டவித்யாதி) திருமொழி ஏழாம்பத்து மூன்றாந்திருமொழி நாலாம்பாட்டு, "உரங்களால்" இத்யாதி. அம்புகளைநடத்தின புண்டரீகாக்ஷனை சர்வேஶ்வரனுக்கல்லது வேறுசிலர் விஷயமாக வென்னுடைய ஹ்ருதயத்தில் ருசிபிறவாதென்றபடி. தண்டாமரைக்கண்போலே சரங்களும் போக்யமென்றபடி. "அஹம் - நேச்சாமி" (அஹம் - நேச்சாமி) என்றதுக்குபாவம் (நீயெண்ணியித்யாதி) நானறிகிறிலேனென்கையாலே - உன்னுடையநினைவெனக்குத்தெரியாதென்றபடி. "ராமேண" (ராமேண) என்றதுக்கர்த்தம் (இருத்தியித்யாதி) பகழி - அம்பு. தெரித்து - அடுத்து. "ராமேண - ஶரைர்நிஹதம் - த்ரஷ்டும்நேச்சாமி" (ராமேண - ஶரைர்நிஹதம் - த்ரஷ்டும்நேச்சாமி) என்கையாலே பலித்தபாவம் (அவ்வழகையித்யாதி) இவரோரியோவென்ன (தயரதனித்யாதி) "மழைபொழிந்த" என்றதுக்குவாஸனை (ஶரவர்ஷமித்யாதி) "ததோராமோமஹாதேஜாதநுராதாயவீர்யவாந்। ப்ரவிஶ்யராக்ஷஸம்ஸைந்யம்ஶரவர்ஷம்வவர்ஷஹ" (ததோராமோமஹாதேஜாதநுராதாயவீர்யவாந்। ப்ரவிஶ்யராக்ஷஸம்ஸைந்யம்ஶரவர்ஷம்வவர்ஷஹ) இதியுத்தகாண்டே.

"வாளிமழைபொழிந்தசிலையா" என்றதுக்கநந்தரம் "திருமாமகள்" என்றதுக்குபாவம் (விரோதிகளைப்போக்கினதித்யாதி) அப்படியணைத்தாளோவென்ன (பர்த்தாரமித்யாதி) "தம்த்ருஷ்டாஶத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம்ஸுகாவஹம்। பபூவஹ்ருஷ்டாவைதேஹீபர்த்தாரம்பரிஷஸ்வஜே" (தம்த்ருஷ்ட்வாஶத்ருஹந்தாரம்மஹர்ஷீணாம்ஸுகாவஹம்। பபூவஹ்ருஷ்டாவைதேஹீபர்த்தாரம்பரிஷஸ்வஜே) இத்யாரண்யகாண்டே. "தம் - ஶத்ருஹந்தாரம் - த்ருஷ்ட்வா" (தம் - ஶத்ருஹந்தாரம் - த்ருஷ்ட்வா) என்கிறபதங்களுக்கர்த்தம் (வெறும்புறத்திலேயித்யாதி) "தம்" என்ற ப்ரஸித்தியாலே - ஸ்வாபாவிகமான வழகைச்

சொல்லுகிறது. “ ஶத்ரு ” என்கிறபதத்துக்கும், “ ஹந்தாரம் ” என்கிறபதத்துக்கும் வ்யாவ்ருத்தி பூர்வகமாகபாவம் (தந்திருமேனியிலேயித்யாதி) “ த்ருஷ்ட்வா ” (த்ருஷ்ட்வா) என்கிறதுக்குபாவம் ( முன்பு திருவயோத்யையிலித்யாதிவாக்யத்வயந்தாலே ருஷிகளுக்கு சுகாவஹரான தெய்வமழியாலேயென்ன (ருஷிகளுடைய வித்யாதி) “ருஷீணாம்” (ருஷீணாம்) என்றதுக்குபாவம் (தங்களித்யாதி) அதாவது - “ருஷிதர்ஶநே” (ருஷிதர்ஶநே) என்று; ஈஶ்வரனேரக்ஷகன், நாம் ரக்ஷ்யரென்கிற ஜ்ஞாநத்தையுடையவர்களென்றபடி. அப்படி யவனிடத்திலே ந்யஸ்தபரரோவென்ன (கர்ப்பபூதாஇத்யாதி) “ ந்யஸ்ததண்டாவயம்ராஜந் ஜிதக்ரோதாஜிதேந்த்ரியா: । ரக்ஷிதவ்யாஸ்த்வயாஶஶ்வத் கர்ப்பபூதாஸ்தபோதநா: ” (ந்யஸ்ததண்டாவயம்ராஜந் ஜிதக்ரோதாஜிதேந்த்ரியா: । ரக்ஷிதவ்யாஸ்த்வயாஶஶ்வத் கர்ப்பபூதாஸ்தபோதநா: ) இத்யாரண்யகாண்டே. இதுக்கர்த்தம் (நநதாமித்யாதி) உக்தத்தை சப்தத்திலே யேறிட்டுக்காட்டுகிறார் (தபோதநராயித்யாதி) விவரணம் (தந்தாமுக்கென்னவித்யாதி) இயற்றி - யத்நம். இப்படிரக்ஷிக்கிறதார்க்கு ப்ரியமாகவென்ன ( அநுகூலேத்யர்தி ) “ ஶத்ருஹந்தாரம்மஹர்ஷீணாம்ஸுகாவஹம் ” (ஶத்ருஹந்தாரம்மஹர்ஷீணாம்ஸுகாவஹம்) என்கிறத்தைப்பற்ற (அநுகூலரக்ஷணமும் ப்ரதிகூலநிரஸநமுமென்றது) “ ஶத்ருஹந்தாரம்த்ருஷ்ட்வா - பபூவ ” (ஶத்ருஹந்தாரம்த்ருஷ்ட்வா - பபூவ ) என்றுகூட்டிபாவம் (பதினாலாயிரமித்யாதி, “பபூவ” (பபூவ) என்றால் - உளளாகையைக்காட்டுமோவென்ன (பூஸத்தாயாமென்று) “ஹ்ருஷ்டா” (ஹ்ருஷ்டா) என்றத்தை - சகாரகர்ப்பமாக விவக்ஷித்தருளிச்செய்கிறார் (சந்தையுண்டானுலித்யாதி) பபூவ, ஹ்ருஷ்டாசேத்யர்த்த:. ஶத்ருஹந்தாவாகக்கண்டு பரிஷ்வங்கிக்கைக் கிவள் வீரவாசியறிகைக்கு ஹேதுவேதென்ன; “ வைதேஹீ ” (வைதேஹீ) என்றதுக்குபாவம் (உபாத்யாயரித்யாதி) “ வைதேஹி ” (வைதேஹி) என்றதுக்கு தாத்பர்யாந்தரம் (ஒருவில்லித்யாதி) (என்படுகிறார்தான்) என்று ஐயனை நினைத்தாளென்றுகூட்டுவது. “ஶத்ருஹந்தாரம்” (ஶத்ருஹந்தாரம்) என்றவநந்தரம் “ பர்த்தாரம் ” (பர்த்தாரம்) என்றதுக்குபாவம் (முன்பிவரித்யாதி) குறைசரக்கு - ரக்ஷ்யவஸ்து. “பரிஷஸ்வஜே” (பரிஷஸ்வஜே) என்றதுக்கு - பரிதஸ்ஸஸ்வஜே என்றுக்கி, எங்குங் கட்டிக்கொள்ளுகைக்கு ஹேதுவருளிச்செய்கிறார் (ராவணஸமராயித்யாதி) “ தீவாய்வாளிமழைபொழிந்தசிலையா, திருமாமகள்கேள்வா ” என்றபதத்வயப்ரயோகத்துக்கு ப்ரயோஜநம் (உனக்கு ஶக்தீத்யாதிவாக்யத்வயத்தாலே)

“தேவா” என்கிறத்தை - “ திருமாமகள்கேள்வா ” என்றத்தோடும், “தீவாய்வாளிமழைபொழிந்த சிலையா” என்றத்தோடுங்கூட்டி இரண்டுவகையாகபாவம் (இவளணைத்தபின்பித்யாதிவாக்யத்வயத்தாலே) படுகாடுகிடக்கும்தேசம்-ஈடுபட்டுக்கிடக்கும் தேசமென்றபடி. படுகாடு-வெட்டிவிழுந்தகாடு.

“ ஆர்தல் ” - பொருந்துதலாய், புஷ்பங்களோடு கூடியிருக்கிற திருவடிகளென்னுதல். இரண்டாமர்த்தத்துக்கு நிர்வாஹம்-ஸாத்ருஶ்யாகாரேண பொருந்துகையென்று கீழ்ற்பதங்களையுங்கடாக்ஷித்துபாவம் (அவன்ப்ரதிபந்தகங்களித்யாதி) “ ஆருவன்பிலடியேன் ” என்றத்தைப்பற்ற (எனக்காசை கரைபுரண்டிருப்பதென்றது) பெறுமாறென்னுதே, “பொருந்துமாறு” என்கையாலே - முன்புகூடியிருந்து

பிரிந்தவர்போலே யிருக்கிறுனென்கிறுர் (அசோகேத்யாதி) "ஆறு" என்று - வழியாதல்; ப்ரகாரமாதல். புண்ர்தல் - கற்பித்தல்..........................................*

# ஐந்தாம்பாட்டு.

புணராநின்றமரமேழன்றெய்தவொருவில்வலவாவோ
புணரேய்நின்றமரமிரண்டினடுவேபோனமுதல்வாவோ
திணரார்மேகமெனக்களிறுசேருந்திருவேங்கடத்தானே
திணரார்சார்ங்கத்துனபாதஞ்சேர்வதடியேனெந்நாளே.

## ஆருயிரப்படி.

(புணரா) இதுக்குமுன்பு க்லப்தமன்றியே யபூர்வமாயிருப்பதோருபாயத்தைப் பரிகல்பிக்க முடியுமோவென்னில்;

ஒரு திருச்சரத்தினுலே மஹீதரசந்நிபமான மராமரங்களேழையும் மஹீதரத்தையும் ரசாதலத்தையு முருவும்படியெய்த வுனக்கு முடியாததுண்டோ; ஆதலால், அன்றுனக்கொரு தீங்கு விளையாதபடி மருதின் நடுவேபோ யென்னுடைய மஹாபயத்தைப்போக்கி யென்னையுஜ்ஜீவிப்பித்தாப்போலே, சர்வபூதசரண்யமான திருமலையிலே ப்ரணதஜநதுரிதநிரஸந சமர்த்தமான ஸ்ரீசார்ங்கப்ரப்ருத்யசங்க்யேய திவ்யாயுதோபேதனுய்க்கொண்டு நின்றருளின வுன்திருவடிகளிலே சேர்த்தென்னை யுஜ்ஜீவிக்கப்பண்ணுவ தெந்நாளென்கிறுர்...................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதரக்ஷணுர்த்தமான வநாயாச வ்யாபாரத்தையுடைய வுன்திருவடிகளைச் சேர்வதெந்நாளென்கிறுர்.

செவ்வைகண்டிலக்குக் குறிக்கவொண்ணுதபடி, புணரா - திரளாக. நின்ற- நின்ற. மரம் - மராமரங்கள். ஏழு - ஏழையும். அன்று - மஹாராஜர் பலாதிசங்கை பண்ணின வன்று. எய்த - அவருக்கு விஸ்வாசம் பிறக்கும்படியாக வெய்த. ஒருவில்வலவா - ஏகதனுர்த்தரனுய். புணர் - சேர்த்தி. ஏய் - பொருந்தும்படி. நின்ற - நின்ற. இரண்டு - இரண்டு. மரத்தின் - மரத்தின். நடுவே - நடுவே. போன-போய. முதல்வா - ஜகத்துக்குக் காரணபூதனுனவனுய். திணர் - கதிப்பு. ஆர் - விஞ்சின. மேகம் - மேகங்கள். என - என்னலாம்படி. களிறு - யானைகள். சேரும் - சேர்ந்துவர்த்திக்கிற. திருவேங்கடத்தானே-திருமலையிலே சந்நிஹிதனுனவனே. திணர்-பிடித்தகை நிரம்பும் பெருமையை. ஆர் - உடைத்தான. சார்ங்கம்-ஸ்ரீசார்ங்கத்தையுடையனுன. உன - உன். பாதம் - திருவடிகளை. அடியேன் - உன்வீரசரிதத்துக்குத்தோற் றடிமைப்பட்ட நான். சேர்வது - சேருவது. எந்நாள் - எந்நாள். ஓ ஓ - ஓ ஓ வென்று - சேரப்பெறுத விஷாதாதிசயத்தைக் காட்டுகிறது.

திணர் - கதிப்பாய், பெருமையைச் சொல்லுகிறது. .............................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

நீரிங்ஙன் த்வரிக்கிறதென், உம்முடைய வபேக்ஷிதஞ் செய்கிறோ மிறே என்ன; அதென்றென்கிறார்.

( புணராவித்யாதி ) க்ஷத்ரியர் விற்பிடிக்கிறது ஆர்த்தத்வநி கேளாமைக்கன்றோ. "க்ஷத்ரியைர்த்தார்யதேசாபம் நார்த்தஶப்தோபவேதிதி." (க்ஷத்ரியைர்த்தார்யதேசாபம் நார்த்தஶப்தோபவேதிதி.) இலக்குக் குறிக்கப்போகாதபடி திரண்டு நின்ற வேழுமராமரங்களை முஷ்டியாலும் நிலையாலும் நேர்நிற்கப்பண்ணி யெய்த ஏகவீரனே. ஓ ஓ வென்று - விஷாததிசய ஸூசகம். ரக்ஷணத்தி லதிசங்கை பண்ணினானையும் விஸ்வசிப்பித்துக் காரியங்கொள்ளும் நீ, ஆசைப்பட்டவெனக் குதவவாராதொழிவதே. [ ஸுக்ரீவஸ்ஸங்கிதஸ்சாஸீதித்யாதி ] [ஸுக்ரீவஸ்ஸங்கிதஸ் சாஸீதித்யாதி] பெருமாளைக்கண்ட வன்றுதொடங்கி, மராமரங்களைப் பிளக்கவெய்யுந்தனையும் முடிய சங்கித்தே யிருந்தான். அந்தசங்காநிராகரணத்தைப்பண்ணி ரக்ஷித்த நீ, நிஸ்ஸங்கமாகப் பற்றின வென்னை ரக்ஷிக்கவேண்டாவோ. (புணரேயித்யாதி) ஒருநிரையாய்ச் சேர்ந்து நின்ற மருதுகளை யூடறுத்து, ஒன்றிலே வெளிகண்டு போவாரைப்போலே போய், ஜகத்துக்கு வேர்ப்பற்றான வுன்னைத் தந்தவனே. ப்ரளயகாலத்திலன்று, ஜகத்தையுண்டாக்கிற்றின்றாயிற்று. அற்றைக்கிவன்றானுண்டாகையாலே யுண்டாக்கலாம், இங்கு நிரந்வயவிநாசமிறே பிறக்கப்புக்கது. (முதல்வாவோ) ஜகத்தையுண்டாக்கினவனே. ஜகத்துக்கு வேர்ப்பற்றான தன்னையிறே நோக்கித்தந்தது. "ஸதேவஸோம்யேதமக்ரஆஸீத்" (ஸதேவஸோம்யேதமக்ரஆஸீத்) என்கிறபடியே. தானுளனாகவே யுண்டாமதிறேஜகத்து. இப்படியிருக்கிற தன்னளவிலேவந்த வாபத்தோ பரிஹரிக்கலாவது. ( திணரித்யாதி ) திண்மை மிக்கிருந்துள்ள மேகமென்னும்படி ஆனைகளானவை சேராநின்றுள்ள திருமலையிலே நின்றருளினவனே. மேகங்களோடே சர்வதா சாம்யமுண்டாகையாலே; மேகங்களைக் கண்டபோது ஆனையென்னலாய், ஆனைகளைக்கண்டபோது மேகமென்னலாயிருக்கும். "மதயானைபோலெழுந்த மாமுகில்காள்" என்னக்கடவதிறே. ஸமாநதர்மத்தால் வந்த சம்சயம் த்விநிஷ்டமிறே. விஷயங்களால் வருமந்யதாஜ்ஞாநத்தைக்கழித்து, அத்தேசத்தே பிறக்கு மந்யதாஜ்ஞாநத்தையாகாதே யிவர் கணிசிக்கிறது. அங்குள்ள தெல்லாம் போக்யமாய்த் தோற்றுகிறபடி. ( திணரார்சார்ங்கத் துனபாதம் ) திண்மை மிக்கிருந்துள்ள ஸ்ரீசார்ங்கத்தையுடைய வுன்னுடைய திருவடிகளை. "ஶரண்யம்ஶரணம்யாதா ராமம்தஶரதாத்மஜம்" ( ஶரண்யம்ஶரணம்யாதா ராமம்தஶரதாத்மஜம் ) என்கிறபடியே, சரண்யமான திருவடிகளை. சக்ரவர்த்தி பிள்ளைகளொடுக்குமத்தனைகாணும் வில்லு. ( திணரார்சார்ங்கம் ) தன்வளவிலே

விரோதிகளைத் தப்பாம லகப்படுத்திக்கொள்ளுகை. ( உனபாதம் ) அவ் வளவுக் ககப்படாதாரை முதலடியிலே யகப்படுத்திக்கொள்ளுமது.(சேர்வதடியேனெந்நாளே) கையில் வில்லிருக்க விழக்கவேண்டா "விரோதியுண்டு" என்று, இனி யுன்னைப் பெறும் நாளையாகிலும் சொல்லவேணும்..............................................................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. ( புணராவித்யாதி ) "என்னுள்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (நீரிங்ஙனித்யாதி)

"வில்வலவா" என்றதுக்கு பாவம் (க்ஷத்ரியரித்யாதி) உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் (க்ஷத்ரியைரித்யாதி) ஆரண்யகாண்டே, "கிஞ—வக்ஷ—ஹ்ரா ஹ்ஜ வி கூடு யெவொகூ ஷிஜ்ஜவஃ" ( கிந்நுவக்ஷ்யாம்யஹம்தேவி த்வயைவோக்தமிதம்வசஃ ) இதி பூர்வார்த்தம். இலக்குக் குறிக்கப் போகாதபடி திரண்டு நிற்கையாவது - அம்புக்குநேரோடவொண்ணதபடி நெருங்கிநிற்கை. புணர்தல் - திரட்சி. இப்படிக்கொத்த மராமரங்களை யெய்யும் ப்ரகார மேதென்ன (முஷ்டியாலுமித்யாதி ) விஷாதஹேதுவை யருளிச்செய்கிறார் (ரக்ஷணத்திலித்யாதி) ரக்ஷணத்திலதிசங்கைபண்ணினதுக்கு ப்ரமாணம் (சுக்ரீவஇத்யாதி) "நித்யம்" என்றதுக்குபாவம் (பெருமாளையித்யாதி) "ரக்ஷணத்தில்" இத்யாதி வாக்யவிவரணம் ( அந்தசங்கேத்யாதி )

"புணரோய்" - (நிலையாய்ச்சேர்ந்து) என்றபடி. "முதல்வா" என்றதுக்கர்த்தம் ( ஜகத்துக்கு வேர்ப்பற்றானவென்று ) பலிதம் (ப்ரளயகாலத்திலித்யாதி) அதெப்படியென்ன ( அற்றைக்கித்யாதி ) நிரந்வயவிநாசம் - காரண பூதனான தானின்றிக்கே யிருக்கை. ஜகத்தையுண்டாக்கினபடி யெப்படியென்ன ( ஜகத்துக்கித்யாதி ) தன்னை நோக்கினால் ஜகத்துண்டாமோவென்ன வருளிச்செய்கிறார் (ஸதேவேத்யாதி வாக்யத்வயத்தாலே) ( தன்னளவிலே வந்த வாபத்தோ பரிஹரிக்கலாவது ) என்னுபத்தானால் பரிஹரிக்கலாகாதோ வென்றபடி.

ஆனைகளை மேகமென்று ப்ரமிக்கைக்கடியேதென்ன ( மேகங்களோடே யித்யாதி ) "மேகங்களைக்கண்டா லானையென்னலா யிருக்கும்" என்னுமதுக்கு ப்ரமாணம் ( மதயானையித்யாதி ) நாய்ச்சியார் திருமொழி. ஸ்பஷ்டோர்த்தஃ. "மேகமெனக்களிறுசேரும்" என்றொழிய, "மேகத்தைக்கண்டா லானையென்னலாயிருக்கும்" என்றதுக்கு சப்தமில்லையேயென்ன ( சமாநதர்மத்தாலித்யாதி ) அதஸ்மிம்ஸ்தத்புத்திருபாந்யதாஜ்ஞாநம் த்யாஜ்யமன்றோ வென்ன ( விஷயங்களாலித்யாதி ) கணிசிக்கிறது - அபேக்ஷிக்கிறது. இதுத்தேசியமாகைக்கு ஹேதுவருளிச்செய்கிறார் (அங்குள்ளதித்யாதி)

"சார்ங்கத்துனபாதம்" என்று விசேஷித்ததுக்கு பாவம் ( சரண்யமித்யாதி ) வில்லுக்குத் திண்மையேதென்ன (சக்ரவர்த்தியித்யாதி) "திணரார்"- பாரம் மிக்கவென்றபடி. "திண்மை" என்று - பாரமாகக் கிழருளிச்செய்து, மிடுக்காகவர்த்தாந்தரம் ( தன்வளவிலேயித்யாதி ) அவ்வளவுக்ககப்படாதாரையென்றது- அநுகூலரை. விரோதியைப்போக்கவேணுமென்னுதே, காலப்ரஶ்நம்பண்ணுகிறதென்னென்ன ( கையிலித்யாதி ) இது - "எந்நாள்" என்றதுக்குபாவம்.

(சரண்யம்சரணமிதி) "ராக்ஷஸைஸ்வர்யகாமாநாம் வாநராணாம் மஹாசமூ: । சரண்யம் சரணம் யாதா ராமம் தசரதாத்மஜம்" (ராக்ஷஸைர்வத்யமாநாநாம் வாநராணும்மஹாசமூ:। ஸரண்யம்ஸரணம்யாதா ராமம்தஸரதாத்மஜம் ) இதியுத்தகாண்டே. .................................................*

---

# ஆறாம்பாட்டு

எந்நாளேநாமண்ணளந்தவிணைத்தாமரைகள்காண்பதற்கென்
றெந்நாளுநின்றிமையோர்களேத்தியிறைஞ்சியினமினமாய்
மெய்ந்நாமனத்தால்வழிபாடுசெய்யுந்திருவேங்கடத்தானே
மெய்ந்நானெயதியெந்நாளுன்னடிக்களடியேன்மேவுவதே.

## ஆறாயிரப்படி.

( எந்நாளே ) பரமவ்யோமத்திலிருக்கும் சர்வஸ்வாமிக்கு சர்வசேஷ வ்ருத்தியும் பண்ணுகை யன்றோ வெல்லார்க்கும் ப்ராப்ய மென்னில்;

அங்குள்ள * அயர்வறுமமரர்களும் திருவேங்கட முடையான் திருவடிகளையன்றோ. நாங்கள்காண்பதென் றுசைப்பட்டு இங்கேயினமினமாகவந்துன்னுடைய திருவடிகளிலேயன்றோ வாங்மந: காயங்களாலே சர்வகாலமும் சர்வசேஷவ்ருத்தியும்பண்ணுகிறது; அப்படியெனக்கு மிதுவே ப்ராப்யமாதலால், "திருமலையிலேசெல்லவேணும்" என்னத்தகாதநான் மெய்யாகத்திருமலையிலே வந்துன்றிருவடிகளிலே சர்வகாலமும் சர்வ கரணங்களாலும் சர்வசேஷ வ்ருத்தியும் பண்ணுவதென்றோ வென்கிறார்......................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அதிசயிதஜ்ஞாநரான சூரிகளு மடிமைசெய்யுந் திருமலையிலேயுன்திருவடிகளைக்கிட்டி நானடிமைசெய்வ தெந்நாளென்கிறார்.

வரையாதே, மண் - பூம்யுபலக்ஷித சகலலோகத்தையும். அளந்த-அளந்தெல்லாரோடும் சம்ஸ்லேஷித்த சீலாதிசயத்தையுடைய. தாமரைகள்- திருவடித்தாமரைகள். இணை-இரண்டையும். நாம்-பரத்வைகாநுபவபரரானநாம். காண்பதற்கு-காண்பதற்கு. எ-எந்த. நாளேம்-நாளையுடையோம். என்று - என்று. இமையோர்கள்-அஸ்கலிதஜ்ஞாநரான சூரிகள். எந்நாளும்-எல்லாக்காலததிலும். நின்று-நின்று. ஏத்தி-இப்படிசொல்லிஸ்துதித்து. இறைஞ்சி-வணங்கி. இனமினமாய்-திரள்திரளாக. மெய்ந்நாமனத்தால்-சரீரவாங்மநஸ்ஸுக்களாலே. வழிபாடு-அடிமை. செய்யும்-செய்யும்படியான. திருவேங்கடத்தானே - திருமலையிலே ஸந்நிஹிதனானவனே. அடியேன்-அநந்யார்ஹனாய். நான்-அபிநிவிஷ்டனானான். மெய்-ஸ்வப்நகல்பமான

மாநஸாநுபவமன்றியே மெய்யேகண்டு. எய்தி-கிட்டி. உன்-உன். அடிக்கள் - திருவடிகளிலே. மேவுவது-பொருந்துவது. எந்நாள்-எந்நாள்.

எந்நாளேமென்று - எந்நாளையுடையோமென்றபடி ...... ......... .........*

## ஈடு - ஆரும்பாட்டு.

"எந்நாள்" என்றுசந்தேஹிக்கிறதென், அதொரு தேசவிசேஷத்திலே வ்யவஸ்த்திதமன்றோ வென்ன, அங்குள்ளாரு மிங்கேவந்தன்றோ வுன்னைப்பெற்றநுபவிக்கிற தென்கிறார். அங்ஙனன்றிக்கே, ப்ரயோஜநாந்தர பரரானவந்தர ஜாதிகளுங்கூட வநந்ய ப்ரயோஜநரைப் போலே வந்தாச்ரயிக்க நிற்கிறவிடத்தே நானிழந்துபோவதே யென்கிறாராகவுமாம்.

(எந்நாளே நாம் மண்ணளந்த விணைத்தாமரைகள் காண்பதற்கென்று) "என்னாள்யானுன்னை யினிவந்து கூடுவனே" என்று - இங்குள்ளாரங்கே யடிமைசெய்ய வாசைப்படுமாபோலேகாணு மங்குள்ளாரு மிவனுடைய ஸௌலப்யத்தைக்கண்டு "அநுபவிக்கவேணும்" என்றாசைப்பட்டுவரும்படி. சர்வசுலபமான திருவடிகளை நாம் காணப்பெறுவதென்றோ. பூமியையடங்கலு மநாயாஸேந வளந்துகொள்ளக்கண்ட காட்சியிலே தலைமேலே யெடுத்துவைத்துக்கொள்ள வேண்டும்படியான போக்யதையையுடைய திருவடிகளை. (எந்நாளும்) மற்றொருபோது வேறொன்றைப்பற்றிப் போகிறார்களன்றே. (இமையோர்களித்யாதி) நித்யசூரிகள்காலமெல்லாம் நின்று ஸ்தோத்ரம்பண்ணிப் பின்னைத்திருவடிகளிலே விழுந்து, கிண்ணகத்திலிழிவாரைப்போலே திரள்திரளாய் மநோவாக்காயங்களாலே யாச்ரயியாநிற்பர்கள். அன்றியே, மெய்யானநாவாலும்மனத்தாலும் வழிபடுவர்களென்றுமாம். அதாகிறது-அநந்யப்ரயோஜநமான கரணங்களைக்கொண் டாச்ரயியா நிற்பர்களென்றபடி. நித்யசூரிகளானபோது, கைங்கர்யமாகிறது; ப்ரஹ்மாதிகளானபோது, உபாஸநமாகிறது. (மெய்ந்நானெய்தியித்யாதி) குணவிஷ்காரத்தாலே மாநஸாநுபவத்தைப்பண்ணுவித்துப் பகட்டவொண்ணாது, நானுன்றிருவடிகளைப்பத்தும்பத்தாகவந்துகிட்டி, பின்னை விச்லேஷத்தோடே வ்யாப்தமாகாதபடி பொருந்தப்பெறுவதென்றோ வென்கிறார். ஓரடிவிடில் சத்தையற்றிறே யிவர்க்கிருக்கிறது .......................................................... ............*

## ஜீயர் அரும்பதம்.

ஆரும்பாட்டு (எந்நாளேயித்யாதி) "இமையோர்கள்" என்றதினர்த்தத்வயாது குணமாக வவதாரிகாத்வயம் (எந்நாளென்றித்யாதி)

பரமபதத்திலே யவன்றிருவடிகளை யெப்போது மொக்கவபரோக்ஷித்திருக்கிற நித்யசூரிகள், "எந்நாள் - காண்பது" என்று ப்ரார்த்திக்கைக்கடியேதென்ன (எந்நாள் யானுன்னையித்யாதி) "மண்ணளந்த" என்றதுக்குபாவம் (சர்வசுலபேத்யாதி) "தாமரை" என்றதுக்குபாவம் (பூமியையடங்கலுமித்யாதி)

எந்நாளும்நின்று - காலமெல்லாம்நின்று. "மெய்" என்று - ஶரீரமாதல், சத்யமாதல். முந்தினவர்த்தத்தைப்பற்ற (மநோவாக்காயேத்யாதி) த்விதீயார்த்தத்தைப்பற்ற (அன்றியே மெய்யானவித்யாதி) அதாகிறதென்றது-வாங்மநஸ்ஸுக்கள் மெய்யாகையாகிறதென்றபடி. * வழிபடுகையாவதேதென்ன; அவதாரிகையிற் சொன்ன யோஜநாத்வயாநுகுணமாக வருளிச்செய்கிறார் (நித்யஸூரிகளித்யாதி வாக்யத்வயத்தாலே) வழிபாடுசெய்யும்-அடிமைசெய்யாநிற்கிற வென்னுதல், ஆஶ்ரயியாநிற்கிறவென்னுதல்.

"மெய்யாகவெய்தி" என்றதுக்கர்த்தம் (குணாவிஷ்காரத்தாலேயித்யாதிவாக்யத்வயமும்) "மேவுவது" என்றதுக்கர்த்தம் (பின்னைவிஶ்லேஷத்தோடே யித்யாதி) "திருவடிகள்" என்றுவிசேஷிக்கிறதுக்குபாவம் (ஓரடிவிடிலித்யாதி) (அடிவிடில்) என்றவிடத்திலே, அடியென்று - க்ஷணத்துக்கும், திருவடிக்கும்பேர்.

நாம் மண்ணளந்த விணைத்தாமரைகள்காண்பது - எந்நாளே - என்று - இமையோர்கள் - இனமினமாய் - எந்நாளும் நின்று - ஏத்தியிறைஞ்சி - மெய்ந்நாவென்றுதொடங்கி, திருவேங்கடத்தானே, உன்னடிக்களடியேன்-நான் மெய்யாக - எய்தி-மேவுவது - எந்நாளென்றந்வயம். காண்பதற்கு - காண்பதென்றபடி. இறைஞ்சி வணங்கி. திருவடிகளிலே விழுந்தென்றபடி .......................................*

---

# ஏழாம்பாட்டு.

அடியேன்மேவியமர்கின்றவமுதேயிமையோரதிபதியே
கொடியாவடுபுள்ளுடையானேகோலக்கனிவாய்ப்பெருமானே
செடியார்வினைகடீர்மருந்தேதிருவேங்கடத்தெம்பெருமானே
நொடியார்பொழுதுமுனபாதங்காணநோலாதாற்றேனே.

## ஆறாயிரப்படி.

(அடியேன்மேவி) உபாயாநுஷ்டாநம் பண்ணினலன்றோ வி்ந்த ப்ராப்யம் பெறலாவதென்னில்;

பரமவ்யோமநிலயரான பரமஸூரிகளாலே பரிவ்ருதனாய்க்கொண்டு, உனக்கு விஜயத்வஜமா யாஶ்ரிதவிரோதி நிரஸநஸ்வபாவனான பெரிய திருவடி திருத்தோளிலே யேறியருளி யெனக்காகத் திருமலையிலேபுகுந்தருளி யென்பக்கலுள்ள ப்ரதிபந்தகத்தைப்போக்கி, என்னெஞ்சிலே வந்து புகுந்தருளி உன்றிருப்பவளத்தினழகாலே, ப்ராக்ருதவிஷயப்ரவணனான வென்னையுங்கூடத் தோற்பித் தடிமையாக்கி, ஒருக்ஷணமாத்ரவிச்சேதத்திலு மாத்மதாரணக்ஷமனன்றியே யவிச்சேதேந நானுன்னை யநுசந்திக்கும்படி யெனக்குப் பரமபோக்யமா யிருக்கையாலே, உன்னைக்காண்கைக் கோருபாய மநுஷ்டித்திலேனாகிலு முன்னைக்காணுதொழியில் தரிக்கமாட்டேன்; ஆதலா லுன்னைக்காட்டி யருளாயென்கிறார்.........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், என்னோடு சூரிகளோடு வாசியற சர்வ சாதாரணமாக ரஸிப்பித்துக்கொண்ட வுன்னை யநுபவிக்கைக்கு சாதநமநுஷ்ட்டியாதிருக்க, அநுஷ்ட்டித்து பலம் தாழ்ந்தாரைப்போலே க்ஷணகாலமும் பொறுக்கமாட்டுகிறிலே னென்கிறார்.

அடியேன் - நிருபாதிக சேஷத்வத்தை ஸ்வரூபமாக வுடையேனான நான். மேவி - கிட்டி. அமர்கின்ற - நிரந்தராநுபவம்பண்ணும்படியான. அமுதே - நித்ய போக்யபூதனாய். இப்படி சூரிகளையு மநுபவிப்பித்து, இமையோர் - அவர்களுக்கு. அதிபதியே - நிர்வாஹகனாயிருக்கும் மேன்மையையுடையையாய். இந்தபோக்யதைக்கு சூசகமாம்படி, அடு - ஆஸ்ரிதவிரோதிநிரஸநசீலனான. புள்-பெரியதிருவடியை. கொடியா - கொடியாக. உடையானே - உடையையாய். கோலம்-இந்தபோக்யதாவர்த்தகமான சௌந்தர்யாதிகளை யுடைத்தாய். கனி - பக்வ பலம்போலே சிவந்த. வாய் - அதரசோபையையுடையனாய்க்கொண்டு. பெருமானே - இந்தபோக்யதைக் கெல்லை காணவொண்ணாத பெருமையை யுடையனாய். போகப்ரதிபந்தகமாய், செடி - செடிபோலே. ஆர் - செறிந்த. வினைகள் - பாபங்களை. தீர் - தீர்க்கைக்கு மருந்தே - அப்ரதிஹதௌஷதமாய். திருவேங்கடத்து - திருமலையிலே சந்நிஹிதனாய். எம் - என்னை. பெருமானே - அடிமைகொண்ட ஸ்வாமியே. உன - உன். பாதம்-திருவடிகளை. காண - காண்கைக்கு. நோலாது - நோற்றுவையாதே. நோற்றார், பலம் தாழ்த்தப்படுங் கணக்கிலே, நொடி - நொடி. ஆர் - சேர்ந்த. பொழுதும் - க்ஷணமாத்ரமும். ஆற்றேன் - ஆற்றமாட்டுகிறிலேன்..................................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

"மெய்ந்நானெய்தி" என்கிற விந்த ஜ்ஞாநலாப முமக்குண்டாயிற்றிறே, அது பலத்தோடே வ்யாப்தமாயல்லது நில்லாதிறே, ஆனபின்பவ்வளவும் நீராறியிருந்தாலோவென்ன ; அத்தனை க்ரமப்ராப்தி பார்த்திருக்கப்போகிறதில்லை யுன் போக்யதையென்கிறார். உன்றனையாறியிருக்க நான் மாட்டுகிறிலேன்.

(அடியேன்மேவியமர்கின்றவமுதே) தேவஜாதிகளுடைய வுப்புச்சாறுபோலன்று, ஒருதிரளா யநுபவிக்குமதன்று, அநந்ய ப்ரயோஜநரநுபவிக்கு மம்ருதமாயிற்று. ((மேவியமர்) அநந்ய ப்ரயோஜநமா யத்விதீயமாயிருக்கை. மேவுகை - இதரத்யாகம். அமருகை-அர்ச்சாவதாரம்.) (இமையோரதிபதியே) இது புஜிக்கைக்குக் கூட்டாவதொரு திரளங்கேயுண்டாயிருக்கிறபடி. (கொடியாவடுபுள்ளுடையானே) ப்ரதிபக்ஷநிரஸநத்தை ஸ்வபாவமாகவுடைய பெரியதிருவடியை த்வஜமாக வுடையவனே. (கோலக்கனிவாய்ப்பெருமானே) அழகியதாய்க் கனிந்திருந்துள்ள திருவதரத்தின் சிவப்பைக்காட்டி யென்னை யடிமைகொண்டவனே. வாய்க்கரையிலே தோற்றார்காணும். ஆஸ்ரிதரை யிவ்வழகை யநுபவிப்பிக்கைக்குக் கொடிகட்டிக்கொண்டிருக்கிறபடி. (செடியார்வினைகள் தீர்மருந்தே) செடி - பாபம். பாபத்தோடே பொருந்தின - அஸத் கர்மங்களாலுண்டான து:கத்தைப் போக்குகைக்கு மருந்தானவனே. அது புஜிப்

பிக்கைக்கு விரோதிகளைப் போக்கும்படி. (அன்றிக்கே,) தூறுமண்டின கர்மங்களைப் போக்குகைக்கு மருந்தானவனே. அவ்வம்ருதந்தானேகாணும் மருந்தாகிறது. "மருந்தும் பொருளு மமுதமுந்தானே." "மருந்தேநங்கள் போகமகிழ்ச்சிக்கு" என்றும். அவன்றன்னையொழிய வேறு மருந்துமில்லையே, * மருத்துவனுய்நின்ற மாமணிவண்ணனிறே. (திருவேங்கடத்தெம்பெருமானே) அவ்வம்ருதம், புஜிப்பார்க்கு மலைமேல் மருந்திறே. அவ்வம்ருதம், புஜிப்பார்க்குச் சாய்கரகம்போலே யுயரத்திலே யணித்தாக நிற்கிறபடி. இமையோரதிபதியாய், கொடியாவடுபுள்ளுடையானுய் - செடியார்வினைகள் தீர்மருந்தாய், திருவேங்கடத்தெம்பெருமானுய் - கோலக்கனிவாய்ப்பெருமானுய் - அடியேன்மேவி யமர்கின்ற வமுதேயென்கிறுர். பட்டர், "நித்யத்திலே, 'அமுதுசெய்யப்பண்ணும் போது ஸ்தோத்ரத்தை விண்ணப்பஞ்செய்வது' என்று; என்னஸ்தோத்ரத்தை விண்ணப்பஞ்செய்வது" என்ன, "'அடியேன்மேவியமர்கின்றவமுதே', 'பச்சைமாமலைபோல்மேனி' என்கிற பாட்டுக்கள்போலேயிருக்கு மவற்றை விண்ணப்பஞ்செய்வது" என்றருளிச்செய்தார். (நொடியார்பொழுதும்) நொடிநிறையுமளவும். (உனபாதங்காணநோலாதாற்றேனே) உன்திருவடிகளைக் காண்கைக் கொரு சாதநாநுஷ்டாநம் பண்ணுதிருக்க, க்ஷணகாலமு மாற்றமாட்டுகிறிலேன். சாதநத்தைக்கண்ணழிவற வநுஷ்டித்துப் பலந்தாழ்ப்பாரைப்போலே படாநின்றேன். அதில்லாமையிறே யிவரிங்ஙனேகிடந்து படுகிறது. தனியே யொருசாதநமநுஷ்டிக்குமவனுக்கு, "அது தலைக்கட்டினவாறே பெறுகிறோம்" என்றுதல், "அதிலே சிலவைகல்யம்பிறக்கப்பட்டிறே பலந்தாழ்த்தது" என்றுதலாறியிருக்கலாம்; அவனே சாதநமானவிவர்க்கு விளம்பித்தால் "அவன் க்ருபையுமேறிப் பாயாதபடியானேனே!" என்னும் பயமிறே யநுவர்த்திப்பது.......................................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (அடியேனித்யாதி) "நொடியார் பொழுதுமுனபாதங்காண நோலாதாற்றேன்" என்றத்தைப்பற்ற வவதாரிகை (மெய்ஞ்ஞானித்யாதி) "அமுதே" என்றத்தைப்பற்ற (உன்போக்யதையென்றது) நீதிருவேங்கடமுடையானுயிருக்கச் செய்தேயு மென்னை யங்கீகரியாமலாறி யிருந்தாய், இப்படியிருந்த வுன்னைப்போலே நானுறியிருக்கமாட்டேனென்கிறுர் (உன்றனையித்யாதி)

"அமுது" என்றதுக்கு - ஆராவமுதென்றுவிவக்ஷித்துபாவம் (தேவஜாதியித்யாதி) "அடியேன்" என்றவேகவசநத்துக்குபாவம் (ஒருதிரளாயித்யாதி) "அடியேன்" என்று - சேஷத்வஞ்சொன்னதுக்குபாவம் (அநந்யேத்யாதி) ஒருதிரளாயநுபவிக்குமத தன்றென்றுசொல்லிவைத்து, "இமையோர்" என்று - பஹுவசநமாகச்சொன்னதுக்கு பாவமேதென்ன (இதயுஜிக்கைக்கித்யாதி) அதாவது-இங்குள்ளார் ப்ரயோஜநாந்தரபர ரானுப்போலே, அங்குள்ளா ரநந்யப்ரயோஜநரொன்றுகருத்து.

"அடுபுள்ளை - கொடியாக - வுடையவன்" என்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (ப்ரதிபக்ஷேத்யாதி) "கனிவாய்" என்றவநந்தரம் "பெருமான்" என்றதுக்கு ரஸோக்தியாகபாவம் (வாய்க்கரையிலேயித்யாதி) அதரத்திலேயென்று ஸ்வபாவார்த்தம்; மேலெழவென்றுசாடு. பதச்சேர்த்திக்குபாவம் (ஆஸ்ரிதரையித்யாதி)

"ஆர் - செடி - வினை" என்றாய் - பூர்ணமான பாபத்தாலுண்டான துஃகமென்றுதல்; "செடி" என்று - பாபமாய், "ஆர்தல்" - உண்டானதாய், "வினை" என்று - துஃகமாய், பாபத்தாலுண்டான துஃகமென்றுதல் முந்தினவர்த்தம். செடியென்று - தூறாய், ஆர்தல்-மிகுதியாய், வினையென்று - கர்மமாய், தூறு மண்டிக்கிடக்கிற கர்மமென்றிரண்டாமர்த்தம். "அமுதே" என்றத்தைக் கூட்டிபாவம் (அவ்வமுர்தந்தானே யித்யாதி) "அமுர்தந்தானே மருந்து" என்றதுக்குப்ரமாணம் (மருந்துமித்யாதி) சம்சாரவ்யாதியைப்போக்கும் பேஷஜமும், இஷ்டமான மோக்ஷத்தைத்தரும்பொருளும், ஸ்வதஃ இஷ்டமாய்போக்யமான வமுர்தமுமந்தத் திருவடிகளேயென்றபடி. மூன்றுந்திருவந்தாதி நாலாம்பாட்டு. (மருந்தேநங்கள்) இத்யாதிக்கு - எங்களுடைய போகத்தினுடைய வ்ருத்திக்கும் வர்த்தகமான மருந்தானவனேயித்யர்த்தஃ. மருத்துவனாய்நின்ற - மருந்தறியுமவனாயிருக்கிறவனேயென்றபடி. பெரியாழ்வார்திருமொழி அஞ்சாம்பத்து மூன்றுந்திருமொழி ஆறும்பாட்டு, "எருத்துக்கொடி" இத்யாதி. "மருந்தே" என்றத்தோடே "திருவேங்கடத்தெம்பெருமானே" என்று கூட்டிபாவம் (அவ்வம்ருதமித்யாதி) "அடியேன் மேவியமர்கின்றவமுதே" என்றசப்தத்தோடே - "திருவேங்கடத்தெம்பெருமானே" என்றத்தைச்சேர்த்துபாவம் (அவ்வம்ருதம்புஜிப்பார்க்கித்யாதி) சாய்கரகம்-தண்ணீர்ப்பந்தலில் தண்ணீர்வார்க்கிறகரகம். பரத்வத்தைச்சொல்லி, விரோதிநிரஸநத்துக்குறுப்பான பரிகரத்தைச்சொல்லி, விரோதிநிரஸநத்தைச்சொல்லி, சௌலப்யத்தைச்சொல்லி, அழகைச்சொல்லி, போக்யனாயிருக்கிறானென்றிப்படி யொருக்ரமஞ்சொல்லுகைக்காக வந்வயிக்கிறார் (இமையோரதிபதியாயித்யாதி) ப்ராஸங்கிகம் (பட்டரித்யாதி) நித்யத்திலேயென்றது - உடையவர்நித்யத்திலேயென்றபடி.

உனபாதங்காண நோலாதிருக்கச்செய்தேயும் போக்யதையாலே நொடியார்பொழுது மாற்றேனென்கிறார் (உன்திருவடிகளையித்யாதி) விவரணம் (ஸாதநத்தையித்யாதி) நோலாமையாலே விளம்பஹேதுவில்லை, ஆகையாலே யாற்றேனென்றார்த்தாந்தரம் (அதில்லாமையிறேயித்யாதி) கீழ்வாக்யத்தை ஸோபபத்திகமாகவிவரிக்கிறார் (தனியேயித்யாதிவாக்யத்வயத்தாலே)....................................*

---

## எட்டாம்பாட்டு.

---

நோலாதாற்றேனுனபாதங்காணவென்று நுண்ணுணர்வி
னீலார்கண்டத்தம்மானுநிறைநான்முகனுமிந்திரனுஞ்
சேலேய்கண்ணார்பலர்சூழவிரும்புந்திருவேங்கடத்தானே
மாலாய்மயக்கியடியேன்பால்வந்தாய்போலேவாராயே.

## ஆறாயிரப்படி.

(நோலாதாற்றேன்) உபாயசூந்யரா யிருந்துவைத் தாசைப்பட்டால் கிடைக்குமோவென்னில்;

அறிவுடையரான ஸர்வ சதுர்முகேந்த்ராதிதேவர்களுங்கூட ஸபரிக்ரஹமாகவந்து, நாங்களுபாயசூந்யராகிலு முன்னைக் காணுதொழியில் தரிக்கமாட்டோமென் றுசைப்பட்டன்றோ வுன்னைக்காணப்பெறுகிறது; ஆதலால், அடியேனு முன்னை சர்வகாலமுங் காணும்படி வரவேணுமென்றபேக்ஷிக்க; அப்போதே யெழுந்தருளா விட்டவாறே; இப்படிசெய்கை திருவுள்ளமன்றாகில், உன்னைக் காணப்பெறாத வ்யஸநத்தாலே பித்தேறி மயங்கியிருந்த வடியேன்பால் ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்குவந்துதோற்றினாப்போலேயாகிலும் வந்தென்னை தரிப்பித்தருளாயென்கிறார்.......*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஸாவரோதரான வீஸ்வராபிமாநிகளும் ஸாதராஸ்ரயணம் பண்ணும்படி சுலபனாய் நிற்கிற நீ, க்ருஷ்ணனாய் வந்தாப்போலே யென்பக்கலிலே வரவேணுமென்கிறார்.

உன - உன். பாதம் - திருவடிகளை. காண - காண்கைக்கு. நோலாது - சாதநமநுஷ்ட்டியாதே வைத்து. ஆற்றேன் - ஆற்றமாட்டுகிறிலேன். என்று - என்று சொல்லி. நுண்ணுணர்வில் - சர்வஜ்ஞனாகையாலே ஸூக்ஷ்மார்த்ததர்ஸியாய். விஷத்தாலே, நீல் - கருமை. ஆர் - ஆர்ந்திருக்கிற. கண்டம் - கண்டத்தை யுடையனாய். அம்மானும் - அத்தாலே ஜகத்ப்ரதாநனான ருத்ரனும். நிறை - தஜ்ஜநகனாய் ஸ்ரஷ்ட்ருத்வாத் யநுகுண ஜ்ஞாநாதிபூர்ணனான. நான்முகனும் - சதுர்முகனும். இந்திரனும் - த்ரைலோக்யைஸ்வர்யவிசிஷ்டனான விந்த்ரனும். சேலேய் - முக்தமான சேல்போலே யிருக்கிற. கண்ணார் - கண்ணையுடையரான. பலர் - உமா சரஸ்வதீ சசீப்ரப்ருதிகளான பலபெண்டுகளும். சூழ - தங்கள் பரிஸரவர்த்திகளாக. விரும்பும்-ஸாதரமாக வாஸ்ரயிக்கும். திருவேங்கடத்தானே-திருமலையிலே ஸந்நிஹிதனானவனே. மாலாய் - கரியநிறத்தையுடையனாய்க்கொண்டு க்ருஷ்ணனாய். மயக்கி-குணசேஷ்டிதங்களாலே சர்வரையும் மயக்கி. வந்தாய்போலே - வந்தாப்போலே. அடியேன்பால் - உன்னை யொழியச் செல்லாதபடி யநந்யார்ஹனான வென்பக்கலிலே. வாராய் - வரவேணும்.

மாலாய் - க்ருஷ்ணனாயென்றபடி..........................................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

"உன்னைக் கிட்டுகைக்கென்றலையிலொருசாதநமில்லை" என்னாநின்றீர், இதொருவார்த்தையோ, சாதநமநுஷ்ட்டித்தார்க்கன்றி பலமுண்டோவென்ன; தந்தாமுடைய வபிமதசித்தி சாதநாநுஷ்ட்டாநத்தாலே என்றிருக்கும் ப்ரஹ்மாதிகளுக்கும், கிட்டினால் பாசுரமிதுவன்றோவென்கிறார். தந்தாமுடைய வாகிஞ்சந்யத்தை முன்னிடுமத்தனைபோக்கி, ஒன்றநுஷ்ட்டித்துப் பெறலாம்படியோ! நீ யிருக்கிறது.

(நோலாதித்யாதி) உன்றிருவடிகளைக் காண்கைக்கு சாதநாநுஷ்ட்டாநம்பண்ணுதே யிருந்துவைத்து உன்னையொழியவாற்றமாட்டேனென்றுயிற் றவர்கள் தனித்தனியே சொல்லுவது. ஒரு பாண யுத்தத்திலே தோற்றுப் போக்கடியற்றவாறே யிங்ஙனேவந்து விழுவர்கள். ரஜஸ்தமஸ்ஸுக்கள் தலையெடுத்தபோது “ஈஶ்வரோஹம்” (ஈஶ்வரோஹம்) என்றிருப்பர்கள், முட்டினவாறே, “க்ருஷ்ண க்ருஷ்ண மஹாபாஹோ ஜாநே த்வாம் புருஷோத்தமம்” (க்ருஷ்ணக்ருஷ்ண மஹாபாஹோ ஜாநேத்வாம் புருஷோத்தமம்) என்று ஸ்தோத்ரம்பண்ணத் தொடங்குவர்கள்; “ஶரணம் த்வாமநுப்ராப்தாஸ் ஸமஸ்தா தேவதாகணா:,” (ஶரணம்த்வாமநுப்ராப்தாஸ் ஸமஸ்தாதேவதாகணா:.) விஷத்தைக்கண்டத்திலே தரித்த சக்தியையுடையனுய் அத்தாலே ஜகத் ப்ரதாநனை வபிமாநித்திருக்கும் ருத்ரனும், அவனுக்கும் ஜநகனுய் அவனிலும் ஜ்ஞாநசக்திகளால் பூர்ணனுன சதுர்முகனும், த்ரைலோக்ய நிர்வாஹகனுன விந்த்ரனும். “ஸப்ரஹ்மாஸஶிவஸ்ஸேந்த்ர:” (ஸப்ரஹ்மாஸஶிவஸ்ஸேந்த்ர:) இங்ஙனே யிருக்கச்செய்தேயும், அஹிர்ப்புத்ந்ய ஸம்ஹிதையிலே இவர்களுடையவாக்யங்களை ப்ரமாணமாகக்கொண்டு போராநின்றேமே யென்னில்; ஸத்த்வம் தலையெடுத்தபோது சொல்லுமவையெல்லாங் கொள்ளக்கடவோம். “இவை கைக்கொண்டோமென்னு, இவர்கள் தாங்களுத்தேஶ்ய ராகார்கள்; ‘காக்கைவாயிலும் கட்டுரைகொள்வர்’ என்றுண்டே” என்று பட்டருளிச்செய்வர். ஓராழ்வார், [பிதிருமனமிலேன்] பேதிக்கப்பட்ட நெஞ்சையுடையேனல்லேன்; [பிஞ்ஞகன்றன்னேடெதிர்வன்] ருத்ரனெனக்குஸத்ருஶன்; [அவனெனக்கு நேரான்] அவனு மெனக்கு ஸத்ருஶனல்லன்; அதென்னென்னில், [அதிருமித்யாதி] பகவத் விஷயத்திலே நெஞ்சைவைத் தநுபவிக்கையே யாத்ரையான வெனக்கு, அந்யபரனுனவனெப்பாகப்போருமோ. [தூறைகொண்டு] தன்வெறுமையைக்கைதொடுமானமாகக்கொண்டு; [நான்முகன் குண்டிகைநீர்பெய்து] நினைவறத் திருவடிசென்று கிட்டிற்று, உபகரணம்பெற்றிலன். தர்மதேவதையானது த்ரவீபூதமாயிற்றது; அத்தைக்கொண்டு [மறைகொண்டமந்திரத்தால்வாழ்த்தி] வேதாந்தங்களில் பகவத் பரத்வ ப்ரதிபாதகமான மந்த்ரங்களைக்கொண்டு ஸ்தோத்ரம்பண்ணி; [கறைகொண்டகண்டத்தான் சென்னிமேலேறக்கழுவினுன்] அவிநீதராய்த்திரியும் ப்ரஜைகள் தலையிலே ஸ்ரீபாததீர்த்தங்கொண்டு தெளிப்பாரைப்போலே. (நுண்ணுணர்வில்) ஸத்த்வம் தலையெடுத்தபோதுசொல்லுவதிதுவே. * ஸத்த்வாத்ஸஞ்ஜாயதே ஜ்ஞாநமிறே. (நீலார்கண்டத்தம்மானும்) விஷத்தைக்கண்டத்திலேதரிக்கையாலே ஈஶ்வராபிமாநியான ருத்ரனும். (நிறைநான்முகனும்) அவனுக்குங்கூட ஜநகனுய் சம்பூர்ணஜ்ஞாநனுன ப்ரஹ்மாவும். (இந்திரனும்) இவர்களோடொக்க ஸ்ருஷ்டி சம்ஹாரங்களி லோரந்வயமின்றிக்கே யிரு

க்கச்செய்தே, "ஸ்ஸ்ரஹ்மாஸஶிவஸ்ஸேந்த்ர:" (ஸப்ரஹ்மாஸஶிவஸ்ஸேந்த்ர:) என்றுகொண்டொக்க வெண்ணலாம்படியானவிந்த்ரனும். (சேலேய்கண்ணுரித்யாதி) தந்தாமுக்கோருயர்த்தியுள்ளபோது ஸ்த்ரீகள்சந்நிதியிலோளிமைதோற்றவிரார்களிறே; ஆபத்துவந்தவாறே, மணுட்டிமார்கழுத்திலும் தங்கள்கழுத்திலும் கப்படங் கட்டிக்கொண்டுவந்துவிழத்தொடங்குவர்கள். "உமயாஸார்த்தமீஶாந:" (உமயாஸார்த்தமீஶாந:) என்றும், "பர்த்ருபிக்ஷாப்ரதீயதாம்" (பர்த்ருபிக்ஷாப்ரதீயதாம்) என்றும், "ஸமுத்ரஸ்ஸரிதாம்பதி:" (ஸமுத்ரஸ்ஸரிதாம்பதி:) என்றும், "கிம்கோபமூலம்" (கிம்கோபமூலம்) என்றுஞ் சொல்லுகிறபடியே வந்து விழுவர்களிறே. (திருவேங்கடத்தானே) அவர்களுக் காப்ரரயிக்கலாம்படி சுலபனுய்வந்து நிற்கிறபடி. "மயங்கல் கூடலும் கலவியும்;" (மாலாய்மயக்கி) "மாலாய், நான் மயங்கும்படிக் கிடாக வரவேணுமென்கிருரென்னுதல்; அன்றிக்கே, மாலாம்படி மயக்கிக்கொண்டு வரவேணுமென்கிருர்" என்றுஞ் சொல்லுவர்கள்; அவையன்றுபொருள். மாலென்று - கறுப்பாய், அத்தால் நினைக்கிறது - க்ருஷ்ணனென்கையாய், க்ருஷ்ணனுய்க்கொண் டுன் குணசேஷ்டிதங்களாலே யவ்வவதாரத்தி லுள்ளாரைப் பிச்சேற்றிக்கொண்டு வந்தாப்போலே யெனக்காகவு மொருவரத்து வரவேணும். "மாலாய்ப்பிறந்த நம்பியை மாலேசெய்யும் மணாளனை" என்றுஞ் சொல்லுகிறபடியே.................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. (நோலாதாற்றேனித்யாதி) "நோலாதாற்றேன்" இத்யாதியாலே, தங்கள் வெறுமையை முன்னிடுகிற ப்ரஹ்மாதிகளுடைய பாசுரத்தையருளிச்செய்கிறதுக் கறுகுணமாக வவதாரிகை (உன்னைக்கிட்டுகைக்கித்யாதி) பாசுரமிதுவன்றோ வென்றது - தாமருளிச்செய்த "உனபாதங்காண-நோலாதாற்றேன்" என்றது. இத்தால் சொல்லிற்றாயிற்ற வர்த்த மேதென்ன வருளிச்செய்கிருர் (தந்தாமுடையவித்யாதி) விவரணமாதல்.

நோலாதாற்றேமென்னுதே, "நோலாதாற்றேன்" என்கையாலே (தனித்தனியே) என்கிறது. "ஈஶ்வரோஹம்" (ஈஶ்வரோஹம்) என்றவர்கள் "நோலாதாற்றேன்" என்பர்களோவென்ன (ஒருபாணேத்யாதி) பாணயுத்தத்திலேயென்றது - பாணயுத்தாதிகளிலே யென்றபடி. யுத்தம்பண்ணுகிறதென், அநந்தரம் சரணம்புகுகிறதென்னென்ன (ரஜஸ்தமஸ்ஸாக்களித்யாதி) ப்ரஹ்மாதிகள் வெறுமையை முன்னிட்டதுக்கு ப்ரமாணம் (சரணம்த்வாமித்யாதி) ஸ்ரீவிஷ்ணுபுராணே, "க்ருஷ்ணக்ருஷ்ணமஹாபாஹோ ஜாநேத்வாம்புருஷோத்தமம் । பரேஶம்பரமாத்மாநமநாதிநிதநம்பரம்" (க்ருஷ்ணக்ருஷ்ணமஹாபாஹோ ஜாநேத்வாம்புருஷோத்தமம் । பரேஶம்பரமாத்மாநமநாதிநிதநம்பரம்) இதிருத்ர:. "ப்ரணமப்ரவணாநாத தைத்யஸைந்யபராஜித: । ஶரணம்த்வாமநுப்ராப்தாஸ்ஸமஸ்தாதேவதாகணா:" (ப்ரணமப்ரவணுநாத தைத்யஸைந்யபரா

ஜிதா: | ஶரணம்த்வாமநுப்ராப்தாஸ் ஸமஸ்தாதேவதாகணா: ) இதி க்ஷீராப்திநாதம் ப்ரதிப்ருஹஸ்பதி ப்ரமுகாதேவர்ஷய:.

ப்ரஹ்மருத்ரர்களோடே யிந்த்ரனையும் ஸஹபடித்திருக்குமோவென்ன ( ஸப்ரஹ்மேத்யாதி ) நாராயணநுவாகே. இப்படி துர்மாநிகளாகி லிவர்கள் வாக்யங்கள் ப்ரமாணமாகக்கூடுமோவென்று சங்கித்துபரிஹரிக்கிருர் (இங்ஙனேயித்யாதி) இங்ஙனேயிருக்கச்செய்தேயுமென்றது - இப்படி யஹங்காரிகளாயிருக்கச்செய்தேயுமென்றபடி. வாக்யங்களாவன - “𑌅𑌹𑌮𑌸𑍍𑌮𑍍𑌯𑌪𑌰𑌾𑌧𑌾𑌨𑌾𑌮𑌾𑌲𑌯𑌃” ( அஹமஸ்ம்யபராதாநாமாலய: ) இத்யாதிகள். அவர்கள் வாக்யங்களை ப்ரமாணமாகக்கொண்டா லவர்களை ப்ரதிபத்திபண்ணவேண்டாவோவென்ன (இவைகைக்கொண்டோமித்யாதி) அநுத்தேஶ்யர்வார்த்தை கைக்கொள்ளலாமோவென்ன ( காக்கையித்யாதி ) காக்கையினுடைய பேச்சிலும் நற்சொற்கொள்ளுவ‍ொன்றபடி. பெரியாழ்வார்திருமொழி, “வாக்குத்தூய்மை” இத்யாதி. “அவர்களநுத்தேஶ்யர்” என்கைக்கு ஸம்வாதம் (ஓராழ்வாரித்யாதி) நாலாந்திருவந்தாதி எண்பத்துநாலாம்பாட்டு, “பிதிருமனமிலேன்” இத்யாதி. (பேதிக்கப்பட்டநெஞ்சையுடையேனல்லேன்) என்றதுக்குபாவம் - அவனஸந்நிதியிலே “ அவனோடேயெதிர்வன் ” என்றுசொல்லி, அவனைக்கண்டவாறே பயப்பட்டு பேதிக்கும் மநஸ்ஸையுடையேனல்லேனென்றபடி. எதிர்வன்-ஒப்பன். ஸத்ருஶனென்றது-ஜ்ஞாநஸாம்யத்தாலே. அதிரும்கழற்காலமன்னனையேகண்ணனையே - சப்தியாநிற்கிற வீரக்கழலையுடைய திருவடிகளையுடைய ராஜாவாயிருக்கிற க்ருஷ்ணனையே, நாளும் - சர்வகாலத்திலும். தொழக்காதல்-அநுபவிக்கைக்கீடான வபிநிவேசத்தை, (தொழில்-பூண்டேன்) தொழிலாக-நித்யக்ருத்யமாக, ஏறிட்டுக்கொண்டேன்; ஆகையாலே, காதாசித்கமான பகவத்ஜ்ஞாநத்தையுடைய ருத்ர னெனக்குநேரான் - அவனெனக்கு சத்ருஶனன்று. பிஞ்ஞகன் - ருத்ரன். பிதிருமனமிலேன் பிஞ்ஞகன்றன்னோடெதிர்வன், அதிருமென்றுதொடங்கி, தொழக்காதல் - தொழில் - பூண்டேன்; ஆகையாலே - அவனெனக்கு நேரானென்றந்வயம். “நாளும்” என்றத்தைப்பற்ற (அநுபவிக்கையே யாத்ரையானவெனக்கென்றது) (ஒப்பாகப்போருமோ) என்றருளிச்செய்தானென்று கூட்டுவது.

(க்ருஷ்ணக்ருஷ்ணமஹாபாஹோ என்றும், ஶரணம்த்வாமநுப்ராப்தா:என்றும்) ருத்ரனு மிந்த்ராதிதேவதைகளும் வெறுமையைமுன்னிட் டாஶ்ரயித்ததுக்கு ப்ரமாணங்காட்டி, ப்ரஹ்மா ஆகிஞ்சந்யத்தை முன்னிட் டாஶ்ரயித்ததுக்கு ப்ரமாணம் (குறைகொண்டித்யாதி) நாலாந்திருவந்தாதி. கைதொடுமானம் - ஸஹாயம். த்ரவீபூதமாயிற்றது - ஜலமாய் கமண்டலுவிலே ப்ரவேஶித்ததென்றபடி. குண்டிகை - கமண்டலம். “𑌦𑍍𑌰𑌵𑍀𑌭𑍂𑌤𑌸𑍍𑌤𑌦𑌾𑌧𑌰𑍍𑌮𑍋𑌹𑌰𑌿𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌮𑌹𑌾𑌮𑍁𑌨𑍇 । 𑌗𑍃𑌹𑍀𑌤𑍍𑌵𑌾𑌧𑌰𑍍𑌮𑌪𑌾𑌨𑍀𑌯𑌂𑌪𑌾𑌦𑌂𑌨𑌾𑌥𑌸𑍍𑌯𑌤𑍁𑌷𑍍𑌟𑌯𑍇 । 𑌕𑍍𑌷𑌾𑌲𑌿𑌤𑌂𑌪𑌰𑌯𑌾𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌪𑌾𑌦𑍍𑌯𑌾𑌰𑍍𑌘𑍍𑌯𑌾𑌦𑌿𑌭𑌿𑌰𑌰𑍍𑌚𑌿𑌤𑌮𑍍” ( த்ரவீபூதஸ்ததாதர்மோஹரிபக்த்யாமஹாமுநே | க்ருஹீத்வாதர்மபாநீயம் பாதம்நாதஸ்யதுஷ்டயே | க்ஷாளிதம்பரயாபக்த்யா பாத்யார்க்யாதிபிரர்ச்சிதம் ) என்னக்கடவதிறே. நுண்ணுணர்வில் - ஸூக்ஷ்மஜ்ஞாநத்தையுடையபோதென்று ஶப்தார்த்தம் விவக்ஷித்து, தாத்பர்யார்த்தமருளுகிருர் ( ஸத்த்வந்தலையெடுத்தபோதித்யாதி ) சொல்லுவ திதுவேயென்றது - “ நோலாதாற்றேன் ” என்றவார்த்தையை. “ நுண்ணுணர்வு ” என்றால் - ஜ்ஞாநத்தையன்றோசொல்லுவது, ஸத்த்வந்தலையெடுத்தபோதென்று காட்டுமோவென்ன (ஸத்த்வாதித்யாதி) ஸத்த்வகார்யமான ஜ்ஞாநஶப்தத்தாலே - ஸத்த்வத்தைச்சொ

ல்லுகிறது லக்ஷணயாவென்றபடி. ஶ்ரோத்ருபுத்தி ஸமாதாநார்த்தமாக புநஶ்சஸப் தார்த்தம் (விஷத்தையித்யாதி) இவர்கள், ஸ்த்ரீகளோடேவந் தாஶ்ரயிக்கைக்குப்ர யோஜநமேதென்ன (தந்தாமுக்கித்யர்தி) அதாவது - "ஸ்த்ரீகளோடேவந் தாஶ்ர யித்தா லவனிரங்குவன்" என்றுஶ்ரயிக்கிறார்களென்றபடி. "ஸ்த்ரீகளைமுன்னிட் டாஶ்ரயிக்கும்" என்றதுக்கு ப்ரமாணங்கள் (உமயாஸார்த்தமித்யாதி) "ஸத்த்வாத்ஸம்ஜாயதே ஜ்ஞாநம் ரஜஸோ லோப ஏவ ச। ப்ரமாதமோஹௌ தமஸோ பவதோ ஜ்ஞாநமேவ ச" (ஸத்த்வாத்ஸம்ஜாயதேஜ்ஞாநம்ரஜஸோலோபஏவச। ப்ரமாதமோஹௌதமஸோபவதோஜ்ஞாநமேவச) இதிகீதாஸு. "அஞ்ஜலிம் ஸம்புடம் க்ருத்வா விஷ்ணுமூர்த்திஶ்ஶங்கர:। உமயாஸார்த்தமீஶாநோ மாஹாத்ம்யம் வக்துமைஹத" (அஞ்ஜலிம்ஸம்புடம்க்ருத்வாவிஷ்ணுமூர்த்திஶ்ஶங்கர:। உமயாஸார்த்தமீஶாநோமாஹாத்ம்யம்வக்துமைஹத) இதிஹரிவம்ஶே. "தத: குருஜகத்ஸ்வாமிந் ப்ரஸாதமவஸீதத:। ப்ராணாம்ஸ்த்யஜ திநாகோயம் பர்த்ருபிக்ஷா ப்ரதீயதாம்" (ததஃகுருஜகத்ஸ்வாமிந்ப்ரஸாதமவஸீததஃ। ப்ராணம்ஸ்த்யஜ திநாகோயம் பர்த்ருபிக்ஷாப்ரதீயதாம்) இதிபஞ்சமேம்ஶே காளியபத்ந்ய:. "தர்ஶயாமாஸ சாத்மாநம் ஸமுத்ரஸ்ஸரிதாம்பதி:" (தர்ஶயாமாஸசாத்மாநம்ஸமுத்ரஸ்ஸரிதாம்பதிஃ) இதி ஸங்க்ஷேபே. "கிம்கோபமூலம் மநுஜேந்த்ரபுத்ர கஸ்தே ந ஸம்திஷ்டதி வாங்நிதேஶே। கஶ்ஶஷ்கவ்ருக்ஷம் வநமாபதந்தம் தவாக்நிமாஸீததி நிர்விஶங்க:" (கிம்கோபமூலம்மநுஜேந்த்ரபுத்ரகஸ்தேநஸம்திஷ்டதிவாங்நிதேஶே। கஶ்ஶுஷ்கவ்ருக்ஷம்வநமாபதந்தம்தவாக்நிமாஸீததிநிர்விஶங்கஃ) இதிதாரா. (ஸமுத்ரஸ்ஸரிதாம்பதி:) என்றதும், (கிம்கோபமூலம்) என்றதும்; (பர்த்ருபிக்ஷாப்ரதீயதாம்) என்றதும் - சமுத்ரராஜனும் மஹாராஜரும் காளியனும், இங்கு ப்ரஸ்தாவமின்றிக்கே யிருந்தாலும், ஸ்த்ரீகளைமுன்னிட் டாஶ்ரயித்தார்களெ ன்றமாத்ரத்துக்கு ப்ரமாணங்கள். கப்படம் - தைந்யஸூசகபடவிசேஷம். "மயக்கி" என்றதுக்கர்த்தம் சொல்லுவதாக நிகண்டுவருளிச்செய்கிறார் (மயங்கலித்யாதி) கூடலாவது - ப்ரணயரோஷந்தீர்ந்துகூடுகை. கலவியாவது - ஸம்ஶ்லேஷாநந்த பாவியான சம்போகம். இவ்விடத்தில், மயங்கலாவது - கூடல். முந்தினவர்த்தத் துக்கு; நீ, மாலாய்-வ்யாமுக்தனுய்க்கொண்டு, மயக்கி-மயங்கும்படி, நான் சம்ஶ் லேஷிக்கும்படி வரவேணுமென்றபடி. நான் மயங்கும்படிக்கீடாகவென்றது - நான் சம்ஶ்லேஷிக்கும்படிக்கீடாகவென்றபடி. த்விதீயார்த்தத்துக்கு; நான், மாலாம்ப டி-வ்யாமுக்தனும்படி, மயக்கி - வ்யாமோஹத்தையுண்டாக்கிக்கொண்டு வரவேணு மென்றபடி. இந்த வர்த்தத்வயத்திலும், "வந்தாய்போலே" என்றது - சொற்பா டு. இவ்வர்த்தத்வயத்திலும், "வந்தாய்போலே" என்றதுக்கு ஸ்வாரஸ்யமில்லை யென்று திருவுள்ளம்பற்றி (அவையன்றுபொருள்) என்கிறார். அப்படி பிச்சேற்றிக் கொண்டு வந்தானேவென்ன (மாலாய்ப்பிறந்தவித்யாதி) மாலாய்ப்பிறந்தநம்பி யை - வ்யாமோஹந்தானெரு வடிவுகொண்டாப்போலே யிருக்கிற குணபூர்ணனை. மாலேசெய்யும் மணாளனை - தன்வ்யாமோஹத்தைக்காட்டி யித்தலைக்கு வ்யாமோ ஹத்தை விளைக்குமவனையென்றபடி. நாய்ச்சியார்திருமொழி பதிநாலாந்திருமொழி மூன்றும்பாட்டு.

நுண்ணுணர்விலென்றுதொடங்கி, இந்திரனும் - உனபாதங்காண - நோலா தாற்றேன் - என்றுசொல்லி - சேலேய்கண்ணார் பலரென்றுதொடங்கி, மயக்கி-வந்

தாய்போலே - அடியேன்பால் - வாராயென்றந்வயம். மாலாய்-க்ருஷ்ணனேயென்றபடி. வந்தாய்போலே - வந்தாப்போலேயென்றபடி ........................................*

## ஒன்பதாம்பாட்டு.

வந்தாய்போலேவாராதாய்வாராதாய்போல்வருவானே
செந்தாமரைக்கட்செங்கனிவாய்நாற்றோளமுதேயெனதுயிரே
சிந்தாமணிகள்பகரல்லைப்பகல்செய்திருவேங்கடத்தானே
யந்தோவடியேனுனபாதமகலகில்லேனிறையுமே.

### ஆறாயிரப்படி.

(வந்தாய்போலே) ப்ரதிகூலர்க்குக்கண்டவாற்றாலே யெளியாரைப்போலே யிருந்தரியையாகையாலும், ஆஶ்ரிதர்க்குக்கண்டவாற்றாலரியாரைப்போலேயிருந் தெளியையாயிருக்கையாலும், நீ யென்னைத்வத்ஸௌந்தர்யைக தாரக போஷக போக்யனாக்குகையாலும், திநகரகிரண ஸந்நிபமான ஸ்வப்ரபைகளாலே ராத்ரியையும் பகலாக்காநின்ற ரத்நங்களாலே யலங்க்ருதமான திருமலையிலே யெனக்காக நின்றருளுகையாலும், அடியேனொருக்ஷணமு முன்றிருவடிகளை விஶ்லேஷிக்கமாட்டாமையாலு முன்க்ருபையாலே யடியேனை யுன்றிருவடிகளிலே சேர்த்தருளவேணுமென்கிறார் ........................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், அதிஶயிதபோக்யமான வவயவசோபையையுடையனான வுன்றிருவடிகளை க்ஷணமும் பிரியமாட்டேனென்கிறார்.

அநாஶ்ரிதவிஷயத்தில், வந்தாய்போலே - வந்துகைப்புகுந்தாப்போலே. வாராதாய்-கைவாராதிருக்குமவனாய். ஆஶ்ரிதவிஷயத்தில், வாராதாய்போல் - ஆகிஞ்சந்யத்தாலே "வருகைக்கு சங்கையில்லை" என்று நினைத்திருக்கச்செய்தே. வருவானே-இஷ்டவிநியோகார்ஹமாம்படி கைவருமவனாய். செம்-சிவந்த. தாமரை - தாமரைபோலே தர்ஶநீயமாய், "ஜிதம்" என்னும்படிபண்ணும். கண்-திருக்கண்களையும். செம்-சிவந்த. கனி-கனிபோலேபோக்யமாய். வாய் - "மாமேகம்ஶரணம்வ்ரஜ" (மாமேகம்ஶரணம்வ்ரஜ) என்னும் திருப்பவளத்தையும். "ஸக்ருதாடம்பரிஷஸ்வஜே" (ஸக்ருதாடம்பரிஷஸ்வஜே) என்று ஆஶ்ரிதரை யெடுத்தணைக்கும். நால்-நாலு. தோள்-திருத்தோள்களையுமுடையனாய். அமுதே-ஆஶ்ரிதர்க்கு நித்யபோக்யனாயிருக்கிறவிருப்பை. எனது-எனக்குப்ரகாஶிப்பித்து. உயிரே-தாரகனானவனாய். சிந்தா-நினைத்ததெல்லாம்கொடுக்கவற்றான. மணிகள் - மஹார்க்கரத்நங்களினுடைய. பகர்-ஒளியானது. * ஸக்ருத்திவாவாம்படி, அல்லை-ராத்ரியை. பகல்-பகல். செய் - ஆக்குவதான. திருவேங்கடத்தானே - திருமலையிலே ஸந்நிஹிதனானவனே. அந்தோ-ஐயோ. நிரதிஶயபோக்யமான, உன-உன். பாதம்-திருவடிகளை. அடியேன் - அநந்யர

க்ஷயனும்படி அத்யந்தபரதந்த்ரனன நான். இறையும் - ஏகதேஶமும். அகல-அகல, கில்லேன்-க்ஷமனுகிறிலேன்.

அந்தோவென்றது - ஆர்த்திக்குமேலே யபேக்ஷிக்கவும் வேண்டுவதேயென்னுகருத்து. பகர்-ஒளி.......................................................................*

ஈடு - ஒன்பதாம்பாட்டு.

தாமபேக்ஷித்தபோதே காணப்பெறுமையாலே; இப்போதே யுன்னைக் காணுவிடில் தரிக்கமாட்டேனென்கிறார்.

(வந்தாய்போலேவாராதாய்) மாநஸாநுபவத்தி லுண்டான கனைபுரட்சிதான் "பாஹ்யஸம்ஶ்லேஷமும் பெற்றோம்" என்றுகொண்டு த்ருப்திபிறக்கும்படியாய், அத்தை "மெய்" என்றணைக்கக் கணிசித்தால் கைக்கெட்டாதபடியாயிருக்கை. (வாராதாய்போல்வருவானே) "ஒருநாளும்கிட்டமாட்டோம்" என்றிருக்கச் செய்தே கடுகக் கைப்புகுந்து கொடுநிற்குமென்கை. (அதாவது - "பாஹ்யஸம்ஶ்லேஷத்துக் கெட்டாதவன்" என்று நிராசனுயிருந்தால் மறக்கவோ) அன்றிக்கே, அநாஶ்ரிதவிஷயத்தில் "கைப்புகுந்தான்" என்று தோற்றியிருக்கச்செய்தே புறம்பாய், ஆஶ்ரிதர்க்கு "இவன்கிட்டவரியன்" என்றிருக்கச்செய்தே உட்புகுந்திருக்கும்படியைச் சொல்லிற்றாகவுமாம். (செந்தாமரையித்யாதி) சகலதாபங்களுமாறும்படி குளிர்ந்த திருக்கண்களையுடையவனுமாய், சிவந்து கனிந்திருந்துள்ள திருவதரத்தை யுடையனுமாய், கல்பகதருப்பணைத்தாப்போலேயிருக்கிற நாலுதிருத்தோள்களையுடையனுமாய் போக்யனுமானவனே.(எனதுயிரே)இவ்வடிவழகை யென்னை யநுபவிப்பித்து, வ்யதிரேகத்தில்நானுளனுகாதபடிபண்ணினவனே.(சிந்தாமணியித்யாதி) விலக்ஷணமானரத்நங்களினுடைய,பகருண்டு-ப்ரபை,அது அல்லைப்பகல் செய்யாநின்றதாயிற்று.திவாராத்ரவிபாக மறுத்துக்கொண்டிருக்கை."மணிகளினொளியால்விடிபகலிரவென்றறிவரிதாய" என்னக்கடவதிறே.இத்தால்நினைக்கிறது-"நகாலஸ்தத்ரவைப்ரபு:"(நகாலஸ்தத்ரவைப்ரபு:) என்கிறதேசத்தேபோயநுபவிக்குமநுபவத்தையிங்கேயநுபவிக்கக்காணும்நினைவு. (அந்தோ) போக்யமும் குறைவற்று, அவன்றானும் ஸந்நிஹிதனுய்,எனக்காசையும் மிகுத்திருக்க, கிட்டியநுபவிக்கப்பெறுதொழிவதேயென்கிறார். (அடியேனுனபாதமகலகில்லேனிறையுமே) என்ஸ்வரூபத்தைப்பார்த்தென்தசையை புத்திபண்ணுய். தர்ஶியாநிற்கச்செய்தே, அதுக்குவர்த்தகமாகக் கண்ணை மாறவைக்கிலும் பொறுக்கமாட்டேன்......*

ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (வந்தாயித்யாதி) "இறையும் - அகலகில்லேன்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (தாமபேக்ஷித்தவித்யாதி)

"வந்தாய்போலே" என்கிறதுக்கும், "வாராதாய்" என்கிறதுக்கு மர்த்தம் (மாநஸாநுபவத்திலித்யாதி) "வாராதாய்போல்" இத்யாதிக்கர்த்தம் (ஒருநாளுமித்

யாதி) ஒருநாளும் மாநஸமாகக்கிட்டமாட்டோமென்றிருக்கச்செய்தே, மாநஸமாகக்கடுகக் கைப்புகுந்துகொடுநிற்குமென்றபடி.

கண்ணென்னாதே, " செந்தாமரை " என்றுவிசேஷித்ததுக்குபாவம் (ஸகல தாபங்களுமித்யாதி)

உமக்குயிரானபடி யெங்ஙனேயென்ன (இவ்வடிவழகையித்யாதி)

" சிந்தாமணி " - சிந்திதபலப்ரதமான மணியென்று சப்தார்த்தம். ஶ்லாக்யமான ரத்நமென்று தாத்பர்யார்த்தம்; அத்தை யருளிச்செய்கிறார் ( விலக்ஷணேத்யாதி) பகர்-தேஜஸ்ஸு. அல்லே-ராத்ரியை. அல்லு-ராத்ரி. அல்லைப்பகல்செய்கையாவதேதென்ன (திவாராத்ரேத்யாதி) உக்தத்துக்கு ப்ரமாணம் ( மணிகளினித்யாதி ) நாநாவான ரத்நங்களினொளியாலே விடிவுபகல், இரவு-ராத்ரி, என்றறியவரிதானவென்றபடி. திருமொழி நாலாம்பத்து பத்தாந்திருமொழி எட்டாம்பாட்டு, " முடியுடை " இத்யாதி. " சிந்தாமணிகள் பகரல்லைப்பகல்செய் " என்று வர்ணித்ததுக்கு பாவமேதென்ன (இத்தாலித்யாதி)

" நாற்றோளமுதே, திருவேங்கடத்தானே " என்கிறபதங்களைக்கடாக்ஷித்து பாவம் (போக்யமுமித்யாதி) எனக்காசையும் மிகுத்திருக்கவென்றது - " ஆறுவன்றில் " என்றத்தைப்பற்ற. "அடியேன்" என்றுவைத்து, "உனபாதமகலகில்லேன்" என்றதுக்குபாவம் (என்ஸ்வரூபத்தையித்யாதி) என்ஸ்வரூபத்தைப்பார்த்தென்றது- என்னுடைய வநந்யகதித்வரூப ஸ்வரூபத்தைப்பார்த்தென்றபடி. புத்திபண்ணாய்-க்ருபைபண்ணாயென்றபடி. "இறையும்" என்றதுக்கர்த்தம் (தர்ஶியாநிற்கவித்யாதி) தர்ஶியாநிற்கச்செய்தேயென்றது - சம்ஶ்லேஷியாநிற்கச்செய்தேயென்றபடி.*

---

## பத்தாம்பாட்டு.

அகலகில்லேனிறையுமென்றலர்மேல்மங்கையுறைமார்பா
நிகரில்புகழாயுலகமூன்றுடையாயென்னையாள்வானே
நிகரிலமரர்முனிக்கணங்கள்விரும்புந்திருவேங்கடத்தானே
புகலொன்றில்லாவடியேனுன்னடிக்கீழமர்ந்துபுகுந்தேனே.

### ஆறாயிரப்படி.

( அகலகில்லேன் ) அபாரகாருண்ய மஹோததியாய், உன்னுடையகுணங்களாலே யஸ்மத் ஸ்வாமியுமாய், திருநாட்டிலே த்வத் பரிசர்யைகபோகராயும் த்வத்குணாநுபவைகபோகராயும் நிருபமராயிருந்த நித்யசித்தபுருஷர்களுக்குங் கூட ஸ்ப்ருஹணீயமான திருமலையிலே யநாலோசித விசேஷாசேஷ லோகசரண்யனாய்க்கொண்டு நின்றருளுவதுஞ் செய்த வுன்றிருவடிகளை, அநந்யசரணனான வடியே னநந்ய ப்ரயோஜநனாய்க்கொண்டு, பெரியபிராட்டியார் புருஷகாரமாக சரணம்புகுந்தேன்; இப்போதே நிரஸ்தசமஸ்த ப்ரதிபந்தகனா யுன்றிருவடிகளிலே சர்வகாலமும் சர்வகைங்கர்யமு மடியேன் பண்ணப் பெறவேணுமென்கிறார், ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரயணீயதைக் கேகாந்தமான புருஷகாரயோகத்தையும் குணயோகத்தையு முடையையாயிருக்கிற வுன்திருவடிகளை யநந்யகதியாய்க்கொண்டாஶ்ரயித்தேனென்று, ஸக்ரமமாக ஶரணாகதியைப்பண்ணுகிறார்.

ப்ரபாப்ரபாவான்களைப்போலே யிருக்கிற ஸ்வரூபசம்பந்தத்தாலும், எதிர்த்தலையில் போக்யதாதிசயத்தாலும், இறையும் - க்ஷணமாத்ரமும். அகல - விஶ்லேஷிக்க. கில்லேன் - க்ஷமையல்லேன். என்று - என்று. அலர்மேல் - பூவிற்பிறப்பாலுண்டான மார்த்தவபோக்யதைகளை யுடையளாய். மங்கை-மங்கைப்பருவத்தாலுண்டான வால்லப்யாதிசயத்தையுடைய லக்ஷ்மியானவள். உறை-தன்னுபிஜாத்யமுமாத்மகுணமுமாபிருப்யமுங்கிடக்க ஓரவயவ விசேஷத்திலே நித்யவாசம்பண்ணும்படியான போக்யதாதிசயத்தையுடைய. மார்பா-திருமார்பையுடையையாய். இவளோட்டைச்சேர்த்தி யடியாக வுதிக்கக்கடவதாய், நிகரில்-ஆஶ்ரிததோஷாநபிஜ்ஞதையாலே குணாந்தரங்களோடுசேர்க்க வொண்ணாதபடி நிருபமமான. புகழாய் - நிரவதிகவாத்ஸல்யப்ரதையை யுடையையாய், இதுக்கு ஹேதுவாயிருக்கிற, மூன்றுலகம் - ப்ரமாணப்ரசித்தமாயுள்ள த்ரிவித சேதநாசேதநங்களையும். உடையாய்-ஸ்வம்மாகவுடைய ஸ்வாமித்வத்தை யுடையையாய். அந்தமேன்மையே யன்றியே, என்னை - அத்யந்தஹேயனானவென்னையும். ஆள்வானே - அங்கீகரிக்கும் ஸௌஶீல்யாதிசயத்தையுடையையாய். அந்தசீலத்தோடே யெல்லாருங்கண்டநுபவிக்கும்படி; ஜ்ஞாநப்ரேமாதிகுணோத்கர்ஷத்துக்கு. நிகர்-ஒப்பு. இல்-இல்லாதபடியாயுள்ள. அமரர்-கைங்கர்யநிஷ்டரானவமரரும். முனி-குணாநுபவபரராய்க்கொண்டு மநநஶீலரான முனிவர்களுமான. கணங்கள்-திரள்களானவை. விரும்பும்-வாத்ஸல்யாத்யநுபவாபிநிவேஶத்தாலே யத்யந்தாதரம்பண்ணிவர்த்திக்கும். திருவேங்கடத்தானே - திருமலையிலே ஸந்நிஹிதனான ஸௌலப்யபூர்த்தியையுடையவனே. உன்னையொழிய, புகல்-உபாயாந்தரங்களானபுகலும் ரக்ஷகாந்தரங்களான புகலும். ஒன்று-ஒன்றும். இல்லா-இல்லாதபடி யநந்யஶரணனான. அடியேன்-பாரதந்த்ர்யத்தையுடையநான். உன் - கீழுக்தமான புருஷகாரயோகத்தையும் குணயோகத்தையுமுடைய வுன்னுடைய. அடி-திருவடிகளின். கீழ் - கீழே ரோகாவதந்தர்க்கதனாய்க்கொண்டு. அமர்ந்து-அநந்யப்ரயோஜநத்வ வ்யவஸாயவிசிஷ்டனாய். புகுந்தேன்-ஆஶ்ரயித்துவிட்டேன்.

அகலகில்லே னென்கையாலே-ஸ்ரீஶப்தார்த்தமான: சேவாகரணத்தாலே வந்த நித்யாநபாயித்வத்தையும், அலர்மேலென்கையாலே - சேவ்யதைக் கேகாந்தமான மார்த்தவாதியோகத்தையும், மங்கையென்கையாலே - சேவாகரணத்துக்கடியான வால்லப்யத்தையும்; உறைமார்பனென்கையாலே-மதுபர்த்தமான நித்யயோகத்தையும், நிகரில் புகழாயென்றுதொடங்கி திருவேங்கடத்தானேயென்றதளவுதியாக-“ 𑌮𑌾𑌤𑌾𑌪𑌿𑌤𑌾𑌭𑍍𑌰𑌾𑌤𑌾𑌨𑌿𑌵𑌾𑌸𑌃 ” ( மாதாபிதாப்ராதாநிவாஸ: ) என்று நாராயணஶப்தார்த்தத்தைச்சொன்ன ஶ்ருதிக்ரமத்தாலே வாத்ஸல்யாதி குணசதுஷ்ட யக்ரமத்தையும், புகலொன்றில்லாவென்கையாலே-அதிகாரி விசேஷணமான வாகிஞ்சந்யாநந்யகதித்வத்தையும், அடியேனென்று-க்ரியாபதத்திலுத்தமனாலேயாக்ஷிப்தமான வதிகாரி ஸ்வரூபத்தையும், உன்னென்று - சம்புத்யந்தயோஜநையாகையாலே அத்யாஹார்யமான தவஶப்தார்த்தத்தையும், அடிக்கீழென்கையாலே - சரணஶப்தார்த்தத்தையும், அமர்ந்தென்கையாலே - க்ரியாபதத்தி லுபஸர்க்கார்த்தமாயுபாயோபேய விஷயமான வ்யவஸாயத்தையும், புகுந்தேனென்று - க்ரியாரூபமா

ன வாஶ்ரயணத்தையும், புகுந்தேனென்கிற பூதார்த்த நிர்த்தேஶத்தாலே - ஆஶ்ரயணத்துக் காவ்ருத்யபேக்ஷையில்லாத ஸக்ருத்கரணத்தையும் ப்ரகாஶிப்பித்ததாய்; இது பூர்ணஶரணாகதியாகையாலே; ஆஶ்ரயணார்த்தமான லக்ஷ்மீஸம்பந்தமும் குணயோகமும் ப்ராப்யாங்விதமாயிருக்கையாலும்; அடியேனென்கிற வதிகாரிஸ்வரூபத்திலே-அநந்யார்ஹத்வா நந்யஶரணத்வங்களோபாதி அநந்யபோக்யத்வமும் சூசிதமாகையாலே, அமர்ந்தென்று - ப்ரயோஜநாந்தரநிராஸம் சூசிதமாகையாலே நமஶ்ஶப்தார்த்தம் ஸித்திக்கையாலும்; புகுந்தேனென்கிற கதிவசநம்-ப்ராப்திக்கும் சூசகமாகவற்றுகையாலும்; ப்ரதாநமான உபாயவரணவாக்யத்துக்குள்ளே-வாக்யசேஷமான வுத்தரவாக்யார்த்தமு மந்தர்க்கதமாயிற்றதாயிற்று. ஆகையாலே, இப்பாட்டு-வாக்யத்வயார்த்த ப்ரகாஶகமாகையாலே பூர்ண ஶரணாகதியாகக்குறையில்லை. இப்படி, இப்பத்தாலே - கீழிற்பத்தி லுபாயதயா நிஷ்கர்ஷித்தவஸ்துவை ஸப்ரகாரமாக ஸ்வீகரித்தருளினாராயிற்று ......... ......... ......................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

தம்முடைய வபேக்ஷிதம் சடக்கென ஸித்திக்கைக்காகப் பெரியபிராட்டியாரைப்புருஷகாரமாகக்கொண்டு திருவேங்கடமுடையான்திருவடிகளிலே சரணம்புகுகிறார். ஆக, ஒன்பதுபாட்டாலும் - சரண்யன் ஸ்வரூபத்தைச்சொன்னார், இதில் - தம்முடைய ஸ்வரூபத்தைச்சொல்லி சரணம்புகுகிறார். கீழே; அடியேன் என்றும், அருவினையேன் என்றும் - தம்முடைய வாகிஞ்சந்யத்தையும், சேஷத்வத்தையும், அவனுடைய சரண்யதைக் குறுப்பாகச்சொல்லிக் கொடுபோந்தார்; இங்கு - அது தன்னையே பேற்றுக்குடலாகச்சொல்லி சரணம்புகுகிறார். இப்பாட்டுத்தன்னை-த்வயத்திற் பதங்களோடொக்க யோஜித்துத் தலைக்கட்டக்கடவது. அதிலர்த்தப்ராப்தமான அஹமர்த்தத்தை - இங்கு, அடியேனென்கிறது.

(அகலகில்லேனிறையுமென்று) இது - அகன்றிருந்து சொல்லுகிற பாசுரமுமன்று; நித்ய சம்ஶ்லேஷம் பண்ணாநிற்கச்செய்தேயாயிற்று "இறையுமகலகில்லேன்," "இறையுமகலகில்லேன்" என்றுரைப்பது. நித்யாநுபவம் பண்ணுவார்க்கெல்லாம் பாசுரமிதுவே. நாட்டாருடைய அகலகில்லேன் போலன்றிவளுடைய வகலகில்லேன்; அது கர்மாதீநமாகவருவது, இது விஷயாதீநமாகவிளையுமது. (அலர்மேல்மங்கை) அவன்றன்னை "நஜீவேயங்க்ஷணமபி" (நஜீவேயம்க்ஷணமபி) என்னப் பண்ணவல்ல போக்யதையையும் பருவத்தையுமுடையவள். பரிமளந்தானொருவடிவுகொண்டாப்போலேயிருக்கை. (உறைமார்பா) இத்தால் - நித்யயோகஞ்சொல்லுகிறது. எனக்கொருகாலம்பார்த்து சரணம்புகவேண்டும்படியாயோவிருக்கிறது. இத்தலையிலபராதத்தையுமீஶ்வரஸ்வாதந்த்ர்யத்தையு மநுசந்தித்துப் பிற்காலிக்கவேண்டாதபடியாயிருக்கை. "ஒருநாள் பட்டர், பிள்ளையழகிய மணவாளரையர்க்கு த்வயமருளிச்செய்கைக்காக 'எல்லாரும்போங்கோள்' என்ன, நஞ்சீயருமெழுந்திருந்துபோய், 'நம்மை 'இராய்' என்றருளிச்செய்திலர்' என்று வெறுத்திருக்க, அப்

போதே 'ஜீயரெங்குற்றூர்' என்று கேட்டருளித் தேடியழைத்துக் கூட
வைத்துக்கொண்டிருந்து த்வயத்தை அருளிச்செய்யாநிற்கச்செய்தே அ
ப்போதருளிச்செய்தவார்த்தை" என்று ஜீயரருளிச்செய்வர் -" இவ்வா
த்மவஸ்து சேஷமாகி லவன் சேஷியாகி லிங்குப்பிராட்டி சம்பந்தத்தால்
செய்கிறதென்" என்று கேட்க, " அதிருக்கிறபடிகேளீர்; ராவணனுக்கு
ம் காகத்துக்கும் சம்பந்தமு மநுஷ்ட்டாநமுமொத்திருக்க; இனி ராவ
ணன் சாபத்தாலே கிட்டமாட்டாதே யிருப்பதொன்றுண்டிறே, அங்ங
னன்றிக்கே ஜநநிபக்க லபராதத்தில் கைதொடானாயிருக்க, தலைகொண்டு
தப்பினானிறே அவள் சந்நிதியுண்டாகையாலே. அவள் கடக்கவிருக்கை
யாலே ராவணன் தலையறுப்புண்டான்." போக்கற்றுச் செயல்மாண்டு நி
ன்றநிலை யவனுக்கு மொக்குமிறே, இங்ஙனே யிருக்கச்செய்தேயும் கார்ய
மாயிற்றதில்லையிறே அவனுக்குப் பிராட்டி சந்நிதியில்லாமையாலே. இ
னித்தான், மாதாவும் பிதாவுமானால் பிதாவைப்போலன்றிறே ப்ரஜைக
ள் விஷயத்தில் மாதாவிருக்கும்படி; இவன்செய்த குறைதான் காணக்க
ண்ணிட்டிருக்கையன்றிக்கே, பிதாவின்பக்கலிலும் மறைத்துக்காட்டுவா
ளொருத்தியிறே. ஆகையிறே உத்தரார்த்தத்தில் - அவனோடொப்புச்
சொல்லி, பூர்வார்த்தத்தில் - புருஷகாரமாகையாகிற நீர்மையிலேற்றஞ்
சொல்லுகிறது தொட்டாரைத்தொட்டு " [illegible] " ( நக
ஶ்சிந்நாபராத்யதி ) என்னக்கடவளிவள், " நம்மையொருகார்யத்திலே
யேவுவதுகாண்" என்று அவசரப்ரதீக்ஷனாயிருக்குமவனைப் பெற்றால் வி
டாளிறே. தன்வார்த்தைகேளாதார்க்குங்கூட " [illegible] "
( மித்ரமௌபயிகம்கர்த்தும் ) என்னக்கடவளிவள், தன்முகம்பார்த்து வா
ர்த்தைகேட்குமவனைப் பெற்றால் விடாளிறே. [ [illegible] ] [ தாஸீநாம்ராவணஸ்யாஹம்மர்ஷயாமீஹ
துர்ப்பலா ] என்றாளிறே. திருவடி, "ராக்ஷஸிகளை என்கையிலே காட்டி
த்தரவேணும்" என்ன, பிறர் கண்குழிவு காணமாட்டாத துர்ப்பலைகா
ண் என்றாளிறே. ராவணன் பட்டானாகில், பெருமாள் விஜயத்தோடேநி
ன்றாராகில், திருவடிவந்து முன்னேநின்றானாகில், வேறொரு தௌர்ப்பல்
யமில்லையிறே; இனி தௌர்ப்பல்யமாவது - பிறர் நோவுகாணமாட்டா
மையிறே. ( நிகரிலித்யாதி ) அதுக்கநந்தரபதத்தி லர்த்தஞ்சொல்லுகிற
து. * தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல் " என்னடியாரதுசெய்
யார்" என்னும் குணாதிக்யஞ்சொல்லுகிறது. ( உலகமூன்றுடையாய் )
தான் நிர்க்குணனென்னிலும் விடவொண்ணாத ப்ராப்திசொல்லுகிறது.
( என்னையாள்வானே ) ப்ராப்தியை க்ரயஞ்செலுத்திக் கொடுக்கும்படி.
மோக்ஷத்தளவும்செல்ல நடத்திக் கொடுபோந்து நடுவுள்ள வபேக்ஷித
ப்ரதனாகையிறே ஆளுகையாவது. ( நிகரிலித்யாதி ) அப்பதத்தில் முடிகி
ற சௌலப்யஞ் சொல்லுகிறது. (புகலொன்றில்லாவடியேன்) ஆகிஞ்சந்
யமும் ஸ்வரூபமும்ப்ரபத்திக்கு பரிகரமிறே. (உன்னடிக்கீழ்) * சரணௌ.

(அமர்ந்து) நடுவோரிடையீடின்றிக்கேயிருக்கை. (புகுந்தேனே) இவ்வத்யவசாயமுபாயபாவத்திலன்வயியாமையாலும்; உபகாரஸ்ம்ருதி ஸ்வரூபமாகையாலும், ஸ்வீகாரமும் சைதந்ய ப்ரயுக்தமாகையாலும் (இவையெல்லா) மதிகாரிவிசேஷண மாக்கிற்றிறே (த்வயார்த்தவிவரண ப்ரதேசங்களிலே) இவையெல்லாம் - பூர்வார்த்தத்தில் முடிகிற பதத்தோடே சேரக்கடவதிறே.

(அகலகில்லேனித்யாதி) இதில் - உபாயபாவஞ் சொல்லச்செய்தே, உபேயவிஷயஸூசகமுமாயிருக்கிறது. அதாகிறபடி யெங்ஙனேயென்னில்; இருவருமான சேர்த்தியிலேயிறே யிவனடிமைசெய்வது, அச்சேர்த்திதன்னையேயிறே யிவனுபாயமாகப் பற்றுகிறதும். இத்தால்சொல்லிற்றுகிறது - நித்யப்ராப்யத்வமிறே, நித்யாபூர்வவிஷயமிறே நித்ய ப்ராப்யமாகவல்லது. (பிராட்டி நித்யசம்ச்லிஷ்டையா யிருக்கச்செய்தேயும் "பிரியக்ஷமையல்லேன்" என்னும்போது - அவ்விஷயம் நித்யப்ராப்யமாகவேணுமிறே; இனி, இருவருமான சேர்த்தி நித்யப்ராப்யமென்னுமிடஞ் சொல்லவேண்டாவிறே.) (அகலகில்லேனிறையுமென்று) இதகன்றிருந்து சொல்லுகிறவார்த்தையன்று. தனக்ககலுகைக்கு சம்பாவனையின்றிக்கே யிருக்கச்செய்தேயும், அங்குத்தை போக்யதையை யநுசந்தித்து; க்ஷணகாலமும் நானகலுகைக்கு சக்தையாகிறிலேனென்னும். "ஈநநூா" (அநந்யா) என்றும், "ஈநவாயிநீ" (அநபாயிநீ) என்றுஞ் சொல்லாநிற்கச்செய்தே சொல்லுகிறவார்த்தையிறே யிது. க்ஷணகாலமும்பிரியக்ஷமையல்லேனென்று. (அலர்மேல்மங்கை) இங்ஙன் சொல்லுகிறவளாரென்னில், தன்வடிவழகாலும் பருவத்தாலுமவன்றனக்குங்கூட வுத்தேச்யமாயிருக்கிறவள். அவனை, "நஜீவெயம் க்ஷணமபி" (நஜீவேயம்க்ஷணமபி) என்னப்பண்ணுமவள். நாட்டாரகலகில்லேன்போலன்றிறே இவளுடைய வகலகில்லேன்; அது கர்மநிபந்தநமாகவரு மகலுகையிறே, இவளுக் கதில்லாமையாலு மவன்றன்மேல்விழும் ஸ்வபாவனுகையாலும். அவனால் வரும் பிரிவுமில்லை, தன்னால்வரும் பிரிவுமில்லையானால், இவ்வுக்திக்கு ப்ரஸங்கமென்னென்னில்; அவனுகையாலேவந்தது. நாட்டாருடைய ப்ரார்த்தனை கர்மமடியாகவருமது, இவளுடைய ப்ரார்த்தனை விஷயாதீநமாக விளையுமது. (உறைமார்பா) ப்ரதமபதத்தில் * மதுப்பால் சொல்லுகிற நித்யயோகத்தைச்சொல்லுகிறது. இதுவு மிங்ஙனே பலிக்கக்கண்டோமித்தனை. இச்சேர்த்திக்கு ப்ரயோஜநம் - அவனுடைய ஸ்வாதந்த்ர்யத்தை யாதல், தன்னுடைய சம்சாரித்வத்தை யாதலநுசந்தித்துக் கைவாங்கவேண்டாதபடியாயிருக்கை. அவன் சர்வஜ்ஞத்வத்தையும் தன்னுடைய ஸாபராதத்வத்தையு மநுசந்தித் தஞ்சவேண்டாதபடியாயிருக்கை. அதாகிறது - இவனுடைய வபராதகாலம் பார்த்திருந்து ப்ரதிபத்தி பண்ணுகைக் கவனுக் கவசரமில்லை, அவள்கூட விருக்கையாலே. பிராட்டிபக்க

லபராதம் காகத்துக்கும் ராவணனுக்கு மொத்திருக்கச்செய்தேயும், இவள் சந்நிதியாலே தலைபெற்றது காகம்; அத்தனை யபராதமின்றியிலேயிருக்க, ராவணன் தலையறுப்புண்டானிறே இவள் சந்நிதியில்லாமையாலே. இத்தனையுண்டிறேயிவள்ஸந்நிதிக்கு மஸந்நிதிக்கும்வாசி. தமப்பன் பகையாக, மாத்ரு சந்நிதியிலே ப்ரஜையை யழியச்செய்யமாட்டாமையு மொன்றுண்டே. அவன் பண்ணின வபராதத்துக்கு ப்ரஹ்மாஸ்த்ரத்தைவிட்டு, அதுதொடர்ந்துகொண்டு திரிந்தவாறே புகலற்றுவிழ, இவளைநோக்கி ப்ரஹ்மாஸ்த்ரத்துக் கொரு கண்ணழிவு சொல்லிவிட்டா னித்தனையிறே. "தமேவஶரணஂ கத꞉" (தமேவஶரணங்கதঃ) என்றதுவும், "நநமேயம்" (நநமேயம்) என்றதுவும், இரண்டுமப்ரயோஜகம், அதென்னென்னில், காகத்துக்கும் போகிறபோ தகவாயில் நினைவதுவேயிறே. அங்ஙனன்றாகில் "ஸ்வகமாலயம்-ஜகாம" (ஸ்வகமாலயம்-ஜகாம) என்று போகப்பாரானே, செயல்மாட்சியாலே விழுந்தவித்தனையிறே. இது ராவணனுக்கு முண்டாயிருக்கச்செய்தே கார்யமாயிற்றதில்லையிறே இவளஸந்நிதியாலே. கீழ்ச்சொன்ன வர்த்த மித்தனையும் - த்வயத்தில் முதற்பதத்தோடேயற்றது. மேல்நிகரில் என்று தொடங்கி, திருவேங்கடத்தானே என்னுமளவும்வர - அநந்தரபதத்தி லர்த்தஞ்சொல்லுகிறது. (நிகரில்புகழாய்) இப்படியிருக்கிறவள்தானே * சிதகுரைக்குமன்று மவளுடனே மன்றுடும் குணதிக்ய விசேஷஞ்சொல்லுகிறது. அதாகிறது [என்னடியாரதுசெய்யாரென்று] என்னைப்பற்றினார்க்கதில்லைகாணென்கை. "இல்லை, நானிப்போ தின்னகுற்றஞ்செய்யக்கண்டேன்" என்று காட்டிக்கொடுத்தாலும்; ஆனாலென், "தர்மாதர்மங்களும் பரலோகமுமில்லை" என்றுசெய்கிறார்களோ ; ப்ராமாதிகத்துக்கு நாமுளோமென்றன்றோ செய்கிறதென்கை. இவளுடைய வுத்கர்ஷத்துக் கடிசொல்லும்போது அவனைப்பற்றிச்சொல்லலாம், அவனுடைய வுத்கர்ஷத்துக்கொன்று தேடிச்சொல்லலாவதில்லை. இதுவோதா னர்த்தஸ்வரூபமிருக்கும்படி. இத்தால் சொல்லிற்றாயிற்று - இவளவனுடைய ஸ்வாதந்த்ர்யத்தை யநுசந்தித்து "இவற்றின்பக்கலென்னாய்விளைகிறதோ" என்றிருக்கையும் அவனிவளுடைய மார்த்தவத்தையும் மௌக்த்யத்தையு மநுசந்தித்து "இவற்றின்பக்க லெவ்வளவாயிருக்கிறாளோ" என்றிருக்கையும். ஆக, ஒருவரையொருவ ரதிசங்கைபண்ணி நேர்க்கு மிருவர்நிழலையும் பற்றியிறே யுபயவிபூதியுங்கிடக்கிறது (உலகமூன்றுடையாய்) தான் நிர்க்குணனென்றாலும் விடவொண்ணாத ப்ராப்தியைச்சொல்லுகிறது. "சிதகுரைக்கு மேல்" என்றவிடத்தில் - அவளுக்கு ஸ்வரூபாநுரூபமான குணங்கள் கூடாதவன்றிறே அவளது சொல்லுவது, அப்படியே இவனுக்கு மிக்குணங்களின்றிக்கே யிருந்தாலும் விடவொண்ணாத குடற்றொடக்கைச் சொல்லுகிறது. அவன் "அல்லேன்" என்றுகைவிடுமென்றும் செங்கற்சீ

ளைகட்டி வளைக்கலாம்படியிறே யிஸ்ஸம்பந்தமிருப்பது; இனி இவன்று ன் காதாசித்கமாக ப்ரணமம்பண்ணிப் பின்பு கைக்ழியப்போகப்பார்க்கி லும், காலிலே விலங்கைத்தைத்துக் காரியங்கொள்ளலாம்படியான வுரி மை சொல்லுகிறது. (என்னையாள்வானே) அடிமை தன்னை க்ரயஞ் செலுத்திக் கொடுக்கும்படி. "சேஷத்வ சாமாந்யத்தைப்பற்றச் சொ ல்லுகிறீ ராகில் அவ்வளவிறே யுமக்கும்" என்ன வொண்ணுதபடி; என்னை * மயர்வறமதிநலமருளி யிவ்வளவும்வர நிறுத்திப்பொகடப் போமோ. (நிகரிலமரரித்யாதி) அங்குள்ளாரும் விரும்பிவந்தடிமை செய்கிறது மிங்கேயிறே. "வைகுந்தத்தமரரும்முனிவரும்" என்றிரண் டுகோடியாயிறே யிருப்பது. குணநிஷ்டரும் கைங்கர்யநிஷ்டரும்.(தி ருவேங்கடத்தானே) அதுக்கு மூழ்ந்தபொருள் சௌலப்யமென்னக்கட வதிறே, குணயோகமும், சேஷித்வமும், விசேஷகடாக்ஷமும், சௌலப் யமும், இவையித்தனையு முண்டிறே யிப்பதத்துக்கு. இவனுக்கு சகலா பேக்ஷித பலப்ரதனுகைக்காக. அந்தராத்மதயா ஸ்த்திதிபண்ணுமென்றி றே - * நாராயணசப்தத்திற்சொல்லுகிறது; அந்தசௌலப்யம், இங்கு சதா சந்நிதிபண்ணுகையாலே திருவேங்கடமுடையான் பக்கலிலே கிட க்குமிறே. இந்தசௌலப்ய முபாயமாகிறபடி யெங்ஙனே யென்னில்; [ ஊரஜெகூஜ ] [ மாமேகம் ] என்கிறவிடத்தில் - சாரத்யவேஷத்தையிறே காட்டுகிறது. இன்னமு மவ்வளவன்றிறேயிங்கு. அதுக்கு முன்புமில்லை பின்புமில்லையிறே அந்த சௌலப்யந்தான்; நித்யசந்நிதி பண்ணுகிறவிட மிறே யிவ்விடம். அங்குத்தானும் "ஊயஹ்ராஸக்தமநாஃபாஷா" (மய்யா ஸக்தமநாஃபார்த்த) என்றொரு தேவையிட்டிறே சொல்லிற்று; அதுவு மில்லையிறே யிங்கு. இனித் தம்படி சொல்லுகிறார் (புகலொன்றில்லா வடியேன்) கீழ் "அடியேன்" என்றும், "அருவினையேன்" என்றும்- தம்முடைய சேஷத்வத்தையும், ஆகிஞ்சந்யத்தையு முருவச் சொல்லிக் கொடுபோந்தார்; இனித்தான்; வெறுமையும், ஸ்வரூபமும்,இரண்டும் ப்ரபத்திக்குப பரிகரமிறே; அத்தை யிங்கேயும் ப்ரயோகிக்கிறார், அது தன்னைச் சொல்லவேணுமிறே. இங்குச்சொல்லவேண்டுகிற தென்னெ ன்னில்; அவனுக்குப்பாயபாவம் ஸ்வரூபமானவோபாதி யிவனுக்கு மிப்ர திபத்திஸ்வரூபமாகையாலே. இவனுக்கிதில்லாதவன்று சர்வமுக்திப்ரஸ ங்கமுமாமே. (அடியேன்) அதிலர்த்தப்ராப்தமானவஹம்சப்தத்தை யிங் குவாசகசப்தத்தாலே சொன்னதுவேவாசி. (உன்னடிக்கீழ்) "ஶரணௌ" (சரணௌ) என்றது தன்னையே சொல்லுகிறது. "ஸஹ்ராதுஸ்ஶரணௌ" (ஸப்ராதுஸ்சரணௌ) என்றாப்போலேசொல்லக்கடவதிறே. (அமர்ந்து புகுந்தேனே) "ஊமுக்ஷுவைஶரணமஹம்ப்ரபத்யே" (முமுக்ஷு ர்வைஶரணமஹம்ப்ரபத்யே) என்னுமாபோலே. (அமர்ந்து) அவனுக் கொரு ஸஹகாரிவேண்டுதல், தன்றலையிலே யுபாயபாவங்கிடந்தல் செய்

யிலிறே நடுவொரு வ்யவதாந விளம்பங்களுக்கு ஹேதுவுள்ளது. (புகுந்தேனே) போனவெல்லையளவுமிறே புகுருவதும்; முன்பு மர்த்தத்திலிழவில்லையிறே. இவனுடைய விட்ரதிபத்தியேயிறே யுள்ளது, அதுபோமித்தனையிறே வேண்டுவது. அத்யவசித்தேனென்கிறார். இங்குத்தை வர்த்தமாநம் - ஸ்ம்ருதி சந்ததிபோலன்றிறே; ருசிகார்யமாய் வருகையாலே ப்ராப்யத்தினுடைய ப்ராப்தியள்வும் நிற்குமிறே.

சகலசாஸ்த்ரங்களிலும் வ்யாபரிப்பதொன்றாய், இஶ்ஶாஸ்த்ரங்களுக்கெல்லா மடியான வேதாந்தங்களுக்குக் கிழங்காய், நம்மாசார்யர்களெல்லாரு மொக்க வர்தரித்துப் போருவ தோரர்த்த விசேஷத்தை - இப்பாட்டாலே யருளிச்செய்கிறார். ப்ரதமாசார்யருமாய், "மயர்வறமதிநலமருளினன்" என்கிறபடியே பகவத்ப்ரஸாதலப்த ஜ்ஞாநவைபவருமான விவர் பரிக்ரஹிக்கையாலே வந்த வேற்றமுமுண்டு. இவ்வுபாயந்தன்னைப் பரிக்ரஹித்து ப்ரயோஜநாந்தரத்தைக் கொள்வாரும், சாதநாந்தரத்தைப்பரிக்ரஹித்து இவனையே ப்ரயோஜநமாகப்பற்றுவாருமாயிருப்பர்கள் புறம்புள்ளார்; அங்ஙனன்றிக்கே, இவனையே ப்ராப்யமும் ப்ராபகமுமாக வத்யவசித்திருக்கிற வேற்றமுண் டிவர்க்கு. ப்ராப்ய மிவனேயாகில் ப்ராபகாந்தரங்களை பரிக்ரஹித்தால் வரும் குற்ற மென்னென்னில்; அவை சாத்யமுமாய்ப் பலவுமாய் துஶ்ஶகமுமாய் ஸ்வரூபத்துக் கநநுருபமாயிருக்கும். இப்படி யிருக்கும் சாதநாந்தரங்கள்பல. அவையெவையென்னில்; கர்மயோக ஜ்ஞாநயோக பக்தியோகங்கள். கர்மயோகமாவது - ஆத்மயாதாத்ம்ய ஜ்ஞாநபூர்வகமாக ஸ்வவர்ண ஸ்வாஶ்ரமோசிதமாய் விஹிதமான கர்மத்தை பலாபிசந்திரஹிதமாகவும் கர்த்ருத்வ த்யாகத்தையும் சங்கத்யாகத்தையும்பண்ணி பகவத்ஸமாராதந புத்த்யா பண்ணவே, விரோதியானபாபம் க்ஷயித்து மநஸ்ஸு நிர்மலமாய் ஸ்வரூப ப்ரகாசமுமுண்டாய் பகவத்ஜ்ஞாந ப்ரேமங்கள் பிறந்து, அது பரபக்தி பரஜ்ஞாந பரமபக்தியாய்ப் பேற்றோடே சந்திப்பிக்கும். ஜ்ஞாநயோகமாவது - இந்த்ரியங்களை நியமித்துக்கொண்டு ஸ்வரூபத்தை விஷயமாக்கி பகவத்ஜ்ஞாநம் பிறந்து தத்விஷயப்ரேமமும் பிறந்து, மேல் பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகளும் பிறந்து பேற்றோடே சந்திப்பிக்கும். அங்ஙனன்றிக்கே, இக்கர்மஜ்ஞாநங்களிரண்டையும் பகவத்விஷயத்திலே யாக்கி, "ꠍꠘꠣꠘꠣ..." (மந்மநாபவமத்பக்தோ மத்யாஜீமாம்நமஸ்குரு) என்கிறபடியே, பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகளாய்ப் பேற்றோடே தலைக்கட்டுமது - பக்தியோகமாவது. இவைபோல் துஶ்ஶகமன்றியிலே, திருநாமத்தை ஸுஶகோபாயமாக விதித்தது. எங்கே யென்னில்; தர்மபுத்ரனுக் கநேக தர்மங்களையுஞ் சொல்ல, "[grantha]" (கோதர்மஸ்ஸர்வதர்மாணாம் பவத:பரமோமத:) என்கிறபடியே - உன்னெஞ்சா லறுதியிட்

டிருக்கும் பரமதர்மத்தைச் சொல்லவேணு மென்ன; "ஏஷமேஸர்வதர்மாணாம்" (ஏஷமேஸர்வதர்மாணாம்) இத்யாதிப்படியே - அதிகதமமானதர்மம் திருநாமமென்று சொன்னரிறே. திருநாமம் சாதநாங்கமன்றோ, ஸ்வயம் சாதநமோவென்னில்; "ஜந்மஸம்ஸாரபந்தநாத் - ப்ரமுச்யதே" (ஜந்மஸம்ஸாரபந்தநாத் - ப்ரமுச்யதே) என்று - விரோதிநிவ்ருத்தியையும், "யாதிப்ரஹ்மஸநாதநம்" (யாதிப்ரஹ்மஸநாதநம்)என்று-பலப்ராப்தியையுஞ் சொல்லித் தலைக்கட்டுகையாலே, விரோதிநிவ்ருத்திபூர்வகமான வபிமதபலசித்திக்கும் ஸ்வயம் சாதநமே. [தேஶோயம்ஸர்வகாமதுக்] [தேஶோயம்ஸர்வகாமதுக்] என்று சர்வாபிமதசாதநமாக தேசவாசத்தைச் சொல்லிற்று; "ஆராதநாநாம்ஸர்வேஷாம்" (ஆராதநாநாம்ஸர்வேஷாம்) என்று தொடங்கி, "ததீயாராதநம்பரம்" (ததீயாராதநம்பரம்) என்று தலைக்கட்டுகையாலே-சர்வாபிமதசித்தியும் ததீயரை யாராதிக்கவே கிடைக்குமென்று சொல்லிற்று; அப்படி சொன்ன துஷ்கரமான சர்வோபாயங்களும் அஹங்காரஸ்பர்ஶ முண்டாகையாலே த்யாஜ்யமாகச் சொல்லிற்று. ஒன்றாய் சித்தமாய் ஸுலபமாய் ப்ராப்தமாய், தனக்கவ்வருகொன்றின்றிக்கே - "தஸ்மாந்ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:" (தஸ்மாந்ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:) என்கிற ப்ரபதநத்தைச் சொல்லுகிற திப்பாட்டால். இதொன்பது பாட்டாலும் – சரண்யன் ஸ்வரூபத்தையு மதிகாரி ஸ்வரூபத்தையுஞ்சொல்லி, சரணாகதிப்ரகாரத்தைச் சொல்லுகிற திப்பாட்டில். சரண்யன் ஸ்வரூபமாவது - நிரதிசயபோக்யமுமாய் வகுத்தவிஷயமுமாய் விரோதிநிவர்த்தகமுமாய் சர்வசுலபமுமாயிருக்குமது. அல்லாதவைபோலன்றியிலே ஆஶ்ரயணத்துக் கேகாந்தமாயிருப்பது ஸௌலப்யம். பரவ்யூஹங்கள் சேதநனுக்கு ருசிபிறந்தபோதேயாஶ்ரயிக்கவொண்ணுதபடி தேசவிப்ரக்ருஷ்டமாயிருக்கும், வ்யூஹமும் ப்ரஹ்மாதிகளுக்கா மத்தனையாகையாலே தத்ப்ராயம், அவதாரங்கள் பாக்யாதிகரா யக்காலத்தி லுதவினர்க்கொழியப் பிற்பாடர்க் குதவாமையாலே காலவிப்ரக்ருஷ்டமாயிருக்கும்; அக்குறைகளிரண்டுமின்றியிலே யெல்லாக்காலத்திலு மெல்லார்க்கும் வந்தாஶ்ரயிக்கலாம்படி, "வானவர்வானவர்கோனெடும்" என்கிறபடியே நித்யசூரிகளோடு, இவ்வருகுள்ள ப்ரஹ்மாதிகளோடு, இவ்வருகுள்ள மநுஷ்யர்களோடு * கானமும் வானரமுமாய்க்கொண்டு அத்யந்த ஹேயஜந்மாக்களானரோடு வாசியற சர்வ சமாஶ்ரயணீய ஸ்த்தலம் திருவேங்கடமுடையான்றிருவடிகளே. அஜஹத் ஸ்வபாவ னைகயாலே அபிமதசித்திக்குடலான ஜ்ஞாநசக்த்யாதி குணஷ்டகங்களையு முடையனைகயாலே, சர்வகுணங்களாலும் பரிபூர்ணனை திருவேங்கடமுடையான் சரண்யன். அதிகாரிஸ்வரூபமாவது- அநந்யகதித்வமும் ப்ராப்யருசியும் ஸ்வரூபப்ர

காசமு மென்கிற விவையிறே. திர்யக்குக்களுக் கிப்படி யாப்ரயணங் கூடுமோவென்னில் ; ஸ்ரீகஜேந்த்ராழ்வான் பகவத் ஸமாப்ரயணம்பண்ணிணுகத் துறைச்சுவடிகளிலே யெழுதியிட்டுவைத்துஞ் சொல்லியும் கேட்டும் போராநின்ருேமே ; இங்கும் “ வைப்பன்மணிவிளக்காமாமதியைமாலுக்கென், றெப்பொழுதும்கைநீட்டும்யானையை ” என்றும், “ புகுமதத்தால்வாய்பூசிக்கீழ்தாழ்ந்தருவி, யுகுமதத்தால்காற்கழுவிக்கையால்-மிகுமதத்தேன், விண்டமலர்கொண்டுவிறல்வேங்கடவனையே, கண்டுவணங்கும்களிறு ” என்றும் ; ஸ்த்தலாந்தரத்திலே, “ புனத்தினைக்கிள்ளிப்புதுவவிக்காட்டி யுன்பொன்னடிவாழ்கவென், றினக்குறவர்புதியதுண்ணுமெழில்மாலிருஞ்சோலையெந்தாய் ” என்று மாழ்வார்களருளிச்செய்துவைத்தார்கள். இனி, அவ்வோபாதியாகிலு மித்தையும்விஸ்வசிக்கவேண்டாவோ நமக்கு. இனி, ( ஜ்ஞாநாதிகளால் பூர்ணனை ) சரண்ய விஷயத்தில் சரணுகதிபலவ்யாப்தை யென்னுமோபாதி, ஆநுகூல்யாதிவிசிஷ்டனை வதிகாரி சரணம்புக்கால் பலவ்யாப்தி யென்கிற வர்த்தத்தையுஞ்சொல்லுகிறது. ( அகலகில்லேனிறையு மென்றலர்மேல்மங்கையுறைமார்பா என்கிறவித்தாலே )· தம்முடைய ஆகிஞ்சந்யபூர்வகமாகப் பெரியபிராட்டியார் புருஷகாரமாக, சர்வ சுலபனை திருவேங்கடமுடையான்றிருவடிகளிலே விழுந்து சரணம்புகுகிருர் (அகலகில்லேனிறையுமென்றலர்மேல்மங்கையுறைமார்பா) நிரபேக்ஷமுமாய் ஸாபேக்ஷமுமா யிருக்கு மிவ்வுபாய மாகாரபேதத்தாலே. நிரபேக்ஷ மாகிறபடி யெங்ஙனேயென்னில் ; ருசியைப்பிறப்பிக்கையும், பிறந்த ருசியை வளர்க்கையும்விரோதிகளைப் போக்குகையும், ஒருதேசவிசேஷத்தேறக்கொண்டுபோகையும். ப்ராப்தமான கைங்கர்யத்தைக் கொள்ளுகையுமாகிற விவ்வோவிடங்களில் நிரபேக்ஷமாகத் தானேசெய்யும்; ஸஹகாரிவேண்டா. ( ஸாபேக்ஷமானபடியென்னென்னில்; அதிகாரிஸாபேக்ஷமுமாய், புருஷகாரஸாபேக்ஷமுமாயிருக்கையாலே. ) இவ்வுபாயமார்க்கென்ருல், அதிகாரிக்கென்கையாலே, அதிகாரிஸாபேக்ஷம். (அதிகாரிஸாபேக்ஷமானவோபாதி புருஷகாரஸாபேக்ஷம்.) எங்ஙனேயென்னில்; இவ்வதிகாரி, பூர்வாபராதத்தையும்பார்த்து அவனுடையஸ்வாதந்த்ர்ய ஸார்வஜ்ஞ்யாதிகளையும்பார்த்துப் பிற்காலிக்க, “அஞ்சாதே” என்று புருஷகாரமானவள்சொல்லவேண்டுகையாலே. ( ஆகையாலே, ) அதிகாரி ஸ்ாபேக்ஷமுமாய் புருஷகார ஸாபேக்ஷமுமாயிருக்கும். (அகலகில்லேனிறையும்) ஒருக்ஷணகாலமும் பிரிய சக்தையல்லேன். இப்படிசொல்லுகிறவள்தானுரொன்னில்; த்ரிவிதசேதநர்க்கும் ஸ்வாமிநியுமாய், உபயவிபூதி நாதனுக்கும் நியாமிகையுமா யிருக்குமவள்கிடீர். த்ரிவிதசேதநர்க்கும் ஸ்வாமிநி யென்னுமிடத்தில் ப்ரமாணம் - “ 𑌈𑌶𑍍𑌵𑌰𑍀𑌂𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 ” ( ஈஶ்வரீம்ஸர்வபூதாநாம்) என்னக்கடவதிறே. உபயவிபூதிநாதனுக்கும் நியாமிகையென்னுமிடத்துக்கு ப்ரமாணம் - [ 𑌪𑍁𑌂𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑍇𑌶𑍍𑌵𑌰𑍇𑌶𑍍𑌵𑌰𑍀𑌂 ] [ பும்ப்ர

தாநேஶ்வரேஶ்வரீம் ] என்றுப்ரதாநபுருஷர்களுக்கீஶ்வரனவன், அவனுக்கிவளீஶ்வரியென்று சொல்லுகையாலே. ஆக சர்வர்க்கும் நியாமிகையென்னுமிடஞ்சொல்லிற்று. இவள்நியமிக்கும் ப்ரகாரமென்னென்னில்; த்ரிவிதசேதநரையும் மாத்ருத்வ ப்ரயுக்தமாக நியமிக்கும், ஈஶ்வரனை ப்ரணயித்வ நிபந்தநமாக நியமிக்கும். மாத்ருத்வம் ஸ்வரூபாநுபந்தி, ப்ரணயித்வம் காதாசித்கமாகையாலே வந்தேறியாகாதோவென்னில்; ஆகாது. எங்ஙனேயென்னில்; உபாதி நித்யமாகையாலே அதுவும் நித்யம். ஈஶ்வரன் ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணுமிடத்திலுமிவள்நியாமிகை. [யஸ்யா வீக்ஷ்ய முகம் ததிங்கிதபராதீநோ விதத்தேகிலம்] [யஸ்யாவீக்ஷ்யமுகம் ததிங்கிதபராதீநோவிதத்தேகிலம்] என்று அவள் கடாக்ஷமடியாக ப்ருகுடி படனுய்க்கொண்டு ஸ்ருஷ்ட்யாதிகளைப்பண்ணும். அதுவென், "கரணகளேபரைர்க்கடயிதும் தயமாநமநாः" (கரணகளேபரைர்க்கடயிதும்தயமாநமநாः) என்று - தன்தயை யடியாகவன்றோ ஸ்ருஷ்டிப்பதென்னில்; அவற்றின் செல்லாமை பார்த்து ஸ்ருஷ்டிக்கிலிறே தயை யடியாவது; தன் செல்லாமையாலே அவள் கடாக்ஷமடியாகத் தன் சத்தையுண்டாய், அவள் ப்ரீதிக்க தயைபிறந்து, அத்தயை யடியாகவிறே யவன் ஸ்ருஷ்டிப்பது. நியமிக்குமிடத்தில் "அஸ்யேஶாநா ஜகதோ விஷ்ணுபத்நீ" (அஸ்யேஶாநாஜகதோவிஷ்ணுபத்நீ) என்றும், "விஷ்ணோஶ்ஶ்ரீரநபாயிநீ" (விஷ்ணோஶ்ஶ்ரீரநபாயிநீ) என்றுஞ் சொல்லுகிறபடியே-தன் ஸ்வரூபங் குலையாமேயிறே நியமிப்பது. எங்ஙனேயென்னில்; ப்ரபை ப்ரபாவானுக்கு சேஷமாய் நின்றே யத்தலைக்கு நிறங் கொடுக்குமா போலவும் பரிமளம் புஷ்பத்துக்கு சேஷமாய் நின்று பெருவிலையனுக்குமாபோலவும், ஈஶ்வரன் ஸ்வாதந்த்ர்யங் குலையாதே பரதந்த்ரனுமா போலேயுமிறே யிவளு மத்தலைக் கைங்கர்யார்ஹசேஷமாய்க்கொண்டே நிறங்கொடுக்கும்படி. விஶ்லேஷத்துக்கடி கர்மமன்றோ; கர்மஸ்பர்ஶமின்றிக்கே யிருக்க, இவள் "அகலகில்லேன்" என்னப்போமோவென்னில்; கர்மத்தோபாதி, அவனுடைய வைலக்ஷண்ய மடியாகச்சொல்லுகிறாள். வைலக்ஷண்யம் போக்யமா மத்தனையன்றோ வென்ன; மஹார்க்கமா யிருப்பதொரு ரத்நத்தை லபித்தால், "இது நமக்குத்தொங்குமோ!" என்று துணுக்குத்துணுக்கென்னு மவனைப்போலே, "அவன்மார்விலேயிருந்த கலிற்செய்வதென்" என்று அஸ்த்தாநே பயசங்கைபண்ணுகிறாள். (இறையும் - அகலகில்லேன்) ஸம்ஶ்லேஷாங்கமான விஶ்லேஷமும் பொறுக்கமாட்டேன். அவனுபாயமாமிடத்திலங்கத்தை ஸஹியாத சுணையுடைமைபோலே, ஸம்ஶ்லேஷாங்கமான விஶ்லேஷமும் பொறுதமார்த்தவம். அவன்மார்விலேயிருந்து அவன் முகத்தைநோக்கி, "உன்னையகலஶக்தையாகிறிலேன்" என்று அவன்வைலக்ஷண்யத்தை யவனுக்குச் சொல்லுகிறாள். ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனாயிருக்கிறவன் றன்னுடைய வைல

க்ஷண்யம் ஸ்வகீயஜ்ஞாநத்துக்கு விஷயமன்றே, இவள்சொல்லவறியுமி டமவனுக்கு ஞானக்கொத்தையன்றேவென்னில்; இவள்சொல்லவறிந் திலளாகி லவன் ப்ரணயித்வத்துக்குக்கொத்தையாமே; “தனக்குந்தன்ற ன்மை யறிவரியான்” என்றுஞ்சொல்லா நின்றதிறே. ஜகத்ஸ்ருஷ்ட்யா திகளேயிறே ஜ்ஞாநத்துக்குவிஷயம்; “ஞானமஃதேகொண் டெல்லாக் கருமங்களுஞ்செய்” என்றதிறே. “அகலகில்லேனிறையும்” என்கிற பாசுரமுஞ்சொல்லமாட்டாத தசையிறே யவன்தசை. அவன் வைலக்ஷ ண்யங்கண்ட விவளிலு மவனுக்குண்டானவேற்றம், விஸ்லேஷதசையி லவன்பாசுரத்தே காணுமத்தனையிறே. “𑌮𑌾𑌸𑌾𑌦𑍂𑌰𑍍𑌧𑍍𑌵𑌂𑌨𑌜𑍀𑌵𑌿𑌷𑍍𑌯𑍇” (மாஸாதூர்த்வம்நஜீவிஷ்யே) என்றாளிவள், “𑌨𑌜𑍀𑌵𑍇𑌯𑌂𑌕𑍍𑌷𑌣𑌮𑌪𑌿” (நஜீவேயம்க்ஷணமபி) என்றானவன். பாதந்த்ரராயிருப்பார்க்கு உடை யவன்வருந்தனையும் பொறுக்கவேணுமிறே, ஸ்வதந்த்ரனுக்கது வேண் டாவே. இப்படி உபயமும் விலக்ஷணமான மிதுநமுத்தேஸ்யமாக விரு க்கிற முமுக்ஷுக்களுக்கொரு குறையுண்டோ. இவர்களைத் தனித்தனி யே பற்றினார்க்கு ஸ்வரூபவிநாஸமிறே, “மிதுநமேயுத்தேஸ்யம்” என்றி ருப்பார்க்கு ஸ்வரூபோஜ்ஜீவநமிறே. ராவணாதிகள் பக்கலிலே யிவ்வர் த்தங்காணவுமாம். (அலர்மேல்மங்கை) பூவில் ருஜீஷமானதாதும் சுண் ணமுங்கழிந்த பரிமளமே வடிவானாப்போலே யிருந்துள்ள ஸௌகுமார் யமும், நித்யாநுபாவ்யமானபருவமுமுடையவள். அவனை “அகலகில்லே ன்” என்னப்பண்ணவல்லபரிகரத்தையுடையவிவள், “அகலகில்லேன்” என்கிறாளிறே. (உறைமார்பா) அவன்மார்விற் சுவடறிந்தபின்பு, பிறந்தக மானபூவும் நெருஞ்சில்முள்ளோபாதியாயிற்று. ஸ்ரீஜநகராஜன்திருமகள் பெருமாளைக்கைப்பிடித்தபின்பு ஸ்ரீமிதிலையை நினையாதாப்போலவும், மு க்தன் “𑌨𑍋𑌪𑌜𑌨𑌂𑌸𑍍𑌮𑌰𑌨𑍍𑌨𑌿𑌦𑌂𑌶𑌰𑍀𑌰𑌮𑍍” (நோபஜநம்ஸ்மரந்நிதம்ஸரீர ம்) என்று - சம்சாரத்தை நினையாதாப்போலவும், அவன்மார்வில் போ க்யதையறிந்தபின்பு பூவைநினைத்திலள். அஸங்குசிதஜ்ஞாநராயிருக்கச் செய்தே, சம்சாரத்தைக்காணாதவிடம் ஞானக்குறையன்றே; போக்யதா திசயமிறே; இவளும் போக்யதையாலேயிறே காணாதொழிகிறது. (உறை மார்பா) இவள், பூவைக்காணாதவோபாதி திருமார்வுக்கவ்வருகு அவய வங்களைக்காணாள். மற்றுள்ள வவயவங்கள் குமர்கிடந்துபோமத்தனை. இ வ்வளவால் சொல்லிற்றாயிற்று - * ஸ்ரீஸப்தமும், மதுப்பிலர்த்தமும். * ஸ்ரீஸப்தம்-புருஷகாரம் வேண்டுகையாலே சொல்லிற்று, * மதுப்பில்- நித்யயோகத்துக்கு ப்ரயோஜநமென்னென்னில்; ஆஸ்ரயிப்பார்க்குக் கா லம்பார்க்கவேண்டாதபடி ஸதாஸந்நிஹிதம். (நிகரில்புகழாயித்யாதி) * நாராயணஸப்தார்த்தம் சொல்லுகிறது. இதுக்குப்பொருள் - உபயவி பூதியோகமும், “𑌨𑌰𑌾𑌜𑍍𑌜𑌾𑌤𑌾𑌨𑌿𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑌿” (நராஜ்ஜாதாநிதத்த்வாநி) எ ன்கிறபடியே ஜகத்காரணத்வமு மர்த்தமாகச் சொல்லாநிற்கச்செய்தே, நம்மாசார்யர்கள் ஆஸ்ரயணத்துக் கேகாந்தமான ஸௌலப்யாதிகுணங்

கள் நாலையும் சொல்லிப்போருவர்கள்; அக்குணங்களுக்கு க்ரமமருளிச் செய்கிருரிவர். அக்குணங்கள் சொல்லுகிறவிடத்தில், வாத்ஸல்யம் மு ன்னுகச்சொல்லுவானென்னென்னில்; ஸாபராதனுகையாலே யிவ்வப ராதம் பொறுக்கைக்குறுப்பாகப் புருஷகாரம் வேண்டினுல், அநந்தர மி வ்வபராதம் போக்யமாவதொருகுணம் முன்னுகவேண்டுகையாலே. நிக ரில் புகழாய் என்ன - வாத்ஸல்யத்தைக்காட்டுமோவென்னில்; இதுக்கு ப்பொருள் - கத்யத்திலே "அபாரகாருண்யஸௌஶீல்யவாத்ஸல்ய" (அ பாரகாருண்யஸௌஶீல்யவாத்ஸல்ய) என்றுகுணங்களோடொக்கவெடு த்து, "ஆஶ்ரிதவாத்ஸல்யைகஜலதே" (ஆஶ்ரிதவாத்ஸல்யைகஜலதே) என்றிக்குணத்தை விசேஷிக்கையாலே சொல்லிற்று. (உலகமூன்றுடை யாய்) கீழ்ச்சொன்ன வாத்ஸல்யத்துக்கடியான குடற்றுடக்கைச்சொல் லுகிறது. தன்வயிற்றிற்பிறப்பாலேயிறே ஜநநிவத்ஸலையாகிறது. என்னை யாள்வானேயென்று - ஸௌஶீல்யத்தைச்சொல்லுகிறது. "என்னையா ள்வானே" என்று - கைங்கர்யதசைபோலே, உபகாரந்தோற்றச்சொல் லப்பெறுவரோ! ஆகிஞ்சந்யம் முன்னுக வாய்ரயிக்கிறவரென்னில் ; (அவன்கைவிடாமல் கைக்கொள்ளுகைக்காக.) புருஷகாரத்தைப்பாரத் துவார்த்தைசொன்னுர் - ப்ரதமபதத்தில், அநந்தரம் - உபாயத்தைப்பா ர்த்து வார்த்தைசொன்னுர், இதில்- நாட்டைப்பார்த்துச்சொல்லுகிருர். (தாமுமவர்களிலே யந்யதமரிறே.) விஷயாந்தரங்களினுடைய லாபாலா பமே பேறிழவாகவிருக்கிறவர்களிலே யந்யதமராயிருக்கிறதம்மை, "கர் மாத்யுபாயங்கள் ஸ்வரூபவிரோதி" என்றறியுந்தனையும்வரநிறுத்தி, பி ராட்டி புருஷகாரமாகத்தானே யுபாயமும் தானேப்ராப்யமும் என்னு ம்படி பண்ணினவுபகாரத்தைச்சொல்லுகிருர். இது – ஸௌஶீல்யமர னபடி யெங்ஙனேயென்னில்; "ஶீலம்ஹிநாம மஹதோமந்தைஸ்ஸஹநீரந்த் ரேணஸம்ஶ்லேஷ:" (ஶீலம்ஹிநாம - மஹதோமந்தைஸ்ஸஹநீரந்த் ரேணஸம்ப்ஶ்லேஷ:) என்கிறபடியே, தன்மேன்மையையு மென்சிறுமை யையும்பாராதே யொருநீராகக்கலந்தானென்கிருர். (நிகரிலமரர்முனிக் கணங்கள் விரும்புந்திருவேங்கடத்தானேயென்று) ஸௌலப்யம். (அம ரர்முனிக்கணங்கள்) என்கிறத்வைவித்யம் - "வைகுந்தத்தமரரும்முனி வரும்" என்றும், "ஸஹ பக்தைர்பாகவதைஸ்ஸஹ" (பக்தைர்ப்பாகவதை ஸ்ஸஹ) என்றுஞ்சொல்லுகையாலே. "நிகரில்" என்பானென்னென் னில்; இவர்களுக்கொருவரு மொப்பல்ல. ப்ராக்ருதி ஸம்பந்தத்தாலே ஸம்ஸாரிகளொப்பல்லர், ப்ரக்ருதிஸம்பந்தாந் நிர்க்கதராகையாலே முக் தரொப்பல்லர், ஜகத்வ்யாபாராதிகளுண்டாகையாலே ஈஶ்வரனெப்பல் லன். "ஜகத்வ்யாபாரவர்ஜம்" (ஜகத்வ்யாபாரவர்ஜம்) என்றுநிஷேதி த்து, "போகமாத்ரஸாம்யலிங்காச்ச" (போகமாத்ரஸாம்யலிங்காச்ச) எ ன்று - பகவதநுபவத்திலே யந்வயம். (விரும்புந்திருவேங்கடத்தானே)

இவர்களுக்கு விருப்பமாவது - இருட்டறையிலே விளக்குப்போலே, பரமபதத்திற்காட்டிலும் " கானமும் வானரமும் " என்கிறபடியே - எத்தனையேனுந் தாழ்ந்தார்க்கும் முகங்கொடுக்கிற சிலாதிகுணங்க ளிங்கேயுண்டாகையாலே, அங்கில்லாதது மிங்கேபெறுகையாலே விரும்புவர்கள்; ஸௌலப்யமாவது - உயர்ந்தாரோடு தாழ்ந்தாரோடுவாசியற சர்வசுலபமான வர்ச்சகபராதீநத்வம். ( புகலொன்றில்லாவடியேன் ) " ப்ர பத்யே " ( ப்ரபத்யே ) என்கிறவிடத்தி லுத்தமனால் வந்தவதிகாரிஸ்வரூபத்தைச்சொல்லுகிறது. அநந்யகதித்வமும், ஸ்வரூபப்ரகாஶமான வநந்யார்ஹசேஷத்வமுஞ்சொல்லுகிறது."புகலொன்றில்லா" என்றும், " அடியேன் " என்று மிரண்டுஞ்சொல்லவேணுமோவென்னில்; ப்ரக்ருதிசம்பந்தத்தில் பாரமார்த்யத்தாலேயும், * மயர்வறமதிநலமருளப்பெற்ற ஜ்ஞாநவைபவத்தாலேயு மருளிச்செய்கிறார். (உன்னடிக்கீழ்) "சரணௌ" என்கிறபதத்தில் விக்ரஹவத்தையைச்சொல்லுகிறது. சுபாஶ்ரயமுமாய், விஷயாந்தரங்களி லருசி பூர்வகமாகத் தன்பக்கலிலே ருசியையுமுண்டாக்கி, பிறந்தருசியையும்வளர்த்து, ப்ராப்திவிரோதியையுந்தவிர்த்து, ஒருதேசவிசேஷத்திலேபோனால் நித்யகைங்கர்ய ப்ரதிசம்பந்தியுமாய், * ஸதாபஶ்யந்திக்கு விஷயமுமாவது விக்ரஹமாகையாலே. அடியிலே, "துயரறுசுடரடிதொழுதெழு" என்று திருவுள்ளத்தைக்குறித்தருளிச்செய்து, தாம்பற்றுகிறவிடத்தில், " உனபாதங்கூடுமாறுகூறாய் " என்றும், " உன்னடிசேர்வண்ணமருளாய் " என்றும், " உன்னடிசேரவடியேற்காவாவென்னுயே " என்றும், "பூவார்கழல்களருவினையேன் பொருந்துமாறுபுணராய் " என்றும், "உனபாதஞ்சேர்வதடியேனெந்நாள்" என்றும், " மண்ணளந்தவிணைத்தாமரைகள்காண்பதற்கு " என்றும், " எந்நாளுன்னடிக்களடியேன்மேவுவதே " என்றும், "நொடியார்பொழுது முனபாதங்காண நோலாதாற்றேன்" என்றும், "நோலாதாற்றேனுனபாதங்காண" என்றும், "அடியேனுனபாதமகலகில்லேனிறையும்" என்றும், " உன்னடிக்கீழமர்ந்துபுகுந்தேன் " என்று மிவரடிவிடாமலநுசந்தித்தபடிகண்டதே!. ( அமர்ந்து ) அமருகையாவது - உபாயாந்தரங்களைவிட்டவோபாதி ப்ராப்யாந்தரங்களி லருசியைச்சொல்லுகிறதோவென்னில்; அதிங்கு ப்ரஸ்துதமல்லாமையாலே ப்ரஸங்கமில்லை. இதுக்குப்பொருள் - "ஸர்வதர்மாந்பரித்யஜ்ய" ( ஸர்வதாமாங்பரித்யஜ்ய ) என்றும் "ஶரணம்வ்ரஜ" (ஶரணம்வ்ரஜ) என்றும் சொல்லச்செய்தே * ஏகபதப்ரயோகம்பண்ணினவோபாதி, திருவேங்கடமுடையான் றிருவடிகளும் தம்முடைய தலையும் கொக்குவாயும் படுகண்ணியும்போலே நிர்விவரமாகப் பொருந்தினபடிசொல்லுகிறது. (புகுந்தேனே) ப்ருதக்ஸ்த்தித்யாதிகளில்லாதபடி ஶரீரவச்சேஷமான தமக்கந்தர்யாமியாய் நிற்கிறபடியை யறிந்திருக்கிறவிவர், புகுந்தேன் என்கிறவிது - ஒருபோக்குவரத்துண்டாயன்று; அவனுடைய சர்வஜகத்காரணத்வத்தையும் ச

ர்வாத்மபாவத்தையும் சர்வரக்ஷகத்வத்தையு மறிந்து, " அவனேயுபாயம் " என்கிற அத்யவஸாயஜ்ஞாநத்தைச் சொல்லுகிறது. " [grantha] " ( கத்யர்த்தாபுத்த்யர்த்தாঃ ) என்கிறபடியே. ( புகுந்தேனே ) " [grantha] " (ப்ரபத்யே) என்கிறவர்த்தமாநம்-கௌணம்; அடைந்தேன் என்கிறாப்போலே, புகுந்தேனென்கிறவிதுவே - முக்யம்.

[வாவா நாംவா] [பாபாநாம்வா] பிராட்டியுடைய அபயப்ரதாநமிஃப்ரலோகம். " ராவணனும்பட்டு, பெருமாளும்விஜயிகளானார் " என்று பெரியப்ரியத்தைப் பிராட்டிக்குத் திருவடிவிண்ணப்பஞ்செய்ய, பிராட்டியும் ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே விம்மல் பொருமலாய் ஸ்தப்தையாயிருக்க, இவனும் விக்கலுக்கு வெம்மாற்றம்போலே [ [grantha] ] [ கிம்நுசிந்தயஸேதேவிகிம்த்வம்மாம்நாபிபாஷஸே] என்று பெரியப்ரியத்தைவந்து விண்ணப்பஞ்செய்த வெனக்கொரு மறுமாற்றஞ்சொல்லாதே தேவரீரொழுந்தருளி யிருக்கிறவிருப்பென்றான் என்று திருவடி விண்ணப்பஞ்செய்ய, பிராட்டியும் " உனக்கு ஸத்ருஸமாகத் தரலாவதொன்றில்லாமைகாண் நான்பேசாதிருந்தது " என்ன, இவனும் " இவ்வளவிலே நம்மபேக்ஷிதத்தை விண்ணப்பஞ்செய்துகொள்ளவேணும் " என்றுபார்த்து, " தேவரைச் சுற்றும்முற்றும் நலிந்தராக்ஷஸிகளாகிறார் க்ரூரைகளாய் 'ததநுகுண பாவைகளாயிற்று, ராவணனுக்கு முன்பேகொல்லவேண்டுவ திப்பெண்பிள்ளைகளையாயிற்று, அவனு மிவர்களோபாதிகேடனல்லன், இவர்களிப்போது பாம்பு படமடங்கிஞ்ப்போலே யிருக்கிறார்களித்தனையாயிற்று, இவர்களை பஹுப்ரகாரமாக ஹிம்ஸிக்கப்பாராநின்றேன், [ [grantha] ] [முஷ்டிபிঃபாணிபிஃஶ்சைவ] என்று கையாலேகுத்தியும் காலாலேதுகைத்தும் நகங்களாலேசாடித்தும் பற்களாலேகடித்தும் துண்டித்தும் " [grantha] " ( சிந்நம்பிந்நம்ஸரார்தக்தம் ) என்று பெருமாள் திருச்சரங்கள்செய்ததெல்லாம் நானேபண்ணப்பாராநின்றேன், பகவதபசாரிகளையும் பாகவதாபசாரிகளையும் தண்டிக்கும் க்ரமத்திலே தண்டிக்கக்கோலாநின்றேன்; முன்புவந்தபோது இடமில்லாமைவிட்டுப்போனேனித்தனை; இப்போதெனக்கெல்லா ப்ரத்யுபகாரங்களும்பண்ணியருளிற்றாகலாம், இதித்தனையும் திருவுள்ளமாகவேணும் என்றான். என்ன [ வாவா நாംவா ] [ பாபாநாம்வா ] என்றருளிச்செய்கிறாள். [ வாவா நாംவாஶுஹா நாംவா ] [ பாபாநாம்வாஶுபாநாம்வா ] இவர்கள் நீ நினைத்திருக்கிறபடியே பாபைகளாகவுமாம், நான் நினைத்திருக்கிறபடியே சுபைகளாகவுமாம். அதுதானேயன்றோ வுத்தேஶ்யம், " [grantha] " ( தோஷோயத்யபிதஸ்யஸ்யாத் ) என்றாப்போலே. அழுக்குடையவனன்றோ குளிக்க ப்ராப்தியுடையான், அவர்கள்

பாபைகளாகிலன்றோ நாம் முகங்கொடுக்கவேண்டுவது. சுபைகளாகி லுன் வால்வேணுமோ, அவர்கள் புண்யங்களே அவர்களுக்குக் கை கொடுக்குமே, கைம்முதலில்லாதார்க்கன்றோ நாம் கைம்முதலாகவே ண்டுவதென்றாள். [ வதார்ஹாணாம் ] [ வதார்ஹாணும் ] தண்ட்ய ரை தண்டிக்கவும் அல்லாதாரைத்தவிரவும் சொல்லுகிற தர்மசாஸ்த்ரம் தேவரைத் தொற்றிக் கிழித்துப் பொகடக் கடவதோவென்ன; ஆரேனு மாக சரணாகதரை ரக்ஷிக்கக்கடவதென்கிற விசேஷ சாஸ்த்ர முன்னைத் தொற்றிக்கிழித்துப் பொகடக்கடவதோவென்கிறாள். "ஶரணம்" என் றுவந்த ஸ்ரீவிபீஷணாழ்வான் தோஷவானேயாகிலும் "நத்யஜேயம்" (நத்யஜேயம்) என்று பெருமாள் கடற்கரையிற்சொன்னவார்த்தை கட லோசையாகக் கடவதோ வென்கிறாள். [ ப்லவங்கம ] [ ப்லவங்கம ] பின்னை யுமிவன்புத்தி திரியவிடாமையினாலே, ஹரி ஹரி என்கிறாள். ப்லவங்கம என்கிறாள் - நச்சினத்தை நச்சும் ஜாதியானமை கண்டோமே யென்கி றாள். வசிஷ்டாதிகள் மந்த்ரிக்குங்குடியான இக்ஷ்வாகு வம்ஶத்தில் பி றந்தாயல்லை, யோகிகளான ஜநககுலத்தில் பிறந்தாயல்லை, காட்டிலே ப ணையோடுபணைத் தத்தித் திரிகிற ஜாதியிலேயிறே பிறந்தது; அங்ஙனொ த்தார்க்கு சரணாகதியோட்டை யதுதெரியாதிறே யென்கிறாள். "வாந ரோத்தம" (வாநரோத்தம) என்றவள், ஹரி ஹரி என்கிறாள், தானேயி றே. ப்லவங்கம என்கிறாள் - ராஜாக்களுமாய் மூலையடியேநடக்க வுரியரு மாயிருக்கிற பெருமாளு மெங்கள்முன் னித்தனை கோபித்தறியார், நீவாநர ஜாதியாயிருந்துவைத்து இங்ஙன்கோபிக்கக்கடவையோ. [ கார்யம்கரு ணமார்யேண ] [கார்யம்கருணமார்யேண] இவர்கள்புண்யபாபங்கிடக்க, இப்போதோடுகிற தயநீயதசையைப் பாராய். உன்கையிலே யகப்பட்டு "நாமென்படக்கடவோம்" என்றுதியங்குகிறபடி பாராய். இவர்களுக்கு வேறுரக்ஷகரில்லையே, இப்போது இவ்வளவில் நாமிரங்கவேணுங்காண் [ஆர்யேண] [ஆர்யேண] இவையெல்லாமிப்போதுநான்கற்பிக்க வேண்டு ம்படியாவதேயுனக்கு. [ஆர்யேண ] [ஆர்யேண ] ஐந்த்ரவ்யாகரணபண் டிதனென்கிறது பொய்யோ; அவையுமெல்லாம் கற்றுக்கேட்டிருக்கச்செ ய்தேயும், இப்போது ராமகோஷ்டியில் பரிசயம் பின்னாட்டினபடியாகா தே. அக்கோஷ்டியிற்பழக்கமிறே நீயிங்ஙன் சொல்லவல்லையாயிற்று. நா ன்போந்தபின்பு அக்கோஷ்டியிங்ஙனே நீரற்றதாகாதே யென்றுகருத்து. [நகஶ்சிந்நாபராத்யதி] [நகஶ்சிந்நாபராத்யதி] சம்சாரத்தில் குற்றமில் லாதாரார். திரைநீக்கிக்கடலாடப்போமோ. நல்குதிரையாகப்பாவித்திரு க்கிற பெருமாள்தான் குற்றவாளரல்லரோ, நான்றான்குற்றவாட்டி யல் லேனோ, நீதான்குற்றவாளனல்லையோ. பெருமாள்குற்றவாளரானபடி யெ ங்ஙனேயென்னில்; தாம்காடேறப்போந்தார், அவர்பின்னே மடலூருவா ரைப்போலே யிளையபெருமாளும் போந்தார், தம்மோடே யேகாந்த போகம்பண்ணக் கடவதாக விலையகலப்படுத்துக்கொண்டு நானும்போந்

